தமிழ் வெளியீட்டுக் கழக வரிசை எண்—111

# கிரேக்க நாட்டு வரலாறு-I

## (A HISTORY OF GREECE)

ஆசிரியர் :

ஜே. பி. ப்யூரி

தமிழாக்கம் :

ஸைமன் ஐ. எஸ். பாக்கியநாதன், எம்.ஏ.,
வரலாற்றுத் துறை,
புதுக் கல்லூரி, சென்னை.




தமிழ் வெளியீட்டுக் கழகம்
தமிழ்நாடு - அரசாங்கம்

# அணிந்துரை

(திரு. எம். பக்தவத்ஸலம், தமிழக முதலமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கி ஆறு ஆண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி.ஏ., வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்று வருகின்றனர். தொடக்கத்தில் இருந்த இடர்ப்பாடுகள் மெல்லமெல்ல மறைந்து வருகின்றன. நாடு முழுவதும் பரந்துள்ள மாணவர்களின் ஆர்வம், 'தமிழிலேயே கற்பிப்போம்' என முன் வந்துள்ள கல்வி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்த நூலாசிரியர் கள் தொண்டுணர்ச்சி, இவற்றின் காரணமாக இத் திட்டம் நம் மிடையே திருப்திகரமாக நடைபெற்றுவருகிறது.

பல துறைகளில் பணிபுரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல்கள் எழுதித் தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், புவியியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், தத்துவம் ஆகிய பல துறைகளில் தனி நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இருவகையிலும் தமிழ் வெளியீட்டுக் கழகம் நூல்களை வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றான 'கிரேக்க நாட்டு வரலாறு-I' என்ற இந் நூல் தமிழ் வெளியீட்டுக் கழகத்தின் 111ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து இதுவரை 146 நூல்கள் வெளிவந்துள்ளன.

கணக்கிலடங்காத் தடைகளை எல்லாம் அகற்றித் தமிழன்னை கல்லூரிக் கலையாசனத்தில் அமர்ந்துள்ளாள். எனவே, இவ் அன்னையை வாழ்த்துவோமாக. உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை; ஆதலின், உழைத்து வெற்றி காண்போம். தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும்; அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். சென்னைப் பல்கலைக் கழகத்தின் பலவகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரித்தாகுக.

எம். பக்தவத்ஸலம்.

# நூலின் முதற் பதிப்புக்கு முன்னுரை

இந் நூலின் அமைப்பையும் பண்பையும்பற்றி முடிவு காண்பதற்கு எனக்கு இரண்டு உண்மைகள் தூண்டுகோலாக விளங்கின. முதலாவது, நேர்முகமான சான்றுகளைக்கொண்டு வரலாற்றை எழுதும்போது, ஒருவரது சுயமான நோக்கத்தின்படி நூலைப் பலபல ஏட்டுப் பிரிவுகளாகப் பதிப்பிப்பது மிகவும் எளிதாகவும் இயல்பாகவும் செய்யக்கூடியதுதான். ஆனால், அதை ஒரே தொகுதி நூலாக இயற்றினால், அது மிகுதியும் பயனுடைய நூலாக அமையும். எனவே, கிரீஸ் நாட்டின் புதிய வரலாற்று நூலை அமைக்கும்போது உழைப்பு மிகுதியாயிருப்பினும் ஒரே தொகுதி நூலாக அமைப்பதே சாலச் சிறந்ததாகத் தோன்றியது. எனது அடுத்த துணிவு யாதெனின், வரலாற்று நூல்களைப் பொறுத்த வரையிலும் முதிர்ந்த அறிவைக்கொண்டவர் பாராட்டிப் படிக்கத் தக்க நூலே இளைய மாணவர் அறிவைப் பெருக்கும் நூலாகும் என்பதுதான். எனவே, கல்விக்குத் துணைபுரியும் நோக்கத்துடன் இந் நூல் பள்ளி அல்லது கல்லூரி மாணவருக்குமட்டுமே பயன் தருவதாக அன்றி, பரந்து நின்று பல்லோரும் படித்துணரும் நூலாக அமையவேண்டும் என்பதே எனது நோக்கமாம்.

இலக்கியம், கலை, தத்துவம், சமயம் ஆகியவை அரசியல் வரலாற்றை விளக்கவோ அன்றித் தனிப்பட்ட முறையில் மிகவும் இன்றியமையாத தொடர்பு கொண்டிருந்தால் மட்டுமே அவை நூலில் இடம் பெறும் என்ற ஒரு வரம்பை நானே வகுத்துக் கொண்டேன். மேலும், நூலின் வரம்பும் விரியும். ஆனால், இந்த நியதிக்கு இடத்திற்கு ஏற்றவண்ணம் பரந்த கொள்கையாக பொருள் கொண்டு கையாண்டிருப்பதை இந் நூலில் காணலாம். கலை, இலக்கியம், தத்துவம் இவைகளை விளக்கும் மிகவும் சிறந்த நூல்கள் இக்காலத்தில் கிடைக்கப்பெறுவதால் இந்தக் கொள்கையைத் தகுதிக்கேற்றவண்ணம் கையாளலாம். சிறிய அரசியல் வரலாற்றில் பொருத்தமின்றி இலக்கியத்தையும், கலையையும்பற்றி அங்கும் இங்குமாகப் புகுந்து நூலைப் புனைவது பயனற்றதும் கலையுணர்ச்சி அற்றதுமாகும்.

அரசியல் அமைப்புக்கு இசைவான பழங்கலைப் பொருள்களைப் பற்றிய அரிய கைச்சுவடுகள் எவரும் எளிதில் பெறுமாறு கிடைக்கப்பெற்றதால் அத்தீனிய அரசின் வளர்ச்சியைத் தொடர்ந்து கையாளவும், ஏனைய நகரங்களின் நிறுவனங்களைப்பற்றி எழுதவும்,

வேண்டாத சிறு குறிப்புகளை விலக்கவும் அவை துணைபுரிந்தன. ஹெல்லாசைப்பற்றிய புராணக் கதைகள், நாட்டின் நிலவியல் வர்ணனை, ஆதென்ஸைப்பற்றி இடவியல் விளக்கம் இவற்றைப் பற்றி அறியவேண்டுமானால் வாசகர் வேறு நூலைத்தான் நாட வேண்டும். ஆதென்ஸின் இடவியல் விளக்கம், கிரீஸ் நாட்டின் நிலவியல் இவற்றைக் குறிக்கும் சிறந்த நூல்கள் எளிதில் கிடைக் கப்பெறுவன.

நூலைப் படிப்பவருக்கு இரு குறிப்புகளைப்பற்றி முன் எச்ச ரிக்கை செய்வது இவ்விடத்தில் பொருத்தமாகும். முதலாவது, இந் நூலின் முதல் அதிகாரத்தைச் சேர்ந்த வரலாற்றுக்கு முற் பட்ட காலத்தைக் குறிப்பதாகும். வரலாற்றுக்கு முற்பட்ட கிரீஸின் நாகரிகத்தைப்பற்றி ஈஜியன் தீவுகளிலும் கரைகளிலும் கடந்த இருபது ஆண்டுகளாகத் தொல்பொருள் ஆராய்ச்சி யாளர்கள் கண்டெடுத்த சான்றுகள் வரலாற்று ஆசிரியர்களுக்குப் புதிய சிக்கல்களை ஏற்படுத்தின. அவற்றுக்கு முடிவான விளக்கங் கள் இன்னும் கிடைக்கப்பெற்றில. மிகத் திறமைபெற்ற ஆராய்ச்சி யாளர்களுக்குள்ளும் பெரும்பான்மையான கருத்து வேறுபாடுகள் காணப்படுகின்றன. இன்று நாம் ஓரளவுக்கு முடிவாகக் கொண் டிருக்கும் கருத்துகளைப் புதிய சான்றுகள் தோன்றியவுடன் மாற்றி அமைக்க வேண்டியதாகும். இன்று கிரேக்க உலகுடன் இணைக்கப் பட்ட கிரீட்டில் நடைபெற்றுக்கொண்டிருக்கும் புதைபொருள் ஆராய்ச்சியின் எதிர்பாராத விளைவுகள் நிலைமையை முற்றிலும் மாறுபடச் செய்யலாம். எனவே, வரலாற்றுக்கு முற்பட்ட கிரீ ஸைப்பற்றி நாம் மனப்பூர்வமாக ஆராய்ச்சி செய்யவேண்டு மானால், பல நிலைகளிலிருந்து கலந்து ஆலோசித்தால்தான் முடியும். அத்தகைய ஆராய்ச்சி இந் நூலுக்குப் புறம்பானது. எனவே, எழுத்தாளர், புதைபொருள் ஆராய்ச்சிகளைக்கொண்டு பண்பாட்டின் முக்கியமான குறிப்புகளைக்கொண்டு விளக்கம் தரலாம். முக்கியமான, சில பொதுவான முடிவுகளை இலக்கியத் தொடர்புடன் ஆராய்ச்சி முடிவுகள் இணைந்து நம்பத்தகுந்தனவாக இருப்பின் அவற்றைத் தனிப்பட்ட வரையறையுடன் கையாள லாம். பரவலாக அறுதியற்ற குறிப்புகளை விலக்கவேண்டும். முற்கால கிரேக்கர்களது நடைமுறைகள் புராணக் கதைகளில் பின்னிப் பிணைந்து கிடக்கின்றன. இவற்றில் உண்மையைக் காண்பது நிலத்தைத் தோண்டி, சுவர்களை இடித்து, கல்லறை களைத் தகர்த்துத் தெரிந்துகொள்வதைக் காட்டிலும் மிகவும் அரிதாகும். எனவே, எழுத்தாளரின் சிக்கல்கள் அதிகமாகின்றன. கிரீஸில் கிரேக்கர்களுக்கு முற்பட்ட ஆதிக் குடிகளின் சிறப்பு, வர லாற்றுக் காலத்துக்குட்பட்ட கிரேக்கர்களின் பலதரப்பட்ட இனப்

பண்புகள், முதன்முதலாகத் தோன்றிய அயோனியக் குடியேற்றம், ஈஜியன் நாகரிகத்தின் தொடர்ச்சி, பெயரளவில் விளங்கும் மைஸீனியன் பண்பாட்டுக்கும் ஹோமர் விளக்கம் தரும் பண்பாட்டுக்கும் உள்ள தொடர்பு ஆகிய இந்த முக்கிய குறிப்புகளைமட்டுமே நான் வலியுறுத்தியுள்ளேன்!

அடுத்தபடியாக, நான் கூறும் எச்சரிப்பு எஃபோரஸ் காலத்துக்குப்பின் எழுதப்பட்ட கிரேக்க வரலாறுகள் அனைத்தையும் குறிக்கும். கிரேக்க வரலாற்றின் முதல் பகுதியாகிய கி.பி. ஏழாம், ஆறும் நூற்றாண்டுக் காலத்தைப்பற்றிப் போதிய அறிவு இல்லாமல் இருப்பதால் அப்பகுதி ஒழுங்கற்றதும், முரண்பட்டதுமானது. அதே காலத்திலும் அதற்கடுத்த நூற்றாண்டுகளிலும் (நமது காட்சிக்கு அப்பாற்பட்ட காலங்களில்) ஆசியா மைனரின் மேற்குக் கரையிலுள்ள நகரங்கள், ஹெல்லனிக் உலகில் மிகச் சிறந்ததும் தகைசான்றவைகளுமாக விளங்கின. இந்த நகரங்களைப் பற்றியும் இவற்றின் பெருமைகளைப்பற்றியும் தொடர்பற்ற காட்சிகளே நமக்குத் தென்படுகின்றன. பாரசீகர் ஈஜியனில் முன்னேறிய காலத்தில்தான் இவர்களைப்பற்றிய அறிவு நமக்கு ஆரம்பமாகிறது; அதற்குள் கிரீஸில் அவர்கள் பின்னணியில் மறைந்துவிடுகிறார்கள். எனவே, ஆசிய கிரேக்கர்களைப்பற்றிய உயர்ந்த தன்மைகளைப் பாராட்டவேண்டிய இதழ்களில் கிரீஸின் முன்னேற்றத்தைப் பற்றிய விளக்கமே ஆதிக்கம் பெற்றது. எனவே, ஏழாம், ஆறும் நூற்றாண்டு காலத்தில் ஹெல்லாஸ் வரலாறு ஸ்பார்ட்டா, ஆதென்ஸ் ஆகிய நகரங்கள், அவற்றின் சுற்றுப்புறங்கள் ஆகியவை மட்டும் அடங்கியதாக ஒரு போலித் தோற்றத்தை ஏற்படுத்துகின்றது. இதே காலத்தில் இத்தாலியாவிலும் சிசிலியிலும் தோன்றி வளர்ந்த கிரேக்கக் குழுவினரைப்பற்றிய அறிவு மறைந்து கிடந்தது. இந்தத் தவறுதலை நாம் ஒப்புக்கொள்வதால் நாம் அதற்கு ஈடு செய்ய முடியாது. ஆதென்ஸும், ஸ்பார்ட்டாவும், அவற்றைச் சூழ்ந்த நகரங்களும் நிலையான இடத்தைப் பெற்றுக் கொண்டன. (Les absents out tonjours tort).

நூலின் இறுதியில் கொடுக்கப்பட்டுள்ள குறிப்புகளிலும் சிறப்புக் கட்டுரைகளிலும் இன்றைய தனிப்பட்ட ஆராய்ச்சிக்குத் தேவையானவைகளைக் குறிப்பாக உணர்த்தியுள்ளேன். க்ரோட், ஃப்ரிமன் (சிசிலியன் வரலாறு), புசோல்ட், பெலோச், இமியர் (Geschichte des Altertums) மற்றும் ட்ராய்சன் ஆகியோர் இயற்றிய வரலாற்று நூல்களுக்கு நான் பெரிதும் கடப்பாடுடையவனுவேன். ஆங்கிலத்திலும் பிறமொழிகளிலும் உள்ள ஏனைய புகழ்பெற்ற வரலாறுகளும் தக்கவாறு துணைபுரிந்திருப்பினும்

நான் முதலில் குறிப்பிட்ட நூல்களுக்கே என் கடன் பெரிதாகும். முறைப்படி வரலாற்று நூலாக எழுதாவிட்டாலும் பேராசிரியர் யூ. வில்லியோமோவிட்ஸ் மோலான்டார்ஃப் அவர்கள் எழுதிய கிரீஸ் வரலாறு இத் துறையில் ஆராய்ச்சி செய்வதற்கு எண்ணிறந்த அரிய பல கருத்துகளை அளித்தமையால் அவருக்குத் தனிப்பட்ட முறையில் எனது ஆழ்ந்த நன்றிக் கடனைத் தெரிவித்துக்கொள்ளு கிறேன். அவரது சில முடிவுகளை என்னால் ஆமோதிக்க முடியாவிட்டாலும் அவரது ஆராய்ச்சி முறைகளும், எழுதிய முறையின் உயர்ந்த பண்பும் என்னைப் பெரிதும் கவர்ந்தன.

அநேக நண்பர்கள் எனக்குப் பல முறைகளில் உதவினர். இத் துறையில் வல்லுநரான மகாஃபீ அவர்கள் எனது நூலை ஆய்ந்து திருத்தங்கள் செய்து அச்சுப் பிரதியை மேற்பார்வை யிட்ட அரியதொரு வாய்ப்பும் எனக்குக் கிட்டியது. முதல் அதி காரத்தை வளம்பெறச் செய்த கிரீட்டிலுள்ள இடங்களைச் சுட்டும் 'மைஸீனியன்' தரைப்படம் ஜே. ஐ. மயர்ஸ் அவர் களால் வரையப்பட்டது, பிரிட்டிஷ் பொருட்காட்சிச் சாலையி லிருந்து பழங்காலப் பொருள்களைப்பற்றிய விளக்கப் படங்களை அமைப்பதற்குப் பெரிதும் துணை புரிந்தவர் சிசில் ஸ்மித் அவர்களே யாவர். ஆக்ஸ்ஃபோர்டு கலை மாடங்களிலிருக்கும் தலைச்சிலைகளின் நிழற்படங்களுக்காகத் துணைபுரிந்த பேராசிரியர் பெர்சிகார்டன ருக்கு எனது நன்றி உரித்தாகுக.

பெரும்பான்மை தரைப்படங்களையும், நிலவரைத் திட்டங் களையும் நான் முதலில் வெள்ளோட்டமாக வரைந்ததை நிலப்பட வல்லுநர்களான வாக்கர் அவர்களும் பௌடால் அவர்களும் சரியான முறையில் திருத்தி அமைத்துக் கொடுத்தனர். இன்றைய காலத்தைச் சேராத திட்டங்களும் தரைப்படங்களும் எங்கிருந்து கிடைத்தன என்பதை விளக்கங்களின் பட்டியலில் தனியாகக் குறிப்பிட்டுள்ளேன். நான் எடுத்தாண்டுள்ள ஏறக்குறைய எல்லா நாணய உருவங்களும் பிரிட்டிஷ் பொருட்காட்சிச்சாலையிலுள்ள நாணயங்களிலிருந்து பிரதியாக எடுத்தவைதாம்.

ஆர். ஆர். அச்சகத்தில் எனது நூல் அச்சிடப்பட்ட பெருமை யின் சிறப்பை நூலைப் படிப்போர் நன்கு உணர்வர்.

ஜே. பி. ப்யூரி

# பொருளடக்கம்

# தோற்றுவாய்

## கிரீஸும் ஈஜியனும்

கிரீஸ் அல்லது கிரேக்க நாட்டின் வரலாற்றை நாம் விரிவாக அறியும்போது இந் நாட்டின் இயற்கை அமைப்புக்கு அடிப்படையான ஆறுகள், மலைகள், பள்ளத்தாக்குகள், தீவுகள், குடாக்கள் முதலியன நமக்குத் தாமாகவே அறிமுகமாகும். எனவே ஈண்டு இவற்றைப்பற்றி நுட்பமாக நாம் ஆராய முற்பட வேண்டாம். இருப்பினும் முதற்கண் கிரீஸ் நாட்டின் முக்கியமான அமைப்புகளைப்பற்றி ஓரளவு நாம் தெரிந்துகொள்வதன்மூலம் இந் நாட்டு வரலாற்றின் வளர்ச்சியைப்பற்றி அறிய முடியும். இவ்வமைப்புகள் இவ்வாறு இல்லாதிருப்பின், கிரீஸ் நாட்டின் வரலாறே நமக்குத் தெரிந்தவிதமின்றி வேறு முறையில்தான் அமைந்திருக்கக்கூடும் என்பது தெளிவு. கிரேக்க நாட்டின் வரலாற்றின் சீலம் அனைத்தும் ஆண்டு, மக்கள் வாழ்நிலத்தின் அமைப்பை அடிப்படையாகக் கொண்டிருப்பதால் இந் நாட்டு நீரும் நிலமும் வரலாற்றின் இணைப்பில் இணைபிரியாது கலந்து நிற்கின்றன.

ஐரோப்பாக் கண்டத்தின் தென் பகுதியில் ஸ்பானியா, இத்தாலியா, இல்லிரிக்கம் ஆகிய மூன்று பரந்த தீபகற்பங்கள் அமைந்திருக்கின்றன. கிழக்கேயுள்ள இல்லிரிக்கம், தெசலிக்கு வடபுறத்தில் தொடர்ச்சிபெறுமல் நின்று, அதனுடைய கிளையாகிய கிரீஸ் நிலப்பரப்புக் கடல்கொண்ட பகுதியாக இருந்திருப்பின், இத் தீபகற்பமும், மேற்கிலுள்ள ஸ்பானியாவும் தோற்றத்தில் வேறுபாடின்றிக் காணப்பட்டிருக்கும். அப்படியாயின், அகன்று தனித்த நிலப்பரப்பாக நின்று ஒரு முனையில் எப்படி ஸ்பானியா ஆப்பிரிக்கா கண்டத்தைத் தொட்டும்

தொடாமலும் நிற்கின்றதோ அதுபோலவே இல்லிரிக்கமும் ஆசியாக் கடற்கரையை அடுத்து நின்றிருக்கும். ஆனால் இல்லிரிக்கத்தின் தெற்குத் தொடர்ச்சியான கிரீஸ் முற்றிலும் வேறுபாடுள்ள இயற்கை அமைப்பைப் பெற்றிருப்பதால், இப் பாகம் அடர்ந்த சதுரம் போன்று காட்சியளிக்கும் ஸ்பானியா, மத்தியதரைக் கடலை ஊடுருவி நீண்டுகிடக்கின்ற ஆப்புப்போன்ற இத்தாலியா இவைகளினின்றும் பெருமளவில் வேறுபாட்டைக்கொண்ட பகுதியாக இருக்கின்றது. இதன் காரணமாகத்தான் மத்தியதரைக் கடலின் மேற்குப் பகுதிக்கும், கிழக்குப் பகுதிக்கும் வேறுபாடு அதிகம் உளது. கிரீஸ், முனைகளும் தீவுகளும் நிறைந்த தொகுதிப் பரப்பாகவே தோற்றமளிக்கின்றது. உண்மையில் கிரீஸ் இல்லிரிக்கத்தைப்போலவே அடர்ந்து தொடர்ந்து விளங்கும் பரந்த நிலப் பரப்பாக இருந்திருக்கக்கூடும். மலைகளைக்கொண்ட பரந்த முனையான கிரீஸ் கடலின் உள்வளைவால் இரு கூறுகப் பிரிக்கப்பட்டு இதன் கிழக்குப் பகுதிகள் சிதைந்தும் போயிருக்கக்கூடும். கால வெள்ளத்தில் இயற்கையன்னையின் துடிப்புகளால் இந் நிலப்பரப்பு அதிர்ந்து, சுருங்கி இருக்கக்கூடும் என்பது இந் நிலத்தின் அமைப்பைக் காணும்போது நமக்கு நன்கு புலனுகின்றது. இங்குத் தோன்றும் சுருக்கங்கள் முதலியன மனிதகுலத்திற்கு ஒரு சீரிய தொண்டுபுரிய ஏற்பட்டவைபோல் காணப்படுகின்றன. தெசலியின் கிழக்கெல்லையாக நிற்கின்ற ஒலிம்பஸ் (Olympus), ஒஸ்ஸா (Ossa), பிலியோன் (Pelion) ஆகிய மலைகளும், நீளமான யூபியா (Euboea) தீவின் மலைத்தொடரும், யூபியா தீவின் வால்போல் விளங்கும் தீவுத் தொடர்களும் ஆதிகாலத்தில் சங்கிலி போன்ற நிரந்தரமானதொரு மலைத்தொடராக இருந்திருக்கக்கூடும். மேலும் தெசலியையும் எப்பைரஸையும் (Epirus) பிரிக்கும் பிண்டஸ் (Pindus) குன்றுகளின் (Ridges) தொடர்பை டிம்பேரேஸ்டஸ் (Tymphrestus), கோராக்ஸ் (Corax) சிகரங்களிலும், தென்கிழக்குப் பகுதியில் காணப்படும் பார்நாஸஸ் (Parnassus), ஹெலிகான் (Helicon), சிதிரான் (Cithaeron), அட்டிக்காவின் (Attica) குன்றுகள், அட்டிக்காவை அடுத்துள்ள தீவுகளிலும் காணலாம். அட்டிக்காவின் கீழ்ப்பாகத்திலுள்ள தீவுகள் கடலால் கொள்ளப்பட்ட நிலப்பகுதியின் சிகரங்கள் என்று கருதுவதற்கு இடமிருக்கின்றன. இவ்விதமே பெலோப்போனீஸஸில் (Peloponnesus) காணப்படும் மலைகள் எப்பைரஸ் மலைகளின் தொடர்ச்சியாயிருந்திருக்கக்கூடும். இவ்விதமாக நமது மனத்தில் கற்பனை செய்துகொண்டும், கடலின் கீழ் உள்ள நிலப்பகுதியை நீரைவிட்டு எழும்பும்படி செய்தும் நாம் கிரீஸைத் திருத்தி அமைத்தால் தொன்மையான இந் நாடு சாய்ந்த சதுரமானதொரு நிலப்பரப்பாயும், தென்கிழக்கில் ஈஜியன்வரை

தோன்றும் அதன் மலைகள் மார்புக்கூட்டில் காணும் எலும்புகள் போலவும் காட்சியளித்து இருக்கும். இயற்கை அன்னை இவ்வாறான நிலப்பரப்பைக் கிரேக்கர்களுக்குக் கொடுத்திருந்தால் அவர்களுடைய வரலாறு வேறுவிதமாகவே அமைந்திருக்கும். இவ்வாறு நாம் கற்பனை செய்யுங்கால், கிரேக்கர்கள் இயற்கையின் அசம்பாவிதமான சம்பவங்களுக்குக் கடன்பட்டிருக்கின்றனர் என்பது தெளிவாகின்றது. முனைகளும், ஆழ்ந்த விரிகுடாக்களும், தீவுகளும் நிறைந்த இப் பிரதேசத்திலுள்ள மக்கள் கடல்மார்க்கங்களில் தமது கருத்துக்களைச் செலுத்த நேர்ந்தது. வேறுவிதமாகக் கூறவேண்டுமானால் கிரேக்கர்கள் கடலைச் சார்ந்து வாழும் மக்களானார்கள் எனலாம்.

கண்டப் பகுதியாகிய கிரீஸின் அமைப்பில் மிகவும் எடுப்பாகத் தோற்றமளிப்பது ஆண்டு ஊடுருவிச்செல்லும் வளைகுடாவேயாம். இவ்வாறு பிரிக்கப்பட்ட தென்பிளவு கீழ்க்கோடியில் சிறிய பாலம் போன்ற நிலப்பரப்பால் அடுத்த பிளவுடன் தொடர்ந்து நிற்கின்றது. இச் சிறிய இணைப்பின்றேல் இப் பகுதி பேலோப்ஸ் தீவு (Pelops) என்ற கிரேக்கப் பெயருக்கேற்பத் தனித்து ஒரு தீவாகவே அமைந்திருக்க வேண்டும். இம் முக்கியமான தரை அமைப்பே கிரீஸ் நாட்டின் வரலாற்றின் சிறப்புக்கு இன்றியமையாத முறையில் ஏதுவாக விளங்குகின்றது. இப் பூசந்தி ஏற்பட்டதுமன்றி, இது மேற்குப் பகுதியில் அமையாமல் கிழக்குப் பகுதியில் அமைந்ததே அதன் தனிச் சிறப்பாகும். மூன்று வகையில் இதன் சிறப்பை எடுத்துக் கூறலாம்: (1) கடல்பரப்பு இவ்வாறு நிலப்பரப்பை ஊடுருவிச் சென்றதால், உள்நாட்டுப் பரப்பாக இருந்த பெரும் பகுதி கடற்கரைப் பிரதேசமாக மாறிற்று அல்லவா? மலைநாட்டு மக்களாக வாழ்க்கை நடத்தவேண்டிய பெரும் பகுதியினர் கடற்றுறையில் வாழ நேர்ந்தது. அதே நேரத்தில் இவ்வாறு பிரிக்கப்பட்ட தென் கிரீஸ், ஏறக்குறைய ஒரு தனித் தீவாக நின்று ஈண்டுள்ள மக்களின் வாழ்க்கை முறைகளும் வட பகுதியினின்றும் பெரும்பாலும் மாறுபட்டே விளங்க ஏதுவாயிற்று. (2) பிலோப்ஸ் தீவு பூசந்தி இல்லாது உண்மையாகவே ஒரு தனித் தீவாக அமைந்திருக்குமானால் கிரீஸ் நாட்டு வரலாறே வேறு முறையில் எழுதப்பட்டிருக்கும். பண்டுமுதல் ஈஜியன் கடல் தீரத்திலுள்ள நிலப்பரப்புக்கும், அயோனியாக் கடல் தீரத்திலுள்ள நிலப் பரப்புக்கும் இடையே இடையறாத போக்குவரத்து நிகழ்ந்திருக்கக் கூடும். கிரீஸின் கிழக்குப்பகுதியும் மேற்குப்பகுதியும் வாணிகக் கப்பல், கப்பற்படை இவற்றின் போக்குவரத்தால் நெருங்கிய தொடர்புகொண்டிருக்கக்கூடும். இன்றுபோல் கப்பல்கள்

பெலோப்போனீஸைச் சுற்றி வரவேண்டியதில்லை. கிரீஸ் நாட்டுக்கு இடையே உள்ள கடல் வழியாகவே எளிதாகப் போயிருக்கலாம். இச் சிறு பூசந்தி மட்டும் ஏற்படாதிருப்பின் கிரீஸ் நாட்டுச் சாலை அமைப்பு, வாணிப மார்க்கங்கள், வாணிபத் துறைகள் ஆகிய அனைத்தும் முற்றிலும் மாற்றியமைக்கப்பட்டிருக்கும். கிரேக்க யுத்தங்களும் வேறு முறையில் நிகழ்ந்திருக்கலாம். அதற்கு விளக்கக்கூறுக இச் சிறு எடுத்துக்காட்டைக் காண்போம். வட அமெரிக்காவையும் தென் அமெரிக்காவையும் இணைக்கும் பனுமா பூசந்தியை எடுத்துவிட்டு, அது இல்லாவிட்டால் இப் பெரும் சமுத்திரங்களின் கப்பல் மார்க்கம், நடந்த கடற்போர்கள் எவ்வாறு மாறுதல்கள் அடைந்திடும் என்று சிந்தனைசெய்து பார்க்கவும். (3) சரி, இப் பூசந்தி வளைகுடாவின் மேல்புறத்தில் பெலோப் போனீஸஸ் நிலப்பரப்புடன் இணைந்திருந்தால் உள்வளைவின் இரு கரைகளிலும் உள்ள நாடுகள் ஈஜியனுடனும் மற்றக் கிழக்கத்திய நாடுகளுடனும் வாணிபம் முதலிய உறவுகொண்டாடவும் ஏதுவா யிருந்திருக்கும். கிரீஸின் வடமேற்குப் பகுதியில் நாகரிகம் விரை வில் செறிந்தோங்கி வளர்ந்திருக்கக்கூடும். பியோஷியா (Boeotia), அட்டிக்கா (Attica) ஆகிய இரு நாடுகளின் சரித்திரமும் பெலோப் போனீஸியருடைய வரலாற்றினின்றும் பிரிக்கப்பட்டுத் தனித்த முறையில் எழுதப்பட்டிருக்கும்.

கிரேக்கர்களின் சரித்திரத்திற்கு அடிப்படையாக விளங்கும் மற்றொன்று யாதெனில், ஈஜியன் படுகையின் (basin) அமைப்பே யாம். இது எண்ணிறந்த தீவுகளின் கூட்டமாக விளங்குவதால் இத் தீவுகளில் வாழும் மக்கள் ஒருவரோடொருவர் நெருங்கிய தொடர்பு கொள்ள ஏதுவாக அமைந்துள்ளது. ஸைக்லேட் தீவுகளைப் (Cyclades) பார்க்குமிடத்து இவை கிரேக்க நிலப் பரப்பைச் சார்ந்தவை. ஆனால் இத் தீவுகள் ஆசியாக் கரையில் உள்ள தீவுகளுடன் இனந்தெரியாத வகையில் கலந்து விட்ட தாகவே கொள்ளவேண்டும். இந்த முறையில் இத் தீவுகள் ஆசியா வுக்கும் கிரீஸ் நாட்டுக்குமிடையே கப்பற் செலவுக்குப் படித் துறையாக விளங்குகின்றன. ஆசியா மைனரின் (Asia Minor) மேற்குக்கரை அதன் இயற்கை அமைப்பின் காரணமாக ஆசியாவை விட ஐரோப்பாவையே சாரும். எனவே நாளடைவில் கிரேக்க நாட்டின் ஒரு பகுதியாக மாறிற்று. அதனுல் ஈஜியனையே கிரேக்க நாட்டின் தகுந்த மையமாகக் கொள்ளலாம்.

கிரீஸின் மேற்குப் பகுதியிலும் நல்ல துறைமுகங்கள் உள. கிழக் குக் கரையைப் போல் ஏராளமான குடாக்களும், தீவுகளும் இல்லா

விடினும் வாணிபத் துறையிலும் நாகரிக முன்னேற்றம் அடைவதற் கேற்ற சூழ்நிலைகளுக்குக் குறைவில்லை. கார்சைராவிலிருந்து (Corcyra) இத்தாலி நாட்டின் குதிகால் போல் தோன்றும் பகுதிக் குக் கடல்மார்க்கமாக எளிதில் செல்லலாம். மேலும் சொல்லு மிடத்து மேற்குப் பகுதியிலுள்ள கிரேக்கர்களுக்கு எதிரில் ஒரு தனி யுலகமே பரந்து கிடந்தது என்று கூறலாம். ஆனால் தொன்மையில் இவ் வுலகம் காட்டுமிராண்டித்தனத்தில் ஆழ்ந்து கிடந்தது மன்றி, பிறருக்கு நாகரிகத்தைப் பொறுத்த கொடை ஏதும் அளிக்க முடியாத நிலையிலிருந்தது. ஆனால் கிழக்குக் கரையில் வாழ்ந்த மக்கள் ஆசியா கண்டத்தை நோக்கி நின்றதுமன்றி அக் கண்டத்தில் தோன்றிய சீரிய கிழக்கு நாட்டு நாகரிகத்திலும் ஈடுபட ஆரம்பித் தனர். மேற்குப் பாகத்தின் பிற்போக்கிற்குக் காரணம், அப் பாகம் ஆசியாவை முன்னோக்கி நிற்கமுடியாத காரணமே யன்றி அதன் கடற்கரை யோரமல்ல. ஏனென்றால், பிற்காலத்தில் இவ் வயோ னியா கடற்கரை வாணிபத்திற்கு ஒரு பெரிய தலமாகவும், இதன் கடற்கரை கிரேக்கரைவிட நாகரிகத்தில் முன்னேற்றமடைந்த செல்வச் செருக்குக்கொண்ட சமுதாயங்கள் வசிக்கப்பெற்ற இடமு மாயிற்று.

மத்தியதரைக் கடலிலுள்ள இம் மூன்று தீபகற்பங்களுக்குத் தென் பகுதியின் எதிரேயுள்ள ஆப்பிரிக்கா கண்டத்தின் வட பிரதேசம், தென் ஐரோப்பிய நாட்டின் வரலாற்றில் ஒரு முக்கிய தொண்டாற்றியுள்ளது. புவியமைப்பு இயலும் (Geology) இந்த உண்மையைத் தெளிவாக விளக்குகின்றது. மண் தோன்றிக் கல் தோன்றாக் காலத்தில் மேற்கு ஐரோப்பாவும், வட ஆப்பிரிக்காவும் பாலங்கள் போன்ற தொடர்ந்த நிலப்பகுதிகளால் இணைக்கப் பட்டிருந்தன. ஐரோப்பிய - லிபியா (Europo - Libya) என்று நாம் அழைக்கக்கூடிய இப் பழைய கண்டத்தில் ஒருபடித்தான (homo-geneous) இன மக்கள் வாழ்ந்திருக்க கூடுமென்றும், கால்ப்போக்கில் அதாவது மத்தியதரைக் கடல் இப்போதுள்ள மாதிரி காட்சி யளிக்கத் தொடங்கிய காலத்தில் இம் மக்கள் பிரிக்கப்பட்டிருக்கக் கூடும் என்றும் கருதுவதற்கு இடமுள்ளது. பழைய நிலத்தாலாகிய பாலத்தின் ஒரு பாகமே சிசிலித் தீவாகும் (Sicily). இது இத்தாலிக் கும் ஆப்பிரிக்காவிற்குமிடையே ஒரு படிபோல் அமைந்துள்ளது. ஆனால் ஸ்பெயின் தனது கடற்காலைத் தாண்டுவதற்குத் தீவுகளின் தேவை ஏதுமின்றிக் கிடக்கிறது.

மலைகளையும், சிறிய பள்ளத்தாக்குகளையும் கொண்டதே கிரீஸ் நாடாகும். இவண் மிகக் குறுகிய சமவெளிகளும், சிறிய ஆறு

களும் காணப்படுகின்றன. ஆகையால்தான் இந் நாடு சிறு மக்கள் சமுதாயங்கள் வசிக்கும் அரசுகளாக விளங்குகின்றன. ஒவ்வொரு நகர அரசும் மற்றவைகளினின்றும் மலைகளாலும் குன்றுகளாலும் பிரிக்கப்பட்டுள்ளன. கிரேக்க நாட்டின் லரலாறே சுயேச்சையான சிறு நகர அரசுகளின் சுருக்கமாகும். இவ்வகையான வரலாறு இவ்வாறான மாறுபட்ட இடங்களில் காண்பதரிது. எல்லா நாடு களிலும் அவைகளின் அரசியல் வரலாறு அந் நாடுகளின் பூவியலைச் சிறிதளவு ஒட்டியிருக்கும். ஆனால் கிரீஸ் நாட்டில் பூவியலின் செல்வாக்கு மிக அதிகமாகத் தென்படுகின்றது. இதர சக்தி களுடன் இச் செல்வாக்கும் சேர்ந்து தேசீய ஒற்றுமை ஏற்படா வண்ணம் தடுத்துப் போராடியது. தீவுகள் தனித்தனி அரசுகளை நிறுவிக்கொண்டன. ஆயினும் கடலின் பிரிக்கும் தன்மையுடன் அதிகமாகக் காணப்படும் ஒன்றுசேர்க்கும் தன்மையால் இவை யாவும் ஒன்றுபட்டுக் கடலால் சூழப்பட்ட பேரரசை உண்டாக்கிக் கொண்டன. மலைகள் வாணிபத்தை ஓரளவு தடுத்தன. ஆனால் இந் நாட்டின் கடற்கரை உடைவுபட்டிருப்பதால் துறைமுகங்கள் ஏராளமாயுள. அதே சமயத்தில் தீவுகள் அதிகமாயிருப்பதால் மக்களுக்கு வாணிபத் துறையில் இவை அதிக உதவியா யிருந்தன.

ஆசியா கண்டத்திலிருந்து வீசும் காற்றுகளைத் தடுப்பதற்குக் கருங்கடல் பிரதேசத்தின் கிரேக்கப் பாகங்களில் ஏற்ற மலைத் தொடர்கள் இல்லாமையால் திரேஸ் (Thrace) பிரதேசம் குளிரினால் அதிகமாகப் பாதிக்கப்படுகின்றது. கொடிய குளிருள்ள இந் நாட்டில் மெல்லிய காற்று வீசியதால் இங்கு வாழும் மக்கள் ஆற்றல் பெற்றவர்களாகவும் சுறுசுறுப்புள்ளவர்களாயும் விளங் கினர். எவ்விதத்திலும் கிரீஸ் செல்வாக்கும், வளம்பெற்றதுமான ஒரு நாடல்ல. இவண் நீர்ப்பாசன வசதியுள்ள சமவெளிகள் மிகக் குறைவு. பயிர்த்தொழில் நடக்கும் பள்ளத்தாக்குகளில் விளைச்சல் மிகவும் குறைவே. இந் நாட்டின் நிலவளம் பார்லி (barley) பயிர் செய்வதற்கு ஏற்றதாயிருக்கின்றது. ஆனால் கோதுமை சாகுபடிக்கு ஏற்றதல்ல. எனவே, உழவர்கள் மிகவும் கஷ் டப்பட வேண்டியிருக்கிறது. இந் நாட்டின் நிலவளம் மக்களைக் கடல் சார்ந்த வாழ்க்கையில் ஈடுபடச் செய்தது. அதே காலத்தில் கடலுக்கு அப்பால் உள்ள வளம் பொருந்திய நிலப்பகுதிகள் மக்களை வாவென்று அழைக்கலாயின. இவ்வித அழைப்பு, இந் நாடு பெரும் தொகையான மக்களைக் கொண்டிருக்கும்போது மிகவும் தெளிவாகத் தோன்றுகிறது. நாட்டின் பசிப்பிணியைப் போக்க அவ்வப்போது வெளிநாட்டுக் கோதுமையைக் கிரேக்கர்

இறக்குமதி செய்தனர். விவசாயத்தின் கடவுளாகிய டிமீட்டரின் கடைக்கண் பார்வை கிரேக்கர்களுக்கு அவ்வளவாக இல்லாவிட்டாலும் இந் நாட்டின் பல பாகங்களில் திராக்ஷையும், ஒலிவ மரங்களும் சாகுபடி செய்யப்பட்டன. இவ்விரண்டையும் சாகுபடி செய்வதே கிரீஸ் நாட்டின் பண்டைய முக்கியத் தொழிலாம்.

# 1. கிரீஸ் வரலாற்றின் துவக்கங்களும் வீரர்களின் யுகமும்

## 1. கிரேக்கர்களுடைய ஆரம்பம்

ஐரோப்பிய நாகரிகமானது கிரீஸில்தான் ஆரம்பமாயிற்று. இந்த நாகரிகம் மூவாயிரம் ஆண்டுகளுக்குமுன்னரே இருந்திருக்கக் கூடும் என்று நாம் காலத்தைக் குறிக்கலாம். கி.மு. பதின் மூன்றும் நூற்றுண்டில் கிரேக்க மொழி, கிரீஸ் தீபகற்பம் முழுவதும் வழக்காற்றில் இருந்தது நாம் அறிந்த குறிப்பாம். தெசலி யின் (Thessaly) வட எல்லையாயுள்ள சுவர் போன்ற மலைகளி லிருந்து தெற்கே ஆர்காஸ் (Argos), லாக்கோனியா (Laconia), மெஸ்ஸீனியா (Messenia) முதலிய விரிகுடாக்கள்வரை இம் மொழி ஆக்கிரமிப்பிலிருந்து வந்தது. ஆனுல் எந்த வரம்பைத் தாண்டிச்சென்று கிரேக்கமொழி பேசிய மக்கள் எங்கிருந்து கிரீஸி னுள் பிரவேசித்தனர் அல்லது இவர்கள் எத்துணைக் காலமாக இந் நாட்டைத் தம் வசமாகக்கொண்டு வாழ்ந்தனர் என்று கேள்விகள் எழும்போது அவ் விஞக்களுக்குத் துணிந்து விடை கூறுவதற்கு ஏதுவில்லை.

கிரீஸ் நாட்டைப்பற்றியும், பதின்மூன்றும் நூற்றுண்டில் வாழ்ந்த மக்களைப்பற்றியும், அவர்களது நாகரிகத்தைப்பற்றியும் ஹோமர் (Homer) எழுதிய இலியட் (Iliad) விரித்துரைக்கின்றது. இதுவே அக் காலத்தில் எழுத்து வடிவில் உள்ள முதல் வரலாற்றுச் சின்னமாம். கிரேக்க மக்களுள் அக்கியர்கள் (Achaeans) சிறந்தவர் களும், வீரம் செறிந்தவர்களுமாவர் என்று தெளிவாக இலியட் எடுத்துரைக்கின்றது. சமீபகாலத்தில்தான் அவர்களது நாகரிகம்

உச்ச நிலையை அடைந்திருக்கக்கூடும். இவர்களுடைய காலத்திற்கு முன் வேறு கிரேக்க மக்களினம் இதே முறையில் ஆனால் அத்துணைச் சிறப்புள்ளது என்று கூறமுடியாத நாகரிகத்தைப் பெற்றிருக்கலாம். அக்கியர்களுக்குமுன் பெலாஸ்ஜியர்கள் (Pelasgians) கிரீஸ் நாட்டில் பல பகுதிகளில் காணப்பட்டனர். ஆனால் இவர்கள் கிரேக்கர்கள் அல்லர் என்றும் இவர்களுடைய மொழி கிரேக்க மொழியை விட வேறுபட்டது என்றும் பலர் கருதுகின்றனர். ஆர்கேடியாவில் (Arcadia) தொன்றுதொட்டு கிரீஸ் மொழியைப் பேசும் மக்கள் மலைப் பகுதிகளில் காணப்படுகின்றனர். இம் மக்கள் சந்திர மண்டலம் உருவானதற்குமுன்பே தாம் ஆர்கேடியாவில் வாழ்ந்ததாகப் பெருமையாகக் கூறிக்கொள்கின்றனர்.

அக்கியருடைய காலத்திற்கு (கி.மு. 13ஆம், 12ஆம் நூற்றுண்டுகளுக்கு) முன்பே கிரேக்கர்கள் கிரீஸ் நாட்டில் அடி எடுத்து வைத்தனர் என்று முடிவுக்கு வந்தாலும், அக் காலத்திலேயே கிரேக்க தீபகற்பம் முழுவதும் கிரேக்கர்களுடையதாயிற்று என்று சொல்வதற்கில்லை. முதன்முதலில் கிரேக்கர்கள் இத் தீபகற்பத்தில் குடிபுகுந்ததையே அவர்களுடைய வமிசத்தவர்கள் முழுவதுமாக மறந்துவிட்டனர். எனவே நாம் அக் காலத்தை வரையறுக்க இயலாதவராக இருக்கின்றோம். கிரீஸ் நாட்டைப் படையெடுத்துவந்த இவர்களுடைய பூர்விகக் குடியிருப்பு, பால்கன் (Balkan) தீபகற்பத்தின் வடமேற்குப் பாகங்களாக இருந்திருக்கக் கூடும் என்று எண்ணுவதற்கு இடமுண்டு. இவர்கள் பெருங் கூட்டமாகத் தெற்கே வந்து, ஆண்டு வாழ்ந்த மக்களின் மொழிகளைக் காலப்போக்கில் அழித்திருக்கவும் கூடும். அதே நிலையில் கிரேக்கர்களால் தோற்கடிக்கப்பட்ட இம் மக்கள் கிரேக்க மொழியைப் பயிலவும், தம் தாய் மொழியை மறக்கவும் முற்பட்டனர். அவ்வாறிருப்பினும் அங்கிருந்த குன்றுகள், பாறைகள் இன்னோரன்னவற்றுக்கு அவர்களால் வைத்த பெயர்கள் இன்றும் வழங்கப் படுகின்றன. கொரிந்து (Corinth), டிரின்ஸ் (Tyrins), பார்னஸஸ் (Parnassus), ஒலிம்பஸ் (Olympus), ஆர்னே (Arne), லாரிசா (Larissa) முதலிய பெயர்கள் கிரீஸ் நாட்டிலுள்ள பழங்குடிகளிடமிருந்து கிரேக்கர்கள் பெற்றுக்கொண்ட பெயர்களாகத் தோன்றுகின்றன. இப் பெயர்களில் சில ஆசியா மைனரின் (Asia Minor) மேற்குப் பகுதிகளில் காணப்படுவதினால், கிரீஸ் நாட்டுப் பூர்வ குடிகள் ஈஜியன் பிரதேசத்தின் மேற்கு, கிழக்கு ஆகிய இரு பகுதிகளிலும் சிதறடிக்கப்பட்டு வாழ்ந்துவந்த ஒரு பழங்குடி வகையைச் சேர்ந்தவர்களாக இருக்கக்கூடும் எனக் கருதுவதற்கு இடமுண்டு.

கிரேக்கர்கள் கிரீஸ் நாட்டிற்குள் மூன்ருவது ஆயிரம் ஆண்டு (Millennium) காலத்தில் வந்திருப்பார்கள் என்று கருதுவதில் தவறு அதிகமிருக்க இடமில்லே. கிரேக்கர்கள் ஒரே காலத்தில் கிரீஸ் நாட்டிற்குள் வந்திருக்க முடியாதென்றும், இம் மக்கள் கூட்டம் கூட்டமாகப் பல ஆண்டுகளாக இவண் வந்திருக்கக்கூடும் என்றும் எண்ணுவதற்குப் பல சான்றுகள் உள்ளன. இந்தோ - ஐரோப்பியர்கள் (Indo-Europeans) வழிபடும் வானுறை தெய்வ மான ஸீயூஸ் (Zeus) இந் நாடு முழுவதும் ஏறக்குறைய கி.மு. 2000 ஆண்டில் வழிபாட்டுக்கும், வணக்கத்துக்கும் உரிய தெய்வ மாயிற்று.

மிகமிகப் பழங் காலத்தை அடியோடு மறந்துபோன வரலாற்றுக் காலத்துக்குட்பட்ட கிரேக்கர்கள் மட்டும் இவ்வாறு படையெடுத்த கிரேக்கர்களின் பரம்பரையைச் சேர்ந்தவர்கள் என்று கூறமுடியாது. இந்த இடத்தில் பூர்வ குடிகள் அனைவரும் கிரேக்கர்களால் முற்றிலுமாக அழிக்கப்பட்டனர் என்பது தவருன கொள்கையாகும். பூர்வ மக்கள் யாவரும் அழிக்கப்பட்டனர், புதிதாக வந்த மக்கள் அவர்களுடன் தொடர்பு ஏதேனும் கொள்ள வில்லை என்பதும் மிகவும் தவருன எண்ணம். கிரேக்கர் (Greeks), ரோமர் (Romans), கெல்ட் இனத்தவர் (Celts), ஜெர்மானியர் (Germans), ஸ்லாவினத்தவர் (Slavs), இல்லிரியர் (Illyrians), பிரிஜியர் (Phrygians), ஆர்மீனியர் (Armenians), பாரசீகர் (Persians), பழைய இந்தியர் (Ancient Indians) ஆகிய அனைவரும் பயிலும் மொழி ஒரே இனத்தைச் சேர்ந்தது என்பதால் மேற்கூறிய மக்களும் ஒரே இனத்தைச் சேர்ந்தவர்கள் என்று கூற முடியாது. எனவே, மொழிவாரியாக மக்களினத்தைப் பகுத்துக் கூறுவது எவ்வளவு தவருனது என்று அறியலாம். கிரேக்க மொழியின் பிற் கால வரலாறு கூறுமாறு இது வலிமையானதும், ஆண்மை மிக்கது மான ஒரு மொழியாம்.[1] இம் மொழி பூர்வ குடிகளின் மொழிகளை வாழ வழி செய்யாது, அழித்தெறிந்து அம்மக்களை இம் மொழி யைப் பயிலவும், தமதாக்கிக்கொள்ளவும் முற்பட்டது. கிரேக்க மொழி வழங்கிய இடமெல்லாம், ஏனைய மக்கள் பயின்றுவந்த

[1] மற்ற மொழிகளைக் காட்டிலும் சில சிறிய மாறுதல்களுடன் இம் மொழி பிழைத்து வாழ்வது இதன் வலிமையை எடுத் துக் காட்டுகிறது. குரோவர் (Grover) கால ஆங்கிலத்திற்கும் தற்கால ஆங்கிலத்திற்கும் உள்ள வித்தியாசத்தைக் காட்டிலும் ஒரு சிறிதளவு வித்தியாசம்தான் ஸ்ஸெனப்போன் காலத்துக் கிரேக்க மொழிக்கும் தற்காலக் கிரேக்க மொழிக்குமிடையே காணப்படுகிறது.

மொழிகள் மறைந்தன. இங்ஙனம் மொழிகள் அழிக்கப்பட்டதைக் கொண்டு அவ்விடத்து மக்களும் அழிக்கப்பட்டனர் என்று கருதுவது மிகவும் தவறாகும். எங்குக் கிரேக்கர்கள் குடியேறினார்களோ அங்கு வாழும் மக்கள் யாவரும் தம் தாய் மொழியை மறக்கவும் கிரேக்க மொழியைப் பயிலவும் முற்பட்டனர். பழையனவும் புதியனவும் இணைக்கப்பெற்றன.[2] படையெடுத்துவந்த இந்தோ-ஐரோப்பியர்களின் தெய்வங்களுடன், பூர்வ குடிகள் வழிபடும் தெய்வங்களும் ஒன்றுசேர நேர்ந்தது.

## 2. ஈஜியன் நாகரிகம் - கிரீட் தீவு (Crete)

நம் யூகத்திற்கும் அப்பாற்பட்ட காலத்திலேயே கிரீஸ் நாடு கிரேக்கர்களால் குடியேறப் பெற்றிருப்பினும் அதன் கடற்கரை



படம் 1: வெள்ளை மாக்கல் முத்திரையின் எழுத்துக்கள் கொண்ட இரண்டு பக்கங்கள் (கிரீட்).

யோரங்களில் கிரேக்கருடையதல்லாத ஒரு நாகரிகம் மிகச் சிறந்த நிலையிலிருந்தது. இந் நாகரிகம் கிரேக்கருடைய முற்போக்கான நிலைக்கு ஓர் ஏதுவாயிருந்தது. சம காலத்திலிருந்த கிரேக்க நாக

[2] இதன் ஆண்மைமிக்க திறன் மத்திய காலத்தில் (Middle Ages) இம் மொழி தனது ஸ்லாவோனிக் தங்கையின்மேல் கொண்ட வெற்றியிலிருந்து புலப்படுகின்றது. பெலோப்போனீஸஸில் குடியேறிய ஸ்லாவ் மக்கள் தங்கள் மொழியை மறந்து கிரேக்க மொழியைத் தமதாக்கிக் கொண்டனர். ஆனால் இதற்கு அல்பேனியா (Albania) மொழியை நசுக்க முடியவில்லை. ஆதிக் குடிகளுடன் கிரேக்கர்கள் கலக்கவேதான் கிரேக்க திசை மொழிகளில் வித்தியாசங்கள் ஏற்பட்டன என்று நாம் யூகித்துக் கொள்ளலாம். அடுத்தபடியாக ஏற்பட்ட இல்லீரியர்களின் (Illyrians) படையெடுப்புகளும், மற்றப் படையெடுப்புகளும் இச் செய்முறையைத் துரிதப்படுத்தின.

ரிகத்தைவிட இந் நாகரிகத்தைப்பற்றி நாம் அதிகமாக அறிவோம். ஈஜிய நாகரிகம் (Aegean) என்று அழைக்கப்படும் இந் நாகரிகம் சமீப காலத்தில்தான் நமக்குத் தெரியவந்தது. இது கற்கால முதல் கிரீட், மீலாஸ் (Melos) மற்றும் ஈஜியன் தீவுகளில் படிப்படியாக வளர்ந்து வந்தது. மூன்றுவது ஆயிரம் ஆண்டு காலத்தில் இந் நாக ரிகத்தைச் சேர்ந்த கிரீட், வலிமையிலும் புகழிலும் எகிப்து (Egypt), பாபிலன் (Babylon) முதலிய நாடுகளின் நாகரிகங்களைவிட மிக உச்ச நிலையினை அடைந்திருந்தது. கிரீட் தீவின் புகழ் வாய்ந்த காலத்திலுள்ள சின்னங்கள் பூமியிலிருந்து வெட்டியெடுக்கப் பெற் றுள்ளன. கிரேக்கரது பரம்பரைக் கொள்கைகள் கிரீட் தீவானது ஒரு காலத்தில் கடலாதிக்கம் மிகுந்த நாடு என்று நினைவு கூர்ந்தா லும்கூட அவைகள் இத் தீவு மத்தியதரைக் கடல் பகுதியில் உன்னத நிலையை அடைந்த ஒரு சிறந்த நாகரிகத்தின் மையம் என்பதை ஓரளவும் சந்தேகிக்கவில்லை.

மூன்றுவது ஆயிரம் ஆண்டுக் காலத்தில் கிரீட் கற்காலத்தி லிருந்து உலோக காலத்திற்கு மாறியது. ஒன்றுபட்ட பண்பாட் டின் சின்னங்கள் இத் தீவின் பல பகுதிகளில் காணப்பட்டாலும், நாசஸ் (Cnossus), பீஸ்டஸ் என்னும் இரு இடங்களே இந் நாகரிகத் தின் தலைசிறந்த இடங்களாகும். இவை, வீரம் மிகுந்த அரசர் களின் தலைநகரங்களாக விளங்கின. வட கடற்கரையின் ஏறக் குறைய மத்தியப் பகுதியில் கெய்ராட்டேஸ் நதிதீரத்தில் கடலை யடுத்துச் சில மைல்கள் தூரத்தில் நாசஸ் மலை காணப்படுகிறது. சற்றேறக்குறைய கி.மு. 2000 ஆண்டில் இவண், ஒரு பெரிய அரண்மனை கட்டப்பட்டது. அக் காலத்திலேயே தெற்கே பீஸ்டஸ் என்னுமிடத்தில் பெரிய மாளிகை ஒன்றும் அமைக்கப்பட்டது. இவ் வரண்மனைகள் பல நூற்றுண்டுகள்வரை நீடித்திருந்தன. இக் காலத்தில் கிரீட்டனின் கலை சிறந்து விளங்கியது. இக் காலத்தில் தான் வண்ணம் நிறைந்த பாண்டங்களை ஆக்கும் இவர்களது தொழில் முற்றுப்பெற்றுத் தோன்றியது. கிரீட் தீவின் கலைஞர் களது கைவன்மையைக் காட்டப் பல சான்றுகள் உள்ளன. அவை களில் ஒன்றுதான் நீல வண்ணத்தால் தீட்டிய சிறுவன் ஒருவன் க்ரேஸுஷூஸ் என்னும் பூக்களைப் பூச்சாடியில் வைப்பதாக அமைந்த சுவரோவியமாகும் (fresco).

கிரீட் தீவு மக்கள் எழுத்துவன்மை பெற்றிருந்தனர் என்பது கவனத்தைக் கவரும் உண்மையாம். முதலில் இவர்கள் படங் களின்மூலம் தமது கருத்தை வெளியிட்டனர். இம் முறையில் எருதின் தலை அல்லது கதவு அல்லது கண் போன்ற ஒவ்வொரு

படமும் ஒவ்வொரு சொல்லைக் குறிப்பிடும்.[3] இதற்குச் சற்றுப் பிந்திய காலத்தில் படங்களுக்குப் பதில் இவர்கள் கோடுகளைப் பயன்படுத்தினர். ஒவ்வொரு கோடும் ஒவ்வொரு பதத்தைக் குறித்திருக்கலாம் என்று கருதப்படுகின்றது. இத்தகைய எழுத்துக்கள் டிக்டி மலைக் (Mount Dicte) குகையில் தேவர்களுக்காக வைக்கப்பட்டுள்ள பலிகளைச் செலுத்தும் மேசையில் பொறித்துள்ளதை நாம் காணலாம். டிக்டி மலையானது அக் காலத்திலேயே ஒரு புனிதத்தலம். பிற்காலத்தில் ஸியூஸ் கடவுளின் பிறப்பிடமாகக் கருதப்பட்டது.

இப் பாத்திரங்களில் காணப்படும் மொழிகளின் மறைந்த செய்தியை வெளிப்படுத்தும் குறிப்பில்லை. இம் மொழி இந்தோ-ஐரோப்பிய மொழிகளுடன் தொடர்பு கொண்டுள்ளதாகத் தெரியவில்லை. ஒருகால் இம் மொழி மேற்கு ஆசியா மைனர் பாகத்தில் வசித்த பழையமக்கள், லிசியர்கள் முதலியோரின் மொழிகளுடன் தொடர்புடையதாயிருக்கலாம் எனக் கருதுவதற்கு இடமிருக்கின்றது. பிற்காலத்தில் மற்றப் பகுதிகள் யாவும் கிரேக்க மொழியைப் பயிலும்போது கிழக்கு கிரீட் பகுதியில் ஒரு விசித்திர மொழி உலவி வந்தது. அம் மொழி சில பதிவேடுகளில் காணப்படுகின்றன. இவைகளை வாசிக்க முடிந்தாலும் அவைகளின் பொருளை அறிந்து விளக்க முடியவில்லை.[4] இம் மொழி கிரேக்க மொழிக்கு முந்தியது என்று கருதுவதற்கு இடமுண்டு.

ஏறத்தாழ கி.மு. 1700 ஆண்டு, அதாவது கிரீட் வரலாற்றின் சிறப்புக்காலத்தின் இறுதியில் நாஸஸ், பீஸ்டஸ் அரண்மனைகளின் சில பகுதிகள் அழிக்கப்பட்டன. இந்த அழிவு, அந்நியப் படையெடுப்பினாலன்றி உள் நாட்டுப் புரட்சியின் காரணத்தினால் ஏற்பட்டிருக்கக்கூடும் என்று நம்பப்படுகிறது. அதே சமயத்தில் கிரீட்

[3] கிரீட்டில் படங்களாலாகிய எழுத்தைக்கொண்ட ஒரு சிறந்த பதிவேடு பீஸ்டஸ் (Phaestus) நகரில் காணப்பட்ட சுட்ட மண்ணாலாகிய ஒரு சிறு தட்டாகும். இத் தட்டு இரு புறங்களிலும் சுருள் வடிவக் கோட்டில் விடாது பொறிக்கப்பட்ட பட வடிவங்களைக் கொண்டுள்ளது. இதை ஒரு வார்ப்புருவாக உபயோகிக்க யோசித்திருக்கலாம். இதில் காணப்படும் வாக்கியம் சமயப் பாடல் ஒன்றிலிருந்து எடுத்திருக்கக்கூடும் என்றும் யூகிக்கப்படுகிறது. இதற்கு கிரீட் முதலிடமில்லை என்றும் இது ஒரு வேளை லிசியா (Lycia) விலிருந்து இறக்குமதியாக்கப் பட்டிருக்கலாம் என்றும் யோசிப்பதற்குக் காரணம் இருக்கின்றது.

[4] கீழே மூன்றாவது அத்தியாயம் நான்காவது பிரிவைக் காண்க.

தீவிற்கும், எகிப்து நாட்டிற்கும் உள்ள தொடர்பு நூறு ஆண்டு களுக்குமேல் தடை பெற்றதாகவும் தெரிகின்றது. ஆனால் ஒரு புதிய வமிசம் அதிசீக்கிரத்தில் நாஸஸ் மலையைக் கைவசப்படுத்தி அங்குள்ள நாகரிகத்தை வளப்படுத்தியதுமன்றி, முன்பிருந்த நாகரிகத்தைவிடச் சிறந்த முறையில் ஒரு நாகரிகத்தைத் தோற்றுவித்தது.

கிரீட்டில் ஈஜியின் நாகரிகம் மிக உச்ச நிலையை அடைந்தது. ஆனால் இந் நாகரிகம் ஆர்ச்சிபிலாகோ தீவுகளில், சிறப்பாக மிலாஸ் தீவில், சுயமாகவே வளர்ந்தோங்கியது. மிலாஸ் தீவில் இந் நாகரிகத்தின் வளர்ச்சியின் தொடர்பைப் பைலாக்கோப்பி (Phylakopi) என்ற குடியிருப்பில் காணலாம். மிலாஸ் தீவில் ஆப்சிடியன் (obsidian) என்னும் கண்ணாடி போன்ற பொருள் கிடைக்கின்றது. இப் பொருள் கற்காலத்திலும், அதற்குப் பின் னும் கத்திகள், ஈட்டி முனைகள் செய்வதற்கும் ஓர் இன்றியமையாத பொருளாயிருந்தது. பலர் இதனை விரும்பினர். ஆகவே எகிப்து முதலிய நாடுகளுக்கு இப் பொருள் ஏற்றுமதி செய்யப்பட்டு வந்தது. இதன் பொருட்டு முற்காலத்தில் இத் தீவு செழுமை பொருந்தி விளங்கியது. கிரீஸ் நாட்டின் கீழ்ப்பகுதியில் கிடைத் துள்ள சின்னங்களிலிருந்து இப் பிரதேசமும் இத் தீவின் நாகரிகத் தால் பாதிக்கப்பட்டிருத்தல் வேண்டுமென்று தெரிகின்றது.

மூன்றாவது ஆயிரமாண்டுக் காலத்தைச் சேர்ந்த டிராய் மலையி லுள்ள பெருங்கோட்டையை நாம் இன்றும் காணலாம். இக் கோட்டை எலஸ்பான்ட் புகுமுகத்தைக் கம்பீரத்துடன் காவல் புரிந்து நிற்கின்றது. ஸ்காமாண்டர் நதிதீரத்தில், 160 அடி உயர்ந்துள்ள புகழ்பெற்ற மலைச் சிகரத்தில் காணப்படும் இந்த நகரம் இம் மலையில் கட்டப்பட்ட முதல் நகரமாகாது. அடித்து உருவாக்கப்படாத கற்களால் செய்யப்பட்ட மதிற்சுவர்களைக் கொண்ட முதல் குடியேற்றத்தை இன்றும் காணலாம். இங்குப் பழங்காலத்து மண்பாண்டங்களும், கற்கருவிகளும் கிடைத்தன. வெள்ளை நெப்ரயிட்டால் (nephrite) செய்யப்பட்ட கோடரி ஒன்று மத்தியதரைக் கடல் பகுதிக்கும் கீழ் நாட்டிற்கும் உள்ள தொடர்பை எடுத்துக் காட்டுகின்றது. இப் போக்குவரத்து மந்த மாகவும் உறுதியற்ற நிலையிலும் நிகழ்ந்திருக்க வேண்டும். பச்சை நிறப் பளிங்குக் கற்கள் (jade) மத்திய ஆசியாவில்தான் கிடைக் கின்றன. பழைய நகரத்தின் அழிவுக்குப்பின், பெரிய அரண் ஒன்று எழுப்பப் பட்டது. இவ் வரணைச் சுற்றியுள்ள சுவர் கல் அடிவாரங்களின்மேல் சூரிய வெப்பத்தினால் சுடப்பட்ட செங்கற்

களால் கட்டப்பட்டது. இதன்கண் மூன்று வாயில்கள் உள்ளன. இதன் சுவர் மூலைகள் யாவும் கோபுரங்களால் காவல் செய்யப் பட்டுள்ளன. இந்த நகரில் வாழ்ந்த மக்கள் கற்காலத்தையும்

படம் 3 : ட்ராய் சமவெளி

செப்புக் காலத்தையும் சேர்ந்தவர். வெண்கலம் அரிதாகவே கிடைக்கப்பெற்று வந்தது. அவர்களுடைய மண்பாண்டங்கள் கையால் ஆனவை. அதே காலத்தில் பொன்னால் செய்யப்பட்ட ஆபரணங்களைக் கொண்ட ஒரு பொருட் களஞ்சியம் இருந்த இடம் செல்வச் செழிப்பினையுடைய இடம் என்று அறிவிக்கின்றது. இப் பழைமையான நகரில் அமையப்பெற்றிருந்த அரண்மனையின் உருவக் கோடுகள் (outlines) மிகவும் முக்கியமான அமிசங்கள். ஈஜிய நாகரிகத்தின் துவக்க காலத்து வீடுகளின் முக்கிய பாகங் களின் தரைப்படங்கள் (plans), ஆயிரம் ஆண்டுகளுக்குப்பின் ஹோமர் தம் நூலில் விரித்துரைத்துள்ள முறையிலேயே காணப்படு

கின்றன. நாம் வெளி வாயிலிருந்து வீட்டில் நுழைந்தால், அங்கே ஒரு முற்றம் காணப்படுகின்றது. அதில் ஒரு சிறு அறைபோலுள்ள இடத்தில் ஒரு பலிபீடம் தென்படுகின்றது. இந்த முற்றத்திலிருந்து நாம் உள்ளே செல்வோமானால் அங்கு ஒரு பெரிய கூடத்தைக் (hall) காண்கின்றோம். இக் கூடத்தின் மத்தியில் குளிரைப் போக்குவதற்காகவுள்ள அடுப்பைக் காண்கின்றோம்.[5]

இவ் வரண்மனையை எதிரிகள் நெருப்பினால் அழித்தனர். எனவே இதன் முன்னாள் வரலாறு நமக்குக் கிடைக்கவில்லை. ஏழு அல்லது எட்டு நூற்றாண்டுகளுக்குப் பின்னர் இவ்விடம் தோன்றிய புகழ்பெற்ற நகரத்தை ஆராயுங்கால் இவண் வாழ்ந்த மன்னரின் செல்வாக்கை ஓரளவு அறியக்கூடும்.

இலக்கிய ஏடுகள் (தஸ்தாவேஜிகள்) யாவுமின்றி நாம் எவ்வாறு இந்த ஈஜின நாகரிகத்தைப் படிப்படியான கட்டங்களில் அமைக்கவும், அவைகளுக்கான காலங்களை நிர்ணயிக்கவும் கூடும் என்று பலர் கேட்கக் கூடும். நாம் காலத்தைக் கற்காலம், வெண்கலக்காலம் என்று இரண்டு முக்கிய காலங்களாகப் பிரிக்கும் பொழுது, குயவர்களின் கலை இக் காலங்களை வரையறுக்கும் எல்லையை அறுதியிட்டுக்கூற ஏதுவாயிருக்கின்றது. களிமண்ணால் செய்யப்பட்ட எளிமையும் அலங்காரமில்லாதவையுமான இக் கலங்கள் முற்காலத்தில் கைத்திறத்தால் ஆனவை என்றும், அழகிய வேலைப்பாடுகளுள்ளவை என்றும், குயவன் சக்கரத்தில் செய்யப்பட்டவை என்றும் நாம் வரிசை முறைப்படி ஒழுங்குபடுத்தலாம். உடைபட்ட மண் பாண்டங்களையும், ஏனைய பொருள்களையும் இவ்விதமாக ஒன்றன்பின் ஒன்றாக வைத்துக் கூறலாம் இவ்வாறு நாம் செய்து கொள்வோமேயானால் கால அட்டவணை அறுதியிட மிக எளிதாயிருக்கும். கிரீட்டன் நாகரிகம், கற்காலத்தின் இறுதியிலிருந்து மண் பாண்டங்களின் உதவியால் மூன்று காலங்களாகப் (ages) பிரிக்கப்பட்டுள்ளது. இவை முறையே முதல் மினோவன், இடைக்கால மினோவன், பின் கடைசி மினோவன் என்று அழைக்கப் படுகின்றன. ஒவ்வொரு காலமும் மூன்று உட்பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றது.[6]

[5] பக்கத்திலுள்ள ஒரு கட்டடத்தில் ஹோமர் வரைந்துள்ளபடி முதல் அறையை மாத்திரமல்ல, அதற்கு வெளிப்பக்கத்திலுள்ள முன்கூடத்தையும் (vestibule) நாம் காண்கின்றோம்.

[6] மத்திய மினோவன், பிந்திய மினோவன் காலங்களுக்குக் கொடுக்கப்பட்ட உத்தேச காலக்குறிப்பும், அதே காலத்து சில

கிரீட் எகிப்துனுடன் கொண்டிருந்த வாணிபத் தொடரைக் கொண்டுதான் நாம் அத் தீவின் வரலாற்றின் முக்கிய காலங்களைக் குறிக்க முடிகின்றது. இதையே விரிவாகக் கூற வேண்டுமானுல் கிரீட் தீவின் முக்கிய காலங்களையும், உலக வரலாற்றின் காலங்களையும் ஒன்றுசேர்த்து ஆராய உதவியாயிருந்தது இத் தீவின் வாணிபமேயாகும் எனலாம். எடுத்துக்காட்டாக எகிப்து நாட்டிலுள்ள அபைடாஸ் என்னுமிடத்திலுள்ள மூன்ரும் செனுசெர்ட் (செசோஸ்டிரஸ்) அரசரின் சவக்குழியில் காணப்பட்ட பல நிறங்களால் வனையப்பட்ட மண்பாண்டம், இடை மினேவன் காலத்தின் இரண்டாவது பிரிவு கி.மு. 1880 ஆண்டின் சமீபத்தில் முடிவுபெற இருக்கின்றது என்று கணக்கிட முடிகின்றது. மேலும் நாஸஸ் அரண்மனையின் முற்றத்தில் டியோரைட் கல்லினுல் செதுக்கப்பட்ட எகிப்தியனுடைய சிற்றுருவம் ஒன்று காணப்படுகின்றது. இவன் பெயர் எகிப்து எழுத்துக்களால் பொறிக்கப்பட்டிருக்கிறது. இச் சிலையின் அமைப்பு முறையைக்கொண்டு கி. மு. பத்தொன்ப

---

எகிப்திய நிகழ்ச்சிகளின் காலக்குறிப்பும் கொண்ட கீழ்க்கண்ட அட்டவணை உபயோகமாக இருக்கக்கூடும் :

மத்திய மினேவன் 1 கி.மு. 2100-1900 (11வது வமிசம் 2160-2000).

மத்திய மினேவன் 2 கி.மு. 1900-1700 (12வது வமிசம் 2000-).

மத்திய மினேவன் 3 கி.மு. 1700-1600.

பிந்திய மினேவன் 1 கி.மு. 1600-1500 (18ஆம் வமிசம் 1580-).

பிந்திய மினேவன் 2 கி.மு. 1500-1400 [மூன்ரும் தாத்மஸ் (Thothmes III) 1500- [இரண்டாவது அமென்னேடெப் (Amenhotep II) 1450- [மூன்ரும் அமென்னேடெப் (Amenhotep III) 1414- நாஸஸின் வீழ்ச்சி 1400ஆம் ஆண்டுபோல்]

பிந்திய மினேவன் 3 கி.மு. 1400-1100 [நான்காம் அமென்னேடெப் (Amenhotep IV) இக்நாட்டன் (Ikhnaton) 1375க்கும் 1360க்குமிடையே [19ஆம் வமிசம் 1321-; இரண்டாம் ராம்ஸேஸ் (Ramses II) 1292-; மெர்ன்த்தா (Mernptah) 1225-1215; மூன்ரும் ராம்ஸேஸ் (Ramses III) 1198-1167].

தாம் நூற்ருண்டின் இரண்டாவது பகுதியில் குறிப்பாக 12ஆம் அல்லது 13ஆம் வமிச காலத்தில் செதுக்கப்பட்டிருக்கலாம் என்று அறியலாம்.[7]

ஏறக்குறைய கி. மு. 1600 ஆண்டில் ஒரு புதிய வமிசத்து அரசர்கள் நாஸஸ் மலேயில் தமது ஆட்சியை நிறுவினர். இவர்கள் புதிய வமிசத்தவர்களேயன்றி, புதிய இனத்தைச் சேர்ந்தவரல்லர். இந்த அரண்மனை மிகப் பெரும் அளவில், உயர்ந்த வாழ்க்கைக்குத் தேவையான யாவையும் கொண்டதாக மீண்டும் கட்டப்பட்டது. ஆயினும் பொதுவாகக் கட்டடக் கலேயின் முறையை அவர்கள் மாற்றி யமைக்கவில்லே. திரும்பவும் கி. மு. 1500 இவ் வரண்மனை பெருமளவில் மாற்றி அமைக்கப்பட்டது. இந்த அரண்மனை ஏறக் குறைய ஐந்து ஏகரா நிலப்பரப்பில் கட்டப்பட்டுள்ளது. இவ் வரண்மனையைச் சுற்றிச் சுவர்கள் இல்லே. இவண் வசித்த சீமான்கள் வெளிநாட்டுப் படையெடுப்புகளே எதிர்க்கத் தமது கடற்படையின் வலிமையை நம்பியிருந்தனர் போலும். அரண்மனை யின் மத்தியிலுள்ள முற்றத்திற்குக் கிழக்கேயும் மேற்கேயும் சுழன்று சுழன்று செல்லும் சுரங்க வழிகளும், அறைகளும் காணப் படுகின்றன. இவ் வரண்மனை சில இடங்களில் மூன்று அல்லது நான்கு மாடிகளே யுடைத்தாயிருக்க வேண்டும் என்னும் உண்மையை, அங்கு உடைந்து காட்சியளிக்கும் மாடிப்படிகள் நமக்கு உணர்த்துகின்றன. அரண்மனையின் ஒவ்வொரு முக்கிய மான கூடத்தின் ஒரு கோடியில் மூன்று புறங்களிலும் அடைப் புள்ள 'ஒளிக் கிணறுகள்' (Light wells) மூலம் வெளிச்சம் பரவும். அடைப்பில்லாத பகுதியில் இந்த ஒளிக் கிணறுகளுக்கிடையே இரண்டு அல்லது மூன்று தூண்கள் அவற்றைப் பிரித்து நின்றன. இவ் வரண்மனை குளிப்பதற்கு வசதியான அறைகளும், சாக்கடை நீரை வெளியேற்றுவதற்காக ஒரு தலேசிறந்த வடிகால் திட்டமும் அமையப்பெற்றுள்ளது. தற்காலத்தில் காணப்படும் வடிகால் திட்டங்களேப்போல் இது விளங்குகின்றது என்ருல் நமக்கு வியப்பை உண்டுபண்ணுகிறதல்லவா ! இவ் வரண்மனை அரசமக்கள் மட்டும் வாழ்வதற்காக இருந்தால் இத்துணைப் பேரளவில் அமைந் திருக்கவேண்டா. இவ் வரண்மனை பல்வேறு காரியங்களுக்காகவும்

[7] 11ஆம் 12ஆம் அதற்குப் பிந்திய வமிசங்களின் தேதிக் குறிப்புகள் விவாதத்திற்கு உரியவை. ஆனல் சமீப காலத்தில் 12ஆம் வமிசம் (செசோஸ்டிரஸ் இதைச் சேர்ந்தவர்) கி.மு. 2000இல் ஆரம்பித்தது என்றும், 11ஆம் வமிசம் கி.மு. 2160-2000க்குள் அடங்கும் என்றும் ஒரு கருத்து ஆதரிக்கப்பட்டு வருகின்றது.

அமைக்கப்பட்டதாகத் தெரிகின்றது. இது அரசாங்கத்தின் இருப்பிடமாயிருந்தது. இங்கிருந்துதான் சுற்றுப்புற நாடுகள், முழுத் தீவினுடைய ஆட்சி, கடல்சார்ந்த ஒரு பெரிய பேரரசு ஆகிய அனைத்தையும் ஆட்சி புரிந்ததாகத் தெரிகின்றது. பதிவேடுகள் வைத்துக் காப்பாற்றப்படுமிடத்திலிருந்து கிடைக்கப்பெற்ற நிதிபற்றிய சாசனங்களால் இந்த அரசாங்க நிர்வாகம் வியாபார முறையில் நடத்தப்பட்டதாகத் தெரிகிறது. இப்பெரிய விரிவான நிர்வாகத் துறையை இயக்குவதற்காக ஏற்படுத்தப்பட்ட காரியாலயங்களைக்கொண்ட பெரிய அறைகள் தேவைப்படும் என்பதை நாம் எளிதில் ஊகித்துக்கொள்ளலாம். தம் ஆட்சிக்குட்பட்ட ஏனைய நாடுகள் செலுத்தும் கப்பங்களை அரசர்கள் தமது அரண்மனையின் ஒரு பகுதியிலே சேமித்து வைத்தனர். அரசர்களின் சுயதேவைகளுக்காகவும், வியாபாரத்திற்காகவும் அரண்மனையிலேயே பல கைத்தொழில்களும் நடைபெற்று வந்தன. ஒலிவ எண்ணெய் இறக்கும் யந்திரமொன்றும், அதனை யடுத்துக் காணப்படும் பெரிய சாடிகளும் அரண்மனையில் சமைப்பதற்காகவும் விளக்கு எரிவதற்காகவும் எண்ணெய் சேகரிக்கப்பட்டதுமன்றி, இந்த எண்ணெய் அரசரால் வியாபாரத்திற்கும் பயன்படுத்தப்பட்டிருக்கலாம் என்றும் தெரிய வருகிறது. அக் காலத்தில் கிரீட் தீவின் முக்கிய ஏற்றுமதிப் பொருள்களில் ஒன்று ஒலிவ எண்ணெயாகும். அரச சேவையில் ஈடுபட்ட சிற்பிகளும், வண்ணம் தீட்டுவோரும்கூட அரண்மனையின் ஒரு பகுதியில் வாழ்ந்தரெனத் தெரிகின்றது. வண்ணங்கள் அவ்விடத்தே உற்பத்தி செய்யப்பட்டிருக்கக்கூடும் என்பதற்கும் சான்றுகள் பல உள. மேலும் சிற்பியின் தொழிற்சாலை ஒன்றும் அரண்மனையிலே கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.

இப் பெரும் அரண்மனையில் அரியணை காணப்படும் அறை முக்கியமானது. நடுமுற்றத்திலிருந்து, பக்கத்திலுள்ள அறை வழியாக இந்த அறைக்குச் செல்லலாம். அரியணை கல்லினால் செதுக்கப்பட்டு வண்ணங்களுடன் அழகாகத் தீட்டப்பட்டுள்ளது. இதன் இரு புறங்களிலும் சுவரோரத்தில் நீண்ட விசுப்பலகைகள் உள்ளன. இது அரசர் தமது அமைச்சருடன் அரசியல் விஷயமாகக் கலந்துகொள்ளும் ஆலோசனை மண்டபமாக இருந்திருக்கலாம். இவ் வறைக்கு அடுத்தாற்போல் திறந்த வெளியையுடைய அறை ஒன்று இருக்கிறது. அதனுள் தண்ணீர்த் தடாகம் ஒன்றுளது. அதன் சுவர்களில் எகிப்தியப் படம் ஒன்று தீட்டப்பட்டுள்ளது. இப் படம் ஆறு, கோரைப்புல்வகை, ஈந்துபோன்ற மரங்கள் முதலியவற்றைக்கொண்ட இயற்கைக் காட்சியாகும். முக்கிய

அறைகளின் சுவர்களிலும், தாழ்வாரச் சுவர்களிலும் வர்ணச் சுவரோவியங்கள் காணப்படுகின்றன. இவை பெரும்பான்மை ஊர்வலங்களையும், ஆண்களும் பெண்களும் ஆரவாரத்துடனிருப்பதையும், நகர வாழ்க்கையையும், சிற்சில இடங்களில் போர்க் காட்சியையும் கொண்டவை. சிறு 'பிரஸ்கோ' படங்கள் மக்களின் நடையுடை பாவனைகளை எடுத்துக் காட்டுகின்றன. பெண்கள் தங்கள் கூந்தலை நன்கு அலங்கரித்துக்கொண்டும், நவ நாகரிக உடைகளை உடுத்திக்கொண்டும், முற்றத்திலும் மாடிகளிலும் தமது நேரத்தை வீணுகச் செலவிடும் காட்சிகளை நாம் பார்க்கின்றோம். வாட்டசாட்டமான பானகக்காரன் ஒருவன் தன் கைகளில் கோப்பைகளை ஏந்தி நிற்கும் படம், இங்குக் காணப்படும் படங்களிலெல்லாம் மிகச் சிறந்ததாகும்.

பதினைந்தாம் நூற்றாண்டில் மூன்ருவது தோத்மஸ் என்ற தீப்ஸ் வமிசத்து எகிப்து நாட்டு மன்னருக்குக் கிரீடன் இனத்தைச் சேர்ந்தவர்கள் (கேஃப்டியு) வெகுமதி கொண்டு வருவதுபோல் எகிப்தில் வர்ணம் தீட்டிய ஒரு படம் உள்ளது. இங்குள்ள படத்தில் காணப்படும் பானகக்காரன் அவ் வினத்தைச் சேர்ந்தவன் எனக் கருத இடமுள்ளது.

பின்னர் தோன்றிய பிரபுக்கள் நாஸஸ் அரண்மனையின் வடக்கு வாயிலில் ஏறக்குறைய 400 மக்கள் அமர்ந்து காணக்கூடிய ஒரு நாடக அரங்கம் அமைத்தனர். இது புதியதோர் அமிசம் ஆகாது. ஏனென்ருல் இதற்கு முன்னதாகவே பீஸ்டஸ் அரண்மனையில் ஒரு நாடக அரங்கம் அமைக்கப்பட்டிருந்தது. இசைக் கருவி மீட்டுவோர் இருக்குமிடம் பிற்காலத்தவைபோல் வட்டமாக இல்லாமல் நீண்ட சதுரமாக இருந்தது. இவ்விடத்தில் கிரீட் தேவதைகளுக்கான சமயச் சார்புள்ள நடனங்களும், குத்துச் சண்டைகளும் பெரும்பாலும் நடைபெற்றன, கிரீட்டர்களுடைய நகைகளில் பதித்துள்ள விலையுயர்ந்த கற்களில் செதுக்கியுள்ள படங்களிலிருந்தும், சுவர்களில் தீட்டியுள்ள படங்களிலிருந்தும் இவர்களுக்குள் காளைச் சண்டை (Bull fights) அதிக விருப்பமுள்ள பொழுதுபோக்கு என்பது தெரிய வருகின்றது. ஆயினும் இவ் வரங்கம் காளைச் சண்டைக்கேற்ற அளவு பெரியதாக இல்லை. இக் கொடூரமான பொழுதுபோக்கில் பெண்களும் ஈடுபட்டிருந்தனர் என்பதை காளையின் கொம்புகளில் ஒரு பெண் சிக்கிக் கொண்டிருக்கும் படமொன்றைக்கொண்டு நாம் அறியலாம். அரசர்கள் அமைதியான வேறு பல பொழுதுபோக்குகளை அறிந்திருந்தனர். வனப்புமிகுந்த சதுரங்கப் பலகை ஒன்று கிடைத்

துள்ளது. இப்பலகையில் பல இனிய சித்திரக் கலைகளைக் காண லாம். இதுவன்றி இதில் பொற்றகட்டு வேலைப்பாட்டைக் கொண்ட தந்தங்களும், நீலமும், வெள்ளையும் மாறிமாறி விளங்கும் பளிங்குக் கற்களும் பதிக்கப்பட்டுள்ளன. நீல வண்ணத்துக் கான ஒருவகை நீலநிறப் பசையும், வெண்மையைக் காட்டும் வெள்ளித் தகடுகளும் உபயோகிக்கப்பட்டுள்ளன.[8]

இம் மாபெரிய அரண்மனைக்குக் கீழ்ப்புறத்தில் அதாவது வடவாயிலிலிருந்து நதிதீரத்தில் 130 கஜ தூரத்தில் ஒரு சிறிய அரண்மனை காணப்படுகின்றது. இது மன்னர்களின் கோடைக் கால இருப்பிடமாக இருந்திருக்கக்கூடும் என்று கருதுவதற்கு இட மிருக்கின்றது. இம்மாளிகை சிறியதாக இல்லாமல் பெரிய மாளிகையில் காணப்படும் வசதிகள் நிறைந்துள்ளது. இங்குப் பதினாறும் நூற்றாண்டில் நாஸஸ் குயவர்களின் கைத்திறனை எடுத்துக் காட்டக்கூடிய வர்ணம் தீட்டிய உடைந்த ஜாடி ஒன்று கண்டுபிடிக்கப்பட்டது. இந்த ஜாடி மேல்மாடியிலுள்ள ஓர் அறையிலிருந்து விழுந்திருக்கக்கூடும். இவ் வரண்மனையின் அலங் காரங்கள் மிகவும் புகழ்பெற்றவை. மகிழ்ச்சி தரக்கூடிய முறை யில் பப்பைரஸ் தாள்களும், சிறிய ரோஜாமலர்களும் பல வர்ணங்களால் கவர்ச்சி மிகுந்ததாய் தீட்டப்பட்டுள்ளன. இங்கும் ஓர் அரியணைக்கூடம் காணப்பட்டது. 12 கஜம் உயரமுள்ள பல தூண்கள் கொண்ட இந்தக் கூடம் ரோமர்களுடைய பாசிலிக்கா (Basilica) அல்லது நீதிமன்றம்போல் விளங்குகின்றது.

பீஸ்டஸ் அரண்மனை ஒரு சமயம் பதினாறும் நூற்றாண்டில் திரும்பக் கட்டப்பட்டிருக்கலாம். நாஸஸ் அரண்மனையைப் போலவே இதனைச் சுற்றியும் மதில்சுவர்களில்லை. இதன் நிலப் படத் திட்டம் (plan), கட்டடம் நிர்மாணித்த வகை முதலியன நாஸஸ் அரண்மனையைப் போன்றவையே. இந்தக் கட்டடத்தின் மையத்தில் ஒரு பெரிய முற்றமும், அதனைச் சுற்றித் தூண்கள் கொண்ட வரவேற்புக் கூடங்களும், பண்டகச்சாலைகள் அல்லது

[8] சைப்ரஸிலுள்ள (Cyprus) பழைய சாலமிஸ் (Old Salamis) ஸில் (என்கோமி—Encomi) தந்தத்தால் செய்யப்பட்ட ஒரு சூதாடுவதற்கான மேசை காணப்பட்டது. மைஸீனியின் சேய அரணிலுள்ள கல்லறைகளில் கிடைத்த படிகத்தால் செய்யப் பட்ட சில சிறுபலகைகள், சதுரங்கப் பலகைகளைச் சேர்ந்த பகுதிகள் என்று கருதப்படுகின்றன. நமக்கு அறிமுகமில்லாத இந்த விளையாட்டில் உபயோகித்த தந்தச் சாமான்கள் நாஸஸ் அரண்மனையில் கிடைக்கப்பெற்றுள்ளன.

கிடங்குகளும், கட்டடத்திற்கு மேற்கே ஒரு சிறு அரசவையும் காணப்படுகின்றன. பீஸ்டஸ் அரண்மனையில் மலைப்பைத் தரும் ஒரு பெரிய வாயில் உளது. இதில் 45 அடி அகலமான பன்னிரண்டு படிகள் உள்ளன. இந்த அரண்மனை நாஸஸ் அரண்மனையைவிடச் சிறியதாகவும், இதன் சுவர்களில் உயர்தர வர்ணந் தீட்டிய படங்கள் காணப்படாதபோதிலும், இதன் வெளிப்பார்வை வியப்பையூட்டுவதாயும் அமைந்துள்ளது. எப்படியெனின் இவ் வரண்மனை ஒரு மலைச்சாரலில் கட்டப்பட்டுள்ளது. எனவே, இதன் கூரைகள் வெவ்வேறு மட்டத்தில் தெரிகின்றன. இந்த அரண்மனைக்கு இரண்டு மைல்களுக்கப்பாலுள்ள ஆகியா திரியாடா (Hagia Triada) என்று இப்பொழுது அழைக்கப்படும் இடத்தில் நன்கு அமைக்கப்பட்ட வீடு ஒன்று உளது. இது அரண்மனைக் கருகிலுள்ள பெரு மக்களின் பொழுதுபோக்கு இல்லமாக யிருந்திருக்கக்கூடும்.[9]

நாஸஸ் அரண்மனைக்குச் சிறிது தூரத்தில் மக்கள் நெருக்கமுள்ள ஒரு நகரம் இருந்திருக்கலாம். கிழக்குக் கிரீட் பாகத்தில் பல கிரீட் நகரங்கள் முழுமையாகத் தோண்டி எடுக்கப்பட்டிருக்கின்றன. இங்குக் காணப்பட்ட பொருள்களின்மூலம் சாதாரண மக்களும், சிறுகருவித் தொழிலாளர்களும், நகர வாழ்க்கையில் ஈடுபட்டிருந்தனர் என்பது தெளிவாகின்றது. இங்குள்ள ஒரு தச்சனின் வீட்டில், தச்சர்கள் உபயோகிக்கும் உளிகள், வாள்கள், தோல் தைக்கும் ஊசிகள், ஆணிகள் முதலியன கிடைக்கப் பெற்றுள்ளன.[10] நாஸஸ் அரண்மனையில் சீன மட்பாண்டத்தில் செய்யப்பட்ட சிறு பலகைகள் காணப்படுகின்றன. இவைகளில் பொறிக்கப்பட்டுள்ள பல்வண்ணப் பளிங்குகளின் (Mosaic) மூலம் அங்குள்ள தனி மனிதருக்குரிய வீடுகளின் முகப்புகள் நமக்குத் தெரிய வருகின்றன. இம் முகப்புகள் நகரத்தின் செல்வாக்கை உணர்த்துகின்றன. இங்குள்ள வீடுகள், பல மாடிகளைக் கொண்டிருந்தன. சில வீடுகள் இரண்டு கதவுகளையும், மற்றும் பல ஒரு கதவையும் உடையன. மேல் மாடியிலுள்ள சாளரங்கள் நான்கு

[9] ஆகியா திரியாடாவில், பதினாறும் நூற்றாண்டின் விலையுயர்ந்த கலைப்பொருள் குவியல்கள் கிடைத்தன. பீஸ்டஸ் அரண்மனையில் இவை எதுவும் தோண்டி எடுக்கப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கதேயாகும்.

[10] கி.மு. 1500இல் கோர்னியா (Gournia) (இதன் பழைய பெயரை நாம் அறியோம்) தீக்கு இரையானது. ஒரு நகரத்தின் தரைப் படத்தில் கிடைத்தில் பாலைக்காஸ்ட்ரோதான் (Palaikastro) பழைய ஹீலியா (Heleia) வாகும்.

அல்லது ஆறு கண்ணுடிச் சட்டங்களுடையன. மேல் மாடிகளில் சாளரமில்லாத வெறும் திறப்புகளும் காணப்படுகின்றன. இவை ஒருவேளை மாடி முகப்புகளாக (balconies) இருந்திருக்கலாம். இந்தக் கிரீட்டன் வீடுகள் எகிப்து நாட்டின் சமகாலத்து வீடுகள் போலவே காட்சியளிக்கின்றன.

இக் காலத்தில் கிரீட்டில் பொதுமக்களுக்குரிய அல்லது பொதுக் கோவில்கள் இருந்தனவா என்பதற்குச் சான்றுகளில்லை. அரண்மனை களில் கோவில் என்னும் புனித இடங்கள் காணக் கிடக்கின்றன. ஒருகால் கிரீட்டர்கள் தமது தெய்வ வழிபாடுகளை இவ்விதமான தம் வீடுகளிலுள்ள புனிதமான இடங்களிலேயே நடத்தியிருப்பர். இவர்கள் வழிபட்டு வந்த முக்கியக் கடவுள், கிரேக்கர்களால் ரியா (Rhea) என்று அழைக்கப்பட்ட இயற்கைத் தெய்வமாம். ஒருவேளை ரியா என்ற பெயர் கிரீட்டர்களுடையதாயிருக்கலாம். கிரீட்டர்கள் தெய்வங்களை வணங்கும் காட்சிகளை ஓவியங்களில் பெரும்பா லும் காணலாம். அந்தத் தெய்வம் சிங்கங்களால் காவல் செய்யப் பட்டிருப்பதுபோலவும், சிற்சில சமயங்களில் புறுக்களின் மத்தியில் இருப்பதுபோலும் ஓவியங்களில் காண்கின்றோம். இப் பெண் தெய் வம் பெண் அர்ச்சகர்களால் சேவிக்கப்பட்டவள். இத் தெய்வம் ஓர் ஆண்தெய்வத்துடன் அடிக்கடித் தோற்றமளிக்கின்றாள். அவர் கண வனாக இருந்தாலும் அல்லது மகனாகயிருந்தாலும் இவளுக்குக் கீழ்ப் பட்டவராகவே தோன்றுகிறார். பிற்காலத்துக் கிரேக்கர்கள் இக் கடவுள் ரியாவினுடைய மகனாகிய ஸீயுஸ் என்றும் இவர் இடியன் குகையில் வளர்க்கப்பட்டார் என்றும் கூறுகின்றனர். இத் தேவதை யும் கடவுளும் இரட்டைக் கோடரி வழிபாட்டுடன் இணைக்கப்பட் டுள்ளனர். ஒருகால் இவ் விரட்டைக் கோடரி ஒருபோலி வணக்கப் பொருளாக இருக்கலாம். இம் மாதிரியான இரட்டைக் கோடரி யின் வழிபாடு ஆசியா மைனரின் மேற்குப் பாகத்திலுள்ள கேரியர் களிடையே நாம் காண்கின்றோம். இவ் விரட்டைக் கோடரிச் சின்னம் அரண்மனையின் பல பாகங்களில் பொறிக்கப்பட்டிருப்ப தின் காரணத்தால் நாம் இவ் வரண்மனையை இரட்டைக் கோடரி அரண்மனை என்று அழைத்தாலும் அதில் வியப்பொன்றுமில்லை. இரட்டைக் கோடரியைக் கேரியர்கள் லாப்ரிஸ் (labrys) என்றழைத் தனர். இதன்பொருட்டு ஒருகால் இவ் வரண்மனை லாப்ரிந்தாஸ் (labyrinthos) என்றழைக்கப்பட்டிருக்கலாம். நாஸஸ் மன்னன் மைனஸ் என்பான் புதிர்நெறி (labyrinth) ஒன்றில் மினோட்டார் என்னும் அருவருப்பைத் தரும் ஓர் அரக்க இனத்தை வைத்திருந் தான்; அப் பேருயிர் வெளிநாடுகளிலிருந்து அவனுக்குக் கப்பமாகக் கொடுக்கப்பட்ட இளைஞர்களையும், கன்னியரையும் விழுங்கியது

என்ற புராணக்கதை இப் பதத்திலிருந்து இப்போது நமக்கு நன்ருக விளங்குகிறது. இவ்வரண்மனையின் சிக்கலான நிலப்படம் நமக்குச் சிக்கல் நிறைந்த ஒரு வழியை (maze) நினைப்பூட்டுகிறது.

எழுதும் கலையைக் கிரீட்டர்கள் பல காலமாக அறிந்திருந்தனர் என்பதை நாம் முன்பே பார்த்தோம். இப் பிற்காலத்தில் புதுமை யானதும், அதிக முன்னேற்றமடைந்ததுமான கோடுகளாலாகிய அறிகுறிகளைக் கொண்ட ஒருமுறை வழக்கிலிருந்து வந்தது. மன்னர்கள் சரியான பதிவேடுகளையும், கணக்குகளையும் வைத்திருந் தனர். நாஸஸ் அரண்மனையில் நூற்றுக்கணக்கான எழுத்துக்கள் பொறிக்கப்பட்ட பதிவேடுகள் கிடைக்கப்பெற்றன. இப்பதிவேடு கள் களிமண்ணலாகிய நீண்ட சதுரமான தகடுகள். இவைகளை மரப்பெட்டிகளில் வைத்து, அப் பெட்டிகளை முத்திரையிட்டுப் பேணி வைத்திருந்தனர். விளக்கக் குறிப்பு (clue) இல்லாமை யால் இம் மொழியை நாம் வாசித்தறிய இயலவில்லை. ஆயினும் எண்களைக் குறிக்கின்ற சின்னங்களைக் கண்டுபிடித்துவிடலாம். அவர் களுடைய எண்கணக்கில் பதின்மானமான முறையே (decimal system) பயன்படுத்தப்பட்டது என்பது பின்னங்கள் இன்மை யால் நமக்கு நன்கு விளங்குகின்றது. இப் பதிவேடுகளில் அநேகம் பண்டகச்சாலைக் கணக்குகளாக இருக்கலாம் என்பது, எண்கள் அடிக்கடி காணப்படுவதிலிருந்தும், எண்களுக்கிடையே பல உருவப் படங்கள் காணப்படுவதிலிருந்தும் அறிகின்ருேம். கிரீட்டர்கள் ஒரு சிறந்த நிறையளவு முறையை அறிந்திருந்தனர். இவர்கள் இம் முறையைப் பாபிலோனியரிடமிருந்து எவ்வாருே தெரிந்திருக் கின்றனர். இந்தப் படியளவு நிலை பாபிலோனியரின் அறிவுத் திறத்தால் கண்ட படியளவு நிலையைப் பலவிதத்தில் ஒத்திருக் கின்றது. உலோகப் பொருளாலாகிய ஒரு நாணயத்தை இவர்கள் பெற்றிருந்தனர். ஈண்டுக் கிடைக்கப் பெற்றுள்ள பொன், வெள்ளித் துண்டுகளும், வெண்கலக் கட்டிகளும் நாணயச் செலாவணிக்காக உபயோகிக்கப்பட்டிருக்கலாம் எனக் கருதப்படுகின்றன.

நாஸஸ் மன்னர்களின் ஆற்றலும் சிறப்பும் பதினைந்தாம் நூற் ருண்டில் உன்னத நிலையை அடைந்தன. இம் மன்னர்கள் கிரீட் தீவிலேயே மிகவும் செல்வர்களாகவும், ஆற்றல் படைத்தவர் களாகவுமிருந்தனர். இம் மன்னர்களின் குடையின்கிழ், பீஸ்டஸ் மன்னர்களும், இதர நகரங்களில் ஆட்சி செய்த அரசர்களும் இக் காலத்தில் இருந்திருக்கக்கூடும் என்று கூறப்படுவது உண்மையே. இந் நகரங்கள் சிலவற்றில் ஈஜிய நாகரிகச் சின்னங்கள் பல சமீப

காலத்தில் தோண்டி எடுக்கப்பட்டன. நாஸஸ் மன்னர்களின் கப்பல் படை ஈஜியக் கடலைத் தம் வசப்படுத்தி அங்குள்ள தீவுகளைத் தம் ஆக்கிரமிப்புக்குள்ளாக்கின. இதுவுமன்றி இந்த நாகரிகம் கிரீஸ் நாட்டிற்கும் பரவியது. இதுபற்றிப் பிற்பாடு நாம் காணலாம். ஆனால் கிரீட்டன் செல்வாக்கோ வாணிபத்தின் மூலமாகவும், குடியேற்றத்தின் மூலமாகவும் இத் தீவிலிருந்து நாற்றிசைகளிலும் பரவிற்று. எகிப்து நாட்டுடன் பழங்காலத்திலிருந்தே கொண்டிருந்த வாணிபத் தொடர்ச்சி தற்போது அதிக ஒழுங்காயும் தொடர்ந்தும் நிகழ்ந்தன. எண்ணெயும், மட்பாண்டங்களும் நைல் நதி பாயும் நாட்டிற்கு ஏற்றுமதி செய்யப்பட்டன. கெவ்டியு நாட்டு மன்னர்களும், பெருங்கடலிலுள்ள தீவுகளிலுள்ள மன்னர்களும், 18ஆம் வமிசத்துப் பெருமன்னர்களுக்குத் தம் கப்பங்களைக் கொண்டு வந்தனர். இக் காலத்துக் கிரீட்டரது பண்பாட்டில் எகிப்து நாட்டின் செல்வாக்கை நாம் காணலாம். தெற்குப் பாலஸ்தீனத்தில் குடியேறின பிலிஸ்தியர்கள் (Philistines) கிரீட் தீவிலிருந்து வந்தவர்கள் என்று தற்போது கருதப்படுகின்றனர்.[11] சிசிலி, ஸ்பெயின் முதலிய இடங்களில் காணப்படும் சின்னங்கள் மூலமாக மைனஸ் தீவு தனது பொருள்களையும், நாகரிகத்தின் விளைவுகளையும், தூரத்திலுள்ள மேற்குப் பாகத்திற்குப் பரப்பியது என்று அறிகிறோம்.

பிற்கால கிரேக்கர்கள் ஈஜியனில், கிரீட் உன்னதப் பதவியடைந்த காலத்தைக் கடல்களுக்குப் பிரபுவாகத் தோன்றிய மைனஸ் காலத்துடன் இணைக்கின்றனர். ஆனால் மைனஸ் மன்னரைப் பொறுத்தவரையில் ஓர் இக்கட்டுள்ளது. ஹோமருடைய செய்யுளில் இவர், அக்கிய மன்னராக ட்ரோஜன் சண்டைக்கு இரண்டு தலைமுறைக்குமுன் (அதாவது 13ஆம் நூற்றூண்டில்) தோற்றமளிக்கின்றார். பிற்காலத்துக் கிரேக்கர்களில் சிலர் மைனஸ் என்னும் பெயருடையவர் இருவர் என்றும், அதில் முந்தினவர் பதினைந்தாம் நூற்றூண்டினிறுதியில் வாழ்ந்தார் என்றும் எண்ணுகின்றனர். ஆனால் முதல் வாழ்ந்த மைனஸை ஒட்டிய சான்றுகள் யாதுமில்லை.[12]

[11] காஸாவின் (Gaza) பழையதொரு பெயர் மினேவா ஆகும். அமோர்கோஸ் (Amorgos), ஸிஃப்நோஸ் (Siphnos), பாராஸ் (Paros) முதலிய இடங்களில் காணப்படும் இதே பெயர் ஈஜியன் தீவுகளில் கிரீட்டன் ஆதிக்கத்தைக் காட்டும் ஒரு பதிப்பேடாகும்

[12] இலியட்டின் இரண்டாம் பாகத்திலுள்ள அட்டவணையானது கி. மு. 1200ஆம் ஆண்டுபோல் கிரேக்க நாடுகளின் மூலதனங்

## 3. மைஸீனியன் நாகரிகம் (கி.மு. 1600-1000)

கிரீட்டன் நாகரிகத்தை ஒத்ததும், பெரும்பான்மை கிரீட்டன் தீவின் செல்வாக்கின் மூலமாகவும் ஏற்பட்டதுமான ஒரு நாகரிகம் கிரேக்க பூமியிலே தோன்றியது. இந் நாகரிகம் ஏறக்குறைய பதினாறும் நூற்றாண்டில் தோன்றிப் பனிரண்டாம் நூற்றாண்டுவரை நீடித்திருந்தது. மூவாயிரம் ஆண்டுகளுக்குமேல் தரைமட்டத்தில் கிடந்தவை, மற்றும் மண்வெட்டிகளால் தோண்டி எடுக்கப்பட்ட கல் சின்னங்கள், இறந்தவர்களின் வீடுகளில் புதைத்து வைக்கப் பட்டவை, தற்பொழுது ஐரோப்பியர்கள் தங்கள் நாகரிகத்தின் துவக்கத்தைக் காணுமாறு ஆர்வமிகுதியால் தோண்டி எடுத்த, அன்றாடம் உபயோகிக்கப்படுகின்ற சாதாரணப் பொருள்கள், செல்வப் பெருக்கைக் காட்டும் பொருள்கள் ஆகியவை இந் நாகரி கத்தின் பதிவேடுகளாம். இந் நாகரிகத்தின் பிற்பாகத்தைப்பற்றி அறிய நமக்கு ஹோமரின் நூல்கள் பயன்படுகின்றன. பதிவேடு களில் பெரும்பான்மையானவைகளும், முக்கியமானவைகளும் கிழக்குப் பேலோப்போனீஸஸிலுள்ள ஆர்காஸ் சமவெளிகளில்-சிறப்பாகச் சமவெளியின் வட கடைசியில் அதற்குக் காவலாக அமைந்ததுபோலுள்ள மைஸீனியிலும், மைஸீனியைவிடச் சிறிது எளிமையாகத் தோற்றமளிக்கும் கடலையடுத்த டிரின்ஸிலும் தோன்றின. ஈஜியன் கடற்கரைகளிலே நீண்டகாலம் மிகவும் செல்வாக்குடனும், வலிமையுடனும் விளங்கிய நகரமானது மைஸீனியாகும். எனவேதான் இந் நாகரிகம் மைஸீனியன் நாகரிகம்[18] என வழங்கப்பட்டது. 14ஆம் நூற்றாண்டின் துவக் கத்திற்கு முன்னிருந்த இருப்பிடங்களை அகற்றி அவைகளுக்குப்

---

களைக் காட்டும் ஆவணம் என்று நாம் எடுத்துக்கொண்டால், அது இக் காலத்தில் கிரீட் அதிக வலிமையுடைய கப்பற் படையையுடைய நாடாயிருந்தது என்பதைக் குறிப்பதாகத் தெரியவில்லை. கிரீட் 80 கப்பல்களை அனுப்பியது. இந்த எண்ணிக்கையானது பைலாஸ் (Pylos), ஆர்காலிஸ், தெசலி முதலிய நாடுகள் அனுப்பிய கப்பல்களைவிட மிகவும் குறைவே. பைலாஸ் 90 கப்பல்களையும், ஆர்காலிஸ் 180 கப்பல்களையும் (மேலும் 50 கப்பல்களை ஆர்கேஷியர்களுக்குக் கடனாகவும் கொடுத் திருந்தது). தெசலி 220 கப்பல்களையும் அனுப்பியிருந்தன.

[18] கிரீட்டில் கிடைத்த புதிய காட்சிகளுக்கு முன்னரே வழங்கப் பட்ட இந்தப் பெயர் கிரீஸ் பெருநிலப் பகுதியில் தோன்றிய (16ஆம் நூற்றாண்டுமுதல் 11ஆம் நூற்றாண்டுவரை) நாகரிகத் தையும், தீவிலுள்ள மினோவன் நாகரிகத்தையும் வேறுபடுத்தத் தகுந்ததாயுள்ளது.

பதிலாகக் கட்டிய அரசமாளிகைகளின் சின்னங்கள் மைஸீனி, டிரின்ஸ் முதலிய இடங்களில் சிதறிக் கிடப்பதை நாம் காண்கின்றோம்.

இவ்விரண்டு கோட்டைகளிலும் டிரின்ஸ் கோட்டையே முற்பட்டது. இக் கோட்டை ஈஜியன் மக்கள் கற்காலத்தைத் தாண்டும் முன்பே தனது புகழை நிறுவியுள்ளது. கடலினின்று ஒன்றரை மைல் தொலைவிலுள்ள தாழ்வான ஒரு பாறையின்மேல் இக் கோட்டை காணப்படுகின்றது. முற்காலத்தில் பாறையைச் சுற்றியிருந்த நிலம் சதுப்பு நிலமாக இருந்தது. இப் பாறையானது வடபாகத்திலிருந்து தென்பாகத்தில் உயர்ந்து காணப்படுகின்றது. அக்கால மக்கள் செயற்கை முறையால் இப் பாறையை மூன்று மேடைகளாக்கினர். தெற்கிலுள்ளதும், அதிக உயரமானதுமான பாறையின்மேல் அரசமாளிகையை நிறுவினர். அரசமாளிகை முதலியவற்றைக் கொண்ட இச் சேம அரண் (acropolis) வலிமையான ஒரு கோட்டைச் சுவரால் சூழப்பட்டுள்ளது. ஒழுங்கு செய்யப்படாத மிகப்பருமனை பெரும் கற்களை அடுக்கடுக்காக வைத்தும் ஆங்காங்கே காணப்படும் பிளவுகளைக் களிமண்ணையும் காரையையும் கொண்டு பூசியும் இச் சுவர்களை எழுப்பியுள்ளனர். இவ் வகையான கட்டட வேலைக்குச் சைக்ளோபியன் முறை என்பது பெயர். லிசியாவிலிருந்து சைக்ளோப்ஸ் என்னும் கல்தச்சர்கள் டிரின்ஸின் சுவர்களைக் கட்டுவதற்காக அழைத்து வரப்பட்டனர் என்று புராணக் கதைகள் கூறுவதுபற்றி இந்த முறைக்கு இப் பெயர் வந்தது. கிழக்குப் பாகத்திலுள்ள வாயிற் கதவுகளை அடைய வேண்டுமானல் கோட்டையின் பெரிய சுவர்களுக்கும், அரண்மனையின் சுவருக்குமிடையே உள்ள ஒரு வழியின் மூலமாக வரவேண்டும். இவ் வழியாகப் பகைவர்கள் வர முற்பட்டால் அவர்களுடைய வலப் பக்கத்தில் கோட்டையைக் காப்போரின் தாக்குதலைத் தடுக்கப் பாதுகாப்பு கிடையாது. இதன் மேற்குப் ப கத்தில் ஒரு மறை கதவு இருக்கின்றது. இதன் வழியாகச் சென்றால் பல படிகளின்மூலம் அரண்மனையின் பின்புறத்தையடையலாம். தென் பாகத்தில் கோட்டைச் சுவர் அதிக அகலமாயுள்ளது. சுவருக்குள்ளே பண்டகச்சாலைகள் பல அமைக்கப்பட்டுள்ளன. அவற்றின் கதவுகள் கோட்டைச் சுவரிலுள்ள ஒரு படியரங்கத்தினுட்புறமாகத் திறக்கின்றன. படியரங்கத்தில் அமைக்கப்பட்ட சன்னல்கள் வெளிப்புறமாகத் திறக்கின்றன. இவ் வகை விந்தையான முறையில் நம் கவனத்தைக் கவரும் சிறப்பு டிரின்ஸ் கோட்டையில் அல்லாது ஏனைய கோட்டைகளில் காணப்படுவதில்லை.

மைஸீனி கோட்டையானது உள் நாட்டில் கிட்டத்தட்ட பன்னிரண்டு மைல் தொலைவில், ஆர்காஸ் சமவெளியின் வடகிழக்குப் பாகத்தில் காணப்படும் மலைகளால் சூழப்பட்ட ஒரு பள்ளத் தாக்கில் சமுத்திர மட்டத்திற்குமேல் 900 அடி உயரத்திலுள்ள ஒரு குன்றில் நிறுவப்பட்டுள்ளது. இதில் சேம அரண் ஒரு முக்கோண வடிவம்போல் காட்சியளிக்கின்றது. இதன் சுவரில் பெரும் பாகம் டிரின்ஸ் கோட்டைச் சுவர்போல் சைக்ளோப்பிய முறையில் கட்டப்பட்டுள்ளது. இங்கும் மற்றுமொரு கட்டட முறையை மக்கள் கையாண்டு வந்ததாகவும் தெரிகின்றது. சமமான கற்களை எடுத்து, அவைகளை ஒழுங்கான முறையில் நீண்ட சதுரங்கள் போல் செதுக்கி[14] அவைகளை ஒன்றன்மேல் ஒன்றாக அடுக்குகளாக வைத்து வாயில்களையும், கோபுரங்களையும் அமைத்திருக்கின்றனர். டிரின்ஸில் காணப்படும் பண்டகச்சாலைகளும், படியரங்கங்களும் இவண் தென்படவில்லை. ஆனால் வடகிழக்குப் பாகத்தில் சுவரிலே கற்களினாலாகிய வில்வளைவுக் கூரையைக் கொண்ட ஒரு வழி, சுரங்கப் பாதை ஒன்றுடன் சேர்கின்றது. இப் பாதையின் இறுதியில் ஒரு பெரிய தொட்டியிருக்கின்றது. இத் தொட்டி கோட்டைக்குச் சற்று வெளியே மலைச்சாரலில் உள்ள வற்றாத ஓர் ஊற்றுடன் இணைக்கப்பட்டுள்ளது. இவ் வழியாகவே முற்றுகைக் காலங்களில் கோட்டையிலுள்ள சேனைகளுக்குத் தண்ணீர் ஒரு தடங்கலுமின்றிக் கிட்டியது. மைஸீனியில் இரண்டு வாயில்கள் உள. இவைகளில் முக்கியமான வாயில் மேற்கே சுவரின் ஒரு மூலையில் அமைந்துள்ளது. இவ்விடத்தில் சுவரானது தென்கிழக்கே சென்று திடீரென்று நேர் மேற்காக வெளிப்புறமாகத் திரும்புகின்றது. எனவே, கோட்டை வாயிலின் போக்குவரத்தை இவ்விடமிருந்து எளிதாக மேற்பார்வையிடவும் அடக்கியாளவும் முடிந்தது. வாயிலின் வாசற்படி உத்திரம் ஒரு பெரிய சதுரக் கல்லாலாகியது. இக் கல்லின் பாரம் முழுவதும் சுவரில் அழுந்தாதபடி முக்கோண வடிவமுள்ள இடைவெளி விடப்பட்டிருக்கின்றது. பொறி அமைப்பைக்கொண்ட இத் திறப்பானது சிற்பவேலை கொண்ட ஒரு கல்லால் மூடப்பட்டுள்ளது. இச்

[14] மேற்குச் சுவரில் பல கோணங்களையுடைய கல் கட்டட வேலைப்பாடும் காணப்படுகின்றது. இதில் கட்டடத் தொகுதிகள் கிடைநிலையான வரிசைகளில் அமைந்திருக்கவில்லை. ஆனால் இந்தப் பல கோணங்களையுடைய கற்கள் கூர்மையாகவும் ஒழுங்காகவும் பல அளவுகளில் வெட்டப்பட்டு ஒன்றிற்கும் மற்றொன்றிற்கும் இடையில் விரிவு இல்லாதபடி பதிக்கப்பட்டிருக்கின்றன. ஆனால் இந்த வேலைப்பாடானது மிகவும் பிந்திய காலத்தைச் சேர்ந்ததாகும்.




படம் 4 : டிரின்ஸின் அரண்மனை அல்லது மேல் சேம அரண்
(Upper Citadel)

சிற்பத்தில் இரு பெண் சிங்கங்கள் எதிரெதிரே ஒரு தூணின் பக்கத்தில் நின்று தம் முன் பாதங்களை அத் தூணின் பீடத்தில் வைத்திருப்பதுபோல் செதுக்கப்பட்டிருக்கின்றன.[15] இச் சிங்கங்கள் இக் கோட்டையைக் காவல் செய்வதுபோல் காட்சியளிக்கின்றபடியால், இவ் வாயிலுக்குச் சிம்மவாயில் என்று பெயர்.

டிரின்ஸ் மலையில் காணப்படும் அழிவுச் சின்னங்கள் மன்னர்களுடைய அரண்மனையின் நிலப்படத்தை நாம் அறிய ஏதுவாயிருக்கின்றன. இக் காலத்து அரண்மனைகளைக் கட்டுவதில் காணப்படும் ஒரு முக்கிய தன்மை யாதெனில், ஆண்மக்கள் வசிக்கும் இருப்பிடங்களையும், பெண்மகளிர் வசிக்கும் இருப்பிடங்களையும் தனித்தனியாகப் பிரிந்த பகுதிகளாகக் காட்டுவதேயாகும். இவ்வித முறை வரலாற்றுக் காலத்திலும் கிரேக்கக் கட்டடக் கலையில் நாம் காணக் கிடக்கின்றது. டிரின்ஸ் அரண்மனையின் தனிப்பட்ட இயல்பு என்னவென்றால் இங்கே அரசருடைய இருப்பிடங்களும், அரசியரது அந்தப்புரங்களும் அரண்மனையின் மத்தியப் பகுதியில் அருகருகே காணப்பட்டாலும், இரண்டுக்கும் இடையே தொடர்பு யாதும் இல்லை. இவைகளைச் சேரும் வழிகளும் வெவ்வேறு இடங்களில் அமைந்துள்ளன.[16] இவ் வரசர் அரசியர் ஆகியோரது இருப்பிடங்கள் ட்ராய் குன்றினுள்ள செங்கல்களாலாகிய பழங்கால அரண்மனையில் காணப்படும் கூடங்களின் பொதுவான நிலப்படங்களை ஒத்தேயிருக்கின்றன. மற்றும், இவை ஹோமர் தமது செய்யுட்களில் வருணித்திருக்கும் கூடங்களைப்போலும் தோன்றுகின்றன. தூண்களாலாகிய நுழைமாடங்கள் (Vestibules) சூழ்ந்த ஆண்மக்கள் இருக்கும் முற்றத்தில், ஒரு பலிமேடை இருக்கின்றது. வாயிலின் எதிரேயுள்ள நுழைமாடமானது ஒன்று அவ் வில்லத்தின் தலைவாயிலோ அல்லது முன்கூடமோ ஆகும். இந் நுழைமாடத்திலுள்ள இரட்டைச் சிறகுகளுடைய கதவுகளின்மூலம் உட்சென்றால் ஒரு முன்கூடமுள்ளது. அதனைக் கடந்து திரையிடப்பட்ட கதவுகளைத் தாண்டிச் செல்லுங்கால் ஆண்மக்கள் தங்கும் கூடத்திற்குச்

[15] இவ்விதமான மரபுரிமைச் சார்ந்த அமைப்பு விலையுயர்ந்த மணிகளிலும் இருக்கின்றன. சிலவேளைகளில் தூணிற்குப் பதிலாக ஓர் ஆணின் உருவம் காணப்படுகின்றது. இது 'பியடில்' (Baetyl) எனப்படும் தூண்களை வழிபடுவதைக் காட்டுகிறது.

[16] டிரின்ஸிலுள்ள பெண்களின் அந்தப்புரம் அடையாளம் காட்டுவது நூற்றிற்கு நூறு சரியானது என்று சொல்வதற்கில்லையானாலும், ஒருகால் அதுவாக இருக்கலாம் என்று நம்புவதற்கு இடமுள்ளது.

செல்லும் பெரியதொரு கல்வாயிற்படியை அடைவோம். இக் கூடத்தின் மையத்தில் - நான்கு மரத்தூண்கள் ஒரு தட்டையான கூரையைத் தாங்கி நிற்கின்றன. இதுவே இல்லத்தின் மையமு மாகும். இவண் ஓர் அடுப்படி அல்லது அடுக்களை காணக்கிடக் கின்றது.[17]

குன்றின் சிகரத்தை அலங்கரிப்பதுபோல் மைஸீனி அரண் மனை தோற்றமளிக்கின்றது. இதன் நிலப்படம் தெளிவாகவும், முழுமையாகவும் தென்படாவிட்டாலும் உருவத்திலும், மற்றும் பல விவரங்களிலும் ஏனைய அரண்மனைகளையே ஒத்துள்ளது. இங்குள்ள அடுப்படி அல்லது அடுக்களையின் சில பாகங்களே காணப்பெற்றாலும், இவ் வடுப்படி சிவப்பு, நீலம், வெள்ளை வர்ணச் சுருள்வடிவமும், முக்கோண வடிவமும் கொண்ட கோலங்களால் அலங்கரிக்கப்பட்டிருந்தது. மூடிய அறைகளிலுள்ள கீழ்த்தளங்கள் செவ்விய சீமைக்காரை(சிமிட்டி)யால் செய்யப்பட்டுள்ளன. திறந்த முற்றங்களின் கீழ்த்தளங்களில் சிறு கூழாங்கற்களைச் சேர்த்த சீமைக்காரை (சிமிட்டி)யை இம் மக்கள் உபயோகித்திருக் கின்றனர். சில இடங்களில் இத்தளங்கள் வர்ணக் கோலங்களால் சித்தரிக்கப்பட்டுள்ளன. சுவர்களைச் சிற்பவேலையுடைய போதிகைச் சிற்பங்களாலும் (frieze) ஓவியங்களாலும் அலங்கரிப்பது வழக்கம். உள்ளே ஸியனஸ் (cyanus) அல்லது நீலக் கண்ணாடி பசையிடப் பட்ட பளபளப்பான சலவைக்கல் அல்லது வெண்பளிங்குக் கல்லால் ஆன (alabaster) போதிகைச் சிற்பம், டிரின்ஸிலுள்ள கூடத்தின் நுழைமாடத்தை அழகுபடுத்துகின்றது. இரண்டு அரண்மனைகளிலும் ஆண்மக்களின் கூடங்களின் சுவரில் வரையப் பட்ட அழகிய சித்திரங்களை (mural pictures) நாம் காண் கின்றோம்.

இவ்வரண்மனைகளின் தோற்றமும், கட்டுமானமும் சில முக்கி யப் பகுதிகளில் கிரீட் அரண்மனைகளைவிட வேறுபட்டுக் காணப்படு கின்றன. இவ்வரண்மனைகள் வலிமையான வெளிச் சுவர்களால் காக்கப்பட்டிருக்கின்றன. ஆனால் நாஸஸிலும், பீஸ்டரிலும் இவ்விதக் கோட்டைச் சுவர்கள் காணப்படுவதில்லை. இதமான தட்ப வெப்ப நிலையையுடைய கிரீட் தீவில் அறைகளைச் சூடாக்க, கைகளில் ஏந்திச் செல்லக்கூடிய தணல்தட்டுகள் போதுமானவை. எனவே கட்டடக் கலைவாணர்கள் புகைபோக்கி முதலியவை வைப்

[17] இந்தத் தட்டையான கூரையிலுள்ள சற்று உயர்த்தப்பட்ட பாகம் புகைபோக்கியாக உபயோகப் படுத்தப்பட்டிருக்கலாம்.

பதற்குக் கூரைகளில் துவாரங்கள் முதலியன இன்றி வீடுகளைக் கட்டத் திட்டமிட்டனர். ஆனால் கடுமையான காலநிலையைக் கொண்ட கிரீஸ் நாட்டில், முக்கியக் கூடங்களின் மத்தியில் அடுப்படி மிகவும் இன்றியமையாதது. எனவே, புகைபோவதற்குக் கூரையில் சிறு திறப்புகளும் அவசியமாயின. தூண்களாலாகிய நுழைமாடங்களைக்கொண்ட இம் மத்தியக் கூடம், அரண்மனையிலேயே ஒரு முக்கிய பாகமாயிற்று. இக் கூடம் மேலிருந்து வெளிச்சமாக்கப்பட்டது. நாஸஸ், பீஸ்டஸ் அரண்மனைகளின் முக்கிய இயல்பான 'விளக்குக் கிணறுகள்' பெருநிலப் பகுதியிலுள்ள கோட்டைகளில் காணப்படுவதில்லை.

மைஸீனியின் அரசர்களின் கோட்டையும், அரண்மனையும் தவிர இவர்களின் சடலங்களைப் புதைக்கும் இடங்களும் மனங்கவர்கின்ற நினைவுச் சின்னங்களாகும். இப்போது நாம் ஆராய்ந்து வரும் இம் மக்கள், தங்கள் சடலங்களைக் கல்லறைகளில் புதைத்தனர். இவர்கள் சடலங்களைத் தகனம் செய்ததாகத் தெரியவில்லை. ஒரு காலத்தில், சேம அரணில் (Citadel) வசித்த பிரபுக்கள் அவர்களுடைய குடும்பத்தார் இவர்களின் சடலங்களும் கோட்டை மலையில் புதைக்கப்பட்டன. மேற்குச் சுவருக்கு அருகிலும், சிம்ம வாசலுக்கு (Liongate) தெற்கேயுமான இடத்தில் அரசர்களின் சடலங்களைப் புதைத்திருக்கக்கூடிய ஒரு வட்டாரம் கிடைக்கப் பெற்றுள்ளது. இப் பரப்பில் பாறைகளில் செங்குத்தாகச் செதுக்கப்பட்ட ஆறு கல்லறைகள் இருந்தன. இக் கல்லறைகள் கடைசிச் சடலம் வைக்கப்பட்ட நாள் முதல் இந் நாள்வரை மனிதருடைய கைகள் படாதவை. ஆண்மக்களின் கல்லறைகளில் போர்க் கருவிகள் புதைக்கப்பட்டன. புதைக்கப்பட்ட மனிதர்களில் சிலருடைய முகங்கள் ஒருவகையான பழங்காலத்து முகமூடிகளால் மூடப்பட்டிருந்தன. பெண்களின் தலைகளில் பொன்னாலாகிய மகுடங்கள் சூட்டப்பட்டிருந்தன. விலையுயர்ந்த ஆபரணங்களும், வீடுகளில் உபயோகிக்கப்படும் பொருள்களும் இவர்களது இருபுறமும் வைக்கப்பட்டிருந்தன. ஒவ்வொரு கல்லறையின் வாயிலிலும் கல்லறையை மூடக்கூடிய 'ஸ்டீல்' (stele) எனப்படும் பெரிய கற்பலகைகள் காணப்படுகின்றன. இவைகளில் சிலவற்றில் சிற்ப வேலைப்பாடுகள் செய்யப்பட்டிருப்பதையும் நாம் காணலாம்.

சிலகாலத்திற்குப்பின் செல்வராகிய மைஸீனி அரசிளங்குமரர் இவ் வெளிதான கல்லறைகளை விரும்பினரல்லர். சடலங்களை வைக்கப் பகட்டான கல்லறைகளை அவர்கள் நாடினர் என்று சிலர் கருதுகின்றனர். ஆனால் மற்றும் சிலர், பழைய மைஸீனி அரசர்கள் வேறினத்தைச் சேர்ந்தவர்கள்; அவர்களை ஒரு புதிய



படம் 5: டிரின்ஸ் அரண்மனையில் சலவைக் கல்லிலும் நீலவர்ணக் கல்லிலும் (cyanus) செய்யப்பட்ட போதிகைச் சிற்பம்

இனத்தைச்சேர்ந்த பிரபுக்கள் தோற்கடித்தனர் என்றும்; இவ்வின பிரபுக்கள் கல்லறை கட்டுவதில் ஒரு புதிய மரபை அமைத்தனர் என்றும் கருதுகின்றனர். சேம அரணுக்கு அருகில், எதிரேயுள்ள குன்றின் சரிவில் செதுக்கியுள்ள கல்லறைக்கான ஒன்பது குவிமாடங்கள் காணப்பட்டன. இவைகளின் மிகப் பெரிதான கல்லறைக்கு 'அட்ரியஸின் பொருட் குவியல்' என்று பெயர். இவ்விடத்தின் காரணத்தை அறியாததின்பொருட்டே இப் பெயர் வழங்கலாயிற்று. கிரீஸில் மற்ற இடங்களிலும் இம்மாதிரியான கல்லறைகள் காணக்கிடக்கின்றன. இக் கல்லறைகள் ஊடுவழி, (passage of approach), வாயில் (portal), குவிமாடம் (dome) என மூன்று பாகங்களையுடையன. கல்லாலாகிய ஊடுபாதை ஒன்று வாயிலுக்கு அழைத்துச் செல்கின்றது. வாயிலின்மூலம் செல்லும் போது அங்கு மலைச்சரிவில் குடைந்தெடுக்கப்பட்ட இடத்தில் கற்களால் கட்டப்பட்ட வில்வளைவுக் கூரையுடைய அறை ஒன்று காணப்படுகின்றது. சில கல்லறைகளில் சதுரமான பக்க அறையும் காணப்படுகின்றது. ஆனால் இம்மாதிரியான பக்க அறைகளைக் காண்பது மிகவும் அரிது. 'அட்ரியஸின் பொருட் குவியலின்' வாயிலின் முன்புறம் விந்தை நிறைந்தது. இப் பாகம், வர்ணம் தீட்டப்பட்ட பளிங்குக் கற்களாலானது. இரு புறங்களும் வெண் பளிங்குக் கற்றூண்களுடன் இணைக்கப்பெற்றுள்ளன. இத் தூண்களில் மின்வெளி போன்றனவும் சுருள் வடிவமுள்ளனவுமான கோலங்கள் காணப்படுகின்றன. தூண்களின் தலைப் பாகங்களில் செதுக்கியுள்ள சிற்பங்கள் பல காணப்படுகின்றன. இவ் வாயிலின் உத்திரத்தில் இரு பெரிய கற்கள் உள்ளன. சிம்ம வாயிலில் காணப்படும் பொறி அமைப்பு இங்கும் உளது. ஆனால் அந்த இடையிலுள்ள முக்கோணத்தை அழகிய சிவப்புப் பாறையை நொறுக்கின துண்டுகளால் (Red Porphyry) நிரப்பியுள்ளனர். தேன்கூடு போன்ற வில்வளைவுள்ள அறையானது நன்றாகச் செதுக்கப்பட்டதும், இணைக்கப்பட்டதுமான கல்வளையங்களால் உண்டாக்கப்பட்டுள்ளது. இவ் வளையங்கள் மேலே செல்லச் செல்ல சிறுத்துக் காணப்படுகின்றன. சுவர்களில் வெண்கலத்தால் சிறு ரோஜா மலர்களைப்போல் அமைக்கப்பட்ட உருவங்கள் ஒரு வகையாக வகுத்து அமைக்கப்பட்டுள்ளன. பெரும் வாயிலைப்போல் தோன்றும் தூண்களாலாகிய ஒரு கதவு, பாறையில் செதுக்கியுள்ள ஓர் அறைக்குள் திறக்கின்றது. இதன் சுவர்கள் சித்திரங்கள் கொண்ட வெண் பளிங்குக்கல் தகடுகளால் அலங்கரிக்கப்பட்டிருக்கின்றன. மற்றொரு கல்லறையின் கதவுத் திறப்பின்[18] இரு புறத்

[18] பொதுமக்களால் கிளிடெம்னெஸ்டராவின் கல்லறை என்றழைக்கப்பட்ட கல்லறையாகும்.

திலும் வெண்பளிங்குக் கல்லாலாகிய பெரிய தூண்கள் (columns) உள்ளன. இத் தூண்கள் டோரியர் கட்டிய கோவில்களின் பெரிய தூண்களில் காணப்படும் செங்குத்தான பள்ளங்களைக் (fluted) கொண்டுள்ளன.

இம் மகத்தான அரச கல்லறைகளினருகே, சாதாரண மக்களின் எளிமையான கல்லறைகளும் கண்டுபிடிக்கப்பட்டன. மைஸீனி பட்டினம் சேம அரணுக்குக் கீழே, கிராமங்களைத் தொகுதியாகக் கொண்டுள்ளது. இந்தக் கிராமங்கள் தத்தம் இன உரிமையைக் (identity) கடைப்பிடித்து வந்ததுமன்றித் தங்களுக்கெனத் தனியான சடலங்களை அடக்கம்செய்யும் இடங்களையும் பெற்றிருந்தன. இவ்வண்ணம் மைஸீனியும், இதர சில பட்டினங்களும், கிராமத்திற்கும் நகரத்திற்கும் இடையேயுள்ள ஒரு நிலையை எடுத்துக் காட்டின. பல சிறு இனங்கள் ஓரிடத்தில் ஒன்றுய்ச்சேர்ந்து ஒரு கோட்டையின் உதவியால் ஆட்சி புரிந்தன. இக் கிராமத்திலுள்ள கல்லறைகள் அரசர்களுடைய வில்வடிவமுள்ள கூரைகளைக் கொண்ட கல்லறைகள்போலத் (vaulted tombs) தோற்றமளிக்கின்றன. அவை பெரும்பாலும் பாறையில் செதுக்கப்பட்ட சதுரமான அறைகள். இங்கும் ஒரு வாயிலும், அறைக்குச் செல்வதற்கு ஒரு வழியுமுள்ளது. அரச கல்லறைக்கும் இங்குள்ள கல்லறைக்குமுள்ள முக்கிய வேறுபாடு யாதெனில், இவ் வறைகள் வட்டமாயில்லாமல் சதுரமாயுள்ளன. அதுவுமன்றி இங்கே முக்கோணச்சுவர் முகடுகளுள்ளன. இந்தக் கல்லறையில் காணப்படும் பொருள்களில் சில, சேம அரணில் காணப்படும் அரசக் கல்லறைகளைவிடப் பிற்காலத்தவை என்பதையும், இவையும் வில்வடிவங்கொண்ட கூரைகளையுடைய கல்லறைகளும் ஒரே காலத்தவை என்பதையும் உணர்த்துகின்றன.

இவ்வளவு காலமும் மறைந்து தற்போது மலைக்கோட்டையில் கிடைக்கப்பெற்ற தங்கம் முதலிய செல்வக் குவியல்கள்மூலம் மைஸீனிய நாட்டின் செல்வாக்கை அறியக்கூடும். வில்வடிவங் கொண்ட கூரைகளையுடைய கல்லறைகளிலும் இவ்வாறுன நிதிக் குவியல்களைக் கண்டிருக்கக்கூடும். ஆனால் அவை யாவும் பிற்காலத்தில் கள்ளர்களால் சூறையாடப்பட்டன. எவ்வாறிருப்பினும் முற்காலத்து நாகரிகத்தை அறிய ஆவலுள்ள நம்மைப் போன்றவர்களுக்கு இந்தத் தங்க நகைகளைவிட, இக் கல்லறைகளில் கிடைக்கும், குயவர்களால் செய்யப்பட்ட மட்பாண்டங்களும், கம்மியர்களால் செய்யப்பட்ட வெண்கல யுத்தக் கருவிகளும், சமாதானக் காலங்களில் உபயோகிக்கும் ஆயுதங்களும், மிகவும் விலையுயர்ந்த பொருள்கள். பாறைகளில் வெட்டப்பட்டுள்ள ஏழைகளின் கல்

லறைகளிலும், மலையிலும், சமவெளியிலும் காணப்படும் அரசக் கல்லறைகளிலும் அன்றாடம் வேலைக்கு உபயோகிக்கும் பொருள்கள் பல கிடைத்துள்ளன. இப் பொருள்கள் மூலமாகவும் ஓவியக் கலைஞர்கள் பொறித்துள்ள சித்திரங்களில் காணப்படும் உருவங் களின் மூலமாகவும் இம் மக்களின் உடை, யுத்தக் கருவிகள், நகைகள் முதலியவைகளைப்பற்றியும், இவர்களின் கலையறிவைப் பற்றியும் சிறிதளவு நாம் அறிந்துகொள்ள முடிகின்றது.

இவர்களுடைய நாகரிகம் வெண்கலக் காலத்தையும் செப்புக் காலத்தையும் சேர்ந்தது. இந் நாகரிகத்தின் பிற்காலத்திலும்கூட இரும்பு வெகு அரிதாகவே கிடைக்கப்பெற்றது. எனவே, அது ஒரு விலையுயர்ந்த பொருளாயிற்று. மக்கள் இதனை நகை செய்வதற்கும், சிறப்பாக மோதிரங்கள் போன்ற பொருள்கள் செய்வதற்கும், நாணயங்களாகவும் பயன்படுத்தினர். இந் நாகரிகத்தின் துவக்கத் தில் மக்கள் கற்காலத்தை மறந்துவிடவில்லை. ஆப்சிடியன் **(obsidian)** அம்புகளின் கூர்மையான பகுதியைச் செய்வதற்காக இது பயன்பட்டது. ஆனால் இக் காலத்தில் கிரீஸ் தேசத்தில் கருவிகள் செய்வதற்குப் பொதுவாக வெண்கலமே பயன்படுத்தப் பட்டது. வாள், ஈட்டி, வில் முதலியன மைஸீனிய மக்கள் தங்க ளுடைய பகைவர்களுக்கு எதிராகத் தொடுத்த போர்க் கருவி களாம். உயர்ந்த தலைச்சீரா, கேடகங்கள் முதலியன இவர்க ளுடைய தற்காப்பு அணிகலன்கள். தலைச்சீராக்கள் பெரும் பான்மை தோலால் செய்யப்பட்டவை. கேடகங்கள் எருதுகளின் தோலால் செய்யப்பட்டவை. இவை அணிவோரின் கழுத்தி லிருந்து உள்ளங்கால்வரை நீண்டுள்ளவை. படைக் கோபுரங்கள் அமைப்பில், பல குறைபாடுகளை உடைத்தாயிருந்தமையால் படைத் துறைக் கல்வியில் இவைகளைக் கையாள்வதே ஒரு முக்கியத் தொழி லாகவிருந்தது. அரசிளங்குமாரர்கள் போர்க்களங்களுக்கு இரட் டைக் குதிரைகள் பூட்டப்பெற்ற இரதங்களில் சென்றனர். இவ் இரதங்களில் நின்று போர்புரிய ஒரு நிலச்சட்டமும், எதிரே மார்புக் கவசம்போல் தோன்றும் பிரம்பினால் செய்யப்பட்ட ஒருவிதத் தடுப்பும் காணப்பட்டன.[19] மலையிலுள்ள நகரத்தின் கோட்டைச் சுவர்களுக்கு எதிரே நடைபெறும் போரின் காட்சியை, மைஸீனி யில் காணப்படும் ஒரு சாதாரணக் கல்லறையில் கிடைக்கப்பெற்ற உடைந்துபோன ஒரு வெள்ளிச் சாமானில் பொறிக்கப்பட்டுள்ள

[19] இரண்டாவது ஆயிரம் காலத்தில், ஈஜிய நாடுகளில் குதிரை யானது பொதுவாக உபயோகத்திற்கு வந்திருக்கலாம். நாஸஸ் ஸைச் சேர்ந்ததும் ஒருகால் பதினைறுவது நூற்றாண்டைச் சேர்ந் ததுமான ஒரு முத்திரையின் பதிப்பு குதிரையை ஒரு படகில் ஏற்றுவதைக் காட்டுகின்றது.



படம் 6 : அட்ரிஸியன்ஸ் கருவூலத்தி
லுள்ள வாயிலில் காணப்படும்
ஒரு தூண் (ஸ.மஸீனி).



படம் 7: வரலாற்றுக் காலத்திற்கு
முந்திய காலத்து வாள்கள்.



படம் 8: வீரர்கள் போர்
செய்யும் காட்சியைப் பொன்
னில் பொறிக்கப்பட்டுள்ளது.
இச் சித்திரம் கேடயத்தின்
உருவத்தைக் காட்டுகின்றது.

சித்திரத்திலிருந்து அறிகின்றோம். பெண்கள் சாளரங்களின்மூலம் போரைப் பார்த்துக்கொண்டிருப்பதும், தமது கைகளை ஆரவாரத்துடன் வீசிக்கொண்டிருப்பதும் மிகவும் நன்றாகப் பொறிக்கப்பட்டுள்ளது. பிற்காலத்தில் வட்டக் கேடகங்கள் பயன்படுத்தப்பட்டன. மைஸீனியில் கிடைத்துள்ள மட்பாண்டங்களில் ஒன்றாகும் ஒரு பெரிய சாடி. இதன் ஒரு புறத்தில் வட்டக் கேடகங்களை ஏந்தியுள்ள ஆறு படைவீரர்கள், தமது தலையிலிருந்து கால்வரை யுத்தக் கலன்களை அணிந்துகொண்டு போர்க்களத்திற்கு அணிவகுத்துச் செல்லுவதை ஒரு பெண்மணி பார்த்துக்கொண்டிருக்கும் காட்சியும், மற்றொரு புறத்தில் ஆண்கள் போர்புரியும் காட்சியும் காணப்படுகின்றன. இரண்டாவது காட்சி அவ்வளவு தெளிவாகத் தெரியவில்லை. இக் காட்சியின் பின்னணி வண்ணம் மஞ்சள் நிறமாகும்.[20] இங்குத் தோன்றும் மனிதர்களின் நிறம் கறுப்புடன் கூடிய மாநிறமாகும். மணிக்கற்களின் (gems) மேலும், முத்திரைக் கற்களின் மேலும் படைக்கலமணிந்த மனித உருவங்களை நாம் காண்கின்றோம். கல்லறையின் மேல் வைக்கும் ஒரு கல்லில் பொறிக்கப்பட்டிருக்கும் ஐந்து ஈட்டி வீரர்கள் தம் வட்டக் கேடகங்களை ஏந்திச் செல்லும் காட்சி ஓர் உயர்ந்த ஓவியமாகும்.

மக்கள் நீண்ட கூந்தலைக் கொண்டிருந்தனர். இக் கூந்தலைக் கட்டிவைப்பது அல்லது சடைகளாகப் பின்னி விடுவது அவர்களது வழக்கம். கல்லறைகளில் சவரக் கத்திகள் காணப்பட்டன. ஆனால் இவர்கள் தவறாது சவரம் செய்த முகத்துடைய கிரீட்டர்கள் போலல்லாது தாடிகளை வளர்த்தனர். இவர்கள் கிரீட்டர்கள் போல் அரையில் கச்சையை மட்டுமணிந்து வேறு உடையின்றித் திரிந்தனரென்று சொல்வதற்கிடமில்லை. பிற்காலத்தில் இவர்கள் பண்பாட்டை உணர்த்தும் உள்சட்டையும் (tunic), கொக்கி ஊசியால் இறுகப்பிடித்துள்ள மேலாடையையும் அணிந்திருந்தனர். உயர் குடும்பங்களில் உதித்த பெண்கள் இறுக்கமாயுள்ள மார்க் கச்சைகளையும் அகன்ற பாவாடைகளையும் அணிந்தனர். இவர்களுடைய அணிகலன்களுக்குச்சிறப்பைக் கொடுப்பது, இவர்கள் தம் நெற்றியில் அணியும் ஒருவிதப் பட்டைக் கயிறு ஆகும். இவர்கள் தம் கூந்தலை வளையங்களாகத் திரித்து உச்சியில் கொண்டையாக அமைப்பர். இம் மாதிரி கொண்டைபோடும் காலத்தில் கூந்தலின் பிற்பகுதி வெளியே நீண்டு தொங்கும். அரசருடைய கல்லறைகளில் காணப்படும் நகை வகைகளிலிருந்து மைஸீனிய அரசியர்

[20] இந்த மலர்க்குவளையில் காணப்படும் கேடகங்கள் மேல் பாகத்தில் வட்டமாயும், துடையானது வெளியே தெரியும்படி பிறைமதியைப்போலவும் வெட்டப்பட்டிருக்கின்றன.

பகட்டான பொன்னணிகளை அணிந்தனரென்று தெரியவருகின்றது.



படம் 9 : வெள்ளிப் பாத்திரமொன்றில் பொறிக்கப்பட்ட முற்றுகை யிடும் காட்சி. மேலே இடது முக்கில் தெரிவது ஒரு கேடயம் (மைஸீனி).

மைஸீனியன் மட்பாண்டங்கள், அவை தோன்றிய நாகரிக காலத்தின் முன் சகாப்தத்தையும் (epoch) பின் சகாப்தத்தையும் தீர்மானிக்க ஏதுவாயுள்ளன. உதாரணமாக, இம் மட்பாண்டங்களின் மூலமாகச் சமவெளியில் காணப்படும் வளைந்த கூரைகளையுடைய சவக்குழிகள், கோட்டை மலையில் காணப்படும் பாறைகளில் செதுக்கி எடுக்கப்பட்ட சவக்குழிகளைக் (shaft) காட்டிலும் பின்னர் தோன்றியவை என அறிகின்றோம்.

இரண்டாமாயிர காலத்திலுள்ள வர்ணம் தீட்டிய பாத்திரங்கள் பொதுவாக மெருகிட்டவை (glazed), மெருகிடாதவை என இரண்டு வகைப்படுகின்றன. மெருகிடப்படாத பாத்திரங்களில் அழகுக்காகக் கோடுகளையும், சுருள் வடிவங்களையும் (spirals) வரைந்துள்ளனர். மெருகிடப்படாத பாத்திரங்கள் மெருகிட்ட பாத்திரங்களின் காலத்திற்கு முந்தியவை. மெருகிட்ட பாத்திரங்கள்




படம் 10 : கி.மு. இரண்டாயிரம் காலத்தில் ஈஜியன் நாகரிகம்

முற்றுப் பெற்ற நிலையை அடைந்த காலத்தில் மெருகிடப்படாத பாத்திரங்கள் வழக்கற்றுப் போய்விட்டன. மெழுகெண்ணெய் (varnish) பூசப்பட்ட சாடிகள்மூலம் குயவர்களின் கைத்திறனை அறியலாம். திருந்தாத வேலையைக் காட்டும் பழைய காலம் முதல், இக் கலை உன்னத நிலையை அடைந்த காலம்வரை, பின்னர் மைஸீனியர்கள் புதியனவும், பகட்டானதுமான பாண்டங்கள் செய்வதில் மற்றவருடன் போட்டியிட்டு, பின் நலிந்த காலம்வரை தொடர்பாக இத் திறனை அறிந்துகொள்ளலாம். உன்னத நிலையி லிருந்த காலத்தில் இந்தப் பாத்திரங்களின் நிறம் உள்ளக் கிளர்ச்சியை ஊட்டும் மஞ்சள் அல்லது மாநிறம் போன்ற வண்ணத் திலும் சிலகாலத்தில் மிகச்சிவந்த நிறத்துடனும் காணப்பட்டன. அழகுபடுத்தும் இக் குயவர்களின் கலையில் ஒரு புதிய தூண்டுதல்




படம் 11 : 'க்ளா' (Gla) வின் தரைப்படம்

தோன்றியது. இவர்கள் தமது பாண்டங்களில் கோடுகள் அல்லது சுருள் வடிவமுள்ள உருவங்களை உபயோகிக்காது முக்கிய மாகக் கடலைச் சார்ந்த இடங்களில் காணப்படும் தாவரம், உயிர் வகைகள் இவை போன்றவற்றின் உருவங்களைப் பயன்படுத்தினர். மச்சங்கள், ஆக்டோபஸ் (octopus) போன்ற பல கால்களையுடைய (polypods) உயிர்கள், கடல் பாசி வகைகள் போன்றவற்றின் உருவங்களையும் உபயோகிக்க முற்பட்டனர். ஆனால் கீழ் நாடுகளி லும் எகிப்து நாட்டிலும் காணப்படும் ஸ்பிங்க்ஸ், கிரிபின்ஸ், தாமரைப் பூக்கள் முதலியன மைஸீனியர்களின் மற்றக் கலை

களிலே காணப்பட்டபோதிலும், மண்வினைஞர் தமது கலையில் இவற்றைப் பின்பற்றியதாகத் தெரியவில்லை. மட்பாண்டங்களில் மைஸீனியன் நாகரிகத்தவை என்று சொல்லக்கூடிய இயல்பு வாய்ந்தவை விசித்திரமான போலிக் கழுத்தையுடைய (false neck) சாடிகளாம். இந்தச் சாடிகளுக்கு மேற்புறத்தில் திறப்பில்லை. ஆனால் ஒரு பக்கமாகக் கிண்ணிமூக்கு அமைக்கப்பட்டிருக்கின்றது.

மைஸீனியர்களது புதையல்களின் தொடர்பைக் காட்டும் காலங்களைக் குறிக்க உதவும் மற்றச் சின்னங்கள், கற்களாலாகிய கைக்கருவிகளும் இரும்புமாகும். உதாரணமாக ஒரு கல்லறையில் ஆப்ஸிடியன் தலைப்பைக்கொண்ட ஈட்டிகளையும், மற்றொரு கல்லறையில் இரும்பினாலாகிய வளையங்களையும் நாம் கண்டால், நாம் இவ்விரு கல்லறைகளில் முதலாவது கல்லறை, இரண்டாவது கல்லறையைக் காட்டிலும் பழைமையானது என்று வெகு எளிதில் யூகித்துக்கொள்ளலாம். இரும்பு, பிந்திய காலத்தின் அறிகுறியாகும்.

இவ் வகையான சின்னங்களிலிருந்துதான் நாம் கற்களில் குடைந்தெடுக்கப்பட்ட கல்லறையில் புதைக்கப்பட்ட மன்னர்கள், வளைந்த கூரையையுடைய கல்லறையில் புதைக்கப்பட்ட மன்னர்களின் காலத்திற்கு முந்தியவர்கள் எனக் கணிக்க முடிகின்றது. அவ்வாறேதான் தேரா தீவில் (Thera) உள்ள சின்னங்கள் 'மைஸீனியன் காலத்தின்' முற்பகுதியைச் சேர்ந்தவை என்றும் நம்மால் கூற முடிகின்றது.

மைஸீனி, டிரின்ஸ் இவ்விடங்களில் கிடைத்துள்ள சின்னங்கள் யாவையும் ஒன்றுசேர்த்து நோக்குங்கால் இவர்கள் கிரீஸ் நிலப் பரப்பில் வெண்கலக் காலத்தில் தோன்றிய நாகரிகத்தின் மிக உன்னதமானதும், உள்ளக் கிளர்ச்சியைத் தூண்டும் நினைவுச் சின்னங்களாகவும் காட்சியளிக்கின்றன. ஸ்பார்டா நகரத்திற்கு அருகில், யூரட்டாஸ் நதியின் கிழக்குக்கரையில் ஓர் உயர்ந்த திட்டின்மேல் சுவர்களால் சூழப்படாத அரண் ஒன்று இருந்தது. இவ் வரண் தீக்கிரையானது; இவ் வரண் பிற்காலத்தில் மெனிலேயஸ் என்னும் மன்னருடைய பெயருடன் இணைத்துக் கூறப்பட்டது. இவ் வரணுக்குச் சற்றுத் தெற்கே, ஆதிகாலத்தில் லாக்கோனியா பள்ளத்தாக்கிலேயே பெரிய இடமானதுமான, ஆமிக்கிளேயில் ஒரு மகத்தான கல்லறை கண்டுபிடிக்கப்பட்டது. இக் கல்லறையானது, 'அட்ரியஸின் பொருட்குவியல்' எனப்படும் கல்லறையைப்போல் கள்ளர் கைவசப்படவில்லை. இந்த வளைவுக் கூரையையுடைய கல்லறையிலே, மற்ற விலையுயர்ந்த புதையல்களுடன் இக் காலம்வரை பூமியிலிருந்து தோண்டி எடுக்கப்படாத

விலையுயர்ந்த கிரீட்டன் இரு கலைப்பொருள்கள் கிடைத்துள்ளன. இவை பொன்னாலாகிய கோப்பைகளாம். உலோகங்களில் வேலை செய்யும் சிற்பிகள் தம் இணையற்ற திறமையால், காட்டு எருதுகளைக் கண்ணியில் சிக்கவைத்துப் பிடிக்கும் காட்சிகளை இவற்றில் திறம் படத் தெளிவாக வரைந்துள்ள வேலைப்பாடு சிறந்ததாகும்.

அட்டிக்காவிலும் பல சின்னங்கள் உள. அத்தீனியர்களின் சேம அரணில் பழங்காலத்தைச்சேர்ந்த அரண்மனைக் கட்டடத்தைச் சேர்ந்ததாகக் கூறப்படும் சில கற்கள் கிடைத்துள்ளன. ஆனால் ஊன்றி நோக்குங்கால் ஆண்டு, பழங்கால கோட்டைச் சுவரின் அஸ்திவாரங்களைக் காணக்கூடும். அத்தீனியர்கள் இச் சுவரை பேலார்ஜிக் (Pelargic) அல்லது பேலாஸ்ஜிக் (Pelasgic) என்றழைத்தனர். இவை இவ்விடத்தில் வாழ்ந்துவந்த பழங்குடிகளாகிய பேலாஸ்காய் (Pelasgoi)[21] என்பவரின் பெயரைப் பின் பற்றி வருவதுபோல் விளங்குகின்றன. ஆனால் அத்தீனிய சம வெளியில் வசித்து வந்தவர்கள், ஆதன்ஸ் நகரைச்சேர்ந்த பேலாஸ்ஜியர்கள் மட்டுமல்லர். இச் சமவெளியின் வடக்குமுனையில் காணப்படும் வளைவுக் கூரையையுடைய கல்லறை, அக்கார்னே (Acharnae)வைச் சேர்ந்த அரசிளங்குமாரர்களுடையது எனத் தெளிவாகின்றது. தோரிகஸ் (Thoricus) பிரபுக்களும் இவ்வாறான கல்லறைகளை உபயோகித்தனர் என்பது எலியூஸிலில் காணப்படும் கல்லறையிலிருந்து நாம் அறியக்கூடிய உண்மையாகும். அட்டிக்காவின் பல பகுதிகளில் இக் காலத்தைச்சேர்ந்த சவக்குழிகள் காணப்பட்டுள்ளன. ப்ராசீயில் (Prasial) காணப்படும் பாறைகளிலுள்ள கல்லறைகள், மைஸீனியின் அடிவாரத்தில் நகரத்தில் தென்படும் கல்லறைகளை ஒத்திருக்கின்றன.

பீயோஷியாவிலும் பல உயர்ந்த நினைவுச் சின்னங்கள் உள. காட்மியா எனப்படும் வரலாற்றுக் காலத்தைச்சேர்ந்த தீப்ஸ் நகரின் சேம அரணில், அரண்மனையின் அழிவுச் சின்னங்களும் சுவர்களிலுள்ள ஓவியங்களின் அறிகுறிகளும் காணப்படுகின்றன. கோபேயிக் (Copaic) சதுப்பு நிலத்திற்கு மேற்குக்கரையில் ஒரு வகை மனிதர் வாழ்ந்து வந்தனர். இவர்களுடைய வளமை உலகறிந்தது. ஹோமருடைய செய்யுட்களில் இவர்களுடைய நகரமாகிய ஆர்கோமீனஸும் (Orchomenus), மைஸீனியும்

[21] பேலார்ஜிகான் (Pelargikon) என்ற பெயருக்குப் பொது மக்களின் சொல் வரலாற்றுப்படி 'நாரை', (Nerapyes) என்ற குறிப்புடன் பெலாஸ்ஜிகான் (Pelasgikon) என்பதிலிருந்து உண்டாயிற்று என்பதே எளிதான விளக்கமாகும்.

'பொன்னுலான' என்ற அடைமொழியைக் கொண்டுள்ளன. பொழுதுபோக்குக்காக எருதுகளுடன் சண்டை செய்யும் வளையங்களில் (Bull-ring) காணப்படும் காட்சிகளும், தூண்கள் கொண்டுள்ள புண்ணியத் தலங்களில் நடக்கும் காட்சிகளும் அரண்மனையிலுள்ள சுவர்களில் ஓவியங்களாகத் தீட்டப்பட்டுள்ளன. நாஸஸ் நகரத்தில் ஓவியங்களைத் தீட்டிய கலைஞரின் இனத்தவரே இவைகளையும் செய்திருக்கக்கூடும். சேம அரண் கட்டியுள்ள மலைச் சரிவிலே இங்குள்ள மன்னர் ஒருவர் வளைவுக் கூரையையுடைய கல்லறை ஒன்றைக் கட்டுவித்தார். இவருக்குப்பின் தோன்றியவர்கள் இதனை இம் மன்னருடைய பொருட்குவியல் எனக் கருதினர். இக் கல்லறை 'அட்ரியஸின் பொருட்குவியல்' போல் மிகப் பெரிதாக இல்லாவிடினும் ஏறத்தாழ அதனைப்போலவே யுள்ளது. இக் கல்லறையில் மற்றோர் அறையும் உளது. இவ் வறையின் கூரை (ceiling) வியத்தகு உருவப்படம் கொண்ட கல்லாலாகியது. இப் படம் பகட்டான வர்ணங்களால் தீட்டப்படாமல், வளைந்து வளைந்து செல்லும் சுருள் வடிவங்களும் (meandering spirals) விசிறி வடிவமுள்ள இலைகளும், அவைகளின் வரம்புகளில் சிறிய ரோஜா மலர்களும் அமைந்தனபோன்ற தோற்றம், ஒரு கம்பள விரிப்புப்போன்ற காட்சியை அளிக்கின்றது. ஆர்கோமீனஸிலுள்ள கல்லறைகளின் கற்களை அழகுபடுத்த உபயோகித்திருக்கும் உருவப் படங்கள், டிரின்ஸ் நகரத்தைச்சேர்ந்த பிரபு ஒருவரின் ஓவியக் கலைஞர்களால் அம் மகானுடைய மாளிகையின் சுவர்களில் தீட்டப்பட்டுள்ளன. இதன் கூரையிலும், கல்லறையிலும் கிரீட் தீவின் தொழிலாளரின் கைத்திறனை நாம் காணுமல் இருக்க முடியாது. எவ்வாறுயினும், கூரையின் உருவப்படமும், ஓவியமும் எகிப்து நாட்டைப் பின்பற்றியவைபோலத் தோன்றுகின்றன.[22] ஏனெனின், இதையொத்த உருவப்படங்களை எகிப்து நாட்டிலுள்ள தீப்ஸ் (Thebes) நகரத்தில் காணப்படும் கல்லறைகளின் கூரைகளில் காணலாம். ஆர்கோமீனஸிலிருந்த பிரபுக்கள் பீயோஷியாவிலேயே மிகுந்த வலிமையுடைய பிரபுக்களாயிருந்திருக்கக்கூடும். ஆயினும் கோபேயிக் சதுப்புநிலப் பகுதியில் மற்றொரு கோட்டையில் இவர்களது அண்டைவாசிகள் சிலர் இருந்தனர். இவர்கள் ஆர்கோமீனஸ் பிரபுக்களின் பகைவரா, நண்பரா என்பது ஆய்தற்குரியது. ஆர்கோமீனஸ் மேற்குக்கரையில் நிறுவப்பட்டுள்ளது. ஆனல் மிகப் பழைய இக் கோட்டையானது தண்ணீரிடையே உள்ள ஒரு பாறையின்மேல் கட்டப்பட்டிருந்தது. இப் பாறையின்

[22] வாடி ஹால்பாவிலுள்ள (Wadi Halfa) மூன்றும் தாத்மஸ் (Totmes III)ஸின் கோயிலின் சுவரிலுள்ள ஒரு தேவதையின் ஆடையிலும், நீயூபியா (Nubia)விலுள்ள கல்லறையின் மேல் தளத்திலும் இதே உருவப்படத்தை நாம் காண்கின்றோம்.

வரம்பைச் சுற்றிக் கட்டப்பட்ட வலிமைபொருந்திய கோட்டைச் சுவர்களின் அழிவுச் சின்னங்களும், இத் தீவில் வாழ்ந்துவந்த அரசிளங்குமாரர்களுடைய அரண்மனையின் அடித்தளங்களும் இன்றும் காணப்படுகின்றன. ஆனல் இவ்விடத்தின் பெயர் மட்டும் நமக்குத் தெரியவில்லை.[23] இப் பரந்த ஏரியின் விசித்திர வழக்கங்கள், பெயரில்லாத இக் கோட்டையின் பிரபுக்களுக்கும், ஆர்கோமீனஸ் நகரத்துப் பிரபுக்களுக்கும் ஓயாத தொல்லையைக் கொடுத்து வந்தன. தங்களுடைய நிலங்களை வளமுறச் செய்யும், இந்த ஏரி அல்லது சதுப்புநிலத் தண்ணீரை (morass) வெளியேற்றிக் கடலுக்குக் கொண்டு செல்ல ஆறு ஒன்றுமில்லை. ஏரிக்கும் கடலுக்கும் இடையே தடைசெய்யும் பாவனையாக, இந்த ஏரியின் வடகரையில் டூன் (Ptoon) மலையுள்ளது. தரைமட்டத்திற்குக் கீழே இம் மலையை ஊடுருவிசெல்லும் பிளவுகள்தாம் இந்த ஏரியின் போக்கிடங்களாம். இந்த ஊடுவழிகளைத் தண்ணீர் அடைவதற்காக, இங்குள்ள மக்கள் ஏரியின் படுகையில் கால்வாய்களை வெட்டி, அவைகளைக் கோட்டைகளின்மூலம் காத்து வந்தனர்.

முக்கியமாக பைலஸ் (Pylus), லீயுகாஸ் (Leucas), கேப்பல்லேனியா (Cephallenia) என்ற இடங்களில் கிடைத்துள்ள அழிவுச் சின்னங்கள், ஐயோனியக் கடற் கரைகளும் (Ionian sea) அங்குள்ள தீவுகளும் மைஸீனிய நாகரிகச் செல்வாக்கின் சுற்று வட்டாரத்துக்குள் அமையப் பெற்றவை என்பதை நமக்குத் தெளிவாகக் காட்டுகின்றன. ஹோமருடைய செய்யுட்களில் இக் கடற் கரைகளும், தீவுகளும் நெஸ்டர் (Nestor) ஓபீஸியஸ் என்போருடன் சேர்த்துக் கூறப்பட்டுள்ளன.

ஈஜியன் கடலில் தென் கிழக்குக் கோடியிலுள்ள ரோட்ஸ் (Rhodes) தீவிலுள்ள அயாலிஸஸ் (Ialysus) என்னுமிடத்தில் பதினான்காம் நூற்றாண்டின் துவக்கத்தில் 'மைஸீனியன்' சமுதாயம் (community) ஒன்று இருந்தது. இங்கே புதைக்கும் இடம் ஒன்று வெட்டி எடுக்கப்பட்டது. இதில் கிடைநிலையான பாறைக் கல்லறைகளும், அவைகளை அடைவதற்கான சாலை யொன்றுமுள. வாசற்படியும் நான்கு பக்கங்கள் கொண்ட அறையும் மைஸீனியில் காணப்படுவதுபோல் காட்சியளிக்கின்றன. இங்குக் கிடைத்த மலர்க் கிண்ணங்கள் மெருகிடப்பட்ட மிகச்சிறந்த மைஸீனியன் இனத்துப் பொருள்களைச் சேர்ந்தவை. இங்கு இக் காலத்திற்கு முந்திய மட்பாண்டங்கள் கிடைக்கப் பெறாததினால், இந் நாகரிகம் படிப்படியாக வளராமல், இந்த இடத்தில் குடியேறிய மக்கள்

[23] இது ஆர்னே என்று ஊகிக்கப்படுகிறது.

தங்கள் நாகரிகத்தைத் தாமே கொண்டுவந்து புகுத்தியிருக்கலாம் என்று கூற இடமிருக்கிறது.

தெற்குக் கிரீஸை, கிரீட்டன் நாகரிகம் உருத்தெரியாமல் மாற்றிய பிறகும்கூட, தெசலியில் முரட்டுப் பழக்க வழக்கங்களைக் கொண்ட கற்காலம் நீடித்திருந்தது. இந்த நிலப்பாகம் மற்ற இடங்களைக் காட்டிலும் நாகரிக மற்றதாக நிலைத்திருந்தது. தெற்கிலுள்ள பிற்கால ஈஜியன் நாகரிகம் ஊடுருவிச் சென்றும் அது செழிப்படைய முடியவில்லை. செல்வம் படைத்த நகரங்களும், வலிமையான சுவர்களும் தெசலியில் காணப்படவில்லை. இவண் காணப்படும் சிறு தேன்கூடு போன்ற கல்லறைகளே வீரிய காலத்துத் தலைசான்ற ஆவணங்களாகும்.

மைஸீனியன் நாகரிகத்தின் இயல்பு, பரப்பு இவைபற்றிய இந்தக் குறுகிய வரலாற்றிலிருந்து, இது கிரீட்டன் நாகரிகத்திலிருந்து மீறி வளர்ந்ததாயினும் தன்னுடைய சிறப்புப் பண்புகளுடன் விளங்கியது என்பது அறியக்கிடக்கின்றது. பதினாறும் பதினோராம் நூற்றாண்டுக்காலங்களுக்கிடையே இந் நாகரிகம் செழித்து வளர்ந்தும், பின் சீணித்தும் போயிற்று. இரும்புக் காலத் துவக்கத்தில் இதன் முடிவு தோன்றிற்று. போர்க்கருவிகள் செய்யவும், சாதாரண வேலைப்பாடுகளுக்கும் கிரீஸ் நாட்டில் பதினோராம் நூற்றாண்டிற்குமுன் இரும்பு உபயோகத்திற்கு வரவில்லை. கிரீட்டைப் போலவே, இங்கும் எகிப்து நாடுதான் கால ஆராய்ச்சிக்குக் (chronology) சான்றுகள் அளித்துள்ளது. பதினாறும் நூற்றாண்டின் துவக்கத்தில் எகிப்பது நாட்டைச் சேர்ந்த தீப்ஸிலுள்ள ஒரு சுவர் மீதுள்ள ஓவியத்தில் மைஸீனியன் மலர்க்குவளைகள் தீட்டப்பட்டுள்ளன. பதினைந்தாம் நூற்றாண்டில் கட்டப்பட்டு, இரண்டு அல்லது மூன்று நூற்றாண்டுகளுக்குப்பின் அழிக்கப்பட்ட கூராப் (Gurob) என்ற நகரில் ஈஜியப் பிரதேசத்திலிருந்து இறக்குமதியான போலிக் கழுத்தையுடைய சாடிகள் பல கிடைத்தன. இந்தச் சாடிகள் மைஸீனியன் மட்பாண்ட காலத்தில் முதற் பாகத்தையன்றிப் பிற் பாகத்தைச் சேர்ந்தவை. இவ்வாறான எகிப்தியச் சான்றுகள் எகிப்து நாட்டில் மட்டுமன்றி ஈஜியனின் இருகரைகளிலும்கூடக் கிடைத்துள்ளன. மைஸீனியில் காணப்படும் அறைகளுள்ள கல்லறைகளில் மூன்று சீன மட்பாண்டங்கள் கிடைத்துள்ளன. இவைகளில் ஒன்றில் பெயர் பொறிக்கப்பட்டுள்ளது. மற்ற இரண்டில் எகிப்து அரசரான மூன்றாவது அமென்ஹோடெப்பின் (Amenhotep III) தாட்சுருளும் (cartouche) அவரது மனைவியராகிய தாயா (Taia)வின் பெயர் பொறிக்கப்பட்ட எகிப்தவருக்குப் புனிதமானதான வண்டுச் (scarab) சின்னமும் காணப்படுகின்றன. ரோட்ஸ் தீவிலுள்ள அயாலிஸஸ் நகரின்

கல்லறைத் தோட்டத்தில் மேற்கூறிய அமென்ஹோடெப் மன்னருக்குச் சொந்தமான புனிதமான வண்டுச் சின்னம் ஒன்று கிடைத்துள்ளது மிகவும் வியப்பை யளிப்ப தொன்றாகும். ஒரு தனிப்பட்ட இடத்தில் மாத்திரம் இவ்விதமான வண்டுச் சின்னம் கிடைக்கப் பெற்றிருந்தால், அதனைக்கொண்டு நாம் ஆராய்ச்சி செய்வதற் கொன்றுமில்லை. ஆனால் இவ்வாறு ஒருங்கொத்த நிகழ்ச்சி (coincidence) மேற்படி மன்னர் காலத்தில் எகிப்து நாட்டிற்கும் இப் பிரதேசத்திற்கும் தீவிரமான செயல் தொடர்பு இருந்ததை விளக்குகின்றது. குறைந்தது பதினான்காம் நூற்றாண்டில் அறைகள் கொண்ட கல்லறைகளும், வில்வடிவக் கூரையைக் கொண்ட கல்லறைகளும் நடைமுறைக்கு வந்திருக்கலாம் என்னும் உண்மை இதினின்று அறியக் கிடக்கின்றது. ஆனாலும் முன்னாள் சவக்குழிகளும் எகிப்தியச் செல்வாக்கை எடுத்துக் கூறுகின்றன. மைஸீனியன் சேம அரணிலுள்ள ஒரு பாறைக் கல்லறையில் கிடைக்கப் பட்ட குத்துவாள் அலகில், ஓர் எகிப்தியக் காட்சி வர்ணிக்கப் பட்டுள்ளது. இக் காட்சியானது ஒரு நதியில் இக்மினியர்கள் வாத்துகளைப் பிடிப்பதாகும். இந் நதி நீல நதியாகத்தானிருக்கக் கூடும். எகிப்தியர் அல்லாது ஈஜியரே இந்த வேலைப்பாட்டைச் செய்திருக்க வேண்டும். ஆனால் இந்த ஈஜிய ஓவியக் கலைஞர் எகிப்தை நன்றாய் அறிந்துள்ளவரா யிருக்கவேண்டும்.

இந் நாகரிகத்தின் தோற்றத்தை வெகு எளிதில் விளக்கிக் காட்ட வேண்டுமானால் கிரீட்டர்கள் கி.மு. 1600க்குப் பின் தாம் விரிவடையும்பொழுது கிழக்குக் கிரீஸில் பல பாகங்களில் இறங்கி, ஆர்காலிஸ் (Argolis), பீயோஷியா முதலிய இடங்களில் தம் உரிமையை நிலைநாட்டி, தமது பண்பாட்டைக் கிரேக்கர்களிடையே ஊன்றச் செய்தனர் என்று நினைத்துக் கொள்ள வேண்டும். கிரீட்டன் குடியேற்றங்களை எடுத்துக்காட்டவும், அன்னவரின் மேலாட்சிகளைக் குறிப்பிடவும் சில சான்றுகளுள. எடுத்துக் காட்டாக, மேகாரா (Megara) நகருக்கு எதிரேயுள்ள மினோவா தீவு (Minoa), மைனாஸ் தீவின் ஒரு குடியேற்றம் எனக் காட்டுவதுபோல் தோன்றுகிறது.[24] தீப்ஸ் நகரத்தை நிலைநாட்டிய காட்மஸ் (Cadmus), யூரோப்பா (Europa) ஆகியோரைப்பற்றிய புராணக் கதையில் யூரோப்பா மைனாஸின் தாயாகவும், போனிக் (Phoenix) ஸின் மகளாகவும் வர்ணிக்கப்பட்டுள்ளனர். மற்றும் காட்மஸ் எழுத்தை உருப்படுத்தியவர் (inventor of writing) என்ற பரம்பரைக் கதை, கிரீட்டன் எழுத்துக்களின் தோற்றத்தைக் குறிக்கலாம். மூலக் கதையின்படி யூரோப்பா கிரீட்டன் நகர அரசகுமாரி

[24] லாக்கோனியாவின் (Laconia) கிழக்குக் கரையில் மற்றொரு மினோவா இருந்தது.

எனப்பட்டாலும் பிற்காலக் கதை அவளை யோனிஷ்ய நகரைச் சேர்ந்தவளாகக் கூறுகிறது. தீரு (Tyre), சீதோன் (Sidon) என்னும் நகரங்களின் வாணிப மக்களை அறிவதற்கு முன்பே கிரேக்கர்கள் மாநிறமுள்ள கிரீட்டர்களைப் போனைக்ஸ் (Phoenikes) அல்லது 'சிவப்பு மனிதர்' என்று அழைப்பது வழக்கிலிருந்தது. ஆனால் மைனஸ் என்ற பெயர் கிரீட் வரலாற்றில் 16ஆம் அல்லது 15ஆம் நூற்றாண்டில் காணப்படுவது உண்மை என்று மேற்கொண்டால் தான், மேற்கூறிய தர்க்கங்கள் ஆதாரமுறையாகக் கருதப்படும்.

ஒருகால் கிரீட்டின் தலைமையில் நிறுவப்பட்ட சில சிற்றரசு நாடுகள் நாளடைவில் வலிமையுற்று, மினேவன் மன்னர்களின் ஆணைக்கு அடங்காமலும், கப்பங்களைக் கட்டாமலும் இருந்திருக்கக் கூடும். ஆனால் பதினைந்தாம் நூற்றாண்டு வரலாற்றிலிருந்து நாஸஸுக்கும், மைஸீனிக்கும், மைஸீனியைச் சார்ந்த மற்ற நாடு களுக்கும் இருந்த பல உறவுகளை அறிய முடியாமல் திகைக்கின் றோம். பின்னர் கி. மு. 1400இல் நாஸஸ் வீழ்ச்சியடைந்தது. அத னுடன் கிரீட்டின் புகழும் மேன்மையும் மறைந்தன. இங்குள்ள சிறந்த அரண்மனையும் ஏனைய குடியேற்றங்களும் பெருந் தீக்கிரை யாயின.[25] இத் தீயானது இந்தத் தீவின்மீது படையெடுத்தவர் களின் செயல் என்று தெரிகின்றது. இவர்கள் கிரீட்டை அழிக்கவே வந்தவர். அழிவு வேலை முற்றிலும் முடிந்ததும் கப்பல்களில் ஏறி மறைந்தனர்.

ஆனால் இந்த நாசவேலையில் ஈடுபட்டவர் யார் என்று நிச்சயமாகக் கூறுவதற்கு முடியவில்லை. சிலர் இவ் வேலையை அக்கியர்கள் செய்திருக்கக்கூடும் என்கின்றனர். இவ் வக்கியர் 13ஆம் நூற்றாண்டில் கிரீஸ் நாட்டில் வலிமையோடு தோன்றியது மன்றி, கிரீட் தீவில் பல குடியேற்றங்களை நிறுவியும் அங்கு ஆட்சி செய்தும் வந்தனர். அக்கியர்கள் ஒன்றரை நூற்றாண்டுகளுக்குப் பின் கிரீட்டில் உன்னத பதவியிலிருந்தாலும், இவர்கள்தாம் நாஸஸ் நகரத்தை நாசமாக்கியிருக்கலாம் என்று எண்ணினாலுங் கூட, அக்கியர்கள் தெற்கே அவ்வளவு முற்காலத்திலேயே வந்த தற்கு ஆதாரங்கள் ஒன்றுகூட இல்லை. பழைய கிரீட்டன் நாகரிகம் சிதைவுபடாமல், செல்வந்தர்கள் இல்லாத அரசர்கள் காலத்தில் வழக்கிலிருந்து பின் சீணித்தது. நாஸஸிலும், ஹாகியா திரியாடா விலுமுள்ள அரண்மனைகள் சில பகுதிகளில் மீண்டும் கட்டப்பட்டு அரசர்கள் வாழும்படியான இடங்களாக்கப்பட்டன. நாஸஸ்

[25] கிரீட் தீவின் இப் பெரிய காலத்தைப்பற்றிக் கடைசியாக அகப்பட்ட சின்னமானது ஹாகியா திரியாடா (Hagia Triada) என்னுமிடத்தில் கிடைத்த தாயா அரசியாரின் எழுத்துக்கள் பொறிக்கப்பட்ட புனித வண்டாகும் (Scarab).

மன்னர்களின் பகைவரான ஆர்காலியன் சமவெளியிலுள்ள பிரபுக் கள் இந்த நாசவேலையை ஒருகால் செய்திருக்கலாம். எவ்வா றுயினும் நாம் அறிவது என்னவென்ருல் அக்கியர்கள் வரு முன்னமே ஆர்காலிஸ், நாஸஸ் வீழ்ச்சிக்குப்பின், ஈஜியன் நாகரிகத்தின் ஒரு வலிமை பொருந்திய பீடமாகத் தோன்றிற்று.

வரலாற்றுக் காலத்திற்கு முன்னேயுள்ள கிரேக்க உலகத்தில், சிறு நாடுகளிடையே காணப்பட்ட தொடர்புகளை நாம் அறிவதற் கிடமில்லை. 'பொன்னுலாகிய' மைஸீனியின் உச்சநிலை அக் காலத்திலேயே சரிவர நிலைநாட்டப்பட்டது போன்று தெரிகின் றது. ஈஜியன் பிரதேசத்திலுள்ள ஏனைய நகரங்களின் செல்வத் தைப் பார்க்கிலும், மைஸீனியின் செல்வப் பெருக்கு அதிகமா யிருந்திருக்கக்கூடும் என்று மைஸீனியின் கல்லறைகளில் காணப் பட்ட பொருட் குவியல்கள் நமக்கு எடுத்துக்காட்டுகின்றன. ஆனுல் இங்குள்ள பிரபுக்கள் செல்வந்தராய் மட்டுமின்றி, வலிமை மிகுந்தவர்களாயுமிருந்தனர் என்பதை அருகிலுள்ள இடங்களில் இவர்களின் செல்வாக்குப் பரவியிருந்தது நமக்குக் காட்டுகின்றது. இவர்களின் செல்வாக்கை மைஸீனியையும், கொரிந்து நகரையும் (Corinth) இணைக்கும் சாலைகளின் அமைப்பிலிருந்து (system) நாம் அறியலாம். இச் சாலைத் தொகுப்பை மைஸீனி மன்னர் ஒருவரே அமைத்திருக்கக்கூடும். இதுவரை மறைந்துள்ள மூன்று குறுகிய ஆனுல் மிகவும் வலிவான நெடுஞ்சாலைகள் கண்டுபிடிக்கப் பட்டுள்ளன. இவைகளில் மேற்கிலுள்ள இரண்டு சாலைகள் கிளி யோனி (Cleonae) நகரை அடைகின்றன. எஞ்சிய கிழக்குச் சாலை டினியாவில் (Tenea) முற்றுப்பெறுகிறது. இச் சாலைகள் 'சைக் ளோப்பியன்' கட்டட வேலைப்பாட்டின் அடிப்படையில் நிறுவப் பட்டிருக்கின்றன. ஆங்காங்கே ஆறுகளின்மேல் பாலங்களும் கட்டப்பட்டுள்ளன. சிற்சில இடங்களில் பாறைகளைக் குடைந்து இந்தச் சாலைகளை அமைத்திருக்கின்றனர். இப் பாதைகள் பெரிய வண்டிகள் போகக்கூடிய அகலமில்லாமையால், மைஸீனியின் பொருள்களைக் கொரிந்து பூசந்திக்குக் கோவேறு கழுதைகளின் மூலமாக ஏற்றி அனுப்பியிருக்கக்கூடும். இங்குக் காணப்படும் எண்ணிறந்த மெருகிடப்பட்ட மட்பாண்டங்கள் பலர் எண்ணுவது போல், தீவுகளிலிருந்து இறக்குமதி செய்யப்படாமல், இங்கேயே செய்யப்பட்டிருந்தால் இந்த மட்பாண்டம் செய்யும் தொழிலா னது இந் நகரின் பொருட் செல்வத்திற்கு ஓர் உற்பத்தித் தான மாக இருந்திருக்கக்கூடும். ஆர்கைவ் சமவெளி அனைத்தையும் மைஸீனி தன் ஆதிக்கத்தின்கீழ் ஆண்டுவந்ததா இல்லையா என்பதையும், மைஸீனி, டிரின்ஸ் இவ் விரண்டு நகர்களின் தொடர் பென்ன என்பதையும் நாம் எளிதில் கூறுவதற்கில்லை, பிற்காலத்




படம் 18: ஆர்காஸின் சமவெளி அல்லது ஆர்கைவ் சமவெளி

திலே ஈராவின் (Hera) கோவிலினுல் மிகப் பிரசித்திபெற்ற தெற்கேயுள்ள ஒரு சிறு குன்றுவரை அமைக்கப்பட்டுள்ள சாலே யானது, இந் நிலப்பகுதி மைஸீனியர்களின் ஆதிக்கத்தைச் சேர்ந்தது என்று காட்டுகின்றது. இவ்விடத்திற்கு அருகில் மூன்று வில்வளேவுக் கூரையையுடைய கல்லறைகள் காணப்படுவதால் இந்த இடம் சிறப்புடைத்தாயிருந்திருக்க வேண்டும். மைஸீனி யைப் பார்க்கிலும் டிரின்ஸ், மக்கள் வாழ்க்கையைக்கொண்ட ஒரு பழைய நகரமாகும். எனவே, சிலர் டிரின்ஸ் நகர மன்னர்கள், சம வெளியின் வடபகுதியில் உள்ள இம் மைஸீனியன் மலேயின்மேல் முதலாவதாக இந் நகரைத் தமது பகைவர்களின் படையெடுப்புக் களிலிருந்து தம்மைக் காத்துக்கொள்ள நிறுவியிருத்தல் கூடும் என்று கருதுகின்றனர். லாரிசா (Larisa) மலேயின் அடிவாரத்தில் காணப்படும் ஆர்காஸ் (Argos) நகரமும் ஒரு புகழ்பெற்ற இடமா யிருந்திருக்கவேண்டும். பதின்மூன்றும் நூற்ருண்டில் டிரின்ஸ் நகரம் மைஸீனியரின் கோலின்கீழ் இல்லாது ஆர்காஸ் பிரபுக்களின்கீழ் இருந்திருக்கக்கூடும்.[26]

ஈஜியன் அரசுகளின் வலிமையையும், மூல வளத்தையும்பற்றி ஏகமான கருத்து ஒன்றை நாம் உருவாக்க, இங்குக் காணப்படும் நினேவுச் சின்னங்கள் பயன் அற்றவை. இவ் வரசுகள் மிகச் சிறியவை. அந்தக் காலத்தில் ஒரே நாளில் மக்கள் ஓர் அரசை முடிக்கக்கூடும். தங்களுக்காகச் சேவை செய்ய அரசர்கள் அடிமை களே வைத்திருந்தனர். மகத்தான கோட்டைகளும், பெரிய கல்லறைகளும் இவ் வடிமைகளின் கைகளினுலானவை. எகிப்து, மற்றும் கீழ்நாட்டு அரசுகளுடன் இவ் வரசுகளே நாம் ஒப்பிட்டால், இவை எவ்வளவு சிறியவை, இவைகளின் மூலதானம் எவ்வளவு ஒடுங்கியவை என்பதை ஓர் உண்மையைக்கொண்டு நாம் தெளிய லாம். பாபிலோனிய (Babylonian) அல்லது எகிப்து மன்னர்கள் தமது அடிமைப் பரிவாரங்களுடன் கிரீஸ் நாட்டை ஆண்டு வந்திருந்தால், அவர்கள் நிச்சயமாகவே பூசந்தியின் மத்தியில் ஒரு கால்வாய் வெட்டிக் கிழக்குக் கடலேயும் மேற்குக் கடலேயும் இணேத்து, வாணிப வளர்ச்சிக்கு வேண்டிய சாதனங்களேச் செய் திருப்பர். இவ்வாருன காரியத்தைச் சாதிக்கப் பழைய காலத்துச் சிறிய அரசுகளுக்கும், அவைகளுக்குப் பின் வந்த சிறிய கிரேக்க அரசுகளுக்கும் போதிய மூலதானம் இல்லே.

26 இலியட் ii பிரிவிலுள்ள பட்டியலே அல்லது அட்டவணேயை நாம் நம்பினுல் ட்டியஸ் (Tydues) ஆர்காஸிற்கும் டிரின்ஸுக்கும் மன்னராகவும், அட்ரியஸ் (Atreus) மைஸீனியின் மன்னுராக வும் குறிப்பிட்டுள்ளதை நாம் கண்டறியலாம்.

## 4. அக்கியர்களும் ட்ரோஜன் யுத்தமும்

அக்கியர்கள், கிரீஸ் தீபகற்பத்தில் எப்பொழுது[27] பிரசித்தி பெற்றவர்களாக இருந்தார்கள் என்பதை உறுதியாகக் கூறமுடியாது. அவர்கள் பழைய கிரேக்க மக்கள்; முதலாவதாகத் தெசலி மற்றும் ஸ்பெர்ஸியஸ் சமவெளியில் வாழ்ந்தவர்கள் என்பதைக் கிரேக்கர்களின் மரபு கூறும். அதே சமயத்தில், அவர்கள் கிரேக்கர்கள் அல்லர் என்று சமீபகாலத்தில் சிலர் கருதி வந்தனர். ஆனால் அவர்கள் அநேகமாகக் கி.மு. 15ஆம் நூற்றாண்டில் வடக்குக் கிரீஸில் வெற்றிகள் பெற்ற டான்யூப் பகுதிகளிலிருந்து வந்த இந்திய-ஐரோப்பிய மொழி பேசும் மக்களைச் சார்ந்தவர்கள். அவர்கள், கிரேக்க மக்களின் மொழி, பண்பு ஆகியவற்றில் விரைவில் கலந்து விட்டனர். அவர்கள் தெசலியில் தாம் கண்ட எளிய, மந்தமான நாகரிகப் பழக்கங்களை அழிக்காமல் செல்வம் நிறைந்த சுகபோகங்களோடு கூடிய பெலபனீஸஸ்ஸைப் பின்பற்றினார்கள். அதன்பின் அவர்களின் இருப்பிடம் அல்லது செல்வாக்குப்பற்றி 'மைஸீனியன்' நாகரிகத்தின் நினைவுச் சின்னங்களில் குறித்துள்ளவற்றை வடக்கிலிருந்து அவர்கள் கொண்டு வந்த சில முக்கியப் பகுதிகளைக் கொண்டு துணியலாம். நீண்ட கத்திகளும், வட்டவடிவுள்ள கேடயமும், மற்றும் பெண்கள் அணியும் வேலைப்பாடமைந்த ஊசிகளும் இச் சின்னங்களாகும். கிரேக்கர்களுக்கு அயல் நாட்டார்களின் படையெடுப்பு என்னும் துணிவான ஊகத்தைப்பற்றிச் சரியான நினைவில்லை. கிரீஸின் பல பகுதிகளில் அக்கியர்களின் ஆதிக்கமும் அரசும் முன்னேறியது என்பதை விளக்க அந்த ஊகம் தேவையில்லை. மற்றும் இக் காலத்தில் வடக்கிலிருந்து புதிய மனிதர்கள் புகுந்தனர் என்பதைக் குறிக்க அவசியமான குறிப்புகள் இல்லை. அக்கியர்கள், கிரேக்கர்கள் என்பதை உத்தேசமாகக் கொள்வது நன்மையாகும். மற்றும் கிரீஸுக்குள்

[27] அக்கியர்கள் பொதுவாகச் செந்நிறமான தலைமயிரைக் கொண்டிருந்தனர் என்று எண்ணுவதற்கு இடமில்லை. ஏனென்றால், ஹோமர் மெனிலாஸ் (Menelaus) (இது மாநிறம் என்று பொருள் கொள்ளும்) என்று அழைக்கிறார். அவர்களுடைய வெளுப்பான தலைமயிரையும் இருண்ட நிறத் தலைமயிரையும்கொண்டு பிற்காலக் கிரேக்கர்களை இருவித மக்களாகப் பிரிக்கலாம். இங்கு வெண்ணிறமான தோற்றம் அரிதானதும் உயர்வாக மதிக்கப்பட்டதுமாக இருந்தது. சில பெண்களும், பசப்பர்களும் தமது தலைமயிரை மஞ்சள் அல்லது சிவப்பு நிற வண்ணத்தால் அலங்கரித்துக் கொள்வது இந்த உண்மையை நன்றாக எடுத்துக்காட்டுகின்றது, யூரிபைடீஸ் (Euripides) தமது டானி (Danae) யில் என்று குறிப்பிட்டுள்ளார்.

அவர்களின் நடைமுறைகளே அவர்களைத் தெற்குப் பகுதியில் அரச பதவிகளுக்கு உயர்த்திவிட்டன.

பதின்மூன்றும் நூற்றுண்டில் ஆர்காஸில் அக்கியர்களின் ஆதிபத்தியமும், கிரீட் நாட்டில் அவர்கள் குடியிருப்பும் ஆகிய இவ்விரண்டும் உறுதியாகும். அகமெம்னன், மெனிலாஸ் என்ற ஹோமரிக் அரசர்கள் உதித்த அரச வமிசம் பேலாப்ஸ் என்னும் ஒரு பிரீஜியனுல்[28] பதின்மூன்றும் நூற்றுண்டின் முற்பகுதியில் நிறுவப்பட்டது, கிரேக்கர்களின் பழக்கங்களின்மூலம் தெரிகிறது. இவன் மகன் ஆட்டிரியஸ் என்பவனுவான். இவன் அகமெம்னனின் தந்தையாவான். அக்கியர்களின் பரம்பரையைச் சேர்ந்தவன், மெனிலாஸ் என்பவனுவான்.[29] மற்றும் பிரீஜியன் உறவுமுறையின் பொருள்பற்றித் தெளிவாகத் தெரியவில்லை.

பதின்மூன்று, பன்னிரண்டாம் நூற்றுண்டுகளில் அக்கியர்கள் அநேக இடங்களில் வலிமை பெற்றுப் புகழ்பெற்ற கிரேக்க அரசர்களாக இருந்தார்கள். ஆர்காஸில் ஆண்ட அரசர்கள் மிகவும் வலிமை வாய்ந்தவர்களாக இருந்தார்கள். பன்னிரண்டாம் நூற்றுண்டில் இருந்த பாடகர்கள் பொதுவாகக் கிரேக்கர்களைக் குறிக்க வேண்டுமென்றுல் அக்கியர்கள், ஆர்கிவ்ஸ் என்ற இரண்டு சொற்களையும் குறிப்பிடுவார்கள். அவர்கள் இதே பொருளில் டானுயீ என்ற 'வழக்கிலில்லாத ஒரு பெயரையுங்கூட உபயோகித்தனர். ஒருவேளை இதைப் பழங்கால ஆர்காலிட் என்பதும் சேர்த்திருக்கலாம். மற்றும் அந்தக் கிரேக்கமாவட்டத்திலிருந்த[30] மக்களுக்குப் பெயராக இருக்கலாம் ஒருவேளை.

[28]பேலாப்ஸ் ஈனுேமாயஸ்ஸின் (Oenomaus) மகளாகிய ஹிப்போடேமியாவை மணந்தார்; மெனிலாஸ், டின்டெரிய (Tyndarius)ஸின் மகளாகிய ஹெலனை (Helen) மணந்தார்.

[29]கிரீட்டனிலுள்ள அக்கியர்கள் தெசலியிலிருந்து வந்தனர் என்பதை மரபு குறிப்பிடுகிறது. பன்னிரண்டாம் நூற்றுண்டின் துவக்கத்தில் ஐடோமீனியஸ் (Idomeneus) கிரீட்டின் முக்கியப் பெருமகனுயிருந்தார். டியூகாலியோன் (Deucalion) என்பது இவருடைய தகப்பனுரின் பெயராகும். வட கிரீஸில் (தெசலியில்) தற்போது டியூகாலியோன் என்னும் பெயரானது ஒரு வீட்டினுடையதாகும். புராண ஹெலனின் (Hellen) புராணத் தந்தைக்கு உரியதாயிருந்தது. ஆர்காலிஸ்ஸில் அக்கியர்கள் தமது அதிகாரங்களைப் பெற்ற காலத்தில் கிரீட்டிலும் அதைப் பெற்றனர் என்று நாம் ஊகிக்கலாம். அதேபோல் இவர்கள் கலப்பு மணங்களால் இந்த அதிகாரங்களைப் பெற்றனர்.

[30]டானுய் (Danaoi)க்குப் பெயர் அளித்த மூதாதையராகிய டானுஸ்ஸை (Danaus) ஒரு புராணக் கதை எகிப்துடன் இணைக்

கிரீஸின் வட பாகத்தில் இருந்த அக்கியர்கள் வீரம் பொருந்திய மக்கள் வாழ்ந்த காலத்தில் இருந்து, கடலில் வீரச் செயல்கள் செய்தவர்கள். பிற்காலத்தில் தெசலியைச் சேர்ந்தவர்களாவர். ஆர்கோ என்னும் கப்பலைப்பற்றிய செய்தியில் யூக்ஸின் ஆராய்ச்சி பற்றிய நினைவுகள் இந்தத் தேசத்துடன் இணைக்கப்பட்டுள்ளன. சரித்திர ஏடுகளில் காணப்படும் அக்கியர்களுள் முதலில் யாரைக் குறிப்பிட வேண்டும் என்பது நமக்குத் தெரியவில்லை. எகிப்தியக் குறிப்பொன்று கி.மு. 1223இல் அரசனாயிருந்த மெர்ம்டா என்பவன் காலத்தில், கடலில் இருக்கும் தீவுகளிலிருந்து மற்ற மக்களுடன்[31] இவர்கள் சேர்ந்து வந்து எகிப்தில் புகுந்தார்கள் என்று அறிவிக்கின்றது. கிரீஸ் நாட்டின் வட பகுதியும், தென் பகுதியும் ஒன்றுசேர்ந்து ட்ராய்க்கு எதிராகப் படையெடுத்துச் சென்றதே அக்கியர்களின் பெரிய காரியமாகும்.

அக்கியன் என்னும் பெயர் முக்கியமாகத் தெசலியின் தென் பாகத்திலுள்ள[32] பிதிய என்னும் நாட்டிலும், அதற்குத் தெற்கிலுள்ள தேசத்திலும், ஸ்பெர்ஸியஸ் நதிச் சமவெளியிலிருந்து ஈடா என்னும் மலைவரையிலும் தொடர்பு கொண்டுள்ளது. ஹெலர்களின் பூர்விகமான நாடு என்ற முறையில் ஸ்பெரியஸ் பிரதேசத்திற்கு ஒரு தனிப்பட்ட முக்கியத்துவம் உண்டு. இந்த இடத்தில் தான் ஹெலனீஸ் என்னும் மக்கள் வாழ்ந்து வந்தார்கள். இவர்கள் தாம் பிற்காலத்தில் கிரேக்கர்கள் என்று அழைக்கப்பட்டார்கள். அநேகமாக இவர்கள் பழைய கிரேக்கக் குடிமக்கள். இவர்களை அக்கியர்கள் படையெடுத்து அடக்கிவிட்டார்கள்.

பழைய காலத்து இடங்களின் பெயர்களிலிருந்து அந்த ஏஜியன் என்னும் கடலுக்கு இரு பக்கத்திலிருக்கும் தீவுகளிலிருந்

---

கின்றது. எகிப்தியப் பதிவேடுகளில் கி.மு. 1400 முதல் 1200 வரை கூலிப்படைகளும், கொள்ளையிடுகிறவர்களுமாகத் தோன்றுகின்ற டானு யுனு (Dana-una) உடன் இம் மக்கள் இன அடையாளம் கொண்டிருக்கின்றனர் என்று எண்ணப்படுகின்றது.

[31] அவர்களாவார்: லூகூ (Luku) = லிசியர்கள் (Lycians), ஷார்டானு (Shardana), ஷாகால்ஷா (Shakalsha), துர்ஷா (Tursha). இம் மூன்று மக்களையும், பிறகு நாம் மேற்கு மத்திய தரைக் கடல் பாகங்களில் கண்ணுறும் சார்டினியர்கள் (Sardinians), சிக்கெல்கள் (Sikels), டிர்ஹெனியர்களுடன் (Tyrrhenians) இணைக்கப் பிரேரேபணை செய்யப்பட்டுள்ளது.

[32] (தெசலியிலுள்ள) பெலாஸ்ஜியர்களின் ஆர்காஸ் (Pelasgian Argos), பிதியா (Phthia), ஹெல்லாஸ் (Hellas) முதலியன அக்கில்லஸ்(Achilles)ஸின் பேரரசில் சேர்க்கப்பட்டிருந்தன.

தவர்கள் பேசிவந்த மொழிகள் ஒன்றோடொன்று உறவுகொண்டிருந்தன. இதைக் கிரேக்கர்கள் காப்பாற்றி வந்தார்கள் என்பதையும் நாம் தீர்மானிக்கலாம். மேற்கு ஆசியா மைனரில் கடலோரங்களிலும், பீடபூமியிலும் இருந்தவர்கள் தங்களுடைய முனைகளையும், குன்றுகளையும், சிறிய ஆறுகளையும் அழைத்து வந்த பெயர்கள், அமைப்பிலும் மூலத்திலும், கிரேக்கக் கரையோரங்களிலும், பீடபூமிகளிலும், நடுக்கடலிலுள்ள தீவுகளிலும் வழங்கி வந்த பெயர்களை ஒத்திருக்கின்றன. ஆசியா கரையோரத்தில் பரவிக்கொண்டிருந்த நாகரிகம் திடீரென்று நின்றுவிட்டது ஓர் அதிசயமாகும். அது ரோடீஸ் வரையிலும், ரோடீஸுக்கு வடக்கிலும், தெற்கிலும் இருந்த சிறிய தீவுகள் வரையிலும் பரவிற்று. ஆனால் அது எதிரிலிருந்த கண்டத்திற்குத் தன் அழிவு நாட்கள்வரை பரவவில்லை. ஆசியா மைனரில் வடக்கில் ட்ரோட்டிலிருந்து தெற்கில் லிஸியா வரையிலும் இருந்த கடலோரங்களின் பகுதியிலிருந்த மக்கள் மெயோனியன்ஸ், காரியன்ஸ் மற்றும் லெலிஜெஸ் என்பவராவர். அந்தத் தேசத்தில் வாழ்ந்து வந்த மக்களின் இனமும், ஏஜியன் தீவுகளிலும், கிரீஸிலும் வாழ்ந்து வந்த மக்களின் இனமும், ஒரேமாதிரியாக இருந்துங்கூட, இந் நிலங்கள் மைஸீனியின் உலகத்திற்கு வெளியில்தான் இருந்தன என்பது ஒரு முக்கியமான குறிப்பாகும். தனியாக நிற்கும் ட்ராய்க்குத் தெற்கில் தனியான மைஸீனி காலத்து அரண்களோ, கோட்டைகளோ கிழக்கு ஏஜியன் கரையிலோ அல்லது லெஸ்பாஸ், ஸியாஸ், ஸாமாஸ் என்னும் பெரிய தீவுகளிலோ காணப்படவில்லை. மேற்கு ஏஜியனுடன் வியாபாரத் தொடர்பு இருந்ததாக எந்த விதமான பழைய அடையாளமும் காணப்படவில்லை. ஆகையால் இந்தப் பகுதியிலிருந்த மக்கள் உலோக காலத்திலிருந்தே ஏஜியன் நாகரிகத்தை வரவேற்கப் பெரிய தடைகளைச் செய்தார்கள் என்பது தெரிகிறது.

இந்த உண்மைக்கு அநேகமாக விளக்கம் என்னவென்றால், ஆசியா மைனரின் உள்நாட்டிலிருந்து கரையோரம் வரையிலும் பலம் பொருந்திய உள் நாட்டு அரசுகள், அயல் நாட்டாருக்குக் கரையோரங்களில் குடியேறுவதற்கு இடம் கொடுக்கவில்லை. இந்த அரசு ஹிட்டிடீஸ் என்பவர்களுடையதாகும். வடமேற்குக் கப்படோஸியாவிலிருக்கும் போகாஸ்காய் என்ற இடத்திலிருந்த பழங்கால அழிவுச் சின்னங்களிலிருந்து அவர்களது தலைநகரம் கண்டுபிடிக்கப்பட்டது. அவர்கள் இராச்சியம் கி. மு. 2000 முதல் கி. மு. 800 வரை இருந்தது என்றும், மற்றும் நாஸஸ் வீழ்ந்த காலம்வரையிலும் அவர்கள் தங்கள் இராச்சியத்திற்கு

வட ஸிரியாவை வென்று தெற்குப் பாகம்வரை அதிகாரத்தை நிலைநாட்டி, கார்கெமிஸில் தங்கள் இரண்டாவது தலைநகரை நிலைநாட்டினர். போகஸ்காய் என்னுமிடத்தில் தோண்டி எடுக்கப் பட்ட, களிமண்ணால் செய்யப்பட்ட எழுத்துடைய ஹிட்டைட்டு, பாபிலோனிய மொழிகளிலிருந்து இவர்கள் பாபிலோனியாவுடன் நெருங்கிய அரசியல் தொடர்பு கொண்டிருந்தனர் என்பது தெளிவாகிறது. இவர்களுடைய அதிகாரம் ஏதோ ஒரு முறையில் ஆசியா மைனரின் மேற்குக் கரைக்கும் ட்ரோட் என்னும் இடங் களுக்கும் பரவியிருந்தது. ட்ராயின் செங்கற்கோட்டையை அழித்தவர்கள் இந்த மக்கள்தாம் என்னும் எண்ணம் சிறிது ஆபத்தை விளைவிக்கக்கூடிய தொன்ருக இருக்கலாம். ஏஜிய உலகிற்கும், மெசபொடோமியாவிற்கும் போக்குவரத்தாயிருந்த அநேக அதிகாரங்கள் ஹிட்டைட்ஸ்மூலம் சென்றிருக்கலாம். அவர்கள் இராச்சியத்தைத் தெற்கில் விரிவடையச் செய்ய வேண்டுமென்ற நோக்கமும், எகிப்தியர்கள் தங்கள் ஆதிக்கத்தை ஸிரியாவில் ஏற்படுத்த வேண்டும் என்ற அவாவும்தான் எகிப்தியர் களுடன் சண்டை செய்யக் காரணமாயிருந்தது. கி. மு. 1287ஆம் ஆண்டு காடிஸ் என்னுமிடத்தில் நடந்த சண்டையில் இரு கட்சிக்கிடையில் தங்களுடைய ஹிட்டைட் அரசர்களுக்காக ட்ரோடிலிருந்த டார்டேனியன்ஸ் என்பவர்களும் கூடஇருந்து சண்டை செய்தார்கள். ஆனால் இந்தச் சந்தர்ப்பத்தில் ஹிட்டைட் பலம் குறைந்துகொண்டே வந்தது. வடமேற்கு ஆசியா மைனரில் சுங்கேரியன் பள்ளத்தாக்குவரையிலும் ஐரோப்பாவி லிருந்து கூட்டம் கூட்டமாக வந்த படையெடுப்பாளர்களால் அதிகாரம் எடுத்துக்கொள்ளப்பட்டது. இவர்கள்தாம் பிரிஜி யன்கள். டார்டேனியன்ஸ் என்பவர்கள் இந்த இனத்தைச் சேர்ந்தவர்களாக இருந்தார்கள். அவர்கள் த்ரேசியன் என்பவர் களைப் போலவே இருந்ததனல் அவர்களை நாம் இந்திய-ஐரோப்பியக் குடும்பத்தில் பிரிக்கோ-திரேஸியன் வகுப்பு என்று கூறலாம்.

ட்ராயின் முற்பகுதியிலிருந்து அழிந்த புகழைப் பல நூற்றாண்டுகள் கடந்தும், திரும்ப அடைவதற்கான வழி ஒன்றும் மேற்கொள்ளவில்லை. இதற்குப் பக்கத்தில் மூன்று வேறுபட்ட குடியேற்றங்கள் உண்டாயின. ஆனால் அவைகள் அரண்களாக இல்லாமல் முக்கியத்துவம் பெருத கிராமங்களாகவே விளங்கின. நீண்ட காலம்வரை இவ்வாறு இருந்ததற்கு, ஹிட்டைட் அரசர் களின் பொறுமைக் கொள்கையே காரணம் ஆகும் என்று நாம் கூறலாம். இவைகளைக் கற்களால் அமைந்த அரண்கள் பின் தொடர்ந்தன. அவையுங்கூட மறைந்துபோய், சில நாட்களுக்குப்

பின்பு, அதாவது பதினாறும் நூற்றாண்டு முடியும் தருவாயில், பெரிய அரண் அல்லது பாதுகாப்பான இடம் உண்டாக்கி அதை ப்ரியம் என்பவன் என்றாவது ஒரு நாள் அரசு புரிவான் என்று நினைத்தார்கள்—இதுதான் ட்ராயின் பழங்கதையும், சரித்திர வரலாறுமாகும்.

பெருமை பெற்று, ஐரோப்பா முழுவதிலும் எப்பொழுதும் சாதாரணமாக வழங்கும் சொல்லுக்குரித்தானதும், பழைய இடிந்துபோனகட்டடங்களை, இடித்து நிலமட்டமாக்கி, நிலத்தைச் சமன் செய்து புதிய நகரமான ட்ராய் என்பதை அந்த இடத்தில் நிறுவினார்கள். அந்தப் புதிய நகரத்தின் சுற்றளவானது கண்ணுக்கெட்டாத அகலமுடையது. அந்த நகரத்தைப் பாதுகாப்பதற்காகக் கற்களால் அமைந்த மிக உயரமான அரணும் இருந்தன. அவ்வளவு உயரத்திலுள்ள மதிற் சுவரின் உச்சியில் மைஸீனியாவில் உள்ளதுபோல் அரசனுடைய மாளிகை கட்டப்பட்டதாக நினைக்கிறோம். அந்த வீடுகளின் சுவர்களுக்குள் இருக்கும் அடித்தளத்திலிருந்து தெரிவது பழைய நகரங்களான மைஸீனியாவும், ட்டிரைன்ஸ் நகரங்களில் காணப்படும் அதேமாதிரியான அடித்தளங்களுமாகும். அந்தச் சுவரில் மூன்று அல்லது நான்கு வழிகள் இருந்தன. அதில் முக்கியமான வழி தென்கிழக்குப் பக்கத்திலிருந்தது. பக்கத்திலிருந்த ஒரு கோபுரத்தினால் அது பாதுகாக்கப்பட்டது. பழைய காலத்தைச் சேர்ந்த கற்கோட்டைகளை ஆர்காலிஸில் அமைத்த கொத்தர்களைவிட இவர்கள் திறமை வாய்ந்தவர்களாக விளங்கினார்கள்.

ட்ரோஜன் சமவெளியிலிருந்த மக்களும், ஈடா என்னும் குன்றுகளின் மத்தியிலிருந்த ஸ்கேமாண்டர் மேல் பள்ளத்தாக்கில் இருந்த டார்டேனியன்ஸ் என்பவர்களும்—அதாவது ஹோமரால் புகழப்பட்ட ஈனியஸ் என்பவனுடைய தேசம் — கிழக்கில் கிரேனிகஸ், ஈஸிபஸ் என்ற சமவெளியிலிருந்த மக்கள்—இவர்கள் எல்லோரையும் ட்ரோஜன் அரசைச் சேர்ந்தவர்கள் என்று கணக்கிடலாம். ஈடா மலைகளுக்குத் தெற்கே அநேக கோட்டைகள், பெலஸ்ஜியன் வகுப்பைச் சேர்ந்த மக்களால் ஆளப்பட்டு வந்தன. அவர்கள் ட்ராய் மக்கள் சரணடையச் செய்த பழங்குடி மக்களாவார்கள்.[88]

[88]மேற்குக் கரையிலுள்ள லாரிஸாவும் (Larisa), பிடாஸோ (Pedasos)ஸும் பிற்காலத்தில் திப் (Thebe), ஆஸ்ஸோஸ் (Assos). லிர்னெஸ்ஸாஸ் (Lyrnessos) ஸும் பிற்காலத்தில் ஆன்ட்டான்டிராஸ் (Antandros)ஸும் இவைகளில் முக்கிய நகரங்களாகும். பெலாஸ்ஜிய கோத்திரங்களில் சிலர் லீலீஜியர்களும் (Lileges), மற்றவர்கள் சீலீசியர்களும் (Cilices) ஆவர்.

ட்ராயினுடைய தலைவர்களுக்கு, அந்தப் பூமியின் செழுமை யாலோ அல்லது இயற்கையாக வளரும் பொருள்களாலோ, அவர்கள் வாழ்ந்து வந்த இடத்தினுலோ செல்வாக்கும், அதி காரமும் ஏற்படவில்லை. ஸ்கேமாண்டர் என்னும் நதி பாயும் அந்தச் சிறிய சமவெளி புதியதாக மக்கள் குடியேற ஒரு நன்மை யையும் தன்னிடம் கொண்டிருக்கவில்லை. அதனுடைய கரைகள் கப்பல்கள் தங்குவதற்கான வசதிகளைக் கொண்டிருக்கவில்லை. ஏஜி யனுக்கும், யுக்ஸைனுக்கும் இடையே வியாபாரம் செய்துகொண் டிருந்த மாலுமிகளுக்கு ஏற்படும் இடையூறுகளை ஒரு காரணமாக எடுத்துக்கொண்டதனுல் ட்ராயினுடைய அரசர்களுக்குச் செல் வாக்கு ஏற்பட்டது. ஹெல்லெஸ்பான்ட் முகத்துவாரத்தில் வடக்கு, வடகிழக்கு, வடமேற்குப் பக்கங்களிலிருந்து ஏற்படும் கோடைக் காற்றுகள், பிரயாணம் செய்துகொண்டிருக்கும் கப்பல் களை அநேக நாட்களோ, வாரங்களோ நிறுத்த வைக்கும். மாலுமிகள் கப்பல்களை நங்கூரம் போட்டு நிறுத்தவேண்டுமென்றும் தங்களுக்குக் குடிதண்ணீர் ஸ்கேமாண்டர் நதியிலிருந்து, பெஸிகா குடாவின் மேற்குக் கரையிலிருந்தோ அடைய வேண்டுமென் றும் விரும்பினுர்கள். இதுமாதிரி செய்வதற்கோ, மறுப்ப தற்கோ ஸ்கேமாண்டர் சமவெளியின் உரிமையாளர்களுக்குத் தான் உரிமை இருந்தது. அந்த ஹெல்லெஸ்பான்ட் வழியாக நடந்துகொண்டிருந்த வியாபாரத்தை அடக்கி ஆளுவதற்கு ட்ராயினுலேதான் முடியும். இந்த இடம் வியாபாரப் போக்கு வரத்துக்குச் செல்லும் பல வழிகளும் ஒன்றுகூடும் இடமாக இருந்தது. த்ரேஸ் மற்றும் தெயோனியாவிலிருந்தும் மது, கத் திகள், வெள்ளைக் குதிரைகள், அநேகமாகத் தங்கமுங் கூட வந்தன. பாப்லேகோனியாவிலிருந்தும், யூக்ஸைலின் தெற்குக் கரைகளிலிருந்தும், தேக்கு, வெள்ளி, ஸிந்தூரம், காட்டுக் கழு தைகள் இவையாவும் வந்தன. தெற்கே மெயோனியன்ஸ், காரியன்ஸ், லிஸியன் ஆகியவர்களின் வியாபாரம் நடந்து கொண்டிருந்தது. மெயோனியன்ஸ் என்பவர்கள் அடிமைகளை வியாபாரம் செய்வதில் புகழடைந்தவர்கள். அவர்கள் ஹெர் மஸ் கரையிலும் ஸார்டிஸ் சமவெளியிலும் வாழ்ந்து வந்தார்கள். பிற்காலத்தில் இதற்கு லிடியா என்று பெயர் வந்தது. இந்தக் காரியன்ஸ் என்பவர்கள் மிலிடெஸ்ஸைத் தங்கள் வசம் அடைந் திருந்தார்கள். அவர்கள் தந்தவேலைப்பாடுகளில் திறமைசாலி களாக விளங்கினர். மற்றும் மியாண்டர் மாவட்டத்தைத் தங்கள் வசம் கொண்டிருந்தார்கள். எகிப்து, சிரியா இத் தேசங்களி லிருந்து நடந்துகொண்டிருந்த வியாபாரத்தை லிஸியன்ஸ் என்பவர்கள் தங்கள்வசம் கொண்டிருந்தார்கள். அந்த வியா

பாரம் ஏஜியன் வடக்குக் கரைகளில் நடந்துகொண்டிருந்தது.

ஹெல்லெஸ்பான்டைன் கரைகளில் வந்து சேரும் எல்லாப் போக்குவரத்துக்களுக்கும் ஒரு வரி விதிப்பது ட்ராயின் கொள்கையாயிருந்தது. ட்ரோஜன் சமவெளியில் ஆண்டுதோறும் ஒரு பெரிய சந்தை கூடுமென்றும், அதற்கு வியாபாரிகள் எல்லா இடங்களிலிருந்தும் கடல் மார்க்கமாகவோ, நில மார்க்கமாகவோ தங்கள் வியாபாரச் சரக்குகளைக் கொண்டு வருவார்கள் என்றும் ஊகிக்கப்படுகிறது. இந்த ஏற்பாட்டினால் ட்ரோஜன் அரசனுக்கு அந்தச் சந்தை வரிமூலம் அதிக இலாபம் கிடைத்தது. ஆனால் ஆண்டுதோறும் இப்பேர்ப்பட்ட பல நாடுகளைச் சேர்ந்தவர்களின் கூட்டம் ட்ராய்[84] என்னுமிடத்தில் கூடியதாக நாம் அறிந்து கொள்ள ஒருவிதமான சான்றும் இல்லை.

தக்க சான்றில்லாமையால், இந்தக் குறிப்பிட்ட கற்பனையை நாம் ஒப்புக்கொள்ள முடியாது. டார்டனல்ஸ் வாயிலில், பலம் பொருந்திய ஓர் அரசு இருந்து, மற்ற அரசுகள், ப்ரோபான்டிஸ், மற்றும் யூக்ஸினுக்கும் செல்வதைத் தடுக்கவும் ஓர் அதிகாரம் இருந்திருக்க வேண்டும். கிரேக்க வியாபாரம் அந்தக் கடல்களின் வழியாக நடக்க ட்ராய் ஒரு பெரிய தடையாக இருந்தது என்பதை, ஹெராக்லிஸ் ட்ராயை நாசப்படுத்திய கதையால், அதாவது ஆர்கோனாட்ஸ் என்பவர்களுடைய கதையுடன் தொடர்பு கொண்டிருக்கிறது என்பதால் அறியலாம். ஹெராக்லிஸ் என்பவன், மற்ற வீரர்களுடன் ஐயோல்கஸ் என்னுமிடத்தில் ஆர்கோ என்னும் கப்பலில் வந்து இறங்கி, தன்னுடைய கடல் பிரயாணத்தில் ட்ராயை நாசப்படுத்தினான். அப்பொழுது பிரியம்மின் தந்தையான லயோமிடான் என்பவன் அரசனாக இருந்தான்.

ஆசியா மைனரில் மேற்குக் கரையில் ட்ராய் ஒரு பலம் பொருந்திய அரசாய் இருந்தது. அக்கியர்கள் கிழக்குப் பக்கம் தங்கள் அதிகாரத்தை விசாலப்படுத்துவதைத் தடுக்க வடக்கில் ட்ராய்க்கும் தெற்கில் லிஸியாவிற்கும் பொறுப்பாய் இருந்தது. ஆசியா கரையோரங்களிலும், பக்கத்திலிருந்த தீவுகளிலும் குடியேற வேண்டும் என்று அக்கியர்கள் விரும்பினார்கள் என்பதை ட்ராய் வீழ்ச்சி அடைந்தபிறகு, குடியேற்றங்களை ஆரம்பித்தார்கள் என்பதன்மூலம் அறியலாம்.

[84] ட்ரோஜன் யுத்தத்தில் ஹெல்லெஸ்பான்டிற்குச் (Hellespont) சரக்குகள் அனுப்பிய நாடுகள் யாவும் ட்ராயின் நேச நாடுகள் என்பதை நாம் அறியவேண்டும்.

12ஆம் நூற்றுண்டின் ஆரம்பத்தில் அக்கியர்கள், தாங்கள் கிழக்கே பரவுவதற்கு[35] முக்கியத் தடையாயிருந்த ஓர் அரசை அழிப்பதற்காக ஒரு பெரிய படையெடுப்பைத் தயாரித்தனர் என்று தெரிகிறது. அந்தக் காலத்திலிருந்த கிரேக்க நாடுகளை ஒரு கூட்டாட்சி என்றே அல்லது ஒரு பேரரசசென்றே சொல்ல இயலாது. ஆனால் அநேக கிரேக்க அரசுகள் மைஸீனியாவின் அதிகாரத்திற்குக் கீழ்ப்படிந்தன. ஆட்ரியஸின் மகனுன அகமெம்னன் மைஸீனியாவின் அக்கிய அரசனுக இருந்தான். அவன், முக்கிய அரசர்களும், இளவரசர்களுமான வடக்கு, தெற்குக் கிரீஸிலிருந்து அவர்களுடைய ஒத்துழைப்பைப் பெறுவதில் வெற்றியடைந்தான். பிதியா, பெஸாலி நாட்டைச் சேர்ந்த அக்கிய அரசர்கள் இந்தத் தேசத்திலிருந்து பிரயாணம் செய்தது, இதில் அவர்களுக்கு ஒரு குறிப்பிட்ட அக்கறை யிருந்தது என்பதைக் காட்டும். இவர்கள் எல்லோரும் ட்ராய் சமவெளிக்குப் பிரயாணமாகச் சென்றுர்கள். ஆசியாவின் மேற்குக்கரையிலிருந்த மக்கள் எல்லோரும், லிஸியன்ஸ் உட்படப் ப்ரியம் என்ற அரசனின் உதவிக்கு ஒன்றுசேர்ந்தார்கள். இது ஏஜியன் கடலுக்கு இரு பக்கங்களுக்குமிடையே நடந்த சண்டையாகும். அக் காலத்தில் புலவர்களின் மரபுப்படி இந்த முற்றுகை ஒன்பது ஆண்டுகள் நடந்தது என்று தெரிகிறது. எப்படியும் ப்ரியம் என்னும் அரசனின் நகரம் அழிக்கப்பட்டது. அதனுடைய வீழ்ச்சி ப்ரோபான்டிஸ், மற்றும் யூக்ஸைன் கடல்களின் வழியாகக் கிரேக்க வியாபாரத்தைத் தொடங்குவதற்கு ஒரு முக்கியமான காரணமாக இருந்தது.

மற்றும் ஏஜியன் தீவுகளிலும், கிழக்குக்கரை ஓரங்களிலும் கிரேக்கக் குடியேற்றம் விரைவில் ஆரம்பமாகும். ட்ராய் என்னும் குன்றில் மறுபடியும் மக்கள் குடியேறுவார்கள், ஆனால் அதனுடைய முக்கியத்துவம் போய்விட்டது. அது பழங்காலப் புகழ் பெற்ற சில ஞாபகச் சின்னங்களை உடைய ஒரு சிறிய இடமாகக் கருதப்பட்டது.

[35] ட்ரோஜன் யுத்தத்திற்கு ப்ரியமின் (Priam) மகனுன பாரிஸ் (Paris) தூக்கிச் சென்ற (ஸ்பார்ட்ட மன்னனுகிய மெனிலா (Menelaus)ஸின் மனைவியாகிய) ஹெலனைத் (Helen) திரும்ப அடையவேண்டும் என்று புலவர்கள் கூறும் காரணமானது சில வரலாற்று அடிப்படையைக் கொண்டிருக்கலாம். ஆனால் அப்பேர்ப்பட்ட நிகழ்ச்சி நடந்திருக்குமானல் இது யுத்தத்திற்கான ஒரு சாக்குப்போக்கே யாகும்.

## 5. ஹோமரின் பாட்டுக்கள்

வீரச் செயல்கள் புரிந்த காலம், அதனுடைய வாழ்க்கையின் பழக்கங்கள், அதைச் சுற்றியுள்ள வழக்கங்கள், அதன் சமூக அமைப்பு, அரசியல் அமைப்பு ஆகிய இவை யாவும் ஹோமரின் பாடல்களிலிருந்து பிரதிபலிக்கின்றன. இல்லியட், ஓடிஸி என்ற காவியங்களை இயற்றிய புலவர்கள் 9ஆம் நூற்றாண்டுக்கு[86] முன்பு வாழ்ந்திருந்தாலுங்கூட, தங்களுடைய கருத்துக்களை ட்ரோஜன் சண்டைக்கு அடுத்த தலைமுறையைச் சேர்ந்த சங்கதிகளை, பழைய பாட்டுக்களிலிருந்து எடுத்துக்கொண்டிருப்பார்கள். உலோக காலத்திற்குப் பிறகு மற்றும் வாழ்க்கையின் முறைகள், கிரேக்க அரசியல் உலகத்தின் அமைப்பு ஆகியவை முழுவதும் மாறுபாடடைந்தன. மறைந்துபோன நாகரிகத்தைத் தொடர்ச்சியாக வரைவதற்கு, எவ்வளவுதான் கற்பனை இருந்தாலும், ஒருவராலும் முடியாது. பழமையான விஞ்ஞானப் பொருள்களைச் சேகரிப்பவன் தன்னிடத்தில் நிறைய குறிப்புகள் வைத்திருந்தாலொழிய வரைய முடியாது. ஹோமரால் எழுதப்பட்ட விவரங்கள் தொடர்ச்சியாக, முக்கியமான பகுதிகள் மற்றும் புகழ்பெற்ற விவரங்கள், புதை பொருள் ஆராய்ச்சியிலிருந்து எடுக்கப்பட்ட விவரங்களை நெருக்கமாக ஒத்து இருக்கிறது. முன்னால் சொல்லப் பட்ட பக்கங்களில் இது கூறப்பட்டுள்ளது. மைஸீனி, ட்டிரைன்ஸ், ட்ராய் மற்றும் போஷியா ஆகிய இடங்களில் காணப்பட்ட அரண்மனைகளைப் போலவே ஹோமரின் அரண்மனையும் கட்டப் பட்டுள்ளது. ஹோமர் காலத்திலிருந்த வீரர்களின் தேவையான சாமான்களும், மற்றும் அவர்கள் தங்களை மறைத்துக்கொள் வதற்காக உபயோகிக்கும் கேடயமும், மைஸீனியன் இரத்தினங் களும், ஜாடிகளும் ஓர் உதாரணமாக எடுத்துக்கொள்ளப்பட்டன. ட்டிரையன்ஸில் இருக்கும் கட்டடத்திலுள்ள வாயிலில் நீல நிற மான கற்கள் பதிந்திருக்கும் இடங்களிலிருந்துதான் இந்தப் புலவர் அஸ்லீனஸ் என்னும் கட்டடத்திலிருக்கும் ஸயானஸ் பதிந்திருக் கிறது என்று அவர் எழுதியிருப்பது வெறும் கற்பனையன்று. மற்றும் இப் புலவர் ஒரு தங்கக் கோப்பை அதன் பிடிகளில் புறாக்கள் அமைந்திருப்பதைப்போல் இருப்பதை நெஸ்டாரினுடைய கோப்பை என்று விவரிக்கிறார். அதைப்போல் ஒன்று மைஸீனியாவிலிருக்கும் அரசர்களுடைய சவ அடக்கம் செய்த அறைகளில் காணப்பட்டது. அக்கிலிஸுக்குத் திறம்வாய்ந்த கொல்லர்கள் செய்த கேடயத்தில் பதிக்கப்பட்டிருக்கும் குறிப்புகளிலிருந்து மைஸீனி, கிரீட் ஆகிய இடங்களில் கண்டு பிடிக்கப்பட்ட கலை வேலைப்பாடுகளிலிருந்து தெரியவருகிறது.

[86] மேலே 8ஆம் பிரிவைக் காண்க.

வெண்கலம், தகரம், வெள்ளி, தங்கம் - இவைகளில் செய்யப் பட்ட கேடயங்கள் வட்டமாகவும், நடுவில் ஒரு குறிப்பிட்ட வட்டமான பகுதியும், அதைச் சுற்றிலும் ஒன்றன்மேல் ஒன்ருக மூன்று வட்டங்களும் இருந்தன. நடுவில் பூமியும், கடலும், வானமும்; சூரியனும், முழுமதியும், மற்றும் எல்லா நட்சத்திரங் களும் வானத்தில் காணப்பட்டன. முதல் வட்டத்திலிருந்த பொருள் சண்டையும் சமாதானமும் பற்றியதாகும். மற்றும் அங்கே அமைதியாயிருக்கும் நகரத்தின் காட்சிகளும், விருந்து களும், மணப்பெண்கள் தங்களுடைய புது வீடுகளுக்குப் பந்தங் களின் விளக்கொளியில் வீதிகள் வழியாக அழைத்துச் செல்லப் படும் காட்சி; பெரியோர்கள் நியாயம் வழங்கும் காட்சி. அங்கே முற்றுகையிடப்பட்ட மற்ருெரு நகரமும் சண்டையும் பற்றிய காட்சிகளும் இருந்தன. இரண்டாவது வட்டம் வருடத்தின் பல் வேறு பருவங்களையும், கிராம வாழ்க்கையிலிருந்து காட்சிகளையும் தெரிவிக்கிறது - வசந்த காலத்தில் உழுவதையும்; உழவன் பூமியை உழுது முடித்தபிறகு சிறிது மது குடிப்பதும்; ஓர் அரசன் தன்னுடைய புல்வெளிகளில் புல் அறுப்பதைக் கவனிப்பதும், அறு வடை விழாவுக்கு ஆடம்பரங்களும், திராட்சை அறுவடைக் காட் சியில் இளைஞர்களும், இளநங்கைகளும், நாரால் செய்யப்பட்ட கூடைகளில் இந்தப் பழங்களை எடுத்துக்கொண்டு, நடனமாடிக் கொண்டே செல்வதும், அப்பொழுது ஒரு பையன் லீனஸின் பாட்டுக்களை யாழில்[87] வாசித்துக் கொண்டும் இருப்பதுபோல் அமைந்துள்ளது. இரைச்சலுடன் பாயும் ஆற்றின் கரையிலிருந்து ஓர் எருதைத் தூக்கிச் சென்ற இரு சிங்கங்களை இடையர்கள் தங்க ளுடைய நாய்களைக் கொண்டு துரத்திச் சென்ருர்கள். ஒரு மலைக் குகையில் இடையர்களுடைய குடிசைகளும், அதனருகே மேய்ச்சல் நிலங்களும் இருந்தன. இந்தக் காட்சிகளெல்லாம் கடைசியி லிருக்கும் மூன்ருவது வட்டத்தினுள் அமைந்துள்ளன. பலம் பொருந்திய ஓஷியானஸ் என்னும் ஆறு இதன் வழியாகப் பாய்ந்து கொண்டிருந்தது. இதைப் பார்த்தால் மக்களுடைய வாழ்க்கை அந்த ஆற்றைப்போல அவர்களைச் சுற்றியுள்ளதாகத் தெரிகிறது. அந்தக் கவியின் கற்பனையால்தான் இந்த முழு எண்ணங்களும் ஏற்பட்டன. ஆனால் ஏஜியனிலிருந்த கலைஞர்கள் அதைப்போல் சண்டைக் காட்சிகளையும், அமைதிக் காட்சிகளையும் வரைந் திருக்கிருர்கள். உதாரணமாகக் கிரீட் மக்களுடைய தட்டுகளில்

[87] கிரீட்டர்கள் ஏழு நரம்புகள் கொண்ட யாழை வைத்திருந் தனர். ஹாகிய திரியாடா (Hagia Triada)வில் காணப்பட்ட ஒரு கல்லறையின்மேல் இவ்வித யாழை ஒரு மனிதன் மீட்டிக் கொண்டிருப்பதை நாம் அங்குக் காணப்படும் இழவுக்குரிய காரியங்கள் தீட்டப்பட்ட சித்திரத்திலிருந்து அறிகிறேம்.

ஸைப்ரஸ் மரத்தால் செய்யப்பட்ட ஒரு பெட்டியை மூடி யிருக்கும் அந்தத் தட்டுகளில் ஒரு நகரத்தைப்போலப் பதிக்கப்பட்டிருக்கிறது. மற்றும் ஓர் அறுவடை விழாவி னுடைய காட்சி, ஸ்டியாடைட்டால் செய்யப்பட்ட ஒரு கோப்பையின்மேல் அலங்கரிக்கப்பட்டிருக்கிறது. வெள்ளியில் செய்யப்பட்ட ஜாடியில் முற்றுகையிடப்பட்ட நகரத்தின் காட்சியை வரைந்திருக்கிறார்கள். மைஸீனியில் கண்டுபிடிக்கப் பட்ட ஈட்டி முனைகள் உலோகத்தில் எழுதப்பட்ட கைத்திறனின் அழகான உதாரணமாக இருக்கின்றன. இல்லியட் என்னும் காவியத்தில் எழுதும் கலையைப்பற்றியும் குறிப்பிடப்பட்டிருக் கிறது. ஆர்கோஸை இஸியாவிற்குத் தூக்கிச் சென்ற பெல்லர போன் கதையில் கூறப்பட்ட பயங்கரமான அடையாளங்கள் ஒரு தகட்டில் பதிக்கப்பட்டுள்ளன. வீரர்கள் வாழ்ந்த காலத்தில் எழுதும் வழக்கம் இருந்தது என்னும் உண்மையைச் சில வருடங் களுக்கு முன்னதாகச் சந்தேகப்பட்டார்கள். ஆனால் அந்தப் புலவர் காலங்களில் ஒருவிதத் தவறுதலும் செய்யவில்லை.

ஆனால் அந்த வழக்கங்களில் ஒரு முக்கியமான வித்தியாசம் இருந்தது. மைஸீனியன் சவ அடக்கங்களிலிருந்து, இறந்தவர் களைச் சுடும் வழக்கம் இருந்ததாக ஒரு குறிப்பும் தெரியவில்லை. ஆனால் இதை ஹோமர் காலத்திலிருந்த கிரேக்கர்கள் எப்போது பழக்கத்தில் கொண்டு வந்தார்கள், இறந்தவரை வாசனைத் திரவியங்கள் போட்டு அடக்கம் செய்யும் ஒரு குறிப்புத்தவிர, மற்றப் பாட்டுக்கள் எல்லாம் சவ அடக்கத்தை முழுமையாகவும் குறிப்பிடவில்லை. கிரீஸின் பிற்காலத்தில் இந்த இரு வழக்கங் களும் இருந்து வந்தன. இந்த வித்தியாசத்திற்குக் கூறப்பட் டிருக்கும் குறிப்பு இன்னும் நிச்சயப்படுத்தப்பெறவில்லை. வீரச் செயல்களைப்பற்றிய பாடல்களை எழுதும் புலவர் வாழ்ந்து வந்தது, கிரீஸிலிருந்த ஒரு பழமையான கூடமாகும். 12ஆம் நூற்றாண்டில் ட்ரோஜன் சண்டையைப்பற்றிய பாட்டுக்கள் கிரேக்க நாடு முழுவதும் பாடப்பட்டன. அக்கிலீஸைக் குறித்துப் புகழ்பாடி மற்றும் இல்லியட்டிலிருக்கும் மற்றக் குறிப்புகள் கிரீஸைக் குறிப் பனவாகவும் குறிக்கப்பட்டிருக்கின்றன. அங்கேதான் பிதியாவி லிருந்த அக்கிலீஸினுடைய இராச்சியம் இருந்தது. தெற்குக் கிரீஸிலுங்கூட மைஸீனி, ஆர்காஸ், ஸ்பார்டா, பைலாஸ்-ஆகிய அரண்மனைகளில் ஹோமரின் காவியச் செய்யுட்கள் அடிக்கடி ட்ராயைப்பற்றிப் பாடப்பட்டிருக்க வேண்டும் என்றும் தெரி கிறது.

# 6. ஆதிகால கிரேக்கர்களின் அரசியல் மற்றும் சமூக அமைப்பு

ஹோமரின் பாட்டுக்கள், அரசியல் கூடங்களில் வேலை செய்வதைப்பற்றி நமக்குத் தெரியவைக்கின்றன. இந்தக் கூடங்கள் ஆரியர்களைச் சேர்ந்த பரம்பரையில் வந்தவர்களுக்கோ அல்லது அதைத் தழுவி வந்தவர்களுக்கோ கிரேக்க, ரோமர்கள் மற்றும் ஜெர்மன் மக்களுக்கும் ஒன்றுபோலப் பொதுவாக இருந்தன. அவைகள் அரசனை எல்லோருக்கும் தலைவன் என்பதை எடுத்துக் காட்டுகின்றன. ஆனால் அவன் தன் இஷ்டப்படி அரசாட்சி நடத்துவதில்லை. அவன் பொதுமக்களில் முக்கியமானவர்கள் அடங்கிய ஒரு சபையில் ஆலோசித்து ஆட்சி நடத்துகிறான். அந்தச் சபையும், அரசனும் ஆலோசித்து அமைத்த முடிவுகள் மக்களுடைய கூட்டத்திற்குக் கொண்டு வரப்படும். அரசன், சபை, மற்றும் அரசியல் கூட்டம் - இவை மூன்றிலிருந்தும் ஐரோப்பிய அரசாங்க அமைப்பு வளர்ந்திருக்கிறது. இதிலேதான் பலவிதமான அரசாட்சியும், பெரிய மனிதர்கள் ஆட்சியும், மக்களாட்சியும் வளர்ந்தன.

ஆனால் மிகவும் பழமையான காலத்தில் இந்த அரசியல் பலம் குன்றியும், கண்டிப்பில்லாமலும் இருந்தது. இந்தப் பழமையான சமூகத்தில் உண்மையான பலம் வாய்ந்தது குடும்பம் தான். நாம் முதலில் கிரேக்கர்களைச் சந்தித்தபொழுது அவர்கள் குடும்பம் குடும்பமாகச் சேர்ந்து வாழ்ந்து வந்தார்கள். பரந்த நோக்குடன் பார்ப்பதற்கு அவர்களுடைய கிராமங்கள் ஒரு கூட்டமோ அல்லது ஒரு குடும்பமோ வாழ்வதற்கான இடமாக இருந்தது. அந்தக் குடும்பத்தில் இருந்தவர்கள் எல்லோரும் ஒரு பொதுவான பழைய பரம்பரையிலிருந்து வந்தவர்கள். மற்றும் இரத்த சம்பந்தமாகவும் கட்டப்பட்டிருந்தார்கள். ஆரம்பத்தில் குடும்பத் தலைவனுக்கு, அக் குடும்பத்தின் மற்ற நபர்களைக் கொல்ல உரிமை இருந்தது. இந்த வழக்கம், இராச்சியத்தினுடைய அதிகாரம் வளர்ந்து, மற்றும் குடும்பத்தினுடைய சுயேச்சைக்கு எதிராக நின்ற பிறகு சிறிது சிறிதாக மறைந்துவிட்டது. ஆசியாவின் முன் பகுதியில் இருந்ததைப்போல், தனியாகவும் சுயேச்சையாகவும், இந்தக் கிராமக் கூட்டங்கள் இருக்கவில்லை. இவைகள் பெரியதொரு கூட்டத்தின் பகுதியாக இருந்தன. அதற்குப் பைலி அல்லது ஓர் இனம் என்று பெயர். இந்த இனம் முழு மக்களையும் எளிய முறையில் உணர்த்தும் ஓர் அரசாங்கமாகும். அந்த இனம் வாழ்ந்து வந்த இடத்திற்கு நகரம் என்று பெயர். ஓர் அரசன் பலம் பெற்ற பிறகு, பக்கத்திலிருக்கும்

அரசர்களின் நகரங்களை வென்று ஆள ஆரம்பித்தால் அநேக இனங்கள் உள்ள ஒரு கூட்டம் உண்டாகும். மற்றும் அந்தப் பெரிய இராச்சியத்திலுள்ள பொதுவான கூடங்களில் ஒவ்வோர் இனமும் தன்னுடைய அரசியல் கூடங்களைச் சேர்த்துவிட வேண்டும். இந்தப் பெரிய ஐக்கியத்தில் தன்னுடைய தனிப்பட்ட அடையாளத்தை வைத்துக்கொள்ளும்.

அநேக குடும்பங்கள் ஒன்றுசேர்ந்து ப்ராத்ரா அல்லது சகோதரப்பான்மையுள்ள சமூகமாக ஆகிவிடும். அந்தச் சமூகத்திற்குச் சில பொதுவான மத வழக்கங்கள் இருந்தன. இனமும் கூட்டமும் ஆகிய அமைப்பு, நடுவிலிருந்த ப்ராட்ரி ஆகிய இவை மூதாதைகளிடமிருந்து உருவான ஓர் அமைப்பாகும். இதை மற்ற ஆரியர்களைச் சேர்ந்தவர்களாவது ஒப்புக்கொள்கிறார்கள். ஏனெனில், ரோமர்களிடையேயும், ஜெர்மானியர்களிடையேயும் இதே கூடங்களை நாம் காண்கிறோம். இந்தக் குலம் ரோம சமூகத்தின் அடிப்படையாகும். உதாரணமாக, ஜூலியன் ஜென்ஸ், அட்டிகாவின் ஆல்கமியோனிட்ஸின் ஜீனேஸ்போலச் சமூக முக்கியத்துவம் கொண்டுள்ளது. பைலீ என்பவர் ரோமர்களின் இனத்தைச் சேர்ந்தவர்; மற்றும் ப்ராட்ரி, ரோமின் க்யூரியாவிற்கும், நம்முடைய ஆங்கில நூற்றுக்கும் ஒத்திருக்கிறது. சகோதரப் பான்மையின் முக்கியத்துவம் ஹோமர் இனத்தைவிட்டு விலகிய ஒருவனைப்பற்றி எழுதும்பொழுது, அவனை அண்ணன்-தம்பி இல்லாதவனாகவும், மற்றும் வீடற்றவனாகவும் விவரிப்பதன்மூலம் தெரிகிறது. கிரேக்கர் தாங்கள் வென்ற நிலப்பகுதிகளை எந்தவிதமாகப் பெற்றிருந்தார்கள் என்பதை நோக்குமிடத்து, குடும்பத்தின் முக்கியத்துவம் தெளிவாக நமக்குப் புலப்படுகிறது. நிலம் தனிப்பட்ட சுதந்தர மனிதனுக்கோ, அல்லது ஒரு குறிப்பிட்ட மக்களின் கூட்டத்திற்கோ சொந்தமான சொத்தாக இல்லை. அந்த இனம் அல்லது இனங்களின் அரசன், தனக்குச் சொந்தமான நிலப்பகுதிகளை, அந்த இனத்திலிருக்கும் குடும்பங்களின் எண்ணிக்கைக்குத் தகுந்தவாறு சிறிய பாகங்களாகப் பிரித்தான்; மற்றும் அந்தக் குடும்பங்களுக்குச் சீட்டுக் குலுக்குமுறையில் நிலங்களை அளித்தான். ஒவ்வொரு குடும்பமும் தனக்குச் சொந்தமான நிலத்தை இந்த முறையில் பெற்றது. குடும்பத் தலைவன் அவ்வாறு கிடைத்த நிலத்தை நிர்வாகம் செய்யலாமேயொழிய, அதை விற்பதற்கோ, மற்றவர்களுக்குக் கொடுப்பதற்கோ உரிமை இல்லை. அந்த நிலம் குடும்பத்திற்குச் சொந்தமானது. ஆனால் குடும்பத்திலுள்ள குறிப்பிட்ட ஒரு நபருக்குச் சொந்தமன்று. நில உரிமை வெற்றியின் அடிப்படையில் பெற்றதன்று; ஆனால் மதத்தின் அடிப்படையில் பெற்றதாகும், ஒவ்வொரு

குடும்பமும், இறந்தவர்களை நிலத்திலேயே புதைக்கும். அவ்வாறு புதைக்கப்பட்டவர்களின் நிலம் அவர்களுக்கே எப்பொழுதும் சொந்தமாயிருந்தது. அந்தச் சமாதியைச் சுற்றிலுமுள்ள நிலம் உயிருடன் உள்ள இறந்தவர்களின் உறவினர்க்குச் சொந்தமா யிருந்தது. அவர்கள் தங்கள் தந்தைகளின் சமாதிகளைக் காப் பாற்றுவதையும், பழுதுபார்ப்பதையும் முக்கியமான ஒரு கடமை யாகக் கொண்டிருந்தார்கள்.

அரசன் பிரதம மதகுருவாகவும், பிரதம நீதிபதியாகவும், முதல் போர்த்தலைவனுகவும் அந்த இனத்திற்கு விளங்கினுன். முக்கியமான மதகுருக்கள் இருக்க வேண்டிய சமயங்களைத்தவிர, மற்ற மதச்சடங்குகளில் பொதுவான ஒரு நிர்வாகம் அவன் வகித்து வந்தான். நியாயம் கோரி வந்தவர்களுக்கு நீதி வழங்கி, தன்னுடைய படைகளுக்குத் தலைமை தாங்கிப் போருக்கும் அழைத்துச் சென்றுன். கடவுளிடத்திலிருந்து தங்கள் பரம்பரை வந்ததாகக் கூறுபவர்களின் ஒரு குடும்பத்தைச் சேர்ந்தவன் அந்த அரசனுவான். அவனுக்கும் அவனுடைய மக்களுக்கும் இருந்த தொடர்பு பாதுகாக்கும் கடவுளின் தொடர்புபோல் கருதப்பட் டது. அந்த நகரத்தில் அவனைத் தெய்வம்போல் போற்றி வந் தார்கள். அரசபதவி, தந்தையிடமிருந்து மகனுக்குச் சென்றது. ஆனுல் அரசபதவிக்குத் தகுதியானவன்தானு என்று நோக்குவது ஒரு முக்கியமான நிபந்தனையாகும். மற்றும் தந்தை செய்து வந்த வேலைகளுக்குத் தகுதியற்றவனுகவும், நேர்மையற்றவனுகவும் இருக்கும் ஒரு மகனை அரசனுக ஏற்றுக்கொள்ள மறுக்க மக்களுக்கு உரிமையுண்டு. செங்கோலேந்திய அரசனுக்கு, பொது விருந்து களில் மதிப்பான ஓர் இடமும், போரின்மூலம் அடைந்த பொருள்களில், தேர்ந்தெடுக்கப்பட்ட அதிகமான பங்கும், தெய் வங்களுக்கு அளிக்கப்படும் உணவில் பங்கும் ஆகிய இவைகளில் எல்லாம் சலுகைகள் உண்டு. அரசனுக்குச் சொந்தமாகத் தனிப் பட்ட ஒரு நிலப் பகுதியை அவனுக்காக ஒதுக்கப்பட்டிருந்தது. இது குடும்பம் பெற்றிருந்த நிலப்பகுதிக்கு முற்றிலும் மாறுபட் டிருந்தது.

அரசனுடைய கடமைகள் இவைகள்தாம் என்பது தெளிவா கக் குறிக்கப்படவில்லை. மற்றும் மக்கள் தலைவர்களின் அநுமதி பெறுமல் தன்னுடைய எண்ணத்தைத் திணிக்க அரசனுக்கு அதி காரம் இல்லை. முதியோர்கள் அடங்கிய சபையின் ஆமோதிப்பினை யும், அவர்கள் யோசனைகளையும் அரசன் எப்பொழுதும் கவனிக்க வேண்டும். அநேகமாக அந்தச் சபையின் அங்கத்தினர்கள் எல்லா இனத் தலைவர்களாகவும் விளங்கினர்; அந்த எல்லா இனம்

அல்லது இனங்களின் பிரதிநிதியாக இருந்தனர். ஆனால் சில குடும்பத்தினர், மற்றக் குடும்பத்தினரைவிட உயர்ந்த நிலையையுடையவர்களாக இருந்தார்கள். ஆனால் இப்படித்தான் இது இருந்திருக்க வேண்டுமென்பது, நம்மால் விவரிக்க முடியாத ஓர் உண்மையாகும். அந்தக் குடும்பங்கள் உயர்ந்த நிலையை உடையவை என்று தேர்ந்தெடுக்கப்பட்டு, ஜீயஸ் என்பவனிடமிருந்து வந்த பரம்பரை என்று கருதினார்கள். இந்த உயர்ந்த நிலையை உடையவர்களைக் கொண்டு சபை அமைந்திருந்தது. இந்த முதியோர் சபையில் சக்தி வாய்ந்த அதிகாரத்திலிருந்தே, உயர்ந்த குடும்பங்களைச் சேர்ந்தவர்களைக் கொண்ட ஆட்சி பிற்காலத்தில் தோன்றியது என்பது தெரிகிறது.

கிரீஸின் பிற்கால முன்னேற்றத்திற்கு அரசன் அல்லது சபை இவைகளைவிட மிகவும் முக்கியமானதாக இருந்தது மக்களுடைய கூட்டம்; இதிலிருந்து ஜனநாயகம் வளர்ந்தது. இனத்தின் எல்லாச் சுதந்தர மனிதர்களையும், தேசத்தின் சுயேச்சையான மனிதர்களையும், அநேக இனங்கள் ஒன்றுசேர்த்த பின்பு ஒன்றாகக் கூடினார்கள். இவர்கள் குறிப்பிட்ட காலங்களில் கூடாமல் அரசன் அழைத்தபொழுது, அரசன் தன்னுடைய ஆலோசகர்கள் சொல்வதைக் கேட்பதையும், ஆமோதிப்பதையும் தவிர, அவைகளைப்பற்றி விவாதிக்கவோ அல்லது தானாகவே புதியவைகளைச் சேர்க்கவோ முடியாது. ஒரு கொள்கையை ஆராயக் கூடும் அந்த மக்களுடைய கூட்டம், போருக்காகக் கூடும் கூட்டத்திலிருந்து வித்தியாசப்படவில்லை. அகோரா என்னும் அவையில் அரசனுடைய விருப்பங்களையெல்லாம் இக் கூட்டத்தார் ஒப்புக்கொள்வது, அவர்களின் மௌனத்திலிருந்து அல்லது அவர்களின் கைத்தட்டுதலின் மூலம் தெரியும். அரசன் விரோதிக்கு எதிராக அழைத்துச்செல்லும் படைகளும் மேலே கூறிய கூட்டத்தையேயாகும். படையிலிருந்து சபை தனியான ஒரு நிறுவனம் என்று வித்தியாசப்படுத்திக் கூற முடியவில்லை. அகமெம்னன் தன்னுடைய குடிகளையழைத்து, ட்ராய் போர்க்களத்தில் தன்னுடைய முடிவுகளைத் தெரிவிப்பது அகோராவைப் போன்றது என்று சொன்னால் அது மிகையாகாது. இது அரசசபையைப்போல ஏற்படுத்தப்பட்ட ஒரு போர்ச் சபை அன்று; அதன் முழுப் பொருளில் அது மக்களுடைய சபைதான். ரோமின் கமிஷியா, நமக்குச் சொந்தமான கெம்மட் ஆகிய நிறுவனங்களைச் சேர்ந்தது இக் கூட்டமாகும். இம் மூன்று நிறுவனங்களும் பழைய ஆரிய நிறுவனங்களிலிருந்து வளர்ந்தவையாகும்.

அரசனைச் சுற்றிலும் எப்பொழுதும் ஒரு சில நண்பர்களோ அல்லது வேலையாட்களோ இருப்பார்கள். அவர்கள் அரசனுக்கு

வேண்டிய பணிவிடைகள் செய்து, அரசனுடன் நெருங்கி இருப் பார்கள்; அவர்கள் அரண்மனையிலேயே தங்கி இருப்பார்கள். இந்த நண்பர்கள் ஆங்கில அரசர்களுடன் இருந்த தேன்ஸ் என்ற நிறுவனத்தைப் போன்றிருந்தார்கள். கிரீஸில் அரச பதவி ஊன்றியிருந்ததென்ருல், இந்தக் கம்பானியன்ஸ் என்ற நண்பர்கள் இங்கிலாந்தில் இருந்ததைப்போலவே, பிறப்பாலல்லாமல் தங்க ளுடைய பணியால் அரசனுல் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு புதிய பிரபுக்கள் கூட்டமாக வளர்ந்தனர்.

ஹோமரின் பாட்டுக்களில் காணப்படுகின்ற நாம் பார்க்கும் இந்தப் பழைய அரச பரம்பரை பொதுவாகக் காணுமற்போனு லும், அது சுற்றுப்புறமிருந்த பகுதிகளில் இருந்தது. அந்தப் பகுதி கிரேக்க உலகத்தைவிட, அரசாங்க முன்னேற்றத்தில் பிற்போக்கிலிருந்தது. ஆக்ஸியஸின் கீழ்ப் பள்ளத்தாக்கிலிருந்த மாஸிடோனியாவைச் சேர்ந்த கிரேக்கர்கள், இக் காலம்வரையில் ஹோமரால் சொல்லப்பட்ட அரசாங்கத்தைப் பெற்றிருந்தது போலவே அரச அதிகாரம் தொடர்ந்திருந்தது. கிரேக்கப் போரும், நாட்டை விரிவுபடுத்துதலும் ஆகிய இவை செய்ஸ்டரில் ஆரம் பித்து ஹைபாஸிஸ்ஸில் முடிவடைந்த பின்பு, ஓர் அதிகமான மாறுதலால், ஹோமரால் கூறப்பட்ட அரசாட்சிக்கு நாம் வரு வோம். பழைய அரசாட்சியிலிருந்து வளர்ந்தது சிலபேர் அரசாட் சியும், பலபேர் அரசாட்சியுமாகும். இந்த அரசாட்சி முடிந்த பின்பு, ட்ராயில் வெற்றியடைந்த அக்கிய வீரர்கள் ஆரம்பித்த வேலையை, மாஸிடோனிய வீரர்கள் முடித்தார்கள். இவர்கள் அகமெம்னன், அக்கிலிஸ்-ஆகிய இவர்களைப் போன்ற நண்பர்க ளுடன் சேர்ந்து, அக்கிய அரசனைப் போன்று மக்களுக்கு இருந்து வந்தார்கள் என்பதை நாம் பார்க்கிறோம். ஹோமர் காலத்திய கிரேக்க இராச்சியங்களின் அரசியல் அமைப்பு இம்மாதிரி எளிய முறையிலும், மாருன தன்மையையுடையதாயும் இருந் தது. அநேகமாகப் பெரிய வகுப்பைச் சேர்ந்தவர்கள் கிரீஸுக்குள் வரவில்லை. போரில் வெற்றி யடையும்பொழுது பெரிய வகுப்பு கள் அடிக்கடி ஏற்பட்டன. கிரேக்க சரித்திரத்தைத் தீர்மானிக்கும் ஒரு புதிய வளர்ச்சி அரசர்கள் வாழ்ந்த பிற்பகுதியில் தோன்றிக் கொண்டிருந்தது. பல கிராமங்கள் ஒன்றுசேர்ந்து நகரம் உரு வெடுக்க ஆரம்பித்தது. சமவெளியிலும், பள்ளத்தாக்கிலும் உள்ள கிராமங்களில் தனித்தனியே வாழ்ந்து வந்த மக்கள், ஒரே இடத்தில் சேர்ந்து தங்களுடைய இருப்பிடத்தை அரசனுடைய கோட்டைக்குப் பக்கத்தில் அமைத்துக்கொள்ளுமாறு தூண்டப் பட்டார்கள். நிச்சயமில்லாத காலங்களில், முதலில் ஒன்றுகூடி வாழ்வதனுல் ஏற்படும் பாதுகாப்பை அடையவேண்டும் என்பதே

முதல் நோக்கமாகும். மைஸீனியன் கோட்டைக்குப் பக்கத்தில் எப்படிக் கிராமங்கள் எல்லாம் அமைந்தனவோ, இதுவும் அதைப் போலவே அமைந்திருந்தது. சில சமயங்களில் பல கிராமத்தொகுதி மதிற்சுவரால் சூழப்பட்டிருக்கும். சில சமயங்களில் அதற்கு மேலுள்ள அரணின் பாதுகாப்பே போதுமானதாயிருக்கும். கிராம வாழ்க்கையிலிருந்து நகர வாழ்க்கைக்கு மாறுவது இயல் பாக இருந்தது. ஆனால் எல்லா இடங்களிலும் இப்படி இருக்க வில்லை. அநேக வகுப்பார்கள் கிராமங்களிலேயே தொடர்ந்து வாழ்ந்து வந்தார்கள். நீண்டகாலம்வரையில் நகரங்களை ஏற் படுத்தவில்லை. இந்தக் கிளர்ச்சி அரசர்களால் ஆதரிக்கப்பட்டது. பலம் பொருந்திய அரசர்கள் இந்த அமைப்பைக் கட்டாயமாக்கி னார்கள் என்பதை ஊகிக்கலாம். ஆனால் அவர்கள் இதை ஆத ரித்து வந்தமையால் தங்களுக்குத் தெரியாமலே முடியாட்சியின் அமைப்பைப் பலவீனப்படுத்தினார்கள்; மற்றும் அவர்களின் அழிவுக்கே வழி தோண்டிக்கொண்டார்கள். ஒரு நகர அரசு இயற்கையாகவே குடியரசாக வளர்கிறது.

வீரர்கள் இருந்த காலத்தில், சமூகத்திலிருந்து அரசு முழுமை யும் தோன்றவில்லை. சட்டங்களை இயற்றவோ அல்லது காக்கவோ அரசரால் இயலவில்லை. அந்தச் சட்டங்களும் பழக்கங்களும் ஒரு தனிப்பட்ட மனிதனுடைய நடத்தைக்கு வழிகாட்டின. மற்றும் எந்தச் சமூகமும் அழியாமல் இருக்க இவை அவசியம். இவை மக்களின் அங்கீகாரத்தின்பேரில் காக்கப்பட்டன. சில குற்றங் களைக் கடவுள் கண்டிப்பார். ஆனால் அந்த இனம் முழுமைக்கு மில்லாமல், கொலை புரிந்தவனை எப்படித் தண்டிக்க வேண்டு மென்பது, அந்தக் குடும்பத்திற்கே உரியதாயிருந்தது. அரசன் வழங்கி வந்த நீதி உண்மையில் சமாதானமேயாகும். ஒரு புது மனிதனுக்குப் பாதுகாப்பு அளிக்கவேண்டிய அவசியம் இல்லை. ஓர் அந்நிய இனத்தாரால் இந்தப் புதிய மனிதன் கொலை செய்யப் படவும் கூடும். ஆனால் அவன் அந்த இனத்தில் ஒரு நபருடன் விருந்தாளி நண்பனாக இருந்தால் மாத்திரம், ஸீயூஸ் பாதுகாப்புக் குள்ளாவான். இந்தக் காலத்தில் ஆடு, மாடுகள்தாம் மக்களுக்குச் செல்வம் என்று கருதப்பட்டது. கிரேக்கர்கள் ஒரு தேசத்தில் குடியேறி, முன்பு விவசாயம் நடந்து வந்த இடத்தில் உழுது பயிர் செய்து வந்தபோதிலும், அந்த நிலம் அவர்களுக்குச் செல் வத்தை அளிக்கக்கூடிய நிலையிலில்லை. ஒரு கவசத்தினுடைய மதிப்போ அல்லது ஓர் அடிமையினுடைய மதிப்போ உதாரண மாக எருதுகளின் எண்ணிக்கையில் கூறப்பட்டது. கடற்கொள்ளை ஒரு பொதுவான வியாபாரமாகும். ஏனெனில், இதை அடக்க, பலம் பொருந்திய கடற்படை ஏற்படாததனால், இதைத் தவிர்க்க

முடியவில்லை. ஆகையால் பலர் இந்த வழக்கத்தைக் கையாண்டு தங்கள் வாழ்க்கையை நடத்தினர்கள். ஏனெனில், அதனை அவர்கள் ஒரு வசையாகக் கருதவில்லை. கடற்பிரயாணிகள் ஒரு புதிய கடற்கரையில் இறங்கினுல், அவர்களை இயற்கையாகக் கேட்கும் கேள்வி என்னவெனில், ''வெளி நாட்டவர்களே, எங்கிருந்து நீங்கள் வருகிறீர்கள் ? அல்லது நீங்கள் கடற்கொள்ளைக் காரர்களோ ?'' என்பதாகும்.

## 7. டோரியர்களின் வெற்றி

ட்ரோஜன் போருக்குப்பின் இரண்டு தலைமுறைகளுக்குள் கிரீஸ் நாட்டு வீரர்களின் யுகம் முடிவிற்கு வந்தது என்று சொல்லலாம். இதனையடுத்து ஏறக்குறைய இரண்டு நூற்றுண்டுகளுக்கு இருண்டகாலம் தொடர்ந்தது. பழைய நாகரிகத்தின் மறைவும், கிரேக்க இனத்தவர் ஈஜியனில் பரவுவதும், தாய்நாட்டின் அரசியலில் மாறுபாடுகள் காணப்படுவதும் இக் காலத்தின் இயல்பு. இப் புதிய காலத்திற்கு மாறுவது, வெண்கலக் காலத்திலிருந்து இரும்புக் காலத்திற்கு மாறுவதை ஒத்திருக்கின்றது. மட்பாண்டங்களின் ஆக்கத்தொழிலில் பழைய ஈஜியன் முறைகள் கைவிடப்பட்டு, புதிய முறைகள் கையாளப்படுவதைக் காண்கின்றோம். இப் புதிய முறையில் வடிவ இயலை (Geometric) மேற்கொண்ட கோலங்கள் காணப்படுகின்றன. எனவேதான் கலைகளின் வரலாற்றில் இக் காலத்தை 'வடிவ இயல் காலம்' என்று மிகப் பொருத்தமாகக் குறிப்பிட்டுள்ளார்கள்.

கிரீஸின் வட எல்லைகளில், இல்லீரியர்களின் (Illyrians) வலிமையே மேற்படி மாறுபாடுகளுக்கான ஒரு முக்கியக் காரணமாகும். கிரீஸ் நாட்டு வாழ்க்கையின் உருவத்தையே திருத்தியமைக்கும் சேவையில் முதல் பங்கெடுத்துக் காணப்படும் டோரியர்கள், இல்லீரியர்களின் இனத்தைச் சேர்ந்தவரா யிருந்திருக்கக் கூடும். முன்பு வடக்கிலிருந்து படையெடுத்து வந்த அக்கியர்களைப் போலல்லாது, இவர்கள் தாம் கண்ட நாகரிகத்தைத் தமதாகச் செய்துகொள்ளாமல், அதனை அழித்தனர். டோரியர் குதிரைகளைக் கொண்டு வராமல், காலாட் படையினராகவே போரிட்டனர். இவர்கள் போர்க் கருவிகள் இரும்பாலானவை.

இல்லீரியர்கள் தெற்கு நோக்கிப் பரவியதால் ஈடோலியா(Aetolia)வுக்குக் கேடு விளைந்தது. ஈடோலியன் கடற்கரைத் தீரத்தின் செழிப்பை ஹோமரின் செய்யுட்களில் உரு நிழல்போலக் காண்கின்றோம். 'கடலைச் சார்ந்த ப்ளியுரா (Pleuron)னும் பாறைகளாலாகிய காலிடோ(Calydon)னும்', மற்றும் இங்குள்ள வலிமை பொருந்திய நகரங்களும் வீரர்களின்

யுகத்தில் காணப்பட்ட நாகரிகத்தைவிட மேம்பாடுற்றிருப்பதை நாம் காண்கின்றோம். மீலீகர் (Meleager) காலிடோனியன் காட்டுப் பன்றியை வேட்டையாடுவது போன்ற ஈடோலியன் கட்டுக் கதைகள் கிரீஸ் நாட்டு மக்கள் அனைவருக்கும் உரிய புராணக் கதைகளில் ஓர் அங்கமாக விளங்குகின்றன. கடலைச் சார்ந்த ஈடோலியா மருத நாடு கொடி முந்திரித் தேறலுக்குப் பெயர் பெற்ற நாடாகும். ஈடோலியர் தங்கள் கொடி முந்திரித் தோட்டங்கள்பற்றிக் கொண்டிருந்த இறுமாப்பை அன்னாரின் புராணங்களில் காணப்படும் மன்னர்களின் பெயர்களிலிருந்து தெரிந்துகொள்ளலாம். ஆனால் கிரீஸ் வரலாற்றின் பிற்பகுதியில் இவை யாவும் மாறுதல் பெற்றுக் காணப்படுகின்றன. ஈடோலியா ஒருவகை நாகரிகமற்ற நாடாகவும், இங்குள்ள மக்கள் கிரேக்க மொழியைப் பேசினாலும் மற்றக் கிரீஸ் பகுதிகளில் இருக்கும் மக்களைவிடப் பலவித இயல்களிலும் நாகரிகத்திலும் பின்வாங்கியவர்களாகவும் கருதப்படுவதை நாம் காண்கின்றோம். இதனருகிலுள்ள மற்ற நாடுகளும் இவ்வண்ணமாகவே காட்சியளிக்கின்றன. ஸீயூஸ் வழிபாடு டோடோனாவில் (Dodona) புகுந்ததுமுதல் எப்பைரஸ் (Epirus) அல்லது அதன் பெரியதொரு பகுதி கிரேக்க நாகரிகத்தில் ஈடுபட்டு, கிரேக்க உலகத்திலேயே புகழ்பெற்றதாயும் கண்ணியமானதாயும் தோன்றியது. ஆனால் இந் நாடு திடீரென்று அநாகரிகத்தில் நழுவி விழவே, டோடோனாவிலுள்ள கோயில் திருவிடம்மட்டும் ஓர் எல்லைக் காவல்போல் காணப்பட்டது. இல்லீரியப் படைகளின் திடீர்த் தோற்றமும் வெற்றிகளுமே இவ்விதமான மறைவினுக்குக் காரணம். எப்பைரஸிலும் ஈடோலியாவிலும் உள்ள கிரேக்கர்கள் ஏனைய நாடுகளுடன் போட்டியிடுவதிலிருந்து விலகியதற்குக் காரணம், இவர்களது சோம்பேறித்தனம், சீர்கேடு, பூகோளத்தின் குறைபாடு இவற்றால் அன்று; முரட்டுத்தனமும், அநாகரிகமுமுள்ள ஒருவகை மக்கள் இவர்களைத் தோற்கடித்து இவர்களுடைய உயர்ந்த நாகரிகத்தை ஏற்றுக்கொள்ளாமல், அது அமிழ்ந்துபோகச் செய்ததேயாகும். வரலாற்றின் பின் ஏடுகளிலுள்ள ஈடோலியர்களும், எப்பைராட்டர்களும் இல்லீரியன் இனத்தவர் ஆவர்.

இந்தப் படையெடுப்பு, இங்குக் குடியிருந்த கிரேக்க மக்களை இயற்கையாகவே வேறு குடியிருப்புகளைத் தேடிப்போக வைத்தது. வளைகுடாவைத் தாண்டிச் செல்வது மிகவும் எளிதாயிருந்தமையால், வெளியேறும் ஈடோலியர்கள் பெனியூஸ் (Peneus) நதிக் கரையை அடைந்து அங்குக் குடியேறினர். இதன் பொருட்டே இவர்கள் ஈலியர்கள் (Eleans) அல்லது 'பள்ளத்தாக்கு மனிதர்' (Dalesmen) என்று அழைக்கப்பட்டனர். இவர்கள் இங்குள்ள

முதல் கிரேக்கக் குடிகளாகிய ஈபியன்ஸ் (Epeans) ஆகியோர்மீது தமது ஆதிக்கத்தை நிறுவி, படிப்படியாகத் தமது வலிமையை ஆல்பியஸ் (Alpheus) நதிவரை விரிவாக்கினர். இவர்கள் வசித்த நிலமானது துறைமுகங்களில்லாக் கடற்கரையைக் கொண்ட மணல் வெளியாகும். எனவே, இவர்கள் கப்பல் சார்ந்த மக்களாகத் தோன்றவில்லை. தீபகற்பத்தின் மேற்குச் சமவெளியில் வசித்த இம் மக்கள் பிலோபஸ் (Pelops) என்னும் தமது வீரப் பெருமகனை வாழ்த்திக் கண்ணியப்படுத்துவதில் மிகவும் ஆர்வமுள்ளவர்கள். ஆல்பியஸ் நதி தீரத்திலுள்ள (Pisa) நகரத்தில் இவரின் வழிபாடு ஊன்றியிருந்தது. பிற்காலத்தில், கிரேக்கர்கள் கடல் கடந்து தூர தேசங்களில் பரவியிருந்த காலத்தில், இந்த இடமானது கிரேக்கர்களின் புனிதத் தலமாயிற்று. கிரேக்கத் தெய்வங்களுள் மிகவும் வலிமை பொருந்தியவரும், ஆரிய மக்களில் தலைசிறந்தவருமான இத் தெய்வத்தின் முதல் இடமாக இது கருதப்பட்டு, இப் பெருமானை வணங்கும் எண்ணத்துடன் பரந்த கிரேக்க உலகத்தில் உள்ள அனைவரும் இவண் வந்து தமது பலிகளாலும், விளையாட்டுக்களாலும் இவரை வழிபாடு செய்யவும் தூண்டியது. ஒலிம்பியாவிலுள்ள ஸீயூஸின் கோயிலும், பலி பீடமும் மற்றெல்லாவற்றையும் ஒளி மங்கச் செய்த காலையிலுங்கூட, பிலோபஸ் தம் காணிக்கைகளைப் பெற்று வந்தார். ஒலிம்பியா போன்ற ஒன்று அல்லது இரண்டு இடங்களில் இவருடைய வழிபாடு நடந்து வந்தாலும், முக்கியமாக இவரைப் புராணக்கதை வீரர் என்று பலர் கருதுகின்றனர். அக் காலத்திலும் கிரேக்க நில நூலில் இவருடைய திருநாமம் ஒரு சிறந்த இடத்தைப் பெற்றுள்ளது.[38] கொரிந்தியன் வளைகுடாவின் வாயிலுள்ள இந்த இடத்து மக்கள் வெகு எளிதில் கிழக்கேயுள்ள நிலப்பாலத்தை மறக்கக்கூடிய நிலையிலிருந்ததால் இம் மக்கள் இப் பெரும் தீபகற்பத்தைத் தீவு என்றழைத்திருக்கக்கூடும். பிலோபஸ் வழிபாடு இருந்துவரும் காலையில், 'பிலோபஸ் தீவு' என்ற பெயர் ஆரம்பித்திருக்கலாம். ஆனால் இந்தப் பெயர் தீபகற்பத்தில் துவங்காமல் தீபகற்பத்திற்கு எதிர்க்கரையிலுள்ள ஈடோலியாவில் உதாரணமாகத் துவங்கி, பின் வழக்கத்தின் பயனால் தெற்குக் கிரீஸ் நாட்டிற்கு வழங்கப்பட்டுள்ளது.

எப்பைரஸில் இல்லீரியர்களின் குடியேற்ற விரிவால் இரண்டு பெரிய இயக்கங்களாகிய தெசாலியன், பீயோஷியன் குடிப் பெயர்ச்சிகள் ஏற்பட்டதை அறிகின்றோம். கிரேக்கர்களுள் பின்

[38] 'பிலோபஸ் என்பது பிலோப்பியரின் மூதாதையர் ஒருவரால் ஏற்பட்டது; எனவே, பெலோப் போனீஸஸ் என்பது அவர்கள் வாழும் தீவு' என்பர் சிலர். இப்படி இராது என்று படுகிறது.

னடைந்த வகுப்பைச் சேர்ந்த பெத்தாலாய் (Petthaloi) என்னும் மக்கள்-இவர்கள் ஏனைய திசை மொழியாளர்களால் தெசாலாய் (Thessaloi) என்றும் அழைக்கப்பட்டனர்-மலைகளையும் குன்றுகளையும் கடந்து பீலியோன் (Pelion), பிண்டஸ் (Pindus) என்ற மலைகளுக்கிடையே மேற்கு மூலையிலுள்ள நிலப்பரப்பில் குடியேறினர். சிறிது காலத்திற்கெல்லாம், இவர்கள் தமது வலிமையால் முன்னேறி அங்குள்ள சமவெளிப்பரப்பு யாவையும் தம் வசமாக்கினர். இங்கிருந்த அக்கியர்களைத் தெற்கேயுள்ள பிதியா (Phthia) மலைகளுக்கு விரட்டியடித்தனர். இந்தக் காலம்முதல் அக்கியர்கள் கிரீஸ் வரலாற்றில் யாதொரு பங்கும் பெறவில்லை. இக் காலத்தில் தெசலி என்று அழைக்கப்படும் நாடு முழுவதிலும் சிறிது காலத்திலேயே தெசலியர்களின் பெயர் பரவலாயிற்று. க்ரேனுன் (Crannon), பெகாஸி (Pagasae), லாரிஸா (Larisa), பீரே (Pherae) முதலிய இடங்களில் குதிரைகளை வளர்த்தனர். இவை சுற்றுப்புறங்களிலுள்ள மாவட்டங்களை ஆட்சி செய்யும் பிரபுக்களின் இருப்பிடங்களாயின. தோல்வியுற்ற மக்கள் அடிமைகளாக்கப்பட்டு, 'பணியாளர்கள்' என்று அழைக்கப்பட்டனர். இவர்கள் தமது சொந்த முயற்சியால் நிலத்தைப் பயிர் செய்து, தம் பிரபுக்களுக்குத் தீர்மானம் செய்த ஒரு தொகையைக் கொடுத்து வந்தனர். இவர்களுக்குச் சில உரிமைகள் வழங்கப்பட்டன. உதாரணமாக, இவர்களைப் பிற நாடுகளில் விற்கவோ அல்லது ஒருதலை முடிவாகக் கொலை செய்யவோ முடியாது. ஆனால் இவர்கள் தம்மை வென்றவர்களின்மேல் ஒரு வகையில் வெற்றி கண்டனர். அஃது யாதெனில், இவர்களுடைய அக்கிய மொழி தெசலியர்களால் மேற்கொள்ளப்பட்டதேயாகும். தெசலியர்கள் தம் மொழி மரபுகளை (idioms) விட்டுவிட்டு, தமது ஆட்சிக்குட்பட்ட அக்கிய மக்களின் மொழியை ஆங்காங்கே மாற்றி அமைத்துக் கற்றுக்கொண்டனர். எனவே, வரலாற்றுக் காலத்தில் தெசலியின் திசை மொழியானது, ஆசியா மைனரில் குடியேறிய அக்கியர்களின் மொழியை நெருங்கி ஒத்திருக்கின்றது. பினியஸ் தீரத்தில் தமது பலத்தை நிலைநாட்டியபின், தெசலியர்கள் வடக்கேயுள்ள பேர்ஈபி (Perrhaebi)யர்களையும், கிழக்கிலுள்ள மாக்னிடீஸி(Magnetes)யரையும், தெற்கேயுள்ள பிதியாவைச் சேர்ந்த அக்கியர்களையும் தாக்கி வென்று, அவர்களைக் கப்பம் கட்டும் அடிமைகளாக்கினர். தெசலியின் அரசுகளின் வரலாற்றைப்பற்றி நாம் அறிவது மிகச் சிறியதேயாகும். இந் நாடு நான்கு பெரும்பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. அவை: முதலாவதாக, தென்மேற்கே தெசலியாட்டிஸ் (Thessaliotis) உள்ளது. இது தெசலியர்களின் ஆதிக் குடியேற்றம் அடங்கிய பகுதியாகும். இரண்டாவதாகத் தெற்கே அக்கியர்களைத் தன்னத்தே

கொண்ட பிதியாட்டிஸ் (Phthiotis) என்ற பகுதியாகும்; மூன்றுவது, பெலாஸ்ஜியாட்டிஸ் (Pelasgiotis) என்ற பகுதியாகும். இந்தப் பெயர் பழங்குடிகளான பெலாஸ்ஜியன் என்பவர்களைக் குறிப்பாகக் காட்டுகின்ற ஆவணச் சீட்டாகும்.[39] கடைசிப் பகுதியின் பெயர் இஸ்டியாட்டிஸ் (Histiaeotis) என்பதே. இப் பெயர் இஸ்டியர்களின் நாட்டைக் குறிக்கின்றது. வரலாற்றில் இந்த இஸ்டியர்களின் தனிப்பட்ட இன உறுதியை நாம் காண்கிறோம். எல்லாப் பெருமக்களும் தளர்ச்சியுற்ற அரசியல் அமைப்பு முறையின்கீழ் ஆண்டு வரப்பட்டிருந்தனர். இவ் வமைப்பு சமாதான காலத்தில் உறங்குவதுபோல் காணப்பட்டாலும், யுத்த நெருக்கடிக் காலத்தில் டேகாஸ் (Tagos) என்னும் ஒரு பொதுவான இராணுவத் தலைவனைத் தேர்ந்தெடுக்க உதவியது.

ஆனால் எல்லா மக்களும் இப் புதிய பெருமக்களின்கீழ் அடிமைத்தனத்தில் வாழ விரும்பவில்லை. அக்கியர்களில் ஒரு பகுதியினர் தெற்கே பெலோப்போனீஸஸ்ஸை நோக்கிக் குடிபெயர்ந்து அங்கே கொரிந்தியன் வளைகுடாவின் தெற்குப் பாகத்திலுள்ள கடற்கரையோரத்தில் பல குடியேற்றங்களை நிறுவினர். இவ் விடம் இது முதற்கொண்டு அக்கியா என அழைக்கப்படலாயிற்று. எனவே, கிரீஸ் நாட்டில் இரண்டு அக்கியாக்கள் உள—வடக்கேயுள்ள பிதியா மலைகளில் தற்போது சுருங்கித்தோன்றும் பழைய அக்கியாவும், தெற்கேயுள்ள புதிய அக்கியாவும் ஆவன. தெசலியர்களின் படையெடுப்பால் யூபியாவை (Euboea) நோக்கி மற்றோர் இயக்கம் சென்றதாகத் தெரியவருகிறது. இத் தீவின் வடபாகத்திலுள்ள இஸ்டியாவும் (Histiaea) மத்திய பாகத்திலுள்ள எரிடிரியாவும் (Eretria) பரம்பரைக் கதைகள் கூறுமாறு தெசலியக் குடியேற்ற மக்களால் உண்டாக்கப்பட்டவை; இவ்விதப் பரம்பரைக் கதைகளில் சில உண்மைகள் மறைந்து நிற்கின்றன என்று பல இயற்கைச் சான்றுகள் உள்ளன. ஒலிம்பஸ், ஆத்ரிஸ் (Othrys) ஆகிய இடங்களின் நிலை குலையவும் அங்குப் பல மாறுதல்

[39] 'பிலாஸ்ஜியன்' (Pelasgian) என்ற பெயர் எக் காரணம்பற்றி வந்தது, எதனைக் குறிப்பது என்பது இன்னும் தெளிவாகவில்லை. கிரீஸில், எபிரஸ் (டோடோனு) தெசலி, அட்டிகா, பெலோப் போனீஸஸ் இவற்றுடன் தொடர்புடையதாகவே இது இருக்கின்றது. இதுபற்றி இரு கருத்துக்கள் நிலவுகின்றன: (1) பிலாஸ் ஜியர்கள் கிரேக்கர்களுக்கு முன்னுல் இருந்த மக்கள்; (2) அக்கிய கிரேக்கர்களுக்கு முன்னுல் இருந்தவர்கள். 2ஆம் கருத்துக்கு மாறாக ட்ரோஜன்களின் பிரஜைகளான லெலீஜஸ் முதலியோர் பிலாஸ்ஜியர்கள் எனக் குறிக்கப்படுகின்றனர். (பக்கம் 59 பார்க்க.)

களை உண்டாக்கவும் கூடிய ஒரு பெரிய அதிர்ச்சி ஏற்பட்டதுபோல் எலிகான் (Helicon), சிதிரான் (Cithaeron) முதலிய இடங்களிலும் ஏற்பட்டது. ஆனால் இந்த அதிர்ச்சிகளின் விளைவுகள் ஏக மாறு பாடானவை. பீயோஷியர்களின் பழைய இருப்பிடம் எப்பைரஸி லுள்ள பீயோன் (Boeon) மலையாகும்; இம் மலையின் காரணத் தால்தான் இவர்கள் பீயோஷியர் என அழைக்கப்படலாயினர். இவர்களுடைய திசை மொழி தெசலியர்களின் முதல் திசை மொழி யைச் சேர்ந்ததுபோல் இருக்கிறது. இவைகளில் காணப்படும் எழுத்து உருவங்கள், பண்டைக் கிரேக்கர் பேசிய மொழிகளிலிருந்து 'இந்த வடமேற்கு'த் திசை மொழிக் கூட்டங்களைப் பிரிப்பதற்கு நமக்கு ஏதுவாயிருக்கின்றன. மேற்கிலிருந்தோ அல்லது வடக்கி லிருந்தோ வந்த பீயோஷியர்கள் முதலில் மேற்குப் பகுதிகளைக் கைப்பற்றி, நாளடைவில் இந் நிலப் பகுதியைத் தம்முடைய உறை விடமாக்கினர்.[40] இவர்கள் கீரோனியா (Chaeronea) விலிருந்தும் கொரோனியா (Coronea) விலிருந்தும் முன்னேறிச் சென்று காட் மியர்களுடைய நகராகிய தீப்ஸைக் (Thebes) கைப்பற்றினர். அதன் பின்னர்த் தமது வலிமையை இந் நாடு முழுவதும் பரவச் செய்தனர். இந் நாடு இவர்களுடைய பெயரால் பீயோஷியா என அழைக்கப்படலாயிற்று. ஆனால் தெசலியர்கள் தெசலியில் முழுமையாகத் தம் ஆதிக்கத்தை நிறுவுவதுபோல் இவர்களால் கூடாமற் போயிற்று. ஆர்கோமீனஸ்ஸிலுள்ள செல்வந்தர் களாகிய பெருமக்கள் தமது சுய ஆட்சியைப் பல நூற்றுக்கணக் கான காலத்திற்குப் பேணிவைத்தனர். ஆறும் நூற்றாண்டிற்குப் பிறகுதான் நாம் பீயோஷியாவில் ஒரு சிறிதளவு ஒற்றுமையைக் காண்கின்றோம். தெசலியர்களைவிட இலக்கத்தில் குறைந்துள்ள பீயோஷிய வெற்றிவேந்தர்களின் கோட்பாட்டிற்கும் தெச லியர்களின் கோட்பாட்டிற்கும் ஒரு பெரும் மாறுபாடு உண்டு. அது யாதெனில், பீயோஷியர்கள் தாம் வென்ற சமுதாயத்தை அடிமைகளாக்கவில்லை. அதே சமயத்தில் இவர்கள் தெசலியர் களைப்போல் பழங்குடிகள் பேசும் மொழியைத் தமதாக்கிக் கொள்ளவுமில்லை. மற்றும் அதை மாற்றி யமைத்துக்கொள்ளவு

[40] கிரேக்கர்கள் தமது வரலாற்றைப்பற்றிய ஆராய்ச்சியில் பீயோஷியர்களின் வெற்றியையே காரணமாகவும் தெசலியர் களின் வெற்றியையே விளைவாகவும் கொண்டு வெகு அழகாக இணைத்துள்ளனர். பீயோஷியர்கள் தெசலியில் வசித்தனர். பின் இவர்கள் தெசலியர்கள் குடியேற்றத்தால் தெற்கு நோக்கிச் சென்றனர் என்று இவர்கள் நினைத்ததுமன்றி இதனை மெய் என்று நிரூபிப்பதிலும் ஈடுபட்டனர். பீயோஷியாவை அடையு முன் தெசலியில் பீயோஷியர்கள் சிலகாலம் தங்கியிருந்தனர் என்பதில் ஓரளவுக்கு உண்மை உண்டு.

மில்லை. ஆனால் வெற்றி பெற்றவர்களுடைய மொழிமரபும், வெல்லப்பட்டவர்களின் மொழிமரபும் ஒன்றோடொன்று இணைந்து, ஒரு புதிய பீயோஷியன் திசை மொழியை உண்டாக்கின.

பீயோஷியர்களின் வெற்றி சிற்சில பழங்குடி மக்களை ஆங்காங்கே சிதறும்படி செய்ததில் ஒருவித வியப்பும் இல்லை. காட்மியர்களும், லீபாடியா (Lebadea) மக்களும், ஏனையவர்களும் ஆசியா மைனரில் அயோனியா (Ionia) குடியேற்றங்களில் பங்கு பெற்றது இதன் விளைவேயாகும். இதுவுமின்றிப் பீயோஷியர்களின் சடுதி வரவு அவர்களின் அருகிலுள்ள மக்களை நிலைகுலையச் செய்து, வேறு புதிய குடியிருப்புகளை ஏற்படுத்தத் தூண்டியது.[41]

பீயோஷியாவிற்கு மேற்கே, பார்னஸஸ் மலையைச் சுற்றியுள்ள போக்கியர்(Phocians)களுடைய பூமியிலே சின்னஞ் சிறு இட மாற்றங்கள் ஏற்பட்டன. ஒரு சமயத்தில் ஈடா மலைக்கும் கொரிந்தியன் வளைகுடாவுக்கும் மத்தியிலுள்ள இந்தப் பெரிய மலைப்பாகமும், போசிஸ் நாட்டில் ஒரு பெரிய பாகமும் டோரியரின் முழு ஆதிக்கத்துக்குட்பட்டதுபோல் தோன்றியது. அதி சீக்கிரத்தில் இவர்களில் பெரும்பாலோர் வனப்புள்ள குடியிருப்புக்களைத் தேடித் தூரதேசம் செல்லலாயினர். இவர்களில் ஒரு சிறிய பகுதியினரே ஈடா மலைக்கும் பார்னஸஸ் மலைக்குமிடையே ஒரு படுகை(Basin)போல் காட்சியளிக்கும் இப் பிரதேசத்தில் தங்கி, கிரேக்க வரலாற்றுக் காலம் முழுவதிலும் தாங்கள் ஒரு பாகத்தையும் எடுத்துக்கொள்ளாவிட்டாலும், தங்களது சிறப்பு மிகுந்த பெயரைப் போற்றி வந்தனர். இந்த டோரியர்கள் அப்பலோவின் 'பாறைகளாலாகிய வாசற்படி' என்றழைக்கப்படுகின்ற டெல்பி(Delphi)யையும் தம் வசமாக்கி அங்கே இத் தெய்வ வழிபாட்டில் ஆர்வங்கொண்ட சில குடும்பங்களைக் குடியேற்றியதாகவும் சொல்லப்படுகிறது. இந்த நாடோடி டோரியர்கள் போன பின்னரே போக்கியர்கள் சரியாக மூச்சு விடமுடிந்தது. ஆயினும், டோரிஸ் (Doris) இவர்கள் கையிலிருந்து நழுவி விட்டது; டெல்பியைத் தம் வசமாக்க, நாம் பின்னால் பார்க்கப் போவதுபோல், இவர்கள் பலதடவை முயன்றனர். அதே

[41] அபான்டியர்கள் (Abantes) போஸிஸ்(Phocis)ஸிலிருந்து வட யூபியாவிற்கும், டிரையோப்(Dryopes)ஸியர்கள் ஈடா (Oeta) மலைப் பகுதிகளிலிருந்து தென் யூபியாவிற்கும், பின் அங்கிருந்து இவர்கள் ஆர்கோலியன் கடற்கரையை அடைந்து அங்கே அஸ்ஸைன் (Asine), எர்மியோன் (Hermione) முதலிய இடங்களுக்கும் சென்று குடியேறினார்கள் என்று சொல்லப்படுகின்றது.

சமயத்தில் போக்கியர்கள் தமது அயலகத்தார் மேலும் ஒரு கண் வைக்கும்படி நேர்ந்தது. பிற்காலத்தில் லோக்கிரியர்கள் (Locrians) மூன்று பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு அப் பிரிவுகளின் மத்தியில் போக்கியர் நாடு ஓர் ஆப்புப்போல் கிடக்கிறதை நாம் காண்கின்றோம். இவைகளில் ஒரு பிளவான ஓசோலியன் லோக்கிரியர்கள் (Ozolian Locrians) போஸிஸ்ஸுக்கு மேற்கே கொரிந்தியன் வளைகுடாவின்மீது பரவியிருக்கின்றனர்; மற்ற இரண்டு பிளவுகளும் போஸிஸ்ஸுக்கு வடகிழக்கே யூபியன் கடற்கரையிலே காணப்படுகின்றன. ஓஸாலியர்கள் கிரீஸ் மக்கள் யாவரினும் மிகவும் பின்னடைந்தவர்கள். வடக்கிலுள்ள லோக்கிரியர்கள் த்ரோனியன் (Thronion), ஒப்பஸ் முதலிய நகரங்களை ஆண்டு வந்த அஜாக்ஸ் (AjaX) என்னும் வீரரின்கீழ் இலியட்டில் (Iliad) இடம் பெற்றனர். யூபியன் கடற்கரையை அடுத்துள்ள நீண்ட நிலப்பகுதியே ஒருகால் லோக்கிரிஸ் ஆக இருந்திருக்கக்கூடும். கடலுக்குச் செல்லும் வழி ஒன்றை விரும்பிய போக்கியர்கள் இதனை இரு கூறுக்கினர்.

பர்னஸஸ் பகுதிகளிலிருந்து டோரியர்கள் படிப்படியாக வெளியே கிளம்பியிருக்கக்கூடும். இவ் வெளியேற்றம் கடல்மூலமாக நிகழ்ந்தது. அவர்கள் கடலைக் கடப்பதற்காகக் கப்பல்களைக் கட்டுவித்தனர் —'கப்பல் கட்டும் தளம்' என்று அர்த்தம் கொள்ளும் நாபாக்டஸ் (Naupactus) இவர்களது துணிகரச் செயல்களை விளக்கும் ஆவணக்கட்டாகும். இவர்கள் நாபாக்டஸிலிருந்து பெலோப்போனீஸஸைச் சுற்றி, கிரீஸின் தென்கிழக்குப் பாகங்களை அடைந்தனர். துணிந்த வீரம்பொருந்திய கூட்டமொன்று பல இனத்தவருடைய கிரீட் தீவிற்கு மற்றும் ஒரு புதிய இனத்தைப் புகுத்தியது. மற்றவர்கள் தேராவிலும் (Thera) மீலாஸிலும் (Melos) குடியேறினர். மற்றும் சிலர் ஈஜீயன் பிரதேசத்தைத் தாண்டி ஆசியா மைனருக்குத் தெற்கில் தமக்கென ஓர் இருப்பிடத்தைத் தேடிக்கொண்டனர். இவர்கள் இங்கே அநாகரிகமுள்ள மனிதர்கள் மத்தியில் வசித்து, மற்றக் கிரேக்கர்களால் மறக்கப்பட்டு, தாமே தனியொரு வாழ்க்கையை நடத்தி, கிரேக்க வரலாற்றில் இடம் பெருதிருந்தனர். ஆனால் இம் மக்கள் தமது கிரேக்கப் (Hellenic) பேச்சு மொழியைப் பேணி வந்தனர். இவர்கள் பாம்பிலியர்கள் (Pamphylians) என்றழைக்கப்பட்டனர். இப் பெயர் டோரியரின் ஆரம்பத்தைக் குறிக்கின்றது. ஏனென்றால், பாம்பிலியர்கள் என்னும் பதம் டோரியர்களின் மூன்று குலங்களில் (Tribes) ஒன்றின் பெயராகும். டோரியர்கள் எங்கும் தமது குலப் பெயர்களினால் ஏற்றுக்கொள்ளப்பட்டது தெரிந்த விஷயமே.

டோரியர்களின் மற்ற வெற்றிகள் பெலோப்போனீஸஸில் கிடைக்கப்பெற்றன. இவர்கள் வடக்கிலும் மேற்கிலும் தாக்க இயலாதவர்களாய், தெற்கு, கிழக்கு முதலிய பாகங்களைத் தாக்க முன்வந்தனர். இங்கே இவர்கள் மூன்றுதரப்பட்ட வெற்றிகளைக் கண்டனர். அவையாவன: லாக்கோனீயா (Laconia), ஆர்காலிஸ், (Argolis), கொரிந்து (Corinth) இவற்றை முறையே கைப்பற்றுதல் ஆகும். டோரியர்கள் வளம்கொழிக்கும் யூரோடாஸ் (Eurotas) நதிப்பள்ளத்தாக்கைக் கைப்பற்றி, தமது இனத்தைக் கலப்பின்றி வைத்துக்கொள்ளும் எண்ணத்துடன் அங்குள்ள மக்களுடன் சேராமல், அம் மக்களை அடிமைகளாக்கினர். மற்ற இடங்களுக்குப் படை எடுத்துச்சென்ற டோரியக் கூட்டங்களைக்காட்டிலும் லாக்கோனியாவிற்குப் படையெடுத்துச் சென்ற கூட்டம் எண்ணிக்கையில் மிகப் பெரியதா யிருந்திருக்கக்கூடும் என நம்பவேண்டும். மற்றக் கிரேக்க இனக் கூட்டங்களிலிருந்து டோரியரைப் பிரித்துக் காட்டும் ஒரு முக்கியப் பண்பு, அவர்களுடைய நடத்தையே யாகும் (character). இந்தப் பெரிய பண்பு லாக்கோனியாவில் நல்ல முறையில் காணப்பட்டதுமன்றி நன்ருகவும் வளர்ந்தோங்கியது. லாக்கோனியாவிலுள்ள டோரியர்கள் ஏனைய டோரியர்களைவிட இனத்தில் தூய்மையானவர்கள்.

ஆர்காலிஸ்ஸில் இவர்களுடைய வரலாறு வேறு வழியில் சென்றது. டிமினஸ் (Temenos) என்னும் மன்னரின் கொடியின்கீழ் இங்குப் படையெடுத்த டோரியர்கள் கடும்போர் புரிய வேண்டியிருந்தது. ஆதலின், இவர்களின் வெற்றி அங்குள்ளவர்களை அடிமைகளாக்க இயலாமல் அவர்களுடன் இணைந்துபோகச் செய்தது. ஆர்கைவ் அரசு டோரிய முறைப்படி டோரியர்களுடைய மூன்று குலங்களாகிய அயல்லிஸ்(Hylleis), பாம்பைலி (Pamphyli), டைமேனஸ் (Dymanes) ஆகியவைகளைக்கொண்டு அமைக்கப்பட்டிருந்தாலும், டோரியருடைய வெற்றிகளின் மற்றச் சின்னங்கள் யாவும் தென்படுகிறதாகத் தோன்றவில்லை. இவ் வெற்றியின் காலத்தில்தான் மைஸீனியின் வீழ்ச்சியும் நிகழ்ந்திருக்கும் என்று நாம் ஒருவாறு பொருந்தக் கூறலாம். மைஸீனியும், டிரின்ஸும் திடீரென்று நெருப்புக்கு இரையானது ஓர் உண்மை நிகழ்ச்சி. இக் காலத்திற்குப் பிறகேதான் தனது உயரிய சேம அரணைக் கொண்டு ஆர்காஸ், ஆர்கைவ் சமவெளி தீரத்தில் எதிர்ப்பில்லாத இராணிமாதிரி காட்சியளிக்க ஆரம்பித்தது. மட்டமானதும், சேம அரண் அல்லது கோட்டைச்சுவர் முதலியன இல்லாததுமான ஸ்பார்டா(Sparta)வை லாக்கோனியன் பள்ளத்தாக்கிலே ஓர் உயர்ந்த பதவியை அடையச் செய்தது, டோரியர்கள் தெற்கில் கண்ட பெரியதொரு வெற்றியாகும்.

டோரியர்களின் கப்பல்கள் சரோனிக் வளைகுடாவினுள் ஓட்டிச் செல்லப்பட்டன. இது புராணக்கதையில் ரைடர் (Rider) என்பவரின் புதல்வனாகிய ஏராண்ட் (Errant) என்னும் ஓர் அரசிளங்குமாரனது துணிகரச் செயலாகும். இவன் பூசந்தியில் இறங்கி அங்குள்ள உயர்ந்த குன்றில், இந்தத் தீபகற்பத்திற்கே திறவுகோல் எனக் கருதப்படும் அக்ரோ கொரிந்தைத்(Acro Corinth) தம் வசமாக்கினார். இச் செயலே கொரிந்து பட்டணத்தை எழச் செய்தது. இங்கேயும், ஆர்காலிஸ்ஸில் நடந்தபடி ஒருவரும் அடிமையாக்கப்படவில்லை; அதே நேரத்தில் வெற்றி வேந்தருக்கும் தோல்வியுற்றோருக்கும் இடையே வித்தியாசமொன்றும் காணப் படவில்லை. கடல்களுக்கிடையே அமைந்துள்ள இந்த நில இயல் சம்பந்தப்பட்ட இடம் கொரிந்து நகர மக்கள் வாணிபத்தில் சிரத்தை எடுக்கத் தூண்டிற்று. கொரிந்து நகர வரலாறு, டோரியர்கள் மனவன்மையும், திறமையும் வாய்ந்த வியாபாரிகள் என்று எடுத்துக்காட்டுகின்றது.

ஆர்காஸிலிருந்து வடக்கே டோரியர்கள் அசோப்பஸ் நதி (Asopus)யின் கீழ்க்கரையில் சிக்கியான் என்ற இடத்திலும், அந் நதியின் மேல்கரையில் பிலியஸ் (Phlius) என்ற இடத்திலும் இரண்டு முக்கியக் குடியேற்றங்களை நிறுவினார்கள். நமக்கே எப்படி என்று தெரியாத விதத்தில், ஜெரேனியா (Geraneia) மலைக்கப்பால் சாலமிஸ்ஸின் (Salamis) மேற்குக் கரையை நோக்கிக் கொண்டு இருப்பதுபோல் தோன்றும் ஒரு மலைக்குன்றின்மேல் மற்றொரு டோரியன் நகரம் எழும்பியது. இதன் பெயர் நிசா (Nisa)வாகும். வீரர்களின் காலத்தில் இக் குன்றின் சிகரத்தில் ஓர் அரண்மனை இருந்து வந்ததன்பொருட்டு இக் குன்றிற்கு 'அரண்மனை' என்று அர்த்தம் கொள்ளும் மேகாரா என்ற பெயர் சூட்டப் பட்டது. பழைய இதன் துறைமுகமாகிய நிசியா(Nisaea)வில் பழைய பெயர்[42] பதுங்கி மறைந்து தோன்றுகிறதே ஒழிய வரலாற்றுக் காலத்தில் மற்றெந்தப் பெயர்களும் வழங்கப்படவில்லை. பீயோஷியாவிலிருந்து அரண்போல் தோன்றும் சிதிரோன் மலைத் தொடரின் மேற்குப்பாகத்தால் பிரிக்கப்பட்டிருந்தாலும் டோரியர் தோன்றுவதற்குமுன் மேகாரா வடக்கிலுள்ள பீயோஷியாவுடன் அரசியல் காரியங்களில் சம்பந்தப்பட்டிருந்தது. ஆனால் பிற்காலத்தில் டோரியர்களுடைய மேகாரா பெலோப்போனிஸஸ்ஸுடன் அரசியல் காரியங்களில் இணைந்து காணப் பட்டது.

[42] இலியட் இரண்டாவது புத்தகத்தில் காணப்படும் பட்டியலில் 508ஆம் வரியில் பேணிவைக்கப்பட்டுள்ளது.

சரோனிக் வளைகுடாவின் மத்தியில் கூம்பிய வடிவமுள்ள மலையைக் கொண்ட ஈகைனு தீவும் டோரியர்களுடையதாயிற்று. எபிடாரஸ்(Epidaurus)ஸில் உள்ள டோரியக் குடியேற்றக்காரர் களால் ஈகைனு கைப்பற்றப்பட்டது. ஆயினும் ஆர்காலிஸ் கைப்



படம் 14 : தங்கப் பதக்கம்
ஒன்பதாம் நூற்றுண்டு [ஈகைனு(Aegina)வில் கண்டுபிடிக்கப்பட்டது.]

பற்றப்பட்ட இருநூறு அல்லது அதற்கு மேலாகிய ஆண்டுகளுக் குள் ஈகைனு டோரியர்வசம் வரவில்லை என்பது குறிப்பிடத் தக்க தாகும். ஈகைனுவில் ஆதிக்குடிகளும், குடியேறிய புதிய மக்களும் இணைந்து வாழ்ந்தது உண்மை. இப் பெரிய மாறுதலுக்கு முன்னும் பின்னும் இங்குள்ள மக்கள் துணிவுள்ள வீரியம் படைத்த மாலுமிகளாய் விளங்கினர்.

கிரீட்டிலும் லாக்கோனியாவிலும், நாம் பின்பு பார்க்கப் போவதுபோல், டோரியர்களுடைய தனிப்பட்ட சில நிலையங் களைக் (Institutions) காண்கின்றோம்; ஆனல் இவை ஆர்காஸ் அல் லது கொரிந்துவில் காணப்படுவதில்லை. இவைகள் எப்படியிருந்த போதிலும் எல்லா டோரியக் குடியேற்றங்களும் தமது பொது வான டோரிய ஆரம்பத்தை நினைப்பது வழக்கம். லாக்கோனி யாவை வென்ற டோரியர்கள் பார்னஸஸ் மலைநாட்டிலுள்ள புகழ்ச்சி என்பதையே அறியாத, டோரிஸ்ஸைத் தம் தாயகம் என்று உணர்ச்சிகொண்ட பாசத்துடன் நோக்கிவந்தனர்.

ஆங்காங்கே காணப்படும் டோரியர்களின் மூன்று குலங்களின் பெயர்கள் கிரீஸிலுள்ள டோரியர்களைத் தாம் ஓரினம் என எண்ணச் செய்திருக்கலாம்; ஆனால் ஈஜியனுக்கப்பால் தோன்றிய ஒரு புதிய டோரிஸ் நகரமே இந்த டோரிய நாமத்தை ஒரு நிலையான தேசியப் பெருமைக்கு உயர்த்திற்று.

## 8. கிழக்கு ஈஜியனில் கிரேக்கர் பரவுதல்

வீரர்களின் யுகம் முடிவடையும் காலத்தில், ஈஜியத் தீவுகளில் கிரேக்கர்கள் பரவவும், ஆசியா மைனரின் மேற்குக் கரைகளில் புதிய குடியேற்றங்களை நிறுவவும் ஆரம்பித்தனர். இவ் வகையான பரவுதல் கிட்டத்தட்ட ஒன்றரை நூற்றாண்டுகளுக்கு நடந்தது. டோரியர்களுடைய படையெடுப்பும், வட கிரீஸில் ஏற்பட்ட குடிப் பெயர்ச்சிகளும் இந்த இயக்கத்தை மேம்படச் செய்தன வல்லாமல், சில பகுதிகளில் இவைகளின் விளைவுகளே இவ் வியக்கத்திற்கு நேரடியான காரணங்களாகவும் இருந்தன. ஆனால் வெளியார்களின் வற்புறுத்தலே யில்லாமல்கூட இந்த இயக்கம் துவங்கி யிருக்கலாம். ஒரு வேளை மட்டற்ற மக்கள் தொகை இவ்வியக்கத்திற்கு ஒரு காரணமாயிருந்திருக்கலாம். மேலும், ஆசியாவின் கரையிலுள்ள செழிப்பான சமவெளிகளும் ஆறுகளுக் கிடையேயுள்ள பள்ளத்தாக்குகளும் தீரம் பொருந்திய இவர்களுக்கு ஆசையூட்டியிருக்கலாம். அதே சமயத்தில் இவர்களை அங்கு எதிர்த்து நிற்க வலுவில்லாத அரசு இருந்தது மற்றுமொரு காரணமாயிருக்கலாம். மேற்கில் தமது உயர்ந்த பதவியிலிருந்து ஹிட்டைட் பேரரசு வீழ்ச்சி யடைந்தது. இதற்குப்பின் இப்பேரரசு இப்பதவிக்கு வரவே முடியவில்லை. ஹோமரின் செய்யுட்களில் ஒரு சிறிதளவுகூட இப் பேரரசு காணப்படுவதில்லை.

ட்ரோஜன் யுத்தத்திற்கு முன்பாக ரோட்ஸ் தீவிலுள்ள பழைய குடியேற்றங்கள் நீங்கலாக ஈஜியன் கடலைக் கடந்து புதிய வீடுகளைத் தேடிப்போன முதல் கிரேக்கர்களும் அக்கியர்களும், தெசலியின் குன்றுகளிலும் சமவெளிகளிலும் மற்றும் ஸ்பெர்சியஸ் (Spercheus) சமவெளியிலும் உள்ள அவர்களுடைய கூட்டாளிகளுமாவர். இவர்களுடைய படையெடுப்புகள் நிலத்தால் சூழப்பட்ட பேகாஸி (Pegasae) விரிகுடாவிலிருந்து புறப்பட்டிருக்கலாம். கிரேக்கர்களுடைய முதல் கடல் தீரச் செயலானது ஐயாவோல்காஸ்[43] (Iavolkos) துறைமுகத்துடன் பிந்திய காலத்தில் தோன்றிய மரபு வழக்கு ஒன்றால் இணைக்கப்பட்டுள்ளது.

[43] பொன்னான கம்பளி ஆட்டு மயிரைத் தேடி, தெசலிய வீரர்களை மாலுமிகளாகக் கொண்ட புராண ஆர்கோ இங்கிருந்துதான் புறப்பட்டதாகச் சொல்லப்படுகிறது.

அக்கியர்களுடன் அவர்களுடைய தோழர்களாகவும் நேச தேச மக்களாகவும் ஈயோலியர்கள் சென்றூர்கள். சிலர் 'ஈயோலியன்' என்பது 'அக்கியன்'[44] என்பதன் மற்ருெரு பெயர் என்று நம்புகின்றனர். ஆனுல் அவர்கள் அக்கியர்களுக்கு நெருங்கிய பந்துக்களாக இருந்தபோதிலும் அவர்களை வேருகக் கொள்வது எல்லாவிதத்திலும் நலம். ஈஜியன் கடலைக் கடந்து சென்றவர்கள் தெசலியிலிருந்து குடியேறியவர்களா அல்லது மற்றுமொரு கடற்கரையாகிய கொரிந்து வளைகுடாவின் வடக்குக் கரையில் வசித்த ஈயோலியர்களா என்று தீர்மானிக்க முடியாததாயிருக்கின்றது. இங்குள்ள ஈயோலியர்கள் எப்பொழுதும் ஈடோலியர்களுடன் போர் புரிந்து வந்தது நமக்குத் தெரிந்த செயலாகும். ஈடோலியர்கள் கடைசியில் மேல் கையைப் பெற்று முழு நாட்டிற்கும் தமது பெயரையே ஈந்தனர். ஒருவேளை தம் பகைவர்களின் வற்புறுத்தல் இவர்களில் சிலரைக் கடலுக்கப்பால் புதிய வீடுகளைத் தேடிச்சென்ற அக்கியர்களுடன் சேரும்படி தூண்டியிருக்கலாம்.

அக்கிய, ஈயோலியத் துணிகர வீரர்கள் ஆசியா மைனரின் வடக்குப் பாகத்திலுள்ள லெஸ்பாஸ் தீவிற்கும் அதற்கு எதிரான கரையிலிருக்கும் நிலப்பகுதிகளுக்கும் தம் நாவாய்களை ஓட்டிச் சென்றனர். இங்கே இந்த ஆசியாவின் மண்ணிலே முதல்முதலான கிரேக்கக் குடியேற்ற நாட்டை நிறுவினுர்கள். இதுதான் இன்னமும் ஆயிரம் ஆண்டுகள் கழிவதற்குமுன் கிரேக்க வெற்றி வீரர்களை இந்திய சமுத்திரம்வரை ஏற்றிச்செல்லும் இயக்கத்தின் துவக்கமாகும். மேற்கு ஆசியா மைனரின் கடற்கரை நிலங்கள் கிரீஸின் கடற்கரைப் பிரதேசத்தைப்போலவே கடலைச் சார்ந்து வசிக்கும் மக்கள் வசிப்பதற்குத் தகுதியாயிருக்கின்றன. பல நதிகளின் பள்ளத்தாக்குகள் மலைத்தொடர்களினுல் பிரிக்கப்பட்டிருக்கின்றன. இம் மலைத்தொடர்கள் நில முனைகளுக்குள் சென்று ஆழமான விரிகுடாக்களை உண்டுபண்ணியுள்ளன. இந்த நில முனைகள் தொடர்ந்து சென்று தீவுகளாக மாறியுள்ளன. ஹெர்மஸ் (Hermus), கெய்கஸ் (Caicus) முதலிய நதிகளின் பள்ளத்தாக்குகளுக்கு வடக்கே குன்றுகளாலாகிய தொடர் ஒன்று லெஸ்பாஸ் தீவுவரை செல்கின்றது. ஹெர்மஸ் பள்ளத்தாக்கும் கெய்ஸ்டர் (Cayster) பள்ளத்தாக்கும் மலைகளால் பிரிக்கப்பட்டுள்ளன. இம் மலைகள் இறுதியில் சியாஸ் (Chios) தீவில் முடிவு பெறுகின்றன. கெய்ஸ்டர் பள்ளத்தாக்கு மியாண்டர் (Maeander) பள்ளத்தாக்கிலிருந்து ஒரு மலைத்தொடரால் பிரிக்கப்படுகிறது.

[44] இது 'அக்கியோஸ்' என்பதன் 'குறுகிய பெயர்'.

இந்தத் தொடர் கடைசியில் சேமாஸ் (Samos) தீவில் முற்றுப் பெறுகிறது. மியாண்டர் பள்ளத்தாக்குக்குத் தெற்கே விரி குடாக்களும் தீவுகளும் இருக்கின்றன. ஆனால் நிலப்பாகத்திலுள்ள மலைகள் ஆறுகளினால் உடைவுபடாமலிருக்கின்றன. ஹெர்மஸ், கெய்கஸ் நதிகளின் முகத்துவாரப் பகுதிகளைக் கிரேக்கர்கள் உறைவிடமாக்கியது இதன் விளைவுகளால்தான் என்று நமக்குத் தெரிய வந்தது. மைஸியன் (Mysian) ஆதிக்குடிகளிடமிருந்து கடற்கரை நிலங்களைப் படையெடுத்தவர்கள் கைப்பற்றினார்கள். தாம் பாது காக்கக்கூடிய பிட்டானி (Pitane), மிரினா (Myrina), சைம் (Cyme), ஈஜீ (Aegae), பழைய சிமிர்னா (Old Smyrna) முதலிய வலிமை மிகுந்த இடங்களை இவர்கள் பிடித்தார்கள். ஆறுகளின் முகத் துவாரப் பாகங்களிலிருந்து இவர்கள் உள்ளேற ஆரம்பித்தனர். ஹெர்மஸ் நதியின்மேல் சிபிலஸ் மலையின் அடிவாரத்திற்குப் பக்கத்தில் மக்னீஸிய (Magnesia) என்னும் நகரை நிறுவினார்கள். ஒரே சமயத்தில் இவை யாவும் செய்து முடிக்கவில்லை என்பதை நாம் சொல்லவே வேண்டியதில்லை. இவை யாவும் பல ஆண்டு களுக்கிடையே நடந்த வேலைகளாகும். மேலும், இவை தாய் நாட்டிலிருந்து பல தடவை எடுக்கப்பட்ட படையெடுப்பு களின் விளைவுகளுமாகும்.

பெரிய கடல் அலையைப்போன்ற அக்கியன் குடிப்பெயர்ச் சிக்குப்பின் மற்றுமோர் அலை தோன்றியது. இந்த அலையானது அட்டிக்க, ஆர்காலிஸ் கடற்கரைப் பிரதேசத்திலிருந்து புறப் பட்டது. அக்கியர்களுடைய குடியேற்றங்களுக்குத் தெற்கே புதுக் குடியேற்றங்கள் நிறுவப்பட்டன. ஹெர்மஸ், கெய்ஸ்டர் நதிகளுக்கிடையேயுள்ள கவர்முள் போன்ற இரு பிரிவுள்ள தீப கற்பமும், அதற்கு அடுத்தாற்போலிருக்கும் ஷியாஸ் தீவும், கெய்ஸ்டர், மியாண்டர் பள்ளத்தாக்குகளும், சேமாஸ் தீவும், லாட்மாஸ் (Latmos) மலைக்குத் தெற்கிலுள்ள தீபகற்பமும் சமுதாயங்களால் நிறைந்தன. இச் சமுதாயங்கள் யாவும் சேர்ந்து வடக்கிலிருந்த பழைய தொகுதியைக்காட்டிலும் முற்றிலும் வேறுபாடான ஒரு தொகுதியை உண்டாக்கின. ஒவ்வொரு குடியேற்றத் தொகுதியும் ஒரு கூட்டான பெய ரால் அழைக்கப்பட்டது. வடக்கில் குடியேறினவர்களுள் அக்கியர்கள் அதிகப் புகழ் பெற்றவர்களானபடியால் வடக்குத் தொகுதியை அக்கியன் என்று அழைக்க நாம் எதிர் பார்ப்போம். ஆனால் பழங்காலத்தில் இவ்விதமாகப் பெயர்கள் வழங்கப்படவில்லை. தங்களுக்குள்ளே அரசியல் ஒற்றுமையில்லாத பல நகரங்கள் அல்லது குடியேற்றங்கள் ஒரே இனத்தைச் சேர்ந்த ஒரே மொழியைப் பேசும் மக்களைக் கொண்டுள்ளதால்




படம் 15 : கிழக்கு ஈஜியனில் கிரேக்கக் குடியேற்ற நாடுகள்

மட்டும் வெறுமனே கூட்டுச் சேர்ந்துள்ள இவைகள் பொது வாகத் தாங்களே ஒரு பொதுவான பெயரைத் தேர்ந்தெடுப்ப தில்லை. ஆனுல் நடைமுறையில் இது எப்படி நடக்கின்றது என்ருல், இவர்களின் பொதுவான பெயர் இவர்களுக்கு அயலா ராலேயேதான் கொடுக்கப்பட்டிருக்கிறது. இந்த அயலார்கள் வெளியிலிருந்து பார்வையிடுவதனுல், அந்தத் தொகுதியில் உள்ள மக்களுக்குத் தெரிந்துள்ள வேறுபாடுகள் இவர்களுக்குத் தென் படாததனுல், இவர்களை ஒரு தொகுதியினர் என்று கருது கின்றனர். தொகுதியின் ஓர் உறுப்பினரது பெயரைத் தற்செய லாக எடுத்து அதனை அந்தத் தொகுதி முழுவதற்கும் கொடுப்பது அடிக்கடி நடந்து வத்தது. இவ்விதமாகத்தான் ஆசியாவிலுள்ள வடக்குப் பாகத்திலுள்ள கிரேக்கக் குடியேற்றங்களுக்கு அக்கியப் பெயரைத் தேர்ந்தெடுக்காமல் ஈயோலியன் என்ற பெயரை வழங்கினர். இவ்விதமாகவேதான் நமது தேசமும் சாக்ஸோனி (Saxony) என்றழைக்கப்படாமல் இங்கிலாந்து (England) என் றழைக்கப்படலாயிற்று. தெற்கேயுள்ள பெரிய தொகுதியான குடியேற்ற நாடுகள் அயவோனிஸ் (Iavones) என்ற பெயரைப் பெற்றன. அங்குள்ள மக்கள் தம்மை அயோனிஸ் (Iones) என்று தான் அழைக்கலாயினர். இலியட்டில் 'நீண்ட அங்கிகளைத் தரித்து, பீயோஷியர்களுடன் இணைத்துச் சொல்லப்படும் அய வோனியர்கள் அத்தீனியர்களைக் குறிக்கின்றனர். ஆனுல் இந்தப் பெயரானது ஒருவேளை கிரேக்கப் பெயராகவே இருக்காது. இந்தப் பெயர் குடியேறிய கிரேக்கர்களுக்கு ஆசியாவின் நிலத்தில் முதலில் கொடுக்கப்பட்ட பெயராகும்.

ஆனுல் முதலிலிருந்தே இந்த இரண்டு தொகுதிகளும் முற்றிலு மாக வரையறுக்கப்பட்டிருந்தன என்று கருதுவது ஒருவேளை தப்பி தத்திற்கு இடமளிக்கும். முதலாவதாகச் சொல்லவேண்டு மானுல், கால அளவில் இவை ஒன்றின்மேல் மற்ருென்று படிந் திருக்கக்கூடும். கடைசியான ஈயோலியன் குடியேற்றம் முதலாவ தான அயோனியன் குடியேற்றத்திற்குப் பிறகுதான் நிறுவப்பட் டிருக்கும். இரண்டாவதாக இவர்கள் முதல்முதலாக வசித்த இடங்கள்கூட ஒன்று மற்ருென்றின்மீது படிந்திருந்தது. முக்கிய மாக, ஈயோலியன் குடியேற்ற மக்கள் ஈட்டா மலைக்கு வடபாகத்தி லிருந்து வந்தபோதிலும் - ஈடோலியாவிலிருந்து வந்தவர்கள் நீங்கலாக - இவர்கள் பீயோஷியா, யூபியா கடற்கரைப் பிர தேசங்களிலிருந்து வந்த குடியேற்றக்காரர்களையும் தங்களுக்குள் அடக்கியிருந்தனர். இவ்விதமாக ஈயோலிஸ்(Aeolis)ஸிலுள்ள சைம் (Cyme) தனது பெயரை யூபியாவிலுள்ள சைமி(Cyme) லிருந்து பெற்றது. ஆனுல் அயோனியக் குடியேற்ற நாடுகள்

அட்டிகா, ஆர்காலிஸ் கரையோரங்களிலிருந்து வந்த மக்களைக் கொண்டிருந்தாலும் - கிரீட் முதலிய தெற்கு இடங்களிலிருந்து வந்த தொகுதிகள் நீங்கலாக - வடக்கிலிருந்தும் சில குடியேற்ற மக்கள் இவைகளில் இருந்தனர். மூன்றாவதாக, புவியியல்படியாகக் கூட இந்த இரண்டு தொகுதிகளும் ஒன்றின்மேல் ஒன்று படிந்திருந்தன. எடுத்துக்காட்டாக ஹெர்மஸ் நதிக்கு வடக்கேயுள்ள நிலமுனையிலிருக்கும் போக்கியா (Phocaea) புவியியல்படி ஈயோலிஸ்ஸில் இருந்தாலும் இது அயோனியாவில் சேர்க்கப்பட்டது. இதில் குடியேறிய மக்களில் சிலர் போக்கியர்கள் என்பது இதன் பெயரிலிருந்து தெரியவருகின்றது. வட அயோனியாவிலுள்ள சில இடங்கள் - எடுத்துக்காட்டாக டியாஸ் (Teos) - முதலில் அக்கியக் குடியேற்றங்களை ஏற்றுக்கொண்டு பின்னால் அயோனியர்களால் மறுமுறையும் குடியேறப்பெற்றன. பிற்காலத்தில் முழுவதுமாக அயோனியாவிலிருந்த ஷியாஸ்ஸில் ஒரு காலத்தில் தோற்றத்தில் ஈயோலிக் மொழியைப் போன்ற ஒரு மொழி பேசப்பட்டு வந்தது.

அயோனிய முக்கியக் குடியேற்ற நாடுகள் நிறுவப்பட்டதைப் பொறுத்தவரையில் இவைகள் என்ன ஒழுங்கில் நிறுவப்பட்டன, இந்தக் குடியேற்ற மக்களுக்கும், லிடியன் ஆதிக் குடிகளுக்கும் இருந்த தொடர்பு யாது என்ற கேள்விகளுக்கு, அக்கியர்களுடைய குடியேற்றங்களைப்பற்றி நமக்கு எவ்வளவு குறைவாகத் தெரியுமோ அவ்வளவுதான் இவைகளைப்பற்றியும் நமக்குத் தெரிகின்றது. ஷியாஸ் தீவைச் சந்திக்கப்போவது போன்ற - தீபகற்பத்தின் கழுத்துப் போன்ற - பாகத்தின் வட பக்கத்தில் கிளாஸோமினேயும் (Clazomenae) தென் பாகத்தில் டியாஸும் தோன்றின. ஷியாஸ் தீவின் கிழக்குக் கரைக்கு எதிராக உள்ள நிலப் பரப்பில் எரித்திரி (Erythrae) உள்ளது. எரித்திரி என்பதற்கு மிக்க சிவப்பான நிறம் என்பது பொருள். எரித்திரி இப்படி அழைக்கப்பட்டதற்குக் காரணம் டிரியன் வியாபாரிகள் நாடிவரும் கருஞ் சிவப்பான மீன் பண்ணைகள் தான். டியாஸிலிருந்து கெய்ஸ்டர் முகத்துவாரத்தை அடையக் கிழக்கு நோக்கித் திரும்பும் கடற்கரையில் லெபீடஸ்(Lebedus) ஸும், கொலோபோனும் (Colophon) இருக்கின்றன. இவைகளுக்குத் தென்கிழக்கே ஆர்டிமீஸ்(Artemis)ஸின் நகராகிய எபிஸஸ் (Ephesus) நிறுவப்பட்டது. கெய்ஸ்டர் ஆறுகளின் ஊடே 'ஆசியாவின் பசும் புல்வெளி' என்ற சமவெளி இருக்கின்றது. ஊழ்வினைப் பயனால் ஒரு புதுமை வாய்ந்த விதத்தில் இப் பெயர் பூமியில் காணப்படும் கண்டங்களில் ஒன்றிற்கு வழங்கும்படி தேர்ந்தெடுக்கப்பெற்றது. எபிஸஸ்ஸிற்குத்

தெற்கேயும் மைக்கேல் (Mycale) மலையின் வட சரிவிலும் அயோனியர்களுடைய சமயச் சார்பாக ஒன்றுகூடும் இடமாகிய ஹெலிக்கோனியன் பாசிடோனின் (Heliconian Poseidon) கோவில் அமைந்துள்ளது. அயோனியர்கள் தங்களை ஒரு நாட்டினத்தவர்கள் என்று உணர்ந்து, தம்முடைய பொதுவான பெயரில் பெருமைகொள்ள முற்பட்ட காலையில் இந்தக் கோவிலானது வடக்கிலுள்ள போக்கியாமுதல் தெற்கிலுள்ள மைலீட்டஸ் வரையிலுள்ள எல்லா அயோனிய நகரங்களுக்குள் ஒருவித ஒற்றுமை உணர்ச்சியை ஊட்டி வளர்க்க ஏதுவாயிருந்தது. மைக்கேல் மலைக்கு எதிராகச் சேமாஸ் தீவு இருக்கின்றது. இங்குச் சமயத்தைப் பொறுத்தவரையில் முக்கியப் பகுதியாக அமைந்தது ஹீரா (Hera)வின் வழிபாடாகும். இந்த வழிபாடானது சேமாஸ்ஸை முதல் முதல் நிறுவியதில் ஊக்கமெடுத்த மக்கள் ஆர்காஸைச் சேர்ந்த மக்கள் என்பதைக் காட்டுகின்றது. மைக்கேல் மலைக்குத் தெற்கே மியாண்டர் நதிக்கரையில் மையஸ் (Myus), பிரியீனி (Priene) என்ற குடியேற்ற நாடுகள் நிறுவப் பட்டன. இதன்பின் கரையோரம் கிழக்கு நோக்கிச் சென்று, லாட்மாஸ் (Latmos) மலையைச் சுற்றித் திரும்பவும் மேற்காகத் திரும்பி ஒரு நிலமுனையை உண்டுபண்ணுகிறது. இந்த நிலமுனை யின் வடக்குப் பாகத்தில் தனது பிரமாதமான துறைமுகத்தை யுடைய மைலீட்டஸ் உள்ளது. மியாண்டர் நதியின் தீரத்தில் ஒரு பெரிய உள்நாட்டு நகரம் இருந்தது. இதுவே மாக்னீஸியா வாகும். மியாண்டர் நதி தீரத்திலுள்ள இந்த மாக்னீஸியாவை ஹெர்மஸ் நதி தீரத்திலுள்ள ஈயோலியன் உள்நாட்டு நகரமாகிய மாக்னீஸியாவினுடன் குழப்பக்கூடாது. அயோனியக் குடியேற்ற நாடாக எடுத்துக்கொண்டபோதிலும், இது அயோனியர்களால் நிறுவப்படவில்லை. தெசலியிலுள்ள மாக்னீடீஸ் (Magnetes) என்பவர்களாலே இந்த இடம் நிறுவப்பட்டது. அயோனியப் பிரதேசத்தில் குடியேற யூபியா, பீயோஷியா முதலிய நாட்டு மக்களும், ஆர்காலிஸ், அட்டிகா முதலிய இடங்களிலுள்ள அயோனியர்களும் பங்கெடுத்தனர்.[45] ஆதிக்குடிகள் - லீலீகீஸ்

[45] அயோனியக் குடியேற்றத்தைக் கீழே காட்டிய பட்டியல் (நிரல்) நன்றாக விளக்குகிறது. போக்கியா - போக்கியர்கள்; கிளாஸமீனி - கிளியோனி(Cleonae)யும் பிலியஸ்ஸும் (Phlius); சேமாஸ் - ஆர்காலிஸ்; சியாஸ் - யூபியா; எரித்திரி - பீயோஷியாவும் யூபியாவும்; டியோஸ் (முதலில் தெஸ்ஸாலியிருந்துவந்த அக்கியர்கள்) - அட்டிகாவும் பீயோஷியாவும்; லிபிடாஸ் - பீயோஷியா; கொலோபோன் - பைலஸ் (மெஸினியாவிலுள்ளது); எபிஸஸ் - ஆர்காலிஸ்ஸும் ஏனைய பல நாடுகளும்; பிரியீனி - காட்மியர்களும் ஆர்கேடியர்களும்; மையஸ் --

(Leleges), மாடோனியர்கள் (Matonians), கெரியர்கள் (Carians) படையெடுத்துவந்த மக்களை நீண்டகாலமாக எதிர்க்கவில்லை போலும். சில இடங்களில் இவர்கள் கிரேக்க அயலாருடன் கலந்துகொண்டனர். மைலீட்டஸிலுள்ள கெரியர்கள் இதற்குத் தகுந்த எடுத்துக்காட்டாவர்.

கடல்களுக்கப்பாலுள்ள புதிய கிரீஸிற்குக் குடியேற்ற மக்கள் தங்களுடைய பழைய நாகரிகத்தின் மரபுகளை எடுத்துச் சென்றனர். தமது தாய் நாட்டில் இவைகள் தம்மேல் படையெடுத்து வந்த டோரியர்களால் அடக்கப்பட்டன. பல நூற்றாண்டுகளுக்குப்பின் பதிவு செய்யப்பட்ட வரலாற்றுக் காலத்தின் தெளிவான ஒளிப்பகுதியை நாம் அடையும்போது அங்குக் காணப்படும் வளம்பொருந்திய அயோனியன் நாகரிகத்தை மேற்கூறிய மரபுகள் உண்டாக்க உதவின. அக்கில்லஸ், அகமெம்னன், ஒடிஸியஸ் முதலியோரின் செயல்களை எடுத்துக்கூறும் தமது ட்ராயைக் குறித்த பாடல்களையும், இவ்விதப் பாடல்களை உருவாக்கும் கலையையும் தம்முடன் எடுத்துச்சென்றனர். அயோனியாவில் இந்தக் கிரீஸ் நாட்டு வீரப் பாடல்கள் ஒரு புதிய யுகத்தை அடைந்தன. அயோனியாவில் தலைசிறந்த, தனித்திறமையுடைய ஒரு கவிஞர் தோன்றினர். அங்கே முதலாவதானதும், மிகவும்

---

அட்டிகா; மைலீட்டஸ் - அட்டிகா. இந்தப் பன்னிரண்டு நகரங்களும் அயோனியன் டோடிகாபோலிஸ் (dodecapolis) என்றழைக்கப்பட்டன. அபாடூரியா (Apaturia) என்னும் விழாவைக் கொண்டாடுவதே அயோனிய இனத்தைத் தெரிந்துகொள்ளக்கூடிய தேர்வு (Test) ஆகும். இந்த விழாவானது எபிஸஸ்ஸிலும் கொலோபோனிலும் நடத்தப்படாதது இந்த நகரங்களில் அயோனிய மக்கள் அதிகக் குறைவாக இருந்தனர் என்பதைக் காட்டுகின்றது. யூபியா, கைகிளாட் தீவுகள், அயோனியக் குடியேற்ற நாடுகள் ஆகியவைகளில் பேசப்படும் மொழி மரபுகள் அயோனியத் திசைமொழியில் சேர்க்கப்பட்டிருந்தன. அயலகத்துத் திசைமொழிகள் (குறிப்பாகப் பீயோஷியன்) யூபியாவின் பேச்சை அதிகமாகப் பாதித்தன. கைகிளாட் தீவுகளின் மொழியானது அயோனிய மொழிக்கு அதிகம் நெருங்கியதாக இருக்கின்றது. அயோனிய மொழி கரடுமுரடான சப்தங்களை இழந்துபோனதே இவை இரண்டிற்கும் உள்ள முக்கிய வித்தியாசமாகும். அயோனியாவிலே தனிப்பட்ட கீழ்த்திசை மொழிகள் நான்கிருந்தனவென்று எரோடோட்டஸ் கூறுகிறார். ஒருவேளை இவர் பொது மக்களின் பேச்சைக் குறிப்பிடுகிறார்போலும். ஏனென்றால், பொறிக்கப்பட்ட எழுத்துக்களின் ஆதாரத்திலிருந்து, மொழியானது எழுதப்படுவதில் காணப்பட்ட இட வேறுபாடுகள் சிறப்பில்லாதவை என்றறிகிறோம்.

பெரியதுமான பெருங்காப்பியம் ஒன்றும் தோன்றியது. ஹோமர் தமது இலியட்டை ஒன்பதாவது நூற்றாண்டில் அமைத்திருக்க லாம். இவருடைய புகழ்பெற்ற பெயரானது 'பிணையாளியாக எடுத்துச் செல்லப்பட்டவர்' என்னும் இழிவான பொருளைக் கொண்டுள்ளது; சிறு நிலப்பிரதேசத்தில் ஏற்பட்ட சச்சரவில் தமது இளவயதில் பிணையாக எடுத்துச் செல்லப்பட்டிருக்கலாம் என்று நாம் யூகிக்கலாம். கரடுமுரடான சியாஷில் இவர் ஒருகால் வசித்திருந்திருக்கலாம். கதிரவன் கடலுக்குமேல் எழு கின்றான் என்று இவர் விரித்துரைத்ததிலிருந்து சியாஷில் காணப் படும் காட்சியொன்றை இவர் விஸ்தரிக்கின்றார் என்று நாம் எண் ணிக்கொள்ளலாம். சியாஷிலுள்ள ஹோமரிட்டர்கள் (Homerids) என்ற பாணர் குடும்பம் இவரிலிருந்துதான் துவங்கியது. ஹெக்டரின் மறைவுவரை 'அக்கில்லஸ்ஸின் சினம்' என்பதைத் தமது தர்க்கத்தின் பொருளாகக்கொண்டு, இந்தக் காப்பியத்தில் ட்ராயைப்பற்றியுள்ள பழைய பாடல்களில் காணப்படும் பல கதை நிகழ்ச்சிகளையும் ஒன்றுசேர்த்தார். 'ஆடிஸி', 'இலியட்' ஆகிய இரு காப்பியங்களுக்கும் மரபானது ஹோமரை ஆக்கியோ னாக்கியது. இது உண்மையாயிருந்தாலும், இல்லாவிட்டாலும் சரி, இந்த இரண்டு காப்பியங்கள் இயற்றப்படுவதற்கு இடையில் பெரியதொரு காலமானது நின்று இவைகளைத் தனியாகப் பிரித் திருக்கமுடியாது என்று நாம் உணர்கிறோம்.

நம்மிடமுள்ள 'இலியட்', ஹோமர் ஆக்கிய முதல் நூலான இலியட் அன்று என்றும், ஹோமரின் நூலானது மிகவும் குறுகிய நூலென்றும், பின்தோன்றிய கவிஞர் இதன் முழு அநு கூலத்திற்கில்லாமல் இதைத் திருப்பி அமைத்தும் பெரியதாக்கியும் உள்ளனர் என்றும் பல திறனாய்வாளர் நினைக்கின்றனர். 'ஆடிஸி' யைப்பற்றியும் இவ்விதமான எண்ணங்கள் இருந்துவருகின்றன. இதுவேதான் 'ஹோமரைப்பற்றிய கேள்வி'யாகும். இதுவரை இக் கேள்வியைக் குறித்துக் கருத்து ஒற்றுமை ஒன்றும் வரவில்லை. இது எப்படியிருந்தாலும் சரி, இலியட் முழுவதுமே இவருடைய வேலையாக இல்லாமலிருந்தாலும் சரி (இதுவரை இது நிரூபிக்கப் படவில்லை), ஹோமர் காப்பியச் செய்யுளுக்குத் தந்தை என்பது பலர் அறிந்த உண்மையாகும். இவ்விடத்தில் 'காப்பியம்' என் பதைக் குறுகிய வீரப்பாடல் என்றல்லாமல் பெரிய தர்க்கத்தைக் கொண்ட செய்யுள் என்ற அர்த்தத்தில் நாம் எடுக்கிறோம். இவ ருடைய செய்யுளானது முழுவதும் செயற்கையே - பெரிய செய்யு ளானது எப்பொழுதும் அறிவின்பாற்பட்ட கலையேயாகும். இவர் இலியட்டை எழுத்தால் எழுதியிருக்கலாம்.[46] அயோனியாவில்,

[46] கீழே பத்தாவது பிரிவைப் பார்க்கவும்.

அயோனிய அரசிளங் குமாரருடைய அவைக்களங்களில், இவரும் இவருடைய மரபினரும் பாடியுள்ளமையால் இவர் பழைய அக்கியச் செய்யுட்களில் காணப்படும் திசை மொழியைக் கட்டுப்பாடின்றி உபயோகித்துள்ளார். இலியட் அயோனிய உடையில் உடுத்தப்பட்டு, பிற்காலத்தில் அயோனியாவுடன் இன உறுதி செய்யப்பட்டதால் பழைய செய்யுட்களின் அக்கிய முதல்நிலை அடியோடு மறக்கப்பட்டது. ஆனால் இந்த மாறுதலானது குறைவு பாடில்லாமல் இருக்கவில்லை. ஏனென்றால், சில வேளைகளில் அயோனிய உருவங்கள் (forms) செய்யுளின் சீர்களுக்கு ஏற்ற வாறு அமைக்கப்பட முடியவில்லை. எனவே, ஈயோலியன் உருவங்களே உபயோகிக்கப்பட்டன ஆனால் இந்த மாறுதல் வியப்பைத் தரக்கூடிய திறமையுடன் செய்து முடிக்கப்பட்டுள்ளது. இந்த அயோனியக் கவிஞர் காப்பியப் பொருளையெடுத்து அதனை நயம் பொருந்திய காலம் ஒன்றின் சுவைக்கும், ஒழுக்கத் துறைக்குரிய கருத்துகளுக்கும் ஏற்றவாறு அமைக்கப் பல பாடுகள் பட்டிருக்கலாம். ஆதிமக்களின் முந்தைய இலக்கியங்களைத் தனியாகப் பிரித்துக்காட்டும் அநாகரிகமற்ற அமிசங்களிலிருந்து இலியட் குறிப்பிடத்தக்க விதத்தில் விடுதலை யடையப்பெற்றுள்ளது. அருவருப்புத் தருவனவும், காட்டுமிராண்டிச் செயல்களும் பின்னணி வண்ணமாக அமைந்திருந்தன என்பதையும், இவைகளின்மேல் ஒரு திரையானது இடப்பட்டிருந்தது என்பதையும் காட்டுவதற்காகவே இந்த அமிசங்களின் அறிகுறிகள் சில இடங்களில் மாத்திரம் காணப்படுகின்றன. மற்ற வகைகளில், தாம் பாடிய கடந்து போன காலங்களின் இயற்கைச் சூழ்நிலைகளை இந்த அயோனியக் கவிஞர்கள் நம்பிக்கைக்கு மாறுபடாமல் பாதுகாத்திருக்கின்றனர். இவர்கள் அதன் பழக்க வழக்கங்கள், அதன் சூழ்நிலை, அதன் புவியியல் முதலியனவற்றை அப்படியே காத்துள்ளனர். ஒரு சில வேளைகளில்தான் கால இட முரண் தென்படுகின்றது. இந்தப் படத்தில் மற்ற யாவும் திருப்தியாக அமையப் பெற்றிருப்பதால் இக்கால இட முரணை வெகு எளிதில் கண்டுபிடிக்க இயலுகின்றது. எடுத்துக்காட்டாக, ஆடிஸியின் கவியானவர், 'இரும்பின் தனிச் சுடரொளியானது, மனிதனைப் போருக்கு ஆசை காட்டிக் கவர்கின்றது' என்ற பழமொழியைக் கூறுவதால், இவர், தம்மை அறியாமலே தாம் இரும்புக்காலத்தில் வாழ்ந்ததைக் கூறி அறிவித்துள்ளார். இந்தப் பழமொழியானது இரும்புப் படைக் கருவிகள் அதிககாலத்தில் உபயோகத்தில் இல்லாவிட்டால் நடைமுறைக்கு வந்திருக்காது அல்லவா! ஆனாலும் கவிஞர் வெண்கல காலக் கருவிகளையும், உடைகளையும், பழக்க வழக்கங்களையும் காப்பாற்றி வைக்க அரும்பாடுகள் படுகின்றார்.

ஹோமர் ட்ரோஜன் யுத்தத்தின் நினைவை ஒரு தேசீய முயற்சியாகக் காப்பாற்றியுள்ளார். இலியட்டானது ஓர் அயோனியப் பாடல் என்று மட்டுமல்லாமல் பெரியதொரு முக்கியத்துவத்தைப் பெற்றதாகக் கருதப்படுகின்றது. இது ஒரு தேசீய காப்பியமாக ஏற்றுக்கொள்ளப்பட்டது. முதலிலிருந்தே கிரேக்கர்களுக்குள் தாம் ஒரே குலத்தவர் என்ற உணர்ச்சியையும், அவர்களுடைய தேசீய ஒற்றுமையை முன்னேறச் செய்யவும் இந்தக் காப்பியம் தனது செல்வாக்கை உபயோகித்தது. கதையின் மூன்றில் ஒரு பாகமானது தேவதைகளின் நாட்டில் நடக்கப் பெற்றாலும், கதையானது தேசீய முக்கியத்துவத்தைப் பெருமளவிருந்தாலுங்கூட இது ட்ரோஜன் புராணக் கதையுடன் இணைக்கப்பட்டுள்ளதால் 'ஆடிஸி'யும் ஒரே தேசீயக் காப்பியமாயிற்று. ட்ரோஜன் யுத்தத்தின் நினைவுப் படிவம் கிரீஸ் நாட்டின் அக்கறையைத் தட்டி எழுப்பியதை 'இலியட்'டில் விவரித்திருக்கும் செயல்களுக்கு முன்னும் பின்னும் ட்ராய் முற்றுகையில் நடந்த செயல்கள், சில கிரேக்க வீரர்களின் பிற்கால வரலாறுகள் இவைகளைக்கொண்டு உருவாக்கப்பட்ட பல காப்பியப் பாடல்கள் நமக்கு அழகாகக் காட்டுகின்றன. நமக்கே அவர்களைப்பற்றி (ஊர்பேர் தெரியாத ஆக்கியோர்கள்[47]) இச் செய்யுட்களை உருவாக்கியதாகக் கூறப்படுகிறது. இவர்களில் சிலர் ஹோமர் என்ற பெயரையே கொண்டிருந்தனர். இலியட், ஆடிஸி இவைகளுடன் இந்தச் செய்யுட்கள் ஒரு கால அளவைச் சேர்ந்த தொகுதியாகி, 'காப்பிய வட்டம்' (Epic Cycle) என்றழைக்கப்படலாயிற்று.

அயோனியக் குடியேற்றங்கள் ஆசியா மைனரில் கிரேக்கக் குடியேற்றத்தை முடித்துவைக்கவில்லை. கிழக்குப் பெலப்போனீஸஸை டோரியர்கள் கைப்பற்றியதும், கடல்களைத் தாண்டி டோரியர்கள் பரவவும், அயோனியாவிற்குத் தெற்கே ஆசியா கடற்கரையில் குடியேற்ற நாடுகளை நிறுவவும் முற்பட்டனர். இந்தப் பிரதேசத்தில் லிசியாவின் எல்லைமட்டும் கெரியர்கள் பரவி, காலிம்னா (Calymna) தீவிற்கு எதிராக உள்ள நிலமுனைக்குள் ஆதிக்குடிகளை அழுத்தித் தள்ளினார்கள். இங்கே ஈஜியன் நாகரிகத்தின் கடைசிக் கட்டங்களில் லீலீஜியர்கள் பங்கெடுத்தனர். இந்த உண்மையை டெர்மெரா (Termera)விலுள்ள அறையைக் கொண்ட கல்லறைகளில் கிடைக்கப் பெற்ற மட்பாண்டங்கள், மற்றும் பல சாமான்கள்மூலம் அறிகின்றோம். அந்த வட்டக் கல்லறைகள், மைஸீனியாவிலுள்ள வில் வளைவான கூரையையுடைய கல்லறைகளைப்போல் தரையிலே குடைந்து எடுக்கப்

[47] கடைசியாக உள்ளதற்குக் கீழே இரண்டாவது அத்தியாயம் 7ஆம் பிரிவைப் பார்க்கவும்.

படாமல், தரை மட்டத்திற்குமேல் கட்டப்பட்டுள்ளன. தீபகற்பத்தின் பல பாகங்களில் காணப்படுகின்ற இவை லீஸீஜியர்களின் சிறந்த நினைவுச் சின்னங்களாக இருந்து வருகின்றன.

மைலீட்டஸ்ஸிற்குத் தெற்கேயுள்ள திடமான நிலமுனைகளும், காஸ் (Cos), ரோட்ஸ் (Rhodes) முதலிய தீவுகளும் ஆர்காலிஸ், லாக்கோனியா, கொரிந்து, கிரீட் முதலிய இடங்களிலிருந்து வந்த குடியேற்ற மக்களால் உறைவிடமாக்கப்பெற்றன. பெரு நிலப் பகுதியில் ஹாலிகார்னஸஸ் (Halicarnassus) ஒரு முக்கிய டோரியன் குடியேற்றமாயிருந்தது. ஆனல் இது கெரிய ஆதிக் குடிகளின் உதவியால் ஏற்படுத்தப்பட்டதால் இது ஒரு பாதி கெரியக் குடியேற்றமென்றும் நாம் கூறலாம். இந்தப் புதிய டோரிஸ் ஈடா மலையருகேயுள்ள பழைய டோரிஸ்ஸைப் புகழைப் பொறுத்தவரையில் ஒளிமறையச் செய்து, அதன்மேல் தனது பளப்பளப்பான கதிர்களை வீசியது. இங்கு எல்லாக் குடியேற்றங்களும் சுதந்தரத்தை அநுபவித்தன. ஆனாலும் இவை யாவும் தமது கூட்டு நலனையும், மேலீடான மன உணர்ச்சியையும் ட்ரையோபியன் அப்போலோ (Triopian Apollo)வின் பொதுவான வழிபாட்டினல் நிலைத்திருக்கச் செய்தன. கெரியர்கள் மிகவும் சுறுசுறுப்பான மக்கள். எங்கிருந்தாலும் இவர்கள் தமது நிலத்தைப் பாடுபட்டுப் பயிர் செய்வர். ஆகையால், இது எப்பொழுதும் கெரியாவாகவே இல்லாததைக் கூடிய சீக்கிரத்தில் மக்கள் மறந்தனர். இவர்கள் மாலுமிகளாவும் இருந்ததால், கடலைச் சார்ந்த, திறமையுடைய ஓர் ஆட்சியை ஏற்படுத்தினர்கள். முன்னொரு காலத்தில் கெரியர்கள் கடலில் மேலாண்மைகொண்டு விளங்கியதாகப் பிற்காலங்களில் தோன்றிய மரபுகள் கூறுகின்றன. ஆனல் இவை யாவும் கெரியக் கடற் பேரரசு சாதித்த யாதொன்றையும் குறிப்பாகச் சொல்ல இயலாமலிருக்கின்றன. யுத்தக்கலை விருத்திக்காகக் கேடயப் பிடிகளையும், அடையாள முகடுகளைக்கொண்ட தலைச்சீராவையும், குல விருதுகளால் அணிசெய்யப்பட்ட பட்டயங்களையும் தாம் புகுத்தியதாகக் கெரியர்கள் உரிமை கொண்டாடுகிறார்கள் - இந்த உரிமைகளை நாம் சோதனை செய்ய முடியாதிருக்கின்றோம்.

மேற்கு ஆசியா மைனரின் கரையை முழுவதுமாகக் கிரேக்கர் தம் வசமாக்கினர். லிசியர்கள் கடக்கமுடியாத ஒரு தடுப்புச் சுவர் மாதிரி இருந்ததால், டோரிஸ்ஸிற்கு ஊர்ந்து சென்று அல்லது மெதுவாகப் பரவிப் பாம்பிலியாவை அடைய முடியவில்லை. பலர் தப்பிதமாக நினைத்துக்கொண்டிருந்ததுபோல் லிசியர்கள் ஆரிய மொழியைப் பேசும் மக்கள் அல்லர். இவர்களுடைய மொழியானது கெரிய மொழியுடன் தொடர்புடையதாயிருந்தது. இவர்களுடைய சரியான பெயர் ட்ரிம்மிலி (Trmmili) ஆகும். ஆனல்

லிசியன் என்ற பெயர் மற்றவர்களாலும், ட்ரிம்மிலியின் முக்கியத் தெய்வத்தில் தமது சொந்தத் தெய்வமாகிய அப்போலோ லைக்கியோஸ்ஸைக் கண்ட கிரேக்கர்களாலும் இவர்களுக்குக் கொடுக்கப்பட்டதுபோல் தோன்றுகிறது.[48] ஆனால் லிசியா குடியேற்றப்படாமல் போனாலும், பிற்காலத்தில் கிரேக்க முயற்சிகளுக்கு இக்கட்டுகள் கொடுத்த வடக்கு எல்லை மாத்திரம் நீங்கலாக, ஈஜியன் முழுவதும் கிரேக்கச் செல்வாக்கின் எல்லைக்குள் இருந்தது. ஆசியாவைச் சேர்ந்த கிரீஸை (Asiatic Greece) உண்டாக்க எடுத்துக்கொண்ட செயல் முறையானது, டோரியர்கள் பெலோப்போனீஸஸ்ஸைப் படையெடுத்ததைவிடக் குணவியல்பில் வேறுபட்டுள்ளது என்பதை நாம் முக்கியமாக அறிய வேண்டும். அயோனியாவிலும், டோரிஸ்ஸிலும் காணப்படும் கிரேக்க இருப்பிடங்கள், குடியேற்றத்திற்குச் சிறந்த எடுத்துக் காட்டுகளாம். தங்களுக்குப் புதிய இருப்பிடங்களைத் தேடிக் கும்பு கும்பாக மக்கள் தம் வீடுவாசல்களை விட்டுச் சென்றனர். ஆனால் இவர்கள் யாவரும் தம் தாய் நாடு என்ற ஒன்றைத் தமக்குப்பின் விட்டுச்சென்றனர். இதற்கு நேரிடையாக டோரியர்களுடைய புடைபெயர்தல், ஓரினத்து மக்கள் தம்முடைய குடியை முழுவதுமாகப் பெயர்த்து அலைந்து திரிவதுபோல் காணப் படுகின்றது. இதன் முக்கியம் என்னவென்றால், எல்லா மக்களும் புதிய வயல்களையும் மேய்ச்சல் வெளிகளையும் தேடி ஒருங்கே கிளம்பினார்கள். பார்னஸஸ் மலைக்கு அப்பாலுள்ள ஒதுக்கமான மூலையில் காணப்படும் எஞ்சிய மக்களை டோரியர்களின் பெற்றோர்கள் என்று உபசாரத்திற்காகச் சொல்லலாமேயொழிய மற்றப்படி எதுவும் சொல்ல இயலாதவர்களாயிருக்கின்றோம். மக்கள் யாவரும் ஏனைய இடங்களுக்குச் சென்றுவிட்டனர்.

ஆசியா மைனரின் மேற்குக்கரையைக் கிரேக்கர்கள் கைப்பற்றுதல் முடிவுபெறுமுன் அதிகத் தூரத்தில் தமக்கென ஒரு புதிய இல்லத்தைத் தேடி ஒரு புதுக்குடிப் பெயர்ச்சி பெலோப்போனீஸஸ்ஸின் கரைகளைவிட்டுச் சென்றது. நிலவியலில் தனது இடத்தினால் மூன்று கண்டங்கள் தனக்காகப் போட்டியிடும்படியிருந்த சைப்ரஸ் தீவானது, இப்பொழுது ஐரோப்பியக் குடியேறுபவர்களை வரவேற்க வேண்டியதாயிற்று. வெண்கலக் காலம் முழுவதும் சைப்ரஸ் ஈஜிய நாடுகளுக்குச் செம்பைக் (Copper) கொடுப்பதில் பெரிய

[48] இரண்டாவது ராம்சேஸ், மெர்ன்ப்தா (Mernptah) இவர்களின் ஆட்சிக் காலத்தில் எகிப்து நாட்டின்மேல் படையெடுத்து வந்த லூக்கூ (Luku) என்பவர்கள் லிசியர்கள் என்ற கொள்கையை (இது இப்போது பொதுவாக ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளது) இந்த உண்மை விலக்க வேண்டியதில்லை.

தொரு பங்கு கொண்டிருந்தது. அதுவுமின்றி இது மர உத்திரங்களையும் ஏற்றுமதி செய்து வந்தது. ஆனால் இது நாசஸின் மேலாண்மைக் கால இறுதிவரை முன்னேற்றமடைந்த ஈஜிய நாகரிகத்தில் ஒரு பங்கும் எடுத்துக்கொள்ள முற்படவில்லை. பிறகு ஈஜியனிலிருந்து குடியேற்ற மக்களைத் தம்மிடம் ஏற்றுக்கொண்டு கிரீட்டன், மைஸீனியன் கலைகளின் குணவியல்பினங்களையும் தனது சொந்தச் சிறப்புப் பண்புகளையும் கொண்ட கலையொன்றை வளரச்செய்தது. இந்தத் தீவின் கிழக்குப் பக்கத்திலுள்ள சாலமிஸ்




படம் 16: சைப்ரஸ்

(Salamis) என்பது நகரத்தில் காணப்பட்ட கல்லறைகள் சைப்ரஸ் தீவில் பதினான்காம் நூற்றாண்டில் எப்படி ஈஜியப் பண்பு செழிப்புற்றிருந்தது என்று காட்டுகின்றன. அதிசீக்கிரத்தில் சைப்ரஸ் தீவின் மக்கள், அப்போதுதான் உபயோகத்திற்கு வந்துகொண்டிருக்கும் இரும்பைப் படைத்துருவாக்கும் கைத்திறத்தைக் கற்றுக் கொண்டனர். ஆசியா மைனர், சிரியா, எகிப்து என்னும் நாடுகளுக்கு அருகில் இருப்பதால், இங்குள்ள மக்கள் வாணிபத்தில் ஈடுபட வாய்ப்புகள் பல கிடைத்தன. வாணிபம் இவர்களுக்குச் செல்வத்தைக் கொண்டு வந்து குவித்தது. ஊழ்வினைப் பயனால் இந்தத் தீவானது, உலகச் சொற்போரில் ஐரோப்பியர்களுக்கும் ஆசியாக்காரர்களுக்கும் மல்யுத்தம் நடைபெறும் அரங்கத்தினிடத்தைப் பெற்றுள்ளது. டோரியர்களின் படையெடுப்பின் நிகழ்ச்சி

களால் சுற்றி அலையத் தூண்டப்பட்ட பெலோப்போனீஸியக் கிரேக்கரே இப் போராட்டத்தில் கலந்துகொள்ளப் போன முதல் ஐரோப்பியராவர். கிட்டத்தட்ட இதே நேரத்தில் முக்கியமாகத் தீவின் மத்திய பாகத்தில்—அமாத்தஸ் (Amathus), சிட்டியோன் (Cition), இடாலியோன் (Idalion), டாமாஸ்ஸஸ் (Tamassus), லாபேதஸ் (Lapathus) முதலிய இடங்களில்—பினீஷியர்கள் தமது குடியேற்றங்களை நிறுவ ஆரம்பித்தனர். ஆசியா மைனர்கரையில் கிரேக்கர்களும், பினீஷியர்களும் ஒன்ருகக் கலந்ததுபோலவே சில இடங்களில் கிரேக்கர்களும், பினீஷியர்களும் கூட்டுச் சேர்ந்து குடியேற்ற நாடுகளை ஏற்படுத்தினுர்கள். இவ்விரண்டு இனங்களும் தீவின் ஆதிக் குடிகளும் ஒன்ருகக் கலந்து ஒரு புதிய சைப்ரஸ் பண்பை எழச்செய்தன. கிரீட்டிற்கு எப்படிச் சொந்தமோ அதே மாதிரி சைப்ரஸிற்கும் புருக்கள் சூழ்ந்துள்ள பெரிய தாய்தேவதை யின் வழிபாடானது சொந்தமாகும். கிரேக்கர்கள் இவரை எல்லாராலும் சைப்ரிய தேவதை என்று சொல்லப்படும் ஆப்ரோடைடி (Aphrodite)யுடன் (அடையாளம் கண்டனர்) ஒன்றுசேர்த் தனர் (identified).

சைப்ரஸ்ஸில் குடியேறியவர்கள் ஆர்கேடியன் திசை மொழியைப் பேசிவந்தனர். ஆனுல் இது அவர்களுடைய பழைய இல்லங்கள் ஆர்கேடியாவிலிருந்தன என்று கூறுவதற்குச் சான்ருக மாட்டாது. டோரியர்கள் தீபகற்பகத்திற்குள் வந்து புதிய திசை மொழிகளை உண்டுபண்ணுவதற்குமுன் ஆர்கேடியப் பேச்சானது, சில சிறு வேறுபாடுகளுடன், கடற்கரையோரப் பிரதேசத்திலும், தீபகற்பத்தின் மத்தியிலும் பேசப்பட்டு வந்தது. சில சைப்ரஸ்ஸைச் சேர்ந்த கிரேக்கர்கள் லாக்கோனியாவிலும் ஆர்காலிஸிலுமிருந்தும் போன கிரேக்கராவர்.[49] சிலர் அட்டிக் கிரிகுடாவிலுள்ள சாலமிஸ் தீவிலிருந்து சென்று சைப்ரஸ்ஸிலுள்ள ஒரு நகரத்திற்குச் சாலமிஸ் என்ற பெயரை வழங்கினர். குடியேற்ற மக்கள், முன்னதாகவே ஏற்படுத்தப்பட்ட கோடுகளாலாகிய எழுத்து முறையை இங்கே கண்டனர். இந்த முறையானது கிரீட்ட முறைகளைப் போன்றிருக்கின்றது. ஒருவேளை இதுவும் இதர ஈஜிய நாகரிகத்தின் பொருள்களுடன் இத் தீவில் இறக்குமதி யாக்கப்பட்டிருக்கலாம். கிரேக்க மொழியைப் பேசு

[49] பாப்போஸ் (Paphos) ஆர்கேடியர்களாலும், லாப்பாதஸ் லாக்கோனியர்களாலும் கூரியோன் (Curion) ஆர்காலியர்களாலும் தோற்றுவிக்கப்பட்டதாகத் தெரிகிறது. ஆனுல் ஒவ்வொரு குடியேற்றமும் நிச்சயமாகப் பலர் சேர்ந்து உண்டானவை. சைப்ரிய சோலி(Soli)யை அட்டிகாவுடன் இணைத்துள்ளது.

வதற்கு இந்த அசை முறையானது (syllabic system) அவ்வளவு பொருத்தமானதன்று. ஆயினும் இதைக் குடியேற்ற மக்கள் தமது உபயோகத்திற்காக மாற்றி அமைத்துக்கொண்டனர். கிரேக்க எழுத்தைச் சைப்ரிய எழுத்து வடிவத்தில் எழுதுவதைப்போன்ற அருவருப்பான செயல் வேறு ஒன்றும் இல்லாதபோதிலும், மற்றக் கிரேக்க இனத்தவர் யாவரும் புதிய எழில் பொருந்திய வடிவங்களைக் கற்றபோதிலும், சைப்ரஸ்ஸைச் சேர்ந்த கிரேக்கர்கள் இதனை விடாது பற்றிக்கொண்டனர்.

இப்பொழுது நாம் பழைய கிரேக்க வரலாற்றைத் திரும்பிப் பார்ப்போமானால், நாம் பெரும்பாலுமான காலவரையறை ஏற்படுத்தக்கூடும் என்றபோதிலும், அவைகளில் ஒரே ஒரு குறிப்பிட்ட காலம்தான் சரியாக உள்ளது. இதுதான் எகிப்தை அக்கியர்கள் கொள்ளையிடத் தாக்கியதான ஒரு சில்லறை முக்கியத்துவமுடைய நிகழ்ச்சியாகும். நாம் எல்லா முக்கிய மாறுதல்களுக்கும், இயக்கங்களுக்கும் தோராயமான எல்லைகளில் மனநிறைவு கொள்ள வேண்டியதுதான்:

| நிகழ்ச்சி | காலம் |
|---|---|
| கிரேக்க மொழி பேசும் மக்கள் கிரீஸைக் கைப்பற்றுதல் | 3ஆவது ஆயிரம் ஆண்டு காலம் |
| ஈஜியனில் கிரீட் முன்னணி நாடாகுதல் | ஏறக்குறைய கி.மு. 2200—1400 |
| கிரீஸில் முன்னேற்றமடைந்த ஈஜியன் நாகரிகம் | ஏறக்குறைய கி.மு. 1600 முதல் |
| நாஸஸின் வீழ்ச்சி | ஏறக்குறைய கி.மு. 1400 |
| பெலோப்போனீஸஸில் அக்கியர்கள் வேளிர் நாடுகளை ஏற்படுத்துதல் | கி.மு.1300—1250 |
| எகிப்தின்மேல் கொள்ளையிடத் தாக்குதலில் அக்கியர்கள் சேர்ந்தது. | ஏறக்குறைய கி.மு. 1225 |
| ட்ரோஜன் யுத்தம் | 12ஆம் நூற்றாண்டின் துவக்கத்தில் |
| தெசலியர்களின் வெற்றி<br>பீயோஷியர்களின் வெற்றி<br>ஆசியா மைனருக்கு அக்கியர்களின் குடிப் பெயர்ச்சியின் ஆரம்பம் | 12ஆம் நூற்றாண்டின் இறுதியில் |
| ஆசியா மைனரில் அயோனியர்களின் குடியேற்றத்தின் துவக்கம் பெலோப்போனீஸஸிலும், கிரீட்டிலும் டோரியர்களின் வெற்றி. | 11ஆம் நூற்றாண்டு |

| | |
|---|---|
| ஆசியா மைனரில் டோரியர்களின் குடியேற்றத்தின் துவக்கம் சைப்ரஸ்ஸில் கிரேக்கர்கள் குடியேறுதல். | 11ஆம் நூற்றாண்டு |

## 9. கிரேக்க முடியரசுகளின் வீழ்ச்சியும் குடியரசுகளின் எழுச்சியும்

தமது மன்னர்களின்கீழ்க் கிரேக்கர்கள் ஈஜியன் கடற்கரைப் பகுதிகளையும் தீவுகளையும் வென்றதுமன்றி நகர ஆட்சிகளையும் ஏற்படுத்தினர். இவை இரண்டும் கிரேக்க வரலாற்றிற்கு முடியரசுகளின் பெரிய சேவைகளாகும். மன்னர்கள் தங்களது நலத்தையும் குடிகளின் நலத்தையும் கருதியே சிதறிக் கிடக்கின்ற கிராமங்களிலுள்ள வாழ்க்கையைப் பட்டண வாழ்க்கையாக மாற்றி அமைத்தனர். இவ்வித மாறுதல் எல்லா மக்களையும் தமது கண்பார்வையில் கொண்டுவருவதால் தமது ஆற்றலை வலுப்படும் என நம்பினர். ஆனால் இந்த மாறுதல் மன்னனை மக்களின் கண்பார்வையில் அதிகமாகக்கொண்டு சேர்த்தது. ஒரு வலுவில்லாத அரசனின் தவறுகளும், நொய்மைகளும் திராணியற்ற காரியங்களும், நெறி தவறிய நடத்தையும் சிறு நகரங்களில் மக்கள் கண்களுக்கு நன்றாகத் தென்பட்டன; இதுவுமன்றிப் பொதுவாக மக்கள் அரசனிடம் குற்றம் கண்டு பிடிக்கவும், தீர்ப்பளிக்கவும் முற்பட்டனர். தகப்பனைப்போல மக்களைக் காத்துவந்த அரசர்களைக் குறித்து ஹோமர் கூறிய 'மக்களின் மேய்ப்பர்' (shepherd of the people) என்னும் சொல் நகர வாழ்க்கையில் ஈடுபட்ட காலத்தில் அவ்வளவு பொருந்தவில்லை. மேலும் ஒரு நகரத்தில் அரசன் ஆட்சியைக் குறித்து மன நிறைவில்லாதோர் முணுமுணுக்கவும், கூடிச் சதி செய்ய முற்படவும் ஏதுவாயிருந்தது. எட்டாம் நூற்றாண்டில் எப்படிக் கிரீஸ் நாட்டில் ஒரு பெரும் பாகத்தில் முடியரசுகள் சீணித்து மறைந்தன என்பதற்கும், குடியரசுகள் தோன்றின என்பதற்கும் மேற்கூறிய காரணங்கள் நமக்குத் தெளிவுறுத்துகின்றன. இப் பெரிய மாறுதலின் உண்மையான போக்கு நமக்கு மறைந்து காணப்படுவதால், நாம் காரணங்கள் இவைகளாகத்தான் இருக்கவேண்டும் என்று ஊகிக்க வேண்டியிருக்கிறது. ஆனால் நகர வாழ்க்கைக்கு மாறியதே பெரியதொரு காரணம் என்பது ஒருவரும் மறக்க முடியாத உண்மை. இப்புரட்சியானது கிரீஸில் எல்லா இடங்களுக்கும் பொதுவானதே; இந்த ஒட்டு நோய் காணப்பட்டதும் பரவியது; ஆனால் வெவ்வேறு நாடுகளில்

வெவ்வேறு காலங்களில் இப் புரட்சி தோன்றியது மல்லாமல், வெவ் வேறுவிதமான உருவங்களிலும் காட்சியளித்தது. சில இடங்களில் மன்னனின் கொடுங்கோலாட்சி அவர்களை வலுக்கட்டாயமாகப் பதவியிலிருந்து நீக்குவதற்குக் காரணமாயிருந்தது. மற்றும் சில இடங்களில் இளம் வயதுள்ள அல்லது ஒன்றிற்கும் உதவாத மனிதன் பட்டத்திற்கு வர நேர்ந்தால், பிரபுக்கள் தாமாகவே சேர்ந்து முடியரசை ஒழிக்க நேர்ந்தது. அநேக இடங்களில் இம் மாறுதல் வெகு தாமதமாகவே நடைபெற்றது. தங்களது அதி காரத்தை வலுவாக்கும் எண்ணத்துடன் நகரங்களை நிறுவிய மன்னர்கள், ஆரிய அரசர்களுடைய தெளிவாகக் கூறப்படாத அதிகாரங்களைப் பெருகச் செய்யவும் அல்லது வரையறுக்கவும் முற்பட்டனர். இவர்களில் சிலர் தமது அவையின் ஆலோசனை யைப் பொருட்படுத்தாமல் தமது சுய விருப்பின்படி நடக்க முற் பட்டிருக்கலாம். இம் மாதிரியாக அரசனின் ஆற்றலை அதிகமாக மிகைப்படுத்த முயற்சிகள் செய்யும் காலையில், அவைக்களப் பெரியோர் எழுந்து, அரசரின் ஆணையைத் தடுத்து அவர்களை அரசியல் சட்டப்படி ஆளுவதற்காக மக்களிடையே ஒப்பந்தம் செய்யக் கட்டாயப்படுத்தியிருக்கலாம். இவ் விதமான ஒப்பந் தங்கள் நடந்ததற்கு நமக்கு ஆதாரங்கள் உள. தூரத்திலுள்ள மொலோசியாவில் பழைய முடியாட்சி பிற்காலத்திலும் காணப் பட்டது. இங்கே ‘குடிகளைச் சட்டப்படி அரசாளுவேன்’ என்று அரசன் உறுதி வாக்குக் கொடுக்கக் கட்டுப்பட்டிருந்தான். மற்றும் சில இடங்களில் அரசன் மிதமிஞ்சிய அதிகாரத்தை உரிமையின்றிக் கைப்பற்ற முன் வந்த காரணத்தின் பொருட்டு, அவ் வரசர்களின் உரிமைகளைக் கண்டிப்பாக வரம்புக்குட்படுத்தி னர். இவ்விதமாக அரசருடைய அதிகாரத்தைக் கட்டுப்படுத்திக் கட்டுப்படுத்திக் கடைசியில் அது பெயருக்கு மாத்திரமே முடியர சாயும், உண்மையிலே அதிகாரம் அனைத்தும் மற்றவர்கள் கையில் ஆகி அரசன் ஒரு தண்டலாளர் மாதிரியும் காட்சியளிக் கலாம். கட்டுக்கடங்கிய முடியரசு என்பதற்கு ஸ்பார்ட்டாவி லுள்ள முடியரசு ஒரு சிறந்த உதாரணமாகும். முடியரசு எவ் விதம் தண்டலாளர் பதவிக்குக் கொண்டு வரப்பட்டது என்ப தற்கு ஆதென்ஸ் ஓர் எடுத்துக்காட்டாகும். மன்னரின் கடமைகள் யாவும் இம் மாதிரியான கட்டுப்பாடுகளால் குறைக்கப்பட்டிருந்த போதிலும், மேலும் குறைக்கப்படுவதற்குச் சாதனங்கள் பல இருந்தன. தீர்ப்புகள் கொடுப்பதில் தலைசிறந்தவராய் இருந்த போதிலும், கோத்திரங்களிலும், குலங்களிலும் உள்ள தலைவர்கள் இவர்களைப்போலவே ஊழித் தீர்ப்புகளையும், இதர தீர்ப்பு களையும் கூறும் ஆற்றல் படைத்திருக்கக்கூடும். இவர் தலைமை

யான புரோகிதரா யிருந்தபோதிலும் இவருடைய குடும்பத்தைத் தவிர மற்றக் குடும்பங்களுக்குச் சில புரோகிதர்களுக்கான வேலைகள் கொடுக்கப்பட்டுள்ளன. எனவே, மன்னனே நியாயத்திற்கும், மதத்திற்கும் ஒரு தனிப்பட்ட ஊற்றுயில்லை.

மன்னர்கள் தங்கள் அதிகாரங்களைப் பெருக்கிக்கொண்டிருந்த காலத்தை ஹோமரின் செய்யுள் ஒன்று வெகு தெளிவாகக் காட்டுகின்றது. மன்னர்களுக்கு இரக்கங் காட்டிய இந்தக் கவிதை, அரசர்களின் நடத்தையையும், கொள்கை முறையையும் குற்றம் சாட்டி, சொல்வன்மையுள்ள தைரியம் வாய்ந்த பொதுமகன் (carle) ஒருவன் மும்மரமாகப் பேசுவதைச் சிரிக்கத்தக்க விதத்திலும், வெறுக்கத்தக்க விதத்திலும் சித்திரித்துள்ளார். இம் மாதிரியான நிகழ்ச்சியைப் பழங்காலத்தில் நகர வாழ்க்கை ஆரம்பிப்பதற்குமுன் நினைக்கக்கூட முடியாது. பட்டண வாழ்க்கையின் விளைவேதான் தேர்ஸைடிஸை(Thersites)க் கடிந்து பேசியும், கையால் அடித்தும் விட்டு ஒடிஸியஸ் (Odysseus) இக் காட்சியின் மற்றொரு பகுதியில் ஒரு மேற்கோளுரையை அறிவித்துள்ளார். தேர்ஸைடிஸைப்போலவே புகழ்பெற்ற இம் மொழி யாதெனில் 'பலரின் தனியாணை (sovereignty) அல்லது ஆதிபத்தியம் நன்றன்று: ஒருவருடைய ஆதிபத்தியமே இருக்கட்டும். அவ்வொருவனே மன்னன்' ஆவான். குலங்களின் முதல்வர்களுடைய எண்ணத்தையும், நலனையும் கருதாமல் தம்மிடமே அதிகாரத்தைக் குவிக்க வழி தேடிக்கொண்டிருக்கும் மன்னர்களின் விருந்து நடைபெறும் கூடங்களில் இம் மேற்கோளுரையைச் சொன்ன கவிஞருக்குப் பாராட்டுகள் பல கிடைத்திருக்கும்.

எங்கேயெல்லாம் முடியாட்சி ஒழிக்கப்பட்டதோ அங்கேயெல்லாம் அரசாங்கம் அந்நாட்டுப் பிரபுக்களின் குடும்பங்களின் கையில் கிடைத்தது. பிரபுக்களுக்கும் ஏனைய மக்களுக்கும் உள்ள வித்தியாசம் நாம் முன்னரே கண்டுகொண்டதுபோல், ஒரு முடிவான உண்மையாகும். நாம் இவ் வுண்மையிலிருந்து ஆரம்பிக்க வேண்டும். எப்பொழுது பிரபுக்கள் அரசாங்கத்தை எடுத்து நடத்த முன்வருகிறார்களோ அப்போது உயர்குடியாட்சி எழும்புகின்றது. சில வேளைகளில் மேற்படி அதிகாரம் பல கோத்திரங்களைச் சேர்ந்த பிரபுக்கள் அனைவருடைய கைகளில் இல்லாமல், மன்னனுடைய கோத்திரத்திலுள்ள பிரபுக்கள் வசமாகலாம். கொரிந்துவில் இவ்விதமாக நடக்கப்பெற்று, பாக்கியாட்ஸ் (Bacchiads) என்னும் பிரபுக்கள் பதவியில் அமர்ந்தனர். கிட்டத்தட்ட எல்லா இடங்களிலும் உயர்குடியாட்சியானது (aristocracy)

தன்னகத்தே அங்குள்ள எல்லாப் பிரபுக்களையும்கொண்டு திகழ்ந்தது. ஆனால் கொரிந்து மாதிரியான இடங்களில் உயர் குடியாட்சியானது பிரபுக்களில் ஒரு சிலரையே கொண்டிருந்தது. இப்படியிருக்கும் காலத்தில் ஆட்சி சட்டமானது அதிகக் குறுகலான சில குழு ஆட்சியாகும் (oligarchy).

சமூகத்தின் இந்தக் கட்டத்தில், பிரபுவின் இனங்களைச் சேர்ந்தவர்கள்தாம், அரசின் நரம்புகளாகவும், தசைநார்களாகவும் விளங்கினர். அக் காலத்தில் பிறப்புத்தான் மேம்பாட்டைக் காட்டக்கூடிய ஒரு பொது ஆதாரம். பிரபுக்களின் ஆட்சி ஓர் உண்மையான உயர்குடியாட்சி; சுருங்கச் சொல்லின் இஃது ஓர் உன்னத மேம்பாடுடைய அரசாங்கமாகும். பிரபுக்கள் ஆட்சிப் பாரத்தின் தந்திரத்தைச் செயல் முறையில் அறிந்திருந்தனர். இதில் இவர்கள் பயிற்சி அடைந்திருந்தனர். இவ்விதப் பயிற்சியைப் பாரம்பரியமாகத் தெரிந்திருந்தனர். உயர்குடியாட்சியில் பெரிய மக்கள் தோன்றவில்லை என்றாலும் — உயர்குடியாட்சியில் பெரு மக்கள் தோன்றுவது அவ் வாட்சிக்கே மோசத்தை விளைவிக்கக் கூடிய காரியமாகும் — அரசாங்கம் மிக அறிவுடனும், திறனுடனும் நடத்தப்பெற்று வந்தது. கொரிந்திலுள்ள குறுகிய உயர்குடியாட்சி போன்றவைகள் காலப்போக்கில் மிகவும் கொடுமையானவைகளாயின. முடியரசுகளைப்போல் உயர்குடியாட்சியின் முடிவுக் காலம் நெருங்கியபொழுது, உயர்குடியாட்சி முறையில் பயங்கரச் சீர்க்கேடுகளை நாம் காண்கின்றோம். எப்படியிருந்த பொழுதிலும், கிரேக்கக் குடியாட்சிகள் உயர்குடி மக்கள் காலத்தில் மிகச் செழுமையாகவும், மிகவும் திறமையாகவும் நடத்தப்பட்டு வந்தன.

குடியாட்சிகளின் தோற்றம் நம்மை வரலாற்றிலேயே புதியதொரு யுகத்தினுள் எடுத்துச்செல்ல இருக்கின்றது. அதே நேரத்தில் அரசர்கள் நிறைவேற்றிய பணிகளை உயர்குடியாட்சிகள் தொடர்ந்து நடத்தச் செய்வது ஒரு முக்கிய நிகழ்ச்சியாகும். கிரேக்க நகரங்களை ஈஜியக் கடலுக்கப்பாலுள்ள நாடுகளில் நிறுவினதும், அரசியல் பொறியை விரிவுபடுத்தியதுமான இரண்டு பெரிய செயல்களை உயர்குடியாட்சிகள் ஆற்றின. இதில் முதற் செயல், கிரேக்கர்கள் ஈஜியன் தீரத்தில் குடியேறியதன் தொடர்ச்சியேயாகும். குடியேற்றத்திற்குமுன் நகர வாழ்க்கை புகுத்தப்பட்டதன் விளைவாலாகிய சில தனிப் பண்புகளை இரண்டாவது செயலாகிய அரசியலின் விரிவில் காணலாம். குடியேற்றத்தின் துவக்கம் முடியாட்சியிலிருந்து குடியாட்சிக்கு மாறும் காலத்தைச் சேர்ந்தது. உயர்குடியாட்சிகள் குடியேற்

றத்தை முறைப்படி வளர்த்தன. குடியேற்றமும் ஒரு முறையான உருவத்தைப் பெற்றது. மன்னர்கள் தமது அரசுகளில் சிதறிக் கிடந்த கிராமங்களையும், குடும்பங்களையும் ஒன்றுசேர்த்து நகரங்களாக்க முற்பட்டனர். இவர்கள் துவக்கிவைத்த இந்த வேலையை உயர்குடியினர் உண்டாக்கிய அரசியல் யந்திரமானது திடமாக்கியது. மன்னராட்சி ஒழிக்கப்பட்டபோது அல்லது நாம் சொல்லுகிறபடி மன்னராட்சி 'சிறப்புக் குழுவினடியில் கொண்டு வரப்பட்ட பொழுது' (Put into commission) குடியாட்சியின் அரசாங்கத்தை நடத்திவந்த குடும்பங்கள் அரசர்களுக்குப் பதிலாக வரையறுக்கப்பட்ட காலத்திற்கே பதவிகளில் நிலைக்கக் கூடிய நடுவர்களை ஏற்படுத்தவேண்டியதாயிற்று. மேலும், எவ்விதம் நடுவர்களை வேலையில் அமர்த்துவது என்பதை தீர்மானிக் கவும், எவ்விதம் அவர்களுடைய வேலைகளின் எல்லைகளைக் கட்டுப் படுத்துவது என்று யோசிக்கவும் கடைசியில் எவ்விதம் அவரவர் களுடைய திட்டமான அதிகாரங்களை வழங்குவது என்றும் இவர்கள் கவனிக்க வேண்டியதாயிற்று. மூன்று பாகங்களைக் கொண்ட அரசியல் அமைப்பில் ஒரு பாகம் மறைந்துபோகவே அந்தப் பாகத்திற்குப் பதிலாக ஒரு புதிய யந்திரம் உண்டுபண்ண வேண்டிய அவசியம் தோன்றியது. உயர்குடி ஆட்சியின்போது மக்களது மனத்தில் சட்டமானது முன்னுளைவிட அதிகத் தெளிவான உருவத்தைப் பெற ஆரம்பித்தது. பழக்கங்களை வழி காட்டி நடத்திய மரபு வழக்கங்கள் சட்டங்களின் தோற்றத்தைப் பெற ஆரம்பித்தன. ஹோமரின் பாடல்களில் மன்னர்கள் அல்லது நியாயாதிபதிகள் குறிப்பிட்ட வழக்குகளில் தனித்த ஊழித் தீர்ப்புகளை அளிப்பதைத்தான் நாம் கேள்வி யுற்றுள்ளோம். உயர்குடியாட்சிக் காலத்திற்குப்பின் சட்டம் அளிப்பவர்களின் காலம் தோன்றுகிறது. இந்த உயர்குடியாட்சிகள் எடுத்தாண்ட முறைகளைச் சட்டமளிப்பவர்கள் செம்மையாக்கியும் தகுதியாக்கியும், சட்டத் தொகுதிகளில் பொருத்தியும் வைத்தனர்.

## 10. கிரீஸ் நாட்டுடன் பினீஷியர்களின் தொடர்பு

கிரேக்கர்கள் தமது ஊழ்வினைப் பயனுல் கடலைக் கொண்டு வாழ்க்கை நடத்தும் மக்களாயினர். இவர்கள் ஈஜியக் கடற் கரையை அடைந்தபின்னரே கடல் வாணிபத்தைக் கற்றுக் கொள்ள நேர்ந்தது. இதனைக் கற்றுக்கொள்ள நீண்டகாலம் சென்றது. அநேக ஆண்டுகளுக்குப் பின்னரே இவர்கள் பழைய கிரீட் கடல் அரசர்களின் இடத்தைப் பிடிக்க முடிந்தது. ட்ரோஜன் யுத்தத்திற்குப்பின் பல நூற்றுண்டுகளாகக் கிழக்கத்திய

நாடுகளுடன் ஈஜியனின் வாணிபத்தின் ஒரு பகுதி அயலார்களால் எடுத்து நடத்தப்பட்டது. சிரியாவின் கடற்கரையிலுள்ள சீதோன் (சைடன்-Sidon), தீரு (டயர்-Tyre) என்னும் பட்டினங்களைச் சேர்ந்த மக்கள் இந்த வாய்ப்பை விட்டுவிடவில்லை. யூதர்கள், அரேபியர்கள், அசீரியர்கள் முதலியோரைப்போல் இம் மக்களும் செமிட்டிக் இனத்தைச் சேர்ந்தவர்கள். கடற்கரையைச் சேர்ந்து, யூதர்களைப்போல் பிறப்பிலிருந்தே வாணிபத்தில் ஈடுபட்ட இம்மக்கள் முதன்முதலில் செங்கடலில் (Red Sea) வசித்து வந்தனர் என்றும் பின்பு இவர்கள் மத்தியதரைக்கடல் தீரத்தில் குடியேறினவர்கள் என்றும் சொல்லப்படுகிறார்கள். இந்த வெண்கல நிறமுடைய வியாபாரிகளைக் கிரேக்கர்கள் தாம் முதலில் கிரீட்டர்களை அழைத்ததுபோலவே, 'பீனெக்ஸ்' அல்லது 'சிவப்பு மனிதர்' என்னும் பெயர்கொண்டு அழைக்கலாயினர். இந்தப் பெயர் கிரேக்கர்களுடைய பாரம்பரியங்களில் ஒரு சில குழப்பங்களை உண்டு பண்ணியது. எப்படிக் காட்மஸ்ஸும், யூரோப்பாவும் பினீஷியாவிற்கு மாற்றப்பட்டனர் என்று நாம் முன்பே கண்டுள்ளோம்.

ஈஜியன் தீரத்தில் பினீஷியர்களின் கடல் ஆதிக்கம் ஓங்கியிருந்தது என்பதற்குப் பற்றுணை (warrant) நம்மிடம் இல்லை. வீரர்களின் யுக காலத்தில் நடந்த வாணிப முயற்சிக்கும், கிரேக்கரின் பிற்காலத்தில் நடந்த வாணிப முயற்சிக்கும் இடையே ஏறத்தாழ இரண்டு நூற்றாண்டுகள் கொண்ட இடைவேளை ஒன்றிருந்ததாகவும், இக் காலத்தில் கிரேக்க நாடு சரியான கடற்படைப் பலம் பொருந்தியதாயில்லாமல் இருந்ததால் வேறு வெளிநாட்டு வியாபாரிகளை வரவிடாமல் தடுக்க இயலாது இருந்தனர் என்றும், அதனால் கிரேக்க வியாபாரிகளும் டிரியன் வியாபாரிகளும் தங்களுக்குள்ளே இவ்வாணிபத்தைப் பிரித்துக்கொண்டனர் என்றும் ஹோமரிக் செய்யுட்களில் காணப்படும் சான்றுகள் நமக்கு அறிவிக்கின்றன. பினீஷியக் கப்பல்கள்மாத்திரமே கிரீஸ் நாட்டிற்கு வரவில்லை, கிரேக்கர்களும் சிரியா, சைப்ரஸ் (Cyprus) என்னும் இடங்களுக்குக் கப்பல்மூலம் போனார்கள்.[50] கெரியர்களும் (Carians) சிறந்த கப்பல் படையை வளரச் செய்தனர். டயர், சைடனிலுள்ள மக்கள், நாம் அடுத்த அத்தியாயத்தில் காணப்போவதுபோல், மேற்கு மத்திய தரையில் ஒரு புதிய பினீஷியாவை நிறுவினர்.

[50] நாம் காலத்தைச் சரியாகச் சொல்லுவதற்கில்லை என்றாலும் சைடனின் உன்னதப்பதவி பத்தாம் நூற்றாண்டு முடிவுக்கு வந்தது. இதன்பின் சைடனை வீழ்த்திய பிலீஸ்டைன்ஸ் மக்கள் சிறிதுகாலம் உன்னதப் பதவியிலிருந்தனர். இதற்குப் பிறகே டயர் நகரத்தின் வலிமையின் சாலம் ஆரம்பமாயிற்று.

ஆனால் ரோட்ஸ்ஸிலுள்ள காமிரஸ்ஸிலும், ஒரு வேளை சிதிரா தீவி லும் தவிர ஈஜியன் கடற்கரையில் எந்தப் பக்கத்திலும் இவர்கள் குடியேற்றங்களை நிறுவத் தீவிர முயற்சிகள் எடுத்தனரென்றும் அல்லது தமது முயற்சிகளில் வெற்றி பெற்றனரென்றும் தெரிய வில்லை. ஒருகால் இவர்கள் காஸ் (Cos), நிசிராஸ் (Nicyros), எரித் திரி (Erythrae) போன்ற மற்றும் சில இடங்களில் மீன்பிடிக்கும் நிலை யங்களை ஏற்படுத்தியிருக்கலாம். சிப்னாஸ் (Siphnos), தேஸாஸ் (Thasos) முதலிய இடங்களிலுள்ள தங்கச் சுரங்கங்களையும், அட்டிகாவிலுள்ள வெள்ளிச் சுரங்கங்களையும் முதன்முதலில் இவர்கள்தாம் வெட்டினார்கள் என்றும் கருதப்படுகின்றது. கொரிந்து பூசந்தியிலும், ஆதென்ஸ் நகரத்துச் சேம அரணாகிய அக்ராபாலிஸ்ஸின் அடிவாரத்திற்குப் பக்கத்திலும், உள்நாட்டு நக ராகிய தீபிஸ்ஸிலும் பினீஷியக் குடியேற்றங்கள் இருந்தன என்று சொல்லப்படுகின்றது. இப்பேர்ப்பட்ட குடியேற்றங்கள் முறையாக நிறுவப்பட்டன என்று நாம் உறுதியாகக் கூறுவதற்கில்லை. கடற் கரைகளிலும், தீவுகளிலும் பினீஷியர்கள் வியாபாரத்திற்காக நிலை யங்களை ஏற்படுத்தியது உண்மை; ஆனால் இந்தக் கானானியர்கள் (Canaanites) தமக்கென கிரேக்க பூமியில் வீடுகளை அமைத்ததாக வும் அல்லது கிரேக்க மக்களுடன் கொண்டும் கொடுத்தும் இருந்த தாகவும் தெரியவில்லை. பாஆலை (Baal) வழிபடுபவர்களுக்கும், ஸீயூஸ்ஸை வழிபடுபவர்களுக்கும் இடையே உள்ள பெரும்போராட் டம் இங்கே நடக்கப் போவதில்லை. சிரியாவிலுள்ள அழகிய மேசை விரிப்புகளையும், சைடனிலும், சைப்ரஸ்ஸிலும் உள்ள வெள்ளித் தொழிற்சாலைகளில் நல்லமுறையில் உற்பத்தியாக்கப்படும் கிண் ணங்களையும், கோப்பைகளையும் மற்றும் பலவிதமான பகட்டான ஆடைகளையும் ஆபரணங்களையும் ஏற்றிக்கொண்டு இவர்களுடைய கப்பல்கள் ஈஜியன் கடலில் உள்ளும் வெளியிலும், புகுந்து, தெற்கிலிருந்து வடக்கு நோக்கிச் செல்லும் காட்சியை நாம் அடிக்கடி பார்க்கலாம். ஏறக்குறைய இரண்டு நூற்றாண்டுகளுக்கு மேல் நடந்த இவ்விதமான இடைவிடாத வாணிபத் தொடர்பு கிரீஸில் பினீஷியர்களின் செல்வாக்கு வளர்ந்தோங்க ஏதுவா யிருந்தது. ஆப்ரோடைட் (Aphrodite) போன்ற மற்றக் கிரேக்க தேவதைகளின் வழிபாட்டில் நாம் சிரியாவிலுள்ள அஸ்டார்ட் (Astarte)டின் வழிபாட்டு முறைகளின் செல்வாக்கைக் காண லாம். பினீஷியர்களின் தெய்வமாகிய மெல்கார்ட் (Melkart) கிரேக்கர்களின் புராணங்களில் மெலிசேர்டிஸ் (Melicertes) என்று சேர்த்துக்கொள்ளப்பட்டார் என்பது ஒரு தப்பிதமாகும். மெல் கார்ட் (Melkart) கிரீஸின் பல பாகங்களில் கிரேக்கத் தெய்வ மாகிய ஏராக்கிளிஸ் (Heracles) என்பவருடன், ஒருமைப்பட்டுக்

காட்டப்படுவதை நாம் காண்கின்றோம். பினீஷியர்களின் தீவிர மான வாணிபம் வளர்ந்துவரும் அயோனிய நகரங்களுடன் இருந் திருக்கக்கூடும். எனவே, இவர்கள் அயோனியப் பெயர்களைத் தெரிந்துகொண்டு அவைகள் எல்லாக் கிரேக்கர்களுக்கும் உரிய பெயர்கள் என்று நினைத்து அவைகளைச் சிரியா முழுவதிலும் பரப்பினார்கள்.

பினீஷியர்கள் கிரீஸ் நாட்டிற்கும் அங்கிருந்து ஐரோப்பா முழுவதற்கும் ஓர் ஒப்பற்ற சேவை செய்தனர். அதனோடு ஒத்துப் பார்க்கும்பொழுது இவர்களின் வாணிபச் செல்வாக்கு முதலியன ஒன்றுமில்லையென்று நாம் சொல்லலாம். இவர்கள் கிரேக்கர் களுக்கு, நாகரிகத்தின் முக்கியக் கருவியாகிய, அகர வரிசை எழுத் துக்களை அல்லது அரிச்சுவடி எழுத்துக்களைக் (Alphabetic Writing) கொடுத்தனர். ஒருவேளை ஒன்பதாவது நூற்றாண்டின் ஆரம்பத் தில் பினீஷியர்களின் அரிச்சுவடி கிரேக்க மொழியின் தேவை களுக்கு ஏற்ப உருவாக்கப்பட்டது போலும். இந்த அரிச்சுவடியை மாற்றி அமைத்ததில் கிரேக்கர்கள் தமது சிறப்புத் திறமையை உலகத்திற்கு எடுத்துக் காட்டியுளர். பினீஷியர்களுடைய அரிச் சுவடியும் அவர்களுடைய செமிட்டிக் சகோதரர்களின் அரிச்சுவடி யும் மெய் எழுத்துக்களாலானவை; கிரேக்கர்கள் உயிர் எழுத்துக் களைத் தமது அரிச்சுவடியில் சேர்ந்தனர். பினீஷியர்களின் சில மெய் எழுத்துகளுக்கான ஓசைகள் தமது மொழியில் இல்லாததால், இந்தத் தேவைக்கு மேற்பட்ட குறிகளை உயிர் எழுத்துகளாக மாற்றியமைத்தனர்.

## 11. முற்பட்ட கிரேக்க வரலாற்றைக் கிரேக்கர்கள் புனரமைப்புச் செய்தல்

கிரேக்கர்கள் தமது சொந்த முற்பட்ட வரலாற்றைப்பற்றி என்னவென்று எண்ணினார்கள் என்பதை இப்போது நாம் கவனிப் போம். அவர்களுடைய வரலாற்றின் அமைப்பு வரலாற்றின் உண்மைகளால் கட்டுப்படாமல், புராண மரபின்மேல் கட்டப்பட் டுள்ளதாயினும், பல முக்கியத்துவம் பொருந்தியதாயிருக்கின்றது; ஏனெனில், அவர்களுடைய இறந்தகாலத்தின் கருத்துக்கள் அவர் களுடைய நிகழ்காலக் கருத்துக்களின் போக்குகளைப் பாதிக்க லாயின. புராணத்தை ஒட்டிய இவர்களுடைய இறந்தகால கருத்து க்ளானவை செயல் முறையில் பயனுள்ளவைகளாக இருந்தன. புராணத்தில் காணப்படும் நிகழ்ச்சிகள் அயல்நாட்டு அரசியல் தொடர்புகளுக்கு ஆதாரமாக அடிக்கடி பயன்பட்டன. எடுத்துக் காட்டாக ஒரு நிலப்பகுதியின் உரிமை தெய்வப்பிறப்பை உடைய

பழங்காலத்து வீரர்களின் உண்மைபோல் தோன்றுகின்ற வெற்றி களிலும் அல்லது ஆட்சிப் பகுதியிலும் நிலைப்படுத்தப்படலாம்.[52]

முதலில் வரலாற்றின் அறிவார்வம் வளர ஆரம்பித்ததற்கு முன் பிரபுக்கள் குடும்பத்தினர் தங்களைத் தெய்வ ஆரம்பத்தை உடையவர்கள் என்று எடுத்துக்காட்டும் விருப்பத்துடன் இறந்த காலத்தைத் தேர்ந்தாராய முன்வந்தனர். எனவே, தமது மரபு வரிசையை (Pedigree) வீர முன்னோர்களாகிய ஏராக்கிளிஸ் (Heracles) அல்லது ட்ரோஜன் யுத்தத்தில் பங்கெடுத்த வீரர் களின் மரபு வரிசையில் இணைக்கும்படி முன்வந்தனர். சில கார ணங்களை முன்னிட்டு ட்ரோஜன் யுத்தம் ஒரு தேசீய முயற்சி எனக் கருதப்பட்டது. ஆகையால் முதன்முதலில் ஆர்காலிஸ் நகரத் துடன் இணைக்கப்பட்ட ஏராக்கிளிஸ் ஒரு தேசீய வீரர் என்று நோக்கப்பட்டார். இதன் விளைவால்தான் கிரேக்கர்கள் தமது வரலாற்றை மரபு வரிசைகளாலாகிய(Genealogies) ஒரு பலகணிச் சட்டம்போல் அமைத்தனர். இங்கே காலத்தை இம் மக்கள் தலை முறைகள்மூலம் அளக்க முற்பட்டனர். மூன்று தலைமுறைகள் கொண்டது ஒரு நூற்றாண்டு என்று இவர்கள் கணக்கிட்டு வந்தனர். இப் புராண நிகழ்ச்சிகளின் ஒன்றுக்கொன்றுள்ள தொடர்புகளை (Mutual relations) நிலைப்படுத்தப் பிந்திய ஹோம ரிக் கவிஞர்கள் அரும்பாடு பட்டனர். ஆனால் 8ஆம் நூற்றாண்டில் ஏஸியட் (Hesiod) வகுப்பினரான (School) கவிஞர்கள்தாம் வீரர் களின் யுகத்திலுள்ள புராண நிகழ்ச்சிகளை வரலாற்றுக் கட்டுப் பாடான ஒரு முறைக்குக் கொண்டு சேர்த்தனர். இன்னாருடைய செய்யுட்கள் யாவும் காணாமல் போய்விட்டபோதிலும் ஆறும், ஐந்தாம் நூற்றாண்டுகளிலுள்ள உரைநடை எழுத்தாளர்கள் (Logographers) அல்லது 'கதை எழுதுவோர்' ஏஸியட் வகையின ரது முறையை முழுவதும் விரிவுபடுத்தி அமைக்கலாயினர். இவர் களில் அதிமுக்கியமானவர்கள்தாம் மைலிடஸ்ஸிலுள்ள (Miletus) எக்காடேபியஸ் என்பாரும் ஆர்காஸைச்சேர்ந்த அக்கூஸில்லாயஸ் என்போருமாவர். மேற்படி எழுத்தாளர்களின் முதல்நூல்கள் யாவும் காணாமல்போய்விட்டன. ஆனால் அவர்கள் கற்பித்தயாவும் பிற்காலத்தில் காணப்பட்ட தொகுப்போர் (Compilers) மூல மாகவும் உரையாசியர்கள் மூலமாகவும் நமக்குக் கிடைத்துள்ளன.

[52]க்ரோட் (Grote) இதனை நமது வரலாற்றிலேயே எடுத்துக் காட்டியுள்ளார்கள். ஆங்கில மன்னர்கள் ப்ரூட் (Brute) என்னும் ட்ரோஜன் வமிசத்தில் தோன்றியவர்கள் என்னும் நம்பிக்கை 17ஆம் நூற்றாண்டிலுங்கூட வலுவடைந்திருந்தது. ஸ்காட் லாண்டுடன் உள்ள வழக்கில் ஆங்கில மன்னரின் உரிமைகளை ஆதரித்துப் பேச இந்த நம்பிக்கை கி.பி. 130இல் ஓர் அரசாங்கப் பத்திரத்தில் காணப்பட்டது.

முதலாவதாக எப்படிக் கிரேக்க இனத்தைச் சேர்ந்த எல்லாக் கிளைகளும் உறவு கொண்டவை என்று தீர்மானிக்கப்படவேண்டும். 'ஹெலனீஸ்'[53] என்ற ஒரு பொதுப் பெயரால் கிரேக்க மக்கள் அழைக்கப்பட்டவுடன், அவர்கள் யாவரும் தெசலியில் வாழ்ந்த புராண வீரனாகிய 'எலன்'[54] என்ற முன்னோரின் சந்ததி என்றாக்கிக்கொண்டனர். இதன் பின் எப்படிப் பல இடங்களில் இக் கிளைகள் தோன்றலாயின என்று இவர்கள் விவரிக்க வேண்டியதாயிற்று. பல மொழிவகைகளைப் பேசும் கிரீஸ்நாட்டுக் கிரேக்க மக்களிடையே அவர்களை இனமாகப் பிரிப்பதற்கான கொள்கை நெறி ஒன்றை அமைக்க இவர்கள் அரும்பாடுபட்டிருக்கலாம். ஆனால் இவர்கள் கிழக்குக் கிரீஸ் நாட்டிற்கு அப்பால் ஈஜியனில் பார்க்கும் போது தமது உருநிழலைக் காட்டுவதுபோல் தம்முடைய சந்ததியாரே ஈயோலியர்கள், அயோனியர்கள், டோரியர்கள் என்று மூன்று சீராயுள்ள (homogeneous) தொகுதிகளாக வசிப்பதைக் கண்ணுற்றனர். இது கிரேக்கர்களை இனமாகப் பிரிக்க ஓர் எளிய முறையை யளித்தது. ஈயோலஸ், அயோன், டோரஸ் என்பவர்கள் எலனின் மூன்று குமாரர்களாக இருக்கக்கூடும். இவர்களின் குடும்பங்களே முறையே ஈயோலியர்கள், அயோனியர்கள், டோரியர்களாயினர் என்றனர். ஆனால் இங்கு ஓர் இக்கட்டிருந்தது: ஹோமரின் அக்கியர்கள் யார் என்பதேயாகும். இவர்களை ஈயோலியர், அயோனியர் அல்லது டோரியர்களுடன் இணைக்க முடியாது. ஏனென்றால், இம் மூவரும் இலியட்டில் ஒரு பங்கும் எடுக்கவேயில்லை. இக்கட்டை நீக்க ஒரு புது வழி ஏற்படுத்தப்பட்டது. ஈயோலஸ், டோரஸ், ஸ்யூதஸ் (Xuthus) என்பவர்கள் எலனின் குமாரர்கள் என்றும், அயோன், அக்கியஸ் (Achaeus) என்பவர்கள் ஸ்யூதஸின் குமாரர்கள் என்பதுமே இவ் வழியாகும்.[55] இதற்குப்பின் மொழியின் உபயோகத்தாலும், புராணத்தின் மூலமாகவும் கிரேக்க மக்களின் இன அமைப்பு நூலை இந்தப்

[53] கீழே பின் பகுதியில் பார்க்கவும்.

[54] எலனீஸ் தெசலியைச் சேர்ந்தவர்கள் என்று ஹோமரின் செய்யுட்கள் கூறுவதால், எலனையும் அவருடைய மக்களையும் தெசலியில் காண்கின்றோம். எலன் ஸீயூஸின் மகன் என்றும், டீயுகாலியனின் (Deucalion) (இவர் ப்ரோமீதியஸ் பாண்டோரா இவர்களின் மகன்) மகன் என்றும் பலவிதமாகக் கூறுகின்றனர்.

[55] அயோனும் அக்கியஸும் சகோதரர்கள் என்னும் நம்பிக்கைக்குக் காரணம் டோரியர்கள் பெலோப்போனீஸஸைப் படையெடுக்கும்போது அக்கியர்களும், அயோனியர்களும் அவ்விடத்தை விட்டுச் சென்று ஆசியா மைனரில் குடியேற்றங்களை நிறுவியதேயாகும்.

பெயர் ஒட்டுச் சீட்டுக்களின்கீழ் எளிதில் அமைக்க முடிந்தது. அதுவு மின்றி எண்ணுக்கடங்காத இசைமொழிகளை இம் மூன்று[56] செயற்கைத் தொகுப்புகளில் அடக்கினர்.

மற்றெல்லாக் கிரேக்க நிகழ்ச்சிகளுக்கும் உறைவிடமாக இருப் பது ட்ரோஜன் யுத்தமும், பெலோப்போனீஸஸில் டோரியர் களின் வெற்றியுமாகிய இவ்விரண்டு பெரிய நிகழ்ச்சிகளேயாகும். டோரியர்களின் வெற்றியைப்பற்றி ஒரு விசித்திர வரலாறு ஆர் காஸில் ஆரம்பித்து, பின் பொதுவாக எல்லோராலும் ஏற்றுக் கொள்ளப்பட்டது. இப் பதிப்பு கிரேக்கர்கள் தமது வரலாற்றைத் திருத்தி அமைத்ததன் காரணத்தையும் முறையையும் நன்கு எடுத்துக்காட்டுகின்றது. ஆர்காஸிலுள்ள அரச குடும்பமாகிய டெமினிட்ஸ் (Temenids) தாங்கள் டோரிய நிலையங்களை அல்லது நிறுவனங்களை ஏற்படுத்திய எகிமஸ் (Aegimius) என்பவரி லிருந்து தோன்றியவர்கள் என்று சொல்லி வந்தனர். ஆனால் ஏராக்கிளிஸின் புகழ்ச்சி பெருகுங்காலத்தில் டெமினிட்ஸ் தங்களை ஏராக்கிளிஸினுடன் இணைக்க விரும்பினார்கள். இந்தப் பிரச்னை ஒரு வியக்கத்தக்க திறமையுடன் விடுவிக்கப்பட்டது (solved). மூன்று டோரிய குடும்பங்களின் புராண முன்னோர்களான ஐலஸ் (Hyllus), பாம்பிலஸ் (Pamphylus), டைமன் (Dyman) என்பவர்கள் எகிமஸ்ஸின் குமாரர்கள் என்று இயற்கையாகவே கருதப்பட்ட னர். இப் புதிய கதையின்படி ஐலஸ் உண்மையில் ஏராக்கிளிஸின் மகன். தெசலியின் டோரிய மன்னனாகிய எகிமஸ் லாபித்தியர் களுடன் (Laphiths) யுத்தம் செய்யும்போது, ஏராக்கிளிஸ் எகி மஸ்ஸுக்கு உதவியளித்தார் என்றும், தமது துணிவுள்ள செயலுக் காக எகிமஸ்ஸின் நாட்டில் மூன்றில் ஒரு பங்கை அன்பளிப்பா கப் பெற்றார் என்றும் கூறப்படுகிறது. இவருடைய மறைவிற்குப் பின் இவருடைய மக்களை எகிமஸ் காப்பாற்றி, ஐலஸ்ஸைத் தமது வாரிசாக்கி அன்னாருக்கு அவருடைய தகப்பனாருடைய மூன்றில் ஒரு பங்கைக் கொடுத்து வைத்ததாகவும் கூறப்படு கின்றது. ஐலஸின் மக்கள் பெலோப்போனீஸஸில் ஏராக்கிளீஸின் உடைமைகளைத் திரும்ப எடுத்துக்கொள்ள இயலாதவர்களா னார்கள். ஐலஸின் பேரர்களாகிய டெமினஸ். (Teminus) கிரேஸ் பான்டிஸ் (Cresphontes) அரிஸ்டோடமஸ் (Aristodemus) என் போரின் காலத்தில்தான் இவ் வுடைமைகள் திரும்பக் கைப்பற்றப் பட்டன. இவர்கள் ஒரு பெரிய டோரியன் படையுடன் ஒற்றைக்

[56] நான்கல்ல மூன்றேதான். ஏனென்றால், அக்கியர்கள் ஒரு பாகத் தில் டோரியருடனும் மற்றொரு பாகத்தில் அயோனியருடனும் சேர்க்கப்பட்டனர்.

கண்ணுடைய ஆக்ஸிலஸ் (Oxylus) என்பவருடைய நடத்துத லின் கீழ், நாபாக்டஸிலிருந்து கொரிந்து வளைகுடாவைக் கடந்து சென்று ஆர்கேடியாவைத் (Arcadia) தவிர, பெலோப்போனீ ஸஸ் முழுவதையும் வென்றனர். ஆக்ஸிலஸ் எடுத்துக்கொண்ட சிரமத்திற்காக அவனுக்கு ஈலிஸைக் (Elis) கொடுத்தனர். இந்தத் தீபகற்பத்திலுள்ள அக்கியர்களில் கடலைத் தாண்டிக் குடியேறச் செல்ல மனமில்லாதவர்கள் வடக்கேயுள்ள கடற்கரைப் பிர தேசத்தில் குடியேறினர்—இதுவே வரலாற்று அக்கியாவின் துவக் கமாகும். பெலோப்போனீஸஸின் மற்ற மூன்று பாகங்களாகிய மெஸ்ஸீனியா (Messenia), லக்கோனியா (Laconia), ஆர்காஸ் (Argos) முறையே கிரேஸ்பான்டிஸ், அரிஸ்டோடீமஸ், டெமி னஸ் என்னும் சகோதரர் வசமாயின. எப்படி ஸ்பார்ட்டாவில் இரண்டு அரச குடும்பங்கள் தோன்றின என்பதற்கு ஒரு விளக்கம் கூறப்பட்டது. அது என்னவென்றால், திடீரென்று அரிஸ்டோடீ மஸ் மரித்துப்போகவே, அவருடைய இரட்டைப் பிள்ளை களாகிய யூரிஸ்தீனீஸ் (Eurysthenes) ப்ராகிளிஸ் (Procles) என்பவர்களிடையே லாக்கோனியா பிரிக்கப்பட்டது.[57]

இப்படி டோரியர்களுடைய படையெடுப்பை, அநீதி யாகத் தம்மிடமிருந்து எடுத்துக்கொள்ளப்பட்ட உரிமைகளை, திரும்ப டோரியர் எடுத்துக் கொண்ட நியாயமானதொரு காரியம் எனக் காட்டுகின்றனர். ஆர்காஸிலும், ஸ்பார்ட்டாவிலுமுள்ள அரச குடும்பங்கள் தமது டோரிய ஆரம்பத்தைப் புறக்கணித்து, டோரியர்கள் தோன்றுவதற்குமுன் ஆர்காலிஸில் இருந்த பிர புக்களுடன் தொடர்புள்ள ஏராக்கிளிஸ் என்பாருடன் இரத்தத் தால் தம்மை இணைத்துக்கொண்டனர்.

கிரீஸின் ஒவ்வோர் இடமும் தனக்கென்று தனியான புராணக் கதைகளை யுடையதாக இருந்தது. இப் புராணக் கதைகள் சுயேச்சையாக வளர்ந்து வந்தன. சில வேளைகளில் இவை கவிஞர், கதை எழுதுவோர் முதலியோரின் புராணங்களை மாற்றியமைக்கும் திட்டங்களுக்கு ஏற்பத் திருத்தி மாற்றி யமைக்கப்பட்டன. ஆனால் சில புராணக் கதைகள், இயல்பில் பொருத்தமில்லாத அநேக காரியங்கள் கொண்டிருந்தபோதிலும் மக்களால் தயக்கமின்றி ஏற்றுக்கொள்ளப்பட்டுப் பெரும்பாலும் வழக்கிலிருந்து வந்தன. ஆகையால்தான் நாம் ஹோமரின் பாக்க

[57] பின் பகுதியில் பார்க்கவும். எஜிட் (Agids) யூரிபான்டிட் (Eurypontids) என்னும் அரச குடும்பங்களின் முன்னோர் களான எஜிஸ் (Agis) ஸும் யூரிபானும் (Eurypon) யூரிஸ்தீனீஸ், ப்ராகிளிஸ் என்போருடைய குமாரர்களாக்கப்பட்டார்கள்.

ளிலும், எஸியடின் (Hesiod) புராணங்களிலும் சில முரண்பாடானவையும், நம்பக்கூடாதனவுமான கதைகளைக் காண்கிறோம். எடுத்துக்காட்டாகப் புராணத்தின்படி காட்மஸ் என்பவரால் தீப்ஸ் நிறுவப்பட்டது. ஆனல் ஹோமரின் ஒடிசிப் (Odyssey) படி ஆம்பியன் (Amphion), ஸீதஸ் (Zethus) என்போரால் தீப்ஸ் கட்டப்பட்டது என்று கூறப்படுகிறது. ஒரு புராணத்தின்படி கொரிந்து பட்டினம் சமுத்திரத்தின் மகளாகிய ஈபைரி (Ephyre) யினல் நிறுவப்பட்டது. மற்றொன்றின்படி இதை நிறுவியவர் ஈயோலஸின் மகனுகிய ஸிஸிபஸ் (Sisyphus) ஆவர். நமக்குக் கிடைக்கப்பட்டுள்ள மரபு வரிசைப்படி டோரியர்கள் தோன்றுவதற்கு முன்னுள்ள ஆர்காஸிற்கும், எலனுக்கும், அவனுடைய குமாரர்களுக்குமிடையே தொடர்பு ஒன்றுமில்லை. ஆர்காஸ், இனுக்கஸ் (Inachus) என்னும் நதியிலிருந்து பிறப்பிக்கப்பட்டது. இனுக்கஸ், மற்ற நதிகளைப்போல் சமுத்திரத்தின் மகனும். ஆர்காஸ் இவருடைய பேரனும்; டானய் (Danaoi) குலத்தைத் தோற்றுவித்த அயோ (Io) இவரின் புத்திரியாவார். இதிலிருந்து நாம் அறிவது என்னவென்றல், டோரியர் தோன்றுவதற்குமுன்னுள் ஆர்கைவ்ஸ் எலனியர்கள் அல்லர்; ஏனென்றல், இவர்கள் எலனிலிருந்து உதிக்கவில்லை. இந்தப் புராணமானது வரலாற்றிற்கு ஏற்ப உண்மையாயிருக்குமானல் இவர்கள் தங்களுடைய தோற்றத்தை அயோனிலிருந்து எடுத்திருக்க வேண்டும். ஏனென்றல், ஒரு பெரிய அயோனியத் தொகுதி ஆர்காஸிஸில் இருந்திருக்கலாம்.

ஆனல், பெரும்பாலான கிரேக்கர்களுக்கும், எலனுக்கும், அவருடைய குமாரர்களுக்குமிடையே தொடர்பானது செயற்கையாக உண்டுபண்ணப் பட்டதேயாகும். ஈயோலஸிடமிருந்தே முக்கிய மரபு வரிசைகள் ஆரம்பிக்கின்றன. அவருக்கு ஏழு குமாரரும், ஐந்து குமாரத்திகளும் இருந்தனர். எனவே, நம்பக்கூடியவரையில் தொடர்புகளை ஏற்படுத்துவது எளிதான காரியம். ஈடோலியன் புராணக் கதைகள் இவருடைய மகளாகிய காலிஸ் (Calyse)ஸைச் சுற்றியுள்ளன. இவருடைய மகனுகிய ஸிஸிபஸ் கொரிந்துவை நிறுவினன். இவருடைய மற்றொரு மகனுகிய கிறிதுவஸ் (Cretheus)ஸிலிருந்து தோன்றியவர்களே தெசலியன் வீரர்களான அட்மெட்டஸ்ஸும் (Admetus) ஜேசனும் (Jason) ஆவர். மைலீட்டஸ்(Miletus)ஸிலும், அயோனியாவிலுமுள்ள ஏனைய நகரங்களிலும் வசித்த கோட்ரிட் (Codrid) குடும்பங்களுக்காக ஏற்படுத்திய மரபு வரிசை மிகவும் சுவையானதாயிருக்கின்றது. இவர்கள் தமது மரபு வரிசை போசிடோனுக்கும் (Poseidon) அதே சமயத்தில் எலனுக்கும் எடுத்துச்செல்கின்றனர்.

கதையின்படி ஈயோலஸ்ஸின் மகனுகிய சால்மோனியஸ் (Salmoneus)ஸின் குமாரத்திப் போசிடோனுக்குப் பீலியஸ் (Pelias) நீலியஸ் (Neleus) என்ற இரட்டைக் குழந்தைகளைப் பெற்ருள். பீலியஸ் தெசலியிலுள்ள அயால்கஸ் (Iolcus) அரசைத் தன் கைவச மாக்கும்பொழுது, நீலியஸ் நாட்டை விட்டுச்சென்று தனக்கென்று ஓர் அரசை பெலோப்போனீஸஸின் தென்மேற்கில் பைலஸ் (Pylus) என்னுமிடத்தில் உண்டுபண்ணிக் கொண்டான். இவனுக்குப்பின் தமது முதுமைக் காலத்தில் ட்ரோஜன் யுத்தத்தில் பங்கெடுத்த நெஸ்டார் (Nestor) அரசரானுர். நெஸ்டாரின் மறைவிற்குப்பின் மூன்று அரசர்கள் ஒருவர்பின் ஒருவராக பைலஸில் ஆட்சிபுரிந்தனர். நான்காவது மன்னனுகிய மேலாந்தஸ் (Melanthus) காலத்தில் டோரியர்கள் பெலோப்போனீஸஸை அடைந்தனர். மேலாந்தஸ் டோரியர்களின் தாக்குதல்களுக்குப் பின்வாங்கி ஆதென்ஸ் நகரை அடைந்து அங்கே அந்நகருக்கு மன்னரானுர். மேலாந்தஸ் கோட்ரஸ்(Codrus)ஸின் தந்தையாவார். இதற்குப்பின் கோட்ரஸின் மகனுகிய நீலியஸ் (Neleus) ஆசியா மைனருக்கு அயோனியக் குடிப்பெயர்ச்சியைத் தலைமை தாங்கி நடத்தினர். இப்படியாகப் பல்வேறு பரம்பரைக் கொள்கைகள் ஒரு கதையாக அமைக்கப்பெற்றன. அயோனியாவில் துவங்கிய இக் கதை அட்டிகா (Attica)வால் ஏற்றுக்கொள்ளப் பட்டு, அத்தீனியர்கள் தம்முடைய ஆதி வரலாற்றின் ஒரு பாகத்தைப்பற்றிக் கொண்டுள்ள கருத்துக்களைப் பாதித்தது.

தங்களுடைய புராணக் கதைகள் தங்களுடைய தேச எல்லைகள், தங்களுடைய சொந்த இனம் இவைகளில் மாத்திரம் பரவி இருக்கவேண்டும் என்று கிரேக்கர்கள் ஆசை கொள்ளவில்லை. கிரேக்கர்கள், கிரேக்கர்கள் அல்லாத அநாகரிகமுள்ளவர்கள் (Barbarians) என்று பாகுபடுத்தி இறுமாப்பாகப் பேசும் இவர்கள், தங்களுடைய முன்னோர்களையும், தங்களது புராணக் கதைகளையும் வெளிநாடுகளுடன் தொடர்பு கொள்ளச் செய்தனர். இப்படியாக அயோ(Io)வின் புராணக்கதை ஆர்காஸிலுள்ள டானய் மக்களை எகிப்தியர்களின் நெருங்கிய உறவினர்களாக்குகின்றது (cousins). அயோ(Io)தான் ஸியூஸின்மேல் கொண்ட காதலினுல் இரண்டு பெரிய மனித இனங்களின் வீர முன்னோர்களாகிய (eponymous ancestors) டானுஸ் (Danaus), இஜிப்டஸ் (Aegyptus) என்பவர்களுக்குப் பாட்டியானுள். தீப்ஸிலுள்ள காட்மியர்களுக்குத் தகப்பன் என அர்த்தம் கொள்ளும் பெயருடைய காட்மஸ் ஒரு பினீஷியன் என்றும், இவன் தன் தமக்கையாகிய யூரோப்பாவைத் தேடி தன் நாட்டைவிட்டு வெளியேறிப் பின் பியோஷியாவில் குடியேறினுன் என்றும் ஒரு கதை கூறுகின்றது.

பெலோப்ஸை சிபிலஸ் (Sipylus) மன்னராகிய பிரிஜியன் டான்டலஸ்(Phrygian Tantalus)ஸின் குமாரராக்கி, பின்பு அவரை பெலோப்போனீஸஸ்ஸுக்குக் குடிப்பெயரச் செய்து அங்கே ஆர்காஸில் பிற்காலத்தில் அகமெம்னன் (Agamemnon) தோன்றிய அந்த ஓர் அரச வரிசையை ஏற்படுத்தியதாகச் செய்யும் இந்தக் கதை அநேகரால் நம்பப்பட்டு வந்தது. கொரிந்து நாட்டு புராணக் கதை ஒன்று கொரிந்துவின் ஆதி வரலாற்றை கால்சிஸ் (Colchis) ஸுடன் இணைக்கின்றது. இக்கதைப்படி சூரியனுடைய மகனை ஈடிஸ்தான் கொரிந்துவின் முதல் மன்னன் ஆவான்; அவனுடைய மகள் நாட்டின் பட்டத்து இளவரசி யாவாள். கிரேக்கர்கள் தாம் கிரீஸ் நாட்டிற்குள் புகுந்து தமது அரசை நிறுவுவதற்குமுன் எங்கு வசித்தனர் என்பதை அடியோடு மறந்துவிட்டனர். அவர்கள் தம்முடைய மூதாதையர்களில் சிலர் வடக்கிலிருந்தல்லாமல் கிழக்கிலிருந்து குடிபெயர்ந்து வந்ததாக எண்ணுகின்றனர்.

எல்லாப் புராணக் கதைகளிலும் கிரேக்கர்களால் மிகவும் நம்பப்பட்டதும், தேசீயச் சிறப்பைப் பெற்றதுமானது அமெஸான்களின் கதை. இக்கதையின் துவக்கம் இருளடைந்து கிடக்கின்றது. எனவே, இது விசித்திரக் கதையாக இருக்கின்றது. வலிமையும் உரமும் கொண்ட போர்வீரப் பெண்கள், ஆண் மக்களுடன் வாழாமல், தன்னந்தனியே வீரயுகத்தில் ஆசியாவில் வாழ்ந்ததாகக் கருதப்பட்டது. இவர்கள் கிரேக்க வீரர்களின் தகுதியான எதிரிகளாயிருந்தனர். அடிச்சொல் வரலாற்றின்படி அமெஸான் என்பதற்கு நேரான பொருள் 'முலையில்லா' என்பதால் இவர்கள் வில்லைச் சரியாக இழுப்பதற்காகத் தமது வலக் கொங்கைகளை எரித்துப் போடுவது வழக்கம் என ஒரு நம்பிக்கை தோன்றிற்று. பிரிஜியாவில் அவர்களுடைய படையுடன் தாம் எப்படி யுத்தம் புரிந்தார் என்று இலியட்டில் ப்ரியம் (Priam) கூறுகின்றார். பெலரபோனு(Bellerophon)க்குக் கொடுக்கப்பட்ட மிகுந்த ஆபத்தான கடமைகளில் ஒன்றானது, அவர் இந்த அமெஸான்கள்மேல் படையெடுத்துச் செல்லவேண்டியதே. பிந்திய ஹோமருடைய பாக்கள் ஒன்றில் பென்திஸிலியா (Penthesilea) என்னும் அமெஸான், கிரேக்கர்களுடைய ஒரு பயங்கர எதிரியாகத் தோன்றுகிறாள். அமெஸானிய இராணியின் இடைக்கச்சை (ஒட்டியாணத்தை) எடுத்துக்கொள்ளுவது எராக்கிளிஸின் ஒரு முக்கிய வேலையாயிற்று. இந்த வீரச்செயல்கள் யாவும் ஆசியா மைனரில் நடந்தன. இந்தப் பெண்கூட்டத்தவர் பல இடங்களில் காணப்பட்டபோதிலும் இவர்களுடைய சரியான

ஆதி இல்லம் கிரேக்கக் குடியேற்றமாகிய அமிஸஸ் (Amisus) அருகிலுள்ள தெர்மோடான் (Thermodon) நதிதீரமாகும். ஆனுல் அமெஸான்கள் கிரீஸையே தாக்கினர். அவர்களுடைய இராணி யாகிய அன்டியோப்பை(Antiope), திஸியூஸ் மன்னன் தூக்கிச் செல்லவே, இவர்கள் அட்டிகாவின்மீது படையெடுத்தனர். ஒரு பயங்கர யுத்தம் ஆதென்ஸ் நகரில் மூண்டது. ஒரு நீண்ட போருக்குப் பின்னரே இவர்கள் தோற்கடிக்கப்பட்டனர். திஸியூஸின் பண்டிகையில் அத்தினியர்கள் அமெஸான்களுக்குப் பலிகளைச் செலுத்துவது வழக்கம். ஆதென்ஸ் நகரத்தின் மேற்குப் பாகத்தில் அமெஸானியான் (Amazoneion) என்ற ஒரு பெரிய கட்டடமும் இருக்கிறது. எனவே, ஐஸோக்ராட்டிஸ் (Isocrates), பிளேட்டோ (Plato) முதலிய பெரியார்கள்கூட இந்த நிகழ்ச்சியை ட்ரோஜன் யுத்தத்தைப்போலவே ஒரு வரலாற்று உண்மை எனக் கருதினர். கிரேக்கர்கள் அமெஸானியருடன் செய்த போர்கள் கிரேக்கச் சிற்பிகளுக்குப் பெருவிருப்பத்திற்குரிய பொருளாயின. ட்ரோஜன் யுத்தம், தங்க ஆட்டுமயிரை (Golden fleece) அடையச் செய்த தீரச்செயல்கள்போல் அமெஸானியர்களுடன் இட்ட போர்களும் கிரீஸுக்கும் ஆசியாவிற்கும் நடுவே ஆதியில் ஏற்பட்ட நீண்ட போராட்டங்களுடன் உணர்ச்சிகரமாக இணைக்கப்பட்டன.

ஏராக்கிளிஸின் கடுமுயற்சிகள், ட்ரோஜன் யுத்தம், ஆர்கோனுட்டியர்களின் கப்பற் செலவு, காட்மஸ்ஸின் கதை, ஈடிப்பஸ் (Oedipus)ஸின் வாழ்க்கை வரலாறு, ஆர்கைவ் நாட்டைச் சேர்ந்த அட்ராஸ்டஸ் (Adrastus) தீப்ஸ் நகரை இருதரம் முற்றுகையிடல் போன்ற மற்ற நன்கு தெரிந்த கதைகள் ஆகிய இப் புகழ்பெற்ற புராணக் கதைகளின் விவரங்கள் யாவும் புராணத் தொகுதிகளைச் சேர்ந்ததால், இப்போதுள்ள நமது ஆற்றல் எல்லேக்கு அப்பாலானவையாகும். ஆனுல் இவைகளைப் பிந்திய கிரேக்கர்கள் நம்பினுர்கள் என்றும், இவைகளைத் தெளிவுள்ள (Solver) வரலாறு என்று வாதாடினர் என்றும், இவைகளில் அநேக வரலாற்றை அடிப்படையாகக் (எவ்வளவு மென்மை வாய்ந்ததாக இருந்தபோதிலும்) கொண்டவை என்றும் நாம் அறிய வேண்டியது மிகவும் அவசியம். ட்ரோஜன் யுத்தத்தின் கதையில் மற்றக் கதைகளில் காணப்படுவதைவிட அதிகமான வரலாற்றுப் பொருண்மைகள் கிடக்கின்றன. ஆனுல் ஆர்கோனுட்டியர் புராணக் கதை, காட்மஸ் கதை முதலியவைகள் உண்மையில் நடந்த நிகழ்ச்சிகளின் மங்கலான நினைவுகளையுடையனவாயிருக்கின்றன. வீரயுகத்தில் தீப்ஸும் ஆர்காஸும்

போட்டியிட்டும் போர் புரிந்தும் இருக்கக்கூடும் என்பது ஒரு வகையாக நமக்கு விளங்குகின்றது.

இந்த வரலாற்றுக் கதைகளை உண்டுபண்ணுவதற்கு இரண்டு ஆற்றல்கள் இருந்தன. அவற்றுள் முதலாவது, குடும்பங்களும் நகரங்களும் தங்களுடைய தோற்றத்தைத் தெய்வங்களிலிருந்து எடுத்துக்காட்டும் வழக்கம்; இரண்டாவது, இடங்களை முக்கியமாக நகரங்களையும், ஆறுகளையும், ஊற்றுகளையும் மனிதர்களாகப் பாவிக்கும் கிரேக்க இயல்புணர்ச்சி. பின்பு எப்பொழுது மக்கள் இனம், மொழி இவைகள்மூலம் சமூகப் பொதுஉணர்ச்சி பெற்று, தமது இறந்த காலத்து நிகழ்ச்சிகளைப்பற்றி ஆழ்ந்தாராய முற்பட்டனரோ அப்போது கிரீஸ் நாட்டின் புராணக் கதைகள் யாவையும் இணைக்க முயற்சிகள் இயற்கையாகவே எடுக்கப்பட்டன. இவை யாவும் உண்மை என்று கிரேக்கர்கள் கருதியதால் இவைகளிலுள்ள வேற்றுமைகளைப் போக்கி இவைகளை ஒன்று சேர்க்க முனைந்தனர். கடைசியில், இவைகள் மரபு வரிசைகளைத் தலைமுறையாகக்கொண்டு கணக்கிடப்பட்ட காலவரையறை முறையில் ஒழுங்காக அமைக்கப்பெற்றன. மைலீட்டஸ்ஸைச் சேர்ந்த எக்காடியஸ் (Hecataeus), 40 ஆண்டுகள் கொண்டது ஒரு தலைமுறை என்று கணக்கிட்டார். ஆனால் பொதுவாக மூன்று தலைமுறைகள் கொண்டது ஒரு நூற்றாண்டு என்று கணக்கிடப்பட்டது. மக்கள் பலரால் ஏற்றுக்கொள்ளப்பட்ட முறைப்படி கி. மு. 1184இல் ட்ராய் கைவசமாக்கப்பட்டது. கி. மு. 1104இல் எராக்கிளிட்ஸ் (Heraclids) தலைமையின்கீழ் டோரியர்கள் பெலோப்போனீஸஸின்மேல் படையெடுத்தனர் என்று உறுதியாக்கப்பட்டது. இக் காலங்களை நிறுவ எடுத்துக்கொண்ட முறைகளை நாம் கவனிக்கும்போது இவ் விரண்டு காலங்களும் அதிகமாக ஒத்து வருகின்றன என்று கூறலாம்.

இராடோஸ்தனீஸ் முறைப்படி அமைக்கப்பட்ட
முக்கிய காலக் குறிப்புகள் (ஏறத்தாழக் கி. மு. 220.)

| | | |
|---|---|---|
| காட்மஸ் | கி. மு. | 1313 |
| பெலோப்ஸ் | ,, | 1283 |
| எராக்கிளிஸ் | ,, | 1261—1209 |
| ஆர்கோனட்டியர்கள் | ,, | 1225 |
| தீப்ஸை எதிர்த்த எழுவர் | ,, | 1213 |
| ட்ராயின் வீழ்ச்சி | ,, | 1184 |

இராடோஸ்தனீஸ் முறைப்படி அமைக்கப்பட்ட முக்கிய காலத் தேதிகள்—(ஏறத்தாழக் கி.மு. 220) தொடர்ச்சி.

| | | |
|---|---|---|
| தெசலியர்களின் வெற்றி<br>பீயோஷியர்களின் ,,<br>ஈயோலியர்களின் குடிப்பெயர்ச்சி | கி. மு. | *1124* |
| எராக்கிளிடியர்களின் திரும்புதல் | ,, | *1104* |
| கோட்ரஸின் மறைவு | ,, | *1044* |
| அயோனியர்களின் குடிப்பெயர்ச்சி | ,, | *1044* |
| ஸ்பார்ட்டாவில் லைக்கர்கஸ் | ,, | *885* |

# 2. கிரீஸின் விரிவு

## 1. கிரேக்கக் குடியேற்றத்தின் காரணங்களும் குணவியல்பும்

கிரீஸ் நாட்டிற்கும் ஈஜியன் கடற்கரைகளுக்கும் அப்பால் கிரேக்கர்கள் பரவியதும், திரேஸ், (Thrace), கருங்கடல், இத்தாலி (Italy), சிசிலி (Sicily), ஸ்பெயின் (Spain), கால் (Gaul) முதலிய இடங்களில் கிரேக்கக் குடியேற்றங்கள் நிறுவப்பட்டதும் எப்பொழுது துவங்கியது என்று தெரியாதபோதிலும், இது ஆரும் நூற்ருண்டில் முடிவுபெற்றது என்று தெரியவருகிறது. ஆனல் இது தனிப்பட்ட அல்லது தொடர்பில்லாத நிகழ்ச்சி என எண்ணக்கூடாது. இது முன்னுளில் கிரேக்கர்கள் ஈஜியன் தீவு களிலும், ஆசியா மைனர் கடற்கரைகளிலும் பரவிய இயக்கத்தின் தொடர்ச்சியேயாகும். இந்த இயக்கத்தின் விவரங்களைக் கிரேக்கர் களே மறந்துபோயினர். எனவே, இவைகள் நமக்குத் தெரிய வில்லை.

கிரேக்கக் குடியேற்றத்தின் காரணம் வாணிபத்தில் அவர்கள் கொண்ட அக்கறைகளில் மாத்திரம் காண்பதற்கில்லை ; பெரும் பான்மையாக வாணிபமே காரணமாகக் காணப்படுகிறது ; கருங்கடலை ஒட்டியுள்ள குடியேற்றங்களில் இவை முக்கிய நோக்கமா யிருந்திருக்கக்கூடும். கிரேக்கக் குடியேற்றத்திற்கும் பினீஷியக் குடியேற்றத்திற்கும் உள்ள ஒரு பெரிய வித்தியாசம் என்னவென்ருல், பினீஷியர்கள் தமது வாணிபத்தை விருத்தி செய்யவே குடியேற்றங்களை அமைத்தனர்; கார்த்தேஜ் போன்ற ஒரு சில குடியேற்றங்கள், தாம் வாணிபத் தலங்கள் அல்லது பண்டகசாலைகள் அமைப்பதுமட்டும் தமது நோக்கமாகக் கொள்ளவில்லை. ஆனல் கிரேக்கக் குடியேற்றங்கள் வாணிப நிலை யங்களை மாத்திரம் எண்ணி ஏற்படுத்தப்படாமல் மற்றத் தேவை களுக்காகவும் ஏற்படுத்தபட்டன. 'ஆர்கோ கப்பல் செலவு'

'ஒடிஸியஸின் வீடு திரும்புதல்' போன்ற புராணக் கதைகள் எடுத்துக் காட்டுவதுபோல் கிரேக்கக் குடியேற்றங்கள் அவர்களுடைய துணிகரச் செயல்களைக் கொண்டுள்ள மனநிலையை வெளிப்படுத்தவே ஏற்படுத்தப்பட்டன. வாணிப வாய்பாடுகளில் சொல்ல இயலாத இம் மாதிரியான மனநிலையே ஆங்கிலக் குடியேற்றத்தையும் தூண்டியது.

வாணிபம் சில வேளைகளில் வழியை ஆயத்தம் செய்தது. வாணிபத்தின் வழிகளைக் குடியேறி மக்கள் உபயோகித்தனர். பயங்கரமான கருங்கடலில் (Euxine) துணிகரமாகக் கப்பல்களை ஓட்டிய மாலுமிகள் ஆங்காங்கே துறைமுகங்கள் நிறுவுவதற்கும் நகரங்களைக் கட்டுவதற்கும் ஏற்ற இடங்களைக் கண்ணுற்றதும் வீடு திரும்பி, குடியேறுவதற்காக மக்கள் கூட்டங்களை அமைத்தனர். துணிவுள்ள மக்களையும், அமைதி குறைந்த மக்களையும், (Discontented), வறுமையால் பீடிக்கப்பட்ட மக்களையும் நாம் எங்கும் காணலாம். ஆதி குடியேற்றத்திற்கு மக்கள் தொகையின் நெருக்கம் ஒரு காரணம் ஆகாது. ஆனால் நில உரிமை முறை பலரைக் குடிபெயர்க்கச் செய்தது. தன் சார்பும் துணிவான மனப்பான்மையுமுடைய மக்களுக்குக் குடும்பநில முறையானது பிடிக்கவில்லை. சில தனி ஆட்கள் பொதுப் பண்ணையில் பாகம் கொள்ளாதபடி தள்ளப்பட்டனர். இப்படி நிலம் இல்லாத மக்கள் குடியேற்றங்கள் நிறுவும் முயற்சிகளில் பங்கெடுக்க ஆயத்தமாயிருந்தனர். மறுபடியும் எட்டாம், ஏழாம் நூற்றுண்டுகளில் கிரேக்க நாடுகளின் அரசியல் நிலைகள் குடிப்பெயர்ச்சிக்கு ஏதுவாக இருந்தன. நமக்கு முன்னமே தெரிந்தபடி, இக் காலத்தில் உயர்மக்கள் ஆட்சி பொதுவாக நிலவியிருந்தது. சில வேளையில் மன்னன் ஒருவன் வழக்கப்படி (formally) அரசியலின் தலைவனாகத் தோன்றினன். ஆனல் அவன் பிரபுக்களில் முதன்மையானவனே தவிர வேறொன்றுமில்லை; பிரபுக்களின் ஒரு தொகுதியே உண்மையில் தலைவர்கள். சில சமயங்களில் உயர்குடியரசுகளுக்குள்ளே உயர்குடி யரசுகள் தோன்றின. அல்லது பாக்கியர்கள் (Bacchiads) போன்ற ஒரு பெரிய குலம் (Clan) அதிகாரங்கள் யாவையும் தன்னிடத்தே கொண்டிருந்தது. இவ்விதமான எல்லாச் சமயங்களிலும் அரசுபுரியும் வகுப்பைச் சேர்ந்த மக்களுக்கும், உரிமையுள்ள குடிமக்களின் திரள்களுக்குமிடையே உள்ள வித்தியசங்கள் நாளுக்கு நாள் ஆழமாயும் அகலமாயும் காணப்பட்டன. தம் சுயநலத்திற்காக ஆட்சிபுரிவதும் மக்களைக் கொடுமை செய்வதுமே, அரசு புரிபவர்களின் போக்காகும். அவர்கள் மக்களின் மேல் கொண்டுள்ள அருவருப்பை மறைக்கக் கவலைகொள்ளவே யில்லை. மிட்டலீனில் (Mytilene) நிலைமை மோசமாக

இருக்கும்போது, முக்கிய அதிகாரத்தைத் தம்மிடத்தே கொண்டுள்ள பென்திலிட்ஸ் (Penthilids) குண்டாந்தடிகளைக் கைகளில் ஏந்தித் தெருக்களில் சுற்றிவந்து தமக்குப் பிரியமில்லாத குடி மக்களை அடித்துக் கொன்றனர். இவ் வகையான சூழ்நிலையில் தங்களுடைய சொந்த நகரங்களிலிருந்து வெளியேற மக்களுக்குச் சில தூண்டுகோல்களிருந்தன. அவர்கள் தம் நகரங்களிலேயே இருந்தால் சிறு துரும்புகள்போல் காணப்பட்டதுமல்லாமல், அரசாங்கத்தாலும் அவமதிக்கப்பட்டனர். ஆனுல் வெளியேறிப் புதிய நகரங்களை (Polis) அமைத்தால் தாமே அரசுபுரியலாம் என்று எண்ணலாயினர். இதே தூண்டுகோல்தான் சில்குழு ஆட்சியில் (Oligarchy) உள்ள கூட்டத்தைச் சேராத பிரபுக்களையும் இந்த இயக்கத்தில் இழுத்தது. அரசியலில் அமைதியின்மை (discontent) உண்மையில் கிரேக்கக் குடியேற்றத்திற்கு உடனடியான காரணமாகும். இதை நாம் தலைமாற்றிச் சொல்லுவோமானுல் குடியேற்றம் உயர்குடி யரசுகளின் கேடயமாகும். இவ் விதமான போக்கிடம் இல்லாதிருந்தால் அல்லது இது கிரேக்க மனநிலைக்கு ஒத்து இராவிட்டால் உயர்குடி யரசுகள் அவ்வளவு நீண்டகாலம் உயிர்வாழ்ந்திருக்க முடியாது. உயர்குடிகள் குடியேற்றத்தை ஆதரிப்பது தமது சுயநலத்திற்கு நல்லது என்று கூரறிவால் அறிந்துகொண்டனர்.

ஆனுல் பொதுக்காரணங்கள் இயக்குவதை நாம் ஏற்றுக் கொள்ளும்போதே சில தனிப்பட்ட காரணங்களை நாம் புறக்கணிக்கக்கூடாது. எடுத்துக்காட்டாக லிடியாவில் (Lydia) வட அயோனிய நகரங்கள் விரிவடைந்ததுபோல், மைலீட்டஸ்ஸும் மற்றும் தென் அயோனிய நகரங்களும் கேரியாவில் விரிவடைய முடியவில்லை. ஏனென்ருல், கேரியர்கள் இவர்களைக் காட்டிலும் வலிமை பொருந்தியவர்களாயிருந்தனர். இம்மாதிரியே லிசியாவும் (Lycia), ரோட்(Rhodes)ஸிற்கு ஒரு முட்டுக்கட்டையாயிருந்தது. இப்படி இல்லாவிட்டால் ரோட்ஸும் மைலீட்டஸ்ஸும் தூர தேசங்களுக்குக் குடியேற்ற மக்களை அனுப்பியிருக்கும்.

எங்கெங்கெல்லாம் கிரேக்கன் ஒருவன் சென்ருனே அங்கெல்லாம் அவன் தன் பழக்க வழக்கங்களையும் மொழியையும் விடாமல் கொண்டிருந்து அதே சமயத்தில் அவன் அங்கே ஒரு கிரேக்க நகரத்தையும் ஏற்படுத்துவான். இந்தக் கிரேக்க நகரங்கள் தூரத்திலுள்ள கருங்கடல் ஓரங்களிலும் அல்லது மேற்கேயுள்ள கால் (Gaul) அல்லது ஐபீரியா(Iberia)வின் கொந்தளிப்பான கரைகளிலிலும் கிரீஸின் ஒரு சிறிய பகுதி எறியப்பட்டுக்-

கிடப்பதுபோல் காட்சியளித்தன. குடியேற்ற நாடானது ஒரு தனியாரின் முயற்சியாகும் எனினும், 'தாய் நகரத்துடன்' உள்ள உறவு மிகவும் கவலையுடன் வளர்க்கப்பட்டு வந்தது. அரசியல் அமைதியின்மை குடியேற்ற மக்களைத் துரத்துவதற்கு ஒரு காரண மாயிருந்தாலுங்கூட, அவர்கள் அங்குச் சென்று ஒரு புதிய நகர அரசை அமைப்பர்; அந்த நகரமும், தம் நகரத்தைக் காக்கும் தெய்வங்களால் காப்பாற்றப்படும் என்ற எண்ணங்கள் யாவும் அவர்கள் போக்கை ஒரு பக்திக்குரிய காரியமாக்கி இருதரப்பாரிட மும் இருந்த பழைய நட்பை உறுதிப்படுத்தும். இந்தக் குடி பெயர்ச்சியாளர்கள் தமது புதிய இல்லமாகிய குடியேற்ற நாட்டி லுள்ள அடுக்களையில் தீயை மூட்டத் தமது தாய் நகரத்திலுள்ள அடுக்களையிலுள்ள தீயை எடுத்துச்செல்வர். குடியேற்ற நாடு களுக்கும் தாய் நாட்டிற்கும் உள்ள சம்பந்தங்களை ஆண்டுதோறும் நடைபெறும் மத சம்பந்தமான பண்டிகைகளில் பேணிவைப்பது மல்லாமல், தாய்க்குரிய மரியாதைகள் யாவையும் மகளாகிய குடியேற்ற நாடு தன் தாய் நாட்டிற்குச் செய்வது வழக்கம். எப் பொழுதாவது குடியேற்ற நாடு தானும் ஒரு புதிய குடியேற்ற நாட்டை ஏற்படுத்த வேண்டுமென்று எண்ணங்கொண்டால் (இவ் வாறாக அடிக்கடி நடந்து வந்தது.), அது ஈசிஸ்ட் (Oecist) அல்லது குடியேற்றக்காரர்களின் தலைவரைத் தம்முடைய தாய்நாட்டி லிருந்து எடுத்துக்கொள்ள வேண்டும் என்று ஓர் உடன்படிக்கை வழக்கிலிருந்தது. எடுத்துக்காட்டாக மேகாரியாவின் குடியேற்ற நாடாகிய பைஸான்டியம் (Byzantium) தனது சொந்தக் குடி யேற்ற நாடாகிய மேசெம்பிரியா(Mesembria)வை ஏற்படுத்திய பொழுது ஈசிஸ்ட்டை மேகாராவிலிருந்து தெரிந்தெடுத்திருக்கும். குடியேற்றத்தின் அரசியல் முக்கியத்துவம் மதத்தினால் கடவுளருட் பேறு பெறச் செய்யப்பட்டது. குடியேற்றம் அமைக்கப்படும் போதெல்லாம், டெல்பியில் (Delphic) உள்ள தெய்வத்தின் உத்த ரவைப் பெறுவது ஒரு முக்கிய வழக்கமாகும். டோடோனவி லுள்ள ஸீயூஸ், கிரீஸ் நாட்டில் எதிர்காலத்தைக் கூறும் அசரீரி வாக்குடைய அதிக பழமையான தெய்வமாகும். சீலை (Selii) எனப்படும் அவருடைய குருக்களும், 'பொருள் விளக்கு வோரும்' இலியட்டில் குறிக்கப்பட்டுள்ளனர். ஓடிஸியில் (Odyssey) டோடோனா, மேற்கிலிருந்து வரும் மன்னர்கள் ஓர் உன்னத மரத்தினால் செய்யப்பட்ட பீடத்தில் தங்கியிருக்கும் ஸீயூஸ் தெய்வத்தின் தீர்மானங்களைக் கேட்டுத் தெரியுமிடமா யிருந்தது. எப்பைரஸ் மலைப்பாகத்திலுள்ள ஓக்கினால் செய்யப் பட்ட பீடமானது அதிக தூரத்திலிருப்பதால் கிரீஸின் முக்கியத் தெய்வ மொழி கூறப்படும் இடமாக (Oracle) முடியாததாயிருந்.

தது. டெல்பியின் மத்திய இடம், பிதியன் அப்பல்லோ[1] தெய்வத்தின் (Pythian Apollo) அறிவில் சிறந்த குருக்கள் தமது தெய்வத்தைக் கிரேக்க உலகத்திலியே ஓர் உயர்ந்த சீரிய தீர்க்கதரிசி (வருமுன் உரைப்போன்) என்று அவருடைய அதிகாரத்தை உயர்த்தவும் ஏதுவாயிற்று. டெல்பியின் பக்கத்தில் பீயோஷியாவைச் சேர்ந்த லிபாடியா(Lebadea)வில் ட்ரோபோனியஸ் (Trophonius)ஸ் ும் இக்காலத்தைச் சேர்ந்த பீயோஷியர்களின் கைவசமாகாத கிரேஸ் (Graes) நாட்டிலுள்ள ஆம்பியாரஸ் (Amphiarus) போன்ற இதர எதிர்கால அசரீரி கூறும் தெய்வங்களும் இருந்தன. ஆனல் இவர்கள் எவரும் டெல்பியின் அப்பல்லோவை எதிர்க்க முடியவில்லை. அப்பல்லோ குறைந்தது ஏழாம் நூற்றுண்டுக்குள் கிரீஸ் நாட்டிற்கு[2] அறிவுரை கூறும் பெரியாரின் (Adviser) நிலையை அடைந்துவிட்டார்.

குடியேற்றம், ஒற்றுமையின் உணர்ச்சியைக் கிரேக்க மக்களிடையே முன்னேற உதவியது குறிப்பிடக்கூடிய ஒரு காரியமாகும். அநாகரிகமான (Barbarian) நாடுகளின் எல்லைப்புறங்களில் தமது இனத்தைப் பெருமளவில் பரவச்செய்ததால் குடியேற்றத்தின் மூலமாகக் கிரேக்கர்களுக்கும், நாகரிகமற்ற மக்களுக்கும் உள்ள வேறுபாடுகளை இவர்கள் தெளிவாக அறிந்துகொண்டார்கள். இதுதமது சமூகப் பொது உணர்ச்சியைத் தூண்டவும் ஏதுவாயிற்று. கிரேக்கரல்லாதவர் மத்தியில் ஆசியா மைனரில் வசித்த கிரேக்கர்கள் தங்களுடைய ஒற்றுமையைப்பற்றி இயல்பாகவே பெரிதாகக் கருதினர். இது நாற்புறமும் கிரேக்கர்களால் சூழப்பட்ட, சிறுநில பேதங்களைப்பற்றி சதா நினைத்துக்கொண்டிருக்கும் பீயோஷியாவிலும் அட்டிகாவிலும் வசிக்கும் கிரேக்கர்களுக்கு வியப்பைக் கொடுக்கக்கூடிய காரியமாயிருந்தது. உலகத்தின் பல பாகங்களில் தம் மக்கள் பரவியிருக்கவே ஐரோப்பியக் கிரேக்கர்கள் வலிமையானதோர் ஒற்றுமை உணர்ச்சியை அடைந்தனர். இரண்டாவதாகக் குடியேற்றம் பல நகரங்களில் வாழும் கிரேக்கர்களை ஒன்றுபடுத்தியது. குடியேற்றத்திற்கு மக்களைத் திரட்டும் ஓர் ஈசிஸ்ட் தனது நகரத்திலேயே இம் முயற்சிக்கு வேண்டிய அவாவுள்ள மக்களை கண்டுபிடிப்பது மிகவும் அரிதான செயல். எனவே, அவன் மற்ற நகரங்களிலுள்ள கூட்டாளி

[1]டெல்பியிலுள்ள தெய்வமொழி கூறப்படும் இடமாகிய ஆரக்கிள், ஓடிஸியில் கூறப்பட்டுள்ளது. எடுத்துக்காட்டாக புத்தகம் 8, வரி 80ஐப் பார்க்கவும்.

[2]இந்த எதிர்கால அசரீரி கூறும் இடத்தின் செல்வாக்கானது மற்றொரு பிரச்சினையாகும். பின் பகுதியில் பார்க்கவும்.

களைச் சேர்ப்பதுண்டு. இப்படிப் பல குடியேற்றங்கள் கூட்டு முயற்சிகள் (joint undertaking) மூலம் உண்டானவையாகையால், இவைகளில் பல தேசீயக் குடிகள் கலந்திருப்பதை நாம் காண்கின்றோம். இக் குறிப்பு, பிந்திய குடியேற்றக் காலத்திற்கு மாத்திரமுள்ளதன்று; இது ஆசியாவின் கடற்கரையோரங்களில் நிறுவப்பட்ட ஆதிக் குடியேற்றங்களிலும் நாம் காணும் சில உண்மைகளில் ஒன்றாகும்.

## 2. கருங்கடல் (Euxine), ப்ரோபான்டிஸ், வட ஈஜியன் முதலியவற்றின் கரைகளில் குடியேற்ற நாடுகள்

கிரேக்க மாலுமிகள் முதன் முதலாகக் கருங்கடல் தீரத்தை அடைந்த அந்த நன்னாளை, ஆர்கோனாட்டியர் பொன்னலான ஆட்டுமயிரைத் தேடிச்சென்ற புராணக்கதை நினைவூட்டுகிறது. சிறிய கால்வாய்களுக்கும், ஈஜியனின் குறுகிய இடைவெளிகளுக்கும் பழக்கப்பட்ட, கிரேக்கர்கள் பாஸ்போரஸைக் கடந்தவுடன் எல்லையில்லாச் சமுத்திரம் ஒன்றை அடைந்தோம் என்று கற்பனை செய்து அந்தக் கடலைப் 'பெருங்கடல்' (Main) என்று பொருள் கொள்ளும் 'பான்டாஸ்' (Pantos) என்று அழைத்தனர். இவர்கள் இந்தக் கடலின் கரைகளைச் சுற்றி வந்தும்கூட இதற்கு எல்லையில்லை என்றே கருதினர். ஏனென்றால், இதில் வந்துசேரும் பெரிய ஆறுகளாகிய இஸ்டர் (Ister), டானய்(Tanais), டானப்ரிஸ் (Danapris) முதலியன தோன்றுமிடம் எங்குள்ளன என்பதை இவர்கள் அறிந்திலர். ஹெல்லெஸ்பான்ட் விரியுமுன் ஒரு சிறு கடலாகி விரிவடைந்து, பின்னர் பாஸ்போரஸ் என்னும் நெருங்கிய வழியாகச் சுருங்குகின்றது. இந்தச் சிறுகடல் 'பெரிய கடலின் (Pontus) முன்கூடம்' என்று மிகவும் பொருத்தமான பொருளைக் காட்டும் 'ப்ரோபான்டிஸ்' (Propontis) என்று அழைக்கப்பட்டது. சிறிய குடாக்களையும், இடைவழிகளையும் கொண்டுள்ள இக் கடலை யூரிபைடிஸ் (Euripides) வெகு அழகாக, "எல்லையிலாப் பெருங்கடலின் குடாக்களைக் கொண்ட தண்ணீர்த் திறவுகோல்" என்று கூறியுள்ளார். அநுபவப்பட்ட மாலுமிகள் ஓட்டி வரும் சிறு கப்பல்களுக்குக்கூட இப் பெருங்கடல் துரோகம் அளிக்கும் இடமாயிருந்தது. (கிரேக்கர்கள் கொடிய தெய்வங்களைச் சினமாற்ற இன்பமான பெயர்களை வழங்குவது வழக்கம்)[3] இதன் காரணமாகவே இது 'யூக்ஸைன்' (Euxine) அல்லது 'விருந்தோம்பும் பண்புடைய கடல்' என்று அழைக்கப்பட்டது. கருங்

[3] ஆனால் இந்த விளக்கம் உறுதியானது என்று சொல்வதற்கில்லை.

கடலின் எல்லைகள் சரியாகத் தெரியாத காலத்திலும், மக்கள் நாணத்துடன் அதன் கரைகளைத் துருவி ஆராயும் காலத்திலே தான் ஓடிஸியஸ்ஸின் சுற்றுப்பிரயாணங்கள் உருவம் பெறலாயின. இவர் ட்ராயிலிருந்து பெருங்கடலுக்குச் சென்று, அங்கே அங்கு மிங்கும் அடிபட்டு, பின் திரேஸ், எப்பைரஸ் நாடுகளின் ஊடே நிலத்தின்மேல் பிரயாணம் செய்து கடைசியில் இத்தாக்கா (Ithaca) தீவை அடைந்ததாகக் கற்பனை செய்யப்பட்டுள்ளது. பல் வேறான புராணக் கதைகளும் செய்யுட்களும் சேர்ந்துள்ள இப் போதைய ஓடிஸியில் இது மறைந்து கிடக்கின்றது. ஸர்ஸி (Circe) தீவானது மேற்குப்புறத்தில் தூரமாகத் தள்ளப்பட்டுள்ளது. 'கீழ் உலகத்திற்குச் செல்லும்' காட்சியானது அட்லான்டிக் சமுத் திரத்திற்கு மாற்றி அமைக்கப்பட்டுள்ளது. ஆனால் கதிரவ னுடைய மகளும், ஈடீஸ் மன்னனின் தங்கையும், தங்க ஆட்டு மயிரைக் கொண்டிருந்த ஸர்ஸி (Circe), கோல்சிஸ் (Colchis) கடல் களுக்கு உரியவள். சிம்மெரியர்களுக்கு(Cimirians) அப்பாலுள்ள ஆவிகளின் உலகமானது சிம்மெரிய பாஸ்போரஸ் பக்கத்தில் இருந்திருக்கலாம். இச் செய்யுளின் பிற்பகுதிகளில் சிசிலித் தீவு சொல்லப்பட்டிருப்பதும் மேற்கு மத்தியதரைக்கடல் பிரதேசத் திற்குப் போகும் வழியிலுள்ள அயோனியக் கடலிலுள்ள மற்றத் தீவுகளின் மத்தியில் இருக்கும் இத்தாக்கா எடுத்துக்கொண்ட பங்கும்,கிரீஸ் இத்திசையில் விரிவடையும் துவக்கத்தை நிழலாட்ட மாகக் காட்டுகின்றன. ஆனால் ஓடிஸியஸ்ஸின் ஆதி (Original) சுற்றுலாக்கள் மேற்குப் பாகங்களுடன் தொடர்பின்றிக் கருங் கடலில் புதுநிலத் தோட்டத்துடன் சம்பந்தப்பட்டிருந்தன.

இப் பெருங்கடல் தீரத்தில் எழும்பிய முதல் கிரேக்க நகரங் களைப்பற்றி நமக்கு அவ்வளவாக ஒன்றும் தெரியவில்லை. இங்கே மைலீட்டஸ்தான் புதுவது புனைந்தவராவர். மைலீஸியன் செம் மறியாடுகளின் ரோமத்தால் செய்யப்பட்ட பொருள்களை எடுத் துச் சென்ற வணிகர் இக் கடலின் தெற்குக் கரையோரமாக வாணிபத் தலங்களை ஏற்படுத்தியிருக்கலாம். இவர்கள் எடுத் துச் சென்ற ரோமத்தைக்கொண்டு, கோல்சிஸ்ஸில் கிடைக்கும் சணல், எஃகு, வெள்ளி முதலிய சில முக்கியப் பொருள்களையும் அடிமைகளையும் வாங்கினார்கள். பாஸ்போரஸ்வாயிலுக்கு அப்பால் குடியேற்றங்களை அமைப்பதான வேலை, மேகாராவின் முயற்சியால் அந்த வாயில் தம் வசமாக்கப்பட்ட பின்னர்தான் பெரியதொரு முறையில் துவங்கியது. ஏழாம் நூற்றாண்டின் துவக்கத்தில் மேகாரா மக்களை அனுப்பி, சால்சிடன், (Chalcedon), பைஸான்டி யம் (Byzantium) முதலிய பட்டணங்களை நிறுவியது. கருங்கடல் பிரதேச வியாபாரத்தைப் பைஸான்டியம் கட்டுப்பாடு செய்திருக்-

கலாம். ஆனால் ஆயிரம் ஆண்டுகள் கழிவதற்குமுன் இந்த இடத்தின் வாணிப, அரசியல் முக்கியத்துவத்தை முழுவதுமாக மக்கள் அறிந்திலர். இந்த ஆயிரம் ஆண்டுகளுக்குப் பின்னரே பைஸான்டியம் ரோமாபுரியின் எதிரியாகவும், சிறிது காலத்திற்கெல்லாம் அதன் பின் மரபினதாகவும் (successor) மாறி, தன்னை இரண்டாவதாக நிலைநாட்டிய பெரியாரின் பெயருக்குப் புகழ் நாட்டும் முறையில் கான்ஸ்டான்டிநோபிள் (Constantinople) என்ற பெயரைப் பெற்றது. இதுவே கிரேக்க வரலாற்றில் சிறிய மேகாரா அரசின் முதல் தோற்றமாகும். மேகாராவின் ஏக காலத்தைச் சேர்ந்தவர் எவரும் இம்மாதிரியான பெரியதொரு செயலைச் செய்து முடிக்கவில்லை. மேகாரியர்கள் எதிர்க்கரையின் நற்பயன்களை அறிவதற்கு முன்னரே முதலில் சால்சிடன் நிறுவப்பெற்றது என்று கதையொன்று கூறுகின்றது. இவர்கள் இந் நகரை நிறுவுவதற்குமுன் டெல்பிக் தெய்வ மொழியை மேகாரியர்கள் கோரியபோது, அஃது இவர்களைக் 'குருடர்கள்' என்று திட்டியதாகச் சொல்லப்படுகிறது. பைஸான்டியத்திற்கு மேற்கே, ப்ரோபான்டிஸின் வடக்குக் கரையில் இவர்கள் செலிம்ப்ரியா(Selymbria)வை நிறுவினார்கள். அவ்விதமாகவே கிழக்கே, பித்தீனியாவின் (Bithynia) கரையில் 'பெரிய கடலில் ஏராக்ளியாவை' ('Heraclea in Pontus') ஏற்படுத்தினார்கள்.

மேகாரியர்களின் முயற்சியானது மைலீட்டஸ்ஸிற்கு ஊக்கமளித்தது. பெருங்கடலின் தீரத்திலுள்ள முக்கியமான இடங்களை, மற்றவர்கள் பிடிக்குமுன் தானே பிடிக்க அது முற்பட்டது. தெற்குக் கரையிலுள்ள இடங்களுக்கெல்லாம் வடக்காகவுள்ள ஒடுக்கமான முனையொன்றில் இரண்டு இயற்கைத் துறைமுகங்கள் இருக்கின்றன. இந்த முனையும் துறைமுகங்களும் குடியேற்றத்திற்கு ஏற்ற இடங்களாகும். இங்கே மைலீஸியர்கள் தமக்கான ஸினோப்[4] (Sinope) என்ற நகரை ஏற்படுத்தினார்கள். கிழக்கிலே, கடலின் கிழக்கு எல்லைக்கும் ஸினோப்பிற்கும் பாதி தூரத்தில் பேசிஸ் (Phasis) நதியானது காக்கஸஸ் (Caucasus) மலையடிவாரத்தின் பக்கத்தில் கடலுடன் கலக்குமிடமாகிய ட்ரெபீஸஸ் (Trapezus)ஸில் மற்றுமொரு மைலீஸியன் குடியேற்ற நாடு தோன்றிற்று. பாஸ்போரஸ் தீரத்தில் மேகாரா மைலீஸியர்களுக்கு

[4]இந்த நகரமானது எட்டாம் நூற்றாண்டில் தோன்றி, பின்னர் சிம்மெரியர்களின் படையெடுப்புகளில் அழிக்கப்பட்டு, மறுமுறை ஏழாம் நூற்றாண்டில் தோன்றியதாகக் கூறப்படுகிறது. ஆனால் பாஸ்போரஸ், ப்ரோபான்டிஸ் என்ற நகரங்களைவிட மற்றெந்தப் பெருங்கடல் நகரமும் பழமையானது என்று சொல்வது பொருத்தமில்லை.




படம் 18 : ப்ரோபான்டிஸ்ஸிலும், பான்டஸ்ஸிலும் கிரீஸின் விரிவு

முன்பே தோன்றிப் பல குடியேற்ற நாடுகளை அமைத்திருந்தது. மைலீஸியர்கள் இதனை அழிக்குமாறு ஹெல்லெஸ்பான்டில் செஸ்டாஸிற்கு (Sestos) எதிராக அபைடாஸில் ஒரு குடியேற்ற நாட்டை நிறுவினர். ப்ரோபான்டிஸ் கடலின் கீழ்க் கரையில் கடலுக்குள் நீண்டு கிடக்கும் நிலமுனையின் குறுகிய கழுத்துப் பாகத்தில் ஸினேப்பிலுள்ளபடி இரண்டு துறைமுகங்கள் காணப் பட்டன. இந்தப் பாகத்தை மைலீஸியர்கள் தம் கைவசமாக்கினர். இந்தப் பட்டினம் கைஸிகஸ் (Cyzicus) என்றழைக்கப்படலாயிற்று. இந்தத் தீபகற்பமானது பிற்காலத்தில் ஒரு தீவாக்கப் பட்டது. இந்த நகரத்து நாணயத்தில் காணப்படும் பெரிய மீனின் உருவம் இங்கு மீன் ஒரு வாணிபப் பொருள் என்பதைக் காட்டுகின்றது. முன்னொரு காலத்தில் பினீஷியர்களின் வியாபாரத் தலமாக ஹெல்லெஸ்பான்டின் வடபகுதியிலுள்ள லாம்ப்சேக்கஸ் (Lampsacus) ஏறக்குறைய இதே காலத்தில் மற்றுமோர் அயோனிய நகரமாகிய போக்கியாவால் குடியேற்ற நாடாக்கப் பெற்றது. லாம்ப்சேக்கஸ் நாணயங்களில் காணப்படும் இறகையுடைய கடல் குதிரையின் உருவம், இவர்களுக்குச் செல்வத்தையும் செழிப்பையும் அளித்த இவர்களது கடலைச் சார்ந்த முயற்சிகளைக் காட்டுகின்றது. மைலீட்டஸ்ஸும் எரித்திரியும் கூட்டுச் சேர்ந்து பாரியோனை (Parion) நிறுவின. திரேஸிய செர்சானீஸின் கழுத்துப் போன்ற பாகத்தில் கிளஸோமீனேயும் மைலீட்டஸ்ஸும் சேர்ந்து கார்டியா (Cardia) என்ற குடியேற்ற நாட்டை ஏற்படுத்தின. கார்டியாவானது திரேஸ் நாட்டிற்கு எதிராயுள்ள முதல் கோட்டைமாதிரி காட்சியளிக்கின்றது. ஹெல்லெஸ்பான்டின் தெற்குப்பகுதியில் ஸ்கேமாண்டர் (Scamander) நதி தீரமானது லெஸ்பாஸ் தீவிலுள்ள கிரேக்கர்களை அழைத்தது. இதன் பலனாக இங்குப் பல ஈயோலியன் குடியேற்றங்கள் தோன்றின.

கருங்கடலின் தூரப் பகுதிகளிலும் கிரேக்கக் குடியேற்றங்கள் தோன்றின. தூரக் கிழக்கில் பல கதைகளில் காட்சியளிக்கும் கோல்சிஸ் நாட்டில் டியோஸ்குரியாஸ் (Dioscurias), பேஸிஸ் (Phasis) என்ற இடங்கள் நிறுவப்பட்டன. மேலும், டாரிக் செர்சோனிஸஸ் (Tauric Chersonesus) அல்லது 'தீபகற்பம்' (தற்பொழுது கிரிமியா) என்றழைக்கப்பட்ட பகுதியில் பேன்டிகேப்பியம் (Panticapaeum) என்ற நகரத்தையும், மியோடிஸ் (Maeotis Lake) ஏரிக்குப் போகும் வாயிலின் கிழக்குப் பாகத்தில் பெனகோரியா (Phanagoria) என்ற நகரத்தையும் இந்த ஏரியின் வடகிழக்குப் பாகத்தில் டானய் (Tanais) ஆற்றின் முகத்துவாரத்தில் டானய் என்ற நகரத்தையும் ஏற்படுத்தினார்கள். தீபகற்-

பத்தின் மேற்குப் பாகத்திலுள்ள ஏராக்கிளியா அல்லது செர் சோனிஸஸ் ஆயிரம் ஆண்டுகளுக்கு மேலாகப் பழைய கிரேக்க நகரத்தின் நகராட்சி அமிசங்களை வ ள ர் த் து வந்தது. நீப்பர் (Dnieper) நதியின் முகத்துவாரத்திலுள்ள ஒ ல் பி ய ா (Olbia), ஒடிஸஸ், (Odessus), இஸ்டிரஸ் (Istrus), மெசெம்ப்ரியா முதலி யவை கருங்கடலைச் சுற்றியுள்ள கிரேக்கக் குடியேற்ற நாடுகளில் சிலவாம்.

இந்தக் கடலும், ப்ரோபான்டிஸ்ஸும், கடல் தெய்வமான அக்கில்லிஸ்ஸின் ஆட்சிப் பகுதியாகும். இவர் ட்ராய் புராணத் தில் பங்கு பெற்றதால் இவருடைய புகழானது அதிக வளர்ச்சி யடைந்தது. கடற்கரையோரங்களில் இவர் பான்டஸ்ஸின் தலைவ ரென வழிபடப்பெற்றார்.

டான்யூப் நதியின் மு க த் து வ ா ர த் த ரு கி ல் மனித சஞ்சாரமேயில்லாமல் தனிமையானதும் 'ஒளிவிடுகின்ற தீவு' மாகிய லீயூஸில் (Leuce) இவருக்கு ஒரு கோவில் இருந்தது. இந்தக் கோவிலைக் கடற்பறவைகள் காத்து வந்தன என்று கூறப் படுகின்றது.

ஹெல்லெஸ்பான்டிற்குக் கிழக்கே கிரேக்க உலகத்தின் எல்லை களைப் பெரிதாக்குவதில் மைலீட்டஸ்ஸும் மேகாராவும் பெரிய தொரு பங்கை மேற்கொண்டதுபோல் ஈஜியனின் வடமேற்கு மூலையை யூபியாவும் தனது தனி ஆட்சிக்குட்படுத்திற்று. ஆக்ஸி யஸ் நதிக்கும், ஸ்ட்ரைமான் நதிக்கும் இடையிலுள்ள மாசிடோனி யன் கடற்கரையானது ஊடுருவிச் சென்று மூன்று கவர்முள் போன்ற நிலமுனையாக நிற்கின்றது. இம் முனைக்கும் யூபியா தீவிற்கும் இடையிலுள்ள ஸ்கியாதஸ் (Sciathus), பெப்பேரிதஸ் (Peparethus) என்ற தரிசான தீவுகள், யூபியாவிற்கும் மாசி டோனியாவிற்கும் இடையிலுள்ள பாலம் போன்றிருக்கின்றன. இம் முனையில் சால்சிஸ் எண்ணிறந்த குடியேற்ற நாடுகளை நிறுவிய தால், இது சால்சிடிஸ் என்றழைக்கப்பட்டது. இங்குள்ள சில முக்கிய நகரங்கள் வேறு அரசுகளால் நிறுவப்பட்டன. இந்த மூன்று கவர்முட்களும்மேற்கிலிருந்து முறையே பல்லீனி (Pallene), சித்தோனியா (Cithonia), ஆக்டி (Acte) என்றழைக்கப்பட்டன. பல்லீனியிலுள்ள பாட்டிடயா (Potidaea) கொரிந்து பட்டினத் தால் நிறுவப்பட்டது. பல்லீனியிலுள்ள மற்றும் சில குடியேற்ற நாடுகள் எரிதிரியாவினால் நிறுவப்பட்டன. ஆக்டியின் வடக்கிலுள்ள குடியேற்ற நாடுகள் எரிதிரியாவினுடைய சார்பரசு நாடாகிய ஆண்ட் ராஸ் நிறுவியதாகும். ஆனபடியால் இந்தத் தொகுப்பான நகரங் களைச் சால்சிடியன் என்று ஏற்றுக்கொள்ளாவிட்டாலும், நாம்

முறைப்படி யூபியன் என்று ஏற்றுக்கொள்ள வேண்டும். தெர்மேயிக் (Thermaic) விரிகுடாவின் மேற்குப் பாகத்தில், மாசிடோனியன் நிலப்பகுதியில், பிட்ஞ (Pydna), மெத்தோன் (Methone) என்ற இரு குடியேற்ற நாடுகளை யூபியா நிலைநாட்டியது.

## 3. மேற்கு மத்தியதரைக்கடற் பிரதேசத்தில் குடியேற்ற நாடுகள்

இலக்கியத்தில் சிசிலிய (Sicilian) இத்தாலியப் பிரதேசங்களின் பெயர்கள் முதன்முதலில் ஆடிஸியின் பிந்திய பாக்களில் காணப்படுகின்றன. இப் பாக்கள் எட்டாம் நூற்றுண்டைக் குறிக்கலாம். இப் பாக்களில் 'சிக்கல்'களையும் (Sicels), சிக்கானியா தீவையும்பற்றி நாம் அறிகிறோம். கிரேக்க வாணிபர்கள் டஸ்கன் (Tuscan) செம்பு வாங்கும் இடமாகிய டெமீஸா (Temesa) இலக்கிய ஆவணத்தில் முதன்முதலில் இடம்பெற்ற இத்தாலிய இடமாகும். ஏழாம் நூற்றுண்டின் இறுதியில் சிசிலியின் கிழக்குக் கரையிலும், டாரன்டைன் வளைகுடாவைச் சுற்றியுள்ள நிலப்பகுதியிலும் கிரேக்க அரசுகள் நெருக்கமாகக் காணப்பட்டன. இந்தக் குடியேற்ற நாடுகள் இயல்பாகவே மூன்று தொகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன :

(1) சிசிலியிலும் இத்தாலியிலும் உள்ள யூபியன் குடியேற்ற நாடுகள்.

(2) இத்தாலிய நிலப்பகுதியில் மட்டுமுள்ள அக்கியக் குடியேற்ற நாடுகள்.

(3) சில குடியேற்றங்கள் தனியாகச் சிசிலியில் காணப்படும் டோரியக் குடியேற்ற நாடுகள்.

இதைக் குறித்த காலவரையறையானது நம்பத்தக்கதல்ல. அதுவுமன்றி, முதலில் மக்கள் தீவுகளில் குடியேறினரா அல்லது பெருநிலப் பகுதியில் குடியேறினரா என்பதைக்கூட நம்மால் கூறுவதற்கில்லை.

ஓடிஸியஸ்ஸின் வீரச் செயல்களைக் குறிக்கும் பழைய கதைகள் கருங்கடலையடுத்த முழுவதும் ஆராயப்படாத பிரதேசங்களில் நடைபெற்றனவாகக் கூறப்படுகின்றன. இச் செய்யுளின் உயிரோட்டத்தையும் கிரேக்க மக்களை இப் பாடல்கள் எவ்வுளவு கவர்ந்துள்ளன என்பதையும், இத்தாலிய, சிசிலியக் கடல்களைக் கப்பலில் கடக்க ஆரம்பித்தவுடன் இவ் வரலாறுகள் கிழக்கிலிருந்து மேற்கே மாற்றப்பட்டமையால் அறிகிறோம். இந் நூல் வழங்கும் வட்டாரத்தின் கவிதை வளர்ச்சியில் ஒரு புதிய புராண புவியியலும் உண்டாக்கப்பட்டது. இத்தாலியைப்பற்றிக் கிரேக்கர்கள் ஒன்

றுமே அறியாதபொழுது, தெற்கிலுள்ள நிலமுனைகள் 'புனிதத் தீவுகள்' என்று[5] குறிக்கப்படுகையில் மெஸ்ஸானுவின் (Messana) கடல் இடுக்குகள் சில்லா (Scylla), சேரிப்டீஸ் (Charybdis) என்பனவாயும் லிப்பாரா (Lipara), ஈயோலஸ் (Aeolus) தீவாகவும் எட்னு எரிமலை (Aetna), சைக்ளோக்ஸின் இல்லமாகவும் பாவிக்கப் பட்டுள்ளன. பீயேஷியர்களின் (Phaeacians) தீவாகிய ஷீரியா (Scheria) கார்ஸைராவாகக் (Corcyra) கற்பனை செய்யப் பட்டது. கீழ் உலகத்திற்குச் செல்லும் ஒரு வாயிலானது க்யுமே (Cumae)யில் வைக்கப்பட்டது. பெண் தெய்வங்களான சைரன் களின் (Sirens) பாறைகள் சோர்ரென்டோ (Sorrento)வில் தேடிப் பெறப்பட்டன. மேற்கு நாடுகளில் முதலில் காணப்பட்ட புவியியல் துணுக்குகள் ஓடிஸியை அதன் கடைசி உருவத்திற்கு மாற்றியமைத்ததைப் பாதித்தன. ஆனுல் அதே காலையில் ஓடிஸி, மேற்கு நாடுகளின் புவியியலை மாற்றியது. கோல்சிஸ் (Colchis) சூனியக்காரியின் பெயர் லாட்டின் ஆட்சி நிலத்திலுள்ள 'சர்சியி' (Circei) நிலமுனையில் காணப்படுவது ஹோமரது செய்யுளின் கவர்ச்சிக்கு ஒரு சான்றுகும். எட்டாவது நூற்றுண் டில் கிரேக்க நாவாய்களில் மேற்கே எடுத்துச் செல்லப்பட்டவர் ஓடிஸியஸ் ஒருவரல்ல. எடுத்துக்காட்டாக, கிரீட்டைச் சேர்ந்த மைனுஸ், டிடாலஸ் (Daedalus) முதலிய நாடுகள் சிசிலியுடன் தொடர்புகள் கொண்டிருந்தன. மேற்குக் கடல்களில் கப்பல் செலுத்தியவர் ஏராக்கிளீஸ் (Heracles) என்று சொல்லப்படுகிருர். இவர் கதிரவன் அஸ்தமிக்கின்ற நாட்டின் எல்லைகளை அடைந்து, அங்கே உலகத்தின் எல்லைக் கோட்டில் நின்று, சமுத்திரங்களின் ஓட்டங்களைக் கண்ணுற்ருராம். அங்கு மத்தியதரைக் கடலுக்கு வாயில்போன்று அமைந்திருக்கும் எதிரேயுள்ள செங்குத்தான பாறைகள் இவருடைய பெயரைக் கொண்டு ஏராக்கிளிஸின் தூண்கள் (Pillars of Heracles) என்று அழைக்கப்பட்டன.

காம்பேனியா (Campania)வின் கரையிலுள்ள சைம் (Cyme) மேற்குக் கடற் பிரதேசத்தில் கிரேக்கக் கப்பலோட்டிகள் ஏற்படுத்திய பழைய குடியேற்ற நாடாகும். கி.மு. 1000த்திற்கு முன்பே சைம் ஏற்படுத்தப்பட்டதாக வழக்காற்றில் கூறப்படு கிறது. இக் காலவரிசையைத் தற்காலக் கலையாராய்ச்சியாளர் ஏற்காமல் வாதமிடுகின்றனர். இதன் துவக்கம் அதிக காலத் திற்குப்பின் ஏற்பட்டது என்று கூறினும், இது மத்தியதரைக் கடலின் நடுவிலுள்ள தீபகற்பத்தில் ஏற்படுத்தப்பட்ட பழைய

[5] இந்தச் சொல்லானது எஸியட்டின் தியோகோனியிலுள்ள அட்டவணையில் காக்கப்பட்டுள்ளது.

கிரேக்கக் குடியேற்ற நாடு என்று கூறும் மரபானது உண்மையாக இருக்கலாம். எவ்வாறாயினும், இதுவே பழமையான கிரேக்கக் குடியேற்ற நாடாகும். இதற்கு ஒரு தனி ஏதுவுண்டு. இக் காலத்தில் யூபியாவின் கிழக்குக் கரையில் இருந்த இந்தச் சால்சிஸ் (Chalcis), எரிதிரியா, சைம் ஆகிய இம் மூன்று பட்டணங்களும் ஒன்றுசேர்ந்து உன்னத நிலையில் இருந்தன. ஆனால் பிற்காலத்தில் இது தேய்வுற்று ஒரு கிராமத்தின் நிலையை அடைந்தது. தீவிற்கு எதிர்க் கரையிலுள்ள டனக்ரா(Tanagra)வை அடுத்துள்ள பெரு நிலப்பகுதியிலுள்ள சில கிரேயியர்களைத் (Graeans) தம் படையில் இவை சேர்த்துக்கொண்டன. இந்தக் குடியேற்ற மக்கள் முதலில் பித்திகுஸி (Pithecusae) தீவில் குடியேறினார்கள். இதன் பின் இத்தாலியின் கடற்கரை நேப்பிள்ஸ் (Naples) விரிகுடாவைச் சுற்றிக் கிழக்காகத் திரும்புமிடத்தில் கடல் மட்டத்திலிருந்து எழும்பியுள்ள ஒரு பாறையின் சிகரத்தைத் தம் கைவசப் படுத்தினர். இந்த இடமானது மிகவும் யோசனையுடன் தேர்ந்தெடுக்கப்பட்டது. இது வலிமை பொருந்தியதும் செல்வாக்குள்ளதுமான ஓர் இடம். இங்கே துறைமுகம் இல்லாவிடினும் அந்நியர்கள் தம் கப்பல்களைக் கீழே இருக்கும் மணற் பரப்பில் வலித்து இழுத்து வைக்கலாம். கொஞ்ச காலத்திற்குப்பின் நில முனையின் உட்பாகத்திலுள்ள துறைமுகத்தைத் தமதாக்கி, அங்கே டிக்கியார்கியா (Dicaearchia) என்னும் நகரத்தை நிறுவினார்கள். இந்தப் பட்டணம் பிற்காலத்தில் பியுடோலி (Puteoli) என்று அழைக்கப்படலாயிற்று. இதற்குக் கிழக்குப் பக்கத்தில் இவர்கள் நேப்பிள்ஸ் (Naples) எனப்படும் 'புதிய நகரம்' ஒன்றை ஏற்படுத்தினார்கள்.

இத்தாலியரைச் சேர்ந்த ஒரு முக்கியப் பிரிவினராகிய ஒப்பிகான்க (Opicans)ளின் மத்தியில் இந்தக் கிரேக்க நாகரிகத்தின் புறக்காவல் நிறுவப்பட்டது. குடியேறிய மக்கள் ஆதிக்குடிகளிடம் வெற்றிகரமான செயல் தொடர்பு கொண்டிருந்தனர். இந்தப் பிரதேசத்தில் சைம் தனிப்பட்ட ஒரு நிலையில் இருந்ததால் இதன் செல்வாக்கு அமைதியாகப் பல திக்கு நோக்கிப் பரவ ஏதுவாயிற்று. இட்ரஸ்கர்கள் அதிக வலிமை பொருந்தியவர்களா யிருந்தமையால் கிரேக்கர்கள் வடக்கே வேறு குடியேற்ற நாடுகளை நிறுவ முடியவில்லை. தெற்கே பாஸிடோனியாவை நிறுவும்வரை சைம்முக்கு வேறு எதிரிகளே இல்லை. சைம்மின் வெளிநாட்டு வரலாறு சிறப்பான நிகழ்ச்சியொன்றும் இல்லாததாக விளங்குகின்றது. இந் நகரம் பெரிய யுத்தங்களிலும், போராட்டங்களிலும் பங்கு பெற்றதாக ஆதாரங்கள் கூறவில்லை. ஆனால் இதன் செயலொன்று ஐரோப்

பிய நாகரிக வரலாற்றில் ஓர் ஒப்பற்ற இடத்தைப் பெற்றுள்ளது. சைமிலுள்ள யூபியர்களிடமிருந்துதான் நாம் இப்போது உபயோகிக்கும் அகர வரிசை கிடைக்கப் பெற்றோம். இவர்களிடமிருந்து தான் முதன்முதலில் லத்தீன் (Latin) மக்கள் தமக்கு அகர வரிசையைப் பெற்றனர். இட்ரஸ்கர்கள் இவர்களிடமிருந்து இவ் வகரவரிசையைத் தனிப்பட்ட முறையில் பெற்றுத் தமக்கு வேண்டியபடி அதனை மாற்றியமைத்துப் பின் அதனை ஆஸ்கர்களுக்கும் (Oscans) அம்பிரியர்களுக்கும் (Umbrians) பரவச் செய்தனர். மேலும், கிரேக்கத் தெய்வங்களைப்பற்றியும், கிரேக்கச் சமயங்களைப்பற்றியும் உள்ள அறிவைத் தம் அருகிலுள்ள இத்தாலிய மக்களுக்கு இந்தச் சைமியர்கள் (Cymaeans) புகுத்தினர். இத்தாலியில் ஏராக்கிளிஸ், அப்போலா, காஸ்டர் (Castor), பாலிடியூஸஸ் (Polydeuces) முதலிய பெயர்கள் மிகவும் நன்ருய்த் தெரிந்த பெயர்களாதலால் இத் தெய்வங்கள் இத்தாலியின் ஆதி தெய்வங்களாகக் கருதப்பட்டனர். அப்போலோவின் தீர்க்க தரிசினியாகிய சைமியன் சிபிலின் (Sybil) தெய்வ மொழிகள் ரோமாபுரியின் ஊழைக் கொண்டிருந்ததாக நம்பப்பட்டது.

ஹெல்லாஸ், ஹெலனீஸ் என்பவைகளை மேற்கு ஐரோப்பியர்கள் கிரேக்கர்கள் என்று அழைப்பது ஒருகால் சைம் நகரினுல் தான் இருக்கலாம். லத்தீன் மக்களுடன் கிரேக்கர்கள் முதலில் தொடர்பு கொண்டபோது கிரேக்கர்களுக்கு ஒரு பொதுவான பெயர் இல்லை. இவர்களைப் பிற்காலத்தில் ஒற்றுமைப்படச் செய்த ஹெலனீஸ் என்னும் பதம், ஒரே ஒரு கோத்திரத்துடன் இணைக்கப்பட்டிருந்தது. அந்நியர்கள் தாங்கள் முதன்முதலில் பற்றுக் கொண்ட கிரேக்க மக்களின் பொதுப் பெயரைத் தாம் பின்னுல் சந்தித்த கிரேக்கர்களுக்கு அளித்தனர். இதன் பின் இந்தப் பெயரானது எல்லாக் கிரேக்கர்களுக்கும் வழங்கப் பெற்றது. இது இயல்பேயாகும். ஆனுல் இதிலுள்ள விசித்திரமென்னவென்ருல், சைம்மில் குடியேறிய மக்கள் சால்சிஸ் அல்லது எரித்திரியா அல்லது சைம் என்ற பெயர்களால் அழைக்கப்படாமல், கிரேயியா (Graia) என்ற பெயரைக்கொண்டு அழைக்கப்பட்டனர். லத்தீன் மக்களும் அவர்களுடைய கூட்டாளிகளும் கிரேயீ (Graii) என்ற பதத்தை இந்தக் குடியேற்ற மக்களுக்கு உபயோகித்தனர். கிரீஸி (Graeci) என்னும் பதம் 'கிரேயீ' என்பதிலிருந்து வருவிக்கப் பெற்ற பெயராகும். ஹெல்லாஸ்ஸைச் சைம் அல்லது எரித்திரியா அல்லது சால்சிஸ் என்ற பெயர்களிலிருந்து வருவிக்கப்பட்ட பெயர் ஒன்றினுல் அழைக்காமல், கிரீஸ் என்று அழைப்பது, உண்மையாக ஒரு சிறு தற்செயல் நிகழ்ச்சியேயாகும். பீயோஷியாவிலுள்ள எவரும் அறியாத ஒரு மாவட்

டத்திலிருந்து மேற்குப் பகுதி 'கிரீஸ்' என்ற பெயரைப் பெற்றது. இவ்விதமாகவேதான் தெசலியிலுள்ள ஒரு சிறிய நில எல்லையிலிருந்து கிரீஸ், ஹெல்லாஸ் என்ற நாமத்தை அடைந்தது. இது தற்செயலாக ஏற்பட்ட நிகழ்ச்சியேயாகும். மேற்கு ஐரோப்பியர்கள் கிரீஸைக் கிரேக்கர்கள் முதலில் தொடர்பு கொண்ட நகருடன் இணைக்கப்பட்ட ஒரு பெயரால் அழைத்தது ஒரு தற்செயல் நிகழ்ச்சியாகாது. இந் நகர மக்கள் மேற்கு ஐரோப்பாவை நாகரிகமடையவும் அதனைப் பல நூற்றாண்டுகளுக்கு ஆட்சி புரியவும் ஊழ்வினைப்பயனால் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

யூபியக் கிரேக்கர்களின் அடுத்த குடியேற்றம் இத்தாலியின் பூமியில் இல்லாமல் சிசிலியன் நிலத்தில் காணப்பட்டது. பெலோப்போனீஸஸ் எப்படிக் கிழக்குத் தீபகற்பத்தின் தொடர்ச்சியோ, அதே விதமாகச் சிசிலித் தீவானது புவியியலின்படி இத்தாலியின் தொடர்ச்சியேயாகும். ஆனால் இதன் வரலாற்று முக்கியத்துவம் மற்றுமொரு புவியியல் உண்மையைச் சார்ந்திருக்கின்றது. இது மத்தியதரைக் கடலின் மையத்திலிருந்து அந்தக் கடலை மேற்கு, கிழக்கு என இரண்டு சமபாகங்களாகப் பிரிக்கின்றது. இவ்விதமாக இயற்கையானது இதனை நாடுகள் சந்திக்கும் இடமாக்கிற்று. ஆசிய மக்களுக்கும் ஐரோப்பியர்களுக்குமிடையே மூண்ட போராட்டம் சிசிலியின் நிலப்பரப்பில் ஓரளவு நடந்தது. இந்தப் போராட்டத்தை 'ஊழூழிக் கேள்வி' என்று கூறுவது வழக்கம். மற்ற நாடுகளிலிருந்து வந்த குடியேற்ற மக்களினால்தான் இந்தத் தீவு பெருமை யடைந்ததேயொழியக் குடிபெயர்ச்சியினாலல்ல. ஐரோப்பாவிற்கும் ஆப்பிரிக்காவிற்கும் இடையில் ஒன்றுசேர்க்கும் கொக்கியின் பிணைபோல் இருப்பதால் இந்தத் தீவு இரண்டு பக்கங்களிலிருந்தும் குடியேற்ற மக்களைக் கவர்ந்தது. மேலும் இது இத்தாலிக்கு அதிக அண்மையில் இருப்பதால் இந்தத் தீபகற்பத்தில் அடுத்தடுத்து ஆட்சி புரிந்த அனைவரும் அடைய விரும்பும் பொருளாக இது இருந்து வந்தது.

இந்தத் தீவின் ஆதிக் குடிகள் சிக்கான்கள் (Sicans) ஆவர். இவர்களே தம்மைப் பழங் குடிகள் என்று கருதினர். எக்காலத்தில் இவர்கள் இந்தத் தீவில் புகுந்தனர், அல்லது எங்கிருந்து வந்தனர் அல்லது எந்த மனித இனத்தை இவர்கள் சேர்ந்தனர் என்பதற்கெல்லாம் நம்மிடம் ஆவணங்கள் இல்லை. இத்தகைய சூழ்நிலையில் இவர்கள் இத்தாலியிலிருந்துதான் வந்திருக்கக்கூடும் என்று தெரிகிறது. இந்தத் தீவு இவர்களினால்தான் சிக்கானியா (Sicania) என்று அழைக்கப்பட்டது. இவர்களுக்கு அடுத்தாற்போல் வந்தவர்கள் சிக்கல்கள் (Sicels) ஆவர். இவர்களைப்

பற்றி நாம் சிக்கானியர்களைவிட மிகவும் உறுதியாகப் பேசலாம். இத்தாலியின் பெருவிரல் போன்ற பாகத்தில் 'சிக்கல்'களை நாம் கண்டுள்ளதால், இவர்கள் இத்தாலியிலிருந்து வந்த குடியேற்றக் காரர் என்று சொல்லும் மரபில் உண்மை உள்ளது என அறிகிறோம். லத்தீன் மக்களைக் கொண்ட இத்தாலிய மக்கள்தொகுதி பேசிய மொழியை இவர்களும் பேசினார்கள் என்பதற்குச் சில சான்றுகள் உள்ளன. சிக்கல், சிக்கான் என்னும் பெயர்களில் காணப் படும் ஒப்புமையால் இவர்கள் இருவரும், இனத்திலும் மொழியி லும் உறவுள்ளவர்கள் என்ற கருத்து இயல்பாகவே உண்டா கின்றது. ஆனால் பெயர்களின் ஒப்புமை ஏமாற்றக்கூடும். வார்த் தைகளின் ஒப்புமையைக்கொண்டு கோட்பாடுகள் (theories) உண்டாக்குவதில் விருப்பமில்லாத கிரேக்கர்கள் இனப்படி 'சிக்கல்'களும், 'சிக்கான்'களும் வெவ்வேறானவர்கள் என்று மிகவும் கவனத்துடன் பிரித்துள்ளது குறிப்பிடத்தக்க ஓர் உண் மையாகும். 'சிக்கல்'கள் இத்தாலியிலேயே தங்கிவிட்ட 'சிக்கான்' கள் என்று கொண்டால் இப்போதும் ஒரு தொடர்பை நாம் ஏற் படுத்தக் கூடும். இத்தாலியில் தங்கிய 'சிக்கான்'கள், லத்தீன் மக்கள், அவர்கள் உறவினர் முதலானவர்களுடன் பல நூற்றாண்டு களாகக் கொண்டும் கொடுத்தும் வாழ்ந்து இத்தாலியர்களைப் போலவே ஆயினர். காலப் போக்கில் இவர்கள் சிசிலித் தீவிற்குக் குடிபெயர்ந்து, அங்கே தாம் அநேக நூற்றாண்டுகளுக்குமுன் பிரிந்த தம் சகோதரர்களை, இன்னாரென்று அறிந்துகொள்ளா மலே, சந்தித்தார்கள். ஆனால் இவை யாவும் உறுதியற்றவை. 'சிக்கல்'கள் தீவின் கிழக்குப் பகுதியைச் 'சிக்கான்'களிடமிருந்து பலவந்தமாகப் பற்றிக்கொண்டனர். இதன் பயனாக இந்தத் தீவானது மேற்கில் 'சிக்கானிய' என்ற நாட்டையும், கிழக்கே 'சிசெல்லியா' என்ற நாட்டையும் கொண்ட இரு நாடாகப் பிரிக் கப்பட்டது. ஓடிஸியில் சிக்கானியாவைப்பற்றி வாசிக்கிறோம். சைம்மிலிருந்த கிரேக்கர்கள் இதனை இப் பெயரால் அறிந்தனர் போலும். சிக்கானியாவின் வரலாற்றின் துவக்க காலத்திலேயே இந் நாடு இலிமியர்கள் (Elymians) என்னும் இனம் தெரியாத (mysterious) மக்களால் படையெடுக்கப்பட்டது. இந்த இலிமி யர்கள் இத்தாலியிலிருந்தும் ஆசியா மைனருக்கு வடக்கேயிருந் தும் வந்தனர் என்று பல விதமாகக் கூறப்படுகின்றனர். இவர்கள் ஐபீரிய இனத்தைச் சேர்ந்தவர்கள் என்பது உண்மையாக இருக் கக் கூடும். இவர்கள் இந்தத் தீவின் வடமேற்குப் பாகத்தில் ஒரு சிறு நிலப் பகுதியை உறைவிடமாக்கினார்கள்.

சிறிய அளவில் கண்டமாக அமைந்துள்ள இத் தீவில் இந்த மூன்று மக்களும் வாழ்ந்துவந்தனர். சிறிது காலத்திற்

கெல்லாம் இத் தீவானது கிரேக்கர்களுக்கும், பினீஷியர்களுக்கும் இடையே ஒரு போர்க்களமாக மாறியது. இந்த மூவரில் 'சிக்கல்' கள் எண்ணிக்கையில் அதிகமானவர்களாகவும், மிகவும் முக்கிய மானவர்களாகவும் இருந்தார்கள். வரலாற்றுக் காலத்தில் ஒரே ஒரு முக்கிய 'சிக்கான்' பட்டணமாக ஹிக்காரா (Hykkara) வட மேற்கிலுள்ள நில முனையில் காணப்படுகின்றது. தெற்குக் கரை யில் முதலில் 'சிக்கான்' பட்டணமாகிய மினோவா (Minoa) கிரேக் கப் பட்டணமாகியது. உள்நாட்டில் சற்றுத் தூரத்திலுள்ள கெமிகஸ் (Camicus) முன்னுளில் ஒரு முக்கியக் கோட்டையாக இருந்தது. 'சிக்கான்' குடியேற்றங்களைக் காட்டிலும் இலிமியன் குடியேற்றங்களாகிய செஜெஸ்டா (Segesta), எரிக்ஸ் (Eryx) என்பவை மிகவும் பெரிய முக்கியத்துவத்தை அடைந்தன. இந் தத் தீவின் கிழக்குப் பகுதியான முன்னுள் சிசெலியா, வடக்குக் கரை மையத்திலுள்ள கெப்பலீடியம் (Cephaloedium) (இந் நாள் கிபாலு - Cefalu) முதல் தென்கிழக்கு முக்கிலுள்ள உள் நாட்டு நகரமாகிய மோத்திகா (Motyca) வரை எண்ணிறந்த 'சிக்கல்' கோட்டைகளைக் கொண்டுள்ளது. இக் கோட்டை களில் அதிகப் புகழ் பெற்றவை அஜிரியம் (Agyrium), செந்து ரிபா (Centuripa), மோர்கன்டினு (Morgantina) எல்லாவற் றிற்கும் மேலாக ஹென்னு(Henna)வுமாகும்.

பினீஷியாவிலுள்ள வியாபாரிகள் முந்திய காலத்திலேயே இத் தீவின் கரைகளில் வியாபாரத் தலங்களை ஏற்படுத்தினர். நகரங்கள் என்று அழைக்கப்படக்கூடிய நிலையான (நிரந்தரமான) குடியேற்றங்களை இவர்கள் முதலில் அமைக்கவில்லை. இவர் களுக்குச் சிசிலியானது, மேற்கில் அதிதூரத்திலுள்ள நிலப்பகுதிக் குத் தாம் போய்வரும் நேரான வழியிலுள்ள ஒரு வீடாகவே காட்சியளித்தது. மேற்கிலுள்ள தர்ஷீஷின் தங்கக் கருவூலங் களைத் தாம் அடையும்படி இவர்கள் போகும் காலத்திலும், ஐரோப்பாவையும் ஆப்பிரிக்காவையும் பிரிக்கின்ற இடைகழிக்குச் சற்று வெளியே, தமது முதன்முதலான குடியேற்ற நாட்டைக் கேட்ஸ் (Gades) என்னும் இடத்தில் நிறுவின காலத்திலும் இவர்கள் அடிக்கடி சிசிலியைத் தொட்டுக்கொண்டு போவது வழக்கம். இவர்களுடைய அடுத்த குடியேற்ற நாடுகள் சிசிலிக்கு எதிராயுள்ள ஆப்பிரிக்காக் கரையில் ஏற்படுத்தப்பட்டன. இந்தக் குடியேற்றமானது இந்தத் தீவின் பிற்கால வரலாற்றை அதிக மாகப் பாதித்தது. சிசிலியின் கிழக்குக் கரையிலுள்ள பினீஷிய வாணிபத் தலங்கள், ஒருகால் பழைய பினீஷியாவின் புறக் கோட்டைகளாக இருந்திருக்கலாம். ஆனுல் மேற்கிலுள்ள வாணிபத் தலங்களில் சிலவாகிலும் புதியனவும் பக்கத்திலுள்ளன



படம் 19. சிசிலியும் பெரிய கிரீஸும் (Magna Graecia)

வுமான இந்தப் பினீஷியாவால் ஏற்படுத்தப்பட்டவை. கார்த்தேஜைவிட (Carthage) மிகவும் பழமையான ஹிப்போ (Hippo), யூடிக்கா (Utica) முதலிய குடியேற்றங்கள் சிசிலியிலுள்ள நிலையான குடியேற்றங்களின்[6] பெற்றோராக இருக்கலாம். தீவின் கிழக்குப் பாகத்தில் பினீஷியர்களுக்குக் கால்வைக்கக்கூடிய சரியான பாதுகாப்புடைய இடம் இல்லை. இவர்கள் 'சிக்கல்' ஆதிக் குடிகளின் உடைமைகளைப் பற்றிக்கொள்ள முடியாதவர்களாகவும், அதே நேரத்தில் அங்கே அவர்கள் மத்தியில் தமக்கென இருப்பிடத்தை அமைக்க இயலாதவர்களாகவும் தோன்றினார்கள். இவர்கள் தனி வியாபாரிகளாகவே தோன்றினர். ஆகையால் தான் கிரேக்கர்கள் வந்து உண்மையான நகரங்களை நிறுவும் வேலையில் மும்மரமாக ஈடுபட்டபொழுது, பினீஷியர்கள் தாங்கள் அங்கே தங்கியிருந்ததைக் காட்டும் சான்றுகளைக் கொஞ்சங்கூட விடாமல் அவ்விடம் விட்டு அகன்று சென்றனர்.

இத்தாலிய வரலாற்றைப் போலவே, சிசிலியன்களின் வரலாறும் கிரேக்கர்களுடைய வருகையிலிருந்து ஆரம்பிக்கின்றது. இவர்கள் சால்சிஸ்ஸின் வழித்துணையாலும், அப்போலோவின் ஆதரவினாலும் இங்கே வந்தனர். கிரீஸை நோக்கியிருக்கும் சிசிலியின் கிழக்குக் கரையோரத்தில் முதல் கிரேக்கக் குடியேற்ற நாடு நிறுவப்பட்டது ஓர் இயல்பான செயலாகும். ஏனென்றால், சிசிலியின் கிழக்குக் கரையானது கிரீஸ் நாட்டுக் கடற்கரையைக் குணவியல்பில் அதிகமாக ஒத்துள்ளது. சால்சிடியர்களும், இவர்களுடன் சேர்ந்து வந்த நாக்ஸாஸ் (Naxos) தீவைச் சேர்ந்த

[6] பிந்திய பக்கங்களில் பார்க்கவும். மேற்குச் சிசிலியில் உள்ள பினீஷியன் குடியேற்ற நாடுகளின் காலங்களைக் குறிக்கத் தெளிவான சான்றுகள் இல்லை. இந்தக் குடியேற்ற நாடுகள் கிரேக்கக் குடியேறறங்களுக்குப் பிறகு ஏற்படுத்தப்பட்டிருக்கலாம் என்று வாதிக்க இடம் இருக்கின்றது. ஏனென்றால், இவர்கள் கிரேக்கர்களுக்கு முன்பாகத் தீவிற்குள் வந்திருந்தால், கிரேக்கர்கள் கைப்பற்றின மிகவும் நேர்த்தியான இடங்களை, இவர்கள் கைப்பற்றியிருப்பார்கள். ஆனால் இவ்விதவாதமானது முடிவானதன்று. என்ன இருந்தாலும் இவர்கள் 'சிக்கல்'களை எதிர்த்துப் போராட வேண்டியிருந்தது. சிக்கானியரின் நிலப் பகுதியில் அடிவைக்க இடம் கிடைப்பது ஒருவேளை எளிதான காரியமாக இருந்திருக்கலாம். 'சிக்கல்'களின் நிலப்பகுதியில் பினீஷியர் முயற்சி செய்து தோல்வியடைந்திருக்கலாம். ஆனால் கிரேக்கர்கள் வெற்றி பெற்றிருக்கலாம். மேலும், வெறுமையான வியாபாரத் தலங்களிலிருந்து பினீஷிய நகரக் குடியேற்றங்கள் வளர்ச்சி பெற்றிருந்தால், பின்னால் நகரங்களாக வளர்ந்திருக்கக்கூடிய இத் தலங்களைக் கிரேக்கர்கள் ஒழித்திருக்கலாம்.

அயோனியர்களும் தேர்ந்தெடுத்த இடமானது அவ்வளவு பிரமாத மான இடமன்று. ஈட்ன மலைக்கு வடக்கில், நாக்கைப் போன்ற ஒரு நிலப்பகுதியில் நாக்ஸாஸ் நகரம் நிறுவப்பட்டது. இந்த உயர்ந்த இடமானது, சைம் இருக்கும் மலையைக்காட்டிலும் வித்தியாசமானது. சைம்மைப் போலவே இந்த முயற்சிக்கும் முக்கியப் பங்கை எடுத்துக்கொண்ட சால்சிடியர்கள், புதிய நகரத் திற்குப் பெயர் வழங்கும் (மரியாதையை) மதிப்பைத் தம்மிலும் மெலியாராகிய ஏனைய குடியேற்ற மக்களுக்கு அளித்தனர். மற் றெல்லாக் கிரேக்க நகரங்களைக்காட்டிலும் முதலில் நிறுவப்பட்ட இந்த நாக்ஸாஸ் நகரம் முந்நூறு ஆண்டுகளுக்குமேல் வாழவில்லை. இந்த நகரமானது இதன் பக்கத்திலுள்ள எரிமலையாகிய ஈட்ன வின் தீயினால் அழியவில்லை. இதன் அழிவுக்குக் காரணம், மனித விரோதி ஒருவனே யாவான். இந்தத் தீவில் இது கிரேக்கர்க ளுடைய முதல் இருப்பிடமாகையால், நாக்ஸாஸ் ஒரு புண்ணியத் தலம்போல் ஆயிற்று. இது ஹெல்லாஸின் ஒளிவிளங்குகிற ஒரு பாகமாயிற்று. கிரேக்கர்கள் முதலில் அடி எடுத்து வைத்த இடத்தில் அப்போலோ ஆர்கிஜீடெஸுக்கு (Archegetes) ஒரு பலி பீடத்தை அமைத்தனர். புராணத்தின்படி எதிர்காற்றுகள் வீசின போதும் அப்போலோவின் கருணையால்தான் இவர்கள் சிசிலியக் கரைகளுக்கு வந்து சேர்ந்தார்களாம். பழைய கிரீஸிலிருந்து சிசிலிக்கு வந்து சேர்ந்தவுடன் அரசியல் தூதர்கள் இப் பீடத்தின் மேல் பலிகளை இடுவது வழக்கமாகும். ஈட்னவுக்குத் தெற்கே யுள்ள செழிப்பான சமவெளிப் பிரதேசத்தில் சிலகாலம் கழித்துச் சால்சிடியர்கள் கட்டானே(Catane)யை ஏற்படுத்தினார்கள். இந் நகரம் கடலுக்கு அருகே, பின்பக்கத்தில் உருவத்தில் உயர மில்லாத குன்றுகளைக் கொண்ட தொடர் ஒன்றால் பாதுகாக்கப் பட்டு வந்தது. ஆனால் இந்த நகரம் ஈட்னவுக்குச் சமீபத்தில் இருந்ததால், பல தடவை இது எரிமலையால் நாசமாக்கப் பட்டது. உள்நாட்டில் சமவெளிப் பிரதேசத்தின் தெற்குப் பாகத் தில் இரண்டு மலைகளுக்கு ஊடே லியோன்டினி (Leontini) நிறுவப் பட்டது. கிழக்கேயும் மேற்கேயும் உள்ள இந்த மலைகள் இந் நகரத் தின் சேம அரணாயின. இவ் விரண்டு இடங்களும்-கட்டானே இல்லா விட்டாலும், உறுதியாக லியோன்டினியின் இடம்-'சிக்கான்' மக்களிடமிருந்து பலவந்தமாகப் பற்றிக்கொள்ளப்பட்டன. வட கிழக்கு மூலையைச் சால்சிடியர்கள் கைப்பற்றியதால் தீவிற்கும், இத்தாலிக்கும் இடையேயுள்ள ஜலசந்தியை இவர்கள் அடக்கி யாண்டனர். இங்கே தோற்றத்தில் கதிர் அறுக்கும் அரிவாள் போல் இருக்கும் தாழ்வான நிலவிளிம்பில் சைமியர்களும் (Cymaeans) சால்சிடியர்களும், ஸாங்கிள் (Zancle) என்ற குடி யேற்ற நாட்டை நிறுவினர். ஸாங்கிள் என்ற பதத்திற்கு அரிவாள்

என்பது பொருளாகும். அரிவாளின் உள் வளைந்த அலகே துறை முகமாக அமைந்தது. பிற்காலத்தில் ஸாங்கிள் நாணயங்களை அச்சிடும்போது தன் நாணயங்களில் ஓர் அரிவாளையும், அதற்குள் ஒரு டால்பின் (Dolphin) என்ற மீன் மிதப்பதாகவும் பொறித்த னர் - அரிவாளும் டால்பினும் இவர்களுடைய துறைமுகத்தைக் குறித்தன என்பதற்குச் சந்தேகமே இல்லை. நூறு ஆண்டுகளுக்குப் பின் மெஸ்ஸீனியர்களின் கூட்டம் ஒன்று குடிபெயர்ந்து இங்கு வரவே, இந்த இடம் முற்றிலும் மாறுபட்டது. கடைசியில் இதன் பழைய பெயர் மெஸ்ஸானு (Messana) என்ற புதிய பெயரால் துரத்தப்பட்டது. வடகிழக்கிலுள்ள நிலமுனையின் அடுத்த பாகத்தில் யூபியர்கள் ஸாங்கிளிலிருந்து முன்வாங்கி மைலீ (Mylae) என்ற கோட்டையை நாட்டினார்கள். வட கரையிலுள்ள ஒரே கிரேக்க நகராகிய ஹிமிராவை (Himera) ஏழாம் நூற்றாண் டின் மத்தியில் இவர்கள் நிறுவினார்கள். இந் நகரம் ஏறத்தாழ இரண்டரை நூற்றாண்டு, செழித்திருந்து பின்னால் பினீஷியர்களால் அழிக்கப்பட்டது. இத்தாலியன் தீபகற்பத்தில் ஸாங்கிளுக்கு எதிராயுள்ள முனையானது, தம் சிநேகிதர்களின் கையில் இருக்க வேண்டும் என்று அவாக்கொண்ட ஸாங்கிளின் மக்கள், ரிஜியோன் (Rhegion) என்ற நகரை நிறுவும்படி தமது தாய் நகரத் தைத் தூண்டினர். இதை ஏற்படுத்துவதில் மெஸ்ஸீனியர்களும் பங்கு கொண்டனர்.

சிசிலியின் வடகிழக்கில் இந்தச் சால்சிடியக் குடியேற்ற நாடுகளின் தொகுதியானது அமைக்கப்பட்டுக்கொண்டிருக்கும் போது தென்கிழக்குச் சிசிலியில் டோரிய கிரேக்கர்கள் கால் வைக்குமிடத்தைப் பெற ஆரம்பித்தனர். இந்தப் பாகத்தை, வரலாறு டோரியர்களுடைய பாகமெனத் தீர்மானித்தது. முதன் முதலில் நிறுவிய டோரியன் நகரமே, மிகவும் பெரிய நகரமா யிருந்தது. கிரேக்கச் சிசிலியின் தலையாக அமைந்த சைரக்யூஸ் (Syracuse), எட்டாம் நூற்றாண்டின் இறுதியில் ஆர்க்கியாஸ் (Archias) தலைமையின்கீழ் வந்த கொரிந்தியக் குடிபெயர்ச்சி யாளர்களால் ஏற்படுத்தப்பட்டது. கிட்டத்தட்ட இதே சமயத் தில் கொரிந்து பட்டினம் கார்ஸைராவைக் குடியேற்ற நாடாக் கிற்று. அயோனியத் தீவுகள் மேற்குப் பிரதேசத்திற்குப் போகும் வழியிலுள்ள நிலையங்களாயின. இவைகளில் எந்தக் குடியேற்ற நாடு முந்தினது என்பதை நாம் அறியோம்; மரபும் இதனை முடிவுசெய்ய முயலவில்லை. ஏனென்றால், இவ் விரண்டு குடியேற்ற நாடுகளும் ஒரே ஆண்டில் நிறுவப்பட்டதாக மரபு கூறுகின்றது. ஆனால் இந்த இரண்டு குடியேற்ற நாடுகளிலும் முன்னாக இருந்த கிரேக்கக் குடியேறிகளின் உடைமையைக்

கொரிந்து விலக்கியது; இந்த இரண்டிலும் முன் குடியேறியவர்கள் யூபியர்களாவர். கொரிந்தியக் குடியேற்ற மக்கள் கார்ஸைரா விலிருந்து எரிதிரியர்களையும் சைரக்யூஸிலிருந்து சால்சிடியர்களை யும் துரத்த வேண்டியதாயிற்று.

சைரக்யூஸின் துறைமுகமானது அதன் தீவையும் அதன் குன்றையும் கொண்டு கிழக்குக் கரையில் மனங் கவர்கின்ற ஓர் இடமாக இருந்தது. இந்த முனைப்பான இடம் ஆதிக் குடியேற் றக்காரர்களைத் தன்னிடம் வரவழைக்கச் செய்தது. ஆர்டிகை (Ortygia)யாத் தீவைச் சால்சிடியர்கள் தம் கைவசப்படுத் தினார்கள். இதற்கு மறு பெயர் 'காடைகளின் தீவு' (Isle of Quails). இவர்கள் இதைச் 'சிக்கல்'களிடமிருந்து அல்லது பினீஷிய ரிடமிருந்து கைப்பற்றியிருக்கக்கூடும். சால்சிடியர்கள் இதனை வெகு காலம் தம் கைவசம் வைத்திருந்து, தமது பழைய இல்லத்திலுள்ள அரிதூஸா (Arethusa) என்னும் நீர் ஊற்று ஒன்றுடன் இதைச் சதா காலத்திற்கும் இணைத்தனர். நாக்ஸாஸைக் கைப்பற்றிய சிறிது காலத்திற்கெல்லாம் சால்சிடியர்கள் சைரக்யூஸைக் கைப் பற்றினார்கள் என்பது மிகவும் நம்பக்கூடியது. கொரிந்தியர்கள் அதிக ஆண்டுகள் கழித்தேதான் சால்சிடியர்களை ஒதுக்கி வைத்து விட்டுத் தம் ஆதிக்கத்தை நிறுவினர். ஆனால் இவர்கள் சைரக் யூஸைத் தம் வசமாக்கிய பிறகு, லியோன்டினிக்குத் தெற்கே சால்சிடியர்களின் பெருக்கத்தை வலிமையுடன் தடுத்தனர்.

முன்னாளில் மேகாரியர்களும் ஒரு புதிய இல்லத்தைத் தேடி மேற்கு நோக்கிச் சென்றனர். பலமுறை தோல்வியடைந்து கடைசியில் சைரக்யூஸிற்கு வடக்கே கடற்கரையில், ஐப்லா (Hybla) குன்றுகளுக்குப் பக்கத்தில் தம் நகரத்தை நிறுவினார் கள். இவர்களுடைய மேற்கு மேகாராவை நிறுவச் 'சிக்கல்' ஆதிக் குடிகளும் உதவியிருக்கக்கூடும். இதுவே கிழக்குக் கரை யில் அதிக வடக்கிலுள்ள டோரிய நகரமாகும். ஆனால் தனது தாய் நகரத்தைப்போலவே, ஐப்லாயின் (Hyblaean) மேகாரா வும் தன்னைவிட மிகப் புகழ் பெற்ற ஒரு குடியேற்ற நாட்டை ஏற்படுத்தியது. ஏழாவது நூற்றாண்டின் மத்தியில் தங்களுடைய தாய் நாட்டிற்கு மேகாரியர்கள் மக்களை அனுப்பி, சிசிலியின் தென்மேற்குப் பாகத்தில் ஒரு குடியேற்றத்தை அமைக்க அவர் களுடைய ஒற்றுமையைக் கோரினார்கள். இந்தக் குடியேற்றம் கிரேக்கச் சிசிலியின் வெகு தூரத்திலுள்ள புற அரணாகிய செல் லைனஸ் (Selinus) ஆகும். இது கடற்கரையிலுள்ள தாழ்வான ஒரு குன்றின்மேல் அமைந்துள்ளது. இதன் நாணயங்கள் பெருமையாகக் கூறுவதுபோல், இந்த நகரம் அங்குக் கிடைக்கப் பெறும் காட்டுச் செல்லரிக் (celery) கீரையைக் கொண்டே

செல்லினஸ் என்றழைக்கப்பட்டது. 'சிக்கல்'களின் நல்லெண்ணத்துடன் மேகாரா கைப்பற்றப்பட்டது. செல்லினஸ் ஒருகால் 'சிக்கானியர்'களின் விருப்புக்கு விரோதமாகக் கையாளப்பட்டு வந்திருக்கலாம். இதற்கு இடையில் தென்கிழக்கு மூலையானது டோரிய நகரங்களால் நிரப்பப்பட்டது. ஆயினும், இவைகள் வடக்கிலுள்ள சால்சிடிய நகரங்களைப்போல வேகமாக எழும்பவில்லை. இந்த இடத்தில் 'சிக்கல்'கள் கடுமையாக எதிர்த்ததாகத் தெரிகின்றது. ஏழாவது நூற்றுண்டின் துவக்கத்தில் கீலா (Gela) - இது ஒரு 'சிக்கல்' பெயராகும் - கிரீட்டர்களைத் துணைவர்களாகக் கொண்ட ரோடியக் (Rhodian) குடியேற்றக்காரர்களால் ஏற்படுத்தப்பட்டது. கடலுக்கும் உள்நாட்டுச் சமவெளிக்கும் இடையே நீண்டு குறுகிய குன்றின்மேல் இந் நகரம் அமைக்கப் பெற்றது. பிந்திய காலம் ஒன்றில் ஆக்ரீ (Acrae), காஸ்மினி (Casmenae) என்ற குடியேற்ற நாடுகளைச் சைரக்யூஸ் நிறுவியது. இவைகளின் பெருமை, சைரக்யூஸின் பெருமையால் மறைக்கப்பட்டுப் போயிற்று. அதுவுமன்றி இந்த இரு குடியேற்ற நாடுகளும் அரை நூற்றுண்டிற்குப்பின் சைரக்யூஸால் அதிக தூரத்தில் நிறுவப்பட்ட கமாரினு(Camarina)வைப்போல் அவ்வளவு சுதந்தரத்தை அடையவில்லை.

சிசிலியில் டோரியர்கள் ஏற்படுத்திய கடைசிக் குடியேற்ற நாடு இவர்களுடைய முதல் குடியேற்ற நாட்டைப்போல் அவ்வளவு பகட்டாக இல்லை. தங்களுடைய தாய் நகரமாகிய ரோட்ஸிலிருந்து ஓர் ஈஸிஸ்ட்(oecist)டைக் கேட்டுப் பெற்றுக் கீலோவர்கள் (Geloans), தம்முடைய நகரத்திற்கும் செல்லினஸிற்கும் இடையில் உயர்ந்த நகராகிய அக்ரேகஸ்(Acragas)ஸை நிறுவினார்கள். இது சில காலத்திற்கெல்லாம் கிரேக்கச் சிசிலியில் இரண்டாவது இடத்தைப் பெற்றுச் சைரக்யூஸின் எதிரியாயிற்று. இந் நகரானது கடற்கரையிலுள்ள ஓர் உன்னதக் குன்றின் சிகரத்தில் கட்டப்பட்டது. சிறியதும் எளியதுமான இதன் துறைமுகம் பட்டினத்தைவிட்டுச் சிறிது தூரத்திலுள்ளது. 'ஆடு மேய்க்கும் அக்ரேகஸ்' கடலைச் சார்ந்த நாடாகவில்லை. இந் நகரத்தின் நாணயங்களில் காணப்படும் அடையாளங்கள் கழுகும் நண்டுமாகும்.

சிசிலியில் தம் குடியேற்ற நாடுகளை நிலைநாட்டும்போதும், தம் ஆதிக்கத்தை நிறுவும்போதும் கிரேக்கர்கள் முக்கியமாகச் 'சிக்கல்'களை நம்ப வேண்டியதாயிருந்தது. அதிக மேற்கிலுள்ள தமது எண்ணிக்கையில் குறைந்த நகரங்களை ஏற்படுத்தும்போது இவர்கள் 'சிக்கானியர்'களோடு தொழில் தொடர்பு கொள்ள வேண்டியதாயிற்று. இப் பழங்குடிகள் கடற்கரைகளிலிருந்து

பின்வாங்கி, உள்நாட்டில் குன்றுகளின்மேல் அமைக்கப்பட்ட தம் கோட்டைகளில் வசிக்கலாயினர். இத் தீவு பெரியதாயிருந்த தாலும், இதன் குணவியல்பு கண்டத்தை ஒத்ததாலும் புதிதாக இதற்குள் வந்த மக்கள் இதனை முழுவதுமாகக் கைப்பற்ற முயல வில்லை. பினீஷியர்களுடன் கிரேக்கர்களுக்கு அவ்வளவு தொல் லைகள் இல்லை. அவர்களுடைய வாணிபத் தலங்களும், கோவில்களும் இத் தீவில் வேர் ஊன்றுமலிருந்தன. ஆகை யால், அந்நியர்கள் நிலையாக இத் தீவில் இருக்க வரும்போது பினீஷியர்கள் அப்படியே மறைந்தனர். ஈஜியப் பிரதேசத்தில் உள்ளபடி இங்கேயும் அவர்களுடைய வழிபாட்டின் சின்னங்கள் சில இடங்களில் காணப்படுகின்றன. ஆனல் இவர்கள் இத் தீவின் மேற்கு மூலையை விட்டுவிடவில்லை. இதற்குக் காரணம், கிரேக் கர்கள் இங்கே குடியேற முயலவேயில்லை என்பதுதான். அங்கே இவர்கள் மூன்று இடங்களைத் தமது பாதுகாப்பில் வைத்திருந் தனர். இம் மூன்றும் காலாகாலத்தில் நகரங்களின் இயல்புகளைப் பெற்றன. இவைதாம் பானர்மஸ் (Panormus), சோலஸ் (Solus), மோத்தியா (Motya) என்பவை. இப் பெயர்களுக்குப் பொருள் முறையே துறைமுகம், பாறை, தீவு என்பனவாகும். செழிப் பான ஒரு சமவெளியில் உள்ள பானர்மஸ் அல்லது 'முழுவது மான துறைமுகம்', வடக்கில் இப்போது யாத்திரிகர்கள் செல் லும் புனித மலையாகிய எர்க்டி (Hercte) மலையாலும், கிழக் கில் சோலஸ்ஸாலும் பாதுகாக்கப்பட்டுள்ளது. மேற்குக் கரையில் ஒரு சிறு விரிகுடாவிலுள்ள தீவில் மோத்தியா அமைந்துள்ளது. மோத்தியாவிற்கும் பானர்மஸ்ஸிற்கும் இடை யில் இலிமியர்களின் நாடு அமைந்துள்ளது. இலிமியர்க ளுடைய முக்கியப் பட்டணமாகிய செஜெஸ்டா (Segesta) (இது கிரேக்கர்களுடைய வாயில் எஜெஸ்டாவாகத் - Egesta - திரிந் தது.) எல்லாவிதத்திலும் ஒரு நகரமேயாகும். இதற்கு மேற்கில் கடற்கரைக்கு அருகில் இல்லாமல், கடல் மட்டத்திற்கு அதிக உயர்வில் இருந்த எரிக்ஸ் (Eryx) இவர்களுடைய பாதுகாப் பிற்கான வெளி அரணயிருந்தது. எரிக்ஸின் உச்சியில் இவர்கள் ஓர் இயற்கைத் தேவதையை வழிபட்டு வந்தனர். இத் தேவதை சில காலத்திற்கெல்லாம் கிரேக்க ஆப்ரோடைட்டுடன் இன உறுதி செய்யப்பட்டனள். இலிமியர்கள் பினீஷியர்களுடன் நல் லுறவு கொண்டிருந்ததால், மேற்குச் சிசிலியானது பினீஷியர் களின் மூலையாயிற்று. உள்நாட்டுப் பிரதேசங்கள் 'சிக்கல்'க ளிடமும் 'சிக்கான்'களிடமும் விடப்பட்டிருந்தன. ஆனல் கடற் கரை ஓரங்கள் கிரேக்கர்களுக்கும் பினீஷியர்களுக்கும் இடையே நடந்த போராட்டங்களின் போர்க்களங்களாக மாறின. இங்கு இந்த இரண்டு போர்த்தரப்பார்களின் இயல்பான இடமானது

நேர் மாறுகத் திருப்பியிருந்தது. ஏனென்றால், ஆசியாவைச் சேர்ந்த நாடு தீவின் மேற்கிலும், ஐரோப்பாவைச் சேர்ந்த நாடு தீவின் கிழக்கிலும் காணப்பட்டது. ஏழாவது நூற்றாண்டில் இவர்களிருவருக்குள்ளும் போர் தொடரவில்லை; தொடரவும் அதிக ஆண்டுகள் இருந்தன. ஏனென்றால், அப்போது இந்தத் தீவில் அங்குள்ள கிரேக்கர்களும், கானனியர்களும் (Canaanites) அமைதியுடன் வாழும் வசதியான வாய்ப்புகள் இருந்தன - முக்கியமாக இவர்களிருவருக்கும் போதுமான அளவுக்கு நிலங்கள் இருந்தன.

மத்தியதரைக் கடலிலுள்ள மூன்று தீபகற்பங்களில் மத்தியிலுள்ள தீபகற்பத்தின் பெயரான இத்தாலி ஜூலியஸ் ஸீஸர் காலத்தில்கூட, போ (Po) நதிதீரம் வரையில் பரவவில்லை. தொடக்கத்தில் இப் பெயர் ஒரு சிறு பகுதியைத்தான் உண்மையில் குறித்தது. தூசிடைடிஸ் (Thucydides) ஐந்தாம் நூற்றாண்டில் இத்தாலி என்ற பெயரைத் தற்கால கலாப்பிரியா (Calabria) வைக் குறிக்கத்தான் உபயோகித்தார். இந்தத் தீபகற்பம் கீழ்க் கோடியில் இரண்டு பிளவுகளாகப் பிரிந்துள்ளது. இவைகளின் மேற்கிலுள்ள பிளவுதான் கலாப்பிரியாவாகும். கிரேக்கர்கள் இங்கு முதன்முதலாக வந்தபோது இந்தக் கோடியில் 'சிக்கல்' களும் ஈனோட்டிரியர் (Oenotrians) களும் வாழ்ந்து வந்தனர். ஆனால் இந்தத் தீபகற்பத்தின் குதிகால் போன்ற பகுதியை, முன்னைய நாள் கிரேக்க வரலாற்றில் ஒரு முக்கியப் பங்கை எடுத்த (இதை நாம் மங்கலாகத்தான் பார்க்க முடிகிறது) இல்லீரிய (Illyria) இனத்தைச் சேர்ந்த மக்கள் கைப்பற்றினர். இல்லீரியர்கள் ஏட்டிரியாட்டிக் (Adriatic) பகுதியில் முந்திக் கொண்டனர். இத்தாலியைக் கிரேக்கர்கள் கட்டிச் சேருமுன் இவர்கள் அதனை அடைந்தனர். இந்தக் குதிகாலிற்குத் தம் பெயரை ஈந்த கலாப்பிரியர்கள் (Calabrians) இல்லீரிய இனத்தவர்கள். இவர்களுடன் மெசாப்பியர்களும் (Messapians) இருந்தனர். கடலுக்கு அப்பாலுள்ள மெசாப்பியர்களின் சகோதரர்களில் சிலர் கிரேக்கர்களுடன் ஒப்புறவு கொண்டாடி லோக்ரிஸ், பீயோஷியா மற்றும் பெலோப்போனீஸஸ் முதலிய இடங்களுக்குள் ஊடுருவிப் புகுந்ததாகச் சொல்லப்படுகிறது. எட்டாவது நூற்றாண்டின் இறுதிக்காலம்போல் பெலோப்போனீஸ்ஸைச் சேர்ந்த அக்கியர்கள், 'சிக்கல்' களும் ஈனோடிரியர்களும் வசித்துவந்த கடற்கரைப் பிரதேசத்தைத் தம் குடியேற்ற நாடுகளை அமைக்க ஏற்ற இடமெனக் கண்டனர். மேற்கு நாடுகளுக்குச் செல்ல அயோனியத் தீவுகள் ஒரு விதக் காலடித் தோரணைகளாக இருக்கின்றன என்பதை நாம் முன்பே அறிந்தோம். கொரிந்தியர்கள் கார்சைராவில் எவ்வண்

ணம் குடியேறினர்களோ அவ்வண்ணமே அக்கியர்கள் ஸாக்கின்தஸ் (Zacynthus)ஸில் குடியேறுகிறதை நாம் காண்கிறோம். இவர்கள் இத்தாலியில் முதலில் ஏற்படுத்திய குடியேற்ற நாடுகள், தமது செல்வத்திற்கும் தமது போட்டிகளுக்கும் பெயர்போன சிபேரிஸ் (Sybaris)ஸும், க்ரோட்டா(Croton)னும் ஆகலாம். க்ரேத்திஸ் (Crathis) நதியின்மேல் அமைக்கப்பட்ட சிபேரிஸ் பலவித வியாதிகள் பீடிக்கப்பட்டதானாலும் மற்றவிதத்தில் மிகவும் செழிப்பான சமவெளியில் காணப்படுகின்றது. குறுகிய தீபகற்பத்தின் குறுக்கே சிபேரிஸ் தனது ஆதிக்கத்தை நிறுவி, மேற்குக் கரையில் லாவேஸ் (Laos), சிட்ரோஸ் (Saidros) என்ற குடியேற்றங்களை ஏற்படுத்தி இப்படி இரு கடல்களை ஆட்சி செய்தது. இவ்விதமாக மேற்கு மத்தியதரைக் கடல் பிரதேசத்திற்குப் போகும் தரைமார்க்கம் தன் கைகளில் இருந்ததால், மைலீஸியர்களின் விலையுயர்ந்த வாணிபப் பொருள்களை டிர்ரெனியன் (Tyrrhenian) கடலிலுள்ள தன் துறைமுகங்களுக்கு எளிதில் அனுப்ப முடிந்தது. மைலீஸியர்கள், சால்சிடியர்களின் பொறாமையினால், இத்தாலிக்கும் சிசிலிக்கும் இடையேயுள்ள கடற்காலை உபயோகிக்காதபடி தடுக்கப்பட்டனர். இப்படிப் பயிர்த்தொழிலும், போக்குவரவுச் சாதனமும் சிபாரிசின் குறிப்பிடத்தக்க செல்வத்திற்கு அடிப்படையாக இருந்தன. இதன் விளைவால் சிபாரிஸ் மக்கள் இன்ப வாழ்க்கையில் மிகவும் ஈடுபடலாயினர். சிபாரிஸின் பெயர் முதுமொழியொன்றில் இணைக்கப்பட்டது. தனது கோவில்களுக்கும், ரோஜா மலர்களுக்கும் புகழ்பெற்ற பாஸிடோனியா (Posidonia) சிபாரிஸிலிருந்து மேற்குக் கடல் பிரதேசத்தில் ஏற்படுத்தப்பட்ட மற்றொரு குடியேற்ற நாடாகும். இந்தக் குடியேற்ற நாடு டிரிஸான் (Troezon) நகரத்திலிருந்து அக்கியர்களால் துரத்தப்பட்ட டிரிஸானியர்களால் ஏற்படுத்தப்பட்டது.

சிபேரிஸிலிருந்து தெற்கு நோக்கிச் செல்லுவோமானால் கடற்கரை லாசினியன் (Lacinian) நிலமுனையை அடைவதற்குச் சிறிது தூரத்தில் க்ரோட்டான் காணப்படுகிறது. இந்த லாசினியன் நில முனையில் உள்ள ஹீராவின் கோவில், இத்தாலியிலுள்ள கிரேக்கக் குடியேற்ற மக்கள் யாவரும் வழிபாட்டிற்குக் கூடும் ஒரு மத்திய இடமாக இருந்தது. மற்ற அக்கியக் குடியேற்ற நாடுகளைப் போலல்லாமல் க்ரோட்டான் ஒரு நல்ல துறைமுகத்தையுடையதாயிருந்தது. இதுதான் டாரென்டம் (Tarentum) வளைகுடாவிற்கு மேற்குப் பாகத்திலுள்ள நல்ல துறைமுகமாகும். ஆனால் கப்பல் போக்குவரத்துக்களினால் இதன் செழிப்பு உண்டாகாமல் நிலத்தைப் பயிர் செய்வதாலும், மாடுகளை

மேய்ப்பதாலும் உண்டாயிற்று. இந் நகரத்தின் முன்னுள் நாணயங்களில் காணப்படும் டெல்பிக் முக்காலிப் படத்திலிருந்து, இந் நகரத்தை நிறுவுவதில் எப்பொழுதும் எடுக்கும் சிரத்தையைவிட அதிகச் சிரத்தையை டெல்பிக் தெய்வம் எடுத்திருக்கக்கூடும் என்று நாம் தீர்மானிக்கலாம். சிபாரிஸைப்போலவே க்ரோட்டானும் தனது நிலப் பகுதியை விரித்தும், தன் சொந்தக் குடியேற்ற நாடுகளை நிறுவியும் இருந்தது. டிர்யெனியன் கடலில் லாவேஸும், சிட்ரோஸும் சிபாரிஸுடன் எப்படி இணைக்கப் பட்டனவோ அதே விதத்தில் டிரிஞ (Terina) வும், டிமிஸா (Temesa)வும் க்ரோட்டானுடன் இணைக்கப்பட்டிருந்தன.[7]

ஒருவேளை க்ரோட்டானியர்களின் குடியேற்ற நாடாக இருக்கக்கூடிய, காலோனியா அக்கியக் குடியேற்ற நாடுகளில் மிகவும் தெற்கிலுள்ளது. இது மேற்கு லோக்ரி(Locri)க்கு அயலில் இருந்தது. இது 'சிக்கல்' களின் நிலப்பகுதியில் ஏற்படுத்தப் பட்டது. கிரீஸிலுள்ள மூன்று லோக்ரியன் அரசுகளில் எந்த அரசால் இது நிறுவப்பட்டது என்பதை நாம் திட்டமாகச் சொல்வதற்கில்லை. ஒரு வேளை இந்தக் குடியேற்றம் மூன்று அரசுகளின் கூட்டு முயற்சியாகக்கூட இருக்கலாம். தனது அண்மையிலுள்ள அக்கிய நாடுகள் போல இதுவும் பயிர்த்தொழிலைச் சார்ந்த நாடாயிருந்தது. மற்றும் அவைகளைப்போலவே இந்த நாடும் மேற்குக் கடற் பகுதிக்கு ஊடுருவிச் சென்று, அந்தக் கடற் கரையில் மெட்மா (Medma) ஹிப்போனியன் (Hipponion) என்ற குடியேற்ற நாடுகளை ஏற்படுத்தியது.

அக்கியர்களும், லோக்ரியர்களும் தங்களுக்குள்ளே சண்டையிட்டுக்கொள்ளலாம். ஆனுல் இவர்கள் இருவருக்குமிடையே பல பொதுவான காரியங்கள் இருந்தன. அவை இக்காரியர்கள் லோக்ரியர்கள் இவர்களிருவருக்கும் அல்லது இவர்களில் ஒருவருக்கும் டோரியர்களுக்கும் உள்ளதைவிட அதிகமாயிருந்ததால் நாம் லோக்ரியை அக்கியத் தொகுப்புடன் மிகவும் வசதியாகச் சேர்த்துக்கொள்ளலாம். டோரியன் குடியேற்ற நாடு ஒன்றும் ஏற்படுத்தப்படாமலிருந்தால் இத்தாலியின் தெற்குக் கரை ஒரே இனத்தைச் சேர்ந்த மக்கள் சூழ உள்ள வட்டமாயிருந்திருக்கும். ஆனுல் அங்கு இருக்கும் வளைகுடாவின் வடகோடி முனையிலுள்ள பாதுகாக்கப்பட்ட ஒரு சிறு விரிகுடாவில் டோரியக் குடியேற்றம்

[7] பாண்டோஸியா (Pondosia) க்ரோட்டானின் மற்ருெரு குடியேற்ற நாடாகும். இது அயோனியப் பட்டினமாகிய ஸ்கைலேட்டியானைக் (Scylletion) (ஸ்கைலேஷியம் — Scylacium) கைப்பற்றியது.

ஒன்று நிறுவப்பட்டது. இக் குடியேற்ற நாடு மேற்படி வளைகுடா விற்குத் தன் பெயராகிய தாராஸ் (Taras) அல்லது டாரென்டம் என்பதை ஈந்தது. இந்த வளைகுடா இன்றும் இப் பெயரால்தான் அழைக்கப்பெற்று வருகின்றது. டாராஸ் மிகவும் குறிப்பிடத் தக்கதாகும். ஏனெனின், இது கிரேக்கர்களில் மிகவும் உன்னதமான வர்கள் என்று கருதப்படும் டோரிய மக்களால் ஏற்படுத்தப்பட்ட ஒரே ஒரு வெளிநாட்டுக் குடியேற்ற நாடாகும். சிபாரிஸைப் போல் பக்கத்திலுள்ள ஒரு நீரோட்டத்தின் பெயரைக்கொண்டு அழைக்கப்பட்ட இந்தப் பட்டினம் பார்த்தேனியீ (Partheniae) என்பவர்களால் ஏற்படுத்தப்பட்டது. பார்த்தேனியீ என்ற பெயர் இன்னும் விளக்கப்படாமல் இருக்கின்றது. தாராஸை முதலில் ஏற்படுத்தியவர்களான பார்த்தேனியீ பெலோப்போனீஸஸ்ஸி லுள்ள டோரியர்களுக்கு முந்திய கிரேக்கர்கள் என்று எண்ணக் காரணங்கள் இருக்கின்றன. ஆனால் நமக்குத் தெரியாத ஒரு காலத் தில் லாக்கோனியக் குடியேற்றக்காரர்கள் இதனைக் கைப்பற்றி டோரிய நகரமாக்கினர். இதன்பின் வளர்ந்த ஒரு புராணக்கதை பார்த்தேனியை ஸ்பார்ட்டாவுடன் இணைத்தது. இதுவுமன்றி வெவ்வேறு உருவத்தைக் கொண்ட வரலாற்றுச் சிறுகதை யொன்று தயாரிக்கப்பட்டது. மெஸ்ஸீனியர்களுடன் யுத்தம் நடைபெறும்பொழுது ஸ்பார்ட்டர்கள் பல ஆண்டுகளுக்கு வீடு திரும்பாததால் ஸ்பார்ட்டாவின் பெண்கள் ஈலாட்டர்களுக்குப் பிள்ளைகளைப் பெற்றனர்கள் என்றும், இதனாலாகிய பார்த்தேனியீ அல்லது 'கன்னிகளின் மக்கள்' என்ற பின் மரபினர் அரசுக்கு விரோதமாகச் சதி செய்து நாட்டைவிட்டுத் துரத்தப்பட்டுத் தெய்வ மொழியால் தாராஸில் போய்க் குடியேறும்படி கட்டளை யிடப்பட்டனர் என்றும் கூறப்படுகின்றது. முதலில் சிறு நிலப் பகுதியைச் சார்ந்த ஒரு கடல் தெய்வமாயிருந்து பாஸிடோ னின் வருகைக்குப்பின் ஒரு வீரனுடைய பதவிக்குத் தாழ்த் தப்பட்ட பாலாந்தஸ் (Phalanthus) டாரென்டைன் மக்களால் வழிபடப் பெற்று வந்தார். இவர் டால்பின் மேல் ஏறிப் பயணம் செல்வதைத் தங்களுடைய நாணயங்களில் பொறித் துள்ளார்கள். பார்த்தேனியீயின் கதையை உருவாக்கியவர்கள் இவரை லாக்கோனியாவிலிருந்து வந்த குடியேற்ற மக்க ளின் தலைவராக்கியுள்ளார்கள்.

டாரென்டைன் மக்களின் செல்வம் ஓரளவுக்கு இவர்களின் செழுமை பொருந்திய நிலப்பகுதியில் நடக்கும் பயிர்த் தொழிலை யும், முக்கியமாக இவர்களுடைய கைத்தொழில்களையும் சார்ந் திருந்தது. இவர்களுடைய நெசவுப் பொருள்களும், சாயம் ஏற்றிய கம்பள நூல்களும் பெயர் பெற்றவை. இவர்களுடைய

மட்பாண்டங்கள் பல இடங்களில் உபயோகிக்கப்பட்டன. உண்மையில், தாராஸ் வேளாண்மையைச் சார்ந்த நாடாக அல்லாமல் கைத்தொழிலைச் சார்ந்த நாடாகக் கருதப்படவேண்டும். இதன் அமைப்பிடம் இதனைக் கலாப்பிரியன் தீபகற்பத்திலுள்ள மக்களுடன் தொடர்புகொள்ளச் செய்தது. மெஸ்ஸாப்பியர்களின் பட்டினமாகிய பிரெண்டிசியோன் (Brentesion) இதன் பெரிய எதிரியாக இருந்தது. கிரேக்கப் போட்டிக்காரர்கள் இல்லாத கிழக்குக் கரையில் இது காலிப்போலிஸ் (Callipolis), ஐட்ரஸ் (Hydrus) என்ற குடியேற்ற நாடுகளை நிறுவியது. ஆனால் மேற்குப் பாகத்தில் இது முன்னேறும் என்று முன்னால் அறிந்த சிபேரியர்கள் (Sybarites) தங்களுடைய புத்திக் கூர்மையினால் இதைத் தடுத்தனர். இந்த டோரியன் நகரம் கரைமுழுவதும் பரவி, பிராடானஸ் (Bradanus), ஸிரிஸ் (Siris) முதலிய நதிகள் பாயும் செழிப்பான சமவெளியைக் கைப்பற்றிக்கொள்ளும் என்று இவர்கள் பயந்தனர். எனவே, இவர்கள் பழைய கிரீஸ் நாட்டைச் சேர்ந்த அக்கியர்களைப் பிராடானஸ் நதியின்மேல் மெட்டாபான்டியோன் (Metapontion) என்ற குடியேற்ற நாட்டை நிறுவும்படி தூண்டினர். மெட்டாபியின் (Metapian) அல்லது மெஸ்ஸாப்பியன் குடியேற்றக்காரர்களிலிருந்து வந்ததே இந்த மெட்டாபான்டியோன் என்ற பெயராகும். இதுதான் மிகவும் வடக்கிலுள்ள அக்கிய நகரமாகும். இங்குள்ள மக்கள் வேளாண்மையில் ஈடுபட்டுச் செழிப்புற்றனர். இந் நகரம் தாராஸின் மேற்குமுக விரிவைத் தடைசெய்தது. இதற்கிடையில் அக்கியர்கள் எந்த இடத்திற்கு டோரியரை வரவிடாமல் தடுக்க வேண்டும் என்று விரும்பினார்களோ, அதே இடத்தை மற்றோர் எதிரி நாடு கைப்பற்றியது. ஏழாவது நூற்றாண்டின் மத்தியில் ஸிரிஸில் கொலோபோனியர்கள் (Colophonians) ஒரு குடியேற்ற நாட்டை ஏற்படுத்தினார்கள். இந்த அயோனியன் அரசு அக்கியர்களுடைய நகரங்களின் வரிசையைக் குலைக்க முற்பட்டது. மெட்டாபான்டியோன் தனது உறவினரிடமிருந்து பிரிக்கப்பட்டது. இந்தப் பிரதேசங்களில் இந்தக் காலத்தில் அயோனியர்கள் ஒரு குடியேற்ற நாட்டை நிறுவ முயன்றதாகிய இந்தத் தனிமையான செயல், கவிஞர் ஆர்கிலோக்கஸ் இந்தத் துணிகரச் செயலில் ஒருகால் பங்கெடுத்திருக்கக்கூடும் என்பதனால் தனிச்சுவை பொருந்தியதாக விளங்குகிறது. ஆனால் இந்த முயற்சி தோல்வியடைந்ததாகத் தெரிகின்றது. சான்றுகள் தெளிவாக இல்லாதபோதிலும், இந்த இடம் அண்மையிலுள்ள அக்கியர்களால் கைப்பற்றப்பட்டு, ஓர் அக்கியப் பட்டினமாகியது என்று எண்ணுவதற்குப் பல காரணங்கள் இருக்கின்றன. சிபாரிஸ், க்ரோட்டான், லோக்ரி முதலிய நகரங்கள்போல் டிர்ஹெனியன்

கடலில் ஸிரிஸூம் ஒரு நகரைக் கொண்டிருந்தது. இந் நகரம் இதன் குடியேற்ற நாடன்று (daughter); ஒரு துணைக் கூட்டாளியே யாகும். பொதுநல விருப்பத்தால் தூண்டப்பட்டு, ஸிரிஸிஸ் பைக்ஸஸ்ஸூடன் (Pyxus) நெருங்கிய தொடர்பு கொண்டது. இரண்டு நகரங்களும் பொது நாணயங்களை வெளியிட்டன. இவர்கள் மற்றவர்களுக்குப் போட்டியாக ஒரு தரை வழியையும் ஏற்படுத்தியிருக்கலாம்.

இப்படி டாரன்டைன் வளைகுடாவின் மேற்குக் கரையோரத்தில் வரிசையாக அக்கிய நகரங்களும், அவைகளுக்கு வலது விலாப்புறத்தில் மேற்கு லோக்ரியும், அடுத்த பக்கத்தில் டோரிய தாராஸ்ஸூம் இருக்கக் காண்கின்றோம். இந்த அக்கிய நகரங்களின் பொதுப் பண்பு என்னவென்றால், இவைகளின் செல்வம் யாவும் கடலைச் சாராமல் பெருநிலப் பகுதியையே சார்ந்திருந்தன என்பதே. இந்தப் பண்பானது அக்கிய நகரங்களைச் சால்சிடியர்கள், கொரிந்தியர்கள் ஆகியோர் நிறுவிய நகரங்களிலிருந்து பிரித்துக் காட்டுகின்றது. இவர்களுடைய செல்வர்கள் நிலக்கிழார்களேயன்றி வியாபாரிகள் அல்லர். இவர்களைத் தொலை தூரத்திலுள்ள மேற்கு நாடுகளுக்கு வரும்படி முதலில் கவர்ந்தது, போக்குவரத்துப் பணியன்று; செழிப்பான நிலமேயாகும். அமைதியை நாடும் 'சிக்கல்' களும் ஈனோடிரியர்களும் இவர்களுடைய குடியேற்றங்களை நிறுவும்போது தடைகளை ஏற்படுத்தாமல், இவர்களுடைய ஆட்சிக்குப் பணிந்துபோனதாகத் தெரிகின்றது. கலாப்பிரியாவிலுள்ள அயபிஜியர்களும் (Iapygians), மெஸ்ஸாபியர்களும் குணத்தில் வேறுவிதமானவர்கள்; எனவே, போர் விருப்பமுள்ள ஸ்பார்ட்டர்கள்தாம் தாராஸ்ஸை நிறுவுவதில் வெற்றி பெற்றார்கள் என்பது குறிப்பிடப்பட்ட ஒரு செயலாகும்.

இந்த நகரங்களும், குன்றுகளுக்கப்பால் டிர்ஹெனியன் கடலின் ஓரங்களில் அமைந்துள்ள இவைகளின் சார்பரசு நாடுகளும் ஒரு தொகுதியாகக் கருதப்பட்டன. இந்த நாடு பெரிய கிரீஸ் (Hellas) என்று அழைக்கப்பட்டது. கிரீஸிலுள்ள பழைய அக்கியர்களுடைய நிலங்கள் இங்கிருக்கும் நிலங்களைவிடக் குறைவாக இருந்ததால் நாம் இதனைப் 'பெரிய அக்கியா' என்று அழைக்க எதிர்பார்ப்போம். ஆனால் மற்றவைகளைப்போலவே இங்கேயும் இரு தரப்பாரின் பெயரே நிலவுகின்றது. ஸ்பெர்சியஸ் (Spercheus) வெளியிலுள்ள ஹெலனீஸ் என்று அழைக்கப்பட்ட பழைய கிரேக்கக் குடிகள் அக்கியர்களால் தோற்கடிக்கப்பட்டிருந்தால், அந்த வெற்றி மறந்துவிடப்பட்டது. இவ் விரு சாராரும் புதிய குடியேற்ற நாடுகளை நிறுவுவதற்காக ஒன்றுசேர்ந்து மேற்கே சென்றனர். இங்கே ஹெலனியர்களின் பெயர் புகழ்ச்சியையும்

மேன்மையையும் அடைந்தது. டாரன்டைன் வளைகுடாவின் கரையிலுள்ள வரிசையான கிரேக்கக் குடியேற்றங்களைப் பெரிய (கிரீஸ்) ஹெல்லாஸ் என்று அழைத்ததுமட்டும் ஒரு சிறு காரிய மாகாது. ஆனால் எல்லாக் கிரேக்க இனங்களையும் குறிக்கும்படி ஹெல்லனீஸ் என்ற பெயர் விரிவாக்கப்படுவதுடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது, இது ஒரு சிறிய காரியமேயாகும். ஹெல்லனீஸ் என்ற பொதுப் பெயரைத் தாங்களாகவே தீர்மானிக்கக் கிரேக்கர் களை ஒன்றும் தூண்டுவதற்கில்லை. இவர்கள் தாமாகவே வேண்டு மென்று ஒரு பெயரைத் தேடியிருப்பார்களானால், இவர்களுடைய இயல்பான விருப்பம் அக்கியன் என்ற பெயரேயாகும். இதை ஹோமரும் விரிந்ததொரு பொருளில் உபயோகித்துள்ளார். இவர்களுக்கு இந்தப் பெயர் வெளியேயுள்ள மக்களால்தான் கொடுக்கப்பட்டிருக்கும். மத்திய இத்தாலியிலுள்ள காட்டு மிராண்டி மக்கள் கிரீஸ் (Graes) என்ற பெயரை எடுத்துக்கொண் டதுபோல, தென்பாகத்தில் தீபகற்பங்களிலுள்ள காட்டுமிராண் டியர்கள் ஹெல்லனீஸ் என்ற பெயரை எடுத்துக்கொண்டனர். மேலும், இவ் வினத்தைச் சேர்ந்த எல்லாக் குடியேற்றக்காரர்களை யும், அந்நியர்களையும் காட்டும்படி இப் பெயரை உபயோகித்தனர். எல்லாக் கிரேக்கர்களையும் குறிக்க, காட்டுமிராண்டியர்களின் வாயி லிருந்து வந்த இந்தப் பொதுப் பெயரானது, கிரேக்க வியாபாரி களுக்குத் தாம் யாவரும் ஒரே இனத்தைச் சேர்ந்தவர்கள் என்னும் முக்கிய உண்மையை உணர்த்தியது. மேற்கே போகும்பொழுது பொருளில் தெளிவில்லாமல் இருந்த 'ஹெலன்னீஸ்' என்ற பெயர் புதியதோர் கருத்து அல்லது சொற்பொருளுடன் கிரீஸ் நாட்டிற் குத் திரும்பி வந்து மக்கள் யாவராலும் உபயோகிக்கப்பட்டு வந்தது. கற்பனையான முன்னோராகிய ஹெலன் கிரேக்க இனத்தின் மூதாதையர் ஆனார்; டோரியர்கள், அயோனியர்கள், ஈயோலியர்கள் இவர்கள் யாவருடைய கற்பனையான முன்னோர் யாவரும் இவரிலிருந்து தோன்றியவர்களானார்கள். எவ்விதம் மூல ஈயோலியர்களும் அயோனியர்களும் தமது தனியான இன உறுதி களை இழந்துவிட்டனரோ அதே வகையில் மூல ஹெலனியர்களும் (Hellenes) தம் இன உறுதிகளை முற்றிலும் இழக்கலாயினர். அவர் களுடைய பெயர், மனிதனுடைய பேச்சு உள்ளவரை நிலவிவரும்; ஆனால் அவர்களைவிடப் பெரியவர்களாயிருந்த மக்களின் பெயர் களோவென்றால், எப்போதாவது மனிதரால்நினைவுக்குக் கொண்டு வரும் நிலைக்கு வந்துவிட்டன.

## 4. வாணிபத்தின் வளர்ச்சியும் கப்பல் வினைத் திட்பமும்

உயர்குடியாட்சிகளின் காலத்தில் கிரேக்க உலகத்தின் தோற்றம் முழுவதும் மாறுதலடைந்தது. கிரேக்கர்கள் கிழக்கி

லும் மேற்கிலும் பரவினதே இம் மாறுதலின் ஒரு பாகம். ஆனால் குடியேற்றம் வேறு பல மாறுதல்களை உண்டாக்க ஏதுவாயிருந்தது. இந்தக் குடியேற்ற நாடுகள் தாய் நாடுகளிலிருந்து அரசியல் விவகாரங்களில் சுதந்தரமடைந்திருந்தபோதிலும் தாய் நாட்டை இவை பலவிதங்களில் பிரதிபலித்தன.

குடும்பச் சொத்து முறையானது எவ்விதம் குடியேற்ற முயற்சிக்கு அநுகூலமாயிருந்தது என்பதை நாம் முன்னமே கவனித்துள்ளோம். ஆனால் இந்த முறையின்கீழ்த் துன்பமடைந்த குடியேற்ற மக்கள், இந்த முறையைத் தம் புதிய குடியேற்றங்களில் புகுத்த முற்பட்டிருக்க மாட்டார்கள். எனவே, இங்குத் தனியார் நில உடைமை முறை முதலில் இவர்களால் ஏற்படுத்தப்பட்டு ஒழுங்குபடுத்தப் பட்டிருக்கலாம். இவர்களுடைய உதாரணம் தாய் நாட்டைப் பாதித்தது. தாய் நாட்டில் பிற காரணங்களும் சேர்ந்து குடும்பச் சொத்து முறைக்குத் தீங்கிழைத்தன. முதலாவதாக, அரசின் அதிகாரங்கள் அதிகரிக்கவே குடும்பத் தலைவரின் அதிகாரம் குறைந்தது. எப்பொழுதெல்லாம் அரசின் தலைமையானது, மன்னனாலும் சரி அல்லது குடியாட்சி அரசாங்கமானாலும் சரி, அமோகமான அதிகாரங்களைக்கொண்டு விளங்குமோ அப்போதெல்லாம் அரசின் அதிகாரத்தினால் மறைக்கப்பட்ட குடும்பத் தலைவருடைய மதிப்பு வலிவின்றிக் காணப்படும். இரண்டாவதாக, குடும்பத்தைச் சேர்ந்த ஒருவரிடம் பண்ணையைக் கவனிக்கவும், அதனைத் துண்டுபடுத்தாமல் அதிலிருந்து கிடைக்கும் விளைபொருள் முதலியவற்றை உபயோகித்து மகிழவும் பண்ணைகளைக் கொடுப்பது வழக்கம். இந்தப் பண்ணை அவருடையதாக இல்லாதபோதிலும், அவருக்கு இதனை மற்றவர்களுக்கு வழங்கும் அதிகாரம் இல்லாமலிருந்தாலும், அவருடைய மறைவுக்குப் பின் அவருடைய மகனுக்கு, அவருக்குக் கொடுக்கப்பட்ட நிபந்தனைகளின்படியே, இந்தப் பண்ணையைக் கொடுப்பது இயல்பாக இருந்து வந்தது. இவ்வித வழக்கம் கடைசியில் நிலத்தில் தனி உரிமையாளர்களை உருவகப்படுத்த ஏதுவாயிருந்தது என்பது தெளிவாகத் தெரிகின்றது. இதுவுமன்றி, பிரிக்கப்படாத குடும்பப் பண்ணைகளைத்தவிரச் சொத்துக்களும் தனியார்களால் ஈட்டப்பெற்றன. இந்தக் காலத்தில் ‘காட்டு மிருகங்கள் அலைகின்ற’ ஒருவருக்கும் கொடுக்கப்படாத நிலங்கள் மலைச்சாரல்களில் இருந்தன. ஆற்றல் படைத்த ஒருவன் இந் நிலங்களை எடுத்து அங்கு வேளாண்மை செய்ததால் இந்தப் புதிய வயல்கள் அவனுடையவையாயின. ஏனென்றால், இதற்குமுன் இது ஒருவருக்கும் சொந்தமாக இருக்கவில்லை. இப்படிப் பழைய

முறை மறைவதும் குடும்பங்களின் பெரிய பண்ணைகள் சிறுசிறு தனியார்களின் நிலப் பகுதிகளாக மாறுவதும் தவிர்க்க முடியாதவை என்று நாம் பார்க்கின்றோம். இந்த மாறுதல் சட்டங்களின்மூலம் நடைபெறவில்லை. 'எப்படிப் படிப்படியாக இந்த மாறுதல்கள் உண்டாயின ?' என்பது நம் கண்களுக்குத் தெரியாமலிருக்கிறது. தனியார் உடைமை, உரிமை முறை எல்லாராலும் ஏற்றுக்கொள்ளப்பட்ட பிறகே சட்டம் முன்வந்து நிலங்களின் விற்பனைகளை ஒழுங்குபடுத்தியும், மக்களுக்குத் தங்கள் நிலங்களின் மேல் உள்ள உடைமை உரிமையை மற்றவர்களுக்குக் கட்டுப்பாடின்றி மாற்றிக் கொடுக்கும் உரிமையை வழங்கியும் இம்முறையை ஒப்புக் கொண்டது.

இக் காலத்திலுள்ள கிரேக்க கிராம வாழ்க்கையின் சித்திரத்தை ஹெஸியட் என்னும் பீயோஷியக் கவிஞர் நமக்கு அளித்துள்ளார். இவர் அஸ்க்ரா (Ascra) விற்கு அண்மையில் கிராமத்திலுள்ள ஒரு வேளாளர். இவருடைய தந்தை ஈயோலிஸ்ஸிலுள்ள சைம்மிலிருந்து இங்கு வந்து ஹெலிகான் (Helicon) மலையின் சரிவுகளில் ஒரு தரிசு நிலத்தை வேளாண்மை செய்தார். இந்த விளைநிலம் இரு சமமில்லாத பாகங்களாகப் பிரிக்கப்பட்டுப் பெர்செஸ் (Perses), ஹெசியட் (Hesiod) என்ற இரு மக்களுக்கும் கொடுக்கப்பட்டது. பெர்செஸ் அங்குள்ள சீமான்களுக்குக் கைக்கூலி வழங்கிப் பெரியதொரு பாகத்தைப் பெற்றுக்கொண்டான் என்று ஹெசியட் குற்றஞ் சாட்டுகிறார். ஆனால் பெர்செஸ் தமது விளைநிலத்தைச் சரியாகக் கவனிக்காததால், அது செழிப்படையவில்லை. ஹெசியட் தம் சகோதரன்போன்ற ஊதாரி உழவர்களுக்குப் பயிர் செய்யும் முறையையும், சிக்கனத்தையும் சொல்லிக் கொடுக்கவே தம் 'வேலைகள்' (works) என்ற செய்யுளை இயற்றினர். வாழ்க்கையைக் குறித்து இவருடைய நோக்கம் மிகவும் வருத்தமுற்றதாய்க் காணப்படுகின்றது. பீயோஷியாவின் சமூகத்தில் கடுந்துயரத்திற்கான நிலை இருந்திருக்க வேண்டும் என்று இது காட்டுகின்றது. இந் நிலை உயர்குடி மக்களின் கொடுமையால் உண்டாயிருக்கும் என்று தோன்றுகிறது. இவர் இந்தச் சீமான்களை, 'அன்பளிப்புகளை வழங்கும்' அரசிளங்குமாரர்கள் என்று அழைப்பதிலிருந்து இது நன்றாக விளங்குகின்றது. இந்தக் கவிஞர் மிகவும் வருத்தத்துடன் கடந்துபோன காலத்தைக் கண்ணுறுகின்றார். பொற்காலம், வெள்ளிக்காலம், வெண்கலக்காலம், ட்ராய் நகரில் போர் புரிந்த வீரர்களின் காலம் யாவும் கடந்து போயின; மக்கள் இப்போது இரும்புக் காலத்தில் இருக்கின்றனர் ; ''இவர்கள் சோர்விலிருந்தும், துக்கத்திலிருந்தும் பகலிலும் அல்லது இரவிலும் மீளமாட்டார்கள்'' என்று புலம்புகிறார். ''நான் ஏன்

இந்தத் தலைமுறையில் வாழ்கின்றேன்? நான் முந்தியே இறந்திருந்தால் அல்லது பிந்திப் பிறந்திருந்தால் எவ்வளவு நலமாயிருக்கும்!'' என்றும் கூறுகின்றார். உழவர்களின் அன்றாட வேலைகளைக் குறிக்கும் நுண்ணிய குறிப்புகளை இந்தச் செய்யுள் கொடுக்கின்றது. இந்தச் செய்யுள் விதைக்காலம், அறுப்புக்காலம் வயலில் இதர வேலைகள், கைத்தொழிலுக்கு உபயோகிக்க வேண்டிய கருவிகள் யாவையும்பற்றிக் கூறுகின்றது. இந்தக் குறிப்புகள் உலகறிந்த முதுமொழிகளைத் துணையாகக்கொண்டுள்ளன.

ஹெசியட் எழுதிய நூல் அக் காலத்துச் சமூகத்தை நம் கண் முன் தோன்றும் காட்சியாக விரித்துரைக்கும் வகையில் மிகவும் பயனுள்ளதாக இருப்பதுமன்றி அக் காலத்துப் பொது மக்கள் பேசும் குரலாக எழுதப்பட்ட முறையில் மிகவும் முக்கியமாகக் கருதப்படுகின்றது. ஐரோப்பிய வரலாற்றில் தமது நிலைமையில் மக்கள் குலத்தின் கவனத்தைக் கவர, உழைப்பாளி வகுப்பினர்களிலிருந்து எழும்பிய முதல் குரல் இவருடையதாகும். இந்தக் குரல் சம்மதத்தின் குரலாகும்; இது உடன் உழைப்பாளிகளைத் தாம் இருக்கிற கேடான நிலைமையிலே இருந்துகொண்டு நல்ல காரியங்களைச் செய்ய அறிவுறுத்தியது. இன்னமும் இக் குரலானது புரட்சியாகிய கட்டத்தை அடையவில்லை. ஆனால் குறைகள் எடுத்துக் காட்டப்படுகின்றன; அதிகாரங்களைக் கொண்டுள்ள பிரபுக்களை நாடு செழிக்க நேர்மையான நீதி வழங்கும்படி கோருகின்றனர். இப் புதிய கவிஞர் உருவத்திலும், நடையிலும் ஹோமரின் செய்யுட்களின் செல்வாக்குக்கு உட்பட்டபோதிலும் இவர், தாம் புதிய இசை உண்டு பண்ணுவதாகவும் மக்களுக்குப் புதிய செய்திகள் அளிப்பதாகவும் எண்ணம் கொண்டார். ஹோமரைப் போலல்லாமல் தம்மைத் தாமே வெளிபடுத்துகின்றார். கலைத்தேவதைகள் (Muses) உண்மைகளையும் அழகிய புனை கதைகளையும் கற்பிக்கின்றனர் என்று கூறும்போது ஹோமருக்கு எதிராகத் தம்மை நிறுத்துகின்றார். தியோகோனி (Theogony) என்னும் மற்றொரு செய்யுளில் ஹெலிகான் (Helicon) மலைச்சாரலில் ஹெசியட் ஆடுகளை மேய்த்துக்கொண்டிருந்தபோது ஸீயூஸின் குமாரத்திகள் இவருக்குப் பாடம் கற்பித்தனர் என்று சொல்லப்பட்டிருக்கின்றது. இவருக்கு இப் பெண்கள் வாகைக் கிளையைக் கோலாகத் தந்தனர் என்று கூறப்பட்டிருக்கின்றது. அந்தக் கோல் பாணரின் சின்னமாயிற்று. ஏனென்றால், பெருங் காப்பியங்கள் (Epics) வீணையை மீட்டிப் பாடப்படவில்லை. ஆனால் அவை, 'ஹோமரின் செய்யுள் ஒப்பிப்பவரால்' (rhapsode) நேராகக் கையில் கோலோடு நின்று ஒப்பிக்கப்பட்டன. பிறகு கலைத் தேவதைகள் ஆஸ்க்ராவின் மேய்ப்பனை இவருக்கு, நடந்ததையும்

நடக்கப்போவதையும் உரைக்கும் பெருஞ் சக்தியைக் கொடுத்துப் புனிதமான தெய்வங்களின் இனத்தைப்பற்றிப் பாடும் வேலையை இவருக்கு அளித்தனர். இந்த வேலையை இவர் தமது தியோகோனியில் நிறைவேற்றுகிறார். எவ்விதம் தெய்வங்கள், பூமி, ஆறுகள், பெருங்கடல்கள், விண்மீன்கள், வானம் அல்லது சுருங்கச்சொல்லின் உலகம் படைக்கப்பட்டது என்று இவர் பாடுகின்றார். துவக்கத்தில் காணப்பட்ட முடிவில்லாத பரந்த வெளியில் எவ்விதம் பூமி, அன்பு முதலியவை தோன்றின என்றும் பாடுகின்றார். உலகத்தில் முதன் முதல் தோன்றிய முக்கிய ஆற்றல்களுடன் இவர் எப்படி அன்பு, நினைவு, உறக்கம் முதலியவற்றை அறிமுகப்படுத்துகிறார் என்பது குறிப்பிடத்தக்கதாகும். அண்டசராசரங்களின் துவக்கத்தைக் குறித்த ஆழ்ந்த ஆராய்ச்சிகளும், மக்களிடம் உலவிவரும் புராணக் கதைகளைத் தொகுத்து ஒழுங்காக அமைக்க எடுத்துக்கொண்ட முயற்சியும் கிரீஸினுடைய அறிவாற்றலின் வளர்ச்சியில் ஒரு புதிய கட்டத்தைக் குறிக்கின்றன. இவைகளைத்தவிர வேறு பல நூல்கள், ஹெஸியட் என்ற பெயரைக் கொண்டு, தம் இன அடையாளங்கள் இந்த ஹெஸியட்டுடன் இணைத்துக்கொண்ட பல பாணர்களால் இயற்றப்பட்டன. நாம் முன்னரே அறிந்தபடி[6] தங்களுடைய இனத்தின் ஆதி வரலாற்றைக் குறித்த கிரேக்கக் கருத்துக்களைச் செப்பம் செய்வதில் ஹெஸியட் என்ற பெயர் கொண்ட பலர் இயற்றிய செய்யுட்கள் தம் செல்வாக்கை அதிகமாக உபயோகித்தன.

பீயோஷியா எக்காலத்திலும் எழுச்சியற்ற உழவர்களைக் கொண்ட நாடாகும். ஹெஸியட்டின் தந்தை ஈயோலிஸ்ஸிலிருந்து தோன்றியபோதிலும், இவருக்கு வாணிபம் அல்லது அயல் நாடுகளுடன் சம்பந்தம் கொள்வதில் ஆர்வம் இல்லை. ஆனால் வாணிபத்தின் வளர்ச்சி அக்காலத்தில் ஒரு முக்கியக் காரியமாகும். இங்கும் குடியேற்ற நாடுகள் தம் தாய் நாடுகளை மிகவும் பாதித்தன. கிரேக்க உலகத்தின் எல்லைகளை அகலமாக்கியதால் இந்தக் குடியேற்ற நாடுகள் கிரேக்க வாணிபத்தை அபிவிருத்தி செய்ததுமன்றி, தொழில்களின் வளர்ச்சியையும் மேம்படச் செய்தன. இதுவரை கிரேக்கர்கள் பெரும்பான்மையும் வேளாண்மைத்தொழிலையும், மேய்ச்சல் தொழிலையும் செய்து வந்த மக்களாயிருந்தனர். ஆனால் இப்பொழுது இவர்களில் அநேகர் ஆக்கத் தொழிலில் ஈடுபட முற்பட்டுக்கொண்டிருக்கின்றனர். இவர்கள் தங்களுடைய மேற்குக் குடியேற்ற நாடுகளுக்கு எண்ணெய், ஆட்டு உரோமம், உலோகங்கள், மட்பாண்டங்கள் முதலிய சரக்குகளை

[6] முதலாம் அத்தியாயம் 11ஆம் பிரிவைப் பார்க்கவும்.

அனுப்ப வேண்டிய நிலைவந்தது. எனவே, இவர்கள் பினீஷியர் களுடன் கடுமையான போட்டியில் ஈடுபட்டுப் பின் விற்பனைக் களத்திலிருந்து கிழக்கு நாட்டின் வியாபாரப் பொருள்களைத் துரத்த வேண்டியதாயிற்று.

நீர்வழிப் பாதைகள்மூலம் கிரேக்க வாணிபம் நடைபெற்றது. கிரீஸில் சாலைகள் அமைப்பதை மக்கள் கவனியாதிருந்தது மேற் கூறிய உண்மையை நன்ருக விளக்குகின்றது. பிற்காலத்தில் கூட அடிக்கடி மக்கள் திரளாகப் போய்வரும் கோவில் திருவிடங் களை இணைக்கும் புனிதப் பாதைகள் நீங்கலாக, வேறு தளம் போட்ட பாதைகள் இல்லை. ஆதென்ஸையும் எலியூஸிஸை யும் இணைக்கும் பாதை அல்லது ஆதென்ஸையும் டெல்பியையும் இணைக்கும் பாதை அல்லது ஆதென்ஸிலிருந்து கடற்கரையோர மாக ஒலிம்பியா செல்லும் பாதை இவைகள் புனிதப் பாதைகளுக்கு சிறந்த எடுத்துக் காட்டாகும். இப்படி இருந்தபோதிலும், கிரேக் கர்கள் தைரியமற்ற கப்பலோட்டிகள். நன்ருகத் தெரிந்த கடல் களில்கூடக் கோடைக் காலத்தின் பிற்பகுதியிலன்றிக் கப்பலோட்டு வது இடையூறுகள் நிறைந்தது என்று மக்கள் கருதினர். மக்க ளுக்குப் பொதுவாகக் கடலின்மேல் இருந்த பயத்தை ஹெசியட் தம் பாக்களில் தெளிவாகக் கூறியுள்ளார். ''சங்கிராந்திக்கு அடுத்த ஐம்பது நாட்கள், அறுப்பு முடியுமட்டும், கப்பலோட்டு வதற்கு ஏற்ற காலமாகும். அப்பொழுது பாஸிடோன் அல்லது ஸீயூஸ் கப்பலோட்டிகளின் அழிவை விரும்பினுலொழிய, அவர் களுடைய கப்பல்கள் சிதைவுபடமாட்டா. அவர்களுடைய கப்ப லோட்டிகள் அலைகளினுல் கொண்டுபோகப்படவும் மாட்டார்கள். அந்தப் பருவத்தில் காற்றுகள் நிலையாக வீசும்; பெருங் கடல்கள் அமைதியாக இருக்கும்; மனநிம்மதியுடன் கப்பலில் சரக்குகளை அடுக்கி வைத்துக் கப்பலை எடுத்துச் செல்லுங்கள். ஆனுல் மிகவும் அவசரத்துடன் மீண்டும் வீடு திரும்ப முற்படுங்கள். புதிய திராட்சை ரசத்திற்காகவும், திராட்சை ரசம் பிழிந்து எடுக்கும் காலத்தில் பெய்யும் மழைக்காகவும் காத்துக்கொண்டிருக்க வேண்டா. ஏனென்ருல், பனிக்காலம் துவங்கும்போது ஸீயூஸ் அனுப்பும் கனமான இலையுதிர்கால மழையும் தெற்குக் காற்றும் சேர்ந்து கடல்களின் அலைகளைக் கிளறிவிட்டுக் கடலை இரக்கமற்ற தாகச் செய்கின்றன.'' - ஆனுல் இச் சமயத்தில் நங்கூரத்தைக் கண்டுபிடித்தனுல் கப்பல் தொழிலில் ஒரு முக்கிய முன்னேற்றம் ஏற்பட்டது.

கடலைச் சார்ந்த நாடுகளில் கடற் கொள்ளைக்காரர்களின் தாக்குதலிலிருந்து தப்பித்துக்கொள்ள யுத்தக் கப்பல்கள் கட்ட வேண்டிய அவசியத்தை அறிந்திருந்தனர். பென்டிகான்டர்

(penticonter) அல்லது ஐம்பது துடுப்புகள் கொண்ட கப்பலே முதலில் கிரேக்கர்கள் வழக்கமாக உபயோகித்த யுத்தக் கப்பலாகும். பென்டிகான்டர் என்பது நீளமான பெரியதொரு கப்பலாகும். ஒவ்வொரு பெஞ்சிலும் இரண்டு படகோட்டிகள் உட்காரக் கூடிய இருபத்தைந்து பெஞ்சுகள் இருந்தன. கிரீஸில் எட்டாம் நூற்றாண்டுக்குமுன் பென்டிகான்டர் உபயோகத்திற்கு அவ்வளவாக வரவில்லை. இருபது துடுப்புகள்கொண்ட சிறிய கப்பல்களைத்தான் ஹோமர் காலத்திலுள்ள கிரேக்கர்கள் கொண்டிருந்தனர். ஆனாலும், ஹோமரின் செய்யுட்களிலிருந்து பென்டிகான்டர் இவர்களுடைய கண்ணுக்கு எட்டிய தொலைவில் வர ஆரம்பித்தது என அறிகின்றோம். கிரேக்கர்களுக்கு இது புதுமைவாய்ந்ததும், வியப்பை ஊட்டுவதுமாயிருந்தது. இலியட்டில், பெருங்கடலின் தெய்வமாகிய பிரையரீயாஸ் (Briareos), ஏஜியன் (Aegean) என்ற பெயருடன் தோற்றமளிக்கின்றது. இந்தத் தெய்வம் ஒருவேளை நூறு கைகளைக்கொண்டு ஓட்டப்பட்டு பந்தயக்காரன் மாதிரி வேகமாகச் செல்லும் பென்டிகான்டராகவே இருக்கலாம். ஒடிஸியில் (Odessey) கப்பல் தொழிலில் மன்னர்களான பியாசியர்கள் (Phaeacians) ஐம்பது துடுப்புகள் கொண்ட கப்பல்களைக் கொண்டிருப்பதை நாம் காண்கின்றோம். ஆனால் எட்டாவது நூற்றாண்டின் இறுதிக்கு முன்னால் பினீஷியாவில் ஒரு புதுக் கருத்து, கப்பற் கட்டும் தொழிலிலேயே ஒரு புரட்சியை உண்டுபண்ணியது. ஒரு வரிசைக்குமேல் மற்றொரு வரிசையாக இரண்டு வரிசைப் பெஞ்சுகள் கொண்ட கப்பல்கள் கட்டப்பட்டன. இம் முறையினால் கப்பலின் நீளம் அதிகரிக்கப்படாமலேயே துடுப்புகளும், கப்பலின் வேகமும் அதிகரிக்கப்பட்டன. ஆனால் இந்தப் பைரீம் (bireme) கிரீஸில் பொதுவாக உபயோகிக்கப்படவில்லை. ஏனென்றால், பினீஷியர்கள் மிக விரைவில் இதனைச் செம்மையாக்கி மூன்றாவது வரிசைத் துடுப்புகளைக்[3] கொண்ட ட்ரைரீம் (trireme) கப்பல்களை உண்டுபண்ணினர். 170 படகோட்டிகளால் இயக்கப்பட்ட ட்ரைரீம், கடைசியில் கிரேக்க யுத்தக் கப்பலாக எப்பொழுதும் எல்லோராலும் உபயோகிக்கப்பட்டு வந்தது. கொரிந்தியர்கள் முதலில் இதைப் புதிதாகத் தொடங்கி வைத்தபோதிலும் ஒரு நீண்ட காலத்திற்குப் பழைய பென்டிகான்டர்களே பொதுவாக உபயோகத்தில் இருந்து வந்தன. ஆனால் இந்தப் புதிய

[3] இவ்விதமான நீண்ட கப்பல்களைக் கட்டுவிக்கும் வெளிப்படுத்தப் பெறாத கலை இப்போது மறக்கப்பட்டுப் போய்விட்டது. தற்காலக் கப்பல் கட்டுபவர்கள் ட்ரைரீம் ஒன்றை அதே விதமாகச் செய்ய இயலாதவர்களா யிருக்கின்றனர். பிற்காலத்தில் அதிகத் தளங்கள்-ஐந்து, பத்து, நாற்பதுகூடக்-கொண்ட கப்பல்களைக் கட்டுவித்தனர்.

கருத்திற்கு உரிய மதிப்பு யார் முதலில் பைரீமைக் கட்டுவித்தாரோ அவருக்கே உரித்தானது. ஏழாவது நூற்றுண்டில் எந்தெந்தக் கடற் போர்கள் நடந்தனவோ அவைகளில் எல்லாம் முக்கியமாகப் பெண்டிகான்டர்கள் உபயோகிக்கப்பட்டன என்று நாம் உறுதியாய் நம்பலாம். ஆனல் பெண்டிகான்டர்களும் ட்ரைரீம்களும் கப்பல்களின் முன்பாகத்தில் புதிதாகக் கண்டுபிடித்து வைக்கப் பெற்ற வெண்கலத்தினுல் செய்யப்பட்ட தகர்ப்புப் பொறி **(ram)**யின் வருகையினுல் பாதிக்கப்பட்டன. தாக்குதலுக்கு உபயோகிக்கப்படும் போர்க் கருவியாகிய இப் பொறி பிற்காலத்துக் கிரேக்கக் கப்பற் பொறியின் குணவியல்பையையே மாற்றிவிட்டது. இரண்டு கிரேக்க நாடுகளுக்கிடையே நடந்த முதல் ஒழுங்கான கடற் சண்டை ஏழாவது நூற்றுண்டின் மத்திய பாகத்திற்கு முன்னதாகமே கொரிந்து பட்டினத்திற்கும் அதன் மகள் நகரமாகிய கார்சைரா (Corcyra) விற்கும் நடந்ததாகக் கிரேக்கர்கள் நம்பினர். இந்த மரபு உண்மையாய் இருந்தால் இந்த நிகழ்ச்சியானது இத்தாலி, சிசிலி, எட்ரியாட்டிக் கடற் கரைகளிலே வாணிபத்திற்காக நடந்த போராட்டத்தில் உள்ள இடை நிகழ்ச்சியாக இருக்கலாம் என்று நாம் நம்பக்கூடும். ஆனல் மேற்கில் கொரிந்து பட்டினத்துடன் முக்கியமாகப் போட்டியிட்டவர்கள் யூபியாவின் நகரங்களாகிய சால்சிஸ்(Chalcis)ஸும் எரிதிரியாவுமாகும். கீழ்க் கரைக்கடல்களின் வாணிபப் போக்குவரத்தில், தன்னுடைய குடியேற்ற நாடுகள் ஒன்றும் இல்லாவிடினும் ஈஜைனு ஒரு சுறுசுறுப்பான பாகத்தை மேற்கொண்டு, கிரீஸ் நாட்டில் செல்வச் செருக்குடைய நாடுகளில் ஒன்றுகத் திகழ்ந்தது. ஆதென்ஸினிடமும் நாவாய்கள் இருந்தன. ஆனல் அதனுடைய தொழில்கள் இன்னமும் மற்ற நாடுகளுடன் ஒத்துப் பார்க்கும் பொழுது சிறிய அளவில்தான் இருந்து வந்தன. பிந்திய காலத்தில் இதன் வாணிபம் வளர்ச்சியடையவே, இதன் அயலகத்தவர்கள் இதனுடன் மும்முரமாகப் போட்டியிட்டனர். ஆனல் தொழில்களிலும், வாணிபத்திலும் அதிக சுறுசுறுப்பாயிருந்தவர்கள் அயோனியாவிலுள்ள கிரேக்கர்களே யாவர்.

## 5. கிரீஸின்மேல் லிடியாவின் செல்வாக்கு

ஆசியக் கரையைச் சேர்ந்த கிரேக்கர்கள் நன்மைக்கும் தீமைக்கும் தமக்கு அருகிலுள்ள உள்நாட்டு நாடுகளைச் சார்ந்திருந்தனர். உள்நாட்டு வாணிபம் இவர்களுடைய செழிப்பைப் பெருக்கிற்று. ஆனல் வலிமை பொருந்திய காட்டுமிராண்டியான ஒரு நாடு தோன்றினுல், எந்த நிமிடத்திலும் இவர்களுடைய சுதந்தரம் பயங்கரமாகப் பாதிக்கப்படக்கூடும். ஏழாவது நூற்

ருண்டின் துவக்கத்தில் கிரேக்கர்களுக்கும் பிரிஜியா (Phyrigia), மீயோனியா ஆகிய இரு மன்னராட்சி நாடுகளுக்குமிடையே சுறு சுறுப்பான வாணிபத் தொடர்பு ஏற்படுத்தப்பட்டது. மைடாஸ் (Midas) என்ற பிரிஜிய மன்னன் ஓர் அரியணையை டெல்பி தெய்வத்திற்கு அர்ப்பணம் செய்தான். பிரிஜியர்களும் லிடியர் களும் கிரேக்க அகரவரிசையை மேற்கொண்டனர். கிரேக்கர்கள் இவர்களுடைய சங்கீத முறைகளை மேற்கொண்டனர். அதுவு மின்றிப் பிரிஜிய புராணக் கதைகளைத் தம் புராணங்களில் இணைத் துக்கொண்டனர்.

சிறிது முக்கியத்துவம் வாய்ந்த பிரிஜியர்கள் லிடியாவிற்குள் புகுந்து அங்கே உயர்ந்த இடத்தைப் பெற்றனர். ஹோமரின் செய்யுட்களில் நாம் ஓரிடத்திலும் லிடியர்கள் என்ற பதத்தைக் காண்பதில்லை. அவைகளில் உபயோகித்திருக்கும் பதம் 'மீயோனி யர்கள்' என்பதேயாகும். இப் பெயர் பிரிஜியக் குடியேற்ற மக்களை அல்லது வெற்றி வீரர்களைக் குறிக்கின்றது என்பதற்குச் சந்தேகமே யில்லை. ஏழாவது நூற்றுண்டின் துவக்கத்தில் மீயோனியன் வமிசம் ஒன்று லிடியாவில் ஆட்சி புரிந்துவந்தது. மன்னன் ஒரு மீயோனியன் பெயரைக் கொண்டுள்ளான். அதுதான் 'நாயைத் திண்ற வைப்பவர்' அல்லது 'நாயின் உயர்ந்த கழுத்துப்பட்டை' என்று பொருள்படும் காண்டாலெஸ் (Candaules) என்னும் பெயராகும். நூற்றுக்கணக்கான ஆண்டுகளுக்கு ஆரிய வெற்றி வேந்தர்கள் - அதாவது, ஆரிய மொழியைப் பேசியவர்கள்-இவ் வரியணையில் அமர்ந்திருந்தனர். காண்டாலெஸ் குடும்பத்தின் துவக்கத்தைப் பிற்காலத்தில் கிரேக்க மரபு ஏராக்கிளிஸிலிருந்து வருவித்தது. ஆனுல் இந்த வமிசம் சீர்கேடு அடைந்தது. லிடியா வில் மெர்ம்னுடி (Mermnadae) குலத்தைச் சேர்ந்த கைஜஸ் காண் டாலெஸ்ஸைக் கொலை செய்து அவனுடைய முடியைக் கொண் டான். இனிமேல் மீயோனியன் என்று அழைக்கப்படா மல் லிடியன் என்று அழைக்கப்படும் இந் நாட்டில் இந்தப் புரட்சி ஒரு புதிய யுகத்தைக் கொண்டு சேர்த்தது. மீயோனியர்களின் காலத்தில் அவர்களுடைய அரசு தெற்கில் மீயாண்டர் பள்ளத்தாக்குமட்டும் நீண்டு இருந்திருக்கக்கூடும். கைஜஸ் தம் அதிகாரத்தை வடக்கே ப்ரோபான்டிஸ்ஸின் கரைகள் மட்டும் நீட்டி, அங்கே டாஸ்ஸிலியோன் (Dascylion) என்ற நகரத்தை ஏற்படுத்தி, ட்ரோடை(Troad)யும் வென்ருர். ஆனுல் இவர் ஈஜியனைத் தமது மேற்கு எல்லையாக்கி அங்குள்ள கிரேக்கர்களைத் தமது ஆதிக்கத்திற்குள் கொண்டுவரத் திட்ட மிட்டிருந்தார். இவர் சிமிர்னுவிற்கு எதிராக ஹெர்மஸ் பள்ளத் தாக்கையும், கோலோபோனுக்கு எதிராகக் கெய்ஸ்டர் பள்ளத்

தாக்கையும், மைலீட்டஸ்ஸிற்கும் மாக்னீஸியாவிற்கும் எதிராக மீயாண்டர்ப் பள்ளத்தாக்கையும் தாக்கினர். இந்த முயற்சிகளைப் பற்றிய மிகவும் மங்கலான குறிப்புகளே நமக்கு வந்து சேர்ந்துள்ளன. கோலோபோனும் ஒருவேளை மாக்னீஸியாவுங்கூட இவர் கைவசமாயிருக்கலாம். ஆனால் மற்ற நகரங்கள் இவரை விரட்டியடித்தன. எவ்விதம் ஒரு படைவீரன், ஒருவேளை இவர் கவிஞரின் தாத்தாவாயிருக்கலாம். ஹெர்மஸ் சமவெளியில் லிடியக் குதிரை வீரர்களின் மத்தியில் பெருஞ்சேதத்தை உண்டாக்கினர் என்று மிம்னெர்மஸ் (Mimnermus) என்னும் கவி கூறியுள்ளார்.

ஆனால் கிரேக்க அயலகத்தாருக்கு விரோதமான கைஜஸின் திட்டங்கள் அவர்மேல் விழுந்த பேரிடியால் திடீரென்று தடைப்படுத்தப்பெற்றன. உலகத்தின் அடுத்த பாகத்திலிருந்து வந்தது போல் தோன்றிய இந்தப் பேரிடி கிரேக்கர்களையும் லிடியர்களையும் பாதித்தது. கருங்கடலுக்கு வடக்குக் கரையிலுள்ள மீயோடிஸ் ஏரியைச் சுற்றியுள்ள பிரதேசத்தில், ஒடிஸியஸ்ஸின் வியப்பைக் கொடுக்கக்கூடிய பிரயாணங்களில் காணப்படும் சிம்மெரியர்கள் வசித்து வந்தனர். இவர்கள், கிழக்கிலிருந்து வந்த ஸ்கோலோடி (Scolotae) என்ற ஸ்கிதிய மக்களால் தங்களுடைய இருப்பிடங்களிலிருந்து விரட்டியடிக்கப்பட்டனர். ஆயினும், இவர்களுடைய பெயர் இவர்கள் வசித்த இடத்தில் அன்றும் இன்றும் பற்றிக்கொண்டிருக்கின்றது. தங்க வீடில்லாது கருங்கடலின் எதிர்க்கரைக்கு அலைந்து சென்றனர். ஆனால் இவர்கள் கிழக்குப் பாதையிலா அல்லது மேற்குப் பாதையிலா, காகஸஸ் வழியாகவா அல்லது டான்யூப் வழியாகவா அவ்விடம் சேர்ந்தார்கள் என்று திட்டமாக நம்மால் சொல்ல முடியவில்லை. ஒரு பக்கமாகப் பார்க்கும்போது முதலில் இவர்கள் ஆசியா மைனரின் கிழக்குப் பாகத்தில் காணப்பட்டதுபோல் தெரிகிறது. ஆனால் அடுத்தபடியாகக் கவனிக்கும்போது சில திரேஷியன் மக்களுடன் டிரீரியர்கள் (Trerians), ஈடோனியர்கள் (Edonians), தீனீயர்கள் (Thynians) முதலியோரிடம் இவர்கள் இணைப்புக் கொண்டிருந்தது தெரிகிறது. இவர்கள் கிழக்குக் கரையாக வந்து, மேற்கு ஆசியா மைனருக்குள் புகுந்தபின், தமக்கு உதவி செய்யத் திரேஸிலுள்ள தம் நேச நாடுகளை வரவழைத்திருக்கலாம். சினோப் (Sinope) பிலுள்ள மைலீஸியர்களைப் படையில் வென்றபின் இவர்கள் இந்த இடத்தைத் தம் முக்கியக் குடியேற்ற மாக்கிக்கொண்டனர். பெரிய அசீரியப் பேரரசை இவர்கள் துணிகரமாகத் தாக்க முற்பட்டனர். சிம்மெரியர்களின் டியூஸ்பா(Teuspa)வையும் அவனது படையையும் எப்படித் தாம் வெட்டி வீழ்த்தினர் என்பதை

அசீரிய மன்னர் அஸ்ஸர்ஹெடான் (Assarhaddon) தாமே கூறுகின்ருர். ஆனுல் இவர்கள் பிரிஜியா நாட்டை அதனுடைய கடைசி மன்னஞகிய மைடாஸ் (Midas) காலத்தில் வீழ்த்தினர்கள். ஏழாம் நூற்றுண்டின் மத்தியில் இவர்கள் லிடியாவையும் தாக்கினர்கள். இந்த அபாயத்தைத் தடுக்க அசீரியாவின் உதவியைக் கைஜஸ் நாடினர். நினிவேயில் போர் விருப்பமுள்ள அஸ்ஸர்ஹெடானுக்குப்பின் அமைதியை விரும்பும் இலக்கியப் பிரியரான அஸ்ஸுர்பானிபால் (Assurbanipal) பட்டமேறினர். இவருடைய நாகரிகச் சுகவாழ்வைக் (refined luxury) கிரேக்கர்கள் தாம் ஸார்டானபாலஸ்(Sardanapalus)ஸைப்பற்றிக் கொண்டுள்ள கற்பனையில் எள்ளியுள்ளார்கள். லிடியாவின் அதிபர் அசீரிய மன்னரின் மேலாண்மையை ஒப்புக்கொண்டார். இவர் சிம்மெரியர்களை வென்று, அவர்களின் தலைவர்களைச் சங்கிலிகளால் கட்டி நினிவேயிற்கு அனுப்பினர். ஆனுல் அதிக நாள் மற்றேர் அரசனுடைய அடிமையாக இவர் இருக்க விரும்பவில்லை. எனவே, இவர் அசீரியாவிடம் தாம் கொண்டிருந்த அரசபக்தியை விட்டு, எகிப்து நாடு அசீரியர்களிடமிருந்து சுதந்தரம் அடையும்படி உதவ அந் நாட்டிற்கு அயோனிய, கேரியக் கூலிப்படைகளை அனுப்பினர். இச் சமயத்தில் கைஜஸ் ஒருகால் தமது ஆற்றலின் உச்சியில் இருந்திருக்கலாம். இவருடைய செல்வம் புகழை யடைந்திருந்தது. பிரிஜியன் மைடாஸைப்போலவே இவரும் டெல்பியத் தெய்வங்களுக்கு அன்பளிப்புகளை அனுப்பிவைத்தார் - அவைகளில் ஆறு தங்கக் கிண்ணங்கள் முக்கியமானவை. இவருடைய வாழ்க்கையைக் கவனித்து வந்த கவிஞர் ஆர்க்கிலோகஸ் (Archilochus), தம் கதா பாத்திரங்களில் ஒருவரைத் 'தாம் தங்கக் கைஜஸ்ஸின் செல்வத்திற்காகக் கவலைப்படுவதில்லை' என்று கூறவைத்திருக்கின்ருர்.

இதை அடுத்தாற்போல் சிம்மெரியர்கள் தம் தாக்குதலைத் திரும்பவும் ஆரம்பித்தனர். அதிர்ஷ்டம் மாறியது. கைஜஸ் போரில் கொல்லப்பட்டார். அவருடைய தலைநகரம், சேம அரண் நீங்கலாகச் சிம்மெரியர்களால் பிடிக்கப்பட்டது. லிடியா சிம்மெரியர்களின் கரங்களில் விழுந்தது என்பதை ஆவண ஏட்டில் பதிவதில் அஸ்ஸுர்பானிபால் மிகவும் திருப்தி அடைந்தார். கொஞ்சகாலத்திற்கெல்லாம் சிம்மெரியர்கள் கிரேக்க நகரங்களின் மேல் பருந்துபோலப் பாய்ந்தார்கள். அவர்களுடைய குதிரைகளின் காலடிச் சப்தத்தைக் கேட்ட எபிஸஸ்ஸின் கவியான காலினஸ் (Callinus) தம் கூட்டாளிகளாகிய எபிஸஸ் குடிகளைப் போருக்குப் போகத் தூண்டினர். எபிஸஸ் அவர்களுடைய தாக்குதலைப் பயமின்றி எதிர்த்தது. ஆனுல், நகருக்கு வெளியே

யுள்ள ஆர்டிமிஸ்(Artemis)ஸின் கோவிலானது தீயால் எரிக்கப் பட்டது. சிம்மெரியர்களும் திரேஸிலுள்ள அவர்களுடைய நேசநாட்டுப் படைகளுடன் மீயாண்டர் நதியின் மேலுள்ள மாக்னீஸியாவை அழித்தனர். காட்டுமிராண்டிகள் தம்மைப் பற்றிய ஓர் ஆழ்ந்த எண்ணத்தை உண்டு பண்ணினார்கள். இவர்கள் தம் பகைவர்களின்மேல் வீசிய வாட்கள் பல. இவர் கள் நீண்ட அம்பறுத் தூணியை வைத்திருந்தனர். இவர்கள் தங்கள் தலையில் ஸ்கிதியர்கள் அணியும் ஒருவித வளைந்த குல்லாக் களை அணிந்திருந்தனர். இவர்கள் போருக்குப் போகும்போது பயங்கர நாய்கள் இவர்களுடைய குதிரைகளுடன் ஓடின. பிந்தி யத் தலைமுறையைச் சேர்ந்த கிரேக்கக் கலைஞர் இவர்களுடைய தோற்றத்தை மேலே கூறியுள்ளவாறு கிளாஸோமீனியிலுள்ள வர்ணம் தீட்டிய கல்லறையின்மேல் வரைந்துள்ளார். ஆனால் ஆபத்தானது நீங்கிவிட்டது. கைஜஸுக்குப்பின் ஆர்டிஸ் (Ardys) லிடியன் அரியணையில் ஏறினார். இவர் சிம்மெரியர்களை நாட்டி லிருந்து விரட்டியதுமல்லாமல், தம் ஆற்றலைக் கப்படோஷியா (Cappadocia)வில் ஹலிஸ் (Halys) நதிவரையில் பரப்பியுமிருக்க லாம் எனத் தெரிகிறது.

இதற்கிடையில் லிடியா புதியதொன்று புனைந்தது. இது வாணிபத்தில் ஒரு புரட்சியை உண்டுபண்ணியது. ஐரோப்பா வில் நாணயங்களை முதன்முதல் கண்டுபிடித்த பெருமை லிடியா விற்கே உரியது. எடை போட்ட பொன்னையும் வெள்ளியையும் பண்டமாற்றும் சாதனமாகப் பாபிலோனியர்களும், பினீஷியர் களும், எகிப்தியர்களும் உபயோகித்தனர். இந்த இரண்டு உலோகங்களுக்கும் இடையில் ஒரு நிரந்தரமான விகிதம் வைத் திருந்தனர். நிறுக்கப்பட்ட உலோகத் துண்டு அரசினால் முத் திரை இடப்பட்டபோது அது நாணயமாகின்றது. அரசின் முத் திரை கொண்டிருப்பதால், சொல்லியிருக்கும் கனத்தையும் தூய் மையையும் உள்ளதாக நாணயம் உத்தரவாதஞ் செய்யப்பட்ட தாகும். இந்த முன்னேற்றமானது முதலில் லிடியாவில் நடந் தேறியது. ஏழாம் நூற்றாண்டின் துவக்கத்தில், ஒருவேளை கைஜஸ் காலத்தில் லிடியாவில் முதல் முதலாகப் பணமானது நாணய மாக்கப்பட்டிருக்கலாம். இந்த லிடிய நாணயங்கள் லிடியாவின் வெள்ளைத் தங்கம் அல்லது எலெக்ட்ரானால் (Electrons) செய்யப் பட்டவை. பொன்னை அதிக விகிதமாக வைத்து இதனை வெள்ளி யுடன் கலந்தால் இதுவே வெள்ளைத் தங்கமாகும். ஸார்டிஸ் ஸின் வெள்ளைத் தங்கத்தின் ஒரு கம்பி(bar)யானது அதே எடையுடைய வெள்ளிக் கம்பியைக்காட்டிலும் பத்து மடங்கு அதிக விலை மதிப்புள்ளதாயும், அதே எடையுடைய தங்கக் கம்பி

யைக் காட்டிலும் நான்கில் மூன்று பாகம் விலை மதிப்புள்ளதாயும் மதிப்பிடப்பட்டிருந்தது.[10] லிடியா புதியதாகக் கண்டுபிடித்த முறையை மைலீட்டஸ்ஸும், சேமாஸும் சீக்கிரத்தில் ஏற்றுக்கொண்டன. இதன்பின் இந்த முறையானது ஆசியாவின் நகரங்களில் பரவியது. இதன்பின் ஈகைஞவும் யூபியாவிலுள்ள இரண்டு பெரிய நகரங்களும் நாணய முறையை ஏற்படுத்திக் கொண்டன. படிப்படியாக எல்லாக் கிரேக்க அரசுகளும் பசுக்களைக்கொண்டு ஏனைய பொருள்களின் விலையை மதிப்பிடும் வழக்கத்தை விட்டுவிட்டு, நாணய முறையைப் பின்பற்ற ஆரம்பித்தன. பல நாடுகள் தங்களுக்கென்று தங்க சாலைகளையும் ஏற்படுத்திக் கொண்டன. சிப்னேஸ் (Sipnos), தேஸாஸ் (Thasos) தீவுகளைத் தவிர மற்ற இடங்களில் தங்கம் கிடைக்காததனுல், கிரீஸ் நாட்டில் தங்கம் மிகவும் குறைவு. எனவே, கிரேக்கர்கள் வெள்ளியினுல் நாணயங்களை உண்டுபண்ணினுர்கள். கிரேக்கர்கள் வாணிபத் துறையில் அதிகமாக ஈடுபடும்போது நாணய முறை கண்டுபிடிக்கப்பட்டதால், இம்முறை வாணிபத்தை எளிதாக்குவதற்கும், மூலதனத்தைப் பெருக்குவதற்கும் அதிக உபயோகமுள்ளதாயிருந்தது. ஆனுலும் வரவு செலவுத் துறையில் பழைய முறை நீக்கப்பட்டுப் புதிய முறை கையாளப்படப் பல தலைமுறைக் காலமாயிற்று.




படம் 20



படம் 21

படம் 20: ஹாலிகார்ஞஸஸ்(Halicarnassus)ஸின் நாணயம் (ஆருவது நூற்றுண்டு) முன்புறம்: மான் (புராணம்) பின்புறம்: முத்திரை

படம் 21: கைஸிகஸ்(Cyzicus)ஸின் நாணயம், ஐந்தாம் நூற்றுண்டு (முன்புறம் வில்லும், குண்டாந்தடியும் ஏந்தியிருக்கும் முழங்கால் படியிட்டிருக்கும் ஏராக்கிளிஸ்; பெரிய மீன் (tunny fish)

கிரேக்கர்கள் தமது நிறுத்தல் அளவுகளைப் பாபிலோனியாவிலிருந்தும் பினீஷியாவிலிருந்தும் பெற்றுர்கள். ஆனுல் ஈகைஞ

[10] லிடியர்கள் இருவித துலைகளைக் கொண்டிருந்தனர்; ஒன்றை இவர்கள் உள்நாட்டு வியாபாரத்திற்கு உபயோகித்தனர். இந்தப் பொது அளவு பாபிலோனியாவிலிருந்து எடுத்தாளப்பட்டது. மற்றென்றை வெளிநாட்டு வியாபாரத்திற்கு உபயோகித்தனர். இந்தப் பொது அளவு கிரேக்கர்கள் மூலமாகப் பினீஷியாவிலிருந்து எடுத்தாளப்பட்டது.

வும், யூபியாவின் நகரங்களும் தம் வெள்ளி நாணயங்களின் திட்ட அளவை (standard) உறுதிபண்ணியபோது (fixed) கிரேக்கர்கள் இந்த இரண்டு நாட்டின் வெள்ளித் திட்ட அளவைத் தம தாக்கிக் கொள்ளவில்லை. ஈகைனுவின் கனமான ஸ்டேடர் (வெள்ளித்திட்ட நாணயம் இவ்விதம் அழைக்கப்பட்டது.) 192 குன்றி மணி எடை உடையதாயிருந்தது. இது ஒரு பிளாரினை விட மதிப்பில் உயர்ந்திருந்தது. இந்த நாணய முறையானது பெலோப்போனீஸஸ் முழுவதிலும், வட கிரீஸிலும் இருந்து வந்தது. யூபியாவின் இலேசான ஸ்டேடர் 130 குன்றிமணி எடை உடையதாயிருந்தது. இதுவே பாபிலோனியத் தங்கத் திட்டமாகும். முதலில் யூபியா, சேமாஸ் மற்றும் சில இடங்களிலிருந்த இந்தத் திட்டம் ஏழாவது நூற்றுண்டில் சில திருத்தத்துடன் கொரிந்து நகரிலும் பிறகு ஆதென்ஸிலும் ஏற்றுக்கொள்ளப் பட்டது.[11]

ஆதியிலிருந்து கிரேக்கர்களுடைய நாணயங்கள் சமயத்தோடு இணைப்புக் கொண்டுள்ளமை, கிரேக்கர்களுடைய தனிப்பட்ட இயல்பு ஆகும். அவர்களுடைய கோவில்களிலுள்ள பூசாரிகள் பண முறையைப் புதிதாகத் தொடங்கி வைத்ததில் முக்கிய பாகம் எடுத்திருக்கக்கூடும் என்று கருதப்படுகின்றது. தங்களுடைய தெய்வங்களின் கோவில்களில் மக்கள் தம் கருவூலங்களைப் பத்திரப்படுத்தச் சேமித்து வைப்பது வழக்கம். இதுவுமன்றித் தெய்வங்களே மிகவும் விலையுயர்ந்த அர்ப்பணங்களைக் கொண்டிருந்தன. எனவே, பூசாரிகள் விலையுயர்ந்த உலோகங்களை எடைபோடும் நூலியல் முறையை இயல்பாகவே கற்றுக் கொள்ள வேண்டியதாயிற்று. கிரேக்க நாடுகள் வெளியிட்ட ஒவ்வொரு நாணயமும் தெய்வத்தைப்பற்றிய ஏதாவது குறிப்பு ஒன்றைத் தன்மேல் கொண்டிருந்தது. முன் இந்தக் குறிப்பு ஒரு குறியின் உருவத்தைக் கொண்டிருந்தது; பிற்காலத்தில் தெய்வத்தின் தலையானது அடிக்கடி குறிக்கப்பட்டிருந்தது. ஸார்டிஸ் நகரத்தின் விடிய நாணயங்களும், மைலீட்டஸ்ஸின் நாணயங்களும், இதர அயோனிய நாணயங்களும் சிங்கத்தின் உருவத்தைக் கொண்டிருந்தன. எரிதிரியாவின் நாணயங்கள் ஒரு பசுவையும் பால் குடிக்கும் கன்றுக் குட்டியையும் காட்டுகின்றன. ஈகைனுவின் நாணயங்களில் காணப்படுவது ஆமையாகும். கைஸிகஸ்ஸின் நாணயங்களில் நாம் பார்ப்பது டன்னி என்ற ஒருவகைப் பெரிய மீனுகும். இந்தக் குறிகள் யாவும் ஆப்ரோடைடி (Aphrodite) அல்லது ஹீரா (Hera) அல்லது

[11]நான்காம் அத்தியாயத்தைப் பார்க்கவும்.

ஆர்டிமிஸ் என்ற பல பெயர்கள்கொண்டு, கிரேக்கர்களால் அஸ்தார்த்தே(Astarte)யுடன் ஒன்றுக்கியுள்ள தேவதையின் குறிகளாகும்.

## 6. எகிப்து திறக்கப்படுதல்

இவ்வண்ணம் மைலீட்டஸ்ஸின் வியாபாரிகளும் மக்களும் செல்வப் பெருக்கடைந்தனர். லிடியர்கள் தம் சரக்குகளை ஆசியா மைனரின் உட்பாகங்ளுக்கும் தூரக் கிழக்குப் பகுதிகளுக்கும் கொண்டு செல்லும்போது இவர்கள் லிடியாவிற்கும் மத்திய தரைக் கடல் நாடுகளுக்கும் இடையே நடுவர்களாகத் (Intermediaries) தோன்றினர். இவர்களுடைய சரக்குகளை ஏற்றிய கப்பல்கள் தூரமேற்கிற்கும் அதே சமயங்களில் கருங்கடல் கரைகளுக்கும் சென்றன. நாணயச் செலாவணியின் தோற்றம் வாணிப உலகில் ஒரு புதிய வாய்ப்பைப் புலப்படுத்திய அதே காலேயில், மிக்க செல்வத்தை அடையக்கூடிய ஒரு புது விளை நிலம் கிரேக்கர்களுக்குத் திறக்கப்பட்டது. கருத்துடன் காக்கப்பட்டு வந்த எகிப்தின் வாயில்கள் கிரேக்கர்களுடைய வாணிபத்திற்காகத் திறக்கப்பட்டன.

அசீரிய மன்னனுகிய அஸ்ஸர்ஹடான் (Assarhaddan) எகிப்தைக் கைப்பற்றியது அவனுடைய தீரச்செயல்களில் மிகப் பெரியதாகும். இந்நாடு எண்ணிக்கையற்ற சிறு முடிஅரசுகளாகப் பிரிக்கப்பட்டு, இம் மன்னர்கள் அசீரியாவின் சிற்றரசர்களாக ஆண்டு வந்தனர். ஆனுல் இந்த வெளிநாட்டு ஆக்கிரமிப்பானது கால்நூற்றுண்டுக்கு மேல் நீடிக்கவில்லே. அஸ்ஸுர்பானிபால் (Assurbanibal) தனது அரசின் இறுதி ஆண்டில் சுசியானுவிலுள்ள (Susiana) ஈலமைட்டர்களின் (Elamites) கிளர்ச்சியை அடக்கிக்கொண்டிருக்கும்போது, கீழ் எகிப்தில் (Lower Egypt) அரசு புரிந்த செயஸ்(Sais) நகரைச்சேர்ந்த சாமெட்டிச்சஸ் (Psammetichus - இவர் ஒருவேளை லிபிய இனத்தைச் சேர்ந்தவராக இருக்கலாம்) மன்னர் இவருக்கு விரோதமாகக் கலகம் செய்தார். சாமெட்டிச்சஸ்ஸுக்கு உதவிபுரிய லிடியாவின் தலைவர் கவசம் அணிந்த அயோனியா, கேரியா முதலிய இடங்களைச் சேர்ந்த போர் வீரர்களை அனுப்பியதை நாம் முன்பே பார்த்துள்ளோம். 'கடலிலிருந்து வந்த இந்த வெண்கல மனிதர்'களைக் கொண்டு இவர் மற்ற அரசர்களை வென்று எகிப்து முழுவதையும் தமது வசத்துக்குள்ளாக்கினுர். இந்த லிபியன் வமிசம் செய்ஸ்ஸைத் தலைநகராக்கிக் கொண்டது. இவர்களுடைய அதிகாரம் கிரேக்கர்கள், கேரியர்கள், சிரியர்கள், பினீஷியர்கள் முதலிய வெளிநாட்டுக் கூலிப்படையாட்களால் ஆதரிக்கப்பட்

டது. சாமெட்டிச்சஸ் டாப்னே (Daphnae) என்ற கோட்டையைக் கட்டினார் — எகிப்தியப் பெயராகிய டிவ்வென்னேயை (Defenneh) டாப்னே என்று கிரேக்க மொழி கிரேக்க உருவத்தில் திறமையாக மாற்றியமைத்தது — அதைக் கிரேக்கப் போர் வீரர்வசம் நம்பகமாக ஒப்படைத்திருந்தார். டாப்னேயின் அழிந்து போன கட்டடம் முதலியவற்றை வெட்டி எடுக்கும் போது இந்த வெளி நாட்டுப் போர்ப் படையின் அழிவுச் சின்னங்கள் காணப்பட்டன. பாரோக்களின் குறுகிய கொள்கை முறையிலிருந்து சாமெட்டிச்சஸ்ஸும் அவருடைய பின் மரபினரும் முழுவதுமாக விலகி, மூன்று நூற்றாண்டுகளுக்குப்பின் நாட்டை ஆட்சி புரிந்த கிரேக்க வமிசத்தைச் சேர்ந்த டாலமிக்களுக்குச் (Ptolemies) சில வகைகளில் முன்னோடி(forerunners)களாகக் காணப்பட்டனர். அவர்கள் உலக வாணிபத்திற்கு எகிப்தைத் திறந்து, தமது நாட்டிலே கிரேக்கர்களை நிலையாகக் குடியிருக்கச் செய்தனர். சாமெட்டிச்சஸ்ஸின் மகனாகிய நேக்கோ (Necho) செங்கடலையும் நைல் நதியையும் ஒரு கால்வாயின்மூலம் இணைத்தான். அவன் அன்று தொடங்கிய வேலையை நம்முடைய காலத்தவர் நிறைவேற்ற வேண்டுமென்று இருந்தது போலும். இவனுடைய கப்பற் படைகள் சைபிரியாட் (Cypriot), அரேபியன் கடல்களிலும் உலாவி வந்தன. இவன் அனுப்பிய பினீஷியப் புது நிலத் தோட்டக் குழு ஒன்று ஆப்பிரிக்கக் கண்டத்தைக் கப்பலில் சுற்றி வந்தது. இந்த வீரச் செயல் இரண்டாயிரம் ஆண்டுகளுக்குப் பின்னரும் ஒரு பேய்க் கனவு என்று கருதப்பட்டது.

செயஸ் நகரத்திற்குப் பக்கத்தில் நைல் நதியின் மேற்கு அல்லது கனோபிக்(Canobic) வாய்க்காலின்மேல் மைலீஸியர்கள் ஒரு பண்டகசாலை(factory)யை நிறுவினார்கள். இதைச்சுற்றி ஒரு கிரேக்க நகரம் தோன்றிற்று. இந் நகரம் 'கடல் இராணி' என்னும் பொருள் கொண்ட நாக்கிராட்டிஸ் (Naucratis) என்னும் பெயரால் அழைக்கப்பட்டது. இந்தக் குடியேற்றம் எல்லாக் கிரேக்க வியாபாரிகளுக்கும் ஒரு பாதுகாப்பான இடமாயிற்று (haven). ஏனென்றால், முதலில் இவர்கள் கட்டுப்பாடு ஏதுமின்றி இங்கும் அங்கும் போக வர இருந்தாற்போல் தோன்றினாலும், பிற்காலத்தில் இவர்களின்மேல் பல கட்டுப்பாடுகள் வைக்கப்பெற்று, இவர்கள் எகிப்து நாட்டினுள் செல்ல வேண்டுமானால் கனோபிக் வாய் வழியாகமட்டும் அனுமதிக்கப்பட்டனர். மைலீஸியர்களும், சாமியர்களும் (Samians), இஜினீட்டர்களும் (Aeginetans) நாக்கிராட்டிஸ்ஸில் தனித்தனியான இருப்பிடங்களையும் கோவிலில் புனித இடங்களையும் பெற்றிருந்தனர். மற்ற எல்லாக் கிரேக்கக் குடியேற்றக்காரர்களும், சுற்றியும் செங்கற் சுவர்களால் சூழப்

பட்டு, 50,000 மக்கள் வசிக்கக்கூடிய ஹெலனியான் (Hellenion) என்னும் ஒரு பொது அடைப்பில் வாழ்ந்தனர். இதற்குள்ளே அவர்களுடைய விற்பனைக் களங்களும், கோவில்களும் அடங்கியுள்ளன. நாக்கிராட்டிஸ்ஸில், இஜினீட்டர்களைத் தவிர மற்றெல்லாக் குடியேற்றக்காரர்களும் ஆசியக்கடற்கரையைச்சேர்ந்த அயோனியர், டோரியர் அல்லது ஈயோலியர் வகுப்பைச் சேர்ந்த கிரேக்கர்கள் ஆவர்.

நாம் பார்க்கிறபடி வியாபாரிகளுக்கு மட்டுமின்றித் துணிவு மிகுந்த போர் வீரர்களுக்கும் எகிப்து இடவசதி கொடுத்து அயோனியாவிலிலுள்ள மக்கள் பெருக்கை விடுவிக்க உதவியது. நேக்கோவிற்குப் பின் பட்டத்துக்கு வந்த இரண்டாவது சாமெட்டிச்சஸ் மன்னருடன் எத்தியோப்பியா(Ethiopia)வின்மேல் படையெடுத்துச் சென்ற கிரேக்கக் கூலிப் படையினரது அழிவுச்சின்னம் ஒன்று, மேல் எகிப்தில் அபுசிம்பெல் (Abusimbel) என்னுமிடத்தில் இருக்கின்றது. இவர்களில் சிலர் கோவிலைச் சேர்ந்த மிகப் பெரிய சிலைகளில் தமது பெயர்களைக் கீறியிருக்கின்றனர். அவ்வளவு தொன்மையான காலத்திலுள்ள இந்தச் சின்னம் சிறு திறங்களை (triviality) எடுத்துக் காட்டுவதால் ஒரு வேளை தன் கவனத்தைக் கவருகின்ற நிலைமையில் உள்ளது போலும் !

## 7. சிரேனி (Cyrene)

எகிப்தில் கிரேக்க வாணிபம் தொடங்கிய சில காலத்திற்கெல்லாம், எகிப்திற்கு மேற்கே ஒரு புதிய கிரேக்க நகரம் தோன்றிற்று. தேரா (Thera) தீவில், மினியி (Minyae) என்ற மங்கலான பெயரைக் கொண்ட பழைய மக்களுக்கும், புதிதாகக் குடியேறிய டோரியர்களுக்கும் இடையே சமூகத்தைச் சேர்ந்த ஒரு கலகம் ஏற்படவே, மினியி மக்களும், சில டோரியர்களும் குடிபெயர்ச்சியில் ஈடுபட்டனர். இவ்வாறு நாடுகடத்தப்பட்டவர்கள் தமது கூட்டத்தைத் துணிகர வீரம் பொருந்திய கிரீட்டர்கள் கூட்டம் ஒன்றுடன் சேர்த்து, பார்கா (Barca) என்னும் இடத்துக் கடற்கரையைக் கப்பல்கள்மூலம் அடைந்தனர். இவர்கள் கடற்கரையை அடுத்த பிளட்டீய (Platea) என்னும் சிறு தீவில் தமது முதல் குடியேற்றத்தை அமைத்தனர். பின் தமது இரண்டாவது குடியேற்றத்தைத் தீவிற்கு எதிரேயுள்ள பெருநிலத்தில் நிறுவினர். இந்த முயற்சியும் வீணாகவே, இவர்கள் தமது நிலைத்த குடியேற்றத்தைக் கடலிலிருந்து எட்டுமைல் தூரத்தில் சதாகாலமும் தண்ணீர் கிடைக்கக்கூடிய ஓர் ஊற்றின் பக்கத்தில், அந்தச் சமவெளியை அடக்கி ஆளக்கூடிய இரண்டு வெண்மையான குன்றுகளின்மேல் நிறுவினார்கள். சிரேனி என்றழைக்

கப்பட்ட இந் நகரம் ஆப்பிரிக்காவின் கடற்கரையின் உன்னத பதவியையும், செல்வத்தையும் அடைந்த ஒரே கிரேக்கக் குடியேற்ற நாடாயிற்று, தீவின் மக்களை அவர்களுடைய புதிய இல்லத்திற்கு நடத்திக்கொண்டு வந்த மனிதன் அவர்களின் மன்னனாயினன். இவனுடைய பெயர் அரிஸ்டோடெலிஸ் (Aristoteles) என்று சொல்லுகின்றனர். ஆனால் இவன் லிபிய மொழியில் 'அரசன்' என்னும் பொருள் கொண்ட பேட்டஸ் (Battus) என்ற விபரீதமான பெயரைச் சூட்டிக்கொண்டான். இந்தப் பெயர் கிரேக்க மொழியில் 'கொன்னிப் பேசுதல்' என்னும் வார்த்தையை ஒத்துக் காணப்படுவதால், முதலாம், பேட்டஸ் திக்கிப் பேசினன் என்ற கட்டுக்கதையைத் தோன்றச் செய்தது. இவனுடைய மகன், ஆர்க்கிஸைலாஸ் (Arcesilas) என்பான். சிரேனியின் அரசர் வரிசையில் பேட்டஸ்ஸூம் ஆர்க்கிஸைலாஸ்ஸூம் மாறி மாறிப் பட்டத்திற்கு வருவதைக் காண்கின்றோம். இரண்டாம் பேட்டஸ் காலத்தில் புதிய குடியேற்றக்காரர் வருகையினால் இந்தப் புதிய நகரம் வலிமை பெற்றது. இந்தப் புதிய குடியேற்றக்காரர்கள் பேட்டஸ்ஸினால் முக்கியமாகப் பெலோப்போனீஸஸ், கிரீட் முதலிய இடங்களிலிருந்து வரும்படி அழைக்கப்பட்டனர். இப்படி உள்நோக்கி நுழைதல் (influx) இவ்விடத்தின் குணவியல்பையே மாற்றி விட்டது. ஏனென்றால், இங்குள்ள பழங் குடிகளாகிய மினியின் மக்கள் இதன்பின் சிறுபான்மையராயினர். லிபியக் குடிகளிடமிருந்து கிரேக்கர்கள் எடுத்துக்கொண்ட நிலங்கள் குளிர் காலத்தில் பெய்யும் மழைகளினால் செழிப்படையலாயின. 'கருமேகங்கள் வட்டமிடுகின்ற சமவெளிகள்' என்று இப் பிரதேசத்தைப் பிண்டார் (Pindar) வர்ணிக்கின்றார். இங்கு மேய்ச்சலுக்கான நல்ல இடங்கள் இருந்தமையால் சிரேனி மக்கள் குதிரைகளை வளர்ப்பதிலும், அவைகளின்மேல் ஏறிச் சவாரி செய்வதிலும், தேரோட்டுவதிலும் மேம்பாடடைந்திருந்தனர். இவர்கள் கிரேக்க வியாபாரிகளுக்கும் லிபியக் குடிகளுக்கும் இடையே இயல்பான நடுவராக இருந்து வந்தனர். ஆனால் சிரேனி அரசர்களின் செல்வப் பெருக்கிற்கு அடிகோலாயிருந்தது, மருத்துவ குணங்களுடைய சிறந்த மூலிகையாகிய சில்பியன் (silphion) என்னும் செடியை ஏற்றுமதி செய்யும் தொழிலேயாகும். அந்தக் காலங்களில் இச் செடி பார்க்கா நிலப்பகுதிகளில் மிகவும் செழிப்பாக வளர்ந்தது. ஆனால் இப்போது இது அடியோடில்லாமல் போயிற்று. சில்பியன் விற்பனை மன்னனின் தனி உரிமையாகும். ஓர் அழகிய சிரேனேயன் கோப்பையில் இரண்டாவது ஆர்க்கிஸைலாஸ் மன்னன் இந்த மூலிகை நிறுக்கப்படுவதையும் பொதிந்து வைக்கப்படுவதையும் பார்த்துக்கொண்டிருக்கும் காட்சியைக்

காண்கின்றோம். இம் மன்னனின் ஆட்சிக்காலத்திலேதான் மேற்கில் பார்க்கா (Barca) நகரம் நிறுவப்பட்டது. இவன் தன் சகோதரர்களுடன் சண்டை போடவே, அவர்கள் சிரேனி நகரத்தை விட்டுச்சென்று, தமக்கென ஒரு நகரத்தை அமைத்துக் கொண்டனர்.



படம் 22 : ஆர்க்கிஸைலாஸின் மலர்க்குவளை

சிரேனி கிரேக்க உலகத்தில் ஒருவிதமாகத் தனியாக நின்றாலும் அவ் வுலகிலே அது தலை நிமிர்ந்து நின்றது. சிரேனியைச் சேர்ந்த ஒரு கவி தோன்றி 'ஓடிஸி'யைத் தொடர்ந்து எழுதி இந்தப் பகுதியில் ஓடிஸியஸின் கடைசியான துணிகரச் செயல்களை விவரித்துள்ளார். இவர்களுடைய செய்யுட்கள் ஹோமர் துவக்கி வைத்த இதிகாச வட்டத்தை (Epic Cycle) முடித்து வைப்பதாகக் கிரேக்கர்களால் எண்ணப்பட்டு ஏற்றுக்கொள்ளப் பட்டன. உள்ளூரின் பெருமையையும் உள்ளூரின் வாழ்க்கைச் சித்திரங்களையும் தம்மிடத்தேகொண்டு இவருடைய செய்யுட்கள் விளங்குகின்றன. ஓடிஸியஸ்ஸிற்கு ஆர்க்கிஸைலாஸ் என்ற மகன் ஒருவன் இருந்தான் என்று கூறி, சிரேனியின் அரச வரிசையை

இவர் இந்தப் பெரிய நாடோடியின் வரிசையில் சேர்த்துள்ளார். தொலைதூரத்திலுள்ள கருங்கடலையடுத்துள்ள நகரங்கள் ஸ்கிதியா (Scythia)வின் செல்வாக்கினால் பாதிக்கப்பட்டனபோல் சிரேனியின் நாகரிகமும் லிபியாவின் செல்வாக்கினால் பாதிக்கப் பட்டுள்ளது என்பதை இன்சுவை எடுத்துக்காட்டுகளால் விவரித் துள்ளார்.

## 8. கிரீஸில் பொதுமக்களிடையே அமைதியின்மை

வாணிபத்திலும், கைத்தொழிலிலும் கிரேக்கர்கள் முன்னேறியது அவர்களுடைய அரசியல், சமூகச் சார்பான வளர்ச்சியில் பல முக்கியப் பயன்களை விளைவித்தது. கைத்தொழில்களுக்குத் தொழிலாளர் மிகவும் தேவையாயிருந்தனர். ஆனால் கட்டுப் பாடில்லாத தொழிலாளர்கள் போதிய எண்ணிக்கைகளில் கிடைக்கவில்லை. எனவே, அடிமைகள் இன்றியமையாதவர்களானார்கள். ஆசியா மைனர், திரேஸ், கருங்கடலின் கரையோரங்கள் முதலிய பகுதிகளிலிருந்து அவர்கள் மிகுந்த எண்ணிக்கையில் இறக்குமதி செய்யப்பட்டனர். அடிமை வியாபாரம் ஓர் இலாபகரமான கடு முயற்சியாயிற்று. ஷியாஸ்(Chios)ஸிலுள்ள மக்கள் இதையே ஒரு முக்கியத் தொழிலாக அமைத்துக்கொண்டனர். ஹோமரின் செய்யுட்களில் நாம் காணும் அடிமைகள் பொதுவாக யுத்தத்தில் சிறைப்பட்டவர்கள்; வீடுகளில் பல தொழில்கள் செய்த இந்த அடிமைகள் தீங்கில்லா ஒரு நிறுவனத்தைச் (innocent institution) சேர்ந்தவராவர்.

மேற்படி நிறுவனம் கேடளாவிய விளைவுகள் எதையும் ஈன்றிருக்க முடியாது. ஆனால் ஏழாம் நூற்றாண்டில் தோன்றிய அடிமைமுறை கிரீஸிலுள்ள அரசுகளின் நலிவிற்கும் சிதைவிற்கும் அழிவார்ந்த காரணமாகத் தோன்றியது.

வாணிபத்தின் அதிகப் பெருக்கினால் உயர்குடி யரசுகளிலுள்ள சலுகைபெற்ற வகுப்பினர் முதலில் பயனடைந்தனர். ஏனென்றால், பிரபுக்கள் தாமே முக்கிய வாணிபச் சூதாட்டக் காரராக விளங்கினர். ஆனால் வாணிபத்தின்மூலம் அவர்கள் சேகரித்த செல்வம் அவர்களுடைய அரசியல் நிலைமையின் அடிப் படையை அரித்தது. இதற்குக் காரணம் யாதெனின், முதலாவதாக இவர்களுடைய செல்வாக்கு, இவர்களின் கையிலிருந்த நிலங்களைச் சார்ந்திருந்தது. அப்போது கைத்தொழில்கள் பயிர்த்தொழிலுடன் போட்டியிட முற்படவே, நிலத்தின் முக்கியத்துவம் கட்டாயமாகச் சீணித்தது. இரண்டாவதாகச்

செல்வம் அரசியலில் ஒரு புதிய தரத்தைச் செலுத்தியது. பிறப்பின்மேல் சாய்ந்திருந்த உயர்குடி யரசுகள் யாவும் தம் மைச் செல்வத்தின்மேல் சாய்ந்திருக்கும் உயர்குடி யரசுகளாக மாற்றி அமைத்துக்கொண்டன. 'பணம் மனிதனை உண்டாக்கு கின்றது' என்ற முதுமொழி நடைமுறையில் வந்தது. பிறப்பைச் சார்ந்த பிரபுவின் இனங்களாவது முடியாத காரியம். ஆனால் செல்வத்தைச் சார்ந்த பிரபுவின் இனங்களாவது கூடிய காரியம். எனவே, மக்கள் ஆட்சிக்குச் செல்லும் திசையில் இது எப்போதும் முதல் அடியாகும்.

இதற்கு நேரிடையாக ஏழைக் குடிமக்கள் (Poorer freemen) முதலில் துன்பப்பட்டனர். ஆதென்ஸ் நகரத் தனி வரலாற்றை நாம் பார்க்கும்போது இம் மக்கள் பண்டைய கொடுத்தல் வாங்கல் முறைகளை விட்டு நாணயச் செலாவணியை அமைத்த பொழுது அதிகமாகப் பாதிக்கப்பட்டனர் என்று அறிவோம். ஆனால் இவர்களுடைய இக்கட்டுகளும் அமைதியின்மையும் இவர்களை அரசியலில் முழுச் சமநிலையை அடையத் தூண்டின. பல இடங்களில் பெரிய வெற்றிகளையும் அடைந்தனர். கிரீஸின் பல பாகங்களில் ஏழாவது நூற்றாண்டின் இரண்டாவது பகுதியில் வகுப்புவாதங்கள் காணப்பட்டன. அறிவுக் கூர்மையும் மேம் பாடுமுள்ள பிரபுக்கள் அரசியல் உரிமைகளைத் தம் பக்கத்திலுள்ள குடிமக்களுக்கும் வழங்க வேண்டிய அவசியத்தைத் தாமாகவே அறிந்துகொண்டனர். கைத் தொழில்களின் வளர்ச்சியிலும் பயிர்த்தொழிலின் முக்கியத்துவம் சீரழிக்கப்பட்டதாலும், பட்டணங்களில் மையப்படுத்தும் நிலை ஏற்பட்டது; இந் நிலை ஒரு புதிய பட்டணவாசி வகையை உண்டு பண்ணியது. இஃது உண்மையில் மக்கள்ஆட்சி இயக்கத்திற்கு உதவியாயிருந்தது.

கலவரமான இந்தக் காலத்தில் பாராஸ்(Paraos)ைசச் சேர்ந்த ஆர்க்கிலோகஸ் (Archilochus) என்னும் திறமைமிக்க புலவர் ஒருவர் இருந்தார். தெளிவில்லாத பண்டைக் காலம் என் னும் மூடுபனி சூழ்ந்த காலையிலும் நாம் இவருடைய கைகளைக் கோக்கக் கூடிய 'ஊனும் உதிரமும்' கொண்ட முதல் கிரேக்கர் என்று ஆர்க்கிலோகஸ்ஸைப்பற்றி உண்மையான முறையில் கூறப்பட்டுள்ளது. ஒரு பிரபுவுக்கு அடிமைப் பெண்மூலம் பிறந்த இவர், தமது நல்ல பாக்கியத்தைத் தேடி இத்தாலியிலுள்ள சிரிஸ் (Siris) என்னும் இடத்தைக் குடியேற்றமாக அமைக்கச் சென்ற துணிவுள்ள மக்களுடன் சென்றார். ஆனால் கடல் செலவு அநுபவத்தை அடைந்த இவர், 'பாசிடோனின் கசப்பு நன் கொடைகளையும்; மாலுமிகளின் 'இனிய இல்ல'த்தைக் குறித்துப்

பாடும் திறனையும் கற்று, வீடு திரும்பினார். இதற்குப் பின் இவர் தேசாஸ்(Thasos)ஸில் பாரியர்கள் (Parian) மேற்கொண்ட குடியேற்றத்தில் பங்கெடுத்து அந்தத் தீவில் ஏற்பட்ட கட்சி வாதங்களிலும் அகப்பட்டுக்கொண்டார். கி. மு. 648ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 6ஆம் தேதி நடுப்பகல் வேளையில் நடந்த சூரியகிரகணத்தை இவர் தேசாஸில் பார்த்து, அதனை வர்ணித்தார் என்று நம்பப்பட்டது. ஆனால் இப்போது இவர் இந்தச் சூரிய கிரகணத்தைத்தான் வர்ணிக்கின்றார் என்பது சந்தேகத்திற்கு இடமாயுள்ளது. கிரேக்கர்களுடைய கேடுகள் யாவும் இங்கே இருக்கின்றன என்று உத்தரவாதமாகக் கூறுவதுமட்டுமல்லாமல், 'தேசாஸ், சிரிஸ் நதியின் சுற்றுமுள்ள நிலத்தைப் போல், எழில் மிகுந்த நாடுமில்லை. விரும்பத்தக்க நாடுமில்லை' என்று கூறுகின்றார். இவர் பலர் அறியும்படியாக, தாம் 'போர்த் தலைவனின் ஊழியக்காரன்' என்றும், கலைத்தேவதையின் மிகச் சுவையான நன்கொடையை ரசிக்கக்கூடிய திறமை படைத்தவன் என்றும் கூறுகிறார். ஆனால் தேசியர்கள் (Thasians) திரேஸியர்களுடன் அடுத்த கரையில் சண்டையிட்டுக்கொண்டிருக்கும்போது இவர் உயிரைக் காப்பாற்றிக் கொள்வதற்காகத் தம் கேடயத்தையும் கீழே போட்டுவிட்டு ஓடினார். அப்போது இவர் சொன்னதாவது: ''பரவாயில்லை, நான் இதைவிட ஒரு மேலான கேடயத்தை எனக்கு வாங்கிக்கொள்ள முடியும்'' என்பதே. பாவம், பிறப்பிலே களங்கத்தோடு தோன்றி உலகத்திலே அங்குமிங்கும் அடிபட்டு, இன்னல்களினால் தம் உயிரே தமக்குக் கசப்பாக இருந்தபோதிலும் ஆர்க்கிலோகஸ் தம் உணர்ச்சிகளை தம் பாக்களில் வெளியிட்டுள்ளார். தமக்குத் தன் மகளாகிய நியோபூலே (Neobule)வைக் கொடுக்க மறுத்த பாரியாவைச் சேர்ந்த லைக்காம்பீஸ் (Lycambes) போன்ற பகைவர்களின்மேல் தம் மனவெழுச்சி மிகுந்த வெறுப்பைக் கூற இவர் இப் பாக்களை உபயோகித்தார். நற்பாக்கியம் மட்டும் இவருக்கு ஆதரவாயிருந்தால் இவர் பிரபுக்களிடையே பிரபுவாகத் தோன்றியிருப்பார். ஆனால் துர்ப்பாக்கியம் இவரை உயர்குடி யரசை எதிர்க்கும் இயக்கத்தில் சேரவைத்தது. இவருடைய பாக்கள் இதிகாச முறைக்கும், ஹெஸியட்டின் முறைக்கும் கூட எதிரிடையாக வுள்ளன. இவர் தம் செய்யுட்களின்மூலம் மக்களிடையே நேரிடையாகப் பேசினார்; செய்யுட்களில் பேச்சு வழக்கத்திலுள்ள வார்த்தைகளை உபயோகித்தார். அதுவுமின்றி அய்யாம்பிக் (iambic) ட்ரோகெயிக் (trochaic) என்ற செய்யுளுக்குரிய அளவுகளை இலக்கிய வேலைப்பாடுகளில் மிகவும் திறமையுடன் உபயோகித்தார். இவருடைய பாக்களும், ஹோமர் ஹெஸியட் முதலியோரின் பாக்களுடன் பாணர்களால் நினைவி

லிருந்து உரத்துச் சொல்லப்பட்டன வென்றால், இவருடைய செல்வாக்கை நாம் மதிப்பிட்டுக்கொள்ளலாம்.

ஆர்க்கிலோகஸ்ஸின் பாக்களில் உருநிழல் போல் காணப்படும் கிரீஸின் கேடுகள் சமநிலை, தன்னுரிமை முதலியன வளர்வதற்கு ஏதுவாயிருந்தன. ஆனால் இந்த வாதங்களில் வெற்றி பெரும்பாலும் படைத்தேர்ச்சியுடைவர்களையே சார்ந்திருக்கும். எனவே இக் காலத்தில் போர் முறையில் ஏற்பட்ட ஒரு புரட்சி மிகவும் முக்கியமாய் விளங்கியது. இது நம்மை ஸ்பார்ட்டன் வரலாற்றிற்கு எடுத்துச் செல்கின்றது.

# 3. ஸ்பார்ட்டாவின் வளர்ச்சி—உயர்குடி யரசுகளின் வீழ்ச்சி

## 1. ஸ்பார்ட்டாவும் அதன் அரசியலமைப்பும்

வடக்கேயிருந்து வந்து, யூரோட்டாஸ் நதியின் பள்ளத்தாக்கைத் தமதாக்கிக்கொண்ட டோரியன் குடியேறிகள், இந் நாடு முழுவதிலும் தமக்கெனக் கிராம சமுதாயங்களை அமைத்து லாசிடிமோனியர்கள் (Lacedaemonians) என்னும் பெயரால் வழங்கப்பட்டனர். நாட்கள் செல்லச் செல்ல இவைகளின் மத்தியில் ஒரு நகரஅரசு தோன்றி, ஏனைய கிராம சமூகங்களைத் தனக்குக் கீழாக்கியது. ஐந்து கிராமங்களின்[1] இணைப்பால் ஒரு பட்டினம் தோன்றியது. இந்த ஐந்து கிராமங்கள் தாம் ஒன்று சேர்ந்தபின்னுங்கூட இப் பெரிய ஒருமைப்பாட்டிற்குள், தங்களது தனித் தன்மையைக் காப்பாற்றிக்கொண்டதன்மூலம் தனிப்பட்ட கூறுகளாக இருந்தன. இந்த நகரம் ஸ்பார்ட்டா என்றழைக்கப்பட்டு லாக்கோனியாவில் பழங்காலத்தில் ஆமிக்கிளி (Amyclae) அடைந்த பிரதான இடத்தை அடைந்தது. மற்ற லாசிடிமோனியச் சமூகத்தினர் ஆட்சி புரியும்[2] நகரத்தைச்சுற்றி வசிப்பவர்' என்று பொருள்படும் பெரியீக்கை (perioeci) என்றழைக்கப்பட்டனர். இவர்கள் தம் தலக்காரியங்களைத் தாமே கவனித்து வந்தபோதிலும், ஸ்பார்ட்டன் அரசில் இவர்களுக்கு அரசியல் உரிமை யாதும் வழங்கப்படவில்லை.[2] யுத்த சேவையும் மன்னருடைய நிலங்களைச் சாகுபடி செய்வதும் இவர்கள்மேல் விழுந்த பெரும் பாரங்களாம்.

[1] பிட்டானி (Pitane), மெசோவா (Messoa), லிம்னி (Limnae), கனௌரா (Konoura), டைம் (Dyme).

[2] பிற்காலத்தில் இவர்கள் ஸ்பார்ட்டாவைச் சேர்ந்த ஆர்மோஸ்ட்கள் (Harmosts) எனப்படும் தளகர்த்தர்களின் மேற்பார்வையில் இருந்துவந்ததாகச் சில ஆதாரங்கள் கூறுகின்றன. ஆனால்

பழமையை விரும்பும் பண்பிற்கு ஸ்பார்ட்டர்கள் எப்பொழுதும் பெயர் போனவர்கள். எனவேதான் நாம் ஹோமரின் இலக்கியக் காலத்தில் இருந்த பழைய முறையின் சில எச்சங்களைப் பல வழிகளில் தனிச் சிறப்பு வாய்ந்த ஸ்பார்ட்டன் அரசியல் அமைப்பில் காண்கிறோம். இத்தகைய பழமையான முறை, நம்பத்தகுந்த வரலாற்றின் துவக்கத்தில் பல இடங்களிலிருந்து மறைந்தது. இந்த எச்சங்களில் முடியாட்சி தலை சிறந்தது ஆகும். பெயரளவில் ஸ்பார்ட்டா மன்னர்களால் ஆட்சி செய்யப்பட்டு வந்தது.

ஸ்பார்ட்டர்களின் பழமை விரும்பும் பண்பு தொன்மையிலும் தமது அரசியல் அமைப்பைப் பத்திரக்கால வரலாற்றில் காணப்படும் அதே உருவத்தையும், தோற்றத்தையும் கொண்டு இலங்கியது என்பதை அவர்கள் நம்பவேண்டும் என்பதையும், மற்றவர்கள் மறுக்காமல் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்னும் ஆவலையும் உண்டுபண்ணியது. ஆனால் இது இப்படி இருந்திருக்க முடியாது என்று நாம் ஐயம் கொள்ள இடமிருக்கிறது. மற்றக் கிரேக்க அரசுகள் வளர்ந்ததுபோல ஸ்பார்ட்டாவும் ஏழாம் நூற்றாண்டுவரை வளர்ந்தது என்று சொல்வதில் ஐயமில்லை; ஆனால் இவ் வளர்ச்சியில் சில சிறப்புப் பண்புகள் (remarkable peculiarities) காணப்படுகின்றன. ஏனைய அரசுகள் போல ஸ்பார்ட்டாவும் முடியாட்சியிலிருந்து உயர்குடி யாட்சிக்கு வந்தது. பின் பிரபுக்களுக்கும் மக்களுக்கும் ஏற்பட்ட போராட்டத்தின் விளைவாக முடிவானதோர் அரசியல் அமைப்பு ஏற்படுத்தப்பட்டது என்பதற்கு ஐயம் ஒன்றுமில்லை. இவ் வகையான மாறுதல்கள் ஏற்படும்பொழுது வழிவழியாக வந்த அரசியல் எஞ்சியது ஒரு தனிச் சிறப்பாகும்.

ஸ்பார்ட்டாவின் அரசியல் இயந்திரம் முழுவளர்ச்சி பெற்ற காலத்தில் நாம் அறிந்தபடி, அரசர்கள், சபை, பேரவை, ஈபார்கள் (Ephors) என்று நான்கு பிரிவுகள் கொண்டிருந்தது. நாம் அறிந்தபடி இவைகளில் முதல் மூன்றும் மூல நிறுவனங்களாகவும், கிரேக்க இனத்தவருக்கே பொதுவானவையாகவும் இருந்தன. ஆனால் ஈபார்கள் என்பது ஒரு பிந்திய கால நிறுவனமும், ஸ்பார்ட்டாவுக்கே நூதனமானதுமாகும்.

ஹோமரின் இலக்கியக் காலத்து இறுதியில் அரசர்களின் அதிகாரங்கள் கட்டுப்படுத்தப்பட்டதையும், இவ்விதமாகக் கட்டுப்

---

இந்த ஆதாரங்களும் முக்கியமாகச் சிதிரா (Cythera) தீவைக் குறிக்கின்றன. ஏனென்றால், இத் தீவுக்கு யுத்தப் பிரச்சினையில் பல தனிபட்ட ஏற்பாடுகள் தேவையாயிருந்தன.

பாடுகளுக்கு உள்ளான முடியரசுகள் பின்னர் மறைந்ததையும் நாம் கண்ணுற்றோம். சில சமயங்களில் ஆதென்ஸ் நாட்டு அரச-நடுவர் களைப்போல (king-archons) இவையும் நடுவர்கள் என்ற நிலையிலே சில அடிச்சுவடுகளைத் தமக்குப் பின்னால் அமர்த்திவிட்டு மறைந்து போயின. சில இடங்களில் கோன் ஆட்சி அழிந்து போகாமல் நிலைத்திருந்தது. அவ்விடங்களில் ஸ்பார்ட்டாவும் ஒன்றாகும். ஆனால் இங்கு அழிந்து போகாமல் நிலைத்திருந்தாலும் அதன் அதிகாரங்கள் இரண்டு வழிகளில் கட்டுப்படுத்தப்பட்டன. இது மற்ற அரசு நிறுவனங்களாலே மாத்திரமன்றித் தனது இருமையான குணவியல்பினாலும் கட்டுப்படுத்தப்பட்டது. ஏனென்றால், மனிதனுக்கு நினைவுதோன்றிய காலம்முதல் ஸ்பார்ட்டாவில் இரண்டு மன்னர்கள் இருந்தனர். தனித்தனி மன்னர்களைக் கொண்ட இரு சமுதாயங்கள் ஒன்றாய் இணைந்ததால், இந்த இரட்டை மன்னர் ஆட்சியின் தோற்றுவாய் இருந்திருக்கக்கூடும். ஸ்பார்ட்டாவை அடுத்து ஒரு குலம் வசித்து வந்தது. இதன் மன்னர்கள் ஏஜிடே (Agidae) என்னும் குலத்தைச் சேர்ந்தவர்கள். மற்றொரு குலம் லாக்கோனியாவின் தென்பகுதியில் வசித்திருக்கலாம் என்று நாம் எண்ணலாம். இதன் அரச வமிசம் யூரிபான்டிடே (Eurypontidae) என்னும் வகுப்பைச் சேர்ந்தது. இவ்விரண்டு குலங்களும் ஸ்பார்ட்டா என்னும் ஒரு பெரிய நகர அரசை அமைக்க ஒன்றுபட்டிருக்கலாம். இவ் விரண்டு சமுதாயங்களும் தம் தனித் தனி மன்னர்களை விட்டுவிடக் கூடாதென்பதும் இந்தக் கூட்டுச் சமுதாயத்தை ஆட்சி புரியச் சரிசம அதிகாரங்கள் உள்ள இரண்டு மன்னர்கள் இருக்கவேண்டும் என்பதும் இவ் விணைப்பின் கட்டுப்பாடுகளாக இருந்திருக்கலாம். அரச குடும்பங்களாகிய ஏஜிடே, யூரிபான்டிடே ஆகிய இரண்டிலும் அரசுரிமை தகப்பனிலிருந்து தனயனுக்குப் பாரம்பரியமாக வந்தது. ஏஜிட் மன்னர்கள் தம் கூட்டாளிகளைவிடச் சிறிதளவு அதிக அதிகாரங்களை உடையவர்கள் என்று பொதுமக்கள் மதிப்பிடுவார்கள். ஆனால் இது யூரிபான்டிட் மன்னர்கள் வெளியிலிருந்து ஸ்பார்ட்டாவிற்கு[3] வந்த அயலார் என்பதனால் இருக்கக்கூடும். பிற்காலத்தில், 'ஏராக்கிளிடேயின் திரும்புதல்' என்ற கட்டுக்கதை பரவிய காலத்தில், இவ் விரண்டு அரசர்களின் மரபு வரிசை தயாரிக்கப்பட்டது. இந்த வரிசைப்படி இரண்டு வமிசங்களும் ஏராக்கிளிஸிலிருந்து தங்களைப் புறப்படச் செய்கின்றன.

[3]இவ் விரண்டு இனங்களுக்கும் ஐந்து கிராமங்களுக்கும் உள்ள உறவும், மற்றோர் இனமாகிய ஏஜிடேயின் இணைப்பைப்பற்றிய பிரச்சினையும் நன்கு புலப்படாமல் இருக்கவேண்டும். ஏஜிடே தனக்குரிய அரசனை வைத்துக்கொள்ளவில்லை.

இரு மன்னர்கள் இருப்பின், ஓரளவுக்கு ஒருவர் மற்றவர்க்குத் தடையாக இருக்கக்கூடும் என்னும் எண்ணத்தினுல் ஸ்பார்ட்டாவில் முடியாட்சி அளிக்கப்படவுமில்லை அல்லது நடுவர் நிலைக்கும் குறைக்கப்படவுமில்லை எனத் தெரிகிறது. ஆனுல் அரசர்களின் அதிகாரங்கள் பெரும்பாலும் குறைக்கப்பட்டன. பொதுவாக, கிரீஸ் முழுவதும் முடியாட்சி உயர்குடி யாட்சிகளால் நீக்கப்பட்டு வரும் காலத்தில் இவ்விதமான கட்டுப்பாடுகள் படிப்படியாகப் புகுத்தப்பட்டன என்று நாம் எண்ணிக்கொள்ளலாம். ஸ்பார்ட்ட அரசர்களுக்கும் மற்றக் கிரேக்க அரசர்களுக்கும் உள்ள மதம், யுத்தம், நியாயம் இவை சம்பந்தமான கடமைகளில் சிலவற்றை இவர்கள் இழந்துவிட்டு, மற்றவைகளைத் தம் வசத்தில் வைத்துக் கொண்டனர்.

இவர்களில் சில மதகுரு பதவிகளை ஏற்றுக்கொள்ள உரிமையுடையவர்கள். ஒவ்வொரு மாதமும் நகரத்தின் நலத்திற்காக அப்பல்லோவுக்கு (Apollo) பயபக்தியுடன் கூடிய பலிகளை இடுவர். இவர்கள் போருக்குச் செல்வதற்கு முன்னும், சண்டைக்கு முன்னும் தேவையான பலிகளைத் தயாரிப்பர். இவர்கள் குருக்களாக இருந்தபோதிலும், சமூகத்தில் இவர்கள்மட்டும் தனிப்பட்ட குருக்கள் அல்ல.

இவர்கள் படைகளின் முதன்மையான தளகர்த்தர்கள். தாம் தெரிந்துகொண்ட எந்த நாட்டின்மேலும் போர் தொடுக்கும் உரிமை இவர்களுக்கு உண்டு. தம் யுத்த முயற்சிகளைத் தடுக்கும் எந்த ஸ்பார்ட்டனையும் தண்டிக்கும் உரிமைகளும் இவர்களுக்கு உண்டு. போர்க்களத்தில் இவர்களுக்கு உயிர் கொடுக்கவும் எடுக்கவும் கூடிய கட்டுக்கடங்காத உரிமைகள் உண்டு. இவர்களுக்கு நூறுபேர் கொண்ட ஒரு மெய்க் காவலர்படை கொடுக்கப்பட்டது. இவர்களுடைய இப் பெரிய அதிகாரங்கள் யாவும் இரட்டை மன்னராட்சியால் கட்டப்பட்டுள்ளன என்பது தெளிவு. ஆனுல் பின்னுல், யுத்த காலங்களில் ஒரே ஒரு மன்னர்தான் படைகளை நடத்த வேண்டும் என்றும், ஒவ்வொரு தடவையும் இரு மன்னரில் ஒருவர் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும் என்றும் சட்டம் வரையறுத்தது. மேலும், போர்நடவடிக்கைகளில் தம் நடத்தைகளுக்கு மன்னர்கள் சமுதாயத்திற்குப் பொறுப்பாளிகள் என்றும் கூறப்பட்டது.

ஆனுல் இவர்கள் பிரதான மதகுருக்களாகவும், படைகளின் தலைவர்களாகவும் பெரியதொரு பதவியை வகித்து வந்தபோதிலும், இவர்களை நீதிபதிகள் என்று கருதுவதற்கு இடமில்லை. ஹோமர் காலத்து அகமெம்னன் போன்றோர் ஊழித் தீர்ப்புகள்

அளித்துக்கொண்டிருந்த உரிமை, இவர்களிடமிருந்து சென்று விட்டது. மூன்றுவித முக்கிய வழக்குகளில்மாத்திரமே இவர்களுக்கு இன்னும் முறைமன்றச் சார்பான அல்லது சட்டம் சார்ந்த அதிகாரங்கள் இருந்து வந்தன. பிள்ளைகளைக் கூட்டிக் கொள்வதில் இவர்கள் தலைமை வகித்தனர். பெண் உரிமையாளரின் (heiress) திருமணத்தை உறுதி செய்யாது (betrothal) அவளுடைய தகப்பன் மரித்தபொழுது அவளை யார் மணப்பதென்பதை அரசர்கள் தீர்மானித்தார்கள். பொதுமக்களுக்குரிய சாலைகளைக் குறித்த எல்லாக் காரியங்களிலும் இவர்கள் தீர்ப்பளித்தனர்.

பெரியீக்கையினரது நில எல்லையிலுள்ள அரச நிலப்பகுதிகளிலிருந்து வரும் வருமானம் அரசர்களைச் சேர்ந்தது. பொதுமக்களின் பலிகளில் காணப்பட்ட மேல் வரும்படிகள் இவர்களைச் சேர்ந்தவை. அந்த வேளைகளில் அல்லது சமயங்களில் ஹோமர் காலத்து மன்னர்களைப்போல் இவர்களுக்கு விருந்துகளில் முதல் இடமும், முதல் சேவையும், எல்லாவற்றிலும் இரட்டிப்பான பாகங்களும், கொல்லப்பட்ட மிருகங்களின் தோல்களும் அளிக்கப்பட்டன. மன்னர்களின் இறுதிச் சடங்கு செய்யும் காலத்தில் அவர்களுக்கு அளிக்கப்படும் மரியாதைகளைப் பார்க்குமிடத்து அரச பதவி எத்துணைப் பக்தியுணர்ச்சிக்குரிய ஒரு நிறுவனமாக விளங்கியது என்பது அறியக் கிடக்கின்றது. "லாக்கோனியா முழுவதிலும் இந்தத் துயரச் செய்திகளைக் குதிரை வீரர் பரவச் செய்கின்றனர். நகரங்களில் பெண்கள் கொப்பரை ஒன்றினைக் கொட்டி முழக்குவர். இவ் வறிகுறியைக் கேட்ட மாத்திரத்தில் ஒவ்வொரு வீட்டிலும் ஆணும் பெண்ணுமாக இரு தனி உரிமை பெற்ற மக்கள், இழவுத் துயர் ஆடைகளை அணிய வேண்டும். இவ்விதமாக யாராகிலும் செய்யாவிட்டால், மிகுதியான தண்டனைகள் அவர்களுக்கு விதிக்கப்பட்டன" என்றெல்லாம் எரோடட்டஸ் (Herodutus) கூறியுள்ளார். குறிப்பிட்ட ஓர் எண்ணிக்கையுள்ள பெரியீக்கை மக்கள் இந்த அடக்கங்களில் பங்கெடுத்தனர்.

துயருறு மக்கள் இறந்துபோன மன்னரைப் புகழ்ந்து பேசுவதும், அவர் தமக்கு முன் மறைந்தோர் யாவரையும்விட மிகவும் நல்லவர் என்று கூறுவதும் குறிப்பிட்ட ஆசாரத்தின் ஒரு பகுதியாகும். அடக்கத்திற்குப் பின் பத்து நாட்களுக்குப் பொதுவான அலுவல்கள் நடைபெற மாட்டா. மன்னரது மூத்த மகன் பட்டம் ஏறுவான். ஆனால் தகப்பனர் பட்டமேறுமுன் பிறந்த மகன், அவர் பட்டமேறிய பின் பிறந்த தலை மூத்த மகனுக்குத் தன்னிடத்தைக் கொடுப்பது முறையாகும். மன்னருக்கு மக்கள்

இல்லாவிடில், அவருடைய நெருங்கிய பந்துவாகிய ஓர் ஆண் மகனுக்குப் பட்டமளிக்கப்படும். அதே விதமாக மன்னரின் மக்கள் இளைஞராயிருப்பின், அவருடைய நெருங்கிய பந்துவாகிய ஓர் ஆண் மகன் மன்னரின் பிரதிநிதியாக ஆள்வார்.

ஹோமர் காலத்தில் மன்னர்களுக்கு ஆலோசனைகள் கூறி, அவர்களிடம் நீதிபதிகளாக இருந்த ஜெரான்டியர்கள் **(gerontes)** அல்லது மூப்பர்கள், ஸ்பார்ட்டாவின் அரசியல் அமைப்பில் குறிப்பிட்ட எண்களுடைய சபையாகிய ஜெரூஷியா **(gerusia)** என்று முதிர்ச்சி பெற்றனர். இந்தச் சபை முப்பது உறுப்பினரைக் கொண்டிருந்தது. இவர்களில் இருவர் தம் பதவியின் பயனுலான இரு மன்னர் ஆவர். இந்தச் சபை எல்லா வகையிலும் மூப்பர்களின் கூட்டம் என்று கருதும்படி மற்ற இருபத்தெட்டு உறுப்பினரும் வயதில் அறுபதிற்குமேல் இருக்கவேண்டும். தம் ஆயுள் முடிவுவரை தம் பதவியை இவர்கள் அநுபவித்தனர். இவர்கள் பொதுமக்கள் கூடிய பேரவையின் ஆர்ப்பரிப்புடன் தேர்ந்தெடுக்கப்பட்டனர். எவருடைய ஒழுக்கமும் நேர்மையும் மற்றவர்களைக் காட்டிலும் சிறந்து இருக்கின்றனவோ அவரே மக்களால் தேர்ந்தெடுக்கப்படுவர். எனவே, இச்சபையில் அங்கத்தினராய் இருப்பதே தூய்மையின் பரிசு என்று கூறினர். பேரவையின் முன் சமர்ப்பிக்க வேண்டிய செய்திகளை இச் சபை ஆயத்தப்படுத்தியது. இது ஆலோசனை கூறும் கழகம் என்ற முறையில் அரசியல் விவகாரங்களில் தன் செல்வாக்கைப் பயன்டுத்திற்று. இது குற்றவியல் சார்ந்த வழக்குகளை விசாரிக்கும் நியாயஸ்தலமாகவும் இருந்து வந்தது.

இந்தச் சபையினர்கள் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டாலும் மக்களிலிருந்து தேர்ந்தெடுக்கப்படவில்லை. பிறப்பாலாகிய பிரபுத்தனம் ஸ்பார்ட்டாவில் தனது அரசியல் முக்கியத்துவத்தை விட்டுவிடாமல் தன்னகத்தே வைத்திருந்தது. பிரபுக்கள் குடும்பங்களில் உள்ள மக்களே சபையின் உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். எனவே, இச்சபை லிசிடிமோனியர்களின் அரசியல் அமைப்பில் சிறுகுழு ஆட்சியின் நிறுவனமாக இருந்தது.

முப்பது வயதிற்கு மேற்பட்ட ஒவ்வொரு ஸ்பார்ட்டனும் அப்பெல்லா **(apella)** அல்லது குடிகளின் பேரவையில் ஓர் உறுப்பினன் ஆவன். பேபிக்கா **(babyka)** பாலத்திற்கும் நாக்கியன் **(Knakion)** ஆற்றிற்குமிடையே உள்ள இடத்தில் ஒவ்வொரு மாதமும் இப்பேரவை கூடும். பழங்காலத்தில் இப் பேரவை மன்னர்களால் கூட்டப்பட்டது உண்மையே. ஆனால் வர

லாற்றுக் காலங்களில் இந்த உரிமை ஈபார்களிடம் சென்று விட்டது. வாதங்களில் ஈடுபடாத இந்தப் பேரவை, மன்னர்களுடைய அல்லது ஈபார்களுடைய திட்டங்களைக் கேட்டுத் தன் விருப்பங்களைக் கைக்கொட்டுடன் கூடிய ஆர்ப்பரிப்போடு தெரிவிக்கும். பெரும்பாலோருடைய விருப்பு வெறுப்புச் சரியாகத் தெரியாத காலங்களில், அவையோரை இரு பிரிவினராகப் பிரிக்க வசதியிருந்தது. இம் மக்கள் ஜெருஷியா உறுப்பினர்களையும், ஈபார்களையும், மற்ற நடுவர்களையும் தேர்ந்தெடுத்தனர். இவர்கள் யுத்தம், சமாதானம், வெளிநாட்டு அரசியல் முதலிய கேள்விகளைத் தீர்மானித்தனர். இவர்கள் மரபு வழி யுரிமையில் ஏற்படும் வாதங்களையும் முடிவு செய்தனர். இவ்வண்ணம் கொள்கை நிலையில் (theoritically) ஸ்பார்ட்டன் அரசியல் அமைப்பு ஒரு மக்களாட்சியாகும். மக்களின் அப்பெல்லாவிலிருந்து ஸ்பார்ட்டன் ஒருவனும் விலக்கி வைக்கப்பட முடியாது. இந்த அப்பெல்லாவில் வெளியிடப்பட்ட மக்களின் தீர்மானங்களே மேலானவை. 'தீர்மானங்களும் அதிகாரங்களும் மக்களுக்கே உரியன' என்று ஒரு பழைய சட்டம் கூறுகிறது. ஆனால் இதே சட்டம் மக்களின் வெளிப்படையான தனி முதன்மையை நிர்வாக அதிகாரிகளுக்கு - மூப்பர்களுக்கும், நடுவர்களுக்கும் - கொடுத்துள்ளது. 'மக்கள் கோணலான ஆணைகளை உண்டு பண்ணினால் இவர்கள் விலகிக் கொள்ளக் கூடும்' என்று சலுகையை இவர்களுக்குக் கொடுத்தது. கைத்தட்டுடன் சேர்ந்த ஆர்ப்பரிப்புடன் நிறைவேற்றிய மக்களின் தீர்மானங்கள், பேரவை கலைக்கப்படுமுன் பேரவையின் முன்பு முறைப்படி பறையறை செய்யப்படாவிட்டால் இவை சட்டத்தின் ஆற்றலைப் பெறமாட்டா என்று தெரிகின்றது. பேரவையில் பெரும்பான்மையோரின் தீர்மானத்தை மூப்பரும் நடுவரும் ஏற்றுக்கொள்ளாவிட்டால், அதனைப் பறையறை செய்ய மறுத்துப் பேரவையின் நடவடிக்கையைத் தள்ளுபடி செய்யலாம் - இவர்கள் மன்னன் அல்லது ஈபார்ப் பேரவையை முறையாகக் கலைக்கு முன்பே தாம் விலகிக்கொண்டு கூட்டத்தைக் கலைக்கக் கூடும்.

ஸ்பார்ட்டாவின் அரசியல் அமைப்பிலேயே தனிப்பட்டதோர் இயல்பை இந்த ஐந்து ஈபார்கள் கொண்ட நிறுவனத்தில் காண்கின்றோம். இந்த நிறுவனத்தின் ஆரம்பம் நமக்குத் தெளிவாகத் தெரியவில்லை. எட்டாவது நூற்றாண்டின் முதற் பகுதியில் இது தோன்றியதாகக் கருதப்படுகிறது. ஆனால் இந்த நிறுவனத்தின் துவக்கத்தையும், இந் நிறுவனத்தின் அரசியல் முக்கியத்துவத்தின் துவக்கத்தையும் நாம் வேறுபடுத்தித் தெரிந்துகொள்ள வேண்டும். ஒருவேளை எட்டாம் நூற்றாண்டில் மன்னர்கள் தம் எல்லாக் கடமைகளையும் சரிவரக் கவனிக்க முடியாமல், தம் சிவில் ஆட்சி

முறையைக் கொடுத்துவிட நேர்ந்திருக்கும் என்றும், ஈபார்கள் அல்லது 'கண்காணிப்பாளர்' இதற்காக நியமிக்கப்பட்டனர் என்றும் நினைக்க வேண்டியிருக்கிறது. ஈபார்களின் எண்ணிக்கை நகரத்தை ஏற்படுத்திய டீம்ஸ் (demes) அல்லது கிராமங்களின் எண்ணிக்கைக்குச் சரியாக இருப்பதால் ஒரு வேளை ஆதியில் ஒவ்வொரு கிராமத்திற்கும் ஒவ்வோர் ஈபார் கொடுக்கப்பட்டிருக்கக் கூடும் என்றும் எண்ண இடம் இருக்கின்றது. ஆனால் ஈபார்கள் தங்கள் அரசியல் அதிகாரங்களை ஏழாம் நூற்றாண்டிற்குமுன் பெற்றிருக்க முடியாது. மன்னர்களுடன் சேர்ந்து ஆட்சி செய்த பிரபுக்களுக்கும், ஆட்சியில் ஒரு பாகமும் இல்லாத மக்களுக்கும் இடையே நடந்த சச்சரவின்போது இவர்கள் தம் அதிகாரங்களைப் பெற்றிருக்கக் கூடும் எனத் தெரிகின்றது. இந்தப் போராட்டத்தில் மன்னர்கள் பிரபுக்களின் குறிக்கோள்களை எடுத்துக்கூறினர். ஈபார்கள் மக்களின் பிரதிநிதிகளாகத் தோன்றினர். இந்தப் போராட்டத்தின் விளைவு ஓர் உடன்படிக்கையாகும். ஒவ்வொரு மாதமும் மன்னர்களும் ஈபார்களும் தங்களுக்குள்ளே மாற்றிக்கொள்ளும் உறுதி மொழியிலிருந்து இரு தரப்பாரும் விட்டுக் கொடுத்து ஒப்பந்தம் செய்துள்ளார்கள் என்பது தெளிவுபடுகிறது. அரசன் தன் கடமைகளைச் செய்யும்போது அரசின் சட்டங்களைப் பின்பற்றுவதாக உறுதிமொழி கூறுவான். அரசன் தனது உறுதி மொழிக்கு உண்மையாய் நடக்கும்வரை தாம் அரசனுடைய அதிகாரம் குறைவுபடாமல் காப்பாற்றுவதாக ஈபார் உறுதி மொழி கூறினர். அரசாங்கத்திற்கும் மக்களுக்கும் ஏற்பட்ட கூர்மையானதொரு போராட்டத்தை இந்த ஆசாரம் ஓர் ஆவணம்போல் குறிப்பிடுகிறது. ஸ்பார்ட்டன் எவனும் தேர்ந்தெடுக்கப்படக்கூடும் என்பதிலிருந்து ஈபாரேட்டில் (ephorate) உள்ள மக்களாட்சியின் இயல்பு காணப்படுகின்றது. ''வெறுஞ் சின்னப் பிள்ளைத்தனம்'' என்று அரிஸ்டாட்டில் (Aristotle) குறிப்பிட்டுக் காட்டிய தேர்ந்தெடுத்தல் முறை கிட்டத்தட்டச் 'சீட்டுப் போடும்' (lot) முறையைப் போலுள்ளது. இந்த ஐந்து ஈபார்களும் தங்களுக்குள்ளே ஒரு முடிவுக்கு வர முடியாவிட்டால், சிறுபான்மையோர் விட்டுக் கொடுத்துவிட வேண்டும் என்பது ஒரு முடிவு.

இலையுதிர் காலத்தில் நேர் நாளை (autumnal equinox) அடுத்து வரும் முதல் அமாவாசையாகிய லாக்கோனியர்களுடைய புத்தாண்டில் ஈபார்கள் பதவியை ஏற்றுக்கொள்வார்கள். மக்களின் உரிமைகளைக் காப்பதற்காகத் தெரிந்தெடுக்கப்பட்ட பாதுகாப்பாளராகிய (guardians) இவர்கள், மன்னர்களின் நடத்தையைக் கருத்துடன் கவனித்து வர ஏவப்பட்டனர். இந்

நோக்கத்துடன்தான் போர் போன்ற படையெடுப்புக்களில் இரண்டு ஈபார்கள் மன்னருடன் சென்றனர். அவர்களுக்கு மன்னரைக் குற்றஞ்சாட்டவும், அவரைத் தம்முன் வரும்படி உத்தரவிடவும் அதிகாரங்கள் இருந்தன. மன்னர்கள் இழந்து போன முறை மன்றச் சார்பான கடமைகளில் சில ஈபார்களுக்கும், மற்றவை சபைக்கும் சென்றன. ஈபார்கள் உயர்தர சிவில் நீதி மன்றமாயினர். நாம் முன்பு கவனித்தபடி சபை உயர்தர கிரிமினல் நீதிமன்றமாயிற்று. ஆனால் பெரியீக்கியரைப் பொறுத்த வரையில் ஈபார்கள் கிரிமினல் நீதிபதிகளாகவும் இருந்தனர். மேலும், ஸ்பார்ட்டன் அரசில் ஒழுங்கு முறையைக் கண்டிப்பான முறையில் அமைப்பது இவர்களுடைய பொறுப்பாகும். இதற்குச் சரியான எடுத்துக்காட்டு, இவர்கள் தம் பதவியை ஏற்றவுடன் குடிகளுக்கு 'உங்கள் மேல்உதடுகளை (மீசையைச்) சவரம் செய்து, சட்டங்களுக்குக் கீழ்ப்படியுங்கள்' என்னும் பறையறையேயாகும்.

முடியாட்சி, சிறுகுழு ஆட்சி அல்லது மக்களாட்சி என்ற பொதுத் தலைப்புகள் ஆகிய ஒன்றிலும் நாம் இந்த இணையற்ற அரசியல் அமைப்பை அடக்கிக் கூற முடியாது. அப்படிச் செய்தால் நாம் மற்றவர்களுக்குத் தவறான வழியைக் காட்டுகிறவர்களாயிருப்போம். மேற் குறிப்பிட்ட எந்த ஆட்சி முறையும் இதற்கு ஈடாக அமையாது. ஆனாலும் அது இந்த மூன்றிலும் ஒன்றியுள்ளது. சகல அதிகாரங்களுடனும் போர் வீரர்களின் அணியில் முன் செல்லும் மன்னர்களையும் அல்லது நகரத்தில் நடக்கும் பொது விருந்துகளில் மன்னர்களுக்குக் கொடுக்கும் மரியாதைகளையும் மன்னர் வமிசத்திலில்லாத ஒருவன் காணுமிடத்து அவன் ஸ்பார்ட்டா ஒரு முடியரசு என்று வர்ணிப்பான். ஆனால் மன்னரில் ஒருவரை இந்த அரசியல் அமைப்பை வரையறுக்கச் சொன்னால், மிகவும் வருத்தத்துடன் அவர் இதனை மக்களாட்சி என்பார். உரிமைகள் கொண்ட வகுப்பிலிருந்து எடுக்கப்பட்டதும், பொது விவகாரங்களில் தம் சொல் வன்மையை முழு வலிமையுடன் உபயோகிக்கக் கூடியதும், விவாதிக்கக் கூடாத நிலையிமையிலுள்ள பேரவையை மதித்து வருவதுமாகிய இந்த அடங்கியுள்ள சபையானது ஸ்பார்ட்டா ஒரு சிறு குழு ஆட்சியையுடையது என்பதை மெய்யெனக் காட்டும். பலாத்காரக் குறைவோடும், அதிகப் பழமையை விரும்பும் உணர்வோடும் தங்களுக்கு நேர்ந்த ஒவ்வொரு நெருக்கடியையும் ஸ்பார்ட்டா மக்கள் சமாளிக்க முடிந்தது. ஏனைய அரசுகள் இதே அரசியல் நெருக்கடியைச் சமாளிக்க நேர்ந்தபோது அவைகளால் ஸ்பார்ட்டாவைப்போல் நடந்துகொள்ள முடியவில்லை. இது ஸ்பார்ட்டாவின் அரசியல் அமைப்பின் சிக்கலான தன்மைக்குக்




படம் 27: பெலோப்போனீஸஸ்

காரணமாயிருக்கின்றது. தான் முடியாட்சியிலிருந்து உயர்குடியாட்சிக்குப் போயிருக்க வேண்டிய கட்டத்தில் ஸ்பார்ட்டா, மன்னரின் அதிகாரங்களைக் குறைத்து, வழிவழியாக வந்த அரசை (hereditary kingship) உயர்குடி யாட்சி அரசாங்கத்தில் சேர்த்துக் காப்பாற்றிற்று. தான் மக்களாட்சியை நேராக அடைந்திருக்க வேண்டிய நேரத்தில் ஸ்பார்ட்டா மக்களின் பிரதிநிதிகளுக்கு ஏராளமான அதிகாரத்தை வழங்கினாலும் கூட வழிவழியாக வந்த மன்னர்களையும் பிரபுக்கள் அடங்கிய சபையையும் இன்னமும் பேணி வரலாயிற்று.

## 2. மெஸ்ஸீனியாவை (Messenia) ஸ்பார்ட்டா தன் வசமாக்குதல்

மெஸ்ஸீனியாவைத் தன் வசமாக்கியதே ஸ்பார்ட்டாவின் வளர்ச்சியில் முதலானதும் முக்கியமானதுமான படியாகும். பெலோப்போனீஸஸ்ஸின் தெற்குப்பாகம் டெகீட்டஸ் (Taygetus) மலையினால் இரண்டு பாகங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. இவைகளில் கிழக்குப் பகுதி யூரொட்டாஸ் பள்ளத்தாக்கு, பார்னான் மலைக்கும் கடலுக்கும் இடையேயுள்ள மேடும் பள்ளமுமான கடற்கரையோரம் என்று இரண்டு பாகங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. மேற்குப் பாகம் கிழக்குப் பாகத்தைப் போல் மலைத் தொடரால் பிரிக்கப்படாமல் அதிக மலைகளில்லாமலும், செழிப்பாகவும், மென்மையான தட்ப வெப்ப நிலையுடையதாகவும் இருக்கின்றது. மேலும், இது மலைத் தொடரால் பிரிக்கப்படாமலும் இருக்கின்றது. இங்குக் குன்றுகள் வரிசைக் கிரமமின்றிக் காணப்படுகின்றன. இப்பாகத்தின் மத்தியிலுள்ள ஸ்டெனிகிளாரஸ் (Stenyclarus) சமவெளி பாமிஸஸ் (Pamisus) நதியால் செழிப்பைப் பெறுகிறது. இந்தச் சமவெளியில் கிரேக்கப் படைகள் தம் இல்லங்களை அமைத்துக்கொண்டன என்று தெரிகிறது. இந் நதிக்கு மேற்கேயுள்ள உயர்ந்த பாறையாகிய இத்தோம் (Ithome) இந் நாட்டின் இயற்கைக் கோட்டையாகும். இதன் காவலின்கீழ் முன் காலத்தில் மெஸ்ஸீனி என்ற பட்டணம் இங்கு எழும்பிப் பின் தன் பெயரையே முழு நாட்டிற்கும் ஈந்தது.

'நடுவதற்கும் அறுப்பதற்கும் நல்ல இடம்' என்று ஸ்பார்ட்டன் கவிஞன் ஒருவன் வர்ணித்த இந்தச் செழிப்பான இடம், போரில் விருப்பமுள்ள அயலகத்தார்களின் பேராசையைத் தூண்டியது. முதலாவது மெஸ்ஸீனியன் போரின் காலம் எட்டாவது நூற்றாண்டு என்பதற்குமேல் நம்மால் திட்டமாகச் சொல்ல முடியாது. அந்தப் போரின் காரணங்களைப்பற்றியும்

அதன் வழியைப்(course)பற்றியும் பல கட்டுக் கதைகள் தோன்றின. தியோபாம்பஸ் (Theopompus) என்னும் ஸ்பார்ட்டன் மன்னரின் தலைமையில் இந்த யுத்தம் தொடரப்பட்டது என்பதும், இத்தோமைப் பிடித்தவுடன் சண்டை முடிவு பெற்றது என்பதும், கடைசியில் இந் நாட்டின் கிழக்குப் பகுதி லாக்கோனியர்களின் வசம் ஆயிற்று என்பதுமே நமக்குத் தெரிந்த உண்மைகள். ஏழாம் நூற்றாண்டின் துவக்கத்தில் எழுதும் ஒரு கவிஞன் இயல்பாகவே மெஸ்ஸீனி அல்லது பிரே (Pherae) லாசிடீமனில் இருந்தது என்று வர்ணிப்பான்: ஏழாவது நூற்றாண்டின் இறுதியில் இரண்டாவது யுத்தம் துவங்கியபோது இதற்கு முந்திய யுத்தம் இருபது ஆண்டுகள் நடைபெற்றது என்பது ஒரு வேளை வரலாறாயிருக்கலாம் அல்லது புராணக்கதையாக இருக்கலாம். இதனைப்பற்றியும், முக்கியமாக இதில் பெரியதொரு பங்கை எடுத்த அரிஸ்டோடீமஸ் (Aristodemus) என்னும் மெஸ்ஸீனிய வீரரைப்பற்றியும் பல கட்டுக் கதைகள் தோன்றின. தமது நாட்டைக் காப்பாற்றுமாறு தோற்றிய தெய்வ மொழி ஒன்றினுக்கு ஏற்ப, இவர் தம் மகளைப் பலியாகக் கொடுத்தார் என்பது கதையாகும். அப் பெண்ணின் காதலன் அவளைப் பலியிடாதபடி தடுக்க, அப் பெண் சிறிது காலத்தில் ஒரு பிள்ளைக்குத் தாயாவாள் என்று அறிக்கை ஒன்று விடுத்தான். இப் பழிச் சொல்லால் கோபமுண்ட அரிஸ்டோடீமஸ் தம் கையாலேயே தமது மகளைக் கொன்றார். இவர் பின்பு கனவுகளாலும், குறிகளாலும் பயப்படுத்தப்பட்டு, தம் நாடு கட்டாயம் தோல்வியுறும் என்று அறிந்து தம் மகளின் கல்லறையின்மேல் தம் உயிரை மாய்த்துக்கொண்டார்.

தம்முடைய குடிகளின் மட்ட நிலங்கள் அதிகரிக்க வேண்டும் என்று அவாக் கொண்ட ஸ்பார்ட்டர்கள் தோல்வியடைந்த மெஸ்ஸீனியர்களை ஈலாட்டர்களின் (Helots) நிலைமைக்குக் குறைத்தனர். அடிமைத்தனம் (servitude) கடுமையாக இருந்தது. ஆனால் இவர்களுடைய நிலைமை இதை விடவும் இழிவாயிருந்திருக்கக் கூடும். இவர்கள் தாம் விவசாயம் செய்த நிலத்தில் இரண்டில் ஒரு பாகத்தைத் தம் பிரபுக்களுக்குக் கொடுத்தார்கள். ஆனால் சம காலத்தில் அட்டிகாவிலுள்ள சுயேச்சையான குடியானவர்கள் ஆறில் ஐந்து பாகத்தைக் கொடுத்து வந்தனர். எப்படி மெஸ்ஸீனியர்கள் தமது பணிமுதல்வர்களின் (masters) அவமதிப்புகளைப் பொறுத்துக் கொண்டிருந்தனர் என்று டர்டியஸ் (Tyrtaeus) என்னும் புலவர் கீழ்க்கண்டவாறு வரைந்துள்ளார்:

''மிகுதியான பாரங்களை ஏற்றிக் கழுதைகளை நடத்துவது போல இவர்களையும் கொடுமையான பலாத்காரத்துடன் நடத்தி

ஞர்கள். நன்ருகப் பயிர் செய்த நிலங்கள் கொடுக்கும் எல்லாக் கனிவகைகளிலும் ஒரு பகுதியை இறுமாப்புடைய தம் பெருமக்க ளுக்கு மெஸ்ஸீனியர் படைத்தனர். இவர்கள் சில தலை முறைகள் வரை பொறுமையாக இருந்துவந்தனர். ஆனுல் பின்பு வெற்றி கொண்ட ஸ்பார்ட்டா தன்னையே மறந்து இருக்கும் போது இவர்கள், வடக்குப் பிரதேசமாகிய அண்டானியாவில் (Andania) ஒரு கலகத்தை ஏற்படுத்தினுர்கள். இந்தக் கலகக் காரர்கள் ஆர்கேடியாவிலும் (Arcadia) பிசாட்டிஸ் (Pisatis) ஸி லும் உள்ள அயலகத்தாரால் ஆதரிக்கப்பட்டனர். அதே நேரத்தில் இவர்களுக்கு ஒரு பழைய மெஸ்ஸீனியக் குடும்பத்தைச் சேர்ந்த அரிஸ்டோமினஸ் (Aristomenes) என்னும் தலைவன் ஒருவன் தோன் றியதாகவும் தெரிகிறது. முதலில் இந்தக் கலகம் வெற்றி கண்டது. ஸ்பார்ட்டர்கள் சரியான முறையில் சண்டையிடாத தால், அவர்களுடைய இளங்காளைகள் தோல்வியின் அவ மானத்தை அடைந்தனர். அடிமைகளுக்கு நம்பிக்கை எழுந்தது. இழந்து போன நாடுகளைத் திரும்பவும் பெற முடியாது என ஸ்பார்ட்டர்கள் நம்பிக்கை யிழந்தனர். இச் சமயத்திலே அவர் களுள் ஒரு கவிஞன் தலைவனுகத் தோன்றினுன். நொண்டியான டர்டியஸ் தன் நாட்டு மக்களிடையே யுத்த வீரத்தை எழுப் பினுன். ஸ்பார்ட்டாவின் நல்ல பாக்கியம் திரும்பவே, ஸ்பார்ட் டர்கள் தாங்கள் இழந்து போன நாடுகளைத் திரும்பப் பிடித்துக் கொள்ளவும், தம் புகழை மீண்டும் பெற்றுக்கொள்ளவும் நேர்ந்தது. டர்டியஸின் பாடல்களில் சில துணுக்குகள் (scraps) பத்திரப்படுத்தி வைக்கப்பட்டிருக்கின்றன. இவைகளே மெஸ்ஸீ னியன் யுத்தங்களின் வரலாற்றைப்பற்றிய நம்பக்கூடிய சின் னங்களாகும். டர்டியஸின் செயல் முறையின்மூலம் அவன் பெற்ற வெற்றிகள் அவனுக்குப் புகழைத் தரவே, பிற்காலத்தில் அத்தீனியர்கள் அவனை அத்தீனிய மக்களில் ஒருவன் என்று உரிமை கொண்டாட முற்பட்டனர். ஸ்பார்ட்டா, தெய்விக மொழி யின்படி (oracle) டர்டியஸைத் தங்களிடமிருந்து பெற்றனர் என்றும், போர் வீரர்கள் அவனது போர்க்களப் பாடல்களைக் குழலின் ஓசைக்கு ஏற்பப் பாடிப் போர்களம் சென்றனர் என்றும் இதிகாச திசைமொழியைக் கொண்டு அவன் இயற்றிய இரங்கற் பாக்களை (legiese) மாலை வேளைகளில் தம் கூடாரங்களில் உரத்துப் படிப்பர் என்றும் அறிகிறேம். ஆனுல் அவனுடைய போர் முறைத் திறம் (strategy) அவனுடைய பாக்களைப் போலவே மிகவும் பயனுடையதாக இருந்தது என அறிகிறேம். சமீபத்தில் மெஸ்ஸீ னியர்கள் கிரேட் பாஸ் (Great Foss) என்னும் யுத்தத்தில் தோல்வி யுற்றனர். இதன் பிறகு இவர்கள் வடக்கே நீடான் (Nedon) நதியருகேயுள்ள கோட்டையாகிய ஈராவை (Eira) அடைந்

தனர். முதலாவது யுத்தத்தில் இத்தோம் எந்தப் பங்கை எடுத்துக் கொண்டதோ அதே பங்கை இரண்டாவது யுத்தத்தில் ஈரா எடுத்தது. அதே விதமாக அரிஸ்டோமினஸ், அரிஸ்டோடீமஸ் ஸின் இடத்தை எடுத்துள்ளான். டார்டியஸின் ஆவணங்களில் சம கால ஈராவைப்பற்றி ஒன்றும் சொல்லப்படவில்லை. அதே போல் அழியாமல் இருக்கும் அவனுடைய பாக்களின் துணுக்குகளில் அரிஸ்டோமினஸின் பெயரோ அல்லது அங்கு நடைபெற்ற வீரச் செயல்களைப்பற்றிய செய்திக் குறிப்போ ஒன்றும் இல்லை. ஆயினும், ஈராவில்தான் மெஸ்ஸீனியர்கள் கடைசியாக நின்று போர்புரிந்திருக்கக் கூடும். ஏனென்றால், ஸ்பார்ட்டர்கள் இத் தோமின் கோட்டைகளை அடியோடு அழித்தமை இரண்டாவது யுத்தத்தில் ஓர் இடத்தில்கூடச் சொல்லப்படவில்லை. ஈராவில் தாக்குதலை எதிர்த்து நின்ற வீரர்கள் தமது ஆர்கேடிய ஆதரிப் பாளர்களின் பக்கத்திலும், இன்னமும் லாசிடிமோனியர் வச மாகாத பைலாஸ் (Pylos) பக்கத்திலும் இருந்தார்கள். பதினொ ராண்டுகள் முற்றுகையிடப்பட்ட பின்பு ஈரா விழுந்ததாகப் புராணக் கதைகள் கூறுகின்றன. பாதுகாவலருக்கு அரணாயிருந் தவன் அரிஸ்டோமினஸ். கேட்போர் வியக்கும்படி இவன் தப்பிச் சென்றது மயிர்க்கூச்செறியும் கதையாக உளது. ஒரு தடவை தன் னுடன் பிடிபட்ட ஐம்பது மெஸ்ஸீனியர்களுடன் ஓர் ஆழமான குழியில் ஸ்பார்ட்டர்களால் இவன் எறியப்பட்டான். இவனுடைய தோழர்கள் யாவரும் மாண்டனர். இவனும் உறுதியான மர ணத்தை எதிர்பார்த்திருந்தான். ஆனால் ஒரு நரியின் அடிச்சுவடு களைப் பின்பற்றி இவன் தன் சிறையின் பாறைச் சுவரில் ஒரு வழி யைக் கண்டு பிடித்து மறு நாள் ஈராவில் தோன்றினான். அங்கே இக் கோட்டையை ஸ்பார்ட்டர்கள் திடீரென்று தாக்கியபொழுது இவன் காயப்பட்டபோதிலும் ஆர்கேடியாவை (Arcadia) அடைந் தான். இவன் ரோட்ஸ் (Rhodes) தீவில் மாண்டான். ஆனால் இரு நூற்றைம்பது ஆண்டுகளுக்குப் பின் இவன் லீயுக்ட்ரா (Leuctra) போர்க்களத்தில் ஸ்பார்ட்டர்களுக்கு எதிரே திரும்பவும் பழி வாங்கும் நோக்கத்துடன் தோன்றினான் என்று சொல்லப்படு கிறது.

பொதுவாக, மெஸ்ஸீனியர்கள் ஈலாட்டர்களின் நிலைக்குத் தாழ்த்தப்பட்டனர். ஆனால் கடலுக்கு அருகிலுள்ள சமுதாயங் களும், உள்நாட்டில் வசித்தவர்களும், பெரியீக்கியரைப் போல் தம் பண்ணைகளைத் தம்மகத்தே வைத்துச் சுயேச்சையாக வாழ்ந்து வந்தனர். பலர் ஆர்கேடியாவிற்குத் தப்பி ஓடினர். கடற்கரைப் பட்டினங்களில் வசித்தவர் கப்பல்கள்மூலம் மற்ற இடங்களுக்குத் தப்பிச் சென்றனர்.

இச் சமயத்தில் ஏனைய கிரேக்க அரசுகளைப்போல் ஸ்பார்ட்டாவும் உள்நாட்டு அமைதியின்மையால் வருத்தமுற்றிருந்தது. அங்கு ஒரு நெருக்கடியான நிலப் பிரச்சினை இருந்தது. இதைத் தான் டர்டியஸ் தன் 'சட்டமும் ஒழுங்கும்' எனப் பொருள்படும் யூனோமியோ (Eunomia) என்னும் செய்யுளில் வரைந்துள்ளான். இந்தப் பிரச்சினை மெஸ்ஸீனியா நாடு முழுவதையும் தன் வசமாக்கியதால் ஒரு சிறிதளவு நீக்கப்பட்டது. ஆயினும், தென் இத்தாலியில் டாராஸ் (Taras) என்னும் குடியேற்றம் ஸ்பார்ட்டாவின் மிதமிஞ்சிய மக்கள் தொகையைக் குறைப்பதற்காகவே ஏற்பட்டதாகத் தெரிகிறது.

மெஸ்ஸீனியன் யுத்தம் டர்டியஸ் எழுதியுள்ளபடி உரிமை பெற்ற வகுப்புகளின் அதிகாரம் யுத்தத்தில் ஏற்பட்ட பெரிய மாறுதல் ஒன்றால், வன்மை இழந்து போவதைக் காட்டுகிறது. கவசமணிந்தும் கையில் ஈட்டியை ஏந்திக்கொண்டும் ஒருவர் பக்கத்தில் ஒருவர் நெருங்கி நின்றும் போர் செய்யும் அணிகளே வெற்றியைப் பெற்றன. இப்படி நன்றாகப் பயிற்சியளிக்கப்பட்ட ஈட்டி வீரர்கள் - இவர்களை ஆப்லிட்டிஸ் (hoplites)கள் என்று அழைப்பது வழக்கம் - குதிரைப்படையினரைக் காட்டிலும் வலிமையுடையவர்கள் என்ற இரகசியம் வெளியாயிற்று. இதே காலத்தில் அயோனியாவில் ஸிமிர்ண (Smyrna) காலாட் படையினர் கைஜஸ் (Gyges)ஸின் லிடியன் குதிரை வீரர்களை வெற்றியுடன் எதிர்த்ததைக் காண்கின்றோம். இலியட்டின் பிந்திய பகுதிகளில் நெருக்கமாக அமைக்கப்பட்ட காலாட் படையினர் யுத்தத்தில் ஓர் உபயோகமான கருவி என்பதைக் காண்கின்றோம். ஆனால் ஸ்பார்ட்டாவில்தான் இவர்களின் முக்கியத்துவம் முதன்முதலில் முழுவதும் பாராட்டப் பெற்றது. இங்கே யுத்த அமைப்பில் இவர்கள் ஒரு முக்கியப் பகுதியானார்கள். இது முதற்கொண்டு போர்ச் சமயத்தில் நகரம் தன் பிரபுக்களையே நம்பியில்லை; அது மக்கள் அனைவரையும் நம்பியிருந்தது. கிரேக்க நாட்டுக் கைத்தொழில்களின் வளர்ச்சியுடன், உலோகங்களில் வேலை செய்யும் தட்டார்களின் திறமை முன்னேறி, யுத்தக் கலையில் இப் பெருமாறுதலை உண்டாக்க ஏதுவாயிருந்தது. பணம் உடைய ஒவ்வொரு நகரவாசியும் இப்போது தனக்கெனப் போர்க் கவசங்களை வாங்கிக் கொள்ளவும், அவைகளை அணிந்துகொண்டு யுத்த களத்திற்குப் போகவும் முடிந்தவனாயிருந்தான்.[1] இப் பெரிய மாறுதல் சமத்து

[1] உலோகத்தால் செய்யப்பட்ட மார்புக்கவசம் உபயோகத்திற்கு வந்துவிட்டது. முன்னங்கால்களில் உலோகப் போர்க்கவசமும் (greaves) துடைகளில் உலோகத் துண்டுகளும் உபயோகிக்கப்

வத்திற்கும் குடியரசிற்கும் ஏற்றதாயிருந்தது. ஏனென்றால், இது பிரபுவையும், ஒரு சாதாரணக் குடியையும் போர்க்களத்தில் சமமாக்கியது. இந்த யுத்தக்கலையில் ஏற்பட்ட முன்னேற்றத்தையும், மக்களுக்கான அரசியல் அமைப்பு ஏற்படுத்தப்பட வேண்டும் என்று மக்கள் கொண்ட ஆர்வத்தினால் ஈபாரைட்டிற்குப் பெரிய அரசியல் அதிகாரங்களை வழங்கியதையும் நாம் ஒன்று சேர்ப்பதில் தவறு ஒன்றும் இராது.

டார்டியஸ்ஸின் காலத்திலும் அடையாத சம்பூர்ண நிலைக்கு ஸ்பார்ட்டாவில் இது கொண்டுவரப்பட்டவுடன், ஈட்டிகளைக் கையில் ஏந்திச் செல்லும் கனமான காலாட்படை (heavy foot-lancers) நிறுவனம் கிரீஸ் நாடு முழுவதும் பரவியது. எல்லா இடங்களிலும் மக்களைக் குடியாட்சிக்கு எடுத்துச் செல்வதே இயல்பாயிற்று. ஆப்லிட்டிஸ் முறை புகுத்தப்படாமலும், குதிரைப் படையையே முக்கியமானதாகவும் வைத்திருந்த தெசலியன் குடியரசுக்குள்ள கொள்கைகள் முன்னேறாமல் இருந்தன. இவை குறிப்பிடக்கூடிய செயல்களாம்.

## ஸ்பார்ட்டாவின் உள்நாட்டு வளர்ச்சியும் அதன் நிறுவனங்களும்

பிற்காலத்தில் ஸ்பார்ட்டா எப்படி இருக்கப் போகிறது என்பதை ஏழாவது நூற்றாண்டில் எவரும் கூறியிருக்க முடியாது. அதன் பிரபுக்கள் ஏனைய நாட்டுப் பிரபுக்களைப் போலவே கட்டற்ற இன்ப வாழ்வு வாழ்ந்தனர். ஒருவன் மற்ற நகரவாசிகளை போலவே தனது வாழ்க்கையைத் தான் நினைத்தபடி நடத்தும் சுவாதீனத்தை அடைந்திருந்தான். இராணுவத் துறைதவிரப் பிற துறைகளிலும் ஸ்பார்ட்டா தனது சிறப்புகளை வெளியிட்டது. இசைப்பாட்டு (lyric) தனது சொந்த இல்லமாகிய லெஸ்பாஸிலிருந்து (Lesbos) பெயர்க்கப்பட்டு யூரோட்டாஸ் நதிக்கரைகளைத் தனது இரண்டாவது வீடாகச் சிலகாலம் பெற்றிருந்தது. விருந்துகளிலும், திருமணங்களிலும், அறுவடைக்கால விழாக்களிலும், கடவுளர்க்கு எடுக்கப்பட்ட விழாக்களிலும் பாடல்கள் பாடப் பெற்றன. இவற்றை ஒருவரோ, பலரோ, பல கன்னிப் பெண்களோ நினைப்பிற்கு எட்டாத நெடுங்காலமாகப் பாடிவந்தார்கள். பாட்டு முறை வளர்ந்து, இசைக்

பட்டன. வீரர்களின் யுகத்தில் தோளில் மாட்டியிருக்கும் அருவருப்பான கேடயம் இப்போது புஜங்களில் எடுத்துச் செல்லும் வட்டக் கேடயத்திற்குத் தன் இடத்தைக் கொடுத்துவிட்டது.

கருவிகள் செம்மையாக்கப்பட்ட நாள்முதல் இப் பாடல்களின் யாப்பு, கலையாகவே ஆகிவிட்டது. இவ்விதம் மேற்குறித்த இசைப்பாடல் (யாழ்ப் பாட்டு) உண்டாக்கப்பட்டது. ஏழு நரம்புகள் கொண்ட யாழ் என்பது பழங்காலத்திலேயே கண்டுபிடிக்கப்பட்டது என்றாலுங்கூட லெஸ்பாஸ் நாட்டு டெர்பாண்டரே (Terpander) இதை ஆக்கினார் என்று சொல்லப்படுகின்றது. இவர் எல்லாச் சூழல்களிலும் வரலாற்று மனிதராக வாழ்ந்தவர்; அதே சமயத்தில் கவிஞராகவும், இசைக் கலைஞராகவும் பெரும் புகழ் பெற்றவர். இவர் ஸ்பார்ட்டாவைப் பார்க்கச் சென்று அங்கு லாசிடிமோனின் சிறந்த விழாவாகிய கார்னியா (Carnea)வில் ஓர் இசைப் போட்டியை ஏற்படுத்தினார். அங்கே இவருடைய இசையானது வரவேற்கப்பட்டது. விரைவில் ஸ்பார்ட்டாவிற்கு ஒரு கவிஞர் கிடைத்தார். இவர் ஸ்பார்ட்டாவைச் சேர்ந்தவர் இல்லாவிட்டாலும், ஸ்பார்ட்டாவின் தத்துப் பிள்ளையானார். லிடியன் சார்டிஸ் (Lydian Sardis)ஸில் உள்ள ஆல்க்மான் (Alcman) ஸ்பார்ட்டாவைத் தமது இல்லமாக்கினார். பல லாக்கோனியக் கன்னிப் பெண்கள் கொண்ட பாடகக் கூட்டத்தார்கள் பாடுவதற்கென்று இவர் யாத்த பாடல்களில் சில பாகங்கள் நம்மிடம் உள. ஸ்பார்ட்டா, சினீதான் (Cinaethon) என்ற இதிகாசக் கவிஞரையுங்கூடப் பெற்றிருந்தது. ஆனாலும் இசைக்கும் செய்யுளுக்கும் இங்குக் கிளை ஒன்று ஏற்படும் என்ற நம்பிக்கை நிறைவுபெறவில்லை.

பூர்ணமான வரலாற்றுக் காலத்தில் தோன்றும்போது ஸ்பார்ட்டா ஒரு கடுமையான கட்டுப்பாட்டுக்குள் இருப்பதை நாம் பார்க்கிறோம். இந்தக் கட்டுப்பாடு மனிதனின் வாழ்க்கையில் ஒவ்வொரு பாகத்தையும் பாதித்தது. தொட்டிலிலிருந்து சவப் படுக்கை வரை அவனுடைய செயல்களை அடக்கியாண்டது. சகலமும் யுத்த கலைக்குக் கீழாக்கப்பட்டன. எவராலும் வெல்ல முடியாத படைவீரர்களை உண்டுபண்ணுவதே அரசின் ஒரே குறிக்கோளாயிற்று. ஏனைய அரசுகளைக்காட்டிலும் ஆதியிலிருந்தே ஸ்பார்ட்டாவில் போருக்கு உரிய தன்மை மிகவும் வலிமை பெற்றிருந்தது உண்மையே. மன அமைதியில்லாத குடிகளையும், அடிமைகளையும் அடக்கி ஆள நேர்ந்த இந்த நகரம் யுத்தம் புரிய எப்போதும் ஆயத்தமாக இருக்கவேண்டியதாயிற்று. ஆனால் இப்போது படிக்கப்போகும் ஸ்பார்ட்டர்களுக்கே உரிய தனிக் கட்டுப்பாடானது எப்படி, எந்தக் காரணங்களால் புகுத்தப்பட்டது என்பது நமக்கு ஒரு வேளை ஒரு பொழுதுமே தெரியக் கூடாததாக இருக்கிறது. இதைப் போலவே நாம் ஸ்பார்ட்டன் சமுதாயத்தை விவரிக்கும்போது அதன் நிறுவனங்களில் பழைய காலத்தவை

எவை, புதியன எவை என்று வித்தியாசப்படுத்த முடியாதவராய் இருக்கின்றோம்.

ஸ்பார்ட்டன் மக்கள் அனைவரும் கூடி ஓர் இராணுவச் சாதியாயினர். ஸ்பார்ட்டாவின் நகரவாசி ஒருவனது வாழ்க்கை அரசு சேவையிலேயே ஈடுபட்டிருந்தது. இந்தச் சிறந்த நோக்கத்தைக் கைகூடச் செய்வதற்காக ஒவ்வொரு குடியையும், தனக்காகவும் தன் குடும்பத்திற்காகவும் பொருள்களைத் திரட்டும் கவலையிலிருந்து நீக்கவேண்டியது அவசியமாயிற்று. சீமான்கள் தங்களுடைய சொந்தக் குடும்ப நிலங்களை உடைமையாகக் கொண்டிருந்தனர். ஆனால் ஸ்பார்ட்டன் பொதுமக்களும் பாகங்களாகப் (lots) பிரிக்கப்பட்ட பொது நிலங்களை வைத்தாண்டனர். ஒவ்வொரு ஸ்பார்ட்டனுக்கும் ஒரு பாகம் கொடுக்கப்பட்டது. இதனை அவர்கள் விற்கவும் பங்கிடவும் கூடாது. இது தகப்பனிலிருந்து மகனுக்குக் கொடுக்கப்பட்டதன் நிமித்தம் ஸ்பார்ட்டன் குடி எவனும் வறுமை நிலைமைக்குத் தாழ்த்தப்பட முடியாது.[2] லாசிடிமோனியர்கள் நிலங்களை எடுத்துக்கொண்டு அடிமைகளாக்கிய பழைய குடிகள், தமது பணிமுதல்வர்களின் நிலங்களைச் சாகுபடி செய்தனர். இந்த நிலப்பகுதியின் (lot) சொந்தக்காரருக்கு ஒவ்வோர் ஆண்டும் எழுபது மீடிம்னை (midimnie)-ஒரு வித அளவு தானியமும், அவரது மனைவியருக்குப் பன்னிரண்டு மீடிம்னை தானியமும், மற்றும் திராட்சை ரசத்திலும் பழவகைகளிலும் பாகங்களும் சேரவேண்டிய பொருள்களாகும். இதற்கு மேல் சாகுபடியாக்கப்பட்ட பொருள் அனைத்தும் ஈலாட்டர்களைச் சேர்ந்ததேயாகும். ஒரு ஸ்பார்ட்டன் இப்படித் தன் தேவைகளைக் குறித்து நினைக்கவே வேண்டியதில்லை. தன் நேரங்கள் யாவையும் பொது வாழ்க்கையைக் குறித்த காரியங்களில் செலவிடலாம். ஈலாட்டர்கள் கடுமையான எஜமானர்களால் விரட்டப்படாமலிருந்தாலும், இவர்களுக்குச் சொந்தத்தில் நிலங்களை வாங்கிக்கொள்ளும் உரிமை இருந்தபோதிலும், இவர்களுடைய நிலைமை மிகவும் கடினமாயிருந்திருக்கலாம். எப்படி இருந்தபோதிலும் இவர்கள் மிகவும் திருப்தியற்றவர்களாகவும், சமயம் கிடைத்த நேரத்தில் கலகம் செய்யவும் காத்திருந்தனர். ஆதிகாலத்திலிருந்து இந்த ஈலாட் முறையானது சகல ஆபத்துகளுக்கும் காரணமாயிருந்தது. மெஸ்ஸீனியன் யுத்தத்திற்குப் பின் இது பதின்முறை மோசகரமானதாயிற்று. தம் நாட்டைச்சுற்றிக் காணப்படும் இந்த ஆபத்தான நிலையின் உணர்ச்சியானது ஒரு

[2] யாது காரணம் பற்றியோ, சில ஸ்பார்ட்டர்கள் நான்காம் நூற்றாண்டில் வறுமை நிலையை அடைந்தனர்.

விதத்தில் ஸ்பார்ட்டர்களைச் சதா காலங்களிலும் இராணுவ ஆயத்தத்துடன் வாழ்ந்து வரச் செய்தது. இந்த ஆபத்தைக் கவனிக்கும்படி கிறிப்ஷியா (Krypteia) அல்லது மர்மக் காவலாளர் கூட்டம் ஒன்று ஏற்படுத்தப்பட்டது—எப்பொழுது என்பது சரியாகத் தெரியவில்லை. தமக்கு அவநம்பிக்கையுள்ள ஒவ்வோர் ஈலாட்டையும் கொல்வதற்கான அதிகாரங்கள் வழங்கப்பட்ட இளம் ஸ்பார்ட்டர்கள் நாடு முழுவதும் அனுப்பப்பட்டனர். ஈலாட்டர்களின்மேல் பொதுவான அதிகாரங்கள் அனைத்தையும் உடைய ஈபார்கள் ஒவ்வோர் ஆண்டும் தாம் பதவியை அடைந்தவுடன் ஈலாட்டர்களின்மேல் போர் தொடுப்போம் என்று பறைசாற்றுவது, இந்த மேல் கூறிய முறையை ஒட்டிய குறிப்பிடத்தக்க ஒரு வழக்கமாகும். இந்த ஏற்பாட்டின்படி இளைஞர்கள் ஒருவிதத் தயக்கமில்லாமலும், மனிதனைக் கொலை செய்கிறோமே என்ற பயமில்லாமலும் ஆபத்தை விளைவிக்கக் கூடிய ஈலாட்டர்களைக் கொல்லலாம். இவ்வித முன் எச்சரிக்கைகள் எடுத்துக்கொண்டபோதிலும் மீண்டும் மீண்டும் பயங்கர கலகங்கள் ஏற்பட்டன. ஒரு ஸ்பார்ட்டனுக்குத் தனது நிலத்தில் வேலை செய்யும் ஈலாட்டிற்குச் சுதந்தரம் வழங்கவோ அல்லது அவனை மற்றொருவருக்கு விற்றுவிடவோ அதிகாரம் இல்லை. அரசுதான் அவர்களுக்கு விடுதலை அளிக்கலாம். போர்க் காலங்களில் ஈலாட்டர்கள் சிறு திறமான ஆயுதங்களை அணிந்த (light armed) போர் வீரராக யுத்தங்களில் பங்கெடுத்தனர். அவர்கள் தமது வலிமையையும் நகரத்தின் மேலுள்ள பற்றுறுதியையும் காட்ட இது ஒரு வாய்ப்பு. எல்லாரும் அறியும்படி புகழ்ச்சிகரமான சேவையைச் செய்யும் ஈலாட் தனது ஊதியமாகிய சுதந்தரத்தை நகரத்தினரிடமிருந்து பெறுவான். இவ்வாறாக நியோடாமோட்ஸ் (neodamodes) அல்லது புதிய தனியுரிமை நிலம் கொண்ட மனிதர்கள் (demesmen) என்ற மீட்கப்பட்ட வகுப்புத் தோன்றிற்று. இங்கு அடிமைகளும் குடிகளுமல்லாத மோதோன்கள் (mothones) என்ற மற்றொரு வகுப்பும் இருந்தது. ஒரு வேளை இவர்கள் குடிகளுக்கும், ஈலாட் பெண்களுக்கும் சட்டத்திற்கு மாறாகப் பிறந்தவர்களாயிருக்கலாம்.

இப்படிப் பிழைப்பைத் தேடும் அவசியமில்லாத ஸ்பார்ட்டர்கள் தம்மை அரசின் நலத்திற்காக ஈடுபடுத்திக் கொண்டனர். யுத்தக் கலையை வளரச் செய்வதே அரசின் நோக்கமாகும். ஸ்பார்ட்டா ஒரு பெரிய இராணுவப் பள்ளியாகும். இங்கு எவ்விதத்திலும் மேம்பாடுள்ள இராணுவத்தை உண்டாக்கும் எண்ணத்துடனே கல்வி, மணம், மற்ற ஒவ்வொரு நாளின் வாழ்க்கை விவரங்கள் யாவும் ஒழுங்குபடுத்தப்பட்டன. ஒவ்

வொரு நகரவாசியும் போர் வீரனாக வேண்டும் என்ற குறிக்கோளைக் கொண்டு அவனுடைய பிறப்பிலிருந்தே கட்டுப்பாடு ஆரம்பித்தது. குழந்தை பிறந்ததும், குலத் தலைவர்கள் அதனைப் பார்வையிட வேண்டும். அவர்கள் அது சுகவீனமானது அல்லது பலவீனமானது என்று கூறினால், சாக அடிப்பதற்காகக் காடுகள் நிறைந்த டேகீடாஸ் (Taygetos) மலைச்சாரலில் அதை எறிந்து விடுவார்கள். ஏழாவது வயதில் அரசியல் அதிகாரி ஒருவரின் கீழ்ப் பையன் விடப்படுவான். அவனுடைய கல்வியானது, அவனைக் கொடுமைகளுக்கு வழக்கப்படுத்தவும், வலிமையான கட்டுப்பாடுகளைத் தாங்கவும், அவனுடைய உள்ளத்திலே தனது அரசின் மேலுள்ள பற்றுறுதியாகிய உணர்ச்சியைப் புகட்டவுமே முழுவதும் ஒழுங்குபடுத்தப்பட்டுள்ளது. இருபது வயதுவரை காளைகள் இராணுவத்தை ஒத்த[3] ஒரு பெரிய பள்ளியில் விடப்பட்டனர். இவர்களுக்குக் கற்பித்தும் இவர்களை அடக்கியாண்டும் வந்த இருபது வயதிற்கு மேலும் முப்பது வயதிற்குக் கீழுமான இளைஞர் தலைவர்கள் (captains) மாணவத் தலைவர்கள் (prefects) என்று அழைக்கப்பட்டனர். ஒருவன் முப்பதாவது வயதை அடைந்தவுடன் அவன் ஸ்பார்ட்டன் குடி உரிமைகளைப் பெறுவான். அடிக்கடி இந்த இளைஞர்களுக்கும், இவர்கள் பயிற்சி கொடுக்கும் காளையர்களுக்கும் இடையே சிறந்த நட்பு ஏற்படுவது வழக்கம். ஸ்பார்ட்டன் வாழ்க்கையில் இந்த ஓர் இடத்தில்தான் காதல் என்பதற்கு இடமிருக்கின்றது.

இருபதாவது வயதில் ஸ்பார்ட்டன் இராணுவ சேவையில் சேருவான். அப்போது அவன் மணக்க அநுமதி பெறுவான். ஆனால் அவன் அப்போதும் வீட்டு வாழ்க்கையை ரசிக்க முடியாது. தனது தோழர்களுடன் இவன் பாளையங்களில் (barracks) வசித்து வந்தான். இவன் ஒருவரும் அறியாமல் திருட்டுத்தனமாகத் தனது மனைவியைச் சந்திக்கலாம். தன் முப்பதாவது வயதில் பயிற்சி யாவையும் முடித்த பிறகு இவன் ஒரு 'மனிதன்' ஆவான். அப்பொழுதுதான் இவன் தனது முழுக்குடி உரிமைகளையும் பெறுவான். ஹாமஹாய் (Hamoioi) அல்லது பிரபுக்கள் என்றழைக்கப்பட்ட ஸ்பார்ட்டன் குடிகள் ஐயாசிந்தியன் (Hyacinthian) தெருவிலுள்ள கூடாரங்களில் சாப்பிடுவர். இந்த உணவுக்

[3] இவர்கள் 'மந்தைகளாக'ப் (herds) பிரிக்கப்பட்டனர். ஒவ்வொரு மந்தையும் பல 'பட்டிகள்' (pens) அல்லது 'படை'களால் ஆயின. பூவா (bua) என்ற தொகுதியை அடத்தியவர் 'பூவாகர்' (buagor) என்றும், இலா (ila) என்னும் தொகுதியின் தலைவர் (captain), இலார்க் (ilarch) என்றும் நழைக்கப்பட்டனர்.

கூடங்கள் (messes) ஆதியில் அண்டிரியா (andreia) அல்லது 'ஆண்களின் சாப்பாடு' என்றும், பிற்காலத்தில் பிடிஷியா (phiditia) என்றும் அழைக்கப்பட்டன. பொதுக் கூடாரத்தில் உள்ள ஒவ்வொருவனும், தனது நிலப் பாகத்திலிருந்து வரும் பார்லி, பால்கட்டி, திராட்சை ரசம், அத்திப்பழம் முதலிய விளை பொருள்களில் தீர்மானிக்கப்பட்ட ஒரு பாகத்தைக் கொடுப்பான். இந்த உணவுக் கூடாரம் ஒன்றில் இருக்கும் மக்கள் யாவரும் யுத்த காலத்தில் ஒரே கூடாரத்தில் வசிப்பர். நகரத்தின் தெய்வங்களுக்காகப் படைக்கப்பட்ட உணவுப்பொருள்களை ஒரு பொதுவான விருந்தாக ஆக்கி அதில் நகரத்தின் பெரு மக்கள் கலந்துகொள்ளும் வழக்கமிருந்தது. இந்த வழக்கத்தைப் போர் நோக்கங்களுக்கு ஏற்ப மாற்றி அமைத்துக்கொண்டதுதான் இந்தப் பொது உணவுக் கூடங்களாகும். ஆதியில் ஸ்பார்ட்டன் ஆப்லிட்டிஸ்கள் எவ்விதமாக அமைக்கப்பட்டனர் என்பதைப்பற்றி நாம் சரியாக அறியோம். ஸ்பார்ட்டன் இளைஞர்களிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட முந்நூறு குதிரை வீரர்கள் அரசனின் மெய்க்காவலரானார்கள். இவர்களுடைய பெயருக்கு ஒப்ப, முதலில் இவர்கள் குதிரையில் சவாரி செய்து வந்தனர். ஆனால் பிற்காலத்தில் இவர்கள் காலாட் படையினரைச் சேர்ந்தவர்கள் ஆயினர். பெரியீக்கையினரும், ஈலாட்டரும் சிறு திறமான ஆயுதங்களை அணிந்த காலாட் படையை (light infantry) யுத்த காலத்தில் கொடுத்தனர்.

திடமான தேகத்தையும், ஸ்பார்ட்டாவின் உணர்ச்சி ஊறிக் கிடக்கும் உள்ளத்தையும் கொண்ட தாய்மாரை உண்டுபண்ணவே இந்த ஸ்பார்ட்டன் கட்டுப்பாடு பெண்களுக்கும் அளிக்கப் பெற்றது. பெண்கள், பிள்ளைகளுடன் சேர்ந்து உடற்பயிற்சி பெற்றனர். இவர்கள் கிட்டத்தட்ட அம்மணமாகத் தமது பயிற்சிகளைச் செய்வது நாணமில்லாததாக எண்ணப்படவில்லை. ஏனைய கிரேக்க அரசுகளில் பெண்கள் ஒதுக்கி வைக்கப்பட்டிருக்கும்போது இவர்கள் சுவாதீனம் பெற்றிருந்தது, குறிப்பிடத் தக்கதாகும். இவர்கள் கற்புக்குப் பேர் போனவர்கள். ஆனால் அரசாங்கம் அரசுக்காக மக்களைப் பெற வேண்டும் என்று கட்டளையிடுமாகில், திருமண நிலையில் ஏற்படும் சீர்கேட்டையும் எண்ணாமல் தயக்கமின்றி அக்கட்டளையைக் கைக்கொள்வர். அவர்கள் தம் நாட்டின் நலத்திற்காகத் தம் தாய் சம்பந்தமான உணர்ச்சிகள் யாவற்றையும்கூடத் தியாகம்செய்ய முற்படுவர். இதுவே இந்த இடத்தின் பண்பாகும்.

இப்படி ஸ்பார்ட்டா தனது நகரத்திற்காகத் தன் முழுப் பலத்துடனும் போர் செய்யக் காத்துக்கொண்டிருக்கும் பெரிய குறிக்

கோளையுடைய மக்களைக் கொண்ட முகாமாக இருந்தது. வலிமை மிகுந்த போர் வீரரை உண்டுபண்ணுவதே ஒவ்வொரு சட்டத்தின் நோக்கமும், முழுச் சமுதாயத்தின் இலக்குமாகும். தனி மக்களிடையே போக வாழ்க்கை என்பது அறவே தடுக்கப் பட்டது. ஸ்பார்ட்டாவின் எளிமை உலகறிந்த உண்மையாகும். அரசாங்கத்தில் அடியோடு அமிழ்ந்து கிடக்கும் ஒரு தனி மனிதனுக்குத் தனது என ஒரு சொந்த வாழ்க்கை இல்லை. அவனுக்கு மனித வாழ்க்கையில் விடை கண்டுபிடிக்க வேண்டிய பிரச்சினை ஒன்றும் இல்லை. சிந்தனையாளர்களுக்கும், சித்தாந்தி களுக்கும் ஸ்பார்ட்டாவில் இடமில்லை. ஒரு ஸ்பார்ட்டனுக்கு அவனுடைய முழுக் கடமையும், உயர் நோக்கமும் அவனுடைய நகரத்தின் சட்டங்களில்தான் காணக்கிடைக்கும், ஸ்பார்ட்டன் சட்டங்கள், நிறுவனங்கள் யாவற்றிற்கும் போர்த் தொழிலே முக்கிய நோக்கமானதால் ஒருவன் எப்பொழுதும் போருக்கு ஆயத்தமாகவே இருப்பதாக, ஸ்பார்ட்டாவைக் கருத முடியும். எந்தவித நோக்கமும் இன்றித் தங்களுடைய அயலாருடன் போரிடத் தயாராக இருப்பதை ஸ்பார்ட்டன் மக்களிடம் எதிர்பார்க்கக்கூடும். ஏனெனில், போர் செய்வது போருக் காகவே என்ற முடிவுடையவர்கள் அவர்கள்; ஆனால் அப்படி யிருக்கவில்லை. மற்ற மனிதர்களைவிட அவர்கள் யுத்தத்தை விளையாட்டாகக் கருதவில்லை. வேட்டையாடுவதையும், சண்டை யிடுவதையுமே தொழிலாகக் கொண்ட காட்டுமிராண்டிகளோடு இவர்களைச் சமமாகக் கருத முடியாது. அவர்களது நிறுவனங் களுக்கு மூலகாரணம் ஓரளவு ஆதிக்கம் செய்யும் சிறு வகுப்பு, மன அமைதியில்லாக் குடிகளின் மத்தியிலும், பகையான அடி மைகளின் மத்தியிலும் இருக்க நேர்ந்த நிலைமையாயிருக்கக் கூடும். அவர்கள் எப்பொழுதும் பெரியீக்கையினரது கலகத்தை யும், ஈலாட்டர்களின் கிளர்ச்சியையும் எதிர்நோக்கித் தயாரா யிருக்க வேண்டும். ஏனென்றால், ஒரு திடீர்த் தாக்குதல் ஸ்பார்ட் டாவின் உயிருக்கே ஆபத்தை விளைவிக்கக்கூடும். பகைமையால் பீடிக்கப்பட்ட நாட்டிலே நிரந்தர முகாமை உண்டாக்கிய இவர்கள், எப்பொழுதும் காவலர் தொழிலைக் கைவிடாது இருக்க வேண்டியதாயிற்று. நடக்கப் போகும் கலகத்தைத் தடுப் பதற்கு மாத்திரமின்றி, வேறு நோக்கத்துடனும் அரசு நிறுவப் பட்டது என்பதை ஸ்பார்ட்டன் அரசியல் அமைப்பில் காணப் படும் உயிர்ச்சக்தி(வலிமை)யையும், பேணி வைக்கும் தன்மை யும் காட்டுகின்றன. இது கிரேக்கருடைய அழகு என்னும் கருத்திற்கு இசைந்திருந்தது. ஸ்பார்ட்டர்களுடைய அரசியல் அமைப்பில் ஒரு நிறைவையும், எளிமையையும் நாம் காண்கின் றோம். சட்டங்களால் கட்டுப்படுத்தப்பட்ட அவர்களுடைய

வாழ்க்கையிலும் இவ்வித நிறைவும் எளிமையும் தென்படுகின்றன. இதே நிறைவையும் எளிமையையும் அவர்கள் பண்படுத்தியுள்ள அவர்களின் குண இயல்பில் காண்கின்றோம். இந்த இயல்பு ஏனைய கிரேக்கர்களை உண்மையான, ஆனால் நெருங்கிப் பழகாத வியப்புடன் சிந்தனை செய்யச்செய்தது. ஸ்பார்ட்டா பல பிரிவு கள் கொண்ட லாசிடீமன் பொந்தில் இந்த உலகத்திலிருந்து வெளியே தள்ளி அடைபட்டு, ஏனைய கிரேக்க நகரங்களின் முன்னேற்றத்தில் பங்கெடுக்காமல் இருந்தது பிரமைகொண்டு நிற்பதுபோல் தோன்றியது. கிராமங்களாகப் பிரிந்தும், தன்னைச் சுற்றிச் சுவர்கள் இன்றியும் பகட்டாகத் தோன்றுமலும் இருக்கும் இந்த ஸ்பார்ட்டா நகரத்தை ஐந்தாவது நூற்றாண்டில் ஆதென்ஸ் அல்லது மைலீட்டஸ் நகரத்தைச் சேர்ந்த அயலான் ஒருவன் சுற்றிப் பார்க்க நேருமானால், தீரமும், சிறப்பும், எளிமையும் கொண்டு செல்வத்தினால் இறுமாப்படையாமலும், கருத்துக் களினால் அசைக்கப்படாமலும் இருக்கும் மக்களால் வேறொரு யுகத் திற்கே தான் கொண்டுபோகப்பட்டதுபோல் அவன் எண்ணுவான். அரசியலில் ஆழ்ந்து ஆராய்ச்சி செய்யும் பிளேட்டோ (Plato) போன்ற தத்துவப் பேரறிஞர்களுக்கும் ஸ்பார்ட்டா உயர் குறிக் கொண்ட அரசியலை (ideal state) மிகவும் நெருங்கிக் காணப்படு கிறது என்கிற எண்ணத்தை உண்டுபண்ணும். சாதாரண கிரேக் கன் ஒருவன் இதன் அமைப்புத் தீவிரத்தையும் அதே நேரத்தில் எளிமையையும் ஒருங்கே கொண்டுள்ளதென்றும், இந்த டோரிய நகரம், டோரியக் கோவில்கள்போல் கம்பீரமான தோற்ற முள்ளதென்றும், தன்னுடைய சொந்த இருப்பிடத்தைவிட மிக உயர்தரமானதென்றும், ஆனால் வசிப்பதற்கு வசதி குறைவான தென்றும் கருதுவான். அயலார்களே இவ்விதமாக யோசித்தால், ஸ்பார்ட்டன் பிரபு ஒருவன் தன் நகரத்தின் அரசியல் அமைப்பை ஆராயுங்கால் அவன் எவ்வளவு நிலைத்த ஆனந்தம் கொண் டிருப்பான் என்று நாம் யோசிக்கக் கூடும். மற்றக் குடிகளைவிடத் தான் உயர்ந்த நிலையில் உள்ளவன் என்ற எண்ணமும், நகரத்தின் உயர்குறியை நோக்கி வாழ்கின்றேன் என்ற பெருமையும் பிரபுக் களுக்குக் கொடுக்கப்பட்டுள்ள கடமைகளைக் நிறைவேற்றுகிறேன் என்ற உணர்ச்சியும் அவனுக்குத் தீராத ஆனந்தத்தை விளைத் திருக்கும். ‘அழகில்லாதது’ என்ற அவனுடைய சொல்லுக்கு, அப்பல்லோவினால் ஊக்கம் கொடுக்கப்பட்ட ஸ்பார்ட்டாவின் சட்டங்களுக்கு விரோதமாக நடப்பது என்பது பொருளாகும். தங்களது அரசியல் அமைப்பு இலட்சியம் மிக்க அழகிய படைப்பு என்று அவர்கள் பெருமையடைந்தார்கள். அதை எந்த வழியி லும் சிறப்புறச் செய்ய முடியாது என்றும் அவர்கள் தீர்மான மாக நம்பினார்கள். இது ஸ்பார்ட்டர்களின் பழமை விரும்பும்

தன்மையினுல் ஏற்பட்டது. உண்மையில் இந்த வகை நம்பிக்கை யானது அவர்களது அரசியல் அமைப்புப் பூரணமாக நிறைவேறத் துணை புரிந்தது. மகா அலெக்ஸாண்டர் காலம்வரை இரும்பு நாணயங்களை[4] உபயோகித்தது அவர்களின் பழமை விரும்பும் பண்பை வெளிப்படையாகக் காட்டுகின்றது.

காலப் போக்கில் இவைகளில் பல உதிர்ந்து காணுமல் போவதும், கடுமையான சட்டங்கள் வெளிப்படையாயில்லாத கருத்து ஒற்றுமையின் பயனுல் புறக்கணிக்கப்படுவதும் தவிர்க்க முடியாத உண்மைகள். ஏனைய கிரேக்கர்களுக்கு ஸ்பார்ட்டர்களின் அமைப்பில் காணப்படும் குற்றங்களை எடுத்துக் காட்டுவதில் ஒரு தனி ஆர்வம். முதலிலிருந்தே குடி உரிமையுள்ள ஒருவன் தனக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் நிலப் பாகத்தைத் தவிர, பிற பாகங்களையும் தனதாக்கிக் கொள்ளும் உரிமை அநுமதிக்கப்பட்டதாகத் தெரிகின்றது. இந்த நிலப்பாகங்கள் (lots) பழைய நிலப்பாகங்களைப் போலில்லாமல், உடைமை மாற்ற முடியாதனவாயும், விற்கவும், பிரிக்கப்படவும் தக்கனவாயுமிருந்ததால் மக்களிடையே இயல்பாகவே பணச் செருக்கினுல் சமமின்மை ஏற்பட்டது. இதனுல் குடிகளின் வாழ்க்கையில் காணப்படும் 'பொது உடைமை' (communism) மேலீடானதேயாகும். ஸ்பார்ட்டன் எவனும் பொன் அல்லது வெள்ளியைக் கொண்ட செல்வத்தை வைத்திருக்கக்கூடாது என்று ஒரு தனிச் சட்டம் கூறிற்று. முதலில் இந்தச் சட்டத்திலிருந்து நழுவித் தப்ப ஸ்பார்ட்டர்கள் வெளியூர்க் கோவில்களில் தமது செல்வத்தைச் சேமித்து வைத்தனர். பின் கால அளவில் இந்தச் சட்டம் உயிரற்றதாயிற்று. கிரீஸ் முழுவதிலும் ஸ்பார்ட்டர்கள் பேரவாவிற்கு ஓர் எடுத்துக்காட்டாய் நின்றனர். நான்காம் நூற்ருண்டில் அவர்கள் சீர்கேடுற்றனர். இந் நிலையில் லாசிடேமோனிய அரசியலமைப்புப்பற்றி எழுதியவர்கள் ஸ்பார்ட்டாவைப் பொறுத்தவரை, அது எவ்வாறு இருந்தது, எவ்வாறு இருக்கவேண்டும் என்பதையும், உண்மையில் எவ்வாறுள்ளது என்பதையும் ஒப்பிட்டெழுதினர்.

இந்த ஸ்பார்ட்டன் கடுப்பாடு முறையானது படிப்படியாக வளர்ந்தது என்பதற்குச் சந்தேகமேயில்லை. ஆயினும், இதன் நோக்கம், திட்டம் முதலியவைகளை ஆராய்ந்து நோக்குமிடத்து, இது ஒரே சட்ட முதல்வரால் உண்டாக்கப்பட்டிருக்கக் கூடும் என்று நம்பக்கூடிய விதமாக விவாதிக்கலாம். இதன் எல்லாப் பாகங்களும் எவ்விதமாக இணைக்கப்பட்டிருக்கின்றன, எப்படி ஒன்றை ஒன்றை சார்ந்திருக்கின்றன என்பதை நாம் காணலாம்.

[4] ஓபல் (obel), பெலானுர் (pelanor) என்ற நாணயங்கள்.

இந்தச் சமுதாயத்தின் முழுக் கட்டுப்பாட்டிற்கும் ஈலாட்டர்கள் இருக்க வேண்டியது முக்கியத் தேவையாயிற்று. அதுபோலவே ஈலாட்டர்கள் இருந்ததனுல்தான் இந்தக் கட்டுப்பாட்டிற்குத் தேவை ஏற்பட்டது. அரசியல் அமைப்பில் ஈபாரேட் உயிர் நாடி (keystone) போல் தோன்றுகிறது. ஒருவர், இந்த இரட்டை முடியரசில் இரு மன்னர்களும் பொறுமையால் பீடிக்கப்பட்டிருக்கும் போது தந்திரமாக ஈபார்களின் அதிகாரங்களைப் பெறுவதற்குரிய வஞ்சக நோக்கத்தைக் காணலாம். இந்த முழு அமைப்பிலும் ஒவியர்கள் கையாளும் ஒற்றுமையைப் போன்ற ஓர் இயல்பை நோக்குங்கால் இவை யாவும் ஒரே மனத்திலிருந்து தோன்றியவை என்று வாதிக்க இடமிருக்கின்றது. இதுவே, சில காலத்திற்கு முன்வரை நம்பப்பட்ட எண்ணமாகும். பலர் இப்பொழுதும் இந்த நம்பிக்கை வைத்திருக்கின்றனர். லைக்கர்கஸ் என்ற ஒருவர் ஒன்பதாவது நூற்றுண்டின் ஆரம்பத்தில் ஸ்பார்ட்டன் நிறுவனங்களை நிறுவினுர் என்றும், ஸ்பார்ட்டன் சட்டங்களை இயற்றினுர் என்றும் சொல்லப்படுகிறது.

ஆனுல் லைக்கர்கஸ் என்னும் ஸ்பார்ட்டன் சட்ட முதல்வர் இருந்தார் என்று காட்டும் ஆதாரங்களே இப்போது வாதிக்கப்படுகின்றன. அரசியல் அமைப்பின் ஆரம்பத்தைப்பற்றிய ஆதி அறிக்கைகள் ஐந்தாம் நூற்றுண்டிலிருந்து காணப்படுகின்றன. ஆனுல் இவைகளிலுள்ள முரண்பாடு, இவைகள் யாவும் உத்தேசங்கள் என்றும், அரசியல் அமைப்பின் உண்மையான துவக்கங்கள் இருளடைந்த தொன்மையான காலங்களிலே புதைக்கப்பட்டுக் கிடக்கின்றன என்றும் காட்டுகின்றன. டோரிய கோத்திரங்களின் முன்னேரான ஈஜிமஸ் (Aegimus) இந்த லாசிடிமோனிய நிறுவனங்களுக்குக் காரணர் என்று பிண்டார் (Pindar) கூறுகிறுர். இவை ப்ராக்ளிஸ் (Procles), யூரிஸ்தீனிஸ் (Eurysthenes) என்னும் முதல் இரண்டு ஸ்பார்ட்ட அரசர்களின் வேலைப்பாடுகள் என்று வரலாற்றுப் பெரியார் ஹெலானிக்கஸ் கூறுகிறுர். உத்தேசங்களைக் குறிப்பிடத் தயாராக இல்லாத அதிநுட்பமான தூஸிடைடிஸ் (Thucydides) பெலோப்போனீஸஸ் யுத்தத்தின் முடிவிலிருந்து 400 ஆண்டுகளுக்கு முன் இந்த லாசிடிமோனிய அரசியல் அமைப்பு இருந்தது எனச் சொல்லி மனநிறைவு கொண்டுள்ளார். ஸ்பார்ட்டர்கள் லைக்கர்கஸ் தங்களுடைய ஆதி மன்னர்களில் ஒருவருக்கு முதுகணர் என்றும், இவர் கிரீட் தீவிலிருந்து சட்டங்களையும் நிறுவனங்களையும் ஸ்பார்ட்டாவில் புகுத்தினர் எனச் சொல்லுகிறுர்கள் என்றும் ஏரோடட்டஸ் (Herodotus) கூறியுள்ளார். இந்த வரலாற்றுப் பேரறிஞரின் சம காலத்தவர்களின் விதவிதமான விவரங்கள் யாவும் லைக்கர்கஸ்ஸையே புறக்கணித்துள்ளன.

எனவே, இவைகள் யாவும் ஊகங்களேயன்றி ஏற்றுக்கொள்ளப்பட்ட பரம்பரை மரபுகள் அல்ல என்று தோன்றுகின்றன. பழைய ஸ்பார்ட்டன் கவிஞரான டர்டியஸ் (Tyrtaeus) லைக்கர்கஸ்ஸை ஒரு சட்ட முதல்வர் என்று குறிப்பிட்டிருந்தால், இவருடைய வார்த்தைகளைப் பின் தோன்றிய எழுத்தாளர்கள் மேற்கோள் காட்டியிருப்பர். ஆகையால் அவர் அப்படிப்பட்ட பரம்பரை மரபு ஒன்றையும் அறிந்திலர் என்று நாம் கூற இடமிருக்கின்றது.

ஆகையால் லைக்கர்கஸ் (லைக்கோ-வார்கோஸ் (Lyco-vorgos) ஒரு மனிதரல்ல, அவர் ஒரு கடவுள் என்ற கோட்பாடு தோன்றியுள்ளது. அவர் ஓர் ஆர்க்கேடியக் கடவுள் அல்லது 'வீரன்' (hero)- இவருடைய பெயருக்குப் பொருள் 'ஓநாயை விரட்டுபவர்'(wolf-repeller) என்பதாயிருப்பதால் ஓநாய் மலைக் கடவுளாகிய (god of the wolf mountain) ஆர்க்கேடியன் ஸீயூஸ் லைக்கியஸ்(Arcadian Zeus Lycaeus)ஸின் ஒரு தோற்றம் எனப்படுகிறார். இவருக்கு லாசிடிமோனில் ஒரு கோவில் (shrine) இருந்தது; அங்கே இவர் இறை வணக்கம் பெற்றார். ஸ்பார்ட்டர்கள் இவரது வழிபாட்டைத் தாம் வென்ற ஆதிக் குடிகளிடமிருந்து பெற்றிருக்கக் கூடும் என்று ஊகிக்கப்படுகின்றது. இவர் ஒலிம்பியா(Olympia)வுடனும் தொடர்பு கொண்டிருக்கலாம். ஏனென்றால், இவருடைய பெயர் அங்குள்ள பழைய கேயிட் (quoit) எனப்படும் ஒரு வகை இரும்பு வட்டத்தில் - இபிடஸ்(Iphitus)ஸின் கேயிட் என்று அழைக்கப்படும் இரும்பு வட்டத்தில் - பொறிக்கப்பட்டுள்ளது. இது ஏழாவது நூற்றாண்டைச் சேரலாம். இக் கடவுள் ஸ்பார்ட்டாவைச் சேர்ந்த ஒரு சட்ட முதல்வர் என்ற நம்பிக்கை டெல்பிக் (Delphic) தெய்வ மொழியால் பிறப்பிக்கப்பட்டு, படிப்படியாகப் பரவி, நான்காம் நூற்றாண்டில் பொதுவாக நிலவி வந்தது. இதனை நம்பிய அரிஸ்டாட்டில் (Aristotle) லைக்கர்கஸ்ஸின் சட்டங்கள் எட்டாம் நூற்றாண்டின் முதல் பாகத்தைச் சேர்ந்தவை என்று முடிவுகட்ட இந்தப் பழைய கேயிட்டை உபயோகித்துள்ளார். யாவரும், லைக்கர்கஸ் ஒருவராலும் மறுக்கப்படக் கூடாத வரலாற்றில் காணப்படும் பெரியார் என்று கருதியபோதுங்கூட நேர்மையான ஆராய்ச்சிகள் அவரைப்பற்றி ஒன்றும் திட்டமாகக் கூற முடியாததை ஒப்புக்கொண்டுள்ளன. அவருடைய கால வரையறையைப் பற்றிய கருத்துகள் பலவாகவும், வெவ்வேறானவைகளாகவும் தோன்றுகின்றன.

## 4. கிரீட்டன் அரசியல் அமைப்புகள்

அரசியல் அமைப்பு வரலாற்றைப் பயின்ற பழைய கிரேக்க நூலாராய்வாளர், ஸ்பார்ட்டாவின் அரசுக்கும் கிரீட்டன் அரசுக்

கும் உள்ள தெளிவானதும் குறிப்பிடத் தக்கதுமான ஒற்றுமைகளைக் கண்டு திடுக்கிட்டனர். குறிப்பிடத்தக்க ஒற்றுமை வேற்றுமைகள் இருந்தபோதிலும், அநேகர் ஸ்பார்ட்டாவின் அரசியல் அமைப்பு, கிரீட்டன் அரசியல் அமைப்பிலிருந்து எடுக்கப்பட்டது என்று நம்புகின்றனர். இவ்விடத்திலேயே இந்தத் தீவின் அரசியலைச் சார்ந்த சில உண்மைகளை அறிந்துகொள்வது வசதியாகும். நாம் அடிக்கடி இத்துணைக் காரியத்தைச் செய்ய முடியாது-ஏனென்றால், தனது புவியியலில் காணப்படும் அமைப்பினாலும் அரசியலில் ஒற்றுமையின்மையாலும் இத் தீவு பேராறு போன்ற கிரேக்க வரலாற்றிலிருந்து பின்வாங்கப்பட்டும் பின்பு பிரிக்கப் பட்டும் போயிற்று. ஓடிசி நூலின் ஒரு பகுதியில் கிரீட் மக்கள் அக்கியர்கள், இடியோ கிரீட்டர்கள் (Eteo-Cretans), சைடோனியர்கள் (Cydonians), டோரியர்கள், பெலாஸ்ஜியர்கள் என்று ஐந்து வகுப்பினர்களாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றனர். இவர்களில் இடியோ-கிரீட்டர்கள், கார்பேதஸில் (Carpathus) உள்ள இடியோ கார்பேதியர்களைப்போல் (Eteo-Carpathians), கிரேக்கர்கள் இத் தீவிற்கு வருமுன் இருந்த ஆதிக் குடிகளாம். இவர்கள், முக்கியமாக இத் தீவின் கிழக்குப் பகுதியில் பிழைத்து வாழ்ந்தனர். அங்கே இவர்கள் வரலாற்றுக் காலத்திலும் தமது மொழியைப் பேசி வந்தனர். ஆனால் எழுதும்போது தமது கோடுகளாலாகிய எழுத்துக்களை விட்டுவிட்டுக் கிரேக்க எழுத்து வடிவங்களை உபயோகிக்கலாயினர். தங்களது முக்கிய நகரமாகிய பிரிஸஸ்(Praesus)ஸில் இவர்களுடைய மொழியில் பொறிக்கப்பட்ட சில எழுத்துக்கள் காப்பாற்றி வைக்கப்பட்டுள்ளன. ஆனால் இவைகளை அர்த்தப் படுத்திக்கொள்ள நமக்கு வழியேதுமில்லை. சைடோனிய மக்களும் ஒரு வேளை ஆதிக்குடிகளின் மரபில் தோன்றியிருக்கலாம். அக்கியர்களும், பெலாஸ்ஜியர்களும் தெசலியிலிருந்து வந்திருக்கலாம். இங்குக் காணப்படும் சில இணைப்புகள் (links) கிரீட்டன் நகரங்களைப் பிர்ஹாபியாவுடன் இணைப்பதுபோல் காணப்படுகின்றன. தெசலியில் ஆதியில் குடியேறிய மக்கள் கிரீட்டை அடைந்திருக்கக் கூடும் என்று நாம் எண்ண இடமிருக்கின்றது.

இங்கு முக்கியமாகக் குடியேறியவர்கள் கிரேக்க இனத்தைச் சேர்ந்த டோரியர் ஆவர். இவர்களை ஐல்லீஸ் (Hylleis), பாம்பிலி (Pamphyli), டைமேனஸ் (Dymanes) என்ற இவர்கள் மூன்று கோத்திரங்களின் பெயர்களால் எளிதில் அறிந்து கொள்ளலாம். நாம் இம் மூன்று கோத்திரப் பெயர்கள் கிரீட்டன் நகரங்களில் ஊறிக் கிடப்பதைக் காணலாம். நாம் முன்பு கவனித்தபடி டோரிய நாடோடிக் கூட்டங்களை ஏற்றுக்கொண்ட இடங்களில் கிரீட் தீவும் ஒன்றாகும். பிற்காலத்தில் மற்றும் ஒரு

முறை டோரிய வமிசம் கலக்கப் பெற்றிருப்பதுபோல் இருக்கிறது. ஆர்காலிஸ்ஸிலும் லாக்கோனியாவிலுமிருந்து புதிய குடியேறிகள் தோன்றிப் பழைய மக்களுடன் கூடிப் பல நகரங்களைத் திரும்பவும் அமைத்தனர். இப்படித் தீவின் தெற்குப் பாகத்தில் லீதியஸ் (Lethaeus) நதி தீரத்தில் கோர்டின் (Gortyn) திரும்பி அமைக்கப் பெற்றது. ஹோமரின் செய்யுளில் இடம் பெற்ற காரணத்தால் புகழை அடைந்ததும், கோர்டின் அயலகத்ததுமான பீஸ்டோஸ் (Phaestos) ஆர்காலிஸ்ஸிலிருந்து வந்த புது மக்களால் படையெடுக்கப்பட்டது. தீவின் மத்திய பாகத்தில் அமைந்து ஹோமரின் செய்யுளால் புகழ் பெற்ற 'நன்ருகக் கட்டப்பட்ட லிட்டஸ்(Lyttus) ஸம்' வடமேற்குப் பாகத்தில் வேட்டையாடும் தேவதை அடிக்கடி தங்கியிருக்கும் நகரமும் 'ஆடுகள் நிறைந்ததுமான' பாலிற்ரேனியன்(Polyrrhenion) என்னும் நகரமும், லாக்கோனியர்களால் குடியேறப்பெற்றன. மைனஸின் 'பெரிய நகரம்', 'அகலமான நகரம்' என்றெல்லாம் அழைக்கப்பட்ட நாஸாஸ் திரும்பவும் டோரிய மக்களால் குடியேறப்பெற்றது. இந் நகரம் தனது பழைய பகட்டை அடையாவிட்டாலும், கிரீட்டில் முதல் நகரமாக விளங்கிற்று.

இந்தத் தீவு முதலில் லாசிடீமோனியாவையும் ஆர்காஸையும் வென்ற டோரியர்களால் குடியேறப் பெற்று, மறுமுறையும் அதே மக்களால் குடியேறப் பெற்றதனல் டோரியர்களை இரட்டிப்பாகப் பெற்றது எனலாம். எனவே, லாக்கோனிய நிறுவனங்களுக்கும் கிரீட்டன் நிறுவனங்களுக்கும் ஒற்றுமைகள் இருப்பது இந்த இரட்டைக் காரணத்தாலாகும் எனலாம். ஒவ்வொரு கிரீட்டன் நகரத்திலும் சில சிறுநிலப் பகுதிகளில் சில வேறுபாடுகளை நாம் காண்பது உண்மையாகும். ஆனல் பொதுவான ஒற்றுமைகள் நெருங்கிக் காணப்படுவதால் நாம் ஆதி மக்களின் சுவடுகளைப் பின்பற்றி ஒரு பொதுவான கிரீட்டன் அரசியல் முறையைப் பாவனை செய்துகொள்ளலாம்.

கிரீட்டன் அரசில் வீரர்கள் (warriors) என்றும், அடிமைகள் (serfs) என்றும் மக்கள் இரு வகுப்பாகப் பிரிக்கப்பட்டனர். சில சமயங்களில் ஒரு நகரம் மற்ருெரு நகரத்தை வென்ருல், வெல்லப்பட்ட அந் நகரத்து மக்கள் லாக்கோனியப் பெரியீக்கியரது இடத்தைப் பெற்று மூன்ருவது வகுப்பு ஒன்றை ஏற்படுத்தினர். ஆனல் இவை மிகவும் அபூர்வம். பொதுவில் கிரீட்டிற்கும் ஸ்பார்ட்டாவிற்கும் உள்ள வித்தியாசம் யாதெனில், கிரீட்டில் பெரியீக்கை வகுப்பு இல்லை. அடிமைகள் நாய்டாய் (mnoitai) அபமீயோடாய் (aphamiotai) என இருவகைப்பட்டனர். நாய்டீஸ் (mnoites) அரசுக்குச் சொந்த

மானவர்கள். ஆனல் அபமீயோடீஸ் (aphamioties)—இவர்களுடைய வேறு பெயர் கிளாரோடிஸ் (clarotes) அல்லது நிலப் பாகத்தின் மனிதர் (lot-men)—குடிகளின் நிலப் பாகங்களுடன் சேர்க்கப்பட்டவர்கள்; ஆகையால் இவர்கள் குடிகளுக்குச் சொந்தமானவர்கள். இந்த அடிமைகள் ஸ்பார்ட்டன் ஈலாட்டர்களைப் போல் தாமே நிலத்தைச் சாகுபடி செய்ததுமன்றித் தனிச் சொத்துரிமைகளையும் பெற்றிருந்தனர். இவர்களின் கடமைகள் யாவை என்று நமக்குச் சரியாகத் தெரியாதபோதிலும், சில வழிகளில் இவர்கள் லாக்கோனிய அடிமைகளைக் காட்டிலும் ஒரு மேல் பதவியை அடைந்திருந்தனர் என்று தெரிய வருகிறது. பாஸ்டாஸ் (pastas) அல்லது கிரீட்டன் அடிமையின் தலைவன் பிள்ளைகளின்றி மரணமடைந்தால், அடிமைக்கு அந்தச் சொத்தில் ஒரு பாகம் உண்டு. அவன் சட்டப்படி திருமணம் செய்து கொள்ளலாம். அவனுடைய குடும்பமும் சட்டப்படி ஏற்றுக் கொள்ளப்படும். படைக்கலன்களை அணிவதும், தேகாப்பியாசப் பயிற்சிகளைப் பயிற்சிக் கூடங்களில் செய்வதும் ஆகிய இந்த இரண்டு உரிமைகளிலிருந்து கண்டிப்புடன் இவர்கள் விலக்கப்பட்டனர். கிரீட்டன் அடிமைகளின் நிலைமை ஈலாட்டர்களின் நிலைமையைக் காட்டிலும் பொறுக்கக் கூடியதே. ஆகையால்தான் கிரீட்ட அடிமைகள் கலகம் பண்ணினார்கள் என்று நாம் கேள்விப்படுகிறதில்லை. கிரீட்டர்களின் புவியியல் சூழ்நிலைகள் தங்களுடைய அடிமைகளை யுத்த சேவையிலிருந்து தள்ளிவிட ஏதுவாயிருந்தன.

கிரீட்டன் முடியாட்சிக் காலத்தைப்பற்றி நாம் ஒன்றும் அறிந்திலோம். ஆறுவது நூற்றாண்டில் முடியாட்சி உயர்குடியாட்சிகளால் அழிக்கப்பட்டதை நாம் கண்ணுற்றோம். காஸ்மாய்(kosmoi)கள் என்றழைக்கப்பட்ட, ஆண்டுதோறும் தேர்ந்தெடுக்கப்பட்ட பத்து நடுவர்களிடம் நிர்வாக அரசாங்கங்கள் கொடுக்கப்பட்டன. காஸ்மாய்கள் சில முக்கியமான குலங்களிலிருந்து (ஸ்டார்டாய்—startoi) தெரிந்தெடுக்கப்பட்டனர். மன்னரின் யுத்த சம்பந்தமானவையும் மற்றுமுள்ள பிற கடமைகளும் இவர்களுக்குக் கொடுக்கப்பட்டன. இவர்களுக்கு ஆலோசனை அளிக்கப் பழைய காஸ்மாய்களிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட பெரியார்கள் சபை ஒன்று இருந்தது. காஸ்மாய்களும் சபையும் ஏற்றுக்கொண்ட தீர்மானங்கள் அகோராய் (agorai) கள் அல்லது குடிகளது பொது அவைகளில் சமர்ப்பிக்கப்பட்டன. இந்தச் சபைகளுக்குத் தீர்மானங்களைக் கொண்டு வரவோ அல்லது அவைகளின்மேல் வாதாடவோ உரிமைகள் இல்லை. இவை தம்

முன் வரப்பட்ட தீர்மானங்களை எடுத்துக்கொள்ளவோ அல்லது தள்ளவோதான் கூடும் (vote).

பல கிரீட்டன் நகரங்களில் காணப்படும் இந்த அரசியல் அமைப்புக்கும் ஸ்பார்ட்டன் அரசியல் அமைப்புக்கும் இடையே சில மேலீடான ஒற்றுமைகள் காணப்படுகின்றன. கிரீட்டன் அகோரா, பெரியோர்களின் சபை அல்லது ஜெரூஷியா, காஸ்மாய்கள் முதலியன ஸ்பார்ட்டன் அப்பெல்லா, ஜெரூஷியா, ஈபார்கள் முதலியவற்றை ஒத்திருக்கின்றன. கிரீட்டில் மன்னர்கள் இல்லாதது ஒரு தெளிவான வித்தியாசம். மற்ருெரு முக்கியமான வேறுபாடும் உளது. ஸ்பார்ட்டன் அரசியலமைப்பில் உள்ள குடியாட்சித் தனிச்சிறப்புக் கிரீட்டனில் இல்லை. ஈபார்கள் எல்லாக் குடிமக்களிலிருந்தும் தேர்ந்தெடுக்கப்பெற்றனர். ஆனால் கிரீட்டனில் காஸ்மாய்கள் சில பிரபு இனங்களிலிருந்துதான் தேர்ந்தெடுக்கப்பட முடியும். கிரீட்டன் ஜெரூஷியா, காஸ்மாய்களிலிருந்துதான் தேர்ந்தெடுக்கப்படுவதன்மூலம் நாம் கிரீட்டில் அதிகாரம் அனைத்தும் சில பிரபு இனங்கள் அல்லது குடும்பங்களில் தான் இருந்தது என்று உறுதியாகக் கூறலாம். இப்படி, கிரீட்டன் அரசு ஒரு நெருங்கிய உயர்குடி யாட்சியாகும்.

இவ் விரண்டு நாடுகளின் சட்டங்களும் நிறுவனங்களும், போர் வீரர்கள் கொண்ட வகுப்பு ஒன்றை ஏற்படுத்த முற்பட்டதே ஸ்பார்ட்டாவுக்கும் கிரீட்டுக்கும் உள்ள ஓர் உண்மையான ஒற்றுமை. சிறுவர் வாசிக்கவும் எழுதவும் சட்டத்தால் குறிக்கப்பட்ட சில பாடல்களை நினைவிலிருந்து சொல்லவும் கற்றுக்கொடுக்கப்பட்டனர். ஆனால் அவர்களின் முக்கியப் பயிற்சி உடலைக் குறித்ததேயாகும். ஏனென்ருல், அவர்களின் முக்கிய நோக்கம் அவர்களை நல்ல படை வீரர்களாக்குவதேயாகும். பதினேழாவது வயதில் அவர்கள் அஜிலாய்கள் (agelai) என்ற மந்தைகளில் சேர்க்கப்பட்டனர். இந்த அஜிலாய்கள் பிரபுக்களின் மக்களால் அமைக்கப்பட்டு அரசின் வருமானங்களிலிருந்து ஆதரிக்கப்பட்டன. இந்த அஜிலாய் ஸ்பார்ட்டன் பூயாயை ஒத்திருக்கின்றது. இந்தச் சங்கங்களின் உறுப்பினர் தமது உடற் பயிற்சியை ட்ரோமாய்கள் (dromoi) என்ற பயிற்சிக் கூடங்களில் பயின்றதால் இவர்கள் ட்ரோமீஸ்கள (dromeis) என்றழைக்கப்பட்டனர். பெரு நாட்கள் கொண்டாடப்பட்டன. இந் நாட்களில் யாழ், குழல் முதலிய வாத்திய இசைகள் முழங்க, மந்தைகளினிடையே போலி (sham) யுத்தங்கள் நடைபெற்றன. சட்டப்படி ட்ரோமியஸ் வயதிற்கு வந்தவனுவான். அவன் திருமணம் செய்துகொள்ளக் கடமைப்பட்டவனுவான். ஆனால் அவன் ட்ரோமியஸ் நிலையிலிருந்து 'மனிதன்' ஆகும்வரை அவனுடைய மனைவி அவளுடைய தகப்பனுருடைய

இல்லத்திலோ அல்லது அவளுடைய சொந்தக்காரருடைய இல்லத்திலோதான் வசித்து வருவாள். ஸ்பார்ட்டாவிலுள்ள பிடிஷியாவை ஒத்தது கிரீட்டன் ஆண்டிரியா. 'மனிதர்' இந்த உணவுக் கூடங்களில் சாப்பிட்டு வந்தனர். சிறுவர்களும் இதில் சேர அனுமதிக்கப் பெற்றனர்.[5] இந்த உணவின் எல்லாச் செலவுகளையும் ஸ்பார்ட்டாவைப் போல் மக்களே செலவழிக்கவில்லை; ஆனால் ஒரு பகுதியை அரசே கொடுத்து வந்தது. அரசு பெண்களின் உணவுக்காக முன்னேற்பாடுகள் செய்திருந்தது. இம்மாதிரியான செலவுகளையும், பிற பொறுப்புகளையும், கடவுளரது வழிபாடுகளை நடத்துமிடத்து ஏற்படும் செலவுகளையும் கவனித்து நடத்த உதவும் பொது வருமானமானது பொது நிலங்களை நாய்ட்ஸ்கள் சாகுபடி செய்து அரசாங்கத்திற்குக் கொடுக்கும் தொகைகளேயாகும். இந்தப் பொது நிலம், குடிமக்களிடம் பாகங்களாகப் பிரித்துக் கொடுக்கப்பட்டிருக்கும் நிலங்களின் வேறானது. கட்டுப்பாடு, குடிமக்களின் கல்வி, மனிதர்களுக்கான பொது உணவு ஏற்பாடுகள், பொது அரசியல் நோக்கங்கள் என்பவைகளில் ஸ்பார்ட்டாவிற்கும் கிரீட்டிற்கும் நெருங்கிய குறிப்பிடத் தக்க ஒற்றுமை இருந்தது. ஆனால் மற்றக் காரியங்களில் மிக்க வேறுபாடுகள் காணப்பட்டன.

(1) கிரீட்டில் பொதுவாகப் பெரியீக்கையர்கள் இல்லை; (2) ஈலாட்டர்களைப் பார்க்கிலும் கிரீட்ட அடிமைகள் மேலான சூழ்நிலைகளில் வசித்து வந்தனர். ஆகையால், அவர்கள் இடைவிடாத அபாயமாகத் தோன்றவில்லை; (3) கிரீட்டில் முடியாட்சி பிழைத்து வாழவில்லை. எனவே, (4) ஸ்பார்ட்டாவில் மன்னர்களுக்கும் ஈபார்களுக்கும் பிரித்துக் கொடுக்கப்பட்ட அதிகாரங்கள் யாவும் இங்கே காஸ்மாய்களிடம் ஒன்று சேர்க்கப்பட்டன; (5) கிரீட்டன் அரசு ஓர் உயர்குடி யாட்சியாகும். ஸ்பார்ட்டாவில், நகரத்தைப் பொறுத்த வரையில், கட்டுப்பட்ட குடியாட்சியாக இருந்தது. இந்த வித்தியாசத்தை நாம் (6) காஸ்மாய்களையும் ஈபார்களையும் தெரிந்தெடுக்கும் முறைகளிலிருந்து எளிதில் கண்டு கொள்ளலாம்; (7) அரசியல் களஞ்சியங்கள் குடிமக்களைப் பேணிக் காப்பாற்றுவதற்காகச் செலவின் அதிகமான பங்கைக் கொடுத்து உதவியதால், கிரீட்டில் ஸ்பார்ட்டாவைவிட முன்னேற்றமடைந்த பொதுவுடைமை இருந்ததாகத் தெரிகிறது. கிரீட்டில்மட்டும் ஏதாவது ஒரு நகரம் மற்ற நகரங்களைத் தனக்குக் கீழ்ப்படியச் செய்து ஆதிக்கம் செலுத்தியிருக்குமானால்

[5] குடிமக்கள் ஹெட்டெய்ரியாய் (hetairiai)களாகப் பிரிக்கப்பட்டனர். ஒவ்வொரு ஹெட்டெய்ரியாவிற்கும் (hetairia) தனக்கென ஓர் ஆண்டிரியோன் (andreion) இருந்தது.

லாக்கோனியாவுக்கும் கிரீட்டிற்கும் உள்ள ஒற்றுமைகள் அதிகமாக இருந்திருக்கக் கூடும். உடனே கிரீட்டன் பெரியீக்கையினரைக் கொண்ட வகுப்பு ஒன்று அமைக்கப்பட்டிருக்கும்.

## 5. ஆர்காஸின் உச்சநிலையும் வீழ்ச்சியும்— ஒலிம்பியன் விளையாட்டுகள்

மெஸ்ஸீனியாவில் ஏற்பட்ட கலகம் ஸ்பார்ட்டாவிற்குக் கவலை விளைவிக்கக் கூடியதாயிருந்தது. ஏனென்றால், கலகக்காரர்கள் ஆர்காஸ், பிஸா (Pisa) என்ற இரண்டு வெளிநாடுகளால் ஆதரிக்கப்பட்டு வந்தனர். ஆர்க்கேடியாவிலுள்ள ஆர்க்கோமீனஸ்ஸின் (Orchomenus) மன்னரின் ஆட்சியுரிமையின் கீழ் ஆர்காஸின் ஒரு பாகம் ஒன்று சேர்க்கப்பட்டது. ஆர்காஸின் உதவியால் ஆல்பியஸ் நதிதீரத்திலுள்ள பிஸாவின் மன்னர் சமீபத்தில் புதிய பெயரையும் அதிகாரத்தையும் பெற்றார். ஆர்காஸும் தன் மன்னராகிய பீடா(Pheidon)னின் தலைமையின்கீழ், தீபகற்பத்தில் முதன்மைவாய்ந்த பங்கைப்பெற்றது. இந்த மன்னரின் ஆட்சிக்காலம் ஆர்காஸ் முதல் இடம் பெற்றுத் தீவிர வலிமை வாய்ந்த நாடாக விளங்கிய காலங்களில் கடைசி யுகமாயிற்று. இவரைப்பற்றி நாம் அதிகம் அறிந்திலோம். ஆனால் இவருடைய புகழ் ஓங்கிநின்றதன் காரணத்தால், பிற்காலத்தில் மாசிடோனிய (Macedonia) வமிசம் மகா அலெக்ஸாண்டரின் வெற்றிகளால் உச்சநிலையை அடைந்திருக்கும்போது தனது வமிசத்தைப் பீடோனின் வமிசத்துடன் இணைக்க ஆவலாயிருந்தது.[6] இவரது தலைமையின்கீழ் ஆர்காஸிலும் பெலோப்போனீஸஸ்ஸிலும் படிகளைக் கொண்ட முறை ஒன்று புகுத்தப்பட்டது. இவருடைய பெயரைக் கொண்டு இப் படிகள் பீடோனியப் படிகள் என்றழைக்கப்படலாயின. இம் முறை ஆதென்ஸிலும் பின்பற்றப்பட்டது. இந்தப் பீடோனியன் படிகள் முறையானது ஈஜீனீட்டன் எடைகள்(weights)முறையுடன் நெருங்கிய தொடர்புடையதுபோல் காணப்படுகிறது. ஆனால் பீடோன் மேற்குப் பாகங்களைப் படையெடுத்தது மிகவும் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது. இவர் ஆர்காஸ் படையொன்றை ஆர்க்கேடிய நாட்டினூடே எடுத்துச் சென்று, ஆல்பியஸ் நதி தீரத்தை அடைந்து அங்கே ஒலிம்பியன் விழாக் கொண்டாட்டங்களில் தலைமை தாங்கினார். ஒலிம்பியன் விழாவைப்பற்றி நாம் கிரேக்க வரலாற்றில் முதன்முதலில் கேள்விப்படுவது இப்போதுதான்.

[6] மரபு வரிசையில் கொண்ட தனிநலத்தின் பலனாக, இவர் வசித்த காலத்திற்கு ஒரு நூற்றாண்டிற்கு மேற்பட்ட காலத்திற்கு முன்னதாகவே காட்டப்பட்டுள்ளார்.


Gymnasium
Hill of Kronos
Hearth
Prytaneum
Wall
Gate
Heraeum
Stadion (630 feet long)
Palaestra
Philipp-eum
Zanes
Altar of Zeus
Altis
Gate
Pelopion
Altis-Wall
Temple of Zeus
Theokoleon
Wall
Hippo-drome
Wall
Triumphal Gate
Altis-Wall
Buleuterion
OLYMPIA.
Scale of Yards
0 50 100 200
a.a. Treasure-Houses
1. Sicyon (5th. Cent.)
4. Syracuse (end of 6th. Cent.)
5. Epidamnos
6. Byzantium
7. Sybaris (6th. Cent.)
8. Cyrene (early 6th. Cent.)
9. Selinus (late 6th. Cent.)
10. Metapontion
11. Megara (late 6th. Cent.)
12. Gela (6th. Cent.)
R. Alpheios

படம் 24 : ஒலிம்பியா

கிளேடியஸ் (Cladeus) ஆறு ஆல்பியஸ் ஆற்றில் சங்கமம் ஆவ தால் ஏற்பட்டிருக்கும் கோணத்தில் உள்ள காடுகள் நிறைந்த க்ரோனஸ் (Cronus) மலையடிவாரத்தில் ஆல்டிஸ் அல்லது ஒலிம் பியாவின் புனிதத் தோப்பு அமைந்துள்ளது. இது ஸீயூஸ் வழி பாட்டிற்காகப் படைக்கப்பட்டுள்ளது. ஸீயூஸ் தனக்கென்று எடுத்துக்கொள்ளுமுன் இந்த இடம் பெலோப்ஸின் புனிதத் தல மாயிருந்திருக்கலாம். ஒரு வீரனுடைய நிலைமைக்குத் தாழ்த்தப் பட்ட பெலோப்ஸ் சுவர்களால் அடைக்கப்பட்ட இந்தப் பெரிய இடத்தில் தமக்கென்று ஒரு புனித இடத்தை வைத்திருக்கின்றூர். இந்தக் கோவிலில் திருவிடம் பிஸா(Pisa)வின் நிலப் பகுதியில் உள்ளது. இங்கு நடைபெறும் வழிபாடுகளைக் கவனிப்பதும், திரு விழாக்களை நடத்துவதும் ஆகிய உரிமைகள் ஆதியில் பிஸா சமு தாயத்தினிடம் இருந்திருக்கக் கூடும். ஹோமரின் செய்யுட்களில் டெல்பியும் டோடோனுவும் குறிப்பிடப்பட்டதுபோல் ஒலிம்பியன் கோவில் திருவிடம் ஒரு தடவையாகிலும் குறிப்பிடப்படவில்லை யென்றுலும், ஏழாவது நூற்றுண்டில் பெலோப்போனீஸஸ்ஸில் இது பெரியதொரு புகழை அடைந்து, பல மக்களைத் தன்னிடம் வரத் தூண்டிற்று. பிஸாவின் வடக்கிலுள்ள ஈலிஸ் (Elis)மக்கள் ஒலிம்பியன் கோவில் திருவிடத்தைத் தமதாக்க எண்ணினூர்கள். பிஸாவைவிட ஈலிஸ் வலிமையுள்ள நகரானதால் ஈலியர்கள் இறுதியில் விழாவை நடத்தும் உரிமையைப் பலாத்காரத்தோடு பிஸாவினிடமிருந்து எடுத்துக்கொண்டனர். நாலு ஆண்டுக ளுக்கு ஒரு முறை, கோடைக் காலத்தின் மத்தியநாளை அடுத்து வரும் இரண்டாவது பௌர்ணமி தினத்தன்று இவ் விழா நடை பெறும். இவ் விழாவில் விளையாட்டுகள் முக்கியத்துவம் பெற்றன. முதலில் கால் பந்தயங்கள், குத்துச் சண்டைகள், மல்யுத்தங்க ளாகியவை விளையாட்டுகளாக அமைந்தன. பிந்திய காலத்தில் இரதங்களின் பந்தயங்களும், குதிரைப் பந்தயங்களும் சேர்க்கப் பட்டன. இவ்விதப் போட்டிகள் கிரீஸ் நாட்டில் ஒரு பழைய நிறுவனமாகும். எவ்வளவு காலங்களாக இவை நடைபெற்று வருகின்றன, எப்படி இந்த விளையாட்டுகள் முதலில் புகுத்தப் பட்டன என்று நாம் அறியோம். இலியட்டில் விவரித்திருக்கும் பட்ரோகிளஸ்(Patroclus)ஸின் அடக்கத்தின்போது நடைபெற்ற விளையாட்டுகள் (Funeral games of Patroclus), அயோனியன் வாழ்க்கையில் இவ்விதமான விளையாட்டுகள் ஒன்பதாவது நூற் றுண்டில் ஒரு முக்கியப் பாகமாக விளங்கின என்று அறியத் தூண்டு கின்றன. ஈலிஸ் உரிமையின்றிப் பிஸாவிடமிருந்து ஒலிம்பியன் கோவில் திருவிடத்தைக் கைப்பற்றியதை ஸ்பார்ட்டா ஆதரித்த தையும், அதிகாரத்தில் வளர்ந்து வரும் ஸ்பார்ட்டாவின்மேல் பொறுமைகொண்டு ஆர்காஸ் பிஸாவின் உதவிக்குப் போன

தையும் நாம் பீடோனியன் காலத்து அரசியல் தொடர்புகளில் விளக்கமின்றிக் காண்கின்றோம். இதுவே ஒலிம்பியாவின்மேல் பீடோன் படையெடுத்துச் சென்றதன் முக்கிய நோக்கமாகும். இவர் ஈலிஸ்ஸினிடமிருந்து இந்த விளையாட்டுகளை நடத்தும் உரிமையைப் பறித்து, திரும்பவும் பிஸாவினிடம் கொடுத்தார். இதன்பின் பல ஆண்டுகளுக்குப் பிஸா தன் உரிமைகளை நிலை நாட்டியது. ஸ்பார்ட்டா மெஸ்ஸீனியன் சண்டையில் ஈடுபட்ட காரணத்தால் ஈலிய மக்களுக்கு உதவி புரிய முன்வர இயல வில்லை. பிஸா தன் உரிமைகளை நிலைநாட்ட இது மிகவும் உப யோகமாக இருந்தது. இந்தச் சமயத்தில் பிஸா ஸ்பார்ட்டாவின் எதிரிகளை எல்லாவிதங்களிலும் ஆதரித்து வந்தது.

ஆனால் மெஸ்ஸீனியக் கலகம் அடக்கப்பட்டபொழுது பீடோனின் பின்மரபினர் ஆட்சியில் ஆர்காஸ் சீணித்து, பிஸா விற்கு உதவ முடியாத சூழ்நிலையிலிருக்கவே, ஸ்பார்ட்டா ஈலிய மக்களுக்கு உதவியளித்து, ஒலிம்பியன் விளையாட்டுகளை நடத்தும் உரிமைகளை அவர்கள் மறுபடியும் பெறச் செய்தது.

பீடான் ஒலிம்பியாவில் தனது அரச ஆடம்பரத்தை நிறுவிய காலத்தில், ஆல்டிஸில் ஹீரா, ஸீயூஸ் என்போரின் கோவில்தான் மிகவும் குறிப்பிடத்தக்க தெய்வத்தன்மை வாய்ந்த இடமா யிருந்தது. இதுவே கிரீஸில் மிகவும் தொன்மையான கோவி லாகும். இதன் கடைக்கால்கள் இன்றும் பத்திரமாகக் காப் பாற்றப்பட்டு வருகின்றன. இது கற்களாலும் வெயிலில் காய்ந்த செங்கற்களாலும் கட்டப்பட்டுள்ளது. இங்குள்ள டோரிக் தூண்கள் மரத்தாலானவை. கற்களினால் கோயில் கட்டும் கலை ஆரம்பமாயிற்று. ஆயினும் இரண்டு நூற்றாண்டுகளுக்கு முன்னரே பழைய கோவிலின் புகழை மறையச் செய்வனபோல் புதியதொரு கற்கோவில் கட்டப்பட்டது. ஹீராவின் கோயில் பதினொன்றாம் அல்லது பத்தாம் நூற்றாண்டில் கட்டப்பட்டிருக்கும் என்று சிலர் ஊகிக்கின்றனர். ஆனால் அது அவ்வளவு பழையதன்று எனினும், இது இங்கு நடைபெறும் விளையாட்டுகளைப் போலவே உண்மை யில் பழமையானதேயாகும். பெலோப்ஸ் அல்லது ஏராக்கிளீஸ் இந்தப் புராண நிறுவனத்தை ஆரம்பித்து வைத்ததாகக் கருதப் பட்டது. ஆனால் ஈலிய மக்கள் பலாத்காரமாகத் தலைமைதாங்கும் பதவியை எடுத்துக்கொண்ட பிறகு, ஸ்பார்ட்டாவைச் சேர்ந்த லைக்கர்கஸ்ஸும் ஈலியாவைச் சேர்ந்த இப்பிடஸ்(Iphitus) ஸும் இந்தக் கொண்டாட்டங்களைக் கி. மு. 776இல் மறு படியும் பழைய நிலைக்குக் கொண்டு வந்தனர் என்ற கதை படிப் படியாக உருவாக்கப்பட்டது. மேற்கூறிய ஆண்டு முதலாவது

ஒலிம்பியட் நடந்த ஆண்டு என்று எடுத்துக்கொள்ளப்பட்டது. அந்த ஆண்டுமுதல் பீடானின் வருகை வரை ஈலியர்கள் இந்த விழாக்களில் தாமே தலைமை தாங்கியதாகக் கூறுகின்றனர். அவர்களுடைய வசனம் காலப்போக்கில் பொது நம்பிக்கையாக மாறியது.

பீடான் மன்னர் இந்த விளையாட்டுகளை மாற்றியமைத்து இந்த விழாவின் வரலாற்றில் ஒரு புதிய கட்டத்தைத் துவக்கி வைத்திருக்கலாம். இது எப்படி இருந்தாலும் சரி, ஆறுவது நூற்றுண்டின் ஆரம்பத்தில் இந்த விழாவானது பெலோப்போனிஸீயரின் அக்கறைக்கு மாத்திரம் உரிய நிகழ்ச்சியாக இருக்கவில்லை. இது எங்கெல்லாம் கிரேக்க மொழி பேசப்பட்டதோ அங்கெல்லாம் புகழப் பெற்றது. நான்காண்டிற்கு ஒரு முறை இந்த விழாக்காலம் துவங்கும்போது கிரேக்க உலகத்தின் எல்லாப் பாகங்களிலிருந்தும் இந்தப் போட்டிகளில் கலந்துகொள்ள உடற்பயிற்சி வல்லுநர்களும், குதிரைகளும், இப் போட்டிகளைக் காணக் காட்சியாளர்களும் கூட்டங் கூட்டமாக ஆல்பியஸ் நதிதீரத்தை வந்தடைவர். இந்த விழாக் கொண்டாடப்படும் காலத்தில் ஒரு புனிதமான போரிடை ஒய்வு மேற்கொள்ளப்பட்டது. இந் நாட்களில் தமது நிலப்பாகம் கேடுறுமல் வைத்திருக்கப்பட்டதென்று (inviolable) ஈலியர்கள் கூறுகின்றனர். இந்த விளையாட்டுகளின் வெற்றியில் கொடுக்கப்பட்ட பரிசு காட்டு ஒலிவ மரக் கிளையினுல் செய்யப்பட்ட வளையம் போன்ற மாலையாகும் (wreath). ஆனுல் வெற்றி பெற்றவர்கள், வெற்றியுடன் தம் நகரங்களுக்குத் திரும்பி அங்குள்ள முக்கியமான கோவிலில் தமது ஒலிம்பியக் கிரீடத்தை வைக்குங்கால் அவர்களுக்கு விலையுயர்ந்த பரிசுகள் வழங்கப் பெற்றன.

மிகவும் பெரியதும், மிகவும் புகழ்பெற்றதுமான எல்லாக் கிரேக்கர்களையும் கொண்ட (Panhellenic) இவ் விழா பெலோப் போனீஸஸ்ஸின் மேற்குப்பாகத்தில் கொண்டாடப்படுவது விசித்திரமாகத் தோன்றலாம். ஈஜியன் பக்கத்தில் இவை நடந்திருக்கலாம் என்று ஒருவர் எதிர்பார்க்கலாம். ஆனுல் இப்போது நிறுவப்பட்ட இந்த விளையாட்டுகளின் இடமானது மேற்குக் கடல்களுக்கு அப்பால் உள்ள கிரேக்க மக்களுக்கு மிக அருகில் அமைந்திருந்தது. ஒலிம்பியாவிலுள்ள மக்களைக் காட்டிலும், சிசிலி, இத்தாலி முதலிய இடங்களில் குடியேறித் தமக்கெனப் புதிய இல்லங்களை அமைத்துள்ள இவர்களுடைய மக்கள் மிகவும் ஆர்வத்துடனும், அடிக்கடியும் இப் போட்டிகளில் கலந்துகொண்டனர். இந்தப் புனித ஆல்டிஸ்ஸில் நின்று ஒருவன் பெலோப்ஸின் கோவில் திருவிடத்

திற்கு வடக்கே ஒரு மேல் தளத்தையும் (terrace), முந்தின காலத்தில் இங்கிருந்த பன்னிரண்டு செல்வக் களஞ்சியங்களின் சில அழிவுச் சின்னங்களையும் காணும்போது, ஒலிம்பியா மேற்குக் குடியேற்றங்களுக்கு அருகிலிருப்பது அவனுடைய நினைவிற்கு வரும். இந்தப் பன்னிரண்டு செல்வக் களஞ்சியங்களில் குறைந்தது ஐந்து, சிசிலியையும் இத்தாலியையும் சேர்ந்த நகரங்களால் படைக்கப் பெற்றவை. இப்படி இந்த ஒலிம்பிய விழா மேற்கிலுள்ள குடியேற்ற நாடுகளைத் தங்கள் தாய் நாட்டுடன் பற்றுக் கொள்ளச் செய்தது; அதுவுமின்றி இந்த விழா எல்லாப் பாகங்களிலும் இருக்கும் கிரேக்கர்கள் கூடித் தம் கருத்துகளையும் அநுபவங்களையும் பரிமாறிக்கொள்ள ஓர் இடத்தையும் அளித்தது. மேலும், சிதறிக் கிடக்கின்ற கிரேக்க இன மக்களிடையே 'நாம்' ஓரினத்தைச் சேர்ந்தவர்கள் என்னும் உணர்ச்சியை எடுத்துக் காட்டவும் வளர்க்கவும் கூடிய நிறுவனங்களில் இது ஒன்றாயிருந்தது. கடைசியாக நாம் பார்க்கப் போவதுபோல், தேசீய ஒற்றுமையை வளர்க்கும் தொழிலில் ஈடுபட்டுள்ள இதைப் போன்ற ஏனைய விழாக்களுக்கு இது ஒரு முன்மாதிரியாக இருந்தது.

மெஸ்ஸீனியாப் போரில் ஸ்பார்ட்டாவின் இறுதி வெற்றி, பெலோப்போனீஸ அரசுகளிடை இருந்த அதிகாரச் சமநிலை மாறிய காலத்தைக் குறிக்கின்றது. ஏழாவது நூற்றாண்டில் ஆர்காஸ் தலைசிறந்த ஓர் அரசு. இது மைஸீனியைத் தாழ்த்திற்று; இது அஸ்ஸீனை (Asine) ஒழித்தது; இது டிரின்ஸை ஆர்காஸின் கோட்டையாக மாற்றியது; எல்லாவற்றுக்கும் மேலாக ஸ்பார்ட்டாவை ஐஸியி (Hysiae) என்னுமிடத்தில் தோற்கடிக்கவும் செய்தது. பீடானின் அதிகாரம் ஆர்காலிஸ் முழுவதும் பரவியிருந்தது என்பதற்குச் சந்தேகமே இல்லை. இதுவுமன்றி ஈகைனா (Aegina) விலும் அவனுடைய செல்வாக்கு அதிகரித்தது. லாக்கோனியத் தீவாகிய சிதிராவும், லாக்கோனியாவின் கிழக்குக் கரைப்பாகமும் அவனுடைய கைகளின்கீழ் வந்திருக்கலாம். ஆனால் அவனுடைய ஆட்சிக்காலந்தான் தென் ஆர்காஸின் சிறப்பான காலங்களில் கடைசியாயிற்று. மெஸ்ஸீனியாவை அடக்கியமைக்கு ஐம்பது ஆண்டுகளுக்குப் பின் ஸ்பார்ட்டா பெலோப்போனீஸஸ்ஸில் மிகவும் வலிமையான அரசாக மாறியது. இரண்டாந் தர வல்லரசின் இடத்திற்கு ஆர்காஸ் தள்ளப்பட்டது. இருந்தபோதிலும் அது எப்பொழுதும் சுதந்தரத்தைக் காத்துக்கொண்டும், எப்பொழுதும் ஸ்பார்ட்டாவுக்கு ஒரு முள்ளாகவும், எப்பொழுதும் வைரிக்கு வைரியாகவும், நண்பனுக்கு நண்பனாகவும் இருந்தது. ஆனால் எப்பொழுதும் ஆதிக்க வெறியின்றியும், சிறப்பான ஆக்க வேலையின்றியும் மற்றவர்களை வழி நடத்தாமலும் அது இருந்தது.

## 6. ஜனநாயக இயக்கங்கள் - சட்டம் தந்தவர்களும் கொடுங்கோலர்களும் (Tyrants)

நீதிபதி பயன்படுத்தும் சட்டங்கள் எல்லோரும் அணுகுகின்ற நிலையில் இல்லாதபோது சமமான நீதி எல்லோருக்கும் வழங்கப் பெறும் என்ற உத்தரவாதம் இல்லை என்பது தெளிவு. எழுதப் பட்ட சட்டத் தொகுதி நியாயமான நீதி வழங்குவதற்கு ஆதார மாகும். சட்டங்கள் எவ்வளவு நியாயமானவைகளாக இருந் தாலும் இது அவசியம். எனவே, கிரேக்க நகரமக்கள் தங்களது உயர்குடி ஆட்சியிடம் கோரிய முதலாவது கோரிக்கை, எழுதப் பட்ட சட்டமாகும். இந்த அரசாங்கங்கள் காட்டும்படி கட்டாயப் படுத்தப்பட்ட முதல் சலுகையும் இதுவேயாகும். தெய்வங் களையோ அல்லது அரசையோ பாதிக்காது தனியாளை மாத்திரம் பாதிக்கும் செயல்களை அந்த நாட்களில் பாதிக்கப்பட்ட நபர் தன் விருப்பப்படி அல்லது தன்னால் இயன்றபடி அதற்கு ஆவன செய்து கொள்ளும்படி விடப்பட்டிருந்தார் என்பதை நினைவில் கொள்ள வேண்டும். அரசு அதில் குறுக்கிடுவதில்லை. இரத்தம் சிந்தப்பட்டா லும் இதுவே வழக்கமாயிருந்தது. கொல்லப்பட்ட மனிதனின் உறவினர்கள், கொலை செய்தவனைப் பழிக்குப் பழியாகத் தண்டிக்க வேண்டியதுதான். அதற்குப் பிறகு சமூக அமைப்பு மத் திய மயமாக்கப்பட்டு வளர்ந்தபோது ஓரளவுக்கு நீதி வழங்கு வதை அரசு ஏற்றுக்கொண்டது. இதன்படி தனக்குத் தவறு இழைத்தவனை ஒரு நீதிபதியின் முன் கொண்டுபோய் நிறுத்தி, அவன்மீது குற்றம் சாட்டவேண்டும். நீதிபதி என்ன தண்டனை வழங்குவது என்று தீர்மானிப்பார். ஆனால் பாதிக்கப்பட்ட நபர் நீதிபதியின் முன்பு குற்றஞ் சாட்ட முன் வராத வரையில் ஒரு குற்றத்தையும் நீதிபதி கவனிக்க முடியாதென்பதை இங்குக் குறிப் பிடவேண்டும். இரத்தம் சிந்துவது சமயத்தோடு கருத்துத் தொடர்பு கொண்டிருந்ததால் அதற்கு ஒரு விலக்கு இருந்தது. இரத்தம் சிந்துகிறவன் சுத்தமற்றவன் அல்ல என்பதோடு சமுதா யத்தின் தெய்வங்களையும் அசுத்தமாக்கினவன் என்று அவர்கள் கருதினார்கள். ஆகவே, கொலை செய்வது அரசின் சமயத்திற்கு விரோதமான குற்றமாகக் கருதப்பட்டது.

வழக்காறுகளைச் சட்ட ரீதியான வடிவில் அமைப்பதும் சட்டங் களை எழுதுவதும் ஆகிய வேலையோடு பெரும்பாலும் சீர்திருத்த மும் கலந்திருந்தது. ஏழாம் நூற்றாண்டில் சட்டத் தொகுப்பாளர் சட்டம் அளிப்பவர்களாவும் இருந்தார்கள். மேற்கு லோக் ரியர்(Locrians)களுக்குச் சட்டம் செய்த ஸலூகஸ் (Zaleucus), கட்டனி(Catane)க்குச் சட்டம் அளித்த கரோண்டாஸ்

(Charondas) புராண காலத்தைச் சேர்ந்தவர்கள். அத்தீனிய ட்ரேக்கன் (Athenia Dracon) என்பவரைப்பற்றியும், நீதிமானுன சோலானைப்(Solon)பற்றியும் நமக்கு விளக்கமாகத் தெரிகிறது. இவர்களில் எல்லாம் தலைசிறந்தவர் சோலான் ஆவார். பழைய கிரீஸின் இதர நகரங்களிலும் இவ்வாருக அறிவும் அநுபவமும் பெற்ற மனிதர்கள் சட்டம் அளிப்பவர்களாக இருந்தார்கள். இவர்களில் சிலர் பெயர்கள் நமக்குத் தெரிந்தாலும், அவை வெறும் பெயர்களாகவேதாம் இருக்கின்றன. கடவுளால் கொடுக்கப்பட்டவைகளாகப் பின்னுல் சொல்லப்பட்ட ஸ்பார்ட்டாவின் சட்டங்கள், இக் காலத்தில் வடிவாக்கப் பெற்று எழுதப் பெற்றிருக்கலாம். சட்டம் அமைக்கும் உணர்ச்சியானது கிரீட்டின் நகரங்களையும் பாதித்தது. கோர்டின் (Gortyn) நகரத்தின் பழைய சட்டங்களில் சில துணுக்குகள், இன்னும் காப்பாற்றப்பட்டு இருக்கின்றன. கற்பலகைகளில் கோர்ட்டினியன் சட்டத் தொகுதியாக (Gortynian Code) வெளிவந்தது, சட்டம் இயற்றுதலை ஆரம்பித்த ஒரு யுகமாகும்.

பல சந்தர்ப்பங்களில் சட்டம் இயற்றலும் மக்களுக்கு அரசியல் சலுகைகள் வழங்கப்படுவதும் உடனியங்கின. அரசியல் அமைப்பை மாற்றி அமைப்பதும் சட்டம் அளிப்பவர்களின் ஒரு வேலையாகும். ஆனுல் பெரும்பான்மையும் இது நீண்ட அரசியல் சச்சரவுகளின் ஆரம்பமேயாகும். சுயேச்சைக்காகவும், சமத்துவத்திற்காகவும் மக்கள் போராடுகின்றனர். சலுகை பெற்ற வகுப்பினர்கள் தங்களது தனிப்பட்ட உரிமைகளைக் காப்பாற்றிக் கொள்வதற்காக அரிய முயற்சிகள் செய்கின்றனர். முன் ஓர் அத்தியாயத்தில் மேல்வாரியாகப் பார்த்தபடி, சமுதாய அல்லல்கள் மக்கள் ஆதரவு பெற்ற அரசாங்கத்தை ஏற்படுத்தச் செய்யும் முயற்சிகளுக்கு ஒரு தூண்டுகோலாயிருந்தன. சில வேளைகளில் போராட்டம் ஜனநாயக ஆட்சியை ஏற்படுத்துவதில் முடிந்தது. மற்றும் பல சந்தர்ப்பங்களில் சிறுகுழு ஆட்சி தன்னை நிலை நாட்டுவதிலும் மக்களை அடக்கி ஆளுவதிலும் வெற்றியைக் கண்டது. இதன் பலன் சிறுகுழு ஆட்சிக்கும் ஜனநாயக ஆட்சிக்கும் இடையே நிரந்தரமானதோர் ஊசலாட்டமாக விளங்கியது. இதனுல் ஒன்றன்பின் ஒன்ருகப் பல புரட்சிகள் தோன்றின. இப் புரட்சிகள் அடிக்கடி கொடிய கலகங்களில் முடியலாயின. ஜனநாயக ஆட்சிக்கு முற்றிலும் வெற்றி கிடைக்காவிட்டாலும், எல்லா இடங்களிலும் மக்கள் இதனையே அடைய விரும்பினர். ஒரு சில அரசுகளில் ஜனநாயக ஆட்சி கைவரப் பெற்ருலும் அங்கும் சிறுகுழு ஆட்சியின் அபாயகரமான சூழ்ச்சிகளுக்கு இலக்காக இருந்தது. ஏழாவது நூற்ருண்டின் இறுதிமுதல் பெரும்

பாலான கிரேக்க நகரங்களின் உள்நாட்டு வரலாறுகளில், மக்கள் தம் ஆதரவு பெற்ற ஆட்சியைக் காப்பதற்கு அல்லது நிலைநாட்டுவதற்கு இடைவிடாது முயன்றதும், இம் முயற்சியில் இங்கோர் இடத்தில் வெற்றியும் அங்கோரிடத்தில் தோல்வியும் பெற்று வந்ததும் முக்கியக் கூறுக விளங்கின. இவ்வாறுகக் கிரேக்க உலகம் உயர்குடி யாட்சியிலிருந்து ஜனநாயகப் பொது அரசாக மாறும் நிலையிலுள்ளதும், இம் மாறுதல்களுக்கான முயற்சிகளில் ஈடுபடுவதுமான காலத்தை நாம் அடைந்துள்ளோம். ஆர்காஸ் எவ்வாறு முடியாட்சியின் வீழ்ச்சிக்கு விலக்காக நின்றதோ அவ்வாறே தெசலி உயர்குடி யாட்சியிலிருந்து குடியாட்சியாக மாறும் இயக்கத்திற்கு விலக்காக விளங்கிற்று. ஆனல் தொலைவிலுள்ள மாசிடோனியா (Macedonia), மோலோசியா (Molossia) போன்ற முடியரசுகள் எவ்வகையிலும் பாதிக்கப்படவில்லை.

வழக்கம் போல அல்லது அடிக்கடி இப்படிப்பட்ட சந்தர்ப்பங்களில் ஏற்படுவது போல, பகைவர்களிடமிருந்தே ஜனநாயக இயக்கம் உதவி பெற்றது. அளிக்கப்பெற்ற இந்த உதவிக்காக நன்றி காட்ட வேண்டும் என்ற காரணம் இல்லை. ஏனெனில், மக்களிடத்தில் அன்பு காரணமாக இந்த உதவி அளிக்கப் பெறவில்லை. பல நகரங்களில் அதிகாரம் வகித்து வந்த குடும்பங்களிடையே சச்சரவு இருந்து வந்தது. ஒரு குடும்பம் உயர்வுக்கு வந்தபோது அதன் போட்டியாளர்கள் பொதுமக்களின் அதிருப்தியைத் தூண்டிவிட்டு அதனைக் கவிழ்க்க முயன்றனர். இவ்வாறுக அதிருப்தியுற்ற கூட்டமக்களின் தலைவர்களாக அதிருப்தி அடைந்திருந்த பிரபுக்கள் முன் வந்தார்கள். ஆனல் அரசாங்கம் வீழ்ச்சியுற்றபோது தாற்காலிகமாக மன்னர் ஆட்சி முறைக்குத் திரும்பவும் வருகின்ற விளைவே புரட்சியால் ஏற்பட்டது. தலைமை வகித்த பிரபு பிரதம அதிகாரத்தைக் கைப்பற்றிக்கொண்டு ஆயுத பலத்தால் அதை நிலைக்கச் செய்தார். பொதுமக்கள் கூட்டம் அதிகாரத்தைத் தாளுகவே வகிக்கும் நிலைக்கு முதிரவில்லை. பொதுவாகத் தாங்கள் வெறுத்த பிரபுக்களாட்சியை வீழ்த்துவதற்கு உதவியாயிருந்த மனிதனிடமே அதிகாரத்தை அவர்கள் மகிழ்ச்சியோடு ஒப்படைத்தார்கள். இப்புதுவகையான மன்னர் ஆட்சிமுறை பழைய முறையிலிருந்து பெரிதும் வேறுபட்டதாகும். ஏனெனில், மன்னர் பதவி மரபுரிமையின்மேல் சாராமல் உடல் வலிமையைச் சார்ந்திருந்தது.

இவ்வாறுக ஏற்பட்ட சட்டபூர்வம் அல்லாத மன்னர்களை மரபுரிமை மன்னர்களிடமிருந்து பிரித்துக் காட்டுவதற்காக டைரன்டுகள் என்று அழைத்தார்கள். இம் மன்னர் ஆட்சிமுறையை டிரனிஸ் என்று அழைத்தார்கள், ஒருவேளை டைரன்ட் என்ற

பெயர் லிடியாவிலிருந்து வந்திருக்கலாம். ஏனெனில், லிடியாவின் மன்னர்களைக் கிரேக்கர்கள் இவ்வாறு அழைத்தார்கள். முதன் முதலாக டிரானிஸ் என்ற சொல்லை கைஜஸ் (Gyges) என்பவரின் ஆட்சியை வர்ணிப்பதற்கு ஆர்க்கிலோக்கஸ் இச் சொல்லைப் பயன் படுத்தியதைத் துணுக்குகளில் நாம் காண்கின்றோம். நெறியைப் பொறுத்த வரையில் இந்தச் சொல் ஒரு நடுநிலைமையான சொல். அரசன் கெட்டவன் என்றோ அல்லது கொடூரமானவன் என்றோ இச் சொல்லுக்கு உட்பொருள் ஒன்றுமில்லை. நல்ல டைரன்டாயிருப்பதில் முரண்பாடானது ஒன்றுமில்லை. பல டைரன்டுகள் நன்மை புரிகிறவர்களாக இருந்தார்கள். ஆனால் சட்டபூர்வமான ஆதரவு இல்லாது தனிப்படுத்தப்பட்ட காரணத்தால், இவர்கள் இராணுவ பலத்தைச் சார்ந்திருக்க நேர்ந்தது. மேலும், இதனால் இவர்கள் அடிக்கடி சந்தேகம் கொள்ளவும் கொடூரமாக இருக்கவும் நேர்ந்தது. இதன் பயனாக டிரனிஸ் கெட்ட பெயரெடுத்தன. மனம்போன போக்கில் செய்யும் அடக்கு முறைச் செயல்கள் இப் பெயருடன் சம்பந்தப்படுத்தப்பெற்றன. தற்கால மொழிகள் இத் தீய பொருளில் இப் பெயரைப் பயன் படுத்த முற்பட்டன. டைரன்டுகளில் பலர் ஒடுக்குகிறவர்களாக இருந்தார்கள் என்பதைத் தவிர, டிரனிஸ் கிரேக்கர்களின் வெறுப்புக்குள்ளானதற்கு இன்னும் ஓர் ஆழ்ந்த காரணமும் இருந்தது. அரசியல் சட்ட அமைப்புக்கு உட்படாத ஆட்சியாளர் ஒருவரின் கைகளில் எதேச்சாதிகாரக் கட்டுப்பாட்டை இது கொடுத்தது. அவர்கள் இதை உபயோகித்தார்களோ அல்லது உபயோகிக்கவில்லையோ, குடிமக்களின் வாழ்வும் விதியும் அவர்கள் கைகளில் கொடுக்கப்பட்டிருந்தன. கிரேக்கர்களின் சுதந்தர விருப்பிற்கு இது விரோதமானதாக இருந்தது. அவர்களது அரசியல் அமைப்பு வளர்ச்சியை இது தடை செய்வதாகவும் தோன்றியது. உண்மையில் பார்க்கப்போனால், முதன் முதலில் வந்த டைரன்டுகளின் ஆட்சியால் ஏற்பட்ட தாற்காலிகத் தடை பயனுள்ளதாக இருந்திருக்கலாம். ஏனெனில், அதனுடைய நேரடியான அரசியல் விளைவு வளர்ச்சியைத் தடை செய்வதாயிருந்தாலும் வேறு பல துறைகளில் மக்களின் முன்னேற்றத்தை ஊக்குவித்தது. மேலும், அரசியல் அமைப்புக் கண்ணோட்டத்தில் பார்த்தாலும், இக் காலத்தில் அது பல பயன்களைத் தந்ததாகவும் இருக்கலாம். சில இடங்களில் அது வளர்ச்சியை நிறுத்தி ஓர் ஓய்வுக்கால இடை நேரத்தை யளித்தது. இந்த இடைநேரத்தில் மக்கள் சுயஆட்சிக்காகத் தங்களைத் தயார் செய்துகொள்ளும் வகையில் அறிவும் அநுபவமும் பெற்றார்கள்.

உயர்குடி யாட்சிகள் வீழ்ந்த காலமானது டைரன்டுகளின் காலம் என்று அடிக்கடி கூறப்படுகின்றது. இச் சொற்றொடர் அவ்

வளவு சரியானதாக இல்லை. ஏனென்றால், இது எளிதாக மற்றவர்களைத் தவறான கருத்துகளைக் கொள்ளச் செய்யும். இந்தக் காலத்தில்தான் முதன்முதலில் டிரனிஸ் தோன்றிற்று. கிட்டத்தட்ட இந்தக் காலத்தில் கிரீஸின் பல பாகங்களில் அநேக டைரன்டுகள் தோன்றினார்கள். உயர்குடி யாட்சிகளைக் கீழே தள்ளும் வேலையையே இவர்கள் யாவரும் செய்து முடித்தனர். பல இடங்களில் இவர்கள் ஜனநாயக ஆட்சிக்கு அடிகோலினார்கள். ஆனால் நிலைதிரி காலத்தில்மட்டும் இவ்விதமான அரசாங்கம் தோன்றிய பின் மறையவில்லை. கிரீஸின் பிந்திய வரலாற்றிலும் டைரன்டுகள் இங்கும் அங்கும் எழும்பி மறைவதை நாம் பார்க்கிறோம். டிரனிஸ் கிரேக்கர்களுடன் எப்பொழுதும் இருந்து வந்தது. இதுவும், சிறுகுழு ஆட்சியும், ஜனநாயக ஆட்சியை எல்லாக் காலங்களிலும் அச்சுறுத்துகின்ற ஆபத்துகளாகவே இருந்தன.

டிரனிஸின் மூல இருப்பிடம் அயோனியாவாக இருக்கலாம். ஸார்டிஸ்ஸிலுள்ள லிடியன் டைரன்டுகளின் செல்வமிக்க அரசவைகளின் கவர்ச்சிகரமான எடுத்துக்காட்டு ஒருவேளை இதற்குக் காரணமாயிருந்திருக்கக் கூடும். ஆனால் நமக்கு அயோனியன் டிரனிஸ்களைப்பற்றி ஒன்றும் தெரியாது. நகரங்களில் கட்சிப் போராட்டங்களையும் (factions), மரபுச் சச்சரவுகளையும் (feuds), அரசுகளில் உயர்குடிக் குடும்பங்கள் வீழ்வதையும், வல்லாட்சிகள் ஏற்படுவதையும்பற்றி நாம் கேள்விப்படுகிறோம். அலியாட்டிஸ் (Alyattes) என்ற லிடியன் மன்னனின் மகளை எபீஸஸ் நகர டைரன்ட் திருமணம் செய்துகொள்கின்றார். மைலீட்டஸ்ஸைச் சேர்ந்த திரேஸிபூலஸ் (Thrasybulus) இந்த டைரன்டுகளில் மிகவும் புகழ்ச்சி பெற்றவர். முந்தி இருந்ததைக்காட்டிலும் இவர் ஆட்சிக் காலத்தில்தான் இந் நகரம் மிகவும் உயர்ந்த பதவியை அடைந்தது. வெளிநாட்டு விவகாரங்களைப் பொறுத்தவரையில், கருங்கடல் பிரதேசத்தில் இவர் குடியேற்ற நாடுகளை நிறுவினதுமன்றி லிடியாவின் அச்சுறுத்தல்களை வெற்றியுடன் எதிர்த்தார். உள்நாட்டில் இவர் டிரனியின் தந்திரத்தை ஒரு கவின் கலை (fine art)யாக வளரச் செய்தார்.

லெஸ்பியன் மிட்டிலீனில் டிரனியையும், அதை வர விடாதபடி தடுக்கும் ஒரு முறையையும் காண்கிறோம். வாணிபப் பெருக்கினால் மிட்டிலீன் செழிப்பை அடைந்தது. இங்கு ஆட்சி புரிந்த சீமான்களாகிய பென்திலிட்டர்கள் (Penthilids) பெரிய பணக்காரராயும், இன்ப வாழ்க்கை நடத்துகின்றவர்களாயுமிருந்து, சாதாரண மக்களைக் கொடுமையாகத் துன்புறுத்தி வந்தனர். ஒருவர் மாறி ஒருவராக டைரன்டுகள் அதிசீக்கிரத்தில் எழுச்சியடைந்தும்

வீழ்ச்சி பெற்றும் காணப்பட்டனர். ஆல்சியஸ்(Alcaeus)ஸின் யாழ்ப்பாடல் சிலவற்றிலிருந்து டிரனியின்மேல் மக்கள் கொண்டிருந்த வெறுப்பையும் ஆரவாரத்தையும் நாம் காண்கிறோம். ''நாம் குடித்துக் கும்மாளம் போடுவோம். ஏனென்றால், மிர்சைலஸ் இறந்துவிட்டான்''.—இந்தப் புலவர் ஒரு சீமானாயும், ஒரு சிறந்த போர்வீரராயும் இருந்தார். ஆனால் ஹெல்லெஸ்பான்ட் கரையில் அத்தீனியர்களுக்கு விரோதமாகப் போர் புரியும்போது, ஆர்க்கிலோகஸ்ஸைப்போல் தமது கேடயத்தைத் தூக்கி எறிந்து விட்டார். சீஜியத்தில் இந்தக் கேடயமானது சண்டையில் கிடைத்த வெற்றிச் சின்னமாகக் கருதப்பட்டுத் தொங்க விடப் பட்டிருந்தது. டைரன்டிற்கு விரோதமாகப் பிட்டாக்கஸ் (Pittacus)ஸுடன் சேர்ந்து சதி செய்தார். ஆனால் பிட்டாக்கஸ் ஒரு சீமானும் அல்ல; அவனுடைய நட்பும் அவ்வளவாக நீடிக்க வில்லை. மேற்கூறிய சண்டையில் தம் வீரத்தினால் கீர்த்தி பெற்ற பிட்டாக்கஸ், தம் அரசின் காவலரானார் (saviour). இவர் மக்களின் நம்பிக்கையைப் பெற்று, நகரத்தின் வேதனைகளை ஆற்றப் பத்தாண்டுகளுக்கு அரசு புரிகின்றவராகத் தேர்ந்தெடுக்கப் பெற்றார். இவ்விதமாகத் தலைசிறந்த அதிகாரங்களைச் சில குறிப்பிட்ட ஆண்டுகள் மாத்திரமே பெற்று அரசாட்சி செய்யும் தலைவரை ஈசிம்னிட்டீஸ் (aesymnetes) என்றழைப்பது வழக்கம். புத்திக் கூர்மையுள்ள சட்டமளிப்பவர் என்றும், திடம் பொருந்தி அதே சமயத்தில் நடுத்தரமாக அரசு புரிபவர் என்றும் நற்பெயரைப் பிட்டாக்கஸ் பெற்றார். தம்மை எதிர்த்த சீமான்களைத் தம் நாட்டின் எல்லையை விட்டுக் கடத்தினார். இவ்விதமாக நாடு கடத்தப்பட்ட லெஸ்பியப் பிரபுக்களில் மிகவும் சிறந்தவர்களானவர்கள் ஆல்ஸியஸ்ஸும் (Alcaeus), சாப்போவும் (Sappho) ஆவர். பத்து ஆண்டுகளின் இறுதியில் இவர் தமது பதவியிலிருந்து விலகினார். தம் மறைவுக்குப் பின் அறிவும் அநுபவமுமுள்ள 'ஏழு மக்களின்' கூட்டத்தில் ஒருவராக இவர் சேர்க்கப்பட்டார். ஆல்ஸியஸ்ஸின் உருவகம் ஒன்றை உபயோகித்துப் பொருத்தமாகச் சொல்லவேண்டுமானால், அரசாகிய நாவாய் துறைமுகத்தை அடைந்தாயிற்று. ஆதலின், நாடு கடத்தப்பெற்றவர்களை இப்பொழுது தீங்கு நேராதபடி திரும்ப அநுமதிக்கலாம்.

லெஸ்பாஸின் வரலாற்றில் இதுவே ஒளி துலங்குகிற காலமாயிற்று. புதிய இசைமானம் (மெட்டு) அமைத்தவர்களும், யாழ்ப் பாட்டுகளுக்குப் புது இசை ஒழுக்குகள் (cadences) இயற்றினவர்களுமாகிய இவ் விரண்டு கவிஞர்களின் பாடல்களில் தற்பொழுது கிடைத்துள்ள துண்டுகளிலிருந்து, சுதந்தரமானதும், இன்ப வாழ்வுக்குரியதுமான இந்த ஈயோலியன் தீவின் வாழ்க்கை

யைப்பற்றிய சில காட்சித் துணுக்குகளைக் காண்கின்றோம். சாப் போவின் ஒளி வீசுகின்ற சிறப்புத் திறமையானது இளம் லெஸ் பியன் கன்னியர்களுடன் இவள் கொண்ட மனவெழுச்சி மிகுந்த பற்றுதல்களினால் ஊக்குவிக்கப் பெற்றது. கட்சி வாதங்களின் குழப்பங்களைக் கண்ணாடியைப்போல் எடுத்துக் காட்டும் ஆல்ஸி யஸ்ஸின் பாடல்கள் போர்க் கவிஞர்களின் சடசடவொலி, மது பானம் அருந்தும் கோப்பைகள் ஒன்றை ஒன்று நெருங்கும்போது உண்டாகும் ஒலி இவற்றுடன் சேர்ந்து சப்தித்தன.

## 7. மத்திய கிரீஸில் கொடுங்கோலாட்சிகள்

ஏழாவது நூற்றாண்டின் மத்தியில், மத்திய கிரீஸில் பூசந் தியின் பக்கத்தில் கொரிந்து, சிக்கியான் (Sicyon), மேகாரா (Megara) என்ற மூன்று இடங்களில் கொடுங்கோலாட்சிகள் தோன்றின. ஒவ்வொன்றின் வளர்ச்சியிலும் வேறுபாடு காணப்படு கிறது. ஒவ்வொன்றும் அறிவூட்டத்தக்கதாயுள்ளது. சிக்கியானில் கொடுங்கோலாட்சி விளக்கமுற்றதாயும், பயனுள்ளதாயுமிருக் கிறது; கொரிந்துவில் விளக்கமுற்றதாயும் கொடுமை பொருந்திய தாயும் இருக்கிறது; மேகாராவில் குறுகிய காலம் நிலைத்துள்ளதாக வும் நீண்ட உட்போராட்டங்களால் தொடரப்பட்டும் உள்ளது.

கொரிந்துத் தீவில் அரசு புரிந்த பாக்கியர்கள் (Bacchiads) என்ற குலத்தை, தம்மை மக்களின் தலைவராக்கிக்கொண்ட சிப்ஸிலஸ் (Cypselus) தோற்கடித்துப் பதவியிலிருந்து விலக்கினார். சிப்ஸிலஸ் என்ற கிரேக்கப் பதம் ஜாடி என்ற பொருள் தரக்கூடிய தாகையால், பழைய காலத்திலேயே சிப்ஸிலஸ்ஸின் பிறப்பைப் பற்றி ஒரு தனிச் சிறப்பான (characteristic) புராணக்கதை உண் டாக்கப்பட்டது. இவருடைய தாய் பாக்கியட் உயர் குலத்தைச் சேர்ந்த லாப்டா (Labda) என்னும் பெண் ஆவார். இவர் நொண் டியாக இருந்த காரணம்பற்றி இவர் தமது வகுப்பைவிட்டு வெளியிலே மணம் புரிய நேரிட்டது. இவர் தம் மக்களைச் சேர்ந்த ஈடியான் (Eetion) என்பவரை முதலில் மணம் புரிந்துகொண்டார். பிள்ளைப்பேறு இல்லாததால், இவர் டெல்பிக் தெய்வ மொழி யைக் (oracle) கலந்தாராய்ந்தார். அதற்கு டெல்பிக் தெய்வ மொழி பின்வரும் உத்தரவை ஈடியானுக்கு அளித்தது:

> ''ஈடியானே, மேன்மையும் புகழும் உனக்குரியவை. ஆயினும், உனது உரிமைக்குத் தக்கவாறு உன்னை ஒரு மனிதனும் மேன்மைப் படுத்துகிறதில்லை. தன்னந்தனி யாக அரசு புரிவோரின்மேல் விழவும், உன்னுடைய கொரிந்துவை உரிமையில்லாத வலிமையிலிருந்து விடுதலை

யடையச்செய்யவும் உன் மனைவியாகிய லாப்டா ஓர் எந்திரக் கல்லைப் பெறுவாள்.''

இந்தத் தீர்க்கதரிசனம் பாக்கியர்களுக்கு எட்டியது. மற்றொரு தீர்க்கதரிசனமும் இதை உறுதியாக்கிற்று. ஆகையால், லாப்டாவிற்குக் குழந்தை பிறந்தவுடன், அவர்கள் அதைக் கொல்லுமாறு பத்துப் பேர்களை அனுப்பினார்கள். அவர்கள் ஈடியானின் வீட்டு முற்றத்திற்கு வந்ததும், ஈடியான் வீட்டில் இல்லையென்றறிந்து சிறு குழந்தையைத் தங்களிடம் தரும்படி லாப்டாவைக் கேட்டார்கள். அதனால் விளையும் விளைவு ஒன்றையும் அறியாதவளாய், குழந்தையை ஒருவன் கைகளில் ஏந்தக் கொடுத்தாள்.



படம் 25: ஏராக்ளிஸிடமிருந்து தப்பி யூரிஸ்தீயஸ் ஒரு ஜாடியில் ஒளிந்துகொண்டிருப்பது (சிவந்த உருவங்களைக் கொண்ட மலர்க்குவளை : யூப்ரோனியஸ்ஸால் தீட்டப்பட்டது).

ஆனால் அவன் குழந்தையை வாங்கி அதனைத் தரையில் அடிக்கப் போகும்பொழுது, குழந்தை புன்முறுவல் பூக்கவே, அதனைக் கொல்ல மனமில்லாது மற்றவனிடம் கொடுத்தான். அவனும்

அவ்வாறே இரக்கம் காட்டினன். இவ்விதமாகக் குழந்தை ஒருவர் கையிலிருந்து மற்றவர் கைகளுக்குக் கொடுக்கப்பட்டது. ஒருவருக்கும் அதனைக் கொல்ல மனம் வரவில்லை. பிறகு பிள்ளையை அதன் தாயிடம் கொடுத்துவிட்டு முற்றத்திற்குப் போனார்கள். அங்கே ஒவ்வொருவரும் மற்றவரைப் பலவீனர் என்று கடிந்துகொண்டு தாம் அனைவரும் ஒன்று சேர்ந்து பிள்ளையைக் கொல்ல வேண்டும் என்ற தீர்மானத்துடன் திரும்பினார்கள். கதவின் பக்கத்தில் நின்று இவற்றையெல்லாம் கேட்டுக்கொண்டிருந்த லாப்டா, குழந்தையை ஒரு ஜாடியில் ஒளித்து வைத்தாள். பத்துப் பேரும் குழந்தையை எல்லா இடத்திலும் தேடினார்கள். அவர்கள் ஒருவருக்காவது ஜாடிக்குள் பார்க்கவேண்டும் என்ற யோசனை வரவில்லை.[7] இப்படிச் சிறுவன் காப்பாற்றப்பட்டான். ஆனால் இந்தப் பத்துப்பேரும் பாக்கியர்களிடம் தமக்குக் கொடுக்கப்பட்ட வேலையைச் சரிவர முடித்ததாகப் பொய்யைச் சொல்லி விட்டனர்.

பாக்கியர்கள் நாடு கடத்தப்பட்டனர். அவர்களுடைய சொத்துக்கள் யாவும் பறிமுதலாக்கப்பட்டன. ஆபத்தான மனிதர்களெல்லாம் கொல்லப்பட்டனர். சிப்ஸிலஸ் அரசாங்கத்தின் அதிகாரங்கள் அனைத்தையும் தம் கைவசமாக்கிக்கொண்டார். சிப்ஸிலஸ்ஸின் அரசாட்சியைப்பற்றி நமக்கு ஒன்றும் தெரியவில்லை. இவரைச் சிலர் கொடூரமானவர் என்றும், மற்றும் சிலர் மென்மையானவர் என்றும் கூறியுள்ளனர். இவருக்குப் பின்னல் இவருடைய குமாரரான பெரியாண்டர் பதவிக்கு வந்தார். இவரைப்பற்றி அதிகம் சொல்லப்பட்டிருக்கிறது. சக்தி வாய்ந்த குடியேற்றக் கொள்கை, விரிவான வாணிபக் கொள்கை, கலைகளுக்கு ஆதரவளிப்பது ஆகியவை சிப்ஸிலிட்டர்களுடைய கொடுங்கோலாட்சியின் முக்கியச் சிறப்புகளாம்.

சிப்ஸிலஸ்ஸின் முதலாவதான வெற்றி இவர் கார்சைராவை (Corcyra) அடக்கியதாயிருக்கலாம். கார்சைரா ஒரு கப்பற் படையை ஏற்படுத்தி, அயோனியன் கடல்களில் இவரது நாட்டிற்கு எதிரியாக விளங்கியது. இரண்டு கிரேக்க நாடுகளிடையே நடந்த முதல் கப்பல் சண்டையானது கொரிந்துவிற்கும் கார்சைராவிற்கும் என்று முன்னரே சொல்லப்பட்டுள்ளது. குடியேற்ற நாடுகளைக் கொண்ட ஒரு பேரரசை ஏற்படுத்தக் கொரிந்து எடுத்துக் கொண்ட முயற்சி மிகவும் சுவையானதாகும். இத் துறையில் சிப்ஸிலஸ்ஸின் கருத்துகள் இக் காலக் குடியேற்ற முறையை ஒத்

[7] ஏராக்கிளீஸிடமிருந்து தப்பி யூரிஸ்தீயஸ் ஒரு ஜாடியில் ஒளிவதை யூப்ரோனியஸ்ஸின் படம் எடுத்துக் காட்டுகின்றது.

துள்ளன. இக் காலத்தில் குடியேற்ற நாடுகள் தங்களது தாய்நாடு களுடன் சார்ந்திருக்கக் கூடிய தொடர்பைக் கொண்டு உள்ளன. ஆனால் கிரேக்கக் குடியேற்ற நாடுகள் சுதந்தர இறைமை பெற்ற அரசுகளாம். புவியியல் சூழ்நிலைகள் புதிய கொள்கையைச் சைரக்யூஸில் (Syracuse) உபயோகிக்க முடியாதபடி செய்தன. ஆனால் கார்சைராவில் கிடைத்த வெற்றியினால் கொரிந்து நகரம் கிரீஸ் நாட்டின் வடமேற்குப் பாகத்தில் தனது செல்வாக்கை அதி கப்படுத்த முற்பட்டது. கொரிந்தியர்கள் அக்கார்னேனியா (Acarnania)விலுள்ள லீயூகாஸ் (Leucas) தீபகற்பத்தில் குடி யேறி, பின் அங்குள்ள குறுகலான பூசந்தியை வெட்டி ஒரு கால்வாயை உண்டுபண்ணி லீயூகாஸை ஒரு தீவாக மாற்றினர். அம்ப்ரேஷியன் வளைகுடாவிற்குத் (Ambracian Gulf) தெற்கே அனக்டோரியன் (Anactorion) என்ற இடத்திலும் மேற்படி குடாவிற்கு வடக்கில் உள்ள நிலப்பகுதியில் (inland) அம்ப்ரேஷியா (Ambracia) என்னும் இடத்திலும் குடியேற்றங் களை அமைத்தனர். எப்பைரஸின் (Epirus) கடற்கரையோரத் தில் அப்பலோனியா (Apollonia) என்ற குடியேற்ற நாடு நிறுவப் பெற்றது. அதற்கு வடக்கேயுள்ள எப்பிடாம்னஸ் (Epidamnus) என்ற இடத்தைக் கார்சைரா தனது தாய்நாடாகிய கொரிந்துவின் ஆதரவில் ஒரு குடியேற்ற நாடாக்கிற்று. பிந்தி ஒரு காலத்தில் கிரேக்க உலகத்தின் மற்றொரு பாகத்தில், பெரியாண்டரின் மகன் ஒருவன் சால்சிடிக் (Chalcidic) தீபகற்பத்தில் பாட்டிடேயா (Potidaea) என்ற ஒரு குடியேற்ற நாட்டை அமைத்தார்.

சிப்ஸிலஸ்ஸும் பெரியாண்டரும் தமது நகரம் வாணிபத் துறையில் முன்னேறும்படி ஆவன செய்தனர். ஏழாவது நூற்றாண் டின் மத்தியில் யூபியாவிலுள்ள (Euboea) போட்டியிடும் இரு நகரங்களாகிய சால்சிஸ் (Chalcis)ஸும், எரிதிரியா (Eretria)வும் கிரீஸ் நாட்டிலேயே மிகப் பெரிய வாணிப அரசுகளாக இருந்தன. ஆனால் ஐம்பது ஆண்டுகளுக்குப் பின் ஒரு விதமாக மெலிந்தன. அவைகளின் இடத்தைக் கொரிந்துவும் ஈஜைனாவும் எடுக்கலாயின. இவைகளிடையே காணப்பட்ட போட்டி, லிலான்டைன் (Lelantine) சமவெளியைக் கொள்வதற்கான சோர்வு உண் டாக்கக்கூடிய ஒரு யுத்தமாக மாறிக் கடைசியில் இவர்களுடைய சீணிப்பை உண்டாக்கியது. இந்த இரண்டு நகரங்களின் போராட் டம் பெரியதொரு கிரேக்க வாணிப யுத்தம் போலாயிற்று என்று சொல்லப்படுகிறது. இந்த யுத்தத்தில் ஒரு பக்கத்தில் கொரிந்து வும் சாமாஸும் (Samos) சால்சிஸின் நேச நாடுகளாகவும், மற் றொரு பக்கம் மேகாராவும் மைலீட்டஸ்ஸும் எரிதிரியாவின் நேச நாடுகளாகவும் விளங்கின. இந்த யுத்தத்தின் காலத்தைக்

குறித்து நாம் சரியாகச் சொல்லுவதற்கில்லை. ஆனால் இந்தப் போராட்டம் அதிக ஆண்டுகள் நீடித்திருந்தது என்றும், நடுவில் சிலகாலம் சண்டை ஏற்படாமலிருந்தது என்றும், சண்டையின் போது ஏற்பட்ட விளைவுகள் சில சமயங்களில் யூபியாவைத் தாண்டியுள்ள இடங்களையும் பாதித்தன என்றும் நாம் திட்டமாகக் கூற முடியும். முன்னாள் கவிஞர் ஆர்க்கிலோக்கஸ், 'யூபியாவின் ஈட்டிகளை உபயோகிக்கும் சீமான்கள் கவண்களையும் வில்களையும் கொண்டு எறியாமல் தம் வாட்களினால் வெட்டுகிறார்கள்' என்று பாடினார்.

மேகாராவைச் சேர்ந்த தியோக்னீஸ் (Theognis) என்னும் கவிஞர் பிந்திய காலத்தில் இந்த யுத்தத்தின் முடிவைச் சமீபத்தில் நடந்த நிகழ்ச்சி என்று அடியில் கண்டவாறு குறிப்பிடுகிறார் :

> 'செரிந்தஸ் (Cerinthus) வீழ்ந்தது; லிலான்டைன் சமவெளியும் திராட்சைத் தோட்டங்களும் அழிந்தன; எல்லா நல்லவர்களும் ஓடிவிட்டனர்; நகரமானது தீய மனிதரின் அதிகாரத்தில் இருக்கின்றது. ஐயோ! சிப்ஸிலிட்ஸுகளும் ஓடட்டுமே.'

இவருடைய சொல்லானது யுத்தத்தின் முடிவில் உள்நாட்டுக் கலகங்கள் ஏற்பட்டன என்பதைக் காட்டுகின்றது. இந்தப் போராட்டத்தில் எரித்திரியா அதிக அல்லல் அடைந்தது; லிலான்டைன் சமவெளியில் தனது பாகத்தை இழந்தது. விரைவில் யூபியாத் தீவைத் தாண்டிக் கிரீஸ் நாட்டிலுள்ள ஓரோபஸ் (Oropus) சமவெளியையும் இது இழக்க நேர்ந்தது. ஆறாவது நூற்றாண்டில் இந்தச் சமவெளி தீப்ஸின் (Thebes) அதிகாரத்திற்குள் அடங்கிற்று. மேலும் ஆண்ட்ராஸ் (Andros), டீனாஸ் (Tenos), சீயாஸ் (Ceos) முதலிய தீவுகளிலுள்ள இதன் செல்வாக்குக் குறையலாயிற்று. சில காலங்களுக்கெல்லாம் இவைகள் அத்தீனிய ஆட்சிக்குள்ளாயின.

சால்சிஸ்ஸின் நலிவு கொரிந்துவின் வெளிநாட்டுக் கொள்கையில் ஏற்பட்ட புரட்சிகரமான மாறுதலினால் ஒருவேளை ஏற்பட்டிருக்கக்கூடும். இந் நகரம் முதலில் சாமாஸுடன் நட்புக் கொண்டிருந்தது. ஆனால் இப்போது இந்த நட்பை விட்டு விட்டுத் தனது பழைய எதிரியான மைலீட்டஸ்ஸுடன் ஒப்பந்தம் செய்துகொண்டது. கொடுங்கோலாட்சிகள் தமக்குள் கொண்டுள்ள இயல்பான ஒத்துணர்வு பெரும்பாலும் இந்த மாறுதலுக்குக் காரணமாயிற்று. மைலீட்டஸ்ஸின் ஆற்றல் பொருந்திய கொடுங்கோலராகிய த்ரேஸிபூலஸ் கொரிந்துவின் ஆற்றல் பொருந்திய கொடுங்கோலரான பெரியாண்டருக்கு இரக்கம்

காட்டினர். இந்தக் கொள்கையின் மாறுதல் வாணிப நாடுகளுக்கிடையே இருந்த சம நிலை மாறுதலில் தொடர்பு கொண்டிருந்தது. கொரிந்து நகரம் முந்திய காலங்களைக் காட்டிலும் மிகவும் செழிப்புள்ளதாயிற்று. இதற்கு முன் யூபியாவின் நகரங்கள் இருந்த இடத்தை ஈகைனு கொரிந்துவுடன் பாகம் பிரித்துக் கொள்ள முற்படுகின்றது.

பெரியாண்டரின் வெளிநாட்டு உறவுகள் எகிப்தையும் சேர்த்துக்கொண்டன. நெக்கோ (Necho), இரண்டாம் சாமெட்டிச்சஸ் (Psammetichus II) ஆகிய எகிப்து மன்னர்களுடன் பெரியாண்டர் கொண்ட கூட்டுறவு(intercourse)பற்றி இரண்டு குறிப்புகள் இருக்கின்றன. இவர் உடன்பிறந்தாரின் மகனும், பின்பு பட்டமேறியவருமானவர் எகிப்திய மன்னரின் பெயரைக்கொண்டு சாமெட்டிச்சஸ் என்றழைக்கப்பட்டார். மேலும் பெரியாண்டர் கால்வாய்களை அமைக்கும் ஆர்வத்தை நெக்கோவிடமிருந்து பெற்றிருக்கலாம் என நாம் ஊகிக்கலாம். பெரியாண்டர் சிறிய கால்வாய் ஒன்றை லியூக்காஸில் வெட்டியதும், கொரிந்து பூசந்தியில் கால்வாய் ஒன்று இவர் வெட்டத் திட்டமிட்டதும் தெரிந்ததே. ஆனால் எகிப்து மன்னரைப்போல் கிரேக்கக் கொடுங்கோலர் அடிமை வேலையாட்களை மிகுதியாகப் பெருததனுல் இந்தத் திட்டம் நிறைவேறவில்லை. இந்தக் கால்வாயை வெட்டும் முயற்சி பல தடவைகள் மேற்கொள்ளப்பட்டது. ஆனல் நமது காலம் வரை இது முற்றுப் பெறவில்லை. பெரியாண்டர் தம் கருத்துகளைச் செயல்முறைக்குக் கொண்டு வரப் போதிய மூலவளம் பெற்றிருந்தால், பிற்காலக் கிரேக்கத் தரைப் போர் முறையும் கடற்போர் முறையும் பெரிய அளவில் மாறுதலடைந்திருக்கும் என்பதற்குச் சந்தேகமேயில்லை.

பெரியாண்டரைப் போன்ற மிகவும் வெற்றி கொண்ட கொடுங்கோலர்கள் உடல் வாழ்க்கையை யொட்டிய (material) நாகரிகத்தை வளர்ப்பது மாத்திரமன்றி அவர்கள் அடிக்கடி அறிவாற்றலுள்ள தொழில்களிலும் ஆர்வத்தைக் காட்டிக் கலை வளர்ச்சிக்கும் ஒரு சில தொண்டாற்றினர். இந்தக் காலத்தில் கொரிந்துவில் டித்திராம்ப் (dithyramb) என்ற ஒரு புதிய வகைச் செய்யுள் வளர்ச்சி பெற்றது. டையோனீஸஸ்(Dionysus) ஸுக்காகக் கொண்டாடப்படும் திராட்சை ரசம் பருகும் விழாக்களிலே பாடப்படும் கரடு முரடான பாடல்களை எடுத்து அழகிய முறையில் அமைத்ததே டித்திராம்ப் செய்யுளாகும் (poetry). இதை முதலில் கண்டுபிடித்தவர் ஆரியோன் (Arion) என்னும் புராண நாடோடிப் பாடகர் என்கின்றுர்கள். இவர் கப்பற் பிரயாணம் செய்யும்போது, மாலுமிகள் இவருடைய பணம் யாவை

யும் எடுத்துக்கொண்டு இவரைக் கடலில் குதிக்கச் செய்ததாக வும், இவர் டால்பின் (dolphin) என்னும் டையோனீஸஸின் மீனின் முதுகில் ஏறிக் கொரிந்து பட்டினம் அடைந்ததாகவும் சொல்லப்படுகிறது.

கட்டிடம் கட்டும் கலையில். கோவில் கட்டுவதிலே ஒரு முக் கிய அமிசத்தைக் கொரிந்தியர்களின் திறன் உதவி செய்தது. முன் காலங்களில் செங்கற்களாலும், மரத்தாலும் கட்டப்பட்ட கோவில் திருவிடங்கள் ஏழாம் நூற்றுண்டில் மக்களால் கற் களினுல் கட்டப்பட்டன. கிரேக்க உலகத்தில் எல்லாப் பகுதி களிலும் கற்கோவில்கள் எழும்பலாயின. இவை அயோனியாவில் இலகுவான (lighter) அயோனிக் நடை (style) எனவும் கிரீஸ் முக்கிய நாட்டில் கனமான டோரிக் (Doric) நடையெனவும் இருவகையாயிருந்தன. கூரை ஓடுகளைக் கண்டுபிடித்ததனுல் கொரிந்தியத் தொழிலாளிகள் கூரைமீது மிகுந்த விருப்பத்தைக் (inclination) காட்டினர். இதனுல் கோவில்களின் ஒவ்வொரு வாசற்கால் சுவர் முகட்டிலும் ஒரு பெரிய முக்கோண வடிவமான இடம் விடப்பட்டது. இவ்விடங்களைச் சிற்பிகள் வேலைப்பாடுகள் கொண்ட சலவைக்கற்களால் நிரப்பும்படி செய்தனர். இந்த வேலைப்பாடுகள் நிறைந்த முகட்டைப் பெடிமெண்ட் (pediment) என்று நாம் அழைக்கின்றேம். ஆனுல் கிரேக்கர்கள் இதனை 'ஈகிள்' அல்லது 'கழுகு' என்றனர். அதன் பொருட்டுத்தான் நாம், 'கொரிந்து கழுகைக் கண்டுபிடித்தது' என்கின்றேம்.

இந்த நாள்வரையிற் பழைய கொரிந்து பட்டினம் இருந்த இடத்தைக் குறிப்பிடும் ஒரே குறி, அங்குக் காணப்படும் சுண்ணும் புக் கல் தூணுகும். இத் தூண்கள் ஒருவேளை பெரியாண்டரின் ஆட்சிக்காலச் சின்னங்களாயிருக்கலாம். இவை இரண்டு தனி அறைகள் கொண்ட ஒரு 'டோரிக்' கோவிலின் தூண் வரிசை யைச் சேர்ந்தவையாகும். இது அப்பல்லோவின் கோவில் திரு விடம். இரண்டாவது அறை ஒருகால் கருவூலமாயிருக்கலாம். டெல்பிக்கும் ஒலிம்பியாவிற்கும் சிப்ஸிலிட்ஸ் வழங்கிய படைப்புக் காணிக்கைகள் மிகவும் விலையுயர்ந்தவைகளும் குறிப்பிடத்தக்க வைகளுமாம். டெல்பியிலுள்ள கொரிந்தியர்களது பண்டகசாலை யைச் சிப்ஸிலஸ் கட்டியிருக்கலாம். ஒலிம்பியாவிலுள்ள ஹீரா வின் கோவிலில் கேதாரு (cedar) மரத்தால் செய்யப்பட்டுப் பெரியாண்டரால் படைக்கப்பெற்ற ஒரு பெரியபேழை (chest) இதைவிடப் பேர்போனது. ஏனென்றுல், இதைப்பற்றிப் புராணம் ஒன்று உளது. இதைச் சிப்ஸிலஸ்ஸின் பேழை என்கின் றனர். இதில்தான் லாப்டா தன் குழந்தையை மறைத்து

வைத்ததாகக் கூறப்படுகிறது. பேழையானது கட்டாயம் பார்க்கக் கூடிய இடம் என்பதை இந்தக் கதை மறந்துவிட்டது போலும்! மற்றும், இக் கதையிலிருந்துதான் கொரிந்தியர்கள் பேழையை ஜாடி என்றனர் என்ற கோட்பாடு உண்டாக்கப்பட்டது. இந்தப் பேழையின் மூன்று பக்கங்களில் புராணக் கதைகளிலுள்ள காட்சிகள் ஐந்து பட்டைகளில் (bands) சித்திரிக்கப்பட்டுள்ளன. இந்தப் பேழை எட்டு நூற்றாண்டுகளுக்குப் பின்னரும் காணப் பட்டது. அப்பொழுது இதைக் கண்ணுற்ற யாத்திரிகர் ஒருவர் இதனைப்பற்றி ஒரு தெளிவான வர்ணனை எழுதியுள்ளார். இந்த வர்ணனை பெரியாண்டர் காலத்தில் கிரேக்கக் கலை எவ்விதம் புராணக் கதைகளைக் கையாள முயன்றது என்பதை நாம் அறிய ஏதுவாகின்றது.

பெரியாண்டரின் அரசாங்கம் ஏனைய நகரங்களில் நடைமுறையிலுள்ள அரசாங்கங்களைப் போலவும், அக்காலக் கிரேக்கப் போக்கை அநுசரித்ததாகவும் இருந்தாலும், தற்கால நிலையைக் கொண்டு மதிப்பிட்டால் அதிகக் கண்டிப்பானதாயிருந்தது. இங்கு அதிகமான அடிமைகளைக் கொள்வதைத் தடுப்பதற்கும், அளவுக்கு மீறிச் செலவு செய்வதைத் தடுப்பதற்கும் சட்டங்கள் இருந்தன. அதே காலத்தில் மிதமிஞ்சிய ஆடம்பர வாழ்க்கையையும் சோம்பேறித்தனத்தையும் அடக்கவும் சட்டங்கள் இருந்தன. கிராம மக்களை நகரத்தில் தம் இருப்பிடங்கள் நிறுவ விடாமல் தடுப்பது ஒரு சட்ட விரோதமான குற்றமாகக் கருதப் பட்டது.

தனது குடும்ப வாழ்க்கையில் பெரியாண்டர் ஒரு துர்ப்பாக்கியசாலியாவார். எபிடாரஸ்ஸில் (Epidaurus) தம்மைக் கொடுங்கோலராக்கிக் கொண்ட ப்ராகிளிஸ்(Procles) ஸின் மகளாகிய மெலிசா(Melissa)வை இவர் மணம் புரிந்தார். இவர் தம் மனைவியைக் கொன்றுவிட்டதாகத் தெரிகிறது. இதனால் இவருக்கும் இவருடைய குமாரனான லைக்காப்ரனுக்கும் (Lycophron) தீராத பகை மூண்டது. கதைப்படி ப்ராகிளிஸ் தம் அரண்மனைக்குத் தம் இரு பேரர்களாகிய லைக்காப்ரனையும் அவனது சகோதரனையும் அழைத்திருந்தார். பிறகு அவர்கள் தம் ஊருக்குத் திரும்பிப் போகும்பொழுது, 'பிள்ளைகளே! உங்களுடைய தாயாரைக் கொன்றது யார் என்று உங்களுக்குத் தெரியுமா ?'' என்ற கேள்வியைக் கேட்டார். மூத்தவன் மந்தன்; எனவே, அவன் இதன் நோக்கத்தை அறியவில்லை. ஆனால் இளையவனாகிய லைக்காப்ரனின் மனத்தில் இவ் வார்த்தைகள் பதிந்தன. அதிலிருந்து அவன் தனது தகப்பனைச் சந்தேகித்ததுமன்றி அவனை

வெறுத்தான். பெரியாண்டர் லைக்காப்ரனை வற்புறுத்தி, ப்ரா கிளிஸ் சொன்ன யாவையும் அறிந்துகொண்டார். இந் நிகழ்ச்சி எபிடாரஸ்ஸுடன் ஒரு சண்டையில் முடிந்தது. இதில் ப்ரா கிளிஸ் பிடிபட்டார். லைக்காப்ரன் கார்சைராவிற்கு நாடுகடத்தப் பட்டான். ஆண்டுகள் பல கழிந்தன; பெரியாண்டரும் வயோதி கத்தை அடையலானார். தம் மூத்த மகனின் நிலையை உணர்ந்த அவர் லைக்காப்ரனிடம் தம் அரசாங்கத்தைக் கொடுக்க ஆசைப் பட்டார். மகனின் கோபமோ ஆறவில்லை. அவன் தன் தகப்பனார் அனுப்பிய தூதனிடம் பதில்கூட அளிக்கவில்லை. பிறகு பெரி யாண்டர் தம் மகளைத் தமக்காகப் பரிந்து பேசும்படி அனுப் பினார். லைக்காப்ரன் தன் தகப்பனார் கொரிந்துவில் இருக்கும்வரை தான் அப் பட்டினத்தில் கால் வைப்பதில்லை என்று கூறித் தூதனைத் திருப்பி அனுப்பிவிட்டான். இதன் பிறகு பெரியாண்டர் தாம் கார்சைராவிற்குச் செல்லவும் தம் மகனைக் கொரிந்துவிற்கு அனுப்பவும் திட்டமிட்டார். ஆனால் கொடுங்கோலர் ஒருவர் தம் மத்தியில் இருப்பார் என்ற எண்ணமே கார்சைரியர்களை நடுங்கச் செய்தது. எனவே, கார்சைரியர்கள் இந்தத் திட்டத்தை ஒழித்துக் கட்ட லைக்காப்ரனையே வெட்டிக் கொன்றனர். இந்தச் செய்கைக்குப் பெரியாண்டர் அவர்களை மிகவும் கொடூரமாகத் தண்டித்தார்.

இப் பெருங் கொடுங்கோலர் இறந்தார். இவருக்குப் பின் இவர் உடன்பிறந்த மகன் சாமெட்டிச்சஸ் பட்டத்திற்கு வந்தான். சில காலம் ஆட்சிக்குப்பின் இவனும் கொலையுண்டான். இவனுடன் சிப்ஸிடிலிட்டர்களின் கொடுங்கோல் முடிவடைந்தது. இதற்குப்பின் ஒரு வணிக உயர்குடியாட்சி திடமாக ஏற்படுத்தப் பெற்றது. இதே நேரத்தில் சிப்ஸிலிட்டர்களின் குடியேற்ற முறையும் ஓரளவு குன்றிற்று. கார்சைரா சுதந்தரம் அடைந்தது மன்றிக் கொரிந்துவின் பகையாளியாகவும் மாறியது. அம்ப்ரேஷி யர்கள் ஒரு மக்கள் ஆட்சியை ஏற்படுத்தினர். ஆனால் தன் மற்றக் குடியேற்ற நாடுகளுடன் கொரிந்து செல்வாக்குடன் இருந்தது மன்றி, அவை யாவற்றுடனும் நட்பினால் இணைக்கப்பட் டிருந்தது.

இந்தக் கொடுங்கோலாட்சிகளிடம் உள்ள இயல்பான இரக்கம் கொரிந்து, மேகாராவாகிய இந் நாடுகளினிடையே உள்ள தொடர்பைப் பாதித்தது. சிப்ஸிலிட்டரின் கொடுங்கோலாட்சி துவக்கிவைக்கப்பட்ட சில காலத்திற்குப்பின் மேகாராவிலும் இவ்விதமான மாறுதல் அரசியல் அமைப்பில் ஏற்பட்டது. இரு நகரங்களிடையே ஒரு நட்பு ஏற்பட்டது. நெசவாளிகளுக்குப்

பெயர்போன மேகாராவின் வாணிப முன்னேற்றம், பிரபுக்களைச் செல்வர்களாக்கிற்று. இவர்கள் அரசியல் அதிகாரங்களைத் தம் வசமாக்கி, மக்களைத் தம் கொடுங்கோலாட்சியினால் கொடூரமாக வதைத்து வந்தனர். தியாகினீஸ் (Theagenes) மக்களுக்கு ஒரு மீட்பனாகத் தோன்றிப் பின் தன்னையே கொடுங்கோலனாக்கிக் கொண்டான். சிப்ஸிலஸ்ஸின் எடுத்துக்காட்டும், ஒருவேளை அவனது செல்வாக்கும் துணையும் தியாகனீஸின் முயற்சிக்கு அடிகோலாயிருக்கலாம். மேகாராவைச் சேர்ந்த தியோக்னீஸ் (Theognis) என்ற புலவர் சிப்ஸிலிட்டர்களைப்பற்றித் தீராப் பகையுடன் கூறியுள்ள மொழிகள், கொரிந்துவிலும் மேகாராவிலும் உள்ள கொடுங்கோலாட்சிகளிடையே தொடர்பு இருந்திருக்க வேண்டும் என்பதைக் காட்டுகின்றன. தனக்கு மெய்க்காப்பாளர் படை ஒன்றைப் பெற்றுக்கொண்டவுடன், தியாகினீஸ் திடீரென உயர்குடிப் பிறந்தோரைத் தாக்கி அவர்களைக் கொலை செய்தான். இவனுடைய கொடுங்கோலாட்சியின் காலத்தில் இவன் சாதித்த முக்கியமான செயல் ஒரு கட்டுக் கால்வாயைக் கட்டியதேயாகும். இவன் பதவியிலிருந்து கீழே தள்ளப்பட்டான். ஆதலின், சிப்ஸிலிட்டர்களைப்போல் இவன் தன் பின் சந்ததியாருக்குத் தன் பதவியைக் கொடுக்கவில்லை. இதற்குப்பின் தம் அதிகாரங்களைத் திரும்பவும் பெற்றுக்கொண்ட உயர்குடிப் பிறந்தோருக்கும் மக்களுக்குமிடையே அரசியல் போராட்டம் ஒன்று தோன்றியது. ஆனால் சுத்தமான உயர்குடி யாட்சியின் காலம் கடந்து போயிற்று; மக்களோ புறக்கணிக்க அல்லது துடைத்துத் தள்ளிப்போடக் கூடாதவர்களாயும் இருந்தனர். உயர்குடியினரது அரசாங்கத்தினிடமிருந்து சலுகைகள் பிழிந்து எடுக்கப்பட்டன. முதலாளிகள் தம் உழவாளிகளிடமிருந்து பலாத்காரத்தோடு எடுத்துக்கொண்ட வட்டிப் பணங்களை அவர்களுக்குத் திருப்பிக் கொடுத்துவிட வேண்டும் என்ற சட்டத்தினால் உழவாளிகளின் பொருளியல் சார்ந்த நிலைமை ஓரளவுக்கு உயர்வு பெற்றது. கிராம மக்களுக்குக் குடியுரிமை அளிக்கப்பட வேண்டும், உழைப்பாளி மக்களைப் பேரவையில் சேர்த்துக்கொள்ள வேண்டும் என்பவை அவர்களது அரசியல் ஏலா நிலைகளைத் தணித்தன. இந்தச் சச்சரவுகளும், சமுதாயத்தில் காணப்பட்ட மாறுதல்களும், இவைகளைப்பற்றி உள் ஆராய்ந்தவரும் இவைகளுக்காகப் புலம்பியவருமாகிய தியோக்னீஸின் செய்யுட்களில் உருநிழல்போல் காணப்படுகின்றன. பாலிபெயிட் (Polypaid) குடும்பத்தைச் சேர்ந்த[a] ஓர் இளம் பிரபுவான சிர்னஸ்

[a] தியோக்னிடியா (Theognidea) என்பது பல காலங்களைச் சேர்ந்த பாடல்களின் கோவையாகும். இதில் மதுபானம் பருகும்போது

(Cyrnus) என்பவரைப்பற்றி இவர் ஆறுவது நூற்றாண்டின் முதல் பாகத்தில் மிகவும் உருக்கமாகப் பாடியுள்ளார். இவருடைய கடற் பிரயாணம் வீணாகப் போகவே இவர் தமது நிலத்தையும், செல்வத்தையும் கடைசியாகத் தமது செல்வாக்கையும் இழந்தார். இவர் தமது (உயர்குடியோரின்) வகுப்பினரது வருவதுணராததும் பேராசை நிரம்பியதுமான கோட்பாட்டை மிகவும் வலிமையுடன் தாக்கி, இப்படிப்பட்ட கோட்பாடு மற்றொரு கொடுங்கோலாட்சியை விளைவிக்கும் என்றார். ஆனால் இவருடைய இரக்கங்கள் யாவும் அதே நேரத்தில் உயர்குடியாட்சி அரசாங்கத்தினிடமே உள்ளன. குடியாட்சி முறை வளர்வதையும், கிராம மக்களின் மாறுதல்களையும் இவரால் பார்க்கச் சகிக்கவில்லை. இவர் கிராம மக்களை ஏனைய உயர்குடி மக்கள் வெறுப்பதுபோலவே தாமும் வெறுக்கின்றார். இந்தப் புதிய கால - இடச் சூழ்நிலைகளில் பிரபுக்களிடையுள்ள பிரிவுணர்ச்சி குறைய ஆரம்பித்ததுமன்றிக் கலப்பு மணங்களும் ஆங்காங்கே தோன்றலாயின.

> 'சுவர்கள் மாறவில்லை. ஆனால் எப்படி மனிதர் மாறுகின்றார்கள்! இதுவரை சட்டமெது, உரிமை எது என்றறியாமலும், மான்கள் மாதிரி வாழ்ந்தும், வெள்ளாட்டுத் தோலை மேலாடையாக அணிந்தும் வந்த கீழ்மக்கள் இப்போது பிரபுக்களாக உயர்த்தப்பட்டுள்ளார்கள். பிரபுக்களோ என்றால் எல்லா மனிதருடைய பார்வையிலும் கீழானவர்களாக ஆக்கப்பட்டுவிட்டார்கள். பரிதாபகரமான நிலைமை'

என்று இவர் புலம்புகிறார். சீக்கிரத்தில் கிரீஸ் நாட்டிலுள்ள ஓர் அரசாகிய மேகாராவின் முக்கியத்துவம் குறைந்தது. மேகாராவிற்கும் ஆதென்ஸுக்குமிடையே யுத்தம் ஏற்பட்டது. இந்த யுத்தத்தில் மேகாரா சாலமிஸ் தீவை இழந்தது. இந்த நிகழ்ச்சி மேகாராவின் அழிவிற்கும், அதனுடைய எதிரியாகிய ஆதென்ஸின் எழுச்சிக்கும் மிகவும் முக்கியமானதாயிற்று.[9]

வாணிப நகராகிய கொரிந்துவில் எப்பொழுது கொடுங்கோலாட்சி தோன்றியதோ அதே நேரத்தில் வேளாண்மையில்

---

பாடும் பாடல்கள், ஒழுக்கத்துறைக்குரிய பாடல்கள், அரசியல் பழமொழிகளைக் (apophthegms) கொண்ட பாடல்கள் முதலியன அடங்கியுள்ளன. சிர்னஸுக்குப் படைக்கப்பட்டிருக்கும் பாடல்கள் உண்மையான தியோக்னீஸ் எழுதியவையாகும்.

[9] பின்னால் ஐந்தாவது அத்தியாயத்தைப் பார்க்கவும்.

ஈடுபட்ட சிக்கியானிலும் (Sicyon) தோன்றியதாகத் தெரிகிறது. எவ்விதமான நிலையில் கொடுங்கோலாட்சி தோன்றியது என்பதை நாம் அறியோம். இதை முதலில் தோற்றுவித்தவரின் பெயர் ஆர்தோகோரஸ்[10] ஆகும். இந்தக் குடும்பத்தில் ஆறும் நூற்றாண்டின் முதல் பகுதியில் ஆட்சி செய்த கிளைஸ்தினீஸ்ஸைப்பற்றித் தான் முதன்முதலான வரலாற்று ஆவணம் காணப்படுகின்றது. சிக்கியானின்மேல் மேலாட்சி உரிமை கொண்டாடிய ஆர்காஸ் ஸுடன் இவர் கொண்ட பகைமையும், டெல்பியன் புனித யுத்தத் தில் இவர் எடுத்துக்கொண்ட பங்கும், இவருடைய அரசவையின் பகட்டும் நாம் அறியும் முக்கிய உண்மைகளாம். இவர் ஆர்காஸ் மக்களுடன் ஒரு யுத்தத்தில் ஈடுபட்டிருந்தார். இவர் நாடோடிப் பாடகர்களைச் சிக்கியானில் ஹோமரின் பாடல்களை உரத்துப் படிக்க அநுமதிக்கவில்லை. ஏனென்றால், அவைகளில் ஆர்காஸைப் பற்றியும், ஆர்காஸின் மக்களைப்பற்றியும் அதிகமாக வரையப் பட்டிருந்தன. சிக்கியானில் ஆர்காஸ் வீரனை அட்ராஸ்டஸின் வழிபாட்டு முறை மிகவும் அதிகமாக நடைபெற்று வந்தது. இதை இவர் ஒழித்தார். சிக்கியானிலும் ஆர்காஸிலும் உள்ள இனம் ஒரே பெயர்களைக் கொண்டிருக்கக் கூடாது என்று இவர் டோரிய இனப் பெயர்களை-ஐல்லீஸ், பாம்பைலி, டைமெனிஸ்— பன்றியர்கள் (Swine-ites), கழுதையர்கள் (Assites), பன்றியர்கள் (Pigites) என்ற பழிப் பெயர்களாலும், தம்முடைய இனத்தை 'ஆளுகிறவர்கள்' என்று அர்த்தம் கொள்ளும் ஆர்க்கிலாய் (Archelaoi) என்ற பெயராலும் மாற்றி அமைத்ததாகக் கூறப்படு கிறது. இப்பெயர்கள் இவருடைய மறைவிற்குப் பின் அறுபது ஆண்டுகள்வரை வழக்கில் இருந்து வந்தன என்று தெரிகிறது. இதன் பின்னர்ப் பழைய டோரியப் பெயர்கள் திரும்பவும் கொண்டு வரப்பட்டன. ஆர்க்கிலாய் என்ற பெயர் ஐஜியலீஸ் (Aigialeis) என்ற பெயராக மாற்றப்பட்டது. இத் தோற்றத்தில் இந்தக் கதையானது இருந்திருக்கவே முடியாது என்று எண்ணப் படுகிறது. ஏனென்றால், இவ்வகை மாறுதல் ஆர்காஸ் மக்களுக் கில்லாமல் சிக்கியானிலுள்ள மக்களில் பெரும் பகுதியினருக்கே பெரிய அவமதிப்பை உண்டுபண்ணியிருக்கும். ஆனால் இக் கொடுங் கோலர் தமது கோத்திரத்தின் பெயரை ஐஜியலீஸ் என்பதி லிருந்து ஆர்க்கிலாய் என்ற பெயருக்கு மாற்றியிருக்கக் கூடும்.

[10] அண்டிரியாஸ் (Andreas)ஸின் மகன் மைரான் (Myron); மைரானின் மகன் அரிஸ்டோனிமஸ் (Aristonymus); அரிஸ் டோனிமஸ்ஸின் மகன் கிளைஸ்தினீஸ் (Cleisthenes) என்று ஹெரோடட்டஸ் (Herodotus) கூறியுள்ளார். இவர் ஆர்தோ கோரஸ்ஸைப்(Orthogoras)பற்றியே கூறவில்லை.

'நான் என் வெள்ளாடுகளை மக்களை ஆட்சிபுரிபவர்களாக மாற்றிவிட்டேன்; ஆர்காஸைச் சேர்ந்த ஐஜியலீஸ் முதலியோரின் பெயர்களைப் பன்றிகள், கழுதைகள் என்று மாற்ற எண்ணம் கொண்டுள்ளேன்' என்று அவர் கேலியாகப் பேசினதிலிருந்து எப்படி இந்தக் கதை உருவாகியிருக்கும் என்பதை நாம் அறியக் கூடும்.

புகழ் பெற்ற ஆல்க்மியோனிட்ஸ் (Alcmaeonids) குடும்பத்தைச் சேர்ந்த அத்தீனியப் பிரபுவாகிய மேகாக்ளீஸுக்(Megacles) குக் கிளைஸ்தினீஸ் தன் மகளாகிய அகரிஸ்டா(Agarista)வை மணம் புரிந்து வைத்தான். 'அகரிஸ்டாவைக் (wooing of Agarista) காதலித்த'தைப்பற்றி ஒரு புராணக் கதை கூறுகின்றது. இக் கதை கொடுங்கோலனின் செல்வம், விருந்தினரை ஆதரிக்கும் பண்பு, அக்காலச் சமுதாயக் கருத்துகள் முதலியவற்றைத் தெளிவுறுத்துகின்றது. தன் மகளை மணப் பெண்ணாகப் பெற விரும்புவோர் யாவரும் அறுபது நாட்களுக்குள் சிக்கியானில் கூடித் தன்னுடைய அரச சபையில் ஓர் ஆண்டு விருந்தினராகவேண்டும் என்று, தான் இரதங்களின் பந்தயத்தில் வெற்றி பெற்ற அந்த ஒலிம்பிக் விழாவில் பறை சாற்றினான். அந்த ஆண்டின் இறுதியில் தன் மகளுக்கு உகந்தவர் யார் என்று தீர்ப்பளிப்பதாகவும் கூறினான். இதன்பின் தங்களைப்பற்றியும் தங்கள் குடும்பத்தைப் பற்றியும் பெரிய எண்ணங்கொண்ட எல்லாக் கிரேக்கர்களும் சிக்கியானுக்கு வந்து சேர்ந்தார்கள். தூர மேற்கில் சிபாரிஸ் (Sybaris), சிரிஸ் (Siris) என்ற இடங்களிலிருந்தும் மற்றும் எப்பிடாம்னஸ் (Epidamnus) ஈடோலியா (Aetolia), ஆர்கேடியா, ஈலிஸ், ஆர்காஸ், ஆதென்ஸ், யூபியா, தெசலி முதலிய இடங்களிலிருந்தும் அகரிஸ்டாவைக் காதலிப்போர் (suitors) வந்தார்கள். கிளைஸ்தினீஸ் ஒரு முழு ஆண்டுவரை அவர்களுடைய சிறப்புத் திறமையைச் சோதித்தான். அவர்களை உடற்பயிற்சிகளில் சோதித்தபோதிலும், அவன் அவர்களுடைய சமூகச்சார்பான பண்புகளை அதிகமாகக் கவனித்தான். அங்கு வந்திருந்தவர்களில் ஹிப்பாகிளிடிஸ் (Hippocleides) மேகாக்ளீஸ் (Megacles) என்ற இரு அத்தீனியர்கள் அவனுக்கு மனநிறைவை உண்டாக்கினர்; ஆனால், இவர்களில் அவன் ஹிப்பாகிளிடீஸையே அதிகமாக விரும்பினான். மகளுக்கு மாப்பிள்ளை தேர்ந்தெடுக்கும் நாள் வந்தது. அன்று கிளைஸ்தினீஸ் நூறு எருதுகளைப் பலியிட்டு அங்குக் கூடியுள்ள காதலர்களுக்கும் சிக்கியான் மக்கள் அனைவருக்கும் பெரிய விருந்து அளித்தான். விருந்திற்குப் பின்னர் மணம் கோருபவர்கள் சங்கீதத்திலும், உரையாடுவதிலும், போட்டியிட்டனர். எல்லாரையும் காட்டிலும் ஹிப்பாகிளிடீஸ் விளக்கமுற்றவனாயிருந்தான்.

அவனுடைய வெற்றி உறுதி என்று கூறும் நிலையிலுள்ளபோது அவன் குழல் ஊதியை அழைத்து ஒரு மெட்டைப் பாடச்செய்து நடனமாடினான். அவன் நடத்தையைக் கண்டு கிளேஸ்தினீஸ் வியப்பும் கலக்கமும் கொண்டான். ஹிப்பாகிளிடீஸ் தனக்கு வெற்றியைத் தரக்கூடிய ஒறு பெரிய சாதனையைச் செய்வதாக எண்ணி, ஒரு மேசையைக் கொண்டு வரச் செய்து அதன்மேல் நின்று ஸ்பார்ட்டர்கள் அத்தீனியர்கள் ஆகியோரின் நடனங்களை ஆடினான். கிளேஸ்தினீஸின் வியப்பு வெறுப்பாக மாறியது. ஆயினும் விருந்து ஓம்பும் நிலையிலிருந்த அவன், தன்னுடைய ஆத்திரத்தை அடக்கிக்கொண்டான். ஆனால் ஹிப்பாகிளீடீஸ் தன் தலையின் மேல் நின்று நடனமாட முற்பட்டபொழுது கிளேஸ்தினீஸ் ஆத்திரத்தை அடக்க இயலாது, 'ஓ, டிசாண்டரின் (Tisander) மகனே, நீ உன் மணப்பெண்ணை நடனமாடிக் கடத்தி விட்டாய்.' (O Son of Tisander, you have danced away your bride) என்று அலறினான். அதற்கு அந்த அத்தீனியன், 'ஹிப்பாகிளிடீஸ் கவலையுறவில்லை' (Hippocleides careth not) என்று பதிலளித்துக்கொண்டே நடனமாடினான். மேகாக்ளீஸ் அகரிஸ்டாவின் மாப்பிள்ளையாகத் தெரிந்தெடுக்கப்பட்டான். ஏமாற்றம் அடைந்த காதலர்கள் எல்லோருக்கும் விலையுயர்ந்த அன்பளிப்புகள் வழங்கப்பட்டன.

## 8. புனித யுத்தம் - அகில கிரேக்க விளையாட்டுகள்

கிளேஸ்தீனீஸின் முக்கியமான செயலும், அவனுக்குக் கிரேக்க உலகத்திலேயே பெரும் புகழைக் கொணர்ந்ததும் அவன் டெல்பிக் தெய்வ மொழி கூறும் புனிதத் தலத்தைக் காப்பாற்றியதேயாகும்.

போக்கியா(Phocia)வின் பட்டினமான கிரிஸ்ஸா(Crisa)வில்[11] டெல்பி (Delphi) அல்லது பிதோ (Pytho) கோவில் அமைந்திருந்தது. டெல்பியிலுள்ள பாசுரம் ஒன்று எப்படி அப்போலா கிரிஸ்ஸாவிற்கு வந்தார் என்பதை விளக்குகிறது. 'கிரிஸ்ஸாவானது பனியால் மூடப்பட்ட பார்னஸஸ்(Parnassus)ஸிற்குக் கீழேயுள்ள மேற்கைப் பார்த்த குன்றாகும். இதற்கு மேல்புறத்தில்

[11] கிரிஸ்ஸா, சிர்ஹா (Cirrha) என்ற பதங்கள் ஒரே பெயரின் இரு வகை வடிவங்களாம். இவை ஒரே பட்டினத்தைக் குறிக்கின்றன. கிரிஸ்ஸாவின் அழிவுக்குப்பின் இந்தப் பெயர் மக்கள் இறங்கும் அங்குள்ள துறைமுகத்திற்குக் 'கொடுக்கப்பட்டது. ஏழாவது நூற்றாண்டில், பிதியன் அப்போலோவிற்கான ஒரு பாசுரத்தில் கூறப்பட்டுள்ளது.

ஒரு பெரிய செங்குத்தான பாறையானது தள்ளிக்கொண்டு நிற்கின்றது. கீழ்ப் பாகத்தில் உட்குவியலான கரடுமுரடான பள்ளத்தாக்கு ஒன்றிருக்கின்றது. இங்கே எனக்காக ஓர் எழில் மிகுந்த கோவிலைக் கட்டுவேன். இது மக்களுக்குத் தெய்வ மொழி கூறுமிடமாகும்.'' கவிதை வரைந்துள்ள சித்திரமானது எவ்விதத்திலும் நிறைவுடையதே. 'பாறைகளின் பிதோ'வின் கோவில் திருவிடம் தட்டட்டி மாதிரி ஒரு செங்குத்தான சரிவில் கட்டப்பட்டுள்ளது. இதற்குப் பக்கத்தில் வெறுமையானதும் செங்குத்தானதுமான பார்னஸஸின் பாறைகள் மேகம் போல் காட்சியளிக்கின்றன. கீழேயுள்ள பிளிஸ்டஸ் (Pleistus) என்னும் ஆழமான பள்ளத்தாக்கைப் பார்த்திருப்பதுபோல் கோயில் தோற்றமளிக்கிறது. அவாவை வெறுத்து எல்லா இன்பங்களையும் துறந்தது போலும், அதே சமயத்தில் மாட்சிமையாகவும் காட்சியளிக்கும் இந்த இடம் தெய்வ மொழியைக் கூறுவதற்கு மிகவும் பொருத்தமான இடம். கோவிலுக்கு மேற்கே திராட்சைச் செடிகள் மிகுதியாக உள்ள ஒரு குன்றின்மேல் கிரிஸ்ஸா நகரம் கட்டப்பட்டுள்ளது. இந்நகரம் இதனைச் சேர்ந்ததும் தெற்கே கடல்மட்டும் அளாவி உள்ளதுமாகிய சமவெளியைப் பார்வையிடுவது போல் தோற்றமளிக்கின்றது. கிரிஸ்ஸாவின் மக்கள் டெல்பியர்களின் மேலும், தெய்வ மொழி கூறுமிடத்தின் மேலும் தமது ஆக்கிரமிப்பின் உரிமையைக் கொண்டாடி அங்குத் தெய்வத்தைப் பார்த்து ஆலோசனை கேட்க வரும் மக்களிடம் வரி வசூலித்தார்கள். தம்மை கிரிஸ்ஸியர்களின் கட்டுப்பாட்டிலிருந்து விலக்கிக்கொள்ள விருப்பம்கொண்ட டெல்பியர்கள் வடக்கிலுள்ள சங்கத்தின் உதவியை இயல்பாகவே நாடினார்கள். இந்தச் சங்கத்தில் போக்கியரது பகைவர்களான தெசலியர்கள் அப்பொழுது முக்கியமான உறுப்பினராக இருந்தனர். தெர்மோபைலி (Thermopylae) கணவாயை அடுத்துள்ள ஆந்தீலா(Anthela)விலுள்ள கோவிலைச் 'சுற்றி வசிக்கும்' மக்கள் இந்த மதசம்பந்தமான சங்கத்தைச் சேர்ந்தவர்கள். ஆகையால், இவர்கள் ஆந்தீலா அல்லது பைலீ (Pylae)யின் ஆம்பிக்டியோனியர்கள் (Amphictiones) என்றழைக்கப்பட்டனர். இந்தச் சங்கமானது அதிகப் பழையதாயிருக்கலாம், ஏனென்றால், பிதியோடிஸ் மக்கள் இந்தச் சங்கத்தில் ஒரு சுதந்தர உறுப்பினராக இருக்கின்றனர். இதிலிருந்து நாம் தெசலியர்கள் தெசலியில் அக்கியப் பிதியோடிஸை ஒன்றாகச் சேர்க்கு முன்னமே இந்தச் சங்கமானது உண்டாக்கப்பட்டிருக்க வேண்டுமென்று அறிகிறோம். இந்தச் சங்கமானது லோக்ரியர்கள் (Locrians), போக்கியர்கள் (Phocians), பியோஷியர்கள் (Boeotians), அத்தீனியர்கள் (Athenians), டோரியர்கள் (Dorians), மேலியர்கள் (Malians), டோலோபியர்கள் (Dolophians), ஈனியெனியர்கள்

(Enianes), தெசலியர்கள் (Thessalians), பேர்ராயியர்கள் (Perrhaebians), மாக்னீடியர்கள் (Magnetes) முதலியோர்களைத் தன்னகத்தே கொண்டுள்ளது. இந்தச் சங்கத்தின் உறுப்பினர்கள், இந்தச் சங்கத்தைச் சேர்ந்த நகரங்களின் ஓடுநீர் வசதிகளை அழிக்கவோ அல்லது நிறுத்திவிடவோ கூடாது என்று ஒரு கட்டுப்பாடு அமைத்திருந்தனர்.

அப்போலோவையும் அவருடைய ஊழியக்காரர்களான டெல்பிய மக்களையும் ஆதரித்துவந்த ஆம்பிக்டியோனியர்கள் இந்தப் புனிதத் தலத்தைத் தாக்கிய கிரிஸ்ஸா மக்களின்மேல் யுத்தம் ஒன்று தொடுத்தனர்.[12] டெல்பி தனக்குத் தெற்கில் ஒன்றும் வடக்கில் ஒன்றுமாக இரு ஆதரவாளர்களைப் பெற்றது. சிக்கியானின் கொடுங்கோலன் வளைகுடாவைக் கடந்து, தெய்வ பக்தியற்ற இந் நகரத்தின்மீது படையெடுத்தான். கிரிஸ்ஸாவை வென்று அதை உரிமைக் கட்டுப்பாடுகளுக்கு வரச் செய்வதோ அல்லது வாக்குறுதி தரக் கட்டாயப்படுத்துவதோ மாத்திரம் போதாது. துறைமுகத்திலிருந்து கோவில் திருவிடத்திற்குப் போகும் சாலையின்மேல் கிரிஸ்ஸா அமைக்கப்பட்டிருந்த இச் சூழ்நிலையால் அது முக்கியத்துவம் அடைந்திருந்தது. இந்த நகரம் யுத்தத்தின் முடிவில் தரைமட்டப்படுத்தப்படவேண்டும். அப்பொழுதுதான்தெய்வ மொழி கூறுமிடம் சுதந்தரமாக இருக்கக்கூடும் என்பது தெளிவாயிற்று. ஆம்பிக்டோனியர்களும் சிக்கியானியர்களும் ஒரு கடும் போராட்டத்திற்குப் பின் நகரத்தைப் பிடித்து, அதனைத் தரைமட்டமாக்கி, அங்கு வசித்துக்கொண்டிருந்த எல்லா மக்களையும் வாளுக்கு இரையாக்கினார்கள். கிரிஸ்ஸாவின் சமவெளி நிலமானது கடவுளுக்கு உரிமையாக்கப்பெற்றது. இந் நிலத்தைச் சாகுபடி செய்ய முற்படுவோர்களின்மேல் தூய பெரிய சாபங்கள் இடப்பட்டன. வடக்குக் கிரீஸை பெலோப்போனீஸஸிடமிருந்து பிரிக்கும் பெரிய வளைகுடாவினது முந்தையநாள் பெயர் கிரிஸ்ஸியன் வளைகுடாவாகும். இப் பெயர் போக்கியர்களின் நகரத்தின் முக்கியத்துவத்தை எடுத்துக் காட்டினது. இந்த யுத்தத்திற்குப் பின், தீபகற்பத்திலுள்ள நகரத்தின் பெயரை அடைமொழியாகக் கொண்டு நம்மெல்லோருக்கும் இப்பொழுது பழக்கமாயுள்ள 'கொரிந்தியன் வளைகுடா' என்ற பெயரை அது பெற்றது.

டெல்பிக்கும் ஆன்லாவின் ஆம்தீபிக்டியோனிக்கும் ஏற்பட்ட நெருங்கிய தொடர்பு இந்த யுத்தத்தினால் உண்டாகிய விளைவுகளில் ஒன்றாகும். டெல்பிக் கோவில் இந்த ஆம்பிக்டியோனியின் இரண்டா

[12] இந்த யுத்தம் ஏற்படும்படி அத்தீனியராகிய சோலான் மிகவும் தூண்டியதாகச் சொல்லப்படுகிறது.

வது கூடுமிடமாயிற்று. இதன் பொருட்டு அடிக்கடி இந்தச் சங்கம் டெல்பிக் ஆம்பிக்டியோனி என வழங்கப்பட்டது. கோவிலானது இந்தச் சங்கத்தின் ஆதரவின்கீழ்க் கொண்டுவரப்பட்டது. கோவில் சொத்துக்களின் நிர்வாகம் ஹீரோனீமானிஸ்ஸர்கள் (Heiromnemones) அல்லது புனித மன்றத்தார்களிடம் (sacred councillors) கொடுக்கப்பட்டது. இவர்கள் ஆண்டுதோறும் இளவேனிற் காலத்தில் ஒருமுறையும், இலையுதிர் காலத்தில் மறுமுறையுமாக இருமுறை ஆந்திலாவிலும் டெல்பியிலும் சந்திப்பார்கள். சங்கத்தின் ஒவ்வோர் உறுப்பினரும் இரண்டு ஹீரோனீமானிஸ்ஸர்களை தமது பிரதிநிதியாக அனுப்பினர். தெய்வ மொழியை கூறுமிடமும், டெல்பியின் மதகுருக்களாகிய பிரபுக்களும் இப்படி ஒரு சுதந்தரப் பதவியை அடைந்தனர். அவர்களுடைய செல்வச் செழிப்பும் அதிகாரமும் கூடிய வாழ்க்கைநெறி ஆரம்பமாயிற்று. பிதியன் விளையாட்டுகள் ஒரு சிறந்த முறையில் மாற்றியமைக்கப்பட்டன. ஆம்பிக்டியோனியர்களின் முக்கியமானதொரு கடமை இந்த விளையாட்டுகளைச் சரிவர நடத்துவதேயாகும். இந்த விழா, ஒலிம்பிய விழாவைப்போல் நான்கு ஆண்டுகளுக்கு ஒருமுறை நடத்தப்பட்டது. இந்த விழா ஒவ்வொரு ஒலிம்பியாட்டிற்கும்* மத்தியில் நடைபெற்றது. முதலில் சங்கீதப் போட்டி ஒன்றுதான் நடைபெற்றது. ஆனால் பிற்காலத்தில் உடற்பயிற்சிப் போட்டிகளும் சேர்க்கப்பட்டன. முதலில் பணத்தினாலாகிய பரிசுகள் வழங்கப்பட்டன. ஆனால் பிற்காலத்தில் இவைகளுக்குப் பதிலாக வாகையைப் போன்ற வெற்றித்தழை ஒன்றைக் கொண்ட மாலை வழங்கப்பட்டது. கிரிஸ்ஸாவின் அழிவுச் சின்னங்களுக்கு தெற்கேயுள்ள சமவெளியைக் குதிரைப் பந்தயம் (race course) முதலியன நடைபெறும் ஒரு பெரிய அரங்காக மாற்றியமைத்தவுடன் நடந்த முதல் இரதங்களின் பந்தயத்தில் கிளைஸ்தினீஸ் வெற்றி மாலை அணிந்தான். இதற்குப் பக்கத்தில் உடற்பயிற்சி வல்லுநர் ஓடுவதற்காகவும், மல் யுத்தங்கள் செய்வதற்காகவும் விளையாட்டுப் பந்தய அரங்கு இருந்தது. சில ஆண்டுகளுக்குப் பின்னர் ஒரு புதுப் பந்தய அரங்கு டெல்பிக்குமேலே செங்குத்தான பாறைகளின் கீழே கட்டப்பட்டது. புனித யுத்தத்திலும் விளையாட்டுகளிலும் பெரும் பங்கு கொண்டமையால் கிளைஸ்தினீஸின் பெயர் ஓங்கி வளர்ந்தது. தனது வெற்றியை நினைவுகூர்வதற்காகச்

* குறிப்பு: ஒலிம்பியாட் என்பது ஓர் ஒலிம்பிக் விளையாட்டுக்கும் அடுத்த விளையாட்டுக்கும் இடையிலுள்ள 4 ஆண்டுகளாம். இங்குப் பிதியன் விளையாட்டுகள் ஒலிம்பிக் விளையாட்டு ஒன்று முடிந்த இரண்டாவது ஆண்டில் நடைபெற்றன. பழைய கிரேக்கர்கள் ஒலிம்பிக் விளையாட்டுகளைக்கொண்டே தமது காலங்களை வரையறை செய்தனர்.

சிக்கியானில் இவர் பிதியன் விளையாட்டுகளை நிறுவினர். பிற்கால வரலாற்றில் விதியின் வஞ்சக விளையாட்டால், இந்த விளையாட்டுகள் பகை கொண்ட வீரனாகிய அட்ராஸ்டஸ்ஸுடன் இணைக்கப்பெற்றன. புனித யுத்தத்திற்குமுன் டெல்பிக் புறமதிலகத்தினுள் சிக்கியானின் பண்டகசாலை இருந்ததாகச் சொல்லப்படுகின்றது. இதன் வட்டவுருவத்தில் சில பாகங்களும் சில பழைய சிற்பங்களும் கண்டுபிடிக்கப்பட்டன. யுத்தத்திற்குப் பின் சில காலங்களுக்குள் பழைய கட்டடமானது ஒரு புதிய கட்டடத்திற்கு இடம் கொடுக்க நேர்ந்தது. இந்தப் புதிய கட்டடம் ஒரு டோரிக் கோவிலின் உருவத்தில் தோன்றிற்று. கிளைஸ்தினீஸ் இந்தப் பெரிய கருவூலத்தை நிறுவினர் என்பது ஒருவராலும் மறுக்க முடியாத உண்மையாகத் தோன்றுகிறது.

கிட்டத்தட்ட இந்தச் சமயத்தில் பூசந்தியிலும், நிமியா (Nemea)விலும் வேறு இரண்டு அகில கிரேக்க விளையாட்டுகள் நிறுவப்பட்டன. பெருமைக்கான பாசிடோன் (Poseidon)னின் இந்தப் பூசந்தி விளையாட்டுகள் பெரியாண்டரினல் நிறுவப்பட்டனவா அல்லது சாமெட்டிச்சஸின் மறைவுக்குப் பின் கொடுங்கோலாட்சி முடிவு பெற்றதை நினைவுறுத்த இவை ஏற்படுத்தப்பட்டனவா என்பதை நாம் திட்டமாகச் சொல்ல இயலவில்லை. நிமியன் ஸீயூஸின் பெருமைக்காக ஏற்படுத்தப்பட்ட விளையாட்டுகள் சிறிய நகராகிய கிளியோனியால் நிர்வகிக்கப்பட்டு வந்தன. இவை ஆர்காஸின் செல்வாக்கினல் நிறுவப்பட்டன போல் தோன்றுகின்றன. பூசந்தி விழாவும், நிமியன் விழாவும் இரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை நடைபெற்றன. இப்படி ஆருவது நூற்ருண்டின் ஆரம்பத்திலிருந்து நான்கு அகில கிரேக்க விழாக்கள் கொண்டாடப்பட்டன. இவைகளில் இரண்டு பெலோப்போனீஸஸிலும், ஒன்று பூசந்தியிலும் மற்றுமொன்று வடக்கிலும் கொண்டாடப்பட்டன. கிரேக்க வரலாற்றுக் காலம் முழுவதிலும் இவைகளின் மதிப்புக் குன்றவேயில்லை.

இந்த நான்கு அகில கிரேக்க விழாக்களும் சகல கிரேக்கர்களுக்குள் தாம் யாவரும் தோழமை பெற்றவர்கள் என்ற உணர்ச்சியைப் பேண உதவியது. இந்த உணர்ச்சியை மேம்படச் செய்தது இந்த விளையாட்டுகளை அகில கிரேக்க நிலைக்கு உயர்த்திய அரசர்களின் ஆழ்ந்து ஆராய்ந்த கொள்கையாகும் எனச் சிந்திக்க நேர்கின்றது. ஒற்றுமைக்காக எட்டாம் நூற்ருண்டில் துவங்கிய மனேபாவத்தின் வெளிப்பாடே இந்த விழாக்கள் என்பதை நாம் மறந்து போகக்கூடாது. இதற்கு முன்னரே எப்படிக் குடியேற்றங்கள் இந்தப் போக்கை ஆதரித்தனவென்றும், எப்படி கிரேக்க இனங்களுக்கு ஒரு பொதுவான பெயர்

புகுத்தினதால் இந்தப் போக்கு உறுதியானது என்றும் நாம் கவனித்தோம். ஏழாவது நூற்றுண்டின் மத்தியில் ஆர்க்கிலோகஸ்ஸின் செய்யுள் ஒன்றில் 'அகில கிரேக்கர்கள்' என்ற பெயரைக் காண்கின்றோம். இதற்கு முன்னரே ஹோமரின் கப்பல்களைக் கூறும் அட்டவணையில் 'அகில கிரேக்கர்களும் அக்கியர்களும்' என்னும் சொற்றொடர் காணப்படுகின்றது.

அகில கிரேக்க எண்ணமானது, அதாவது பொதுவான விருப்பங்களையுடைய ஒரு பொதுவான கிரேக்க இனத்தைச் சேர்ந்தவர் என்னும் கற்பனை, வீரர்களின் யுகத்தைச் சேர்ந்த செய்யுட்களைக் கொண்ட ஆவணச் சீட்டுகளால் ஊக்கப்பட்டது. ட்ரோஜன் யுத்தம் கிரீஸின் வடபாகம், தென்பாகம் யாவும் சேர்ந்து எடுத்துக்கொண்ட ஒரு பொதுவான முயற்சியாக எண்ணப்படுகிறது. பழைய காலத்துக் கவிதைகள் இந்து இராணுவத்தை 'அக்கியர்கள்' அல்லது 'ஆர்கைவியர்கள்' என்று தாம் நினைத்தவாறு கூறியுள்ளதே இதற்கு எடுத்துக்காட்டு. கிரேக்க மொழியை அறிந்த எல்லா மக்களையும் இணைத்தது இந்த ஹோமரின் செய்யுட்கள். ட்ராயின் நினைவு தேசீய உணர்ச்சியில் காணப்பட்ட ஒரு முக்கியப்பொருள் என்று நம்மால் சொல்ல முடியாதபோதிலும், நாம் தைரியமாக இது சமுதாய உணர்ச்சியில் காணப்படும் ஓர் அரிய பொருள் என்று கூறலாம். பிதியன் அப்போலோவைக் கிரீஸில் முக்கியமானதும் முதன்மையானதுமான தெய்வமொழி கூறுமிடம் என்று கொண்டதும் இந்தச் சமுதாய உணர்ச்சியைக் காட்டுகின்றது. டெல்பிக் கடவுளது மதிப்பின் வளர்ச்சியைக் கொண்டு நாம் யாவரும் ஓர் இனத்தவர் என்னும் சமுதாய உணர்ச்சியின் வளர்ச்சியை ஒரு வகையில் நாம் அளக்க முடியும். கிரேக்க உலகத்திலுள்ள எல்லா பாகத்திலிருந்து வரும் யாத்திரிகர்களும் தூதர்களும் சேர்கின்ற இடமாகிய டெல்பி கிரேக்க நகரங்கள் ஒன்றோடு ஒன்று தொடர்பு கொண்டு இருக்கவும், செய்திகளைப் பரவச்செய்யவும் உதவியது. இந்தக் காரியங்கள் அகில கிரேக்க விளையாட்டுகளில் அவ்வளவு முக்கிய இடம் பெறவில்லை. அக்கம் பக்கத்திலுள்ள அரசுகள் கூடி ஏற்படுத்தும் கூட்டுக் குழுக்களில் (leagues—முக்கியமாக இவைகள் சமயத்தைப் பொறுத்தவை)கூட இந்த ஒன்றும் தன்மையின் போக்குகளை நாம் கவனிக்கலாம். காலூரியாவின் (Calauria) கடல் சார்ந்த கூட்டுக்குழு ஓர் எடுத்துக்காட்டாகும்.[13] ஆந்தீலாவின் வடக்கு ஆம்பிக்டியோனி மற்றோர் எடுத்துக்காட்டாகும். சீக்கிரத்

[13] 4ஆம் அத்தியாயத்தைப் பார்க்கவும். டிலாஸின் அயோனிக் கூட்டுக் குழுவைப்பற்றி அறிய 5ஆம் அத்தியாயத்தைப் பார்க்கவும்.

தில் நாம் டிலாஸிலுள்ள (Delos) அயோனிக் கூட்டாட்சியைப்பற்றிச் சிறிதளவு பார்ப்போம். ஆறுவது நூற்றுண்டின் முதலில் இத்தாலியில் உள்ள நகரங்கள் ஒருவித வாணிபக் கூட்டுக் குழுவை உண்டாக்கிக்கொண்டன. இது அவர்களுடைய நாணயங்களிலிருந்து தெரிய வருகிறது.

இந்த ஒன்றும் தன்மையின் போக்குகள் ஒரு பொழுதும் கிரேக்கர்கள் யாவரையும் ஓர் அரசியல் ஒற்றுமையில் சேர்க்க முடியவில்லே. கிரேக்க இனம் ஒருபொழுதும் ஒரு கிரேக்கத் தேசீய இனமாகவில்லே. உள்ளூரின் சுதந்தரத்தின்மேல் கொண்டுள்ள ஆசையானது அகில கிரேக்க எண்ணத்தைவிட அதிகமாகவே இருந்தது (அகில கிரேக்க எண்ணமானது உள்ளூரின் சுதந்தரத்தின்மேல் கொண்டுள்ள ஆசையைவிடக் குறைவாகவே காணப்பட்டது). ஆனுல் கருத்தளவில் ஒற்றுமை எய்தப்பெற்றது. இப்பொழுது நாம் கவனித்துக்கொண்டிருக்கும் நம்பிக்கைகளிலும், நிறுவனங்களிலும் இந்த ஒற்றுமை எய்தப்பெற்றது. இவைகள் கிரேக்கர்களுடைய மனத்திலே கூட்டாளிகள் என்ற எழுச்சியுள்ள உணர்ச்சியையும், அங்கே அரசியல் சம்பந்தங்களில் இணைப்பு இல்லாதபோதிலும் கிரீஸ் மேல் ஓர் ஆழ்ந்த தற்பெருமையையும் உண்டாக்கின. டெல்பிக் தெய்வமொழி கூறுமிடம் அரசியல் ஒற்றுமையை வளர்க்க முயற்சியொன்றும் எடுக்கவில்லே என்பதையும், ஆனுல் இது வேறுவிதமான ஒற்றுமையைத் தன்னே யறியாமலே உண்டு பண்ணியது என்பதையும் நாம் மறக்கக்கூடாது. இவ்விதமான முயற்சிகளே இது எடுத்திருந்தால் அவை யாவும் தோல்வி யடைந்திருக்கும். ஏனென்ருல், இந்த இடத்திற்குத் தெய்வமொழி தொடங்கிவைக்கும் செல்வாக்குச் சிறிதளவும் இல்லே. கிரேக்க அரசுகள் அப்போலோவைத் தமது கொள்கையைப் பிறப்பிக்க அல்லது இயக்கிவைக்க(வழிகாட்ட)க் கேட்கவில்லே. தாம் முன்னதாகவே எண்ணியுள்ளவைகளுக்கு அவருடைய மேலாண்மை உரிமையையே நாடினுர்கள்.

பீயோஷியர்கள் வடக்கு ஆம்பிக்டியோனியில் ஓர் உறுப்பினராயிருந்தார்கள் என்று பார்த்தோம். பீயோஷியாவின் ஒற்றுமை ஒரு கூட்டாட்சியாகக் காட்சியளித்தது. இந்தக் கூட்டாட்சியில் தீப்ஸ்தான் மிக முக்கியமான உறுப்பு. தீப்ஸ் பீயோஷியாவின் தலைநகரமாயிருந்ததால்மாத்திரம் இது முக்கியத்துவம் பெறவில்லே. பிற்காலத்தில் இது ஒரு முக்கியமான காரியமாயிருந்தது. பீயோஷியாவின் கூட்டாட்சி நடுவர்கள் பீயோடார்க்கர்களின் (Boeotarchs) தமு (board) என்றழைக்கப்பட்டனர். இந்தக் குழுவிற்கு ஏனேய நகரங்கள் ஒவ்வொரு பிரதிநிதியை அனுப்புங்கால்

தீப்ஸோ இருவரை அனுப்பியது. இதுவே இதன் முக்கியத்துவத்திற்கு ஒரு பெரிய காரணமாகும். பீயோஷியாவின் கூட்டாட்சியின் சமயச் சார்பான மையம் (religious centre) ஆன்செஸ்டஸ் (Onchestus)ஸிலுள்ள பாசிடோனின் கோவிலாகும். பழைய கிரேக்கக் கூட்டாட்சிகள் யாவும் முதலில் சமயச் சார்பான கூட்டாட்சிகள். பின்புதான் இவை அரசியல் கூட்டாட்சிகள் ஆயின. ஏழாவது நூற்றுண்டில் இது அகில பீயோஷியாவையும் தன்னகத்தே கொள்ளவில்லை. ஆர்த்கோமீனஸ் இன்னமும் எதிர்த்து நின்றது. கடைசியில் தீப்ஸ் ஆர்கோமீனஸை சேரும்படி வற்புறுத்திற்று. ஆருவது நூற்றுண்டில் ஓரோபஸ்(Oropus)ஸின் 'கிரேயியன்' (Graian) நிலம் இதனுடன் சேர்க்கப்பெற்றது. இப்படி ஒற்றுமையடைந்த பீயோஷியாவிற்குச் சில (weak) வலுவற்ற கூறுகள் இருந்தன. பீயோஷியாவின் ஒற்றுமையைக் காப்பாற்றுவது தீப்ஸின் ஆற்றலைச் சார்ந்திருந்தது; சில நகரங்கள் விருப்பமேயில்லாத உறுப்புகளாக இருந்து வந்தன. இவை யாவற்றுக்கும் மேலாக ப்ளெட்டியா (Plataea) துடிதுடித்துக்கொண்டிருந்தது. அது பீயோஷிய குடியேறிகளிடம் சேராமல் தனது தூய்மையைப் பேணி வந்தது. ப்ளெட்டியாவின் வரலாறு - அதன் முக்கிய நிகழ்ச்சிகளில் சில நம் முன் கடந்து செல்லும் - முழுவதும் பழைய கிரேக்கக் குடிகளுக்கும் பியோஷீய வெற்றி வேந்தர்களுக்கும் இடைவிடாது நடந்து வந்த ஒரு தனிப்பட்ட போராட்டம் என்று நாம் கருதிக்கொள்ளலாம்.

# 4. அட்டிகா ஒன்று சேர்தலும் அத்தீனிய மக்களாட்சி நிறுவப்படுதலும்

## 1. அட்டிகா ஒன்றுசேர்தல்

எழுத்து மூலமாய்ப் பதிந்துகொண்ட வரலாறு துவங்கிய போது ஆதென்ஸின் சரித்திரமானது அட்டிகாவின் கதையாக இருந்தது; அட்டிகாவின் மக்கள் அத்தீனியர்களாயிருந்தனர். ஆனால் ஒரு காலத்தில் அட்டிகாவிலும், அதன் அயல் நாடான பீயோஷியாவைப் போலவும் ஏனைய கிரேக்க நாடுகளைப் போல பல சுதந்தர நாடுகள் இருந்தன. சில சிறிய நாடுகள் புராணக் கதைகளில் மங்கலாகக் காணப்படுகின்றன. ஐமெட்டஸ் (Hymettus) மலையின் வடகிழக்குச் சரிவுகளின் அடிவாரத்தில் உள்ள பல்லீனி (Pallene) யில் பாலாஸ் (Pallas) என்ற அரக்கர் ஆட்சி புரிந்ததாகவும், தோரிகஸ் (Thoricus)ஸின் தெற்குப் பிரதேசத்தில் பயங்கரமான கெப்பாலஸ் (Cephalus) ஆண்டதாகவும், பென்டெலிக்கஸ் (Pentelicus) மலையின் அடிவாரத்தில் உள்ள ஆத்மோனனில் (Athmonon) மிகவும் உயரமான பார்பைரியோன் (Porphyrion) நாடாண்டதாகவும் புராணக் கதைகள் நவிலுகின்றன. வெகு காலத்திற்கு முன் மியூனீச்சியா (Munychia) குன்றானது ஒரு தீவாகவும், தன் உச்சியில் ஒரு கோட்டையுடனும் இருந்தது. பிர்யெயெஸ் (Piraeus) என்ற பெயர் அப் பழங்கால நினைவைக் காட்டுவதாகச் சொல்லப்படுகின்றது. அக் காலத்தில் மியூனீச்சியச் சீமான்கள் பெருநிலப் பகுதியைப் பார்த்து அதை 'எதிர் கரை' அல்லது பிர்யெயஸ் என்று அழைத்தனர். பின்னர் ஒரு காலத்தில் அக்கம்பக்கத்திலுள்ள கிராமங்கள் அரசியல் அல்லது சமய இணைப்புகள் இவைகளால் ஒன்று சேர்க்கப் பட்டிருந்தன. இவ்வண்ணம் வடக்கில் பென்டெலிக்கஸ்ஸிற்கு அப்பால் மாரத்தான் (Marathan), ஒயினி (Oenoe) என்ற வேறு இரண்டு பட்டினங்கள் சேர்ந்ததே டெட்ராபோலிஸ் (tetrapolis)

ஆகும். ஏராக்கிளிஸ் தெய்வ வழிபாட்டிற்காகப் பிர்யெயஸ், பால ரோன் என்ற வேறிரண்டு இடங்கள் சேர்ந்து நான்கு கிராமங்கள் என்று அழைக்கப்பட்டன. சிதிரோன் மலேக்கும், சூனியம் முனேக்கும் இடையிலுள்ள முக்கியமான நாடுகள் எலியூஸிஸ் (Eleusis)ஸும் ஆதென்ஸும் ஆகும். இவை இரண்டும் ஈகாலியோஸ் (Aegaleos)மலேத் தொடரினுல் ஒன்று மற்றென்றிலிருந்து பிரிக்கப்பட்டிருந்தன.

கடலிலிருந்து ஐந்து மைல்களுக்குள்ளே, செபிஸ்ஸியன் (Cephisian) சமவெளியின் மத்தியிலுள்ள கோட்டையாகிய ஆதென்ஸின்மேல், அட்டிகாவின் ஒற்றுமையை உருவாக்கும் வேலேயை ஊழ்வினேயானது சுமத்தியது. தெற்கே சாரோனிக் வளேகுடாவைக் கொண்ட செபிஸ்ஸியன் சமவெளியானது, மற்றப் பக்கங்களில் மலேகளால் சூழப்பட்டுள்ளது. அன்றியும், மேற்கில் ஈகாலியோஸ் மலேயாலும், வடமேற்கில் பார்னெஸ் (Parnes) மலேயாலும், கிழக்கில் ஐமெட்டஸ் மலேயாலும், வடகிழக்கில் பார்னெஸ் ஐமெட்டஸ் என்ற மலேகளாலும் இடையிலுள்ள திறப்பானது முக்கோணச்சுவர் முகடு போன்ற பென்டெலிக்கஸ் மலேயினுலும் சூழப்பட்டுள்ளது. ஆதென்ஸிற்குச் சற்று மேற்கே செபிஸ்ஸஸ் நதியானது பாய்கின்றது. ஆனுல் அத்தீனியச் சேம அரணுகிய அக்ராபோலிஸைச் சுற்றி இரு சிற்றுறுகளாகிய இலிஸஸ் (Ilisus)ஸும் எரிடானஸ் (Eridanus)[1]ஸும் ஓடுகின்றன. மூன்ருவது ஆயிரம் ஆண்டில் அக்ராபோலிஸ் மக்கள் அதனேத் தம் உறைவிடமாகக் கொண்டிருந்ததை நாம் கவனித்தோம். வெண்கலக் காலத்தில் கிரீஸில் வலிமை பொருந்திய இடங்களில் இது ஒன்ருகும். செங்குத்தான மலேயின் ஓரத்தைப் பாதுகாக்கக் கோட்டையிலிருந்த பெலாஸ்ஜியப் பிரபுக்கள் கட்டிய சாம்பல் நிறமும், நீலநிறமும் சேர்ந்த கண்ணும்புக் கற்சுவரின் உடைந்த பாகங்கள் இன்றும் காணப்படுகின்றன.[2] இப் பழைய சுவரை பேலார்க்கிகான் (Pelargikon) என்றனர். ஆனுல் பிற்காலத்தில் இந்தப் பெயரானது வடமேற்குச் சரிவிலுள்ள நிலப் பகுதிக்கு வழங்கப்பட்டது. அக்ராபோலிஸ் அரியோபேகஸ் (Areopagus)ஸுடன் ஓர் உயர்ந்த கணவாயினுல் சேர்க்கப்பட்டுள்ளது. இதுவே அதன் இயற்கையான வழியாகும். இந்தப் பக்கத்தில்

[1]இப்பொழுது இந்த ஆறு அங்கு இல்லே. ஆனுல் அதன் படுகை கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.

[2]அக்ராபோலிஸ்ஸிற்கு வடக்குப் பாகத்தில் வரலாற்றிற்கு முன்னுன காலத்தின் வீடுகளின்-ஒருகால் அரச அரண்மனேயின்—அழிவுச் சின்னங்கள் காணப்பட்டன (முதலாம் அத்தியாயத்தைக் காண்க.)

பல சுவர்கள் கட்டப்பட்டுள்ளன. ஆகையால் மேற்கிலுள்ள முக்கிய வாயிலே அடைய வேண்டுமாளுல் ஒன்பது சிறிய வாசல் களைத் தாண்டிச் செல்ல வேண்டியிருக்கிறது. வடமேற்கு மூலையில் கிளெப்சைட்ரா கிணற்றிற்குக் கூட்டிச் செல்ல ஒரு மூடியிடப் பட்ட படிக்கட்டு இருக்கின்றது. இந்தக் கிணறு இக் கோட்டைக்கு நீர் வசதிகளை அளித்தது. வடக்குப் பாகத்தில் இரண்டு பின்புறக் கதவுகள் இருந்தன. இவைகளின்மூலம் கீழே சமவெளிக்குப் போகும் வழிகள் மிகவும் செங்குத்தானவை. இந்தக் கட்டிட வேலே பெலாஸ்ஜியர்களால் செய்யப்பட்டுக் கிரேக்கப் பின் மரபினர்களுக்கு மரபுரிமையாக வந்திருக்கலாம்.

பெலாஸ்ஜியர்களின் அக்ராபோலிஸை முதலில் கைப்பற்றிய கிரேக்கர்கள் ஒருகால் கெக்ரோப்(Cecropes)பியர்களாயிருக்க லாம். அவர்களுடைய பெயர், ஒரு சுதந்தரமான மக்களின் பெயர் என்பது மறந்து போகப்பட்டாலும் வேறுவிதத்தில் இது இன்றும் நிலவுகின்றது. ஏனென்ருல், பிந்திய அத்தீனியர்கள் தங்களை எப்பொழுதும் கெக்ரோப்ஸின் (Cecrops) மக்களாக விரித்துரைத்தனர். இந்தக் கெக்ரோப்ஸ் வரலாற்றுக் காலத்துக்கு முந்திய கற்பனையில் மட்டுமுள்ள அத்தீனிய மன்னர்களில் ஒருவ ராகச் சேர்த்துக்கொள்ளப்பட்டார். இவர் கெக்ரோப்பியர் களின் கற்பனை மூதாதையராகவே காட்டப்பட்டுள்ளாரே அன்றி வேறு எந்த விதமாகவுமில்லை. காலப்போக்கில் அட்டிகாவில் வாழ்ந்த மற்ற கிரேக்கர்கள் கெக்ரோப்பியர்களை அடக்கித் தம்முடன் அத்தீனுவின் வழிபாட்டைக் கொண்டுவந்தனர். அட்டி காவின் பல பாகங்களில், இத் தேவதையின் வழிபாடு இருந்து வந்தபோதிலும், இந்த மலையை இத் தேவதை தனதாக்கிக் கொண்டு அதை எக்காலத்திற்கும் தன் பெயருடன் இணைத்து முக்கியத்துவம் பெறச்செய்த அந் நாள், வரலாற்று ஏடுகளிலே சிறந்ததொரு நாளாயிற்று. அக்ரோபாஸிஸ் அத்தீனுய் (Athenai) ஆயிற்று. அதைச் சுற்றியுள்ள இலிஸஸ், எரிடானஸ் ஆறுகளின் கரைகளின்மேலுள்ள கிராமங்களில் வாழ்ந்த மக்கள் கெக்ரோப் பியர்களாளுலும் சரி அல்லது பெலாஸ்ஜியர்களாளுலும் சரி- யாவரும் அத்தீனியர்கள் ஆஞர்கள். இம் மலையில் கெக்ரோப்பி யர்கள் வழிபட்டுவந்த பாஸிடோன் எரக்தீயூஸ் ((Poseidon Erechtheus) அத்தீனு தேவிக்குத் தம் இடத்தை அளிக்கும்படி கட் டாயப்படுத்தப்பட்டான். அத்தீனுவும் பாஸிடோனும் அக்ரா போலிஸ் தமதென்று வாதாடியதாகவும், ஒவ்வொருவரும் தமது அடையாளத்தை -– தேவி தனது புனித ஒலிவ மரத்தையும், தேவன் தனது உப்புச் சுனையையும் — அங்கு வைத்ததாகப் புராணக் கதை புகல்கின்றது. அரியணையை விட்டு இறக்கப்பெற்ற

தேவன் நாடு கடத்தப்படவில்லை. ஆனால் கிரேக்க மனநிலையின் தனிப்பட்ட இயல்புக்கேற்பப் பழமைக்கும் புதுமைக்கும் ஓர் இணைப்பு உண்டாக்கப்பட்டது. முதல்முதல் இத் தேவிக்கு இம் மலையில் கட்டிய கோவிலில் பாஸிடோன் ஒரு பாம்பாக இருக்க இவர்கள் இடம் கொடுத்தனர். பிற்கால 'வரலாறு'[2] எரக்தீயூஸை ஒரு வீரனாக மாற்றி, கெக்ரோப்ஸ் மாதிரி முற்கால அரசர்களில் ஒருவராகக் கருதுகின்றது.

அட்டிகாவின் புராணங்களில் அத்தீனாவுடன் மற்றொரு தெய்வம் கூறப்படுகின்றது. ஆதென்ஸ் இத் தெய்வத்தை ஓர் உயர்ந்த இடத்தில் வைத்ததால், அது நற்பெயரைப் பெற்றது. இவர் தாம் தெய்வத்தன்மையுள்ள உலோக வேலை செய்பவரும், தொழிலாளிகளின் தலைவரும், உதவியாளரும், சூழ்ச்சியால் செல்வத்தைக் கொடுப்பவருமான ஹெபிஸ்டஸ் (Hephaestus) என்னும் தெய்வமாவர். எவ்வளவு காலமாக இவருடைய வழிபாடு ஆதென்ஸில் இருந்துவந்தது என்றும், எப்பொழுது இவருக்கு விசேடமான விழாக்கள் நிறுவப்பட்டன என்றும் நாம் சொல்ல இயலாதவர்களாயிருக்கின்றோம். இவருடைய மதிப்பும் மேன்மையும் தொழிலாளர்களின் செழுமையுடன் வளர்ந்திருக்கலாம். ஓர் அத்தீனியக் கவிஞர், அத்தீனியர்களை 'ஹெபிஸ்டஸின் குமாரர்கள்' என்றழைக்கின்றார். ஒரு புராணத்தின்படி அத்தீனிய மக்கள் யாவரும் இவருடைய வித்திலிருந்து தோன்றியவர்களாவர். இலையுதிர் காலத்தின் கடைசி நாட்களில் அபாதூரியா (Apaturia) விழாவின் போது குழந்தைகள், சகோதர சங்கங்களாகிய 'ப்ராட்ரி'களில் சேர்க்கப்படும்போது பக்திவினயத்தோடு கூடிய ஓர் ஆசாரம் நடைபெறும். இதில் குழந்தைகளின் தந்தையர் பொதுவான அடுப்படியில் தம் பந்தங்களைக் கொளுத்தும்போது இந்த நெருப்புக் கடவுளை வேண்டி ஒரு பாட்டைப் பாடுவது வழக்கம்.

அட்டிகாவின் வரலாற்றில் அடுத்த முக்கியப் படியானது நிலப் பகுதி ஒன்றுசேர்வதாகும். எப்பொழுது இவ்வித ஒன்றுசேர்தல் நடைபெற்றது என்று திட்டமாக நம்மால் சொல்ல இயலவில்லை. எழுத்து மூலமாய்ப் பதித்துக்கொள்ளப்பட்ட வரலாற்றுக் காலத்தின் துவக்கத்திற்கு முன்னரே இது நடைபெற்றதாகத் தெரிகின்றது. இது எப்படி நடைபெற்றது என்பதை நாம் மங்கலாகத் தான் காணமுடியும். பார்னெஸ் மலையிலிருந்து மியூனீச்சியா இன்றுவரையும், ஐமெட்டஸ் சரிவுகளிலிருந்து ஈகாலியோஸ் வரையிலுமுள்ள செப்பிஸ்ஸியன் சமவெளியை அக்ராபோலிஸ்ஸின் சீமான்கள் அடக்கியதும், கிழக்கிலே ஐமெட்டஸ் மலைக்கு அப்பாலுள்ள 'மத்திய நாடுகளை'யும், தெற்கிலே 'ஆக்டி' என்று அழைக்கப்படுகின்ற 'ஆப்பு'ப் போன்று உயரிய 'சூனியம்'

முனையில் முடிவடைகின்ற நிலப் பகுதியையும் கைவசமாக்க ஆசை கொண்டனர். இவை யாவற்றையும் கைப்பற்றியதே ஆதென்ஸின் முதல் பெரிய செயலாகும். இதன் இரண்டாவது பெரிய செயலானது, வடகிழக்குச் சமநிலமான மாரத்தானையும் 'டெட்ராபாலிஸ்'ஸையும் தன்வசமாக்கியதேயாகும். மேற்கிலுள்ள எலியூசீனியன் சமவெளி நீங்கலாக, நாட்டிலுள்ள மற்றெல்லாச் சிறிய சுதந்தர நாடுகளையும் ஆதென்ஸின் ஒரு விதத் தளர்ச்சியான மேலாண்மையின்கீழ்க் கொண்டு சேர்த்ததே அட்டிகாவை ஒன்று சேர்த்ததன் முதல் படியாகும்.

நாளடைவில் அட்டிகாவில் ஒற்றுமை உணர்ச்சி வலுக்கவே பெரிய நாடுகளின் பாகங்களாக அமைக்கப்பட்டுத் தமது தனியான அரசியல் நிர்மாணங்களை விடாமல் கொண்டிருந்த சிறு சிறு நாடுகள் தமது உள்நாட்டு அரசாங்கங்களை ஒப்படைத்துவிட்டுத் தம்மைச் செப்பிஸ்ஸியன் சமவெளியிலுள்ள நகரத்தில் மையப் படுத்திய அரசாங்கத்தில் ஒரு சமுதாயமாகத் தங்களை இணைத்துக் கொள்ளத் தூண்டக்கூடிய நிலை ஏற்பட்டது. தோரிக்கஸ் (Thoricus) அல்லது ஆப்பிட்னீ (Aphidnae) அல்லது இக்கேரியா (Icaria)விலுள்ள மனிதன் இப்போது அத்தீனியக் குடியுரிமை பெற்றவனானான். அவனுடைய அரசியல் உரிமைகளை அங்கேயே உபயோகப்படுத்தவேண்டும் என்ற நிலையும் ஏற்பட்டது. இக் கூட்டுச் சேருதலாகிய சைனீஸிஸத்தை(synoecism)நினைவு கூர வரலாற்றுக்காலத்தில் ஆண்டுதோறும் ஒரு விழாக் கொண்டாடப்பட்டது. இவ்விதமாகக் கொண்டாடப்படுவது மிகவும் தகுதியானதேயாம். ஏனென்றால், இந்தக் கூட்டுச் சேருதல்தான் ஆதென்ஸின் முழு வரலாற்றையும் தீர்மானித்தது. இச் சமயம்முதல் ஆதென்ஸ் அட்டிகாவின் முதல் நகரமாகமட்டும் இருக்கவில்லை. ஆதென்ஸ் சிறிது சுதந்தரமுள்ள அரசுகளின் கூட்டுக் குழுவின் தலைவியாகவோ அல்லது அடிமைச் சமுதாயத்தின் கொடுங்கோலாட்சித் தலைவியாகவோ இருக்கவில்லை. பீயோஷியாவில் தீப்ஸ் நகரம் ஆகப்போவது போலும், லாக்கோனியாவில் ஸ்பார்ட்டா இருப்பதுபோலும் ஆதென்ஸ் இருக்கவில்லை. இவ்விரண்டில் ஒன்றாய் ஆதென்ஸ் இருந்திருந்தால் அல்லது இருந்திருக்கக் கூடுமானால் அதன் வரலாறானது பயங்கரமாக மாறியிருக்கும். ஆதென்ஸ் ஒன்று சேர்ந்த அரசின் மைய நகராயிற்று. அட்டிகாவிலுள்ள ஒவ்வொரு கிராமத்திலுள்ள மக்களுக்கும், ஆதென்ஸ் நகரத்திலுள்ள மக்களுக்கிருந்த அரசியல் உரிமைகள் யாவும் இருந்தன. மாரத்தானிலுள்ள மனிதனானாலும் சரி, தோரிக்கஸ்ஸிலுள்ள மனிதனானாலும் சரி, இவன் அட்டிகன் என்று இனி ஒருபொழுதும் அழைக்கப்பட மாட்டான். இவன் ஓர் அத்தீனியனே யாவான். இந்தக் கூட்டுச் சேர்த்தலானது அல்லது


ATTICA.
Stadia
0 20 40 60 80
English Miles
0 5 10
Longitude East 24° of Greenwich
EUBOEA
ATHENS
Salamis
Aegina
Megara
Eleusis
Thebes
Thespiae
Tanagra
Oropus
Marathon
Brauron
Saronic Gulf
Corinthian Gulf
Eleusinian Plain
Cephisian Plain
Phalerum
Piraeus
Hymettus
Helene I.
Patroclus I.
Phabra I.
Angistri I.
CORINTH

படம் 27: அட்டிகா

சைனீஸிஸமானது மன்னர்களில் ஒருவரது வேலை என்று பொது வாகக் கருதப்படுகின்றது. இது நிச்சயமாகவே ஒரு மனிதனின் வேலைதான்; ஆனால் இந்தக் கூட்டுச் சேர்த்தலானது அரச அதிகா ரங்களை அழித்தவுடனேதான் நேர்ந்திருக்கக்கூடும் என்று கருதப் படுகின்றது.

முந்திய மன்னர்களின்[3] பட்டியலில் தாங்கள் சேர்த்துக் கொண்ட வீரனாகிய தீஸியூஸ் (Theseus) தங்களுடைய நாடானது ஒன்று சேர்வதற்குப் பிதாவாக இருந்தான் என்று பிற்கால அத்தீ னியர்கள் நினைத்தார்கள். ஆனால் இவ்வித ஒன்றுசேர்தல் உண்டாக்கப்பட்டபோது தீஸியூஸ் தேசீய வீரராக இல்லை. அவர் அப்போது மாரத்தான் மாவட்டத்திலும் அட்டிகாவின் கிழக்குக் கரையோரங்களிலுமுள்ள நிலவட்டாரத்துக்குரிய கடவுளாகத் தான் இருந்தார். இதற்குப்பின் அத்தீனிய புராணத்திலும், வரலாற்றிலும் இவர் பெற்ற முக்கியத்துவத்தை இன்னமும் இவர் பெறவில்லை.

## 2. அத்தீனியக் கூட்டரசு நாடுகள் நிறுவப்படுதல்

மன்னராட்சியானது பலவிதக் கட்டுப்பாடுகளுக்கு உட்பட்டு உயர்குடி யாட்சியாவதற்கான பொதுவான நிகழ்ச்சியிலிருந்து, அத்தீனிய அரசியல் அமைப்பின் முற்கால வரலாறானது ஏனைய கிரேக்க அரசுகளின் வரலாற்றை ஒத்திருக்கின்றது எனக் கூற லாம். ஆனால் இந்த நிலை மாறுதலின் விவரங்கள் விநோதமானவை. மிக முன்னதாகவே குடியரசு துவங்கியுள்ளதாகத் தெரிகின்றது. வமிச மரபில், வீரன் தீஸியூஸுக்குப் பின் வந்த அட்டிகா மன்னர் களின் பெயர்களில் சில, உண்மையில் புனைந்துரையான பெயர் களே; பல புனைந்துரையாக இருக்கலாம். இந்தப் பெயர்களில் நீலியட் கோட்ரஸ்[4] மிகவும் புகழ்பெற்றது. பெலோப்போனீஸஸ்

[3]பழைய அட்டிக் மரபானது (எரோடட்டஸ்ஸால் பாதுகாத்து வைக்கப்பட்டது) தீஸியூஸிற்குமுன் கெக்ரோப்ஸ் எரிக்தீயஸ் (Erechtheus), பாண்டியோன் (Pandion), ஈஜியஸ் (Aegeus) என்ற நால்வரையே கொண்டுள்ளது. கிளைஸ்தினீஸின் நான்கு இனங்களின் (அடுத்த அத்தியாயம் பார்க்கவும்) பெயர்கள் இந்த நான்கு மன்னர்களின் பெயர்களைக் கொண்டு இடப் பட்டன. இந்தப் பட்டியல் விருத்தி செய்யப்பெற்றது ஹெலா னிக்கஸ்ஸினால் (Hellanicus)தான்.

[4]அயோனிய நகரங்களால் கோட்ரஸ் அயோனியக் குடியேற்றத் தலைவராகக் கருதப்பட்டார். ஆதென்ஸ் அயோனியக் குடியேற்ற நாடுகளின் தாய்நாடாக உரிமை கொண்டாடிய தால், கோட்ரஸ் அட்டிகாவுடன் தொடர்பு கொள்ளப்படவும்

ஸிலிருந்து படையெடுத்து வந்தவர்கள் தமது நாட்டைத் தாக்கும் போது, அதைக் காப்பாற்றுவதற்காகக் கோட்ரஸ் தமது உயிரைத் தியாகம் செய்தார். இவர் மிகமிக நல்லவராதலால், இவருடைய மறைவிற்குப்பின், அத்தீனியர்கள் வேறு மன்னர்களை விரும்பாமல் மன்னராட்சியை அழுத்தினர் என்று சொல்லப்படுகின்றது. இது, புரட்சிக்கு எப்பொழுதும் கூறப்படும் காரணங்களுக்கு எதிர் மாறான காரணமாயிருக்கின்றது. ஆனால் இந்தக் கதையானது பிற்காலத்தில் கட்டப்பட்டது.[5] போலிமார்க் (polemarch) அல்லது இராணுவத் தலைவரை ஏற்படுத்தியதே உயர்குடி யாட்சி, மன்னரின் அதிகாரத்திற்கு நிறைவேற்றிய முதல் கட்டுப்பாடாகும். அரசனுக்கு உரிமையாயிருந்த இராணுவ தளகர்த்தரின் பதவியானது அவருக்குக் கொடுக்கப்பட்டது. அவர் சீமான்களால், சீமான்களிலிருந்தே தேர்ந்தெடுக்கப் பெற்றார். அரசகுடும்பம் வலிமை பொருந்திய மெடான்டியர்களின் (Medontids) குடும்பத்தால் வீழ்த்தப்பட்டது இதன் இரண்டாவது படியாகத் தோன்றுகிறது. மெடான்டியர்கள் தாங்களாக அரசருக்குரிய பெயரைச் சூட்டிக்கொள்ளவுமில்லை, அவைகளை நீக்கிவிடவுமில்லை. அவர்கள் ஆர்க்கான் (archon) அல்லது மன்னர்-பேராட்சியாளர் என்ற பதவியை ஏற்படுத்தினார்கள். இந்தப்

---

அத்தீனிய மன்னராக்கப் படவும் தேவைப் பட்டது. மெல்லீனி (Melaenae)க்குத் தனது பெயரைக் கொடுத்த வீரனாகிய மெலான்தஸ் (Melanthus) என்பவனின் மகனைக் கோட்ரஸ் ஆக்கப்பட்டார். இப்பொழுது பல அயோனியக் குடும்பங்கள் தமது மரபின் மூலத்தை மெஸ்ஸீனியாவுடனும், பைலாஸ்(Pylos) ஸிலுள்ள நீலியட்களுடனும் இணைக்கலாயின. அயோனியாவுடன் தனது தாயுரிமையை முழுவதுமாக ஏற்படுத்த, பைலாஸிலிருந்து அட்டிகாவிற்கு நீலியட்களைக் கொண்டு சேர்ப்பது ஆதென்ஸிற்கு அதிக அவசியமாயிற்று. இதன் பயனாக, வீரனான மெலான்தஸ் ஒரு நீலியட் இளவரசன் என்றும், இவன் நெஸ்டர் (Nestor)ருடைய சந்ததி என்றும் விளக்கம் கூறினார்கள் (முதலாம் அத்தியாயம் பார்க்கவும்). அத்தீனிய மன்னராகிய தைமீட்டஸ் (Thymoetes) தைமீடடீ (Thymoetadae) குலத்திற்குத் தம் பெயரை வழங்கிய மூதாதை. தமது பயங்காளித்தனத்தால் தமது அரச பதவியை அயலானாகிய மெலான்தஸ்ஸிற்குக் கொடுக்க வற்புறுத்தப்பட்டார்.

[5] பெலோப்போனீஸியர்களின் பாசறைக்குக் கோட்ரஸ் ஓர் உழவனது ஆடையில் சென்று, அங்குப் பகைவன் தம்மைக் கொல்லும்படி வம்புச் சண்டையை நாடினார் என்று பொதுவாக வழங்கும் கதையும்-பெலோப்போனீஸியர்கள் கோட்ரஸைக் கொல்லாவிட்டால் ஆதென்ஸைக் கைப்பற்றுவார்கள் என்று தெய்வமொழி முன் அறிவித்திருந்தது—பிற்காலத்தைச் சேர்ந்தது. பழையதொரு கர்ண பரம்பரையின்படி கோட்ரஸ் சண்டையில் மாண்டார்.

பதவியானது அரசனின் முக்கியக் கடமைகளை உரிமையின்றித் தானே எடுத்துக்கொண்டது. மெடான்டியரான அகாஸ்டஸ் (Acastus) முதல் மன்னர் - பேராட்சியாளர் ஆனார். இவர் ஒரு வரலாற்று மனிதர் என்று நாம் அறிகிறோம். அகாஸ்டஸ்ஸைப் போலவே தமது உறுதிமொழிக்கு உண்மையாகத் தாமும் நடக்கப் போவதாகப் பிற்காலத்தில் ஆர்க்கான்கள் உறுதிமொழி கூறினார்கள். இவர் இந்தப் பதவியைத் தம் ஆயுள் முடிவுவரை வைத்திருந்தார். இவருடைய பின் மரபினர்களும் இவ்விதமே பதவியைக் கொண்டிருந்தனர். இவர்கள் மன்னருடைய நாமதேயத்தைக் கொண்டிராவிட்டாலும், இப்படி மெடான்டியர்கள் மன்னர்களுக்கு ஒப்பாயிருந்தனர். ஆனால் மற்றொரு விதத்திலும் இவர்கள் அரசனைவிட ஒரு படி குறைந்தவர். ஏனென்றால், ஒவ்வொரு மன்னர்-பேராட்சியாளரும் சமுதாயத்தால் தேர்ந்தெடுக்கப்பட்டனர். அதிலும் சமுதாயமானது மெடான்டிட் குடும்பத்தைச் சேர்ந்த ஓர் உறுப்பினரைத்தான் தேர்ந்தெடுக்க வேண்டும். மன்னர் - பேராட்சியானது ஆயுள் காலப் பதவியிலிருந்து பத்து ஆண்டுப் பதவியாக மாற்றப்பட்டது. அரச நடுவரின் அதிகாரம் குறைக்கப்பட்ட அடுத்த படியாகும். இந்தச் சீர்திருத்தம் எட்டாவது நூற்றாண்டின் மத்தியில் கொண்டுவரப்பட்டதாகச் சொல்லப்படுகிறது. எப்பொழுது மெடான்டியர்கள் தம் உயர் உரிமைகளை (prerogatives) இழக்கும்படி நேரிட்டது, எப்பொழுது மன்னர்-பேராட்சியானது எல்லாச் சீமான்களுக்கும் திறந்து வைக்கப்பட்டது என்பதை நாம் உறுதியாகக் கூறுவதற்குப் போதிய சான்றுகள் காண்கிலம். அடுத்த படியுடன் நாம் திடமான காரணத்தை அடைகிறோம். மன்னர் - பேராட்சியானது பத்து ஆண்டு ஆட்சியிலிருந்து ஓராண்டு ஆட்சியாயிற்று. இந்தச் சமயம் முதல் சட்ட முறைப்படி ஆர்க்கான்களின் பட்டியல் சேர்த்து வைக்கப்பட்டதாகத் தெரிகிறது.

ஆனால் இதற்கிடையில் ஆதென்ஸில் இன்னும் மன்னர்கள் இருந்தனர். மெடான்டியர்கள் மன்னர்களிடமிருந்து அவர்களுடைய அரச அதிகாரங்களைக் கைப்பற்றிக்கொண்டபோதிலும் அவர்கள் அரசர்களை அடியோடு அழிக்கவில்லை. அத்தீனிய மக்களாட்சியின் கடைசிக் காலம் வரை ஆதென்ஸில் அரசர் ஒருவர் இருந்தே வந்தார். சில வரலாற்று உவமைகள் குறிப்பாகத் தெரிவிப்பது போல், மெடான்டியர்கள் பழைய அரச வமிசத்து உடைமையில் அரசருடைய சாயை(shadow of royalty)யை வைத்திருக்க அநுமதித்திருக்கலாம். இப்படிச் செய்வதனால் சில காலத்திற்கு ஆயுட்கால மன்னரின் பக்கத்திலேயே ஆயுட்கால மன்னரின் பிரதிநிதிகளும் இருக்கக்கூடும் அல்லவா? முதலீ

லிருந்தே அரசனுடைய பதவியானது தேர்தலினால் நிரப்பப் பட்ட ஆண்டுப் பதவியாகத் தாழ்த்தப்பட்டிருக்க முடியாதெனத் தோன்றுகிறது. ஆனால் கடைசியில் இது இப்படியாகத்தான் முடிந்தது.

அரசியல் அமைப்பின் முழு வளர்ச்சியும் நம்பக்கூடாததா யிருக்கின்றது. ஏனென்றால், இது மதிப்பிடுவதற்கு வெகு கஷ்ட மான மரபுகளின்மேல் சார்ந்திருக்கின்றது. ஆனால் இதன் வளர்ச்சி யின் விவரங்கள் எவையாயினும் சரி, இரண்டு முக்கிய உண்மை களை நாம் உணர வேண்டும். முதலாவதாக, மன்னர்களின் வீழ்ச்சி பொதுவாகக் கிரீஸில் நடந்ததைவிட முற்பட்ட காலத்தில் நடந்ததேயாகும். இதில் கவனிக்க வேண்டியது யாதெனில், மன்னர்களின் வீழ்ச்சியானது மன்னர்களின் நாமம் நீக்கப்பட்டது என்ற கருத்துடையதல்ல. மெடான்டியர்கள் மன்னர்கள் அல்லர், அவர்கள் ஆர்க்கான்களே (archons)யாவர், உயர்குடி யாட்சியின் அதிபர்களேயாவர் என்பது அடுத்த உண்மையாகும். அத்தீனியக் கூட்டரசு நாடுகளை நிறுவியது மெடான்டியர்களின் பெரிய சேவை யாகும். ஒருகால் இவர்கள் வமிசத்தைச் சேர்ந்த மற்றொருவர் மற்றொரு செயலின் பொருட்டு நினைக்கப்பட வேண்டியவரா யிருக்கிறார். இச் செயல்தான் நாம் முன்னரே கண்டுள்ள அட்டி காவின் ஒன்றுசேர்தலாகும்.

இந்த ஒன்றுசேர்தல் ஒன்பதாவது நூற்றாண்டிற்கு முன் ஏற் பட்ட செயலாக இருக்கத் தேவையில்லை. அக்ராபோலிஸ்ஸிலுள்ள பழைய வமிசத்தை ஒழித்த குடியாட்சி இயக்கமே, அட்டிகாவின் கூட்டுச்சேர்தலான சைனீஸிஸத்தையும் ஏற்று நடத்தியிருக்கலாம். ஒரு நாட்டின் கூட்டரசிற்கு அமைப்பு முறை அவசியம். அட்டிகா வைக் கூட்டிச் சேர்த்த அரசியல் வல்லுநர்கள் அயோனியாவில் ஆதென்ஸ் தனது பெண்களாகக் கருதிய குடியேற்ற நாடு ஒன் றிலிருந்து இந்த அமைப்பு முறையைத் தமக்கு மாதிரியாக ஏற் றுக்கொண்டனர். மைலீட்டஸ்ஸிலிருந்து எல்லா மக்களையும் நான்கு இனங்களாகப் பிரிக்கும் முறையை ஏற்றுக் கொண்டனர். இந்த இனங்களின் விந்தையான பெயர்கள்—கீலியான்டீஸ் (Geleontes), ஆர்கேடிஸ் (Argadeis), ஐஜிகோரிஸ் (Aigicoreis), ஆப்லிட்டிஸ் (Hopletes) — சிறப்பான தெய்வங்களை வழிபடுவதி லிருந்து ஏற்பட்டனவென்று தோற்றுகிறது. எடுத்துக்காட்டாக, கீலியான்டீஸ் என்ற பெயர் ஸீயூஸ் கீலியான் என்பதிலிருந்து வந்த பெயராகும். இப் பெயர்களின் பழைய பொருள்கள் முற்றும் மறைந்து போயின. எல்லா அத்தீனியர்களும் தமது மரபின் தந்தையாகக்கொண்ட அப்போலோவிலிருந்து உரிமை கொண் டாடினதால் எல்லா இனங்களும் அப்போலோ பாத்ரூஸ்

Apollo Patroos)ஸுடன் இணைக்கப் பெற்றன. சகோதர நிலை (Brotherhoods) மறுமுறையும் ஒழுங்கு செய்யப்பட்டதாகத் தெரிகிறது. இவைகள் ஓர் இனத்திற்கு மூன்றாக அமைக்கப் பட்டன. எனவே, அட்டிக அரசில் பன்னிரண்டு சகோதர நிலைகள் இருந்தன. ஒவ்வோர் இனத்தின் உச்சியிலும் ஓர் இன மன்னர் இருந்தார்.

குலங்களை அமைத்திருக்கும் விதத்தை நாம் மற்ற இடங்களை விட ஆதென்ஸில் நன்றாகக் காணலாம். ஒவ்வொரு குலத்திலுமுள்ள குடும்பங்கள் ஒரு பொதுவான முன்னோரிடமிருந்து வந்தன.* மிகப் பல குலங்களின் பெயர்கள் தந்தை வழியாக வந்தவை (patronymics). மூதாதையரின் வழிபாடு சமூகத்தின் முக்கிய நோக்கமாக இருந்தது. எல்லாக் குலங்களும் ஒன்றுபோல ஸீயூஸ் ஹெர்க்கியாஸை(Zeus Herkeios)யும் அப்போலோ பாத்ரூஸ் ஸையும் வழிபட்டு வந்தன. இவைகளில் பலவேறு பொது வழி பாட்டு மரபுகளுடன் (public cults) தொடர்பு கொண்டிருந்தன. ஒவ்வொரு குலத்திற்கும் தனியான அரசியல் முறையுடன், அதற் கேற்ற அலுவலகத்தாரும் இருந்தனர்; இவர்கள் யாவருக்கும் சிகரமாக ஆர்க்கன் (archon) இருந்தார். உயர்குடிப் பிறந் தோரே இந்தக் குலங்களின் உறுப்பினராவர். ஆனால் உழவர், தொழிலாளிகள் போன்ற இதர வகுப்பினர்களும் தமக்கென இவ் விதமான நிர்மாணங்களை உண்டுபண்ணிக் கொள்ளலாயினர். இவர்கள் ஒரு பொதுவான மூதாதையரைக் காட்ட இயலாதவர் களாதலின் இந்த நிர்மாணங்கள் பொதுவான மூதாதையரை வழி படுவதில் சார்ந்திருக்காமல், இவர்களால் தெரிந்தெடுக்கப்பட்ட ஒரு தெய்வ வழிபாட்டைச் சார்ந்திருந்தன. இவற்றின் உறுப்பி னர் ஆர்ஜியானியர்கள் (orgeones) என்றழைக்கப்பட்டனர். கீழான வகுப்பினர்கள் அரசியல் முக்கியத்துவத்தில் முன்னேறு வதை இந்தப் புதிய அமைப்பு முன்னறிவிக்கின்றது.

பக்கத்தில் பக்கத்தில் அமைந்த நிலங்களைக் கொண்ட குடும்பங்களாலாகிய இந்தச் சகோதரக் கூட்டங்கள் ஸீயூஸ் ப்ராட்ரியோஸ்(Zeus Phratrios)ஸையும், அத்தீனா ப்ராட்ரியா (Athena Phratria)வையும் வழிபடுவதில் தம் உறுப்பினர்களை ஒற்று மைப்படுத்தின. முந்தின காலங்களில் குலங்களைச் சேர்ந்த மக்களே இவ்விதச் சகோதரக் கூட்டங்களில் உறுப்பினர் ஆனார் கள். ஆனால் இங்கேயும் ஏழாம் நூற்றாண்டில் மாறுதல் ஏற்பட்டது.

*எனவே, இக் குடும்பத்தினர், ஹோமோகாலாக்தியர்கள் (Homogalaktes) 'பால் தோழர்கள்' (milk-fellows), ஒரு தாய் வயிற்றிலிருந்து உதித்தவர்கள் என்று அழைக்கப் பட்டனர்.

இதற்குப்பின் ஆர்ஜியானீயர்களும் சேர்க்கப்பட்டனர். இந்த நிர்மாணம் குடிமதிப்புப் பதிவது (census) போன்ற காரணங்களுக்காக அப்பொழுது உபயோகிக்கப்பட்டது. தாய் தந்தையர் குடியுரிமையாளராக இருந்தால் ஒவ்வொரு குழந்தையும் இந்தச் சகோதரக் கூட்டத்தில் கட்டாயம் சேர்க்கப்படவேண்டும். இந்தச் சடங்கைச் செய்யாமல் விட்டுவிட்டால் அந்தக் குழந்தை சட்டத்திற்கு மாருகப் பிறந்ததாகக் கருதப்படும். ஆதென்ஸில் சட்டத்திற்கு மாருகப் பிறப்பது ஒரு மனிதனின் அரசியல் உரிமைகளை நீக்கிவிடாது என்பதை நாம் அறியவேண்டும். ஆனுல் அப்படிப் பிறந்த ஒருவன் தனது தகப்பன் சொத்துக்களைத் தன் பிறப்பின் உரிமையாகக் கொண்டாட முடியாது.

மிகவும் பிற் காலத்தில் இந்தக் குலங்கள் சகோதரக் கூட்டங்களின் செயற்கையான சிறிய பிரிவுகள் என்று ஆதென்ஸ் அரசியல் அமைப்பு வரலாற்று ஆசிரியர்கள் கூற முற்பட்டனர். ஒவ்வோர் இனமும் மூன்று சகோதரக் கூட்டங்களாகவும், ஒவ்வொரு சகோதரக் கூட்டமும் முப்பது குலங்களாகவும் பிரிக்கப்பட்டிருந்ததென்று கூறினுர்கள். அதுவுமன்றி ஒவ்வொரு குலமும் முப்பது மனிதர்களைக் கொண்டிருந்தது என்றுகூடக் கூறினர். இனமும் சகோதரக் கூட்டமும் பொறுத்தவரையில் இந்தச் செயற்கையான முறையானது உண்மையே யாகும். ஆனுல் குலத்தைப் பொறுத்தவரையில் இது உண்மை அல்ல. இனங்கள் குலத்தைச் சேர்ந்த மக்களைத் தவிர வேறு மக்களையும் கொண்டிருந்தன என்பது சூழ்நிலையால் மறுக்கப்படுகிறது.

## 3. 7ஆம் நூற்ருண்டில் உயர்குடி யாட்சி

ஏழாம் நூற்ருண்டின் துவக்கத்தில் அக் காலத்து அத்தீனியக் குடியரசு உயர்குடி யாட்சியிலிருந்தது. நிர்வாகம் ஆண்டுதோறும் தேர்ந்தெடுக்கப்படும் மூன்று உயர் பணியாளர் வசமிருந்தது. அவர்கள் முறையே ஆர்க்கான், அரசன், போலிமார்க் (polemarch: படைத்துறைத்தலைவர்) ஆவர். சிவில் வழக்குகளில் ஆர்க்கான் நடுவரே தலைமையான தீர்ப்பாளர் (supreme judge). அவர் தம் தொழிலை மேற்கொள்ளும்போது, தாம் ஆர்க்கான் நடுவராகப் பணியாற்றும் காலம் முழுவதும் குடிமக்கள் ஒவ்வொருவரின் பொருளையும் சேதமுருவண்ணம் தாம் காப்பதாக உறுதிமொழி கூறினுர். நாளடைவில் அவரது நடுநிலைமை தாங்கும் அதிகாரம் குறுகி முக்கியமாக, காயப்பட்ட பெற்ருேர், திக்கற்றவர்கள், பெண்வாரிசாளர் (heiresses) ஆகியோர் தொடர்பு கொண்ட வழக்குகளில்மாத்திரம் தீர்ப்புக் கூறினர். ஏனைய நடுவர்க்கிடையே அவர் முதன்மையான இடத்தைப் பெற்ருர். அவரது

தொழில் முறைப்படி பொதுவான அடுப்படி இருக்கும் (public hearth) ப்ரைட்டேனியம் (Prytaneum) என்னுமிடத்தில் அவர் குடியிருப்பு அமைக்கப்பட்டிருந்தது. தொழில் முறைப் பட்டிய லில் அவரது பெயர் முதன்மையில் தலைவர் அல்லது ஈபானிமஸ் (eponymus) என்று வழங்கப்பட்டது. ஆயினும், பழங்காலத்துச் சமயச் சார்பான ஆசாரங்கள் ஆர்க்கானால் நிறைவேற்றப்படாமல் போலிமார்க்கும் அரசனும் அவற்றைத் தம் உரிமைத் தொழிலாகச் செய்து வந்தனர் என்பதைப் பார்க்குமிடத்து, ஆர்க்கான் பதவி போலிமார்க் பதவிக்குப் பின் ஏற்பட்டதாகும். ஆனால் பிற் காலத்தில் ஏற்படுத்தப்பட்ட பண்டிகைகளை நடத்தும் முறை கள் ஆர்க்கான்வசம் ஒப்புவிக்கப்பட்டன. மே மாதக் கடைசி யில் கொண்டாடப்படும் முதற் பேறுகளின் (first fruits) பண் டிகையான தார்கேலியா (Thargelia), டெலாஸ் (Delos) நகரத்தி லிருந்து ஏழாம் நூற்றாண்டில் புகுந்திருக்கக்கூடிய அப்போலோ வின் (Apollo) விருந்து எனப்படும் முக்கியமான அத்தீனியரின் பண்டிகை ஆகியவை இத்தகைய புதிய பண்டிகைகளாம். பெரிய டையானிசியா(Dionysia)வும் நாம் அறிந்தபடி ஆறும் நூற்றாண்டில் ஏற்படுத்தப்பட்ட பண்டிகையாம். போலிமார்க் முக்கியப் படைத்தலைவராகச் செயலாற்றியதுமன்றிச் சட்டச் சார்பான கடமைகளையும் செய்தார். அவர் இலிஸஸ் (Ilisus) நதிக்கரையில் எபிலிக்கியோன் (Epilykeion) என்னும் இடத்தில் சட்ட மன்றத்தை நடத்தி, அங்குக் குடிமக்கள் அல்லாதவர்கள் தொடர்பு கொண்ட வழக்குகளுக்குத் தீர்ப்பளித்து வந்தனர். ஆர்க்கான் எவ்வாறு குடிமக்களுக்கு நீதி வழங்கினரோ அதே முறையில் வெளிநாட்டிலிருந்து குடியேறின மெடிக்ஸ் (metics) எனப்படும் அந்நியக் குடிகளுக்கு நீதி வழங்கி வந்தார் போலிமார்க் (polemarch). ஆகோராவி(Agora)லுள்ள அரசர்க்குரிய ஸ்டோவா (Stoa) என்னும் இடத்தில் அரசர் வாழ்ந்து வந்தார். அவருடைய கடமைகள் அரசுக்குரிய சமயத்தை நடத்துவதுடன் குறுகி நின்றன. மேலும், சமயத்தொடர்பு கொண்ட சட்டச்சார்பான சில வழக்குகளையும் அவர் நடத்தி வந்தார். அவர் மன்றத்தலைவ ராயிருந்ததால் அதன் சட்டச்சார்பான விவரங்களை நடத்தும் முறையில் பெருமளவில் வல்லமையும் பொறுப்புமுடையவரா யிருந்தார்.

எரியோப்பேகஸ் (Areopagus) என்னும் மூப்பர் மன்றம் அல்லது 'பியூல்' (Bule) அரசியல் கட்சிச் சார்பான சங்கமாகும். இதன்மூலம் பெருமக்கள் நாளடைவில் முடியாட்சியை மறையச் செய்தனர். இந்த நகர மூப்பர் மன்றம் நாம் அறிந்தபடி கிரேக் கர்கள் ஆரியரிடமிருந்து பரம்பரையாக அடைந்த ஒரு பகுதி

யாகும். பிற்காலத்தில் தோன்றிய ஏனைய மன்றங்களிலிருந்து பிரித்துக் கூறுமாறு ஆதென்ஸ் நகரத்தில் இதனை எரியோப்பேகஸ் என அழைத்தனர். மன்றத்தில் மிகவும் முக்கியமானதொரு தொழிலைக் கொண்டு இதற்கு இப்பெயர் ஏற்பட்டது. ஹோமரின் நூலில் கண்டபடி கொலையும், எண்ணுமற் செய்த மனிதக் கொலையும் அக் காலத்து வழக்கப்படி அரசுக்கு விரோதமான குற்றங்களாகக் கருதப்படவில்லை. இக் கொலைகள் குடும்பத் தொடர்பான கொலைகளாகக் கருதப்பட்டு, கொலைசெய்தவனைக் கொலையுண்டவனின் குடும்பத்தார் கொல்லவோ அல்லது அதற்கு ஈடான ஒன்றைப் பெற்றுக்கொள்ளவோ செய்தனர். ஆனுல், நாளடைவில் இறந்தவரின் ஆவிகளையும் பாதாள உலகத்தின் தெய்வங்களையும் வழிபட முற்பட்டதால் இரத்தம் சிந்தியவர் கறைப்பட்டவர்களாகவும் தூய்மைப்படுத்தப்பட வேண்டியவர்களாகவும் கருதப்பட்டனர். எனவே, ஒரு கொலையாளி கொலையுண்டவனின் உறவினருக்குத் தண்டப்பணம் செலுத்தி ஈடு செய்திருந்தாலும் தூய்மைப்படுத்தும் முறைகளுக்கு அடிபணிய வேண்டும். இப்படிச் செய்வதால் சிதோனிய (Chthonian) தெய்வங்களையும், பழங்காலக் கொள்கைப்படி பழிவாங்கக் காத்துநிற்கும் எரினிஸ் அல்லது ஃப்யூரிஸ் எனப்படும் இறந்தோரின் ஆவிகளையும் திருப்தி செய்யவேண்டும். இவ்வாறு எண்ணுமல் செய்த கொலை, சமயத்துக்கு எதிரான குற்றம் என்று கருதப்பட்டதால் அரசும் இதில் தலையிட வேண்டியதாயிற்று. ஒரு சமூகத்தின் அங்கத்தினன் தூய்மைபெற்றவன் என்று கருதப்பட்டு அவனைச் சமூகத்திலிருந்து அகற்றுவிடின் அந்தக் கறையினுல் தெய்வங்களின் சீற்றம் அந்தச் சமூகம் முழுவதையுமே பாதித்தது. எனவே, அரசே குற்றவாளிகளுக்குத் தீர்ப்பளிக்கும் பொறுப்பை மேற்கொண்டது. மன்றமே நீதிச்சபையை உருவாக்கி, அதன் நிகழ்ச்சிகள் செம்னுய் (Semnai) தெய்வ வழிபாட்டுடன் நெருங்கிய தொடர்புடையனவாயிருந்தன. நகர மதிற்சுவருக்கப்பால் எரியோப்பேகஸ் மலையின் வடகிழக்குப் புறத்தில் சிதோனிய தேவதைகளுக்கெனக் கோவில் திருவிடம் இருந்தது. இத் திருவிடம் இரத்தக் கறைபடிந்த கைகளையுடையவர்களுக்கு அடைக்கலமாக விளங்கியது. எரியோப்பேகஸ் மலையை ஏரிஸ் தெய்வத்துடன் தொடர்புபடுத்திக் கூறுவது மக்கள் வழக்கு முறையாக ஏற்படுத்திய சொல் வரலாருக இருக்கலாம். இக் கடவுளுக்கு அங்கே கோயில் இல்லை. ஆனுல் எரியோப்பேகஸ் என்ற சொல்லுக்குச் சரியான பொருள் தெரியவில்லை.[7] கண்

[7] அத்தீனு ஏரியா (Athena Areia) என்ற தெய்வத்திற்கு மலையில் ஒரு பலிமேடை இருப்பதால் அதற்கு அந்தப் பெயர் வந்திருக்க-

னுக்குத் தெரிந்த தொலேவில் மக்கள் வாழுமிடம் காணப்படும். தனியான இந்தக் கரடுமுரடான இடத்தில் இந்த மன்றம் கூடிக் கொலே, கொலே நோக்கத்தோடு செய்யும் பலாத்காரம், நஞ்சிடுதல், தீ வைத்தல் முதலான வழக்குகளேத் தீர்த்துவந்தது. வாதி அவமானம்(Insolence) என்ற கல்லின்மீதும் பிரதிவாதி கவன மின்மை (Recklessness) என்னும் கல்லின்மீதும் நின்று வழக் குரைக்க வேண்டும். இவ்விரண்டும் செதுக்கப்படாத பாறைக் கற்கள். மன்றத்தின் இக் கடமை, ஏனேய அதிகாரங்களே இழந்த பின்னரும் நீடித்து நின்றதால் இம் மன்றம் எரியோப்பேகஸ் என்ற பெயரை அடைந்தது.

உயர்குடி யாட்சி ஓங்கிய காலத்தில் இந்த மன்றம் ஆதென் ஸின் அரசியல் அங்கமாக விளங்கியது. நடுவர்கள் எப்போதும் இதன் அங்கத்தினராக இருந்து வந்தனர் என்று துணிந்து கூற லாம். ஆனல் இது எவ்வாறு அமைக்கப்பட்டது என்று கூறுவதற் கில்லே. எனவே, இதன் அரசியல் அமைப்பு எவ்வாறு தொழி லாற்றியது என்று விளக்கமாகக் கூற முடியவில்லே. மன்றம் முக்கிய நடுவர்களேத் தேர்ந்தெடுப்பதில் நேரடியான ஆட்சி அதிகாரம் செலுத்தியது என்பதில் ஐயமேதுமில்லே. ஆனல் அரசனும், ஆர்க்கானும், போலிமார்க்கும் வாக்குரிமை பெற்ற குடிமக்கள் அனேவரையும் அங்கமாகக் கொண்ட சபை(Ecclesia)யினல் தேர்ந் தெடுக்கப்பட்டனரா அல்லது சபையினல் குறைவான எண்ணிக்கைகளில் ஆமோதிக்கப்பட்டவர்களிலிருந்து தெரிந் தெடுக்கப்பட்டனரா என்பதைப்பற்றிச் சிறிது ஐயம் உளது.

எலூசிஸைக் கைப்பற்றியதை உயர் குடியாட்சியின் அருஞ் செயலாகக் கொள்ளலாம். எலூசிஸ் இராச்சியம் ஒரு புறத்தில் ஆதென்ஸையும் மறு புறத்தில் மேகாரா (Megara)வையும் எல்லே யாகக் கொண்டிருந்தது. மேகாராவைச் சேர்ந்த சாலாமிஸ் (Salamis) தீவு அடுத்த எல்லேயாக இருந்தது. இத் தீவு கிரேக்க வரலாற்றின் ஒரு பகுதியிலும் சிறிதளவாவது பங்குபெற்றதாகப் பதிவேடுகளில் எங்கும் இல்லே. ஆனல் எலூசினியரிடையே கூறப் படும் டிமீட்டர் (Demeter) கதையிலுள்ள பாடலில் இது தனிப் பட்டு இயங்குவதைப்பற்றிய தெளிவான எதிரொலி காணப்படு கின்றது. காணமற்போன தன் மகள் பெர்சிஃபோனி

---

லாம் என்று யூகிக்க இடமிருக்கின்றது. இன்னெரு காரணம் என்னவென்ருல், இம் மலேக்கு ஏராய் மலே (Arai) அல்லது சாபமலே என்று பெயர்; இது ஈஸ்கிலஸ் (Aeschylus) நூலில் செம்னய் (Semnai) தெய்வத்தைக் குறிப்பதாகும்.

(Persephone)யைத் தேடியலையும் தேவதை எலூசியஸுக்கு வந்தாள். அங்கு அரசனால் பரிவுடன் உபசரிக்கப்பட்டாள்; அரசிக்கு அத்துணை நம்பிக்கைக் குறைவு இல்லாதிருந்திருக்குமானால் மன்னனது ஆண்மகவுக்குச் சாவாமையை அளித்திருப்பாள். இச் செய்யுள் ஏழாம் நூற்றாண்டில் இயற்றப்பட்டது என்று கருதப்படுகிறது. அப்படியானால் எலூசிஸ் சுதந்தரமாக ஆட்சி செய்து வந்த நாட்கள் மக்கள் எண்ணத்தினின்று அப்போது நீங்கவில்லை.

ஏழாம் நூற்றாண்டின் மத்தியில் அரசியல் அமைப்பில் நிகழ்ந்த மற்றொரு நிகழ்ச்சியும் குறிப்பிடத்தக்கது. இது பல சமூக மாறுதல்களால் ஏற்பட்டது. பிறப்பினால் ஏற்பட்ட உயர்குடியானது செல்வச்செருக்கால் ஏற்பட்ட உயர்குடியாகப் பெருகும் நிலை வற்புறுத்தப்பட்டது. இது ஏற்கெனவே குறிப்பிட்டபடி ஏழாம் நூற்றாண்டில் கிரேக்க உலகம் முழுவதையும் பாதிக்கும் முறையில் ஏற்பட்ட புதிய பொருளாதார நிலையின் பயனாக விளைந்த தோன்றும். ஆனால் இவற்றின் செயல்முறைகளையும், அரசியல் விளைவுகளையும் அறியவேண்டுமானால் நாம் அட்டிக் மக்கள் தொகுதியையும் சமூக அமைப்பையும் கூர்ந்து ஆராய வேண்டும்.

அரசர்களும் உயர்குடி மக்களும் செய்த ஆட்சியில் தனியுரிமையுடன் விடப்பட்ட மக்கள் மூன்று வகுப்புகளாகப் பிரிந்தனர். முறையே யூபாட்ரிடி (Eupatridae) எனப்படும் சீமான்கள், தங்கள் சொந்த நிலங்களைப் பண்படுத்தி வாழ்ந்த ஜியார்ஜை (Georgi) எனப்படும் வேளாண் மக்கள், வாணிபத்தாலும் ஏனைய தொழிலாலும் வாழ்க்கை நடத்திய டெமியர்கை (Demiurgi) என்ற பொதுப்பணியாளர் ஆகிய மூன்று பிரிவினர் ஆவர். யூபாட்ரிடி மக்கள் முதன்முதலில் நாட்டில் வாழ்ந்து வந்த மக்களாவர். இவர்களுடைய குடும்பப் பெயர்களைக் கொண்டு பியோனிடி (Paeonidae) அல்லது ப்யூட்டடி (Butadae) என்ற பெயர்கள் பல அட்டிக்க இடங்களுக்கு வழங்கப்பட்டன. சைனீஸிஸம் (synoecism)என்ற கூட்டுறவுக்குப்பின் அவர்களில் பெரும்பான்மையோர் நகரத்தில் வந்து வாழலாயினர். டெமியர்கை மக்கள் நகரத்தின் சுற்றுப்புறங்களில் தங்கள் குடியேற்றங்களை ஏற்படுத்தியிருந்தனர். எரியோப்பேகஸின் வடபுறத்தில் குயவர்களின் குடியிருப்பு மூலையும் நாட்டிலுள்ள பெலிக்கீஸ் (Pelekes) அல்லது டிடாலிடி (Daedalidae) போன்ற கிராமங்களும் இதற்கு எடுத்துக்காட்டாகும். சபைக்குச் செல்லும் உரிமைபெற்ற குடிமக்களான இந்த மூன்று பிரிவினர் நீங்கலாகத் தனியுரிமை பெற்ற குடிமக்களல்லாதவர் ஏராளமானவர் இருந்தனர். இவர்களுக்குள் தங்கள் சொந்த நிலமில்லாமல் சீமான்களின் பண்ணைகளில் பயிர்த்தொழில் செய்துவரும் தொழி

லாளிகளை நாம் பிரித்தறிந்துகொள்ளலாம். தங்கள் தொழிலுக்கு ஊதியமாகச் சாகுபடியில் ஆறில் ஒரு பங்கைத் தங்களுக்கென்று கொண்டதால் இவர்களுக்கு ஆறிலொருபங்காளர் - ஹெக்டிமோராய் (Hektemoroi) எனப்படும் பெயர் வழங்கியது. மற்றும் டிமியர்கை மக்களால் வேலையில் அமர்த்தப்பட்டுக் கைத்தொழில் செய்து வந்தவர்களும், சில்லறை வாணிபம் செய்பவர்களும் ஏனையோரும் இருந்தனர்.

எட்டாம் ஏழாம் நூற்றுண்டுகளில் நிகழ்ந்த குடியேற்ற இயக்கங்களில் அட்டிகா பங்குபெற்றதாகத் தெரியவில்லை. ஆனுலும், அத்தீனியர்கள் வாணிபப்போக்கு வரவுகளில் பங்குபெற்றுக் கிரேக்க உலகத்தில் ஏற்பட்ட பொருளாதாரப் புரட்சியால் பெருமளவில் பாதிக்கப்பட்டனர். ஒலிவ மரங்களைப் பயிரிடுதல் அட்டிகாவின் முக்கிய அம்சமாகக் கருதப்படலாயிற்று. ஒலிவ எண்ணெய் ஊதியம் தரும் ஏற்றுமதிப் பொருளாயிற்று. அதே சமயத்தில் அட்டிகாவின் குயவர்கள் தங்களுக்குச் சுயமான முறையில் தங்கள் தொழிலை விருத்தி செய்து வந்தனர். குயவர் தொழில் இன்னும் ஒரு நூற்றுண்டு காலத்திற்குள் டஸ்கனி (Tuscany) முதல் சைப்ரஸ் (Cyprus) வரையுள்ள மத்தியதரைக் கடலைச் சார்ந்த நாடுகள் முழுவதும் பரவக்கூடிய நிலையை அடைந்தது. அக்காலத்தைச் சேர்ந்த ஜாடிகள் (jars) ஆதென்ஸுக்கு வடமேற்கிலுள்ள டிப்பிலான் (Dipylon) வாயிலுக்கருகில் உள்ள கல்லறைகளில் காணப்பட்டன. டிப்பிலான் ஜாடிகள் என்ற பெயரைக் கொண்ட இந்த ஜாடிகள் அக்காலத்து அட்டிகாவின் நாகரிகத்தைப்பற்றி ஓரளவிற்குக் காட்சிதரும் வகையில் உள்ளன.

ஓவியன் ஜாடியில் தன் கைவண்ணத்தைக் காட்டக்கூடிய இடத்தில் வடிவியலுடன் கூடிய நுட்ப வேலைப்பாடுகளினின்றும் இருசிறை - இசைவுள்ள (symmetrical) அமைப்பினின்றும் அக்காலத்து ஜாடிகளுக்கு வண்ணம் தீட்டும் முறையில் நாம் ஒரு புதிய முறையைக் காண்பதுமன்றி அக் காலத்து அட்டிகாவிலுள்ள உயர்குடி மக்கள் எத்துணைப் பொருட் செலவில் மிகவும் பகட்டான முறையில் தங்களை விட்டு இறந்தோரைப் புதைத்தனர் என்றும் நாம் ஆராய்ந்து அறிய முடிகிறது. இத்தகைய ஜாடிகள் காணப்படும் கல்லறைகளில் இறந்தோர்க்கு அருகில் மட்பாண்டங்களும், இன்னும் சில இடங்களில் தங்க நகைகள் முதலியனவும் படையலாக வைக்கப்பட்டிருந்தன. சவக்குழியின் மேற்புறத்தில் திடலுக்குப் பதிலாக அடியில் துவாரமுள்ள உயரமான மண்ஜாடி ஒன்றை அமைத்து, இதன் வழியாகப் பான வகைகளைப் படையலாக ஊற்றி வந்தனர். ஆனுல் இக் காலத்துக்குப்பின் விரைவில் அயோனியாவின் செல்வாக்கு அட்டிகாவில் பரவலாகி, இறந்

தோரை எரிக்கும் முறை புகுத்தப்பட்டது. ஆனால் புதைப்பதும் நடைமுறையில் இருந்து வந்தது. இருவகையான வழக்கங்களும் கையாளப்பட்டு வந்தன. அயோனியாவின் உறவால் அட்டிகா மக்களின் உடையிலும் மாறுதல் ஏற்பட்டது. ஊசியால் இணைக்கப் பட்ட பெப்லாஸ் (peplos) என்னும் கம்பளி மேலாடையை விட்டு விட்டுக் கைகள் உள்ளதும் நாரால் செய்யப்பட்டதுமான (linen) மென்மையான உள்சட்டைகளை (tunic or chiton) அணியலாயினர்.

டிப்பிலான் ஜாடிகள் சிலவற்றில் அக்காலத்து அட்டிகாவின் கடலோடி வாழ்க்கையின் தொடக்கத்தை விரித்துரைக்கும் வகையில் காணப்படும் பண்படாத கப்பல் உருவங்கள் நம் கவனத் தைக் கவரக்கூடியனவாம். ஏழாம் நூற்றாண்டின் முதற்பகுதியில் ஆதென்ஸ் நகரத்தின் கடல்வாணிபம் மிகவும் விரைவாக முன் னேறியிருக்கவேண்டும். ஆதென்ஸ் இச் செயல்களில் மும்முரமாக ஈடுபட்டதால் பிறப்பால் உயர்ந்த குடிகளின் அடித்தளம் அகற்றப் பட்டு, சமூகத்தின் பிரிவுகள் புதிய நிலையை அடிப்படையாகக் கொண்டு புகுத்தப்பட்டதை நாம் எளிதில் காணலாம். கடல் வாணிபத்தில் துணிந்து ஈடுபட்ட உயர்குடி மக்கள் பல்வேறு முறைகளில் வெற்றி கண்டனர். சிலர் செல்வாக்கு அதிகமாகப் பெற்றனர்; சிலர் ஏழைகளாயினர். தொழில் துறைகளில் ஈடுபட்ட மக்கள் செல்வம் பெருகி முக்கியத்துவம் பெற்றனர். எனவே, சமூகத்திலும் அரசியலிலும் இறுதியில் பிறப்பைப் போன்று செல்வமும் தன் நிலையை உறுதிப்படுத்தியது. ஆனால் செல்வர் குடியாட்சி (timocracy) உயர்குடி யாட்சியின் இடத்தை முற்றிலுமாகக் கைப்பற்றாதிருப்பினும், அரசியல் உரிமைகள் யாவும் செல்வர்க்கே என்ற முறையில் அரசியல் அமைப்பை மாற்றாமல் இருப்பினும் இத்தகையமாறுதலுக்கான நிலைகள் யாவும் அக் காலத்தில் இருந்தன. ஏனெனில், மக்கள் தங்கள் செல்வத்தை அடிப்படையாகக் கொண்டு மூன்று வகுப்புகளாகப் பிரிக்கப் பட்டிருந்தனர். ஆண்டுதோறும் விளைநிலங்களில் சாகுபடியாகும் கூலம், எண்ணெய், கொடிமுந்திரித் தேறல் (wine) ஆகியவற்றின் செல்வாக்கை அளவாகக் கொண்டதே இப் பிரிவுகளின் கொள்கை யாம். எல்லாவற்றிலும் உயர்ந்த வகுப்பினர் பென்டாகாசியோ மெடிம்னி (Pentacosiomedimni) என்றழைக்கப்பட்டனர். துவக் கத்தில் சட்டமுறைப்படி இப் பெயர் ஏற்படாவிடினும் முந்திரித் தேறலும், எண்ணெயும் அதிக அளவில் சாகுபடியில்லாத காலத் தில் 500 படி(medimni)களுக்கு மேற்பட்ட அளவில் அறுவடை கண்ட தனி உரிமையாளர்க்கு மக்கள் வழக்கியல்பால் ஏற்படுத்திய பெயராகக் கொள்ளலாம். பின் சட்டமுறையாக இப் பெயர் ஏற்படுத்தப்பட்டபின் குறைந்த அளவு 500 படி கூலம் அல்லது

எண்ணெய், கொடிமுந்திரித் தேறல் இரண்டும் சேர்ந்து 500 படி சாகுபடி செய்தவர்கள் இம் முதல் வகுப்பைச் சேர்ந்தவ ராவர். மேற்கண்ட முறையில் தம் சொத்திலிருந்து முந்நூறு படிகளுக்கு மேலும் ஐந்நூறு படிகளுக்குக் கீழும் வருவாய் உள்ளவர்கள் யாவரும் இரண்டாவது வகுப்பைச் சேர்ந்தவர்கள். இவர்கள் குதிரை வீரர்கள் அல்லது 'நைட்'டுகள் என்றழைக்கப் பட்டனர். ஏனென்ருல், இவர்களைப் போன்றவர்கள் சாதாரண மாகக் குதிரை வைத்துப் பேணிக்கொள்ளவும், யுத்தத்தில் குதிரை வீரர்களாகச் செல்லவும் கூடியவர்களாயிருந்தனர். மூன்ருவது வகுப்பிற்குக் குறைந்த வருமானமானது இருநூறு படிகளாகும். டீம்ஸ்டர்கள் (Teamsters) என்னும் பெயரானது, இவர்கள் ஒரு ஜோடி எருதுகொண்டு தமது நிலங்களை உழக்கூடிய பணக்கார உழவாளிகள் என்பதைக் காட்டுகின்றது. நகரத்தின் முக்கிய நடுவர் பதவிகளான ஆர்க்கான், மன்னன், போலிமார்க் பதவிகள் முதலாம் வகுப்பிற்கே அளிக்கப்பட்டன, ஆனல் அன்ருட வாழ்க் கையில் வெற்றிபெற்ற மனிதன் யூபாட்ரிட் (Eupatrid) வகுப்பில் சேராதவனுனலும் அவனுடைய வருமானம் 500 படிகளுக்கு இருக்குமானுல், அவன் இப் பதவிகளுக்குத் தகுதியும் உரிமையும் உடையவன் என்னும் கொள்கை அல்லது நெறிமுறையானது ஒப்புக்கொள்ளப்பட்டது. நிலத்திலிருந்து வரும் செல்வத்தைக் கொண்டு மக்களை வகுப்புவாரியாகப் பிரிப்பது இயல்பான காரிய மாகும். ஆனல் தொழிலாளர்கள் இவ் வகுப்புகளிலிருந்து முழுவது மாக ஒதுக்கிவைக்கப்பட்டனர் என்ருே அல்லது அரசியல் உரிமை களை அடைவதற்காக அவர்கள் பண்ணைகளை வாங்கும்படி வற்புறுத்தப்பட்டனர் என்ருே எண்ணுவது நல்ல யூகம் அல்ல.

முதலில் யூபாட்ரிட்கள் தங்களுடைய உடன் குடியுரிமை யாளர்களுக்குக் கொடுத்த இந்தச் சலுகையானது செயல் முறையில் அதிகமல்ல. நாட்டிலுள்ள பணக்காரர்களில் அநேகர் பழைய குலங்களைச் சேர்ந்தவர்களாயிருந்தனர். ஆனல் செல் வத்தை அரசியல் கருவியாக ஏற்றுக்கொள்வது கடைசியில் பிறப்பின் தனிச் சலுகைகளைக் கட்டாயமாகக் கீழிருந்தே அரித்து விடும் என்பதற்குச் சந்தேகமில்லை. கீழான வகுப்புகள் சீமான் களின் குலங்களைப் போலவே தமக்கென்று குழுக்களை அமைத்துக் கொண்டதையும், சகோதரக் கூட்டங்களில் நுழைவுரிமை பெற்ற தையும் முன்னதாகவே குறிப்பிட்டுள்ளோம். தெஸ்மோதீட்டி (Thesmothetae) என்ற நிறுவனமும் ஒருகால் இந்த வகுப்புகள் தமது உரிமையை வற்புறுத்துவதற்காக எடுத்துக்கொண்ட ஒரு படியாகலாம். தெஸ்மோதீட்டி என்பது ஆறு நீதிபதிகளைக் கொண்ட கழகமாகும். இந்தக் கழகம் ஆதென்ஸின் நீதித்

துறையின் முறை யாவற்றையும் கண்காணித்து வந்தது. சட்டங்களை ஆராய்ந்து நோக்குவதும், அவைகளிலுள்ள குறைபாடுகளை எடுத்துக்காட்டுவதும், நீதிமன்றத் தீர்ப்புகளை எழுத்து மூலமாய்ப் பதிந்து வைப்பதும் இவர்களுடைய கடமையாகும். இவர்கள் எரியோபேகஸ் மன்றம் தெரிந்து விசாரிக்கக்கூடிய கொலை வழக்குகளைத் தவிர மற்ற எல்லா வழக்குகளையும் விசாரித்தனர். உண்மையில் இவர்கள் அம் மன்றத்தின் குழு ஒன்று போலக் காணப்படுகின்றனர். இவர்கள் ஆண்டுதோறும் தேர்ந்தெடுக்கப் பட்டனர். யூபாட்ரிடர்களுக்கு மூன்றும், ஜியார்ஜியர்களுக்கு இரண்டும், டெமீயர்காஸ்களுக்கு ஒன்றும் என்று இந்த வகுப்புகளுக்குள் ஏற்பட்ட ஒப்பந்தத்தினுல் ஆறு என்ற எண்ணும் உறுதி செய்யப்பட்டது. பல காரணங்களால் நம்பக்கூடிய விதமாக இப்படி ஊகிக்க இடந் தருகின்றது. இவர்கள் ஆர்க்கான், பேசிலீயூஸ், போலிமார்க் என்னும் மூன்று நடுவர்களுடன் இணைக்கப்பட்டனர். ஒன்பது பேரும் குழுப்போன்ற ஒரு நிறுவனத்தை ஏற்படுத்தினர். அதுதான் ஒன்பது ஆர்க்கான்கள் என்னும் நிறுவனமாகும். தாம் சட்டப்படி நடப்பதாகவும் அநீதி யாதாகிலும் தாம் செய்தால் தங்கத்தால் செய்யப்பட்ட முழு அளவிலுள்ள மனிதச் சிலை ஒன்றைப் படைப்பதாகவும் ஒவ்வோர் ஆர்க்கானும் தாம் பதவி ஏற்கும்போது உறுதிமொழி கூறுவர். ஓர் ஆர்க்கானும் இந்தத் தண்டனையை நிறைவேற்றியிருக்க முடியாது.

இந்த வகுப்பினரைத் தவிர வேறு சிறிய உழவர்களும், எளிய கைத்தொழிலாளர்களும் இருந்தனர். மேற்கூறிய உழவர்களின் வருமானம் இருநூறு படிகளுக்குக் குறைவான தானியமும், எண்ணெயுமாயிருந்தது. இவர்கள் 'தீட்டீஸ்' (Thetes) என்றழைக்கப் பட்டனர். இதன் சரியான பொருளானது தொழிலாளிகள் என்பதாகும். ஆனுல் நாளடைவில் இதன் பொருள் புரட்டப்பட்டது. தீட்டீஸ்கள் குடிகளாக இருந்தனர்; ஆனுல் இவர்களுக்கு அரசியல் உரிமைகள் வழங்கப்படவில்லை. ஆனுலும், இவர்கள் பொதுமக்களிடம் ஒரு முக்கியத்துவத்தைப் பெற ஆரம்பித்தனர். கடல் வாணிபமானது வளரவே, கப்பற் படையும் வளர ஆரம்பித்தது. கடலில் வலிமை வளரவே, ஒரு புதிய நிறுவனத்தின் தேவையும் அவசியமாயிற்று. பென்டிகான்டர்களில் மாலுமிகளாக வேலை செய்ய வேண்டிய கடமையானது தீட்டீஸ்களின்மேல் விழுந்தது என்பதற்குச் சந்தேகமேயில்லை. இது அவர்களுக்கு அரசியலில் ஒரு முக்கியத்துவத்தை அளித்தது. தங்களுடைய அரசியல் உரிமைகளைக் கொண்டாட வேண்டிய காலம் ஏற்படும்போது, இந்த முக்கியத்துவமானது அவர்களுடைய உரிமைக் கோரிக்கைகளை வலிமைப்படுத்தியது. இக் காலத்திற்குப் பின் எவ்விதம் அத்தீனிய

மக்களாட்சியானது, தனது கடல் வலிமையுடன் இணைக்கப்பட்டிருந்தது என்பதைப் பார்ப்போம். அதன் கப்பற்படை வரலாற்றின் துவக்கத்திலேயே மங்கலாக இவ்வித இணைப்புத் தென்படுகிறதென்று நாம் ஊகித்தால், அது குற்றமாகாது. இக் காரியத்திற்காக ஒவ்வோர் இனமும் பன்னிரண்டு நாக்ரெறிகள் என்ற (Naucrariae) மாவட்டங்களாகப் பிரிக்கப்பட்டன. ஒவ்வொரு நாக்ரெறியும் ஒரு கப்பல் அனுப்ப ஒருகால் கடமைப்பட்டிருக்கலாம். இப்படிக் கப்பற்படையானது நாற்பத்தெட்டு கப்பல்களைக் கொண்டிருந்தது. இதன் ஆட்சியானது நாக்ரெறி என்ற குழுவினால் நடத்தப்பட்டு வந்தது. இக் குழுவிற்குப் பல தலைமை அவைத் தலைவர்கள் இருந்தனர். கப்பற்படை அல்லாத ஏனைய காரியங்களை எடுத்து நடத்துவதற்கும் இந்த ஏற்பாடானது மிகவும் வசதியாயிருந்தது. இவ்விதமாக நாக்ரெறியானது ஒரு முக்கியமான ஆட்சி மன்றமாயிற்று.

ஏழாவது நூற்றாண்டின் மத்தியில் ஹெல்லாஸ் அல்லது கிரீஸின் முன்னேறுகின்ற எல்லாப் பாகங்களின் உருவத்தையும் மாற்றி அமைத்துக்கொண்டு வரும் மாறுதலை அட்டிகாவின் சமூகமும் அடைந்துகொண்டிருந்தது என்று நாம் பார்க்கிறோம். செல்வமானது அரசியல் சோதனையாகப் பரம்பரையுடன் போட்டியிடுவதை நாம் கவனிக்கின்றோம். உயர்குடி யாட்சியானது பணக்காரர்களின் ஆட்சியாக (timocracy) மாறுவதாகத் தோற்றமளிக்கின்றது. சீமான்களின் வகுப்பைச் சேர்ந்த மூன்று ஆர்க்கான்களின் கைகளிலும் யூபாட்ரிடர்களைக் கொண்டுள்ள எரியோபேகஸ்ஸிடமும் சகல அதிகாரங்களும் இருந்தன. ஆனால் இந்தச் சீமான்களின் குலத்திற்கு வெளியிலுள்ள சிறுதர நிலக்கிழாரும், வியாபாரிகளும் தங்கள் உரிமைகளை வற்புறுத்தவும் தங்களது வலிமையைக் காட்டவும் முற்படுகின்றனர். அவர்களுடைய வலிமையின் பயனாகவே தெஸ்மோதீட்டியாகிய நிறுவனம் ஏற்பட்டிருக்கலாம். சீமான்கள் அல்லாதவர்கள் நுழைய முடியாத சகோதரக் கூட்டங்களிலும் இவர்கள் புகுவதற்கு அநுமதியளிக்கப்படுகின்றனர். அட்டிகாவின் வியாபாரமானது நாடோறும் வளர்ந்துகொண்டே வருகின்றது. குடியாட்சியின் போக்குகளை (tendencies) வாணிபத்தின் வளர்ச்சியானது மேம்படச் செய்தது. கப்பல்களில் வேலை செய்யவும் அவைகளை நடத்தவும் குடிகளில் மிகவும் எளிமையானவர்கள் தேவைப்படவே, அந்த வகுப்பானது முக்கியத்துவம் அடையவும், அரசியல் காரியங்களில் முன்னேறவும் முயன்றது.

ஆனாலும் ஆதென்ஸின் கப்பற்படை அமைப்பானது அதன் அயலகங்களான சால்சிஸ், கொரிந்து முதலியவைகளுடனோ

அல்லது அயோனியாவிலுள்ள குடியேற்ற நாடுகளுடனே ஒப்பிட்டுப் பார்க்கும்போது மிகவும் சிறியதாகவே இருந்தது. ஆர்காஸின்கீழ்ச் சில காலமாக இருந்து வந்த ஈகைனுவோ வென்றால் ஆதென்ஸைவிட அதிகமான கப்பற்படையைக் கொண்டிருந்தது. பிற்காலத்தில் தமது பக்கத்திலுள்ள வளைகுடாவானது யாருடைய ஆதிக்கத்தில் இருக்க வேண்டும் என்று போட்டியிட்டுக் கொண்டு எதிரிகளாயிருந்த இந்த இரண்டு நகரங்களாகிய ஈகைனுவும் ஆதென்ஸும், ஏழாவது நூற்றாண்டில் ட்ரீசென் (Troezen) நகரத்திற்கு விரோதமாகக் காலூரியா (Calauria) வாகிய சிறு தீவில் பாசிடோனின் வழிபாட்டை நிலைநிறுத்தப் பிணைக்கப்பட்டிருந்தது ஒரு வியப்பான காரியமாகும். சாரோனிய, ஆர்காலிஸ் கடற்கரையோரமாயுள்ள எபிடாராஸ், ட்ரீசென், ஹெர்மீயானி (Hermione), நாப்லியா (Nauplia), ப்ரஸ்ஸியி (Prasiae) முதலிய நகரங்கள் இந்தப் புனிதக் குழுவைச் சேர்ந்திருந்தன. ஆந்திடானில் (Anthedon) உள்ள மாலுமிகளின்மேல் கொண்டிருந்த அதிகாரத்தினுல் பீயோஷியாவிலுள்ள ஆர்க்கோமீனஸ்ஸும் இதில் ஓர் உறுப்பாயிருந்தது. இந்தக் கடலைச் சார்ந்த நகரங்கள் யாவும் ஒன்றுசேர்ந்து 'காலூரியாவில் வழிபாடு நடத்தி வந்ததில் அரசியல் சம்பந்தமான முக்கியத்துவம் ஏதும் இல்லை. அதிக தூரத்திலிருந்து தெரிகின்ற ஈகைனு மலையில் இவர்கள் எவ்விதம் அகில ஹெல்லனிக் ஸீயூஸிற்குப் பலிகளைச் செலுத்தினுர்களோ அவ்விதமே இவர்களுடைய மாலுமிகளும் காலூரியாவிலுள்ள பாசிடோனுக்குப் பலிகளைச் செலுத்தி அக் கடவுளின் சினத்தை மாற்றினர். இவர்கள் விருப்பமில்லாதிருக்கும் பக்தகோடிகள் அல்லர். கடல்தெய்வமாகிய இவருக்கு இவருடைய தீவிலே ஓர் இல்லத்தை இவர்கள் கட்டினர். இதன் கடைக்கால் சமீபத்தில் தோண்டி எடுக்கப்பட்டது. கிரீஸில் கிடைத்துள்ள பழங்காலக் கற்கோயில்களின் அழிவுச் சின்னங்களில், இந்தக் கோவிலும் ஒன்ருகும்.

நாணயங்கள் கண்டுபிடிக்கப்பட்டதால் பிற கிரேக்க நாடுகளைப் போலவே அட்டிகாவும் தனது பொருளாதார வளர்ச்சியில் அமைதி குலைக்கப்பட்டுக் காணப்பட்டது, கடல் வாணிபத்தில் ஒரு முக்கியமான பங்கை எடுத்த இதன் அயலகத்துத் தீவாகிய ஈகைனுவுடன் இயல்பாக அட்டிகா நெருங்கிய வாணிப உறவு கொள்ளும் நிலைக்கு வந்தது. எனவே, அட்டிகா ஈகைனு மக்கள் வழங்கிய நாணய முறையை உபயோகிப்பதையும், ஈகைனு மக்கள் கையாண்ட நிறுவை முறையைப் போன்றதொரு முறையை எடுத்தாள்வதையும் நாம் காண்கின்ருேம். நாணயமானது முதலில் உபயோகத்திற்குக் கொண்டு

வரப்பட்ட பொழுது மிகவும் கிடைப்பதற்கரியதாயிருந்ததால், சில வியாபாரத்தில் வெற்றி பெற்ற துணிச்சல் வியாபாரிகளின் பணப் பெட்டிகளில் மாத்திரம் மூலதனம் குவிய ஆரம்பித்தது. இதற்குப்பின் பழைய முறையாகிய பண்டமாற்றும், உலோகத்தைக் கொடுக்கல் வாங்கல் இடையீட்டுப் பொருளாக உபயோகிக்கும் புதிய முறையும் ஆங்காங்கே நிலவி வந்த இடைமாறுபாட்டுக் காலம் தோன்றியது. இந்த நிலைதிரி காலமானது, சிறிய மூலதனம் உள்ளவர்களுக்கு மிக்க துன்பத்தைக் கொடுக்கின்ற காலமாயிருந்தது. ஆனால் சமூகத்திற்குத் துயரம் கொடுக்கக்கூடிய எல்லாச் சூழ்நிலைகளும் இருந்தபோதிலும், பணக்காரர்களுக்கும் ஏழைகளுக்கும் இடையே உள்ள சச்சரவானது நெருங்கிக்கொண்டு வந்தபோதிலும், இம் மாதிரியான காலங்களில் ஏற்படும் பொருளாதார நெருக்கடியானது உடனே ஏற்படவில்லை. இந்த நூற்றாண்டு முடிவதற்கு முப்பது ஆண்டுகள் இருக்கும்போது நடந்த ஒரு நிகழ்ச்சியானது உழவர்களும் அவர்களைப் போன்ற கிராம மக்களும், இன்னமும் அமலில் இருந்துவரும் அரசியல் அமைப்பின்மேல் பற்றுக்கொண்டிருந்தனர் என்பதைத் தெளிவாகக் காட்டுகின்றது.

கொடுங்கோலாட்சியின் எடுத்துக்காட்டானது தொற்றும் இயல்புடையது. ஆதென்ஸின் அருகிலுள்ள மேகாரா, கொரிந்து நகரங்களில் கொடுங்கோலாட்சியானது செழித்து ஓங்கவே ஆதென்ஸிலும் இவ் வகையான ஆட்சியை நிறுவப் பலர் முயலக்கூடும். உயர்குடியைச் சேர்ந்த கைலான் (Cylon) என்ற அத்தீனியன், மேகாராவின் கொடுங்கோலனாகிய தியாகினீஸ் (Theagenes)ஸின் மகளை மணந்தான். மேகாராவின் செல்வாக்கினாலும், மேகாராவின் உதவியினாலும் தன்னை அந் நகரத்தின் சர்வாதிகாரியாக்கிக்கொள்ள முயன்றான். அவன் டெல்பிக் தெய்வமொழியினை நாடினான்; அது அவனை ஸீயூஸின் பெரிய விழாவின்போது சேம அரணாகிய அக்ராபோலிஸ்ஸைக் கைப்பற்றும்படி கூறியது. ஒலிம்பிக் பந்தயம் ஒன்றில் வெற்றிபெற்ற கைலான், ஸீயூஸின் பெரிய விழாவானது ஒலிம்பிய விழா எனக்கொண்டு சேம அரணைத் தாக்கினான். ஆனால் இந்தச் சதியானது தோல்வியுற்றபோது மார்ச் மாதத்தில் நகரத்திற்கு வெளியே கொண்டாடப்படும் டையாசியா (Diasia) விழாவை இந்தத் தெய்வ மொழியானது கூறியதாக விளக்கிக் கூறப்பட்டது. இந்த முயற்சிக்காக உயர் குடிப் பிறந்த பல காளையர்களையும், தன் மாமனாராகிய தியாகினீஸ் அனுப்பிய மேகாராப் படைவீரர்களையும் கைலான் தன் படையில் சேர்த்துக்கொண்டான். ஆனால் இவனுக்கு மக்களிடமிருந்து ஓர் ஆதரவும் இல்லை. சேம அரணை இவன் கைப்பற்

றினன். ஆனல் வெளிநாட்டுப் படைவீரர்களைப் பார்த்த மாத்தி ரத்தில், அத்தீனியர்களுள் எவரேனும் கைலானுடன் சேர்ந்து தம் அரசாங்கத்தைக் கீழே தள்ள வேண்டும் என்று கொண்டிருந்த சிறிதளவு அநுதாபமுங்கூட மறைந்துவிட்டது. கிராமங்களிலுள்ள உழவர்களை நாக்ரெறிகளின் சபையானது தம் படைபலத்துடன் வரும்படி கட்டளையிட்டது. இப்படிக் கட்டளையிட்ட மாத்திரத்தி லேயே குடியான மக்கள் இதன்படி நடந்துகொண்டனர். சேம அரணில் கைலான் முற்றுகை யிடப்பட்டான். இந்த முற்றுகை யானது அதிக நாட்கள் நீடித்தது. இறுதியில் ஆகாரமும் நீரும் தட்டுப்படும் சமயத்தில் கைலானும் அவனுடைய சகோதரனும் கோட்டையை விட்டுத் தப்பியோடினர். மற்றவர்கள் அதி விரைவில் சரணமடையும்படி நேர்ந்தது. இவர்கள் அத்தீனு போலியாஸின் (Athena Polias) கோவிலில் புகலிடம் கொண் டனர். ஆனல் இவர்கள் உடனே அடைக்கலமடைந்ததால் இவர்களைக் கொல்ல மாட்டோம் என்று ஆர்க்கான்கள் உறுதி மொழி கூறினர். ஆதலின் இவர்கள் அக் கோவிலைவிட்டு வெளி யேறினர்கள். ஆனல் ஆல்க்மியோனிட் குடும்பத்தைச் சேர்ந்த மேகாக்ளீஸ் இந்த ஆண்டின் ஆர்க்கான்களில் ஒருவராக இருந் தார். இவருடைய ஏவுதலினல், உறுதிமொழியானது புறக் கணிக்கப்பட்டு, சதிகாரர்கள் யாவரும் கொல்லப்பட்டனர். குலங்களுக்குள் இருந்த ஒரு பழம்பகையானது இச் செயலுக்குக் காரணமாயிருந்திருக்கலாம். நகரமானது ஒரு கொடுங்கோல னிடமிருந்து மீட்கப்பட்டது. ஆனல் மேகாக்ளீஸின் செயலால் பெரிதும் தீட்டுப்பட்டுப் போயிற்று. கடவுளை நம்பி இரந்து வேண் டிய மக்களுக்குக் கொடுத்த உறுதிமொழியை மீறியது, கடவு ளுக்கே செய்த அவதூறாகும். தீட்டுக்கழியுமட்டும் நகரமானது ஒரு சாபத்தின்கீழ் இருந்தது. ஆல்க்மியோனிடர்களை வெறுத்த வர்களும், கைலானின் அந்தரங்க நண்பர்களும் இந்தக் கருத்தைப் பரப்பினர். கைலானும், அவனுடைய சகோதரனும் அவர் களுடைய பின் மரபினரும் தண்டனையாகக் குடியுரிமையை இழக்க வும், நிலையாக நாடு கடத்தப்படவும் நேர்ந்தது. அதே சமயத்தில் ஆல்க்மியோனிடர்களும், அவர்களுடன் சேர்ந்து இத் தீச்செயலை உண்டுபண்ணியவர்களும் தெய்வங்களைப் பழித்த குற்றத்திற் காக விசாரிக்கப்பட்டனர்; அதற்குத் தண்டனையாக நிலையாக நாடுகடத்தப்படவும், அவர்களுடைய சொத்துக்கள் யாவும் பறிமுதல் செய்யப்படவும் நேர்ந்தது. தெய்வங்களைப் பழித்த செயல் நடந்தது முதல், மேற்கூறிய தண்டனை விதிக்கப்பட்ட காலம் வரை ஆல்க்மியோனிடர் குலத்தில் இறந்து ஆதென்ஸில் அடக்கம் செய்யப்பெற்றவர்களின் உடல்கள் கல்லறைகளிலிருந்து திரும்பவும் எடுக்கப்பட்டு நகர எல்லைகளுக்கு வெளியே எறியப்

பட்டன. ஆல்க்மியோனிடர்கள் நாடுகடத்தப்பட்டது பிற் காலத்தில் சில பயன்களை விளைவித்தது. இருநூறு ஆண்டுகளுக் குப்பின் இச் செயலானது எவ்விதம் அத்தீனிய அரசியலைப் பாதித்தது என்று பின்பு கவனிப்போம். ஆல்க்மியோனிடர்கள் விரட்டி அடிக்கப்படினும் இந்த நகரமானது தூய்மையாக்கப் படவேண்டியிருந்தது என்றும், இதற்காகக் கிரீட் தீவிலிருந்து ஈபிமீனிடீஸ் (Epimenides) என்ற மத ஆசாரியர் ஆதென் ஸிற்கு வந்து நகரத்தைத் துப்பரவு செய்தார் என்றும் கதை யொன்று உண்டு. மற்றுமொரு கதையானது, ஈபிமீனிடீஸை ஒரு நூற்றாண்டிற்குப் பிறகு மறுபடியும் ஆதென்ஸ் நகரைச் சுத்தம் செய்யக் கொண்டு வந்ததாகச் சொல்லுகின்றபடியால், ஈபிமீனிடீஸும் ஆர்பியஸ்ஸைப் போலவே ஒரு புராணப் பெய ராக இருக்கலாம் என்று சந்தேகப்பட வேண்டியிருக்கிறது. இதற்குப்பின், வருங்கால நிகழ்ச்சியை உரைப்பவரான இப் பெரி யார் நூறு ஆண்டுகாலம் தெய்விக நித்திரையிலிருந்தார் என்று கூறி இவ் விரண்டு கதைகளும் இணைத்து வைக்கப்பட்டன.

அடுத்த பத்து ஆண்டுகளில் உழவர்களின் நிலைமை முன் நிலைமையினும் மிக அதிக மோசமடைந்ததாகத் தெரிகின்றது. கைலானின் சதியின் பயனாக மேகாராவுடன் போர் மூண்டது. இந்தப் போரானது கிராமங்களில் வசிக்கும் மக்களின் துயரத்தை அதிகரிக்கச் செய்தது. ஏனென்றால், அட்டிகாவின் கடற்கரை யோரங்கள் பகைவரால் தாக்கப்பட்டுக் கொள்ளையடிக்கப் பட்டன. அதே நேரத்தில் ஆதென்ஸின் எண்ணெய் வியாபாரத் திற்கு மேகாராவிலுள்ள அங்காடி மூடப்பட்டது. இச் சமயத்தில் சட்டங்களின் தொகுதி ஒன்று வரையறுக்கப்பட்டு எழுதப்பட வேண்டுமென்று அரசாங்கம் ஒரு முடிவுக்கு வந்தது. இந்தச் சலுகையை ஒருகால் வருந்தி வாடிய மக்கள் தம் தலைவர்களைக் கொண்டு அரசாங்கத்தைப் பலவந்தப்படுத்தி வாங்கியிருக்கலாம். இல்லாவிட்டால் அரசாங்கமே நிலைமையை அறிந்து, அது அதிக மோசமாவதற்கு முன்பு, தாமே வழங்கியிருக்கலாம். ஒருவேளை மக்கள் வாழ்க்கைக்கும் சொத்திற்கும் பாதுகாப்பு வேண்டு மென்று அதிக காலம் கிளர்ச்சி செய்திருக்கலாம். ஒருகால் தெஸ்மாதீட்டியர்கள் நீதிபதிகளின் தீர்ப்புகளை எழுத்துமூலம் பதிவு செய்தது மாத்திரம் போதவில்லையென்று புலப்பட்டிருக்க லாம். எப்படி இருந்தாலும் ட்ரேக்கன் (Dracon) என்பவர் ஒரு தனிப்பட்ட சட்டம் அளிப்பவராக (Thesmothetes) ஏற்படுத்தப் பட்டார். இவருக்கு வழக்கில் இருக்கும் சட்டங்களைத் தொகுக் கவும் அவைகளிலுள்ள பிழைகளைத் திருத்தவும் அதிகாரங்கள் வழங்கப்பட்டன. இவருடைய கிரிமினல் (குற்ற இயல்) சட் டத்தில் இரத்தத்தைச் சிந்தும் வழக்குகளைக் குறித்த நிபந்தனை

களின் பாகத்தை மாத்திரம் நாம் நன்ருக அறிகிருேம். ஏனென்ருல், இந்த நிபந்தனைகள் பிற்காலச் சட்டங்களால் மாற்றப்படவேயில்லை. அத்தீனியர்களுக்கு அவர்களுடைய சட்டங்களானவை எவ்வளவு கொடூரமானவை என்பதை ட்ரேக்கன் எடுத்துக் காட்டினுர் என்று பிற்காலத்தில் எண்ணப் பட்டது. ட்ரேக்கன் ஒரு கொடூரமான சட்டமளிப்பவர் என்பது உலகோர் அறிந்த உண்மை. ட்ரேக்கனின் சட்டங்கள் மையினுல் எழுதப்படாமல் இரத்தத்தினுல் எழுதப்பட்டிருந்தன என்ற பொருள்செறி தொடரை உண்டாக்கியவனும், சொற்பொழி வாற்றுவதில் வல்லமையுடையவனுமான அத்தீனியன் ஒருவன் மிக்க சிறப்பைப் பெற்ருன். கோசுக் கீரையைத் திருடினது போன்ற சில சிறிய குற்றத்திற்கும் மரண தண்டனை விதிக்கப் பட்டதால் இந்தக் கருத்தானது தோன்றிற்று. இது எப்படியிருந் தாலும் சரி, நாம் ட்ரேக்கனின் சட்டங்களைப் பரந்த நோக்கத் துடன் கண்ணுற்ருல், நாம் இந்தக் கருத்தை மாற்றிக்கொள்ள லாம். சதியால் ஏற்பட்ட கொலைக்கும், தற்செயலாக நிகழ்ந்த அல்லது நியாயமானது என்று நிரூபிக்கத் தகுந்த கொலைக்கும் உள்ள வேற்றுமைகளை மிகவும் அக்கறையுடன் இவர் எடுத்துக் காட்டினுர். ட்ரேக்கனின் சட்டத்தில் ஐம்பத்தொரு நீதிபதி களைக் கொண்ட எபிட்டே (Ephetae) என்ற தொகுதியைக் காண் கின்ருேம். இவர்கள் யூபாட்ரிடர்களிலிருந்து தேர்ந்தெடுக்கப் பட்டனர். ஆனுல் இவர்கள் எரியோபேகஸ் சபையில் ஒரு பாகத் தினரா அல்லது முழுவதுமாகத் தனிப்பட்ட குழுவினரா என்பதை நாம் தெளிவாக அறியமுடியாமலிருக்கின்ருேம். எரியோபேகஸ்ஸாகிய நீதிமன்றத்தின்முன் வராத இரத்தம் சிந்தப்பட்ட வழக்குகளில், யார் இரத்தம் சிந்தியவர் என்று தெரியவந்த வழக்குகள் எபிட்டேயினுல் விசாரிக்கப்பட்டன. குற்றத்திற்கு ஏற்றவாறு இந்த எபிட்டே தமது நீதிமன்றத்தைப் பல இடங்களில், அதாவது டெல்பினியன் அப்போலோவின் (Delphinian Apollo) கோவிலிலும் அல்லது பாலரோனில் (Phaleron) பல்லாடியோனிலும் (Palladion) அல்லது மியூனிசியன் தீபகற்பத் திலுள்ள ஒரு சிறு முனையாகிய பிரியட்டோவிலும் (Phreatto) நிறுவினர். வெளி நாடுகளில் கொலைசெய்தவர்களை விசாரிக்க மேலே கடைசியாகச் சொல்லப்பட்ட இடமானது உபயோகிக்கப் பட்டது. குற்றஞ்சாட்டப்பட்டவர்கள் தமது தாய் நாட்டின் மண்ணில் கால் வைக்காதபடி கரையோரமாக இழுத்து நிறுத்தப் பட்ட படகில் நின்றுகொண்டே குற்றச்சாட்டிற்குப் பதில் அளிப் பார்கள். இரத்தத்தைச் சிந்தியவர்கள் யார் என்று தெரியாத போது அந்த வழக்கானது பிரைடேனியத்தில் (Prytaneum) மன்னர்முன் சமர்ப்பிக்கப்படும்.

'ட்ரேக்கனின் இதர சட்டங்களைப்பற்றி நாம் அறிய முடியாமல் இருப்பது நமது துர்ப்பாக்கியமே யாகும். கடனாளி களைக் குறித்த சட்டங்கள் மிகவும் கடினமானவை. கடன் கொடுத் தவர்கள், கடனைச் செலுத்த முடியாமல் நொடித்துப் போனவர் களைத் தம் அடிமைகளாக்கிக்கொள்ளலாம். அதிகாரங்களையுடைய செல்வ வகுப்பின் நலன்களுக்காகப் பொதுவாக, ட்ரேக்கன் ஏற் பாடுகள் செய்யக் கடன்பட்டிருக்கலாம். ஆனால், இந்தச் செயலா னது எளிய மக்களுக்கு ஒரு பெரிய இலாபமாக முடிந்தது. ஏனென் றால், பணக்காரரின் நலன்கள் யாவை என்பது எழுத்தின்மூலம் வரையறுக்கப்பட்டது.

## 4. சோலான் இயற்றிய சட்டங்களும் ஜனநாயகத்தின் அடிப்படையும்

ட்ரேக்கனுடைய சட்டங்கள் சிலவே. ஆனால் அவை தீமை களின் வேர்களைத் தொடவில்லை. ஒவ்வோர் ஆண்டும் சில செல்வர் களுடைய கொடுமையினால் சிறிய குடியானவர்களுடைய வறுமை வளர்ந்துகொண்டே வந்தது. முதலில்லாமல் சிறிய நிலச் சொந்தக்காரர்கள், தங்களுடைய நிலங்களை அடைமானம் வைத்துப் பெருவட்டிக்குக் கடன் வாங்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டு, அந்த நிலங்கள் முதலாளிகள்வசம் சென்றன. அந்தக் காலத்தில் பணம் கிடைப்பது அரிதாயிருந்தது.[8] குடியானவர்கள் தங்களுக்குத் தேவையான பொருள்களை யெல்லாம் நாணயம் கொடுத்து வாங்கவேண்டும் என்பதை நினைவில் வைக்கவேண்டும். அட்டிகாவில்கூட ஒரு சிறிய குடியானவன் பெரிய நிலச் சொந்தக் காரருடன் சமாளிக்க முடியாமல் இருந்தான். அட்டிகாவிலிருந்த சிறிய வயல்களில் அடைமானப் பத்திரங்கள் எழுதிவைக்கப்பட்ட கற்கள் நிறைய இருந்தன. பெரிய நிலங்கள் வளர்ந்துகொண்டே வந்தன. சோலான் சொன்னபடி, அந்தக் கரிசல் நிலம் அடிமை நிலமாயிற்று. சுயேச்சையாயிருந்த வேலையாட்களின் நிலைமையும் இன்னும் வருந்தத்தக்கதாய் இருந்தது. விளைச்சலில் ஆறில் ஒரு பங்கு அவர்களுடைய கூலியாகும். புதிய பொருளாதார நிலையில் இந்தக் கூலி போதாதிருந்தமையால், தங்கள் வாழ்க்கையை நடத்த எஜமானர்களிடமிருந்து, கடன் வாங்கவேண்டிய நிர்ப் பந்தம் ஏற்பட்டது. வட்டி அதிகமாயிருந்தது. கடன் சட்டங்கள்

[8] ஒரு செம்மறியாட்டின் விலை ஒரு ட்ராக்மா (drachma), ஒரு புஷல் பார்லியின் விலை ஒரு ட்ராக்மா, ஓர் எருதின் விலை ஐந்து ட்ராக்மாக்கள் (drachmae) என்பவைகளிலிருந்து வெள்ளியின் உள்மதிப்பை நாம் மதிப்பிட முடிகின்றது. (ஒரு ட்ராக்மா = கிட்டத்தட்ட ஒரு பிராங்க்-franc.)

இரக்கமற்றவையாயிருந்தன. கடன்பட்டவன் திருப்பிக் கொடுப்பதற்குச் சக்தியற்றவனாக இருந்தால், அவன் கடன் கொடுத்தவனுக்கு அடிமையாவான். இதன் முடிவு என்னவெனில், சுயேச்சையாயிருந்த வேலையாட்கள், சிறிது சிறிதாக ஓர் அடிமை வகுப்பினராக மாறுதல் அடைந்தார்கள். அவர்களை எஜமானர்கள் தாங்கள் நினைத்தபொழுது விற்கலாம்.

இந்த மாதிரி செல்வராயிருந்தவர்கள் சிலர், மேலும் மேலும் செல்வர்களாகிப் பேராசை பிடித்தும், சிறிய நிலச் சொந்தக்காரர்கள் நிலமிழந்தும், நிலமில்லாத சுயேச்சை மக்கள் அடிமைகளாகவும் ஆனார்கள். பணமும் அதிகாரமும் இருந்தவர்களின் பக்கமே சட்டத்தைத் திருப்பி அநியாய நீதிகள் வழங்கியதால், இந்தத் தீமைகள் மேலும் மேலும் வளர்ந்தன. இந்தச் சமூக வியாதி ஓர் அரசியல் புரட்சியில் முடியுமென்று எதிர்பார்க்கப்பட்டது. தம்மை இரக்கமில்லாது கொடுமைப்படுத்தியவர்களிடத்தில் மக்கள் வெறுப்படைந்து புரட்சி செய்வதற்கு ஒரு தலைவன் வேண்டுமென்றுமட்டும் விரும்பினார்கள். அந்தக் காலத்து அரசியலைப்பற்றிப் படித்த மாணவன் மற்ற அரசுகளில் ஏற்படும் முன்னேற்றத்தைப் பார்த்தால் ஒரு கொடுங்கோலாட்சிதான் இதற்கு முடிவுகோலும் என்று தோன்றும். கொடுங்கோலாட்சி ஒரு தடவையோ அல்லது அதற்கும் மேலோ தவிர்க்கப்பட்டிருக்கலாம் என்று தெரிகிறது. மற்றும் இப்பொழுது இந்த மக்கள் ஒரு கிளர்ச்சித் தலைவனை அல்லாமல் நடுநிலைமை வகிப்பவனை (மத்தியஸ்தனை)க்கொண்டுவந்தார்கள். மற்றும் இது ஒரு சீர்திருத்தமேயல்லாது ஒரு புரட்சியல்ல. இந்தக் கொடுங்கோன்மை கடைசியில் ஏற்பட்டாலுங்கூட முப்பது ஆண்டுகள் வரையில் தள்ளி வைக்கப்பட்டது. மெடான்டிட்ஸ் என்னும் வகுப்பைச் சேர்ந்த எக்ஸிஸெஸ்டைஸ் என்னும் பிரபுவினுடைய மகனான சோலான் என்பவன் சமூகப் புரட்சிக்கு மத்தியஸ்தனாக இருந்தான். இவன் செல்வம் செழித்த ஒரு வகுப்பைச் சேர்ந்தவன். அந்த அரசில் இருந்த ஒரு வியாபாரியாவான். ஆனால் அட்டிக் யூப்பாட்ரிட்ஸ் என்னும், கிராமத்திலிருந்த பழைய பழக்க வழக்கங்களையுடையவர்களும் குறுகிய மனப்பான்மையை யுடையவர்களுமான செல்வர்களுக்கு இவன் முற்றிலும் மாறுபட்டிருந்தான். இந்த இளைஞன் எப்பொழுதுமே வீட்டில் தங்கி இருக்கவில்லை. ஆனால் ஏஜியனின் கிழக்குக் கடற்கரைகளுக்குச் சென்றிருக்கின்றான். அங்கே இவன் வியாபார நிமித்தமாகச் சென்றிருக்கலாம். எப்படியிருந்தாலும் முன்னேற்றம் அடைந்துகொண்டிருந்த அயோனியாவிலிருந்து இவன் நிறையக் கற்றுக்கொண்டான். இவன் அயோனிய இலக்கியத்தில் ஈடுபட்டு, அயோனிய மரபுச்

சொற்றொடர்களில் செய்யுள் எழுதும் கலையை முற்றும் கற்றறிந் தான். இதிலிருந்து இவன் அந்தக் காலத்தில் புத்திக் கூர்மையுள்ள இலக்கியங்களில் பங்கெடுத்துக்கொண்டு, கிரீஸ் தேசத்தில் ஓர் அறிஞனுயிருந்தான். இவன் ஒரு கவிஞன்; ஆனுல் இவன் முன்பு இருந்த பாரியன் ஆர்க்கிலோகஸ் என்பவனைப் போலவோ அல்லது இவனது காலத்திலிருந்த லெஸ்பியன் சாபோ என்பவளைப் போலவோ இயற்கையாகத் தானுகவே செய்யுட்கள் இயற்ற வில்லை. ஆனுல் அக் காலத்தில் படிப்புத் தெரிந்த ஒவ்வொருவனும் ஒரு கவிஞனுவான். மேலும், அக் காலத்தில் உரைநடை இலக் கியம் இல்லை. நூறு ஆண்டுகளுக்குப் பின்பு, சோலான் உரை நடையை, தன் எண்ணங்களைக் கூறும் ஒரு கருவியாக உபயோகப் படுத்தினுன். இவனுடைய மிதமான மனநிலை பொதுவாக இவனைப் புகழ் பெற்ற ஒருவனுக ஆக்கியது. இவனுடைய அறிவு இவனுக்கு அதிகாரத்தைக் கொடுத்தது. மற்றும் அந்த நாட்டு மக் கள் கடைசியாக இவனைக் கூப்பிட்டுத் தங்களுடைய நாட்டைச் சீர்படுத்த வேண்டினுர்கள். மக்களுடைய ஆலோசனையை அறிய விரும்பி, இவன் வெளியிட்ட அரசியல் விளம்பரங்களில், செய்யுட் களில் சில பகுதிகளை நாம் அதிர்ஷ்டவசமாக அடைந்திருக்கிறோம். மற்றும் இம்மாதிரி இவனுடைய சொந்த வாக்கியங்களில் அக் கால நிலைமை விவரிக்கப்பட்டிருக்கிறது. நேரடியாக உண்மை யைப் பேசுவதற்கு இவன் தயங்கவில்லை. சமூகத் தீமைகளும், மக்களின் வருந்தத்தக்க நிலையும் எல்லோருக்கும் தெளிவாகத் தெரிந்திருந்தன. ஆனுல் இந்தக் கேள்விக்கு மற்றொரு பக்கத்தை யும் சோலான் கண்டான். நிலங்களை மறுபடியும் பிரித்துக் கொடுக்க வேண்டுமென்று, அதிகமாகப் புரட்சி செய்யும் கிளர்ச் சிக்காரர்களிடம் இவனுக்கு இரக்கம் இல்லை. செல்வர்களில் அதிக மிதமாக உள்ளவர்கள் இந்த ஆபத்தையும், ஒரு புதிய அமைப்பு ஏற்படுவதன் அவசியத்தையும் கண்டதாகத் தோற்று கிறது. இவ்வாறு இந்தச் சீர்திருத்த வேலையை ஏற்றுக்கொள்ளும் படி சோலானைக் கேட்டுக்கொண்டார்கள். அவர்கள் வேண்டு கோளுக்கு உடன்பட்டு இந்த வேலையை இவன் ஏற்றுக்கொண் டான். அரசியலிலிருந்த தீமைகள் எல்லாவற்றையும் போக்கவும், எல்லா வகுப்புகளையும் சமாதானமாக இருக்கச் செய்யவும் விசேஷ மான சட்ட அதிகாரங்களையுடைய ஆர்க்கானுக இவன் தேர்ந் தெடுக்கப்பட்டான்.[9]

[9] சோலான் ஆர்க்கானுக இருந்த ஆண்டானது கி.மு. 594—3 அல்லது 592—1 ஆக இருக்கலாம். இவை இரண்டிற்கும் சான் றுகள் இருந்தபோதிலும் முதலில் கூறிய ஆண்டானது உண் மையாக இருக்கலாம். சோலானின் சட்ட சம்பந்தமான வேலைகள் முடிய ஓர் ஆண்டிற்கு மேலான காலம் ஆகியிருக்;

எல்லா மக்களுடைய சொத்தையும் பாதுகாப்பதாகப் பிரதம மாஜிஸ்டிரேட்டு வழக்கமாக எடுத்துக்கொள்ளும் உறுதிமொழிக்குப் பதிலாக, 'கடன் வாங்கியவரை அடைமானம் வைத்தோ, அல்லது அதைக்கொண்டு கடன் வாங்கியிருந்தால் அந்த அடைமானங்களையெல்லாம் ரத்துசெய்து, கடனுக்காக அடிமையானவர்களெல்லாம் சுதந்தரமடைவார்கள்' என்று பறை சாற்றுவித்தான். இப்படிப் பறைசாற்றுவித்ததனால் அந்தக் கோடையில் நூற்றுக் கணக்கான அடிமைகள் விடுவிக்கப்பட்டுச் சுயேச்சையடைந்தது மறக்க முடியாத ஒரு பெரிய நிகழ்ச்சியாம். அத்தீனியர்களின் பாரத்தைக் களைந்து எறிந்துவிட்ட சோலானுடைய இந்த முதல் சீர்திருத்தம் செய்ஸாக்தியே (Seisachtheia) என்பதாகும். மக்கள் ஒரு விருந்தின்மூலம் இந்த விடுதலையைக் கொண்டாடினார்கள்.

சோலானுடைய இந்தச் சீர்திருத்தம் செய்த உபாயங்களின் தன்மை எல்லோருக்கும் சரியாகத் தெரியவில்லை. பழைய கடன்களை ரத்து செய்துவிட்ட பின்பு, கடன்காரர்களை அடிமைப் படுத்தக் கூடாதென்று ஒரு சட்டம் இயற்றினான். ஒரு தனிப்பட்ட மனிதனுக்கு இந்த அளவுக்குமேல் நிலம் சொந்தமாக இருக்கக் கூடாதென்று நிர்ணயித்தான். இதனால் ஆபத்தை விளைவிக்கக் கூடிய சொத்துக்கள் வளருவதைத் தடுத்தான். எண்ணெயைத் தவிர அட்டிகாவைச் சேர்ந்த மற்றப் பொருளை ஏற்றுமதி செய்யக் கூடாது என்று கட்டளையிட்டான். வெளிநாட்டுச் சந்தைகளுக்கு நிறையத் தானியங்களைக் கொண்டு சென்றார்கள். அங்கு விலையுயர்ந்திருந்ததனால், அட்டிகாவிலிருந்த மக்களுக்குப் போதிய அளவு கிடைக்கவில்லை என்பது தெரிந்தது. இந்தச் சமயத்தில் அத்தீனியர்கள் பான்டிக் (Pontic) தானியங்களை இறக்குமதி செய்யவில்லை என்று தெரிகிறது.

இந்த எல்லா வழிகளும் செல்வர்களைப் பாதித்தன. அதனால் இந்தச் சீர்திருத்தவாதியின்மேல் அதிருப்தி ஏற்பட்டது. இவன் மறு பக்கத்தில் ஏழை மக்களுடைய விருப்பங்களையும் எண்ணங்களையும் பூர்த்தி செய்வதற்கு முடியாமலிருந்தான். பலர் விரும்பியபடி செல்வர்களுடைய நிலங்களைப் பறிமுதல் செய்து, மற்றவர்களெல்லோருக்கும் திரும்ப இவன் பகிர்ந்தளிக்கவில்லை. அடிமையாக இருந்த சுயேச்சையான தொழிலாளியை விடுவித்தாலும், ஆறில் ஒரு பங்கு ($\frac{1}{6}$) கொடுக்கும் வழக்கத்தை மாற்றவில்லை. ஆகையால் நிலங்கள் இல்லாத சுயேச்சை மக்களுடைய

---

கும் என்பது திண்ணம். ஒருவேளை அரசாங்க அமைப்பைத் திருத்தி அமைக்க ஒரு தனிப்பட்ட சட்டமளிப்பவராக (நாமோதீட்டிஸ் - nomothetes) இவர் ஏற்படுத்தப்பட்டிருக்கலாம்.

நிலைமை அடிமையாக்க முடியாது என்ற ஒன்றில்தான் முன்னேற்றமடைந்தது. அந்த ஏற்றுமதியைத் தடுக்க ஒரு சட்டம் பிறப்பித்ததனுல் விலைகளில் மாற்றம் ஏற்பட்டது. பண வியாபாரத்தின் நிலைமைகளில் அதிகத் தலையீடு செய்யக் கூடாதென்று அறிந்து புத்திசாலித்தனமாக நடந்துகொண்டான். இவன் வட்டியில் எவ்வளவு அதிகம் வாங்க வேண்டுமென்பதை நிர்ணயிக்கவில்லை. இவனுடைய பண சம்பந்தமான சீர்திருத்தங்கள், சமூகச் சீர்திருத்தங்களிலிருந்து தனிப்பட்டவை எனக் கொண்டாக வேண்டும். இதுவரையில் அத்தீனியர்கள் தங்கள் சொந்த நாணயங்களை வைத்திருக்கவில்லை. ஈஜினீட்டன் நாணயங்களையே அவர்கள் உபயோகித்து வந்தார்கள். சோலான் சொந்த நாட்டு நாணய வகையைத் துவக்கி வைத்தான். ஆனுல் இவன் யூபாயிக்கைப்போலச் செய்தானே தவிர, ஈஜினீட்டனைப் போலச் செய்யவில்லை. நூறு புதிய அட்டிக் அளவு, மதிப்பில் எழுபது ஈஜினீட்டன் அளவுக்குச் சமமாக இருந்தது. சோலானுல் உண்டாக்கப்பட்ட இந்த அட்டிக் நாணய வகையை உள்நாட்டு சீர்திருத்தத்துடன் சேர்க்காமல் ஆதென்ஸின் அயல் நாட்டுக் கொள்கையுடன் சேர்க்க வேண்டும்; அதற்குப் புதிய வாய்ப்பு வகைகள் ஏற்பட்டன. பழைய நாணய வகை ஈகைனுவுடன் தொடர்பு கொண்டிருந்தன. ஆனுல் இவர்களுடைய சம்பந்தம் சிறிது வேறுபட்டிருந்தது; மற்றும் இந் நாட்டினுடைய விரோதியான மேகாராவுடன் சேர்ந்திருந்தது. இந்தப் புதிய முறை கடலுக்கப்பாலிருக்கும் நிலங்களிலும் செல்வதாயிருந்தது. அங்குச் சால்சிஸ், மற்றும் கொரிந்து என்பவை ஒரு புதிய உலகம் ஆரம்பிக்க வழிகாட்டியா யிருந்தன. ஒரு தலைமுறைக்குப் பிறகு புதிய பணச்சீர்திருத்தம் அட்டிக் அளவில் ஒரு குறிப்பிட்ட அளவை உண்டாக்கியது. இது யூபாயிக் அளவைவிடச் சிறிது அதிகமாயிருந்தது.

சோலான் தன்னுடைய தேசத்தின் சமூகத் தீமைகளைச் சீர்படுத்தியதனுல் மக்கள் எல்லோரும் அவனுக்குக் கடமைப்பட்டவர்களாயிருந்தார்கள். அதனுல் மக்களின் மதிப்பைப் பெற்ற ஓர் உண்மையுள்ள அரசியல்வாதி என்ன செய்வாஞே அதையே இவனும் செய்தான். அரசியல் அமைப்பைச் சீர்திருத்தம் செய்ததிலிருந்து சோலானுக்கு ஐரோப்பாவில் ஒரு பெரிய அரசியல்வாதி என்ற புகழும் பட்டமும் கிடைத்தன. ஜனநாயகத்தின் இரகசியத்தைக் கண்டுபிடித்து, அதன் அடிப்படையில் அரசியலமைப்பை ஏற்படுத்தினுன். அத்தீனிய அரசாங்கங்களின் ஐக்கியம் உண்மையில் பல ஆண்டுகளுக்கு முன்புகூட ஜனநாயகமாக மாறவில்லை. ஆனுல் சோலான் அதனுடைய அமைப்புக்கு அடித்தளம்

போட்டு அதை உருப் பெறச் செய்தான். முதலில் நோக்குமிடத்து உண்மையில் இவன் சீர்திருத்தியமைத்த அரசு, பிரபுக்கள் ஆட்சியைப் போலாகும்—செல்வர்கள், சில ஜனநாயகக் கொள்கைகளைக் கொண்டு நடத்தும் ஆட்சியாகும். சொத்துக்குத் தகுந்தாற்போல் மக்களிடமிருந்த பழைய வகுப்புகளை அழிக்காமல் காத்தான். ஆனால் அவன் தீட்டீஸ் என்னும் நான்காவது வகுப்பை அமைத்து அதற்குச் சில அரசியல் உரிமைகளைக் கொடுத்தான். அந்த உயர்ந்த மூவகுப்பினரும் பொது மக்களின் சுமைகளைத் தாங்களே ஏற்றுக்கொண்டார்கள் — அவர்கள் குதிரைப் படையிலும், ஆப்லிட்ஸ் என்ற படையிலும் உழைத்து வந்தார்கள். அந்தத் தீட்டீஸ் என்பவர்கள் பாரமில்லாத போர்க் கருவிகள் கொண்ட சிப்பாய்களாகவும், மாலுமிகளாகவும் வேலையில் அமர்த்தப்பட்டார்கள். சோலான் ஒவ்வொரு வகுப்பிற்குமுரிய வேலைகளில் மாறுதல் எதுவும் செய்யவில்லை என்று ஊகிக்கப்படுகிறது. பென்டகோஸியோமெடிம்னி (Pentacosio-medimni) என்பவர்கள் தலைமை தாங்கத் தகுதியுள்ளவர்கள். மற்றும் இவர்களுக்குத்தான் அத்தீனாவின் நீதி அலுவலகத்தில் நிதிகாப்பாளர் வேலை ஒதுக்கி வைக்கப்பட்டிருந்தது. மற்ற வேலைகள்[10] ஹிப்பீஸ் (Hippes) ஸூஜிடே (Zeugitae) என்பவர்களுக்கு மட்டும் திறந்து வைக்கப்பட்டிருந்தன. இவர்களிருவருக்கும் கொடுக்கப்பட்டிருந்த சலுகைகளின் வேறுபாடு தெரியவில்லை. தீட்டீஸ் (Thetes) என்பவர்கள் அரசிலுள்ள எந்த வேலைக்கும் தகுதியற்றவர்கள். ஆனால் எக்ளீஸியாவின் கூட்டங்களில் பங்கெடுத்துக்கொள்ள அநுமதிக்கப்பட்டார்கள். இது அவர்களுக்கு மாஜிஸ்டிரேட்டுகளைத் தேர்ந்தெடுக்க ஒரு வாய்ப்பு அளித்தது.

சமூகத்திலிருந்த கடைசி வகுப்பாளருக்குச் சபையில் இடங் கொடுத்தது, உண்மையில் ஜனநாயக வழியில் ஒரு முக்கியமான முன்னேற்றமாகும். ஆனால் அது செல்வர்கள் அரசியலை நடத்தி வந்த காலத்தில் நடந்து வந்து சிறிது சிறிதாக விரிவடையும் தன்மையுடன் முற்றுப் பெற்றது. அத்தீனியன் ஜனநாயகத்தின் அடிப்படையாக அமைந்தது என்னவெனில், நீதி மன்ற அமைப்பினை ஏற்படுத்தியதாகும். இது சோலான் கொணர்ந்த மாறுதல்களில் மிக முன்னேற்றமுடையதாகும். இவன் தீட்டீஸ் உள்பட எல்லா மக்களையும் கொண்ட ஒரு நீதிமன்றம் அமைப்பித்தான். நீதிபதிகள் கூடிய கூட்டம் சீட்டுக் குலுக்கு முறையில் தேர்ந்தெடுக்

[10] போலிடாய் (Poletai - சுரங்கம் போன்றவற்றைக் குத்தகை விடுபவர்கள்), பதினொருவர் (நீதி நிறைவேற்றும் துறைத் தலைவர்கள்), கோலாக்ரெட்டாய் (Kolakretai - நிதி அதிகாரிகள்) போன்ற அலுவலர்கள்.

கப்பட்டது. மிக ஏழையான ஒரு நகரவாசிக்கு நீதிபதி பதவியை அடைய வாய்ப்புக் கிடைக்கக்கூடியபடி இது இருந்தது. ஒரு மாஜிஸ்டிரேட் தம்முடைய பதவியை விட்ட பின்பு, இந்த நீதி மன்றங்களில் மக்கள் அவரைக் குற்றவாளியாகக்கொண்டுவந்து நிறுத்தலாம். இது போன்று மக்களால் நிறுவப்பட்ட நீதிமன்றங்களில் மக்களுக்கு ஆட்சி முறையின்மீது ஓர் உயர்ந்த அதிகாரம் கொடுக்கப்பட்டிருந்தது. பிரமாணம் எடுத்துக்கொண்ட நீதிபதிகளால் ஒவ்வொரு பிரிவிலும் அமர்ந்த மக்கள் ஹெலியா (Heliaea) என்று அழைக்கப்பட்டார்கள். இது எக்ளீஸியாவிற்கு முற்றிலும் மாறுபட்டிருந்தது. இதில் சட்டங்கள் இயற்றினுர்கள்; மாஜிஸ்டிரேட்டுகளைத் தேர்ந்தெடுத்தார்கள். ஆனால் இவர்கள் நீதிபதிகளைப்போல் பிரமாணம் எடுத்துக்கொள்ளவில்லை. மாஜிஸ்டிரேட்டுகளை நியமிக்கவும், அவர்களுடைய நடத்தையை மேற்பார்வையிடவும், அரசின் அதிகாரத்தை மக்கள் கொண்டிருந்தார்கள். குறைந்த செல்வத்தையுடைய வகுப்பாளருக்குச் சில சலுகைகள் அளிப்பது சிறிது காலத்தில் நடக்கும். முதலில் ஆர்க்கான்களிடமிருந்து நீதி வழங்கும் அதிகாரம் எடுக்கப்படவில்லை. மற்றும் ஹெலியாயியா மனு செய்யும் நீதிமன்றமாயிருந்தது. ஆனால் சிறிது சிறிதாக ஆர்க்கான்களுடைய அதிகாரம் குறைக்கப்பட்டு, ஆரம்ப விசாரணைக்கு முதல் நடக்கும் வழக்குகளை நடத்துவதற்கு மாத்திரம் அதிகாரம் கொடுக்கப்பட்டது. மற்றும் இந்த ஹெலியாயியா என்பது முதல் நீதிமன்றமாகவும், கடைசி நீதிமன்றமாகவும் விளங்கியது.

எல்லா மக்களின்மூலமும் தேர்ந்தெடுக்கப்பட்டு நீதிமன்றங்களை அமைப்பதுதான் ஜனநாயகத்தின் இரகசியம் என்று சோலான் கண்டுபிடித்தான். ஐரோப்பாவில் சர்வ மக்கள் அரசாங்கம் தழைப்பதற்குக் காரணமாயிருந்த இது இவனுக்குப் புகழைக் கொடுத்தது. தனக்கு முன்னுலிருந்த ஜனநாயக வளர்ச்சியிலிருந்த சார்புகளைத் தவிர்க்காமல், மறுபக்கம் உயர்ந்த வகுப்பைச் சேர்ந்தவர்களுக்குக் கொடுக்கப்பட்ட சலுகைகளை மறைமுகமாக வைத்திருந்தாலுங்கூட, சோலானை அத்தீனியன் ஜனநாயகத்தை நிறுவியவன் என்று தயங்காமல் கூறலாம். இவனுடைய அரசியல் அமைப்பின் எண்ணமும் நோக்கமும் அதிகமாக இருந்தன என்று ஒப்புக்கொள்ளலாம். இதைப் பாராட்டுவது மிகவும் கடினமாக இருந்தது. ஏனெனில், இவன் சீர்திருத்திய பழைய அரசியல் அமைப்பைப்பற்றி நமக்கு ஒன்றும் தெரியாது. இப்படி நமக்கு எரியோபேகஸ் சபையினுடைய ஒரு கூட்டத்தின் வேலைகளையோ அல்லது சபை இதனுடன் கொண்டிருந்த உறவையோ அல்லது அவையின் கூட்டத்தைப்பற்றியோ உறுதி

யான குறிப்புகள் ஒன்றுமில்லை. பழைய குடியரசின்கீழ்ப் பெரி யோர்களுடைய சபை அவையின்மீது பிரபலமான செல்வாக்குப் பெற்றிருந்தது. மற்றும் இவ்வவையின் நடவடிக்கைகள் மாஜிஸ்டி ரேட்டுகள் மூலமோ அல்லது எந்த விதமாகவோ கொண்டு வரப் பெற்றிருந்தாலும் முன்பே விவாதித்து ஒரு முடிவு காணப் பெற்றிருக்கும். இந்த மக்களாட்சியைக் கண்டுபிடித்தவன், செல் வர்களுடைய குடியரசுக்கு மூலாதாரம் என்பதை விட்டுவிட முடியவில்லை. அவன் அந்தச் சபையினுடைய நடவடிக்கைகளை முழுமையும் மாற்றவேண்டும்; மற்றும் அதைப் பிரபலமான கூட்டமாக மாற்ற வேண்டும். அல்லது அதை அவையுடன் ஒப் பிட்டுப் பார்க்கும்பொழுது ஆலோசனை வேலைகளை எடுத்துவிட வேண்டும். சோலான் இந்தப் பெரியோர்களடங்கிய சபையி னுடைய வேலைகளை நீக்கிவிட்டு, அது பரிபாலனத்திலும் சட்டம் இயற்றுவதிலும் நேரடியாகப் பங்கெடுத்துக்கொள்ள முடியாதபடி செய்தான். ஆனாலும் அதற்கு மாறாகப் புதியதும் உயர்ந்ததுமான ஒரு வேலையை அவன் அதற்குக் கொடுத்தான். அரசியல் அமைப் பிற்குப் பாதுகாப்பாளனாகவும், சட்டங்களைக் காக்கிறவனாகவும், மாஜிஸ்டிரேட்டுகளை அடக்கியாளும் குறிப்பிடப்படாத விரிவான அதிகாரமும், மக்களைத் திருத்துவதற்கு அதிகாரமும் ஆகிய இவைகளை அதற்குக் கொடுத்தான். அதனுடைய நீதி வழங்கும் வேலைகளும், மத சம்பந்தமான வேலை களும் மாறாமல் அப்படியே இருந்தன. தன்னுடைய அரசியல் அமைப்புடன் ஒன்றாகக் கொண்டு வரவேண்டுமென்று சோலான் அந்தச் சபையின் கூட்டு அமைப்பை மாற்றியிருக்க வேண்டு மென்று தெரிகிறது. அப்பொழுதிலிருந்து அந்த ஒன்பது ஆர்க் கான்களும், தங்களுடைய பதவிக்காலம் முடிந்த பின்பு, எரியோ பேகஸ்ஸின் அமைப்பின் வாழ்வுக்கால அங்கத்தினர்களானார்கள். இந்த மாதிரியாகத்தான் அந்த அவை அமைக்கப்பட்டது. இந்த எரியோபேகைட்ஸ் என்பவர்கள் உண்மையில் மக்களால்தான் அவைக்கு நியமனம் செய்யப்பட்டார்கள்.

எரிபோபேகஸ் அவையை இந்த உயர்ந்த இடத்திற்கு எடுத்துச் சென்று அரசியலமைப்புக்கு மேலேயும், அதற்கு வெளியிலும் எடுத்துச் சென்று, அவையின் அலுவல்களை ஆரம்பிப்பதற்கு ஒருபுதிய கூட்டத்தை ஏற்படுத்த வேண்டியதாயிற்று. அத் தன்மை வாய்ந்த ஒரு கூட்டம் அவசியமாயிருந்தது; ஏனெனில், கிரேக் கர்கள் எப்பொழுதும் இதனை ஆமோதித்து வந்தார்கள். அந்தக் கூட்டம் இல்லாவிடில், மாஜிஸ்டிரேட்டுகளின் கையில் அளவு கடந்த அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கும்; அவையை எப்படி வேண்டுமானாலும் அமைக்கக் கூடும் நிலை ஏற்பட்டிருக்கும் என்று

தெளிவாகத் தெரிகிறது. சோலானல் நிறுவப்பட்ட இந்த 'ப்ரோ பூலிடிக்' அவை 400 அங்கத்தினர்களைக் கொண்டது. நான்கு இனங்களில் ஒவ்வொன்றிலிருந்தும் 100 பேர்களையே அந்த இனம் தேர்ந்தெடுக்க வேண்டும் அல்லது சீட்டுக் குலுக்கு முறையில் தேர்ந் தெடுத்திருக்கவேண்டும். அந்த மூன்று உயர்ந்த வகுப்பைச் சேர்ந் தவர்கள் எல்லோரும் தகுதியுடையவர்களாயிருந்தார்கள். தீட் டீஸ் என்பவர்கள் சேர்க்கப்படவில்லை. பிற்காலத்தில் இந்த அவை அல்லது புதிய சபை அதற்குப் பதிலாக வந்தது; அநேக முக்கிய மான அதிகாரங்களைப் பெற்றது. அந்த அரசில் எல்லாம் நோக்கு மிடத்து இது ஒரு சுயேச்சையான அங்கமாயிற்று. ஆனல் முதலில் அதனுடைய அலுவல்கள் முழுமையும் 'ப்ரோபூலிட்'டுகளைப் போல் இருந்தது. மற்றும், அது அவையினுடைய அமைப்பில் ஒரு பாகமாக இருக்கிறது என்று தெரிகிறது. ஆரிய முன்னுலகிலிருந்த பெரியோர்களுடைய சபையை இது குறிக்கவில்லை என்று எப்பொழுதும் நாம் நினைவில் வைக்கவேண்டும். இது ஸ்பார்ட்டா விலிருந்த ஜெரூஷியாவையோ அல்லது ரோமிலிருந்த செனட் சபையையோ போன்று இருக்கவில்லை. ஆனல் சில அலுவல்களை இது ஏற்றுக்கொண்டிருக்கும்; பெரியோர்களுடைய சபையின் முன்னுள் கடமைகளின் பகுதிகள் இவை. அவைக்குச் சமர்ப் பிக்கப்பட்ட பொதுக் காரியங்களை இவை முன்பே விவாதிக்கும்.

சோலானுடைய சீர்திருத்தங்களில் அரசாங்க அதிகாரிகளை நியமனம் செய்வதற்குச் சீட்டுக்குலுக்கு முறையைக் கையாண்டது ஒரு முக்கிய அமிசமாகும். அந்தக் காலத்திலிருந்த மக்களின் யோசனைகளின்படி சீட்டுக் குலுக்குமுறை கடவுளிடத்தில் முடிவை ஒப்படைத்தது. இதனல் அது ஒரு முக்கியமான வழியாக இருந்தது. அதை ஓர் அரசாங்க யோசனையற்ற காரியத்திற்கு நாம் இப்பொழுது கருதிவருவதைப்போல் கருதக்கூடாது. கடவு ளிடத்தில் நம்பிக்கையால் ஏற்படுத்தப்பட்ட இந்த வழி, தத்துவ ஞானிகளாயிருந்த அரசியல்வாதிகளால் ஒப்புக்கொள்ளப்பட்டது. இந்தச் சீட்டுக் குலுக்கு முறையை, குறைந்த அளவுள்ள மக்கள் வகுப்புகளைப் பாதுகாக்கவும், அதிகாரத்தின் செல்வாக்கை உபயோகப்படுத்தாம லிருக்கவும், சந்தேகமில்லாமல் இவை களுக்கு எதிராக ஒரு பாதுகாப்பாகவுமே சோலான் உபயோகப்படுத்தினன். இந்த முறையைப் பிரதம மாஜிஸ் டிரேட்டுகளை நியமனம் செய்வதற்குக்கூட அவன் உபயோகப் படுத்தினன். ஆனல் அவன் மத நம்பிக்கையுள்ளவனுக இருந் தாலும் இந்தச் சீட்டுக் குலுக்குமுறையின்மூலம் தகுதியுள்ள ஒருவனைத் தேர்ந்தெடுக்க, முன்கூட்டியே மனித எச்சரிக்கை எடுத்துக்கொண்டான். ஆகையால் அவன் சீட்டுக் குலுக்கு முறையையும், தேர்தல் முறையையும் ஒன்று சேர்த்தான். அந்த

இனத்து மக்களின் விருப்பப்படி, ஒவ்வோர் இனத்திலிருந்தும் 10 பேர் வீதம் நாற்பது அங்கத்தினர் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். இதிலிருந்து 9 ஆர்க்கான்கள் சீட்டுக் குலுக்குமுறையில் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். 400 கவுன்ஸிலர்களைத் தேர்ந்தெடுப்பதற்கு இம்மாதிரிக் கூட்டு முறையை உபயோகப்படுத்தியிருக்கலாமென்று ஊகிக்கப்படுகிறது.

அரசாங்கத்தைச் சமநிலையில் நிறுத்த நான்கு இனங்களில் ஒவ்வோர் இனமும் அரசாங்கத்தில் சமமான பங்கை எடுத்துக் கொள்ள வேண்டுமென்று சோலான் முயன்ருன். அவனால் வேறு விதமாகச் செய்ய முடியவில்லை. மற்றும் இதில் நாம் அரசாங்க அமைப்பின் பலமில்லாத ஒரு குறிப்பைத் தொடுகிறோம். உண்மையில் ஏழை - பணக்காரரிடையே உள்ள சண்டையோ அல்லது செல்வனே சாதாரண மனிதனே இவர்களுக்கிடையே உள்ள சண்டையல்ல. அதிக நாளாக அநேக இனங்களிடையிலிருந்து வேரூன்றிய கடுமையான போட்டி பொறாமைகள் தாம் பெரிய ஆபத்தாக இருந்தன. குலம் தனக்கு உதவியாக இனத்தைக் கொண்டிருந்தது. இனம் அரசாங்கத்தில் செல்வாக்குப் பெற்றிருந்ததனால், மேலே கூறிய சண்டைகள் ஓர் உள்நாட்டுச் சண்டையையோ அல்லது ஒரு புரட்சியையோ ஏற்படுத்துவதற்குக் காரணமாயிருந்திருக்கலாம். இந்தச் சிக்கல், பிற்காலத்தில் வரும் ஒரு நீதிபதி கையாள ஒதுக்கிவைக்கப்பட்டிருந்தது. சோலான் உண்மையில் இந்த ஆபத்தை உணர்ந்தான். ஆனால் அதைத் தவிர்க்க உடனே ஒரு வழியும் இல்லை. இந்தத் தீமை மற்றொரு தீமையுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தது - அட்டிகாவைப் பிரித்த உள்நாட்டுக் கட்சிகள். இந்த ஆபத்தைத் தவிர்க்க சோலான் ஒருவித வழியும் செய்யவில்லை. ஆகையால் அவனுடைய வேலைகள், சிறந்த முறையில் எப்பொழுதும் இருந்தாலும் அந்த அரசிலிருந்து போர்செய்வதற்குத் தயாராயிருந்தவருக்குச் சிறிது கால அமைதியையோ அல்லது முடிவான அமைதியையோ நிலைநாட்ட முடியவில்லை. அவன் மிகவும் மோசமானதும், நடைமுறையில் கொண்டு வருவதற்குக் கடினமானதுமான ஒரு சட்டம் பிறப்பித்ததாகச் சொல்லப்படுகிறது. அப்படிப்பட்ட ஒரு சட்டத்தை அவன் இயற்றினன் என்று நம்புவதற்கில்லை. அதன்படி ஒரு கட்சிச் சண்டையில் ஒவ்வொரு நகரவாசியும் ஒரு கட்சியின் பக்கம் சேரத்தவறினல் அவனுடைய உரிமைகள் பறிபோய்விடும். சோலான் உண்மையில் இந்தச் சட்டத்தை உண்டாக்கியவனுக இருந்தால், மதிப்புள்ள மக்களை இதில் கலந்து கொள்ள வேண்டுமென்று கட்டாயப்படுத்தி அரசியல் சண்டைகள் ஏற்படாமலிருக்கச் செய்திருப்பான். அது ஓர் அபாயமான

கொடுங்கோலாட்சிக்கு எதிராக அமைந்த ஒரு மோசமான பாதுகாப்பாகும்.

சோலான் சில மனிதர்களுடைய சுதந்தரத்தை விரிவுபடுத்தியும், சில வழிகளில் கட்டுப்படுத்தியும் வந்திருக்கிறான் என்று பார்க்குமிடத்து அதுபோற்றத் தக்கதாயிருக்கிறது. சோம்பேறித்தனத்தை ஒழிக்கக் கொடுந் தண்டனையையும், சுதந்தரத்தைக் கட்டுப்படுத்தப் பல சட்டங்களையும கொண்டுவந்தான். ஒரு மனிதன் தனக்குச் சொந்த வாரிசு இல்லாமல் போனால், தன்னுடைய சொத்தைத் தன் இச்சைப்படி அவனுக்கு நெருங்கிய சொந்தக்காரர்களுக்கு[11] அளிப்பதற்குப் பதிலாக வேறு யாருக்கு வேண்டுமானாலும் கொடுக்கலாமென்று ஒரு சட்டத்தைக் கொண்டுவந்து, சுதந்தரத்தை அதிகப்படுத்தினான். சோலானின் முதல் நடவடிக்கை கொலை சம்பந்தமான சட்டங்களைத் தவிர, ட்ரேக்கன் செய்த மற்றச் சட்டங்களையெல்லாம் ரத்து செய்துவிட்டதாகும். அவனுடைய சட்டங்களெல்லாம் மரப் பலகைகளில் ஆக்ஸான் என்று சொல்லும் ஓர் அமைப்பில் சுற்றும்படியாக பதிக்கப்பட்டிருந்தன. அவை எண்களால் குறிக்கப்பட்டன; அந்தச் சட்டங்கள் ஆக்ஸானுடைய எண்களைக் கொண்டு குறிக்கப்பட்டன. இந்தப் பலகைகளை அரசாங்கப் பொதுக் கூடத்தில் வைத்திருந்தார்கள். ஆனால் இதனுடைய நகல்கள் கற்கம்பங்களில் செதுக்கப்பட்டு, அரசனுடைய வெளிப்புற வாயிலில் வைக்கப்பட்டிருந்தன. ஒவ்வொரு நகரவாசியும், இந்தச் சட்டங்களுக்குக் கீழ்ப்படிய வேண்டுமென்று பிரமாணம் எடுத்துக்கொள்ளவேண்டிய அவசியம் இருந்தது. மற்றும், இந்தச் சட்டங்கள் நூறு ஆண்டுகள் வரையில் அமலில் இருக்கவேண்டுமென்று உத்தரவிடப்பட்டது.

சோலான் தன்னுடைய கடமையைத் தைரியமாகச் செய்தான். ஆனால் அவன் அதை அரசியல் அமைப்பின் அநுமதியின்மீது செய்தான். அவன் ஒரு கொடுங்கோலனாக எளிதாக மாறிவிடக் கூடும் என்று பலர் எதிர்பார்த்திருந்தும், அவ்வாறு அவன் மாறவில்லை. அதற்கு மாறாக, எதிர்கால அவசியத்தைக் கண்டது அவனுடைய சீர்திருத்தத்தின் ஒரு நோக்கமாகும்; மற்றும் கொடுங்கோலாட்சியைத் தடுத்து அது ஏற்படாமலிருக்கச் செய்ததுமாகும். பிட்டாக்கஸ்ஸைப்போல ஒரு சட்டம் இயற்றுபவனாக அவன் ஆகவில்லை. அநேக ஆண்டுகளாக அரசியல் அமைப்புக்கு மேலிருந்து சீர்திருத்தம் செய்ய வேண்டிய, அந்தச் சிறிது

[11] அதிக காலம் செயல் முறையில் இருந்துவந்த ஒரு பழக்கத்தை இந்தச் சட்டமானது சட்ட பூர்வகமாக ஏற்றுக்கொண்டது என்று நாம் எடுத்துக்கொள்ளலாம்.

காலத்தில் மாத்திரம், ஒரு கொடுங்கோலாட்சி புரிபவனைப் போல முழு அரசு செலுத்தினன். அவன் சாதாரணமாக ஆர்க்கானுடைய அதிகாரத்தைக்கொண்டு, பெரிய அதிகாரங்களை மேற்கொண்டிருந்தான். மேலாக ஒருவன் சோலானின் சீர்திருத்தக் கருத்துகளை நோக்குமிடத்து, எச்சரிக்கைதான் முக்கியம் என்று தோன்றும். அவன் எச்சரிக்கையாயிருப்பதைக்கண்டு பலர் ஆச்சரியப்பட்டார்கள்; பலர் வெறுப்புக் கொண்டார்கள். அவனுடைய எச்சரிக்கை என்னவெனில், உயர்ந்த உத்தியோகங்களைச் செல்வர்களுக்காக ஒதுக்கிவைத்ததாகும். உண்மை என்னவெனில், அவனுடைய காலத்தில், மற்றவர்கள் அந்தக் கடமைகளைச் செய்யத் தகுதியுள்ளவர்களாக இருக்க மாட்டார்கள். ஆனல் சோலான் தன்னுடைய முக்கியமான கொள்கையைச் சொல்லியிருக்கிருன். அது என்னவெனில், ஒவ்வொரு வகுப்பிற்கும் கொடுக்கப்பட்ட சலுகைகள் அதிகாரச் சுமைகளைத் தாங்குவதற்குக் கூடிய விகிதப்படி இருக்கவேண்டுமென்பதாகும். அவனுடைய சட்டம் இயற்றும் முறையில் இதுதான் குறுகிய அம்சமாயிருந்தது. மக்கள் இதனை அவனுடைய அமைப்பானது செல்வர்களுடைய ஆட்சி என்று கருதுவதற்கு ஒரு காரணமாகக் கொள்வார்கள். தன்னுடைய அதிகாரத்தை விட்டதும், அவன்மேல் பலர் புகார் செய்தார்கள். மற்றும் அவன் தன்னுடைய நடுநிலைமைக் கொள்கையைச் செய்யுட்களில் விவரித்தான்; ஒருவர் தயவையும் எதிர்பாராமலும், ஒருவருக்கும் அஞ்சாமலும், தான் எடுத்துக்கொண்ட காரியங்களைத் தானே செய்ததாக அவனே கூறியிருக்கிருன். 'என்னுடைய கெட்டியான கேடயத்தை இரு கட்சிகளின் மேலும் நான் வீசி இருக்கிறேன்' என்று அவன் சொன்னன். தான் செய்த சீர்திருத்தங்களில் மாறுதல் எதுவும் செய்யும் ஓர் எண்ணத்தைக்கூட அவன் மறுத்துவிட்டான். சீர்திருத்தம் செய்தவன் இல்லாமலிருந்தால், அவை நன்ருக நடக்கும் என்று நினைத்துக்கொண்டு தன்னுடைய ஆர்க்கான் பதவி முடிந்ததும், ஆதென்ஸை விட்டு வெளியேறிவிட்டான். பத்து ஆண்டுகள் வியாபார நோக்குடன் ஓரளவும் -ஆனல் முக்கியமாக ஒரு வேளை சில புதிய இடங்களையும், மனிதர்களையும் காணவேண்டுமென்ற அவாவுடனும் பிரயாணம் செய்தான்.

அவன் இயற்றிய செய்யுட்களில் மீதியானவை துண்டுகளாக இருந்தாலும், அவனுடைய வாழ்க்கைச் சம்பவங்கள் குறிக்கப்பட்டிருத்தல் சொற்பமாக இருப்பினும், அவன் இயற்றிய சட்டங்களின் விவரங்கள் மங்கலாக இருப்பினும், அவற்றுக்குப் பலவித உரைகள் கொடுக்கப் பெற்றிருப்பினும், சோலானைக் குறித்து, நம்

மனத்தில் ஒரு தெளிவான அபிப்பிராயம் நிற்கிறது. முற்காலத்தி லிருந்த கிரேக்கர்களின் மதிநுட்பத்தையும், ஒழுக்கச் சிறப் பையும், முற்காலக் கிரேக்கர்களில் சிறந்த அறிவாளிகளையும் அவன் உருவில் காண்கிறோம். அவன் முதன்மையாகக் கொண்ட நேர்மை, மிதமாயிருப்பதுதான். மற்றும் அவனுடைய கொள்கை வரம்பு கடந்த செயலைத் தவிர்ப்பது ஆகும். 'உலகத்து மனிதன்' என்ற தவறான அர்த்தத்தில் அவன் இருக்கவில்லை. ஏனெனில், அவன் பலவழியிலும் சிறந்திருந்தான். அவன் கவிஞனும், சட்ட மியற்றுபவனும் ஆவான்; மற்றும் பிரயாணியும், வியாபாரியு மாவான்; சீமானாகவும், மக்களின் நண்பனாகவும் இருந்தான். அந்தக் காலத்திலிருந்த முன்னேற்றமடையாத நோக்கங்களில் சில வற்றைத் தன்னுடைய கூரிய புத்தியால் கண்டுபிடித்து, மற்றும் அதிகாரத்தைக் கொண்டுள்ள வகுப்பினரைத் தவிர, மீதியுள்ள வர்களிடம் இரக்கம் காட்டி வந்தான். அதிகாரம் ஆசை காட்டி மயக்கும் என்று மக்களுடைய சூழ்நிலையை ஆழ்ந்து யோசனை செய்து கண்டுபிடித்தான். தான், வாழ்வுக்கும் இறப்புக்கும் நடுவில் வந்த ஒரு பிரயாணி என்பதை மறக்கவில்லை. தன் னுடைய செய்யுட்களில் சொல்லியிருந்த கருத்துகளின்படி குறிப் பிட்ட சட்டங்களை இயற்றுவதற்கு அவனுக்கு அதிகாரம் கொடுத்ததும், அவனிடத்தில் சீர்திருத்தத்தை ஒப்படைத்ததும் கிரேக்க அரசின் ஒரு சிறந்த பண்பைக் காட்டும் செயலாகும்.

சோலானுடைய சமூகச் சீர்திருத்தங்கள் நிரந்தரமான முன்னேற்றத்தை ஆரம்பித்து வைத்தன. ஆனால் அவனுடைய அரசியல் சட்டங்கள் சமாதான முறையில் இருக்கவேண்டுமென்று அவன் விரும்பினால்கூட அநேகரை அது வெறுப்படையச் செய்தது. அவனுடைய ஆர்க்கான் பதவி முடிவடைந்தவுடன், வகுப்புக் கலவரம் ஆவேசத்துடன் ஆரம்பமாயிற்று. இது முப்பது ஆண்டு களுக்குப்பின் அவன் வெறுத்த முக்கியமாகத் தடுக்கப் பார்த்த கொடுங்கோலாட்சியான 'டிரனி'யில் முடிந்தது. இந்தச் சண்டை யைப்பற்றி நாம் ஒன்றும் அறிய முடியவில்லை. ஆர்க்கான் பதவி யைப் பெற ஒரு சண்டை ஏற்பட்டது. ஆர்க்கான்களைத் தேர்ந் தெடுக்காத இரண்டு ஆண்டுகள் குழப்பமான ஆண்டுகள் என்று கூறப்பட்டன. பின்பு டேமாஸியஸ் என்னும் ஆர்க்கான், தன்னுடைய ஆட்சியை ஒரு நிரந்தரக் கொடுங்கோலாட்சியாக மாற்றவேண்டுமென்று முயன்று, உண்மையில் அந்தப் பதவியை இரண்டு ஆண்டுகளுக்கு மேலாக வகித்து வந்தான். அவன் செய்த இந்த முயற்சியால் அரசியல் கட்சிகள் பயந்து, ஒருவித உடன் படிக்கை செய்துகொண்டன. குறிப்பிட்ட குறைந்த அளவு செல் வத்தையுடையவர்களான பத்து ஆர்க்கான்களைத் தேர்ந்தெடுக்க

வேண்டுமென்றும், ஐந்து யூபாட்ரிஸ், மூன்று ஜார்ஜியை, மற்றும் இரண்டு டெமியர்ஜியைத் தேர்ந்தெடுப்பது என்றும் ஒப்புக்கொள்ளப்பட்டது.[12] அது முதலில் ஆரம்பித்த ஆண்டுக்குப் பின்பு இந்த ஏற்பாடு கொண்டு வரப்பட்டதா என்பது நமக்குத் தெரியாது. ஆனால் அது உண்மையில் ஒரு நிரந்தர அமைதிக்கு வழிகாட்டவில்லை.

சோலானுடைய புதிய அரசியலமைப்பால் முக்கியமாகத் திருப்தியடைந்தவர்களும், மற்றும் அதன் ஜனநாயக அமைப்பில் வெறுப்புக்கொண்டு அவன் அடக்கிவைத்திருந்த செல்வர்களின் அரசாட்சியே மறுபடி வரவேண்டுமென்று விரும்பியவர்களுமான இரண்டு பெரிய கட்சியார் இருந்தனர். பின்னால் சொல்லப்பட்டவர்கள், முக்கியமாக யூபாட்ரிட்ஸ் என்பவர்களைக் கொண்டவர்கள். அவர்கள் சமவெளி மக்களென அழைக்கப்பட்டார்கள். அவர்கள் லைக்கர்கஸ் என்பவனின் தலைமையின்கீழ் இருந்தார்கள். மற்றும் பிலேடீ என்னும் இனம் அவர்களின் எண்ணிக்கையில் அடங்கியிருந்தது. ஹிப்போக்ளேட்ஸின் இனம் என்றும், அகரிஸ்டாவை நட்பாக்கிக்கொள்ள முயன்ற இனம் என்றும் பெயர் பெற்றது இது. ஒரு ஸைஃனோ அல்லது மில்டியாடிஸோ இவர்களைவிடப் பின்னால் அதிகப் பெயர் எடுக்கும்படியானதாக இருந்தது இந்த இனம். அந்தக் கரையோரத்திலிருந்த எதிர்க்கட்சி, கரையோரத்திலிருந்த மக்களை மட்டுமல்லாமல், நடுத்தர வகுப்பாரையும், உழவர்களையும், டெமியர்ஜி என்னும் இனத்தையும் கொண்டிருந்தது. இவர்கள் சோலானுடைய மாறுதல்களால் முன்னேற்றமடைந்தார்கள். இவர்கள் ஆல்க்மியோனின் மகனை மேகாக்ளீஸின் தலைமையில் இருந்தார்கள்; அகரிஸ்டாவை மணம் செய்துகொண்ட அதே மேகாக்ளீஸ்தான் இவன். சோலானுடைய சட்டங்களில் ஒன்று எல்லோருக்கும் மன்னிப்பு அளிக்கும் ஒரு சீர்திருத்தமாகும். ஒரு சில நிபந்தனைகள் அதில் இருந்ததால் சோலானின் சந்ததியாருக்கு ஒருவிதப் பலனும் கிடைக்கவில்லை; ஆல்க்மியோனிடேயினருக்குத் திரும்பி வரலாமென்று அனுமதி அளிக்கப்பட்டது. இவர்களுடைய நிலை மீதியிருந்த யூபாட்ரிட்ஸ்களிடமிருந்து இவர்களை வேறாக்கிச் சோலானின் கொள்கையை ஆமோதித்த கட்சியுடன் இவர்களைச் சேர்க்க வைத்தது.

[12] இதை நாம் அரிஸ்டாட்டில் (Aristotle) எழுதிய நூலிலிருந்து படிக்கின்றோம். இவ் வாசகத்தைப்பற்றி ஒருவித ஐயமும் இனி இல்லை. சோலானின் அரசியல் அமைப்புத் திட்டத்தை இந்தத் தனி ஏற்பாடானது ஒதுக்கி வைத்தது.

# 5. ஆரும் நூற்றுண்டில் ஆதென்ஸின் வளர்ச்சி

## 1. சாலமிஸ்ஸையும் (Salamis) நிசியாவையும் (Nisaea) வென்று கைக்கொள்ளுதல்

மேற்கூறப்பட்ட உள்நாட்டு அல்லல்கள், கட்சிப் போராட்டங்கள் இவைகளின் மத்தியிலும் சில அரசியல் வல்லுநர்களுக்கு வெளிநாட்டு விவகாரங்களைக் கவனிக்கவும் நேரமிருந்தது. ஆதென்ஸ் தனது வாழ்க்கை நெறியில் புதியதோர் அடி எடுத்து வைக்கும் சமயம் வந்தது என்பதை அவர்கள் அறிந்தார்கள். நாம் ஏனைய அரசுகளின் வளர்ச்சியை ஆதென்ஸினுடைய வளர்ச்சியுடன் ஒப்பிட்டுப் பார்க்கையில் ஆதென்ஸ் தனது உயர்குடி யாட்சியின்போது சமாதானத்தோடு கூடிய ஒரு வளர்ச்சியின் காலத்தை அநுபவித்தது என்று நாம் சொல்லலாம். அதிக நீர்ப்பாசன வசதியில்லாததும், மணற்பாங்கான நிலத்தை உடையதுமான அட்டிகா வறுமையுள்ள ஒரு நாடாயிருந்தபோதிலும், அதன் செழிப்பான எண்ணெய் வியாபாரம் பணச்செருக்கு வாய்ந்த நாடாக அது வரக்கூடும் என்று ஊக்கமளித்திருக்கலாம். ஆனல் அது அரசாங்கத்தில் வலிமை பொருந்திய நாடாயிருக்க வேண்டுமானுல், எப்படியாளுலும் அது ஒரு காரியத்தைச் செய்தே தீரவேண்டும். தனது உறுதியான குன்றின் மேல் நின்று, ஒவ்வோர் அத்தீனியனும் தென்மேற்கே பார்த்தால், அது என்னவென்று தெரியும். அவன் தனது கடற்கரைக்குச் சமீபத்தில் தனதில்லாத ஒரு தீவைப் பார்ப்பான். அவன் ஈகேலியாஸ் (Aegaleos) மலையின் குறுக்கே நடப்பானேயாகில், இந்த வெளியார்களுடைய தீவு எப்படித் தன் எல்யூஸிஸ் (Eleusis) விரிகுடாவைத் தடை செய்கின்றது என்பதைக் காண்பான். ஆதென்ஸுக்கும் மேகாராவுக்கும் சமதூரத்தில் உள்ளதும், இரண்டிலிருந்தும் ஒடுக்கமான கடல்களால் பிரிக்கப்பட்டும்

இருக்கும் சாலமிஸ் ஆதென்ஸிடமிருந்தால், மேகாராவுக்கும் மேகராவிடமிருந்தால் ஆதென்ஸுக்கும் தீராத பேரிடராய் இருக்கக் கூடும். சாலமிஸ்ஸின் உடைமை மேகாரா, ஆதென்ஸ் இவைகளின் பிற்கால வரலாற்றை முடிவு செய்யும். இந்தக் காலத்தில் மேகாரா தன்னுடைய குடியேற்ற நாடுகளின் தொடர்பினால் வலிமையுள்ள ஓர் அரசாயும் வெல்லமுடியாத அயலகமாகவும் இருந்தது. அதனுடைய விரிவடையும் வாணிபமானது அத்தீனிய அரசியல் வல்லுநர்களைப் பயத்துடனும் பொறாமையுடனும் அதனை நோக்கச் செய்திருக்கும். மேகாராவுடன் போராட்டம் எந்த நேரத்திலும் நடக்கக்கூடும் என்ற நிலைக்கு வந்தது. அப்பொழுது நாம் முந்திப் பார்த்ததுபோல், கைலோனியன் சதி (Cyclonian conspiracy) யுத்தத்திற்கு ஒரு சந்தர்ப்பத்தைக் கொடுத்துதவியது. தம் மக்களுக்குக் கொடுத்த வாக்குறுதியை மீறி, அவர்களைக் கொலை செய்வதைக் காணப் பொறுதவனாய்த் தியாகினீஸ் தனது கடற்படையை அனுப்பி அட்டிகாவின் கடற்கரையைக் கொள்ளையிடச் செய்தான். அத்தீனியர்கள் சாலமிஸ்ஸைக் கைப்பற்ற முற்பட்டனர்; அங்கே நிரந்தரமாகக் கால்வைக்கும் இடம் கிடைப்பதற்காக அரும்பாடு பட்டனர். இவர்களுடைய எண்ணங்கள் நிறைவேறாததால், மனமுடைந்து அத்தீனியர்கள் தமது முயற்சியைக் கைவிட்டுவிட்டனர். ஆண்டுகள் பல கழிந்தன. கடைசியில் சோலான் அநுகூலமான நேரம் வந்துவிட்டதென அறிந்தார். இது அவர் சட்டங்களை அளித்ததற்குக் கிட்டத்தட்ட இருபத்தைந்து ஆண்டுகளுக்கும் பின்னால் ஆகிய காரியம். அப்பொழுது அவர் தமது பிரயாணங்களிலிருந்து திரும்பி, எரியோபேகஸ் சபையின் அங்கத்தினராக ஆதென்ஸில் வசித்துவந்தார். மேகாரா தியாகினீஸின் காலத்திலிருந்ததைவிடப் பலவீனமாக இருந்தது. மேகாரா ஆதென்ஸிற்கு விரோதமாகப் புதியதொரு தீங்கு செய்தாலும் அல்லது செய்யாவிட்டாலும் சரி, சோலானும் அவருடைய நண்பர்களும் மேகாராவின்மேல் போர் தொடுக்க இதுதான் சமயம் என்று தீர்மானித்தார்கள். இப்போது பூசல்களை ஒழிக்க அல்லாமல் சண்டை ஒன்றை ஆரம்பித்து வைக்க, சட்டங்களை இயற்றிய இப் பெரியார் முன்வந்தார். இவர் கிளர்ச்சி செய்யக்கூடிய செய்யுள் ஒன்றை இயற்றினார்: 'என் உதடுகளில் பொதுவான பேச்சு இல்லாமல் பாட்டுடன் எழில் பொருந்திய சாலமிஸ்ஸிலிருந்து முன்னறிவிப்போகை வந்தேன்' என்று இச் செய்யுள் ஆரம்பிக்கின்றது. 'சாலமிஸ்ஸை நம் கைகளிலிருந்து நழுவவிட்ட மக்களின் சமாதானக் கொள்கை நம்மை அவமானத்திற்குள்ளாக்கிற்று' என்று இவர் குற்றம் சாட்டி, 'இந்த அழகிய தீவைக் கைப்பற்றவும், நமது அவமானத்தைப் போக்

கடிக்கவும் எல்லோரும் எழுந்து வாருங்கள்' என்று கதறுகிறுர். பிற்காலத்தில் இப் 'பொதுப் பேச்சு' ஓர் அழகுக் கலையாக மாறிய காலத்தில், பேரவையில் ஒரு சொற்பொழிவாளர் தமது சொல் வன்மையால் யாதொரு காரியத்தைச் செய்திருக்க முடியுமோ அதே பயனை அடைவதற்காகச் சோலான் தமது செய்யுளை உபயோகித்தார். இவர் ஆர்வத்துடன் கோரிய மொழி தமது நாட்டு மக்களின் உணர்ச்சியை எழுப்பித் தேசீய முயற்சி ஒன்றில் ஈடுபடச்செய்தது. அத்தீனிய இராணுவம் தன் நாட்டின் பெருமைக்குக் கடைக்கால் நாட்டும் நோக்கத்துடன் முன்னேறிச் சென்றது.

சோலானின் ஆத்ம நண்பரும் ஹிப்பாக்ரேட்டிஸ் (Hippocrates) என்பவரின் மகனுமாகிய பிஸிஸ்ட்ரேட்டஸ் இம் முயற்சியில் பங்கெடுத்தார். இவருடைய வீடும், பண்ணையும் ப்ரரோன் (Brauron) என்னுமிடத்திற்குப் பக்கத்திலிருந்தன. பிஸிஸ்ட்ரேட்டஸ் அந்த ஆண்டின் போலிமார்க்(polemarch)கா யிருந்திருக்கலாம் என்று சிலர் எண்ணுகின்றனர். ஆனுல் இவர் போலிமார்க்கின் கையின்கீழ் உள்ள ஒரு படைத்தலைவராக இருந் திருக்கலாம் என்பது அதிகமாக நம்புவதற்கு இடமளிக்கின்றது. இவர் இந்தப் படையெடுப்பு வெற்றிகரமான முடிவை அடையும் படி செய்தார். இன்னுருடையது என்றில்லாமல் சச்சரவுக்கிட மாக இருந்துவந்த இந்தத் தீவு மேகாராவினிடமிருந்து எடுத்துக் கொள்ளப்பட்டது. தீவிற்கு அப்பால் மேகாராவின் துறைமுக மாகிய நிசியாவைப் பிஸிஸ்ட்ரேட்டஸ் கைப்பற்றினுர். முதலில் நிசியா திடீரென்று தாக்கப்பட்டுப் பிடிபட்டதனுல் அத்தினீயர் கள் எளிதில் சாலமிஸ்ஸைக் கைப்பற்ற முடிந்திருக்கும் என்று நாம் யூகிக்கலாம். இப்படியாக நிசியாவின் வெற்றியில்மாத்திரம் பிஸிஸ்ட்ரேட்டஸ்ஸின் பெயர் அடிபட்டும், சாலமிஸ்ஸின் வெற்றியில் காணப்படாதபோதிலும், பிஸிஸ்ரேட்டஸுக் குத்தான் இந்தப் படையெடுப்புக்குக் காரணராயிருந்த சோலா னுடன் சேர்ந்து இப் பெரியதொரு செயலை நிறைவேற்றிய புகழ் உண்மையிலேயே உரியதாம். அதனுடைய துறைமுகத்தைக் கைப்பற்றிக் கொண்டது, மேகாராவின் வாணிபத்திற்கே ஒரு பெரிய அதிர்ச்சியாகும். ஸ்பார்ட்டாவின் மத்தியஸ்தத்தினுல் சமாதானம் உண்டானபொழுது நிசியா திருப்பிக் கொடுக்கப் பட்டது. ஆனுல் நிசியா தன் உடைமையில் இருக்கும்போது அத்தீனியன் கொள்கைகளில் ஏற்பட்ட நம்பிக்கைகள் 'மேகாரா வின் வீரனுகிய நிஸ்ஸஸ் (Nisus), பாண்டியோன் (Pandion) என்ற அத்தீனிய மன்னனின் மக்களில் ஒருவன்' என்று அக்காலத்தே தோன்றிய புராணக் கதையிலிருந்து நாம் அறியக் கிடக்கின்றன.

இரண்டு நாடுகளும் தம் வழக்குகளை ஸ்பார்ட்டாவின் நடுத் தீர்ப்புக்குமுன் வைப்பதாக ஒப்புக்கொண்டன. ஸ்பார்ட்டர்கள் இந்தத் தீவு ஆதென்ஸுக்கு என்று தமது தீர்ப்பை அளித்தனர். ஆதென்ஸ் தன் வழக்கில் வாதாடும்போது சாலமிஸ் பழைய காலத்தில் தங்களுடையதாயிருந்தது என்று ஹோமரின் செய்யுள் ஒன்றினை விளக்கிப் பொருள் கூறித் தனக்கு அத் தீவின் மேலிருந்த உரிமைகளை எடுத்துக்காட்டியது (இலியட் 11.558). வரலாற்றுக் காலத்திற்கு முந்திய இந்த உரிமையானது உண்மை என்று சொல்லும் காரணங்கள் ஒன்றையும் நாம் காண்கிலோம். ஹோமரைத் தமது சாட்சியாக அத்தீனியர்கள் கொண்டு வந்தது ஒரு சுவையான காரியமாகும். ஏனென்றால், ஹோமரின் வார்த்தைகளுக்கு மக்கள் அக் காலத்தில் எவ்வளவு மதிப்புக் கொடுத்தனர் என்பது இதிலிருந்து தெளிவாகின்றது. சாலமிஸ் அன்று முதல் அட்டிகாவுடன் நிரந்தரமாகச் சேர்க்கப்பட்டது. பிறகு இந்தத் தீவு நிலப்பாகங்களாகப் (lots) பிரிக்கப்பட்டு அத்தீனியக் குடிமக்களுக்குக் கொடுக்கப்பட்டது. இவர்கள் கிளெருக்குள் (cleruchs) அல்லது 'பாக நிலம் வைத்திருப்பவர்கள்' (lot-holders) என்று அழைக்கப்பட்டனர். சாலமிஸ் ஆதென்ஸுக்கு மிகவும் பக்கத்திலிருந்தாலும், இது எல்யூஸஸ் (Eleusis) மாதிரி அட்டிகாவுடன் இணைக்கப்படவில்லை. இந்த வெற்றிக்குக் கிட்டத்தட்ட எண்பது ஆண்டுகளுக்குப் பின்னர் (ஆனால் பழைய அட்டிக் எழுத்துகளின் காலத்தை வரையறுப்பது மிகவும் கடினம்.) ஒரு கற்றூணில் பொறிக்கப்பட்ட ஆவணத்தின் பல பாகங்கள் கிடைக்கப் பெற்றுள்ளன. இந்த ஆவணம் சாலமிஸ்ஸின் குடியேற்றத்தைக் குறித்து மக்கள் இயற்றிய சட்டமாகும். இது அத்தீனியாவின் வரலாற்றில் கிடைக்கப்பெற்றுள்ள எழுத்துக்கள் பொறிக்கப்பட்டுள்ள கற்களில் ஒன்றாகும். நம்மிடம் இருப்பதில் இதுவே அத்தீனியன் மக்கள் இயற்றிய முதன்முதலான சட்டமாகும். இந்தத் தீவிலுள்ள பழங்குடிகள் 'அத்தீனியர்கள்' கொடுக்கும் அதே மாதிரியான வரிகளைக் கட்டவேண்டுவதுமன்றி, இராணுவத்திலும் சேவை செய்யவேண்டும். ஆனால் தீவிலுள்ள தம் விளை நிலங்களில்தான் இவர்கள் வசிக்கவேண்டும். வேறு யாருக்காவது தமது நிலப் பகுதிகளைக் கொடுப்பார்களேயாகில் இவர்கள் தண்டம் விதிக்கப்படுவர்.

சாலமிஸ்ஸைக் கைப்பற்றியது ஆதென்ஸ் நகரத்துக்குரிய மிக முக்கியமான நிகழ்ச்சியாகும். ஆதென்ஸின் நில எல்லை சரியாக்கப்பட்டது. நிலங்களால் சூழப்பட்ட எல்யூசினியன் விரிகுடா அத்தீனியரின் முழு அதிகாரத்திற்குள் வந்தது. இப்பொழுது ஆதென்ஸ்தான் மேகாராவைப் பயமுறுத்தி வந்தது.

## 2. பிஸிஸ்ட்ரேட்டஸ்ஸின் கீழ் ஆதென்ஸ்

நிசியாவை வென்றவன் அக் காலத்து வீரராயினுன். குடியாட்சிச் சித்தாந்தங்களை உரிமை கொண்டாடியும், மக்களால் விரும்பப் படுகிற கலைகளைப் பயிற்சி செய்தும் இவன், பிரபுக்களை மிகவும் வெறுப்புடன் எதிர்க்கின்றவர்களும், சோலானின் விட்டுக்கொடுப்பில் (compromise) அதிருப்திகொண்டு சமவெளிக் (plain) கட்சிக்கும் கடற்கரைக் (coast) கட்சிக்கும் வெளியே நின்றவர்களுமாகிய தீவிரமான (extreme) குடியாட்சிப் பிரியர்களின் நல்லெண்ணத்தைப் பெற்றுன். இப்படிப் பிஸிஸ்ட்ரேட்டஸ் ஒரு புதுக் கட்சியை ஏற்படுத்திஞன். இது பெரும்பாலும் அட்டிகாவின் குன்றுகளில் வசிக்கும் எளிய மலைவாசிகளைக் கொண்டிருந்ததால் இந்தக் கட்சி மலைக் (hill) கட்சி என்று அழைக்கப்பட்டது. இந்தக் கட்சி சோலான் ஒரு வகையிலும் உதவி செய்யாத, ஹெக்டிமோர்களையும் (hektemors) பழைய காலத்தில் பணக்காரராயிருந்து பழைய கடன்களை ஒழித்த 'சோலானின் சட்ட'த்திஞல் ஏழைகளாகி மனநிம்மதி இல்லாத மக்களையுங்கூடக் கொண்டிருந்தது. இந்தக் கட்சியின் துணையால் பிஸிஸ்ட்ரேட்டஸ் முழு ஆட்சியுரிமையையும் அடைய எண்ணிஞன். ஒரு நாள் ஆகோராவாகிய பேரவையில் பிஸிஸ்ட்ரேட்டஸ் காயங்களுடன் தோன்றிஞன். இக் காயங்கள் தனது அரசியல் எதிரிகளால் இழைக்கப்பட்டவை என்று கூறிஞன். தான் மக்களுடைய நண்பஞயிருப்பதை மற்றவர்கள் விரும்பவில்லை என்றும் கூறிக் கூடியுள்ள மக்களுக்குக் காயங்களைக் காட்டிஞன். பேரவையில் மலைக் கட்சி மக்கள் அதிகம் இருந்தனர். அவர்கள் அரிஸ்டியோனின் (Aristion) யோசனையை ஏற்றுக் கொண்டு அவனுக்குக் குண்டாந்தடியைக் கொண்ட ஐம்பது மெய்காப்பாளர் படை ஒன்றைக் கொடுக்கத் தீர்மானித்தனர். நமக்கு ஒரு நினைவுச் சின்னம் கிடைத்துள்ளது. நாம் இந்த நினைவுச் சின்னத்தை இப் பெரிய செயலைச் செய்யத் தூண்டிய அரிஸ்டியோனுடன் இணைக்கலாம். இப்படி ப்ரரோனில் கிடைத்த கல்லறையை மூடும் தகடு ஒன்றில் அவனுடைய கல்லறையில் வைக்கும் கல்பக்கத்தில் (அரிஸ்டியோன்) ஆயுதங்கள் தரித்து நிற்பது போன்று அழகாக இலேசான வர்ணங்களால் (low relief) செய்யப்பட்ட உருவப்படம் கிடைத்துள்ளது. 'பிஸிஸ்ட்ரேடிட்' குடும்பம் ப்ரரோனில் வசித்தது என்பதை நாம் அறிந்தால், சமகாலத்தில் செய்யப்பட்ட இந்தச் சிற்பம் அரிஸ்டியோனைக் குறிக்கின்றது என்பதில் தவறு ஒன்றுமில்லை. தனக்கு மெய்காப்பாளர் படை கிடைத்ததும் (இது கொடுங்கோலனின் முன்னேற்றத்தில் முதல் அடியாகும்) பிஸிஸ்ட்ரேட்டஸ் அக்ராபோலிஸ் என்னும் சேம அரணைப் பிடித்துக் கொண்டு தன்னை அரசின் தலைவனுக்கிக்கொண்டான்.

கொடுங்கோலாட்சிக்கு அஞ்சிய சோலான் தம் நகரத்தி லேயே இப்படி ஒன்று ஏற்படுவதைப் பார்க்க உயிரோடிருந்தது அவருடைய தலைவிதிப் பயனேயாகும். தாம் ஆதென்ஸுக்குத் திரும்பி வந்ததிலிருந்து, அல்லல்கள் மிகுந்த அரசியல் உலகத்தில் இவர் என்ன பங்கு எடுத்தார் என்பது நமக்குத் தெரியாது. இவர் குடிகளைக் கொடுங்கோலனுக்கு விரோதமாக ஆயுதங்களைத் தரித்து எழும்புமாறு வேண்டுகோள் விடுத்தார் என்றும், அவ் வேண்டு கோலிற்குச் சரியான பதில் வராததால் தாம் அணிந்துள்ள ஆயுதங்களைக் கழற்றித் தம் வாயிற்படியின்மேல் வைத்து, 'என்னால் கூடியவரை நான் எனது நாட்டிற்கும், அரசியல் அமைப்பிற் கும் உதவியுள்ளேன். அம்மாதிரியே அனைவரும் செய்யவேண்டுகின் றேன்' என்று கூறியதாகவும் ஒரு கதை கட்டப்பட்டது. மற்றொரு கதை, இவர் கொடுங்கோலாட்சியின்கீழ் வாழ மறுத்து, சைப்ரஸ் தீவிலுள்ள சோலி (Soli) என்னுமிடத்து மன்னனாகிய தம் நண்ப னிடம் புகலிடம் கொண்டார் என்பதாகும். இவ் விரு கதைகளுக் கும் ஆதாரம் ஒன்றும் காணோம். இவர் தம் இறுதிக் காலத்தில் மதுவிலும் மோகத்திலும் அதிகமாக ஈடுபட்டு, பிஸிஸ்ட்ரேட்டஸ் பதவிக்கு வந்த சிறிது காலத்திற்கெல்லாம் மறைந்தார் என்று அறிகிறோம். பிஸிஸ்ட்ரேட்டஸ் இக் கிழவரை நன்மதிப் புடன் நடத்தினான் என்று சொல்லப்படுகிறது.

கட்சிகளுக்குள்ளிருந்த ஒற்றுமைக்கேடு பிஸிஸ்ட்ரேட்டஸ் தன் சூழ்ச்சிகளைச் செய்து முடிக்கக்கூடிய வழியை மென்மையாக்கி யது. ஆனால் இவனுடைய வெற்றி, சமவெளிக் கட்சியையும், கடற்கரைக் கட்சியையும் ஒற்றுமைப்பட வைத்தது. கிட்டத்தட்ட ஐந்து ஆண்டுகளின் முடிவில் அவைகள் அவனை வெளியே துரத்து வதில் வெற்றி கொண்டன. ஆனால் ஒற்றுமையின்மை இதனைப் பின் தொடர்ந்தது. கடற்கரைக் கட்சியின் தலைவரான மேகா க்ளீஸ் சமவெளிக் கட்சியினுடனும், தம் சொந்தக் கட்சியினுட னும் சண்டையிட்டுக்கொண்டார். எப்படி இருந்தபோதிலும் இவர் பிஸிஸ்ட்ரேட்டஸ்ஸுடன் மீண்டும் நல்லுறவு கொள்ள யோசித்து, பிஸிஸ்ட்ரேட்டஸ் தம் மகளை மணந்தால் அவன் திரும்பவும் கொடுங்கோலன் ஆவதற்குத் தாம் உதவியளிப்பதாக உறுதி கூறினார். புராணத்தின்படி பிஸிஸ்ட்ரேட்டஸ்ஸின் கட்சிக் காரர்கள் பியெனியா (Paenia) என்னும் அட்டிக் (Attic) கிராமத் தில் எல்லாப் பெண்களைப் பார்க்கிலும் வளர்ந்த ஒரு பெண்ணை அத்தீனா தேவதை (goddess Athena)போல உடுத்தினார்கள். அந்தப் பெண்ணின் பெயர் பை (Phye) என்பதாகும். பின்பு குறிப்பிட்ட ஒரு நாள், தூதர்கள் ஆதென்ஸ் நகரத்தை அடைந்து பல்லாஸ் (Pallas) தேவதையானவள் தானே பிஸிஸ்ட்ரேட்டஸ்ஸை

அழைத்துக்கொண்டு வருவதாகக் கூறினுர்கள். உடனே கொடுங் கோலனையும் 'பை'யையும் ஏற்றிக்கொண்டு தேர் ஒன்று அங்குத் தோன்றியது. இந்தச் சூழ்ச்சி பொதுமக்கள் யாவரையும் ஏமாற்றியது.

பிஸிஸ்ட்ரேட்டஸ் மேகாக்ளீஸ் ஆகிய இவர்களிடையே ஏற்பட்ட கூட்டிணைப்பானது மேகாக்ளீஸுக்கும் லைக்கர்கஸ் ஸுக்குமிடையே ஏற்பட்ட கூட்டிணைப்பைப்போல் அவ்வளவாக நீடிக்கவில்லை. பிஸிஸ்ட்ரேட்டர்ஸுக்கு முந்திய மனைவி[1] ஒருத்தியால் ஹிப்பையஸ் (Hippias), ஹிப்பார்க்கஸ் (Hipparchus) என்று இரண்டு குமாரர்கள் இருந்தார்கள். அவன் ஒரு சந்ததியை உண்டாக்க வேண்டுமென்று விரும்பியதால் தன் இரண்டாவது மனைவியின்மூலம் தனக்கு ஆண்மக்கள் இருப்பார்களானுல் மூத்த புதல்வர்களின் நலம் பாதிக்கப்படுவதுமல்லாமல், குடும்பத்திலும் சச்சரவுகள் ஏற்படும் என்று அஞ்சினுன். ஆகையால் மேகாக்ளீஸ்ஸுக்குத் தான் கொடுத்த வாக்குறுதியின்படி அவர் மகளைச் சடங்குகள்படி மணந்தானே ஒழிய, அவளை மனைவியாக நடத்தவில்லை. கொடுங்கோலன் தம் மகளைக் கவனியாதிருத்தலை அறிய வந்த மேகாக்ளீஸ் சினங்கொண்டு, பிஸிஸ்ட்ரேட்டஸ்ஸின் பகைவர்களுடன் சேர்ந்து பிஸிஸ்ட்ரேட்டஸ்ஸை இரண்டாம் முறையாக நகரத்தை விட்டுத் துரத்திவிட்டார். பிஸிஸ்ட்ரேட்டஸ் எந்த ஆண்டில் தன் உரிமையைப் பெற்றுனே, அந்த ஆண்டிலேயே துரத்திவிடப்பட்டிருக்கலாம்.

இரண்டாவது நாடு கடத்தல் கிட்டத்தட்டப் பத்து ஆண்டுகள் நீடித்திருந்தது. இந்த நாடு கடத்தலைப் பிஸிஸ்ட்ரேட்டஸ் மாசிடோனியாவுடன் புதிய தொடர்புகள் ஏற்படுத்தலில் கழித்தான். தெர்மேயிக் (Thermaic) வளைகுடாவின் பக்கத்தில் ரீசெல்லஸ் (Rhaecelus) என்னும் நகரம் இருக்கின்றது. இந் நக

[1] இவளுடைய பெயரை நாம் அறியோம். பிஸிஸ்ட்ரேட்டஸ் ஆர்காஸைச் சேர்ந்த டிமோனஸ்ஸா (Timonassa) என்ற பெண்ணையும் மணந்திருந்தான். ஆனுல் அவள் வெளிநாட்டவள் ஆதலால் அட்டிகாவின் சட்டம் அவளை இவனுடைய சட்டப்படியான மனைவி என்று ஏற்றுக்கொள்ளவில்லை. டிமோனஸ்ஸாவிற்குப் பிறந்த ஐயோபான் (Iophon) ஹெஜிஸிஸ்ட்ரேட்டஸ் (Hegesistratus) என்ற இரண்டு குமாரர்களும் சட்ட முறைமைக்கு மாருகப் பிறந்தவர்கள். ஆனுல் சமுதாயத்தில் கறையொன்றும் இல்லாதவர்களாகத் தோன்றினுர்கள். பிறகு ஹெஜிஸிஸ்ட்ரேட்டஸ், 'முறைப்படி பிறந்தவர்' என்று ஏற்றுக் கொள்ளப்பட்டதுமன்றிக் குடிமை உரிமையையும் பெற்றூர். இச் சமயத்திலேதான் இவர் தெசாலஸ் (Thessalus) என்ற பெயரைப் பெற்றுர் போலும்.

ருக்குப் பக்கத்திலுள்ள மக்களை இவன் ஒருவித நகர ஆட்சியின் கீழ்க்கொண்டு சேர்த்தான். ஸ்டிரைமான் (Strymon) நதியின் அருகிலுள்ள பாங்கியஸ் (Pangaeus) மலையில் காணப்பட்ட தங்கச் சுரங்கங்களை இவன் பயன்படுத்திக்கொண்டான். மேலும், இங்குக் கூலிப்படை ஒன்றை எழுப்பினான். இப்படி ஆதென்ஸைத் திரும்பிப் பெறப் பணத்தையும் படையையும் சேகரித்தான். நாக்ஸாஸின் (Naxos) கொடுங்கோலனான லிக்டாமிஸ் (Lygdamis) இவனை ஆதரித்தான். தான் பதவியில் இருக்கும்போது பிஸிஸ்ட்ரேட்டஸ் தெசலி போன்ற கிரேக்க அரசுகளின் நட்பைப் பெற்றிருந்தான். இந்த அரசுகளும் இவனை ஆதரித்தன. எரிதிரியாவின் உயர்குடியில் பிறந்த குதிரை வீரர்கள் அனைவரும் இவனுடன் ஒரு நல்ல முறையில் ஈடுபட்டிருந்தார்கள். இதுவுமன்றி அவர்களுடைய நகரம் ஆதென்ஸை மிகவும் எளிதாகத் தாக்கக்கூடிய மூலதளமாயிருந்தது. பிஸிஸ்ட்ரேட்டஸ் மாரத்தானில் (Marathon) இறங்கியபோது இவனுடைய சார்பாளர்கள் அனைவரும் இவனது கொடியின்கீழ் வந்து கூடினர். அரசியலமைப்புக்குக் கட்டுப்பட்ட அரசாங்கத்தின்மேல் பற்றுறுதியுள்ள குடிமக்கள் பிஸிஸ்ட்ரேட்டஸ்ஸிற்கு எதிரே படையெடுத்துச் சென்று பல்லீனி (Pallene) என்ற இடத்தில் நடந்த சண்டையில் தோற்கடிக்கப்பட்டனர். எதிர்ப்பு முடிந்தது. மறுமுறை பிஸிஸ்ட்ரேட்டஸ் அதிகாரங்கள் அனைத்தையும் தன் கையில் பெற்றான். இந்தத் தடவை அதிகாரங்கள் யாவற்றையும் தான் சாகும்வரை தன்னிடமே மிகவும் பத்திரமாக வைத்திருந்தான்.

பிஸிஸ்ட்ரேட்டஸ்ஸின் ஆட்சியை அரசியலமைப்புக்குக் கட்டுப்பட்ட கொடுங்கோலாட்சி என்று நாம் கூறலாம். அவன் குடியாட்சியின் சக்கரங்களை நிறுத்தவில்லை. ஆனால் தன் இஷ்டப்படியே முழு இயந்திரத்தையும் நடத்தினான். சோலானின் அரசியல் அமைப்பை, அதன் முக்கிய அமிசங்களில் அவன் மாற்றாமல் பேணியதாகத் தெரிகிறது. ஆனால் காலப்போக்கில் அந்த அமைப்புச் சில இடங்களில் மாறுதல் பட்டிருக்கலாம். பிஸிஸ்ட்ரேட்டஸ் கொடுங்கோலனாவதற்கு முன்பே தானியங்கள், எண்ணெய் முதலியவற்றின் அளவுக்கேற்ப மக்கள் வகுப்புகளாகப் பிரிக்கப்படுவதும் வரி விதிக்கப்படுவதுமானவை அவைகளின் விலைக்கு ஏற்பப் பணத்தில் மாற்றப்பட்டிருக்கலாம். பணமானது அதிகமாகச் செலாவணியில் இருக்கவே மக்களை வகுப்புகளாகப் பிரிக்க உபயோகப்படுத்திய பழைய திட்ட அளவுகள் (standards) தம் பழைய முக்கியத்துவத்தை (significance) இழந்தன. ஆறுவது நூற்றாண்டில் ஒரு மனிதன் முதல் வகுப்பின் திட்ட அளவை அடைந்துவிட்டால் அவன் பணக்காரனாகக் கருதப்பட்டான்.

ஐம்பது ஆண்டுகளுக்குப்பின் மற்றவர்களோடு ஒத்துப் பார்க்கும் போது அவன் ஏழையென்றே கருதப்பட்டான். ஆனுல் குடி மதிப்பை அரசியல் பதவிகளுக்காக உயர்த்துவது கொடுங்கோல வின் நலத்திற்கு ஏற்ற காரியமாகாது. பிஸிஸ்ட்ரேட்டஸ் அர சாங்கத்தின் பழைய தோற்றத்தைப் பேணி வைத்திருந்தபோதும், தன் பதவியைக் காப்பாற்றுவதற்காகக் கோட்பாடுகளில் சில மாறுதல்களை இயற்றி வைத்தான். தன்னைச் சார்ந்தவர்கள் ஆர்க் கான் முதலிய நடுவர் பதவியில் அமர்த்தப்பட வேண்டுமென்று தன் செல்வாக்கை அவன் உபயோகித்து வந்தான். இப்படி அடிக்கடி அவனது குடும்பத்தைச் சேர்ந்த ஒருவரே நல்ல பதவி யில் இருந்து வந்தார். இது சோலான் ஏற்படுத்திய குடவோலை முறையை நிறுத்தி வைக்கவோ அல்லது மாற்றி அமைக்கவோ செய்தது. ஊதியம் பெறும் போர்வீரர்களைக் கொண்ட ஒரு நிலையான படையை இவன் வைத்திருந்தான். இவைகளில் இக் காலத்து அட்டிக் (Attic) மலர்க்குவளைகளில் சித்திரித்து காணப் படும் ஸ்கிதியன் (Scythian) வில்லாளிகள் ஒரு வேளை இருந்திருக் கலாம். தான் சந்தேகிக்கும் சில பிரபுக்களின் குடும்பங்களி லுள்ள மக்களைப் பிணைகளாக (hostages) வைத்திருந்தான். ஆல்க்மியோனிட்ஸ்(Alcmaeonids) போன்ற பெரிய எதிரிகள் அட்டி காவைவிட்டு ஓடிவிடவே அவர்கள் யாவரும் விட்டுவிட்டுப் போன பண்ணைகள் அவன் வசமாயின. சோலான் சிக்கறுக்க முடியாத ஒரு பிரச்சினையை இவன் இந்தப் பண்ணைகளைக்கொண்டு சிக் கறுக்க முடிந்தது. அதுவே இவன் தன் பெரும்பான்மையான ஆதரிப்பாளர்களின் விருப்பங்களை நிறைவேற்றியதாகும். வெறு மையாகக் கிடந்த பண்ணைகளை நிலப்பாகங்களாகப் பிரித்து இந்தப் பண்ணைகளில் அல்லது மற்றப் பண்ணைகளில் வேலை பார்த்து வந்த வேலைக்காரர்களுக்குக் கொடுத்தான். ஹெக்டிமோர்களை முழுவதுமாக அழிக்க இதுவே முதற்படியாகும். இவர்கள் எல்லா விதத்திலும் உழவாளி - உரிமையாளர்களாயினர்கள்; இவர்கள் விளைச்சலில் பத்தில் ஒரு பங்கை நில வரியாக மாத்திரம் கொடுக்க வேண்டியது. நகரங்களிலே சோம்பேறிகளாக அலைந்த வறுமை மிகுந்தவர்களுக்கும் நிலம் வழங்கப்பட்டது. இவைகளைப் பயி ரிடுவதற்குப் பணமும் கடனுகக் கொடுக்கப்பட்டது. எல்லாப் பண்ணைகளின்மேலும் இடப்பட்ட பத்தில் ஒன்றுகிய வரியானது கொடுங்கோலனின் வருவாய்க்கு முக்கியத் தோற்றுவாயாயிற்று. இந்த வரியை இவன் புகுத்தி இருக்கக்கூடும் என்பது ஒரு பொது வான எண்ணம். ஆனுல் இது உண்மையாக இருக்க முடியாது. இந்த நிலவரி ஒரு பழைய நிறுவனமென்றும், இதைப் பிஸிஸ்ட் ரேட்டஸ் பின்பற்றினுனென்றும், பின்னுல் இவனுவது அல்லது இவனுடைய குமாரர்களாவது, மற்றத் தோற்றுவாய்களிலிருந்து

வருவாய் அதிகமான காலத்தில் இதை இருபதில் ஒரு பாகமாகக் குறைத்திருக்கக் கூடும் என்றும் நாம் எடுத்துக்கொள்ளலாம். இக் காலத்தில் லாரியோன் (Laurion) வெள்ளிச் சுரங்கங்கள் முன்னைக்காட்டிலும் சரியான முறையில் நடத்தப்பெற்றமையால் வருவாயில் அதிக உயர்வு காணப்பட்டது என்பது ஒரு நம்பிக்கையான ஊகமாகும். ஸ்டிரைமான் நதிக்கரையிலுள்ள தங்கச் சுரங்கங்களும் பிஸிஸ்ட்ரேட்டஸ்ஸின் நிதிக்கு ஒரு பெரிய ஆதரவளித்தன. இவன் பயிர்த்தொழில் முன்னேறுவதற்காகவும் பாடுபட்டான். இவன் வருகைக்கு முன்பே அட்டிகாவில் ஒலிவ மரங்கள் இருந்தபோதிலும் இவனுடைய செல்வாக்கினால் இவை அட்டிகாவின் எல்லாப் பாகங்களிலும் நடப்பட்டன.

பிஸிஸ்ட்ரேட்டஸ் காலத்தில் கட்சி வாதங்கள் இல்லாமல் ஆதென்ஸ் அமைதியோடு இருந்தது. பழைய கட்சிகளும் படிப்படியாக மறைந்தன. பெரும்பான்மையான அமைதியற்ற ஹெக்டிமோர்கள் உழவர்-உரிமையாளர் வகுப்பில் இணைக்கப் பெற்றனர். இவ்வாறாகப் பொருளாதாரத்துறை வளர்ச்சியாலும் அரசியல் முன்னேற்றத்தாலும் மக்கள் அமைதியான வாழ்க்கை இன்பத்தில் திளைத்தனர். அரசியல் அமைப்பிலுள்ள உரிமையைக் கோரும் பாகங்கள் (forms) பேணி வைக்கப்பட்டதால் மக்கள் பொது விவகாரங்களில் நாள்தோறும் வழக்கமாகச் செய்யும் வேலைகளிலாவது பேரவையிலும் நீதி மன்றங்களிலுமாவது பயிற்சி பெற்றனர். இந்தப் பயிற்சி அவர்களைக் கொடுங்கோலாட்சியின் முடிவுக்குப் பின் தோன்றிய மக்களாட்சிக்கு உரியவர்களாக்கிற்று.

வெளிநாட்டு விவகாரங்களில் பிஸிஸ்ட்ரேட்டஸ் மற்ற அரசுகளுடன் சமாதானத் தொடர்புகளைப் பேண வேண்டும் என்ற மாறாத கொள்கையைக் கைப்பற்றினான். ஈகைனாவோ என்றால், ஆதென்ஸின் வெளிப்படையான எதிரொளி. தாழ்ச்சிபெற்ற மேகாரா வேறு வகையின்றி எப்பொழுதும் சிடுசிடுவென்றிருந்தது. ஆயினும், பெலோப்போனீஸஸ்ஸில் போட்டியாக விளங்கிய ஸ்பார்ட்டாவுடனும் ஆர்காஸுடனும் ஆதென்ஸ் நட்புக்கொண்டிருந்தது. தீப்ஸியர், தெசலியர், எரிதிரியன் பிரபுக்கள் இவர்கள் யாவரும் இக் கொடுங்கோலனுக்கு உதவி புரிந்ததால், பிஸிஸ்ட்ரேட்டஸ் இவர்களுடனும் அதிக நட்புடன் இருந்தான். நாம் முன்னமே அறிந்தபடி இவனுடைய செல்வாக்கு ஸ்டிரைமானின் கரைகள்மட்டும், மாசிடோனியாவின் கரைகள்மட்டும் பரவியிருந்தது. பிஸிஸ்ட்ரேட்டஸ் நாக்சிய மக்களின்மேல் கொடுங்கோலனாக நியமித்த லிக்டாமிஸ் எப்பொழுதும் இவனுடைய அடிமைபோல் நடக்கிற நண்பனாயிருந்தான்.

மேகாரா செய்துவந்த கருங்கடற் பிரதேசத்துத் தானிய வாணி பத்தை ஒழிக்கவும், ப்ரோபான்டிஸ்(Propontis) தீரத்தில் மேகாரா வின் குடியேற்ற நாடுகளுக்கு எதிரிகளாக அத்தீனியக் குடியேற்ற நாடுகளை ஏற்படுத்தவுமே தூரக் கடல்களில் முதலாவதான துணிகரச் செயலை ஆதென்ஸ் செய்தது. பிஸிஸ்ட்ரேட்டஸ் பதவிக்கு வருவதற்கு நாற்பது ஆண்டுகளுக்கு முன்னரே, ட்ரோடின் (Troad) கடற்கரைப் பகுதியில் ஹெல்லெஸ்பான்டின் (Helles-pont) வாயிலில் அமைந்துள்ள லெஸ்பியர்களுடைய (Lesbian) அரணுகிய சீஜியத்தை (Sigeum) ஆதென்ஸ் கைப்பற்றியது. கருங்கடற் பிரதேசத்திலுள்ள பல குடியேற்ற நாடுகளின் தாயாகிய மைலீட்டஸ்(Miletus)ஸுடன் ஆதென்ஸ் கொண்டுள்ள நட்பு சீஜியத்தைப் பிடிக்க உதவியது. ஆனல் இது கால்வாயின் கரைகளில் தமது அதிகாரத்தையும் குடியேற்ற நாடுகளையும் நிறுவிய மிட்டிலீன் (Mytilene) ஒரு சச்சரவை உண்டுபண்ணியது. இந்த அரணைத் திரும்ப எடுக்கமுடியாத மிட்டிலீன் அதற்குப் பக்கத்தில் அக்கில்லியான் (Achilleon) என்ற மற்ருேர் அரணைக் கட்டியது. இந்த அரண் அத்தீனியர்களைக் கடலிலிருந்து பிரித்தது. எப்படி அரசியல் வல்லுநராகிய பிட்டாக்கஸ் யுத்தத்தின்போது ஓர் அத்தீனியப் போர்த் தலைவரைத் தனிக் கைச் சண்டையில் (simple combat) கொன்ருர் என்பதையும், எப்படிக் கவிஞர் ஆல்கியஸ் (Alcaeus) தமது கேடயத்தை விட்டெறிந்தார் என்றும் அறிந்தோம். ஆதென்ஸ் தனது கட்சிச் சச்சரவில் ஈடுபட்டிருக்கும்போது சீஜியம் அதன் கைகளிலிருந்து நழுவியிருக்கலாம். இதனைப் பிஸிஸ்ட்ரேட்டஸ் திரும்பிப் பிடித்தது ஒரு பெரிய வெற்றியாம். இக் கொடுங்கோலன் இதனைத் தான் முக்கியமானது என்று கருதியதைக் காட்டத் தன் குமாரன் ஒருவனை இதன் மாகாணத் தலைவனுக நியமித்தான். அத்தீனியப் போர் வீரர்களை ஹெல்லெஸ்பான்டின் கரைகளுக்கு முதலில் அனுப்பிய அரசியல் வல்லுநர் உண்மையாகவே அத்தீனியன் கோட்பாட்டில் ஒரு புதிய பாதையைத் திறந்து வைத்தார். பிஸிஸ்ட்ரேட்டஸ் அந்த வழியைப் பின்பற்றினுன். கொஞ்ச காலத்திற்கெல்லாம் சீஜியத்தைவிடப் பெரியதோர் இடம் இந்தப் பாகத்தில் ஈட்டப்பட்டது. இந்த ஈட்டுதல் பிஸிஸ்ட்ரேட்டஸ்ஸின் நட்புச்சூழலிலும் ஆதரவிலும் நடந்தாலுங்கூட, இது அவனுடைய அரசியல் போட்டியாளனும் எதிரியுமான சிப்ஸிலஸ்ஸின் மகனுகிய மில்டியேடிஸ் (Miltiades) என்பவரால் செய்யப்பெற்றது. இவர் பிலெய்ட்ஸ் (Philaids) என்ற பிரபுக்களின் குடும்பத்தைச் சேர்ந்தவரும், சமவெளிக் கட்சியின் தலைவர்களில் ஒருவருமாயிருந்தார். பிஸிஸ்ட்ரேட்டஸ் உரிமை யில்லாமல் பதவியை அடைந்தபிறகு, ஒரு நாள் ஆதென்ஸிலிருந்து எல்யூஸிஸ்ஸுக்குப் போகும் சாலையி

லுள்ள லாசியாடி (Laciadae) என்னுமிடத்தில் உள்ள தனது இல் லத்தின் முக மண்டபத்தில் உட்கார்ந்திருந்தபோது திரேஷியன் (Thracian) உடைதரித்துக் கைகளில் ஈட்டிகள் ஏந்திக்கொண்டு மக்கள் சிறு கூட்டமாகச் சாலையில் போவதை மில்டியேடிஸ் கண்ணுற்ருர். பின்பு இவர்களைச் சப்தமிட்டுக் கூப்பிட்டு, அவர்கள் வந்ததும் இவர்களைத் தமது வீட்டிற்குள் அழைத்துச் சென்று விருந்தினராகக் கருதி உபசரித்தார். இவர்கள் திரேஷி யன் செர்சானீஸ்(Thracian Chersonese)ஸிலுள்ள ஆதிக் குடிக ளான டோலோன்ஸி(Dolonci)யர் ஆவர். இவர்கள் சண்டையில் தம்மை நெருக்கிக்கொண்டிருந்த தம் வடக்கு எல்லையிலுள்ள தம்மைக் காக்கக்கூடிய வலிமையும் திறமையும் பொருந்திய உதவியாளரைத் தேடி, கிரீஸ் நாட்டிற்கு வந்தார்கள். இவர்கள் டெல்பிக்குப் போயிருந்தார்கள். அந்தக் கோவிலிலிருந்து போன பிறகு யார் இவர்களை முதலில் அழைத்து உபசரணைகள் செய்கின் ருரோ அவரைத் தம்முடன் அழைத்துச் செல்லவேண்டுமென்று தெய்வமொழி கட்டளையிட்டது. இப்படிக் கடவுளால் குறிக்கப் பட்ட மில்டியேடிஸ் திரேஷியர்களின் அழைப்புக்கு இணங்கினுர். மற்றும், இவர் கொடுங்கோலனின் ஆட்சிக்குட்பட்டுவிட்ட தமது நாட்டிலிருந்து செல்லத் தயங்கவேயில்லை.

செர்சானீஸில் அத்தீனியருடைய ஆட்சி நிறுவப்பட்ட சூழ் நிலைகள், கிரேக்கரது கதை சொல்லும் இயல்பினுல் மனத்தில் படம்போல் பதியத்தக்க கதையாக அமைக்கப்பெற்றுள்ளன. டோலோன்ஸியர்கள் ஆதென்ஸை நேரடியாக அணுகித் தம் முடைய நாட்டின் மத்தியிலே அத்தீனியன் குடியேற்ற நாடு ஒன்றை நிறுவக் கேட்டிருக்கலாம் என்பது சாதாரண உண்மை யாயிருக்கலாம். ஹெல்லெஸ்பான்டைன் கரைகளில் அத்தீனியன் செல்வாக்கு முன்னேறச் செய்வதை பிஸிஸ்ட்ரேட்டஸ் மிகவும் விரும்பினுன். இதற்காக மில்டியேடிஸ் ஸைத் தேர்ந்தெடுத்ததை இவன் வரவேற்ருன். ஏனெனில், இது ஓர் அபாயகரமான குடியை அப்புறப்படுத்திற்று. திரேஷியன் விருந்தினரது நாட்டிற்கு மில்டியேடிஸ் அத்தீனியன் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஈஸிஸ்ட்(oecist)டாகவும், டெல்பிக் தெய்வ மொழியால் ஆசீர்வதிக்கப்பட்டவராகவும் சென்ருர். ஆனுல் கொடுங்கோலாட்சியிலிருந்து தப்பவேண்டும் என்று சென்ற இந்த ஈஸிஸ்ட், தமது புதிய நாட்டில் தாமே எதேச் சாதிகாரம் பொருந்திய ஓர் அரசரானுர். இவர் டோலோன் ஸியர்களுக்கு ஒரு திரேஷியன் அரசிளங்குமாரராகவும் தம் முடைய சொந்த அத்தீனியக் குடியேற்ற மக்களுக்கு ஒரு கொடுங் கோலராகவும் இருந்து அரசு புரிந்தார். இந்தத் தீபகற்பத்தின்

கழுத்துப்போல் தோன்றும் பாகத்தில் கார்டியா (Cardia) விலிருந்து பாக்டை (Pactye) வரை சுவர் ஒன்றை எழுப்பி இவர் வடக்கி லிருந்து வரும் படையெடுப்பைத் தடுத்து இந்தத் தீபகற்பத்தைக் காத்தார். லாம்ப்சேகஸ் (Lampsacus) ஸுடன் இவர் யுத்தம் புரிந்ததையும், லிடியன் மன்னனுடன் இவர் நட்புகொண்டிருந்த தைப்பற்றியும் நாம் கேள்வியுறுகின்றோம்.

ஆதென்ஸ் ஒரு பேரரசை நிறுவுவதற்கு முதல் அடி எடுத் தவர் பிஸிஸ்ட்ரேட்டஸ் என்ருல், அது மிகையாகாது. பேரரசுக் குப் போகும் பாதையை, நமக்குப் பெயர்கள் தெரியாத இவ ருடைய பல முன்னேர் இவருக்குக் காட்டினூர்கள். ஆனல் இவ ருடைய வாள்தான் சாலமிஸ்ஸை வென்றது. மேலும், இவருடைய ஆதரவினுல்தான் ஹெல்லெஸ்பான்டின் இரு கரைகளிலும் கால் வைப்பதற்கென ஓர் இடத்தைப் பெற்றது. ப்ரோபான்டிஸ் தீரத் தில் அத்தீனியக் குடியேற்ற முயற்சிகளுக்கு ஓர் இடத்தைத் தேடிக் கொடுத்த அரசியல் வல்லுநரின் திறமையை அதிகமாகப் புகழ முடியாது. அயோனிய நகரங்கள், ஆதென்ஸ் இவ்விதமான எண் ணம் கொள்ளும் முன்னரே கிழக்கிலுள்ள கடலைத் தாண்டி அதன் கரைகளில் குடியேற்ற நாடுகளை அமைத்து, அந்தக் கரைகளில் கிடைக்கும் விளைபொருள்களைத் தம் வசமாக்கின. இந்தப் போட் டியில் மிகவும் பிந்திச் சேர்ந்தாலும், தனது நட்பு நாடாகிய மைலீடஸ்ஸையும், பகை நாடாகிய மேகாராவையும் ஆதென்ஸ் முந்திக்கொண்டுவிட முடிந்தது. அத்தீனியக் கப்பல்கள் கருங்கட லில் ஆதிக்கம் செய்ய இன்னும் மிகப் பல ஆண்டுகள் இருந்தன; ஆயினும், கிரேக்கக் கடலின் எல்லையில் பெரிதாக நீண்டிருப்பதும் கிழக்கு மேற்கு அலைகள் ஒன்றோடொன்று மோதிக்கொண்டிருப் பதுமான குறுகிய வாயிலின் இருபுறமும் குடியேற்ற நாடுகளைப் புறக்காவல்போல் வைத்தது மிகவும் சிறப்பானதொரு செயலாகும்.

கிரேக்க இனத்தின் கிளையான அயோனியர்களுக்குத் தாயா கவும், தலைவராகவும் இருக்கும் உரிமை ஆதென்ஸ் நகரத்திற்கே யுரியது என்று பிஸிஸ்ட்ரேட்டஸ் வற்புறுத்தினூர். புராணத்தின் படி அப்போலோவின் பிறப்பிடமாகிய டீலாஸ் (Delos) தீவில் காணப்படும் கோவில் ஈஜியனின் இருபுறங்களிலும் உள்ள அயோ னியர்களின் சமயச் சார்பான மையமாக வெகுகாலமாய் இருந்து வந்தது. இங்கே பழைய பாசுரம் ஒன்று கூறு வதுபோல், 'நீள அங்கிகளைத் தரித்த அயோனியர்கள் தம் மனைவிமார்களுடனும் குழந்தைகளுடனும், நடனங் களாலும், பாட்டுகளாலும், விளையாட்டுகளாலும் அப்போ லோவை மேன்மைப்படுத்தக் 'கூடுகிருர்கள்.' 'இந்த

அயோனியக் கூட்டத்திற்குள் நுழையும் ஓர் அந்நியன், இந்த மனிதர்களையும், அழகிய இடையையுடைய பெண்களையும், வேகமாகச் செல்லும் இவர்களுடைய கப்பல்களையும், இவர்களது செல்வத்தையும் பார்ப்பானேயாகில் இவர்கள் முதிர்ந்த வயதினின்றும் சாவினின்றும் என்றென்றும் விடுதலை அடைந்த மக்கள் என்று கூறுவான்.' கோவில் திருவிடத்தைச் சுற்றியுள்ள கல்லறைகளைத் தோண்டி, அங்குக் காணப்பட்ட எலும்புகளை எடுத்துத் தீவின் மற்ருெரு பக்கத்தில் புதைத்துப் பிஸிஸ்ட்ரேட்டஸ் இந்தப் புனித இடத்தைத் 'தூய்மையாக்கிஞன்.'

இப்படியாக ஆதென்ஸ் புகழ்பெற்ற அயோனிய விழாவைத் தன்னுடைய தனிப் பொறுப்பின்கீழ்க் கொண்டுவந்தது. பிஸிஸ்ட்ரேட்டஸ் அல்லது கல்வி கேள்விகளில் ஆர்வமுடைய அவனுடைய குமாரனுகிய ஹிப்பார்க்கஸ் இதைவிட ஒரு மேலான செயலை அயோனிய இதிகாசங்களாகிய இலியட்டிற்கும், ஒடிஸிக்கும் செய்ததாக அக் கால மக்களாலும், இக் கால மக்களாலும் சொல்லப்பட்டும் நம்பப்பட்டும் வருகின்றது. ஹோமரின் இரண்டு செய்யுட்களையும் திரட்டவும், எழுதவும், திருத்தவும் எழுத்தாளர்களைக் கொண்ட ஒரு சிறப்புக் குழு ஒன்று ஏற்படுத்தியதாகக் கதை ஒன்று கூறுகின்றது. இதிலிருந்து கொடுங்கோலர்களாலும், அவர்கள் அமர்த்திய புலமை சான்ற பெரியார்களின் பிரயாசையினுலுந்தான் முதன்முதலாக இந்தச் செய்யுட்கள் எழுதப்பெறலாயின என்ற எண்ணம் உண்டாகியதாகத் தெரிகிறது. இது உண்மையாக இருந்தால், எப்படி இலியட் சரிவர எழுதப்படாமல் இருக்கும்போது அத்தீனியர்கள் தங்களுக்கும் லெஸ்பாஸிற்கும் சீஜியத்தைப்பற்றி நடந்த சச்சரவில் தாங்கள் ட்ரோஜன் யுத்தத்தில் எடுத்துக்கொண்ட பாகத்தை ஹோமரின் செய்யுளிலிருந்து ஒரு தலைமுறைக் காலத்திற்கு முன்பே எடுத்துக் காட்டியிருக்க முடியும் என்பது விளக்க இயலாத செயலாகும். மேகர்ராவிற்கு விரோதமாகச் சாலமிஸ்ஸின்மீது தமது உரிமையைக் காட்டும்படி அத்தீனியர்கள் உபயோகித்த அட்டவணையிலுள்ள செய்யுள் அடியானது பொய்யானதென்றும், அது பிஸிஸ்டரேட்டஸ் நிறுவிய சிறப்புக் குழுவால் எழுதப்பட்டு இணைக்கப்பட்டதென்றும் பிற்கால மேகாரியர்கள் கூறுகின்றனர். இந்தக் குற்றச்சாட்டு நம்பிக்கைக்கு உரியதாகும். ஏனென்ருல், இந்தச் சிறப்புக் குழுவில் முக்கிய இடம் பெற்ற ஓனேமாக்ரிட்டஸ் (Onomacritus) என்பவர் கள்ளக் கையொப்பம் இடுவதில் நிபுணர். இவர் ஆர்பியஸ் என்னும் கடவுளை வழிபடும் சமயத்தில் (Orphic religion) ஓர் ஆசிரியர். இவர் குறிகாரர்களின் தெய்வ மொழிகளை எடுத்துத் தொகுத்துப் பதிப்பிக்கும் தொழிலில் கொடுங்

கோலனின் மகனுகிய ஹிப்பையஸிற்கு உதவியளித்தார். இந்தத் தொகுப்பில் தாமே உண்டாக்கிய ஒரு 'தெய்வ மொழி'யை இடையில் சேர்த்தார். இந்தத் தவருன செயல் கண்டுபிடிக்கப் படவே, இவர் நாடுகடத்தப் பெற்ருர். பிஸிஸ்ட்ரேட்டஸ் ஒரு சிறப்புக் குழுவை ஏற்படுத்திஞன் என்ற கதை, ஹோமரின் இந்த இரண்டு செய்யுட்களின் அடிகள் ஆரும் நூற்ருண்டிற்கு முன் எழுதப்பெருதவை என்று கூறுவதனுல் நம்பத் தகாததாகவும் சரியான கடைக்கால் இல்லாததாகவும் இருக்கின்றது.

பிஸிஸ்ட்ரேட்டஸ் ஹோமரின் கவிதையில் மற்ருெரு விதத்தில் அக்கறை கொண்டிருந்தான். அகில அத்தீனிய விழாக் களில் ஹோமரின் செய்யுட்களை மனப்பாடமாகக் கூறுவதை ஒரு முக்கியப் பகுதியாக இவன் அமைத்தான். இந்தப் போட்டி களில் பங்கெடுக்கும் பாணர்கள் செய்யுட்களை வரிசைக்கிரமமாகத் தான் ஒப்பிக்கவேண்டும் என்ற விதியை ஏற்படுத்திஞன். பிஸிஸ்ட்ரேட்டஸ் தன் கொடுங்கோலை ஏற்படுத்துவதற்குச் சற்று முன்தான் இந்த அகில அத்தீனிய விழா ஏற்படுத்தப்படாவிட் டாலும், ஒலிம்பியா, டெல்பி முதலிய தேசீயக் கூட்டங்களைப் போல் நான்கு ஆண்டுகளுக்கு ஒரு முறை திருப்பி அமைக்கப் பெற்றது இந்த விழாவானது பந்தயங்கள், சங்கீதப் போட்டிகள் முதலியவற்றுடன் கொண்டாடப்பட்டது. இந்த விழாவின் முக்கிய. நோக்கமானது பெரியதோர் ஊர்வலமாகும். இந்த ஊர்வலத்தில் அத்தீனியக் கன்னிப் பெண்கள் தம் கைகளினுல் செய்த நீண்ட அங்கியை எடுத்துக்கொண்டு, அத்தீனியா மலையி லுள்ள அத்தீனுவின் வீட்டை அடைந்து அங்கு அவருக்குக் காணிக்கையாக இந்த அங்கியை அளிப்பர். அத்தீனுவின் 'செல்வச் செருக்குடைய கோவில்' ஹோமரின் செய்யுட்களில் இடம் பெற்றுத் திகழ்கின்றது. இந்தக் கோவிலில் அத்தீனு எரச்தீயூஸிற்கு (Erechtheus) இடமளித்தார். இந்தக் கோவில் வடக்கிலுள்ள செங்குத்தான பாறையின் அருகேயுள்ளது. இதற்குத் தெற்கேயும், பழைய மன்னர்கள் வசித்த அரண் மனையின் அழிவுச் சின்னங்களின் அருகேயும் நகரத்தின் தேவதை வசிப்பதற்காகப் புதியதோர் கோவில் கட்டப்பட்டது. இது பிஸிஸ்டரேட்டஸ் காலத்திற்குமுன் கட்டப்பட்டது. ஆனுல் இதைச் சுற்றிலும் காணப்படும் டோரிக் தூண் வரிசை ஒருவேளை இவரால் நிறுத்தப்பட்டிருக்கலாம் எனத் தெரிகிறது. இந்தக் கோவிலின் நீளத்தினுல் இது நூறு அடி ஆலயம் என வழங்கப் பட்டது. தம்தம் இடங்களிலேயே இதன் சுவர்களின் அடிவாரக் கற்கள் கிடக்கின்றமையால் இந்தக் கோவில் இருந்த இடமும் இதன் தோற்றமும் நமக்கு நன்கு புலப்படுகின்றன. இங்குக்

காணப்படும் முக்கோணச் சுவர் முகடுகள் அந் நாள் அத்தீனியச் சிற்பிகளின் கைத்திறனை எடுத்துக்காட்டுகின்றன. இதுவரையிற் சிற்பிகள் பிரேயூஸ் (Piraeus) அல்லது அத்தீனியத் துறைமுகத்தில் கிடைக்கப்பெறும் மெதுவான மண்ணுலாகிய சுண்ணும்புக் கல்லையே உபயோகித்தனர். நமது பாக்கியத்தின் காரணத்தால் ஸீயூஸ் மூன்று தலைகளைக்கொண்ட டைபோனைச் (Typhon) சந்திப்பது, எராக்கிளீஸ் ஹைட்ரா(Hydra)வைக் கொல்லுவது போன்ற இக் கலையின் சிறந்த எடுத்துக்காட்டுகளின் சிற்சில பாகங்கள் பத்திரமாகப் பாதுகாக்கப்பட்டுள்ளன. இவை யாவும் முதன் முதலில் எடுத்த முயற்சிகளாகும். இந்தக் கலை நிறைவுடன் தோன்ற இன்னும் நூற்றைம்பது ஆண்டுகள் ஆகும். ஆனல் இப்பொழுது - ஆருவது நூற்ருண்டின் இரண்டாவது பகுதியில் - சிறந்ததும் கடினமானதுமான ஒரு பொருளில் கிரேக்கச் சிற்பிகள் வேலை செய்ய ஆரம்பித்தனர். புதுப்பிக்கப்பட்ட அத்தீனு போலியாஸ் கோவிலிலுள்ள முகட்டில் பாராஸ் தீவில் கிடைக்கப்பெறும் (Parian marble) சலவைக் கல்லில் தெய்வங்களுக்கும் அரக்கர்களுக்கும் (giants) நடந்த யுத்தமொன்று செதுக்கப்பட்டுள்ளது. இந்தப் படத்தின் மையத்தில் என்ஸிலாடஸ்ஸை (Enceladus) அத்தீனு தனது ஈட்டியால் கொல்லும் காட்சியை இன்றும் மக்கள் கண்டு வியக்கலாம்.

மலையின்மேல் இருக்கும் கோவில் திருவிடத்தைவிடப் பெரியதொரு வேலையைக் கொடுங்கோலன் திட்டமிட்டான். மலையிலிருந்து கீழேயும், சேம அரணிலிருந்து தென்கிழக்காயும், ஈலிஸஸ் நதிக் கரையின்மேல் ஒலிம்பியன் ஸீயூஸிற்காக ஒரு பெரிய டோரிக் கோவிலைக் கட்ட ஆரம்பித்தான். இவன் துவங்கினனே அன்றி, இவனாவது இவனுடைய பிள்ளைகளாவது இதை முடிக்கவில்லை. ஆதென்ஸ் தனது உன்னத நிலையை அடைந்த காலத்தில் பிஸிஸ்ட்ரேட்டஸ்ஸின் மற்றப் பல அவாக்களைப் பூர்த்தி செய்தாலுங்கூட இந்தத் திட்டமானது மிகவும் பிரம்மாண்டமாயிருந்ததால் இதை முடிக்க வேண்டும் என்று முற்படவேயில்லை. இந்தப் பழைய திட்டத்தின்படியல்லாமல், ஒரு புதிய உருவத்தில் இது முழுவதும் மற்ெருரு காலத்தில் முடிக்கப்பட்டது. ஐரோப்பா முழுவதையும் தன் காலின்கீழ்க் கொண்டு வந்த ஒரு புதிய ஆதிக்கம், தன்னுடைய ஆட்சியின்கீழ் ஆதென்ஸையும் கிரீஸையும் கொண்டுவந்தது. அப்பொழுதே இந்தக் கோவில் முடிவு பெற்றது. அங்கு மிகுந்த அழகிய வேலைப்பாடுகளையுடைய தலைப்பகுதிகளைக் கொண்டு சில தூண்கள் உயர்ந்தோங்கி நிற்கின்றன. இவை யாவும் ரோமாபுரியின பேரரசர் ஒருவரின் வேலையாகும். ஆனல் பல தலைமுறைகளைச் சேர்ந்த

அத்தீனியர்கள் (இந்த வரலாறு அவர்களைப்பற்றியதே யாகும்) அங்கு வேலைப்பாடுகள் இல்லாத டோரிக் தூண்களைத்தான் பார்த்துவந்தனர் என்பதை நாம் மறக்கக்கூடாது. இவைகள் தாம் இந்தக் கொடுங்கோலனின் செல்வச் செருக்கையும் பேரவாவையும் காட்டும் அழிவுச் சின்னமாகும். இந்தக் கொடுங்கோலன், நகரத்திற்கு அத்தீனியர்கள் யோசித்துச் செய்ய முடியாதபடி பெரிய காரியங்களைச் செய்தான்.

சமயத்தைப் பொறுத்த எல்லாக் காரியங்களிலும் பிஸிஸ்ட்ரேட்டஸ் நெறி தவருதவனும் வெறியார்வ முடையவனும் இருந்தான். இவனுடைய குமாரர்கள் இவனைக் காட்டிலும் ஒருபடி மேலாக இருந்தனர். இவன் டையோனிஸஸ் (Dionysus) வழிபாட்டிற்குச் செய்த செயலானது மிகவும் நல்ல பயன்களை ஈன்றது. ஏரியோபேகஸ் (Areopagos)ஸிற்குத் தென் பாகத்திலுள்ள சதுப்பு நிலத்தில் மதுபானப் பிரியரான இந்தக் கடவுளுக்கு ஒரு பழைய சோவில் திருவிடம் இருந்தது. இந்தக் கோவிலின் கடைக்கால்கள் சிறிது காலத்திற்குமுன்தான் வெளியாக்கப்பட்டன. ஆனல் பிஸிஸ்ட்ரேட்டஸ் இந்தக் கடவுளுக்குச் சேம அரணுக்குச் (Acropolis) சரிவில் ஒரு புதிய கோவிலைக் கட்டுவித்தான். இதனுடைய சின்னங்கள் இன்னும் முழுவதும் மறைந்து போகவில்லை. இந்தப் புதிய கோவிலின் சார்பில் பிஸிஸ்ட்ரேட்டஸ் 'நகரத்தின் பெரிய டையோனிஸியா' (Great Dionysia of the City) என்ற ஒரு புது விழாவை ஆரம்பித்து வைத்தான். இந்த விழாவானது பழைய விழாவாகிய லென்யியா (Lenaea) என்று சொல்லப்படும் 'திராட்சை ரசம் பிழியும் செக்கு' விழாவின் சிறப்பை மறைத்துவிட்டது. லென்யியா விழா இன்றும் சதுப்புநிலக் கோவிலில் இளவேனிற் காலத்தின் முதல் நாட்களில் நடைபெற்று வருகின்றது. தெய்வத்தின் ஊழியர்கள் அல்லது சேவகர்கள் என்று அழைக்கப்படும் சத்தியர்கள் (Satyrs) வெள்ளாட்டுத் தோல்களைப் போர்த்துக்கொண்டு, தங்களுடைய வெள்ளாட்டுப் பாட்டுகளைக் கூட்டமாக நின்று பாடி, பலி பீடத்தைச் சுற்றிச் சுற்றி நடனமாடுவதே இந்த டையோனிஸியக் விழாக்களின் முக்கியக் கூறுகும். காலப்போக்கில் பாட்டுகளை இயற்றுபவரும் நாட்டியமாடுபவர்களின் தலைவரும் மற்றவர்களிடமிருந்து தம்மைத் தனிப்படுத்திக்கொண்டு, பாட்டுகளின் நிகழ்ச்சிகளில் வரும் கதையுறுப்பினரில் ஒருவராகத் தம்மை எண்ணிக்கொண்டும், அந்த நிலைமைக்கு ஏற்ற உடையை அணிந்துகொண்டும் மற்றவர்களுடன் உரையாடுவார். கிராமங்களில் கொண்டாடப்படும் விழாக்களில் இவ்வித ஆட்டங்கள் தனியாரின் முயற்சியாலும் பணத்தாலும் நடத்தப் பெற்றன. ஆனல்

நகரத்தில் இவை பெரிய டையோனிஸியாவின் விழாவில் சட்ட முறைப்படி சேர்க்கப்பட்டன. இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட பாடகர்களின் கூட்டங்கள் பரிசுக்காகப் போட்டியிடும் 'துயர நிகழ்ச்சி'ப் (tragic) போட்டியாக இவைகள் அரசின் ஆதரவின்கீழ்க் கொண்டு வரப்பட்டன. சத்தியர் (Satyrs)களின் வெவ்வேறு கதாபாத்திர பாகங்களைப் பிரித்து, அவர்களுடைய எளிய செய்கைகளை உண்மையான நாடகங்களாக அமைப்பது ஒரு தலைமுறைக் காலத்தின் வேலையாயிருந்தது. செய்கை முறைக்குக் கொண்டுவர டையோனிஸஸ்ஸுடன் தொடர்பில்லாப் புராணக் கதைகள் தேர்ந்தெடுக்கப்பட்டன. நடனக்காரர்கள் பழைய 'பாக்கிக்' (bacchic) வெள்ளாட்டு ஆடைகளில் வராமல், தங்கள் கதாபாத்திர பாகங்களுக்கு ஏற்ப உடை அணிந்தனர். முழு நாடக ஆட்டமும் மூன்று காட்சிகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. ஒவ்வொரு காட்சிக்கும் தங்களுடைய ஆடைகளை நடனக்காரர்கள் மாற்றினர். கடைசியில்தான் இவர்கள் தங்கள் வெள்ளாட்டுப் போர்வையில் காட்சியளித்துத் துன்பகரமான நாடகக் காட்சியொன்றைப் பழைய சத்தியர்களின் முறைப்படி நடத்திக் காட்டுவர். நடனக்காரர்களின் தலைவர்களின் மிதமிஞ்சிய முக்கியத்துவம் படிப்படியாகக் குறைந்தது. இப்போது மற்றுமொரு நடிகன் புகுத்தப்பட்டான். சில விவரங்கள் நமக்கு மறைந்திருந்த போதிலும் மேலே கூறிய விதமாகவே பிஸிஸ்ட்ரேட்டஸ் காலத்து வெள்ளாட்டுப் பாடல்கள் ஈஸ்கைலஸ் காலத்துத் துன்பகர நாடகங்களாக மாறின.

பிஸிஸ்ட்ரேட்டஸ்ஸின் காலத்தில் டையோனிஸஸ்ஸின் வழிபாடு மக்களால் விரும்பப்பட்டு வந்தது என்பதைக் குயவர்களின் தொழிற்சாலைகளிலிருந்து காணலாம். எக்ஸிகியாஸ்ஸும் (Exekias) அவருடன் சேர்ந்த ஓவியக் கலைஞர்களும் இக் காலத்தில் கறுப்பு உருவங்களை ஜாடிகளில் தீட்டினர். இவர்களுக்கு மற்ற எல்லாக் காட்சிகளைக்காட்டிலும் டையோனிஸஸ்ஸின் கதைகளில் காணப்படும் காட்சிகளானவை அதிகமாகப் பிடித்தன. எழில் பொருந்திய இப் பாத்திரங்களிலிருந்து வரலாற்றாராய்வில் ஈடுபாடுள்ளவன் மற்றொன்றையும் அறிந்துகொள்வான். பிஸிஸ்ட்ரேட்டஸ் காலத்து ஜாடிகளில் ஏராக்கிளீஸின் செயல்கள் அதிகமாகத் தீட்டப்பட்டிருக்கின்றன. தீஸியூஸின் செயல்களை நாம் காண்பதரிது. பிஸிஸ்ட்ரேட்டர்களின் வீழ்ச்சிக் காலத்தின் போதும், மலர்க் குவளைகளின்மேல் வர்ண வேலைப்பாடுகள் செய்கின்ற பொற்காலம் துவங்கும் முன்னும் தீஸியூஸ் மக்களால் விரும்பப்பட்ட ஒரு பெரிய அட்டிக் வீரனுனன். சிவப்பு உருவங்களைத் தீட்டும் முறையை அநுசரித்த இதை யூப்ரோனியஸ்

(Euphronius) முதலிய பெரிய ஓவியக் கலைஞர்கள் சிறு கோப்பைகளில் தீட்டியிருக்கும் ஓவியங்களில் நாம் காணலாம். பிஸிஸ்ட்ரேட்டஸ்ஸினுடைய கட்சியின் இருப்பிடமாகிய வடக்கு அட்டிகாவின் குன்றுகள்நிறைந்த பாகத்துடன் தீஸியூஸுக்கு ஒரு தனித் தொடர்பு இருந்தது என்பதை நாம் நினைவுபடுத்திக் கொண்டால், தீஸியூஸை மேன்மைப்படுத்தினது பிஸிஸ்ட்ரேட்டஸ்ஸினுடைய கோட்பாட்டின் பயனுயிருக்கலாம் என்று நாம் யூகிக்கக்கூடும்.

தெய்வங்களை மேன்மைப் படுத்துவதில்மாத்திரம் கவலை கொள்ளாமல், ஆதென்ஸ் நகரத்தின் நீர்வள ஆதாரம் முதலிய எளிய வேலைகளிலும் கொடுங்கோலன் ஈடுபட்டிருந்தனன். அக்ராபோலிஸ் என்ற சேம அரணுக்கு மேற்கிலும், தென்மேற்கிலும் காணப்படுகின்ற ஏரியோபேகஸ்ஸுக்கும் பினிக்ஸுக்கும் இடையிலுள்ள பாறைகளாலாகிய பள்ளத்தாக்கில் இவன் அமைத்த நீர் அளிப்பு முறை சிறிது காலத்திற்குமுன் தெரிய வந்தது. இலிஸஸ் நதியின் மேல்தீரத்திலிருந்து நீர் ஒரு கட்டுக் கால்வாய்மூலம் இந்தப் பள்ளத்தாக்கிலுள்ள ஒரு பெரிய தொட்டியில் கொண்டு சேர்க்கப்பட்டது. ஆதென்ஸின் இந்தப் பாகத்தில்தான்-அதிலும் முக்கியமாகப் பழைய ஆதென்ஸ் நகரத்திற்குத் தெற்கு மேற்காகிய பாகங்களில் - பிஸிஸ்ட்ரேட்டஸ் அக்ராபோலிஸில் கட்டுவித்த கட்டடங்கள் மட்டுமன்றிப் பிஸிஸ்ட்ரேட்டஸ் காலத்துக் கற்களாலாகிய மற்ற எல்லாச் சின்னங்களும் நின்றன. ஆனல் பிஸிஸ்ட்ரேட்டஸ் கட்டியதோடு நில்லாமல் இடிக்கவும் முற்பட்டான். இவன் ஆதென்ஸ் நகரத்தின் பழைய கோட்டை மதிலை இடித்தான். இதன் பயனுக ஏறத்தாழ ஐம்பது ஆண்டுகளுக்கு ஆதென்ஸ் நகரைச் சுற்றிச் சுவர்களே இல்லை.

## 3. ஸ்பார்ட்டாவின் வளர்ச்சியும் பெலோப்போனீஸியன் கூட்டுக்குழுவும்

கொடுங்கோலனொருவன் ஆதென்ஸின் விதியை உருவாக்கிக் கொண்டிருந்தபோது ஸ்பார்ட்டாவின் ஆற்றல் பெலோப்போனீஸஸ்ஸின் அரசியல் நோக்கத்தை மாற்றியது. ஆரும் நூற்ருண்டின் மத்தியில் ஸ்பார்ட்டா தன் வடக்கு அயலகத்தார்களாகிய டேகியா (Tegea), ஆர்காஸ் (Argos) மேலும் வெற்றிகள் பெற்றது. இவைகளின் பயனுக இந்தத் தீபகற்பத்தில் ஸ்பார்ட்டா தலைசிறந்ததும், அதிகாரங்கள் அனைத்தும் கொண்டதுமான ஓர் அரசாயிற்று.

கிழக்கு ஆர்க்கேடியாவில் கடல் மட்டத்திற்குமேல் பெரியதான ஒரு சமவெளி இருக்கின்றது. இந்தச் சமவெளிக்கு வடக்கி

லுள்ள கிராமங்கள் யாவும் ஒன்றாக இணைந்து மான்டினியா (Mantinea) என்ற நகரத்தை உண்டுபண்ணின. சமவெளிக்குத் தெற்கேயுள்ள கிராமங்கள், இவ்விதமாக டேகியா (Tegea) என்னும் நகரை உண்டுபண்ணின. ஸ்பார்ட்டா படிப்படியாக டேகியாவின் எல்லையை நெருக்கிக்கொண்டேயிருந்தது. இதன் விளைவு ஒரு நீண்ட யுத்தமாகும். இந்த யுத்தமானது ஒரு சுவையான புராணக் கதையுடன் இணைக்கப்பட்டிருக்கிறது. லாக்கோனியாவின் வீரனான ஆரெஸ்டெஸ் (Orestes) டேகியாவில் புதைக்கப்பட்டான் என்ற மரபை இந்தப் புராணக் கதை தழுவியுள்ளது. டெல்பிக் தெய்வமொழி கூறுமிடத்தில் ஸ்பார்ட்டர்கள் தங்களுக்கு ஆர்க்கேடியாவில் வெற்றி பெற இடமுண்டா என்று கேட்ட கேள்விக்குக் கடவுள் அவர்களின் கையில் டேகியாவை ஒப்படைப்பார் என்ற உறுதி மொழியைப் பெற்றார்கள். இந்தப் பதிலின் பயனாக ஸ்பார்ட்டர்கள் டேகியர்களைப் பிடித்துக் கட்டுவதற்கான விலங்குகளைத் தம்முடன் எடுத்துக்கொண்டு டேகியாவை நோக்கிச் சென்றனர். அங்கு இவர்கள் படுதோல்வியுற்று, அதே விலங்குகளால் டேகியர்களிடம் கட்டுண்டு, டேகியாவின் சமவெளியை உழும்படி கட்டாயப்படுத்தப்பட்டனர். டேகியாவைக் காப்பாற்றுகின்ற குல தெய்வமாகிய அத்தீனா ஏலியா (Athena Alea)வின் கோவிலில் ஸ்பார்ட்டர்கள் கட்டுண்ட அதே விலங்குகள் தம்முடைய நாட்களிலும் தொங்கிக்கொண்டிருந்ததாக எரோடட்டஸ் (Herodotus) கூறுகிறார். யுத்தம் தொடர்ந்தது; தோல்விக்குமேல் தோல்வியடைந்த ஸ்பார்ட்டர்கள், கடைசியில் மறு முறையும் தெய்வமொழியை அறிய டெல்பிக்குச் சென்றனர். அங்கு ஆரெஸ்டெஸ்ஸின் எலும்புகளைத் தம்முடன் எடுத்துத் திரும்பினால் வெற்றி கிடைக்கும் என்று கூறப்பட்டது. வீரன் புதைக்கப்பட்ட இடத்தைப் பற்ற ஓர் அடையாளங்கூடக் கிடைக்கப் பெறாததனால் ஸ்பார்ட்டர்கள் திரும்ப ஒரு முறை கடவுளின் மொழியைக் கேட்டார்கள். இந்தத் தடவை 'தெய்வ மொழியானது' தெளிவில்லாத புதிர் போன்ற வார்த்தைகளினால் பொதியப்பட்டுப் பின்வருமாறு கொடுக்கப்பட்டது:

> 'ஆர்க்கேடியாவின் குன்றுகளுக்கிடையே காணப்படும் சமவெளி நிலத்தில் டேகியா இருக்கின்றது. இங்கு அடிப்பவரும், அதற்குப் பதில் அடி கொடுப்பவருமாகிய இரு தரப்பினர் நேருக்கு நேராக நின்று அழுகையையும் கூக்குரலையும் இரு பக்கங்களிலும் எழுப்பிச் சண்டையிட்டனர். இந்த இடத்தில் நீங்கள் தேடுகின்ற அகமெம்னனின் குமாரனாகிய ஆரெஸ்டெஸ்ஸின் சடலம் புதைந்து கிடக்கின்றது. இச் சடலத்தை எடுத்துக்கொண்டு வீடு திரும்புவீராகில், வெற்றி பெறுவீர்!'

இந்தத் தெய்வமொழியும் இவர்களுக்கு அவ்வளவாக உத வியை அளிக்கவில்லை. ஆனால் டேகியாவுடன் நடந்த போர் தாற்காலிகமாக நிறுத்தப்பட்டபோது லிக்காஸ் (Lichas) என்ற ஸ்பார்ட்டன் ஒருவன் டேகியாவில் இருந்தான். இவன் கரு மானொருவன் பழுக்கக் காய்ச்சிய இரும்பை அடிப்பதைப் பார்த் துக்கொண்டிருந்தான். இவனுடைய வியப்பைப் பார்த்த கருமான் இவனுடன் உரையாட ஆரம்பித்து, தான் தன் முற்றத்தில் ஒரு கிணறு தோண்ட ஆரம்பித்ததாகவும், அங்கே ஏழு முழ நீளத்தில் ஒரு பிணப் பெட்டியையும் அதற்குள்ளே அதே நீளமுள்ள ஒரு பிணத்தையும் பார்த்ததாக வும், பின் பிணப்பெட்டியை அது இருந்த இடத்திலேயே வைத்து மூடிவிட்டதாகவும் சொன்னான். தெய்வ மொழியின் புதிருக்குத் தான் விடையைக் கண்டுபிடித்தாகிவிட்டது என்று ஊகித்துக் கொண்ட லிக்காஸ், ஸ்பார்ட்டாவிற்குத் திரும்பி, தான் கண்டு பிடித்ததை மற்றவர்களுக்கு அறிவித்தான். மனமில்லாத கரு மானிடமிருந்து அவனுடைய முற்றம் வாடகைக்கு வாங்கப்பட் டுப் பின் பிணப்பெட்டி தோண்டி எடுக்கப்பட்டு, எலும்புகள் லாக்கோனியாவிற்குக் கொண்டு சேர்க்கப்பட்டன. இதன்பின் டேகியா கைப்பற்றப்பட்டது. இங்குக் கதைகளிலிருந்து உண் மையில் நடந்த செயல்களைக் கண்ணுறுகின்றோம். ஆர்க்கேடியா வின் ஆட்சி நிலம் மெஸ்ஸீனியாவைப்போல் நடத்தப்படவில்லை. இந் நிலம் லாசிடீமோனியாவின் நிலப் பகுதியில் இணைக்கப்பட வில்லை. இது ஸ்பார்ட்டாவைச் சார்ந்திருக்கும் ஓர் அரசாயிற்று. டேகியா எப்பொழுதும் ஒரு துணைப்படையைத் தனது வெற்றி வேந்தர்களாகிய ஸ்பார்ட்டன் இராணுவத்திற்கு அளித்துவந்தது. மற்றும் தன்னுடைய நிலப் பகுதியில் மெஸ்ஸீனியர்கள் மற்றும் ஒருவரையும் நுழைய விடமாட்டேன் என்றும் ஸ்பார்ட்டாவுக்கு டேகியா வாக்குறுதி அளித்தது.

இந்தக் காலத்தில், கூரறிவுக்குப் பெயர் பெற்ற சிலோன் (Chilon) என்னும் பெரியார் ஸ்பார்ட்டாவின் ஞானகர்த்தாவாக விளங்கினார். இதே காலத்தில்தான் லாக்கோனியாவின் வட கிழக்கு எல்லையில் சச்சரவுக்குரிய இன்னாருடையது என்றில்லாமல் தைரியாடிஸ் (Thyreatis) என்னும் இடத்தை ஆர்காஸிடமிருந்து பலவந்தமாக ஸ்பார்ட்டா எடுத்துக்கொண்டு கடைசியாகத் தனது எல்லையைச் சரியாக அமைத்தது. எல்லைப் பிரதேசத்தில் இரண்டு நாட்டு இராணுவங்களும் சந்தித்தன. ஆனால் ஸ்பார்ட் டாவின் மன்னர்களும் ஆர்காஸின் தலைவர்களும் கூடி ஆலோசித்து இந்த வழக்கைத் தீர்ப்பதற்கு இரு தரப்பாரும் ஒவ்வொரு பக்கத் திலும் முந்நூறு வாகை வீரர்களைத் தேர்ந்தெடுக்க வேண்டு

மென்றும் இந்த வீரர்கள் போர்தொடுக்கவேண்டுமென்றும், இதில் எந்தப் பக்கம் வெற்றியடைகின்றதோ அதற்கே சச்சரவுக்குரிய அந்த நிலம் சேரும் என்று ஒரு முடிவுக்கு வந்தனர். போர் மூண்டது. கடைசியில் ஒரு ஸ்பார்ட்டனையும் இரண்டு ஆர்கைவ் வீரர்களையும் தவிர மற்ற அறுநூறு வீரர்களும் மாண்டனர். ஆர்காஸ் வீரர்கள் தமது வெற்றியைத் தெரிவிக்க ஓடினார்கள். ஆனால் ஆத்ரையேடிஸ் (Othrayades) என்ற அந்த ஸ்பார்ட்ட வீரன் அங்கேயே தங்கி ஒரு வெற்றிச் சின்னத்தை நிறுவினான். எப்படி இருந்தாலும் இந்தத் தேர்வு முறை உபயோகமற்றதாயிற்று. ஏனென்றால், இரு தரப்பாரும் வெற்றி தங்களுடையதே என்று உரிமை கொண்டாடினர். இதனால் மீண்டும் போர் மூண்டது. இதில் ஆர்காஸ் மக்கள் படுதோல்வியுற்றனர். தைரியாடிஸ்தான் ஸ்பார்ட்டா கடைசியாக ஈட்டிய நிலப்பகுதியாகும். இதிலிருந்து ஸ்பார்ட்டா தன் கொள்கையையே மாற்றிக்கொண்டது. புதிய நிலப்பகுதிகளை அடைவதை இலக்காக வைக்காமல் ஸ்பார்ட்டா பெலோப்போனீஸஸ் முழுவதையும் லாசிடிமோனியாவின் செல்வாக்கின் எல்லைக்கு உட்பட்டதாகச் செய்ய முற்பட்டது. இந்தக் கொள்கையில் ஏற்பட்ட மாறுதலை நாம் ஸ்பார்ட்டா டேகியாவிடம் கொண்ட செயல் தொடர்பிலிருந்து அறிகிறோம்.

ஆர்காஸின் தோல்வி ஸ்பார்ட்டாவை இந்தத் தீபகற்பத்தின் தலைமைப் பதவிக்கு உயர்த்தியது. ஆர்காஸ், அக்கியா ஆகிய இவ்விரண்டு அரசுகளைத் தவிர மற்றெல்லாப் பெலோப்போனீஸிய அரசுகளும் தளர்ச்சியான ஒரு கூட்டு இணைப்பில் சேர்க்கப்பட்டன. இந்த அரசுகள் யாவும் இராணுவத் துணைப்படைகளைப் பொது நலத்திற்குத் தருவதாக வாக்குறுதி யளித்தன. இந்தக் கூட்டு இணைப்பிற்கு லாசிடிமோனியா தான் தலையாக நின்று விளங்கியது. கூட்டு இணைப்பின் கூட்டங்கள் ஸ்பார்ட்டாவில் தான் நடைபெற்றன. ஒவ்வோர் அரசும் பிரதிநிதிகளை அனுப்பி வைத்தது. கொரிந்து ஆர்காஸின் விரோதியாயிருந்ததால், அதிவிரைவில் இக் கூட்டு இணைப்பில் சேர்ந்தது. ஆனால் கொரிந்துவின் வாணிப எதிரியான ஈகைனு தீவோ ஆர்காஸின் நட்பு நாடாயிற்று. முன்னமேயே பெரியாண்டர் எப்பிடாரஸைக் கைப்பற்றி ஆர்கைவ் மக்களுக்கு மிகுந்த துயரத்தை விளைவித்தார். எப்பிடாரஸை எடுத்துக்கொண்டதால் ஆர்கைவ் மக்களுக்கும் ஈகைனுவுக்கும் இருந்த தொடர்பு அறுக்கப்பட்டது. இங்குப் பூசந்தியில் பிரபுக்களின் ஆட்சி மீண்டும் ஏற்படுத்தப்பட்ட அடுத்த அரசாகிய மேகாரா கூட்டு இணைப்பில் சேர்க்கப்பெற்றது. எங்கும் சிறுகுழு ஆட்சி நிலைநிறுத்தப்பெறுமாறு ஸ்பார்ட்டா

தனது செல்வாக்கை உபயோகித்தது. எங்கும் மக்களாட்சிக்கு ஸ்பார்ட்டா ஆதரவளிக்க முற்படவில்லை. மேற்கூறியவற்றால் ஸ்பார்ட்டாவின் மேலாட்சி பெலோப்போனீஸிய அரசுகளின் அரசியல் அமைப்பில் பெரிய விளைவுகளை ஏற்படுத்தியது.

வட கிரீஸில் தெசலியர்கள் சீணிக்கலாயினர். எனவே, ஆறுவது நூற்றாண்டின் இரண்டாவது பகுதியில் ஸ்பார்ட்டா கிரீஸிலேயே மிக வலிமையுள்ள அரசாயிற்று. பிஸிஸ்ட்ரேட்டஸின் ஆட்சிக்காலம் முழுவதும் ஸ்பார்ட்டா ஆதென்ஸிடம் மிகவும் தோழமைக் கட்டுப்பாடுகளுடன் விளங்கியது. ஆனால் அந்தக் கொடுங்கோலனே வென்றால் ஆர்காஸிடமும் நல்ல தொடர்புகளைக் கொண்டிருந்தான். ஆர்காஸின்மேல் நேராக மோதுவதற்கு ஆதென்ஸிற்குக் காரணம் யாதும் இல்லை. ஆனால் ஆதென்ஸிற்கும் ஈகைனாவிற்கும் இடையேயுள்ள எதிர்ப்பானது ஆர்காஸையும் ஆதென்ஸையும் இயல்பாகவே பிரிக்க நேர்ந்தது. பிஸிஸ்ட்ரேட்டஸ் பதவிக்கு வருவதற்குச் சிறிது காலத்திற்குமுன் அத்தீனியர்கள் ஈகைனா தீவில் தம் படைகளை இறக்கினார்கள். ஆனால் இவை ஆர்காஸின் உதவியால் துரத்தப்பட்டன. தனக்கு அருகிலுள்ள இந்தத் தீவினுடன் சச்சரவில்லாமல் தடுப்பதும், ஆர்காஸினுடன் தோழமையாயிருத்தலுமே பிஸிஸ்ட்ரேட்டஸின் கொள்கையாகும். ஆனால் இவர்களுக்கிடையே இருந்த ஆழ்ந்த பகைமை, அட்டிக் மட்பாண்டங்களை ஆர்காஸிலும் ஈகைனாவிலும் இறக்குமதி செய்யக்கூடாது என்ற வாணிபத்தடை நமக்குத் தெளிவாகக் காட்டுகின்றது. ஆர்கைவ் ஹீரா கோவிலைத் தோண்டி எடுத்த பொழுது கிடைக்கப்பெற்ற பொருள்கள் இந்தப் பகைமை பொருந்திய தடையின் பயனைக் காட்டுகின்றன. பிஸிஸ்ட்ரேட்டஸ் காலத்தனவும் அல்லது பிஸிஸ்ட்ரேட்டஸ் இறந்ததற்கு ஐம்பது ஆண்டுகளுக்குப்பின் உள்ள காலத்தனவுமான அட்டிக் மட்பாண்டங்களின் ஓடுகள் இங்குக் கிடைக்கவேயில்லை என்பது தான் இதற்குப் பெரிய சான்றாகும்.

## 4. பிஸிஸ்ட்ரேட்டர்களின் வீழ்ச்சியும் ஸ்பார்ட்டாவின் குறுக்கீடும்

பிஸிஸ்ட்ரேட்டஸின் மறைவுக்குப்பின் அவனுடைய மூத்த குமாரனான ஹிப்பையஸ் அவனுடைய பதவியை அடைந்தான். ஹிப்பார்கஸ் அரசாங்கத்தில் இவனுக்கு உதவியளித்தான். ஆனால் தெசாலஸ் அரசியலில் பங்கு ஏதும் எடுக்கவேயில்லை. உள்நாட்டு வெளிநாட்டு விவகாரங்களில் பிஸிஸ்ட்ரேட்டஸின்

பொதுவான கொள்கைகளே தொடர்ந்து கையாளப்பட்டன. ஆனால் ஆதென்ஸின் அரசவையானது இலக்கியத்தில் அதிகமாக ஈடுபடலாயிற்று. தெய்வமொழிக் கூறல்களைப் பயின்ற ஹிப்பையஸும், ஹிப்பார்கஸ்ஸும் தற்காலப் பண்புகளைப் பார்க்கிலும் அதிகமானவைகளை அறிந்திருந்தனர். இவர்களுடைய அரசவைக்கு மிகப் பெரிய கவிஞர் பலர் வந்து கூடினர். பலர் கூடிப் பாடக்கூடிய துள்ளற் கலிப்பாடல்கள் (choral odes) இயற்றுவதில் வல்லுநரான சியாஸ்(Ceos)ஸிலுள்ள சைமனிடீஸ் (Simonides) நல்ல நண்பரும், திராட்சை ரசம், காதல் முதலியவற்றைப் புகழ்ந்து பாடுபவருமான டீயாஸ் (Teos) ஸிலுள்ள அனக்கிரியான் (Anacreon), டித்திராம்ப் என்னும் கவிகளை ரசமாக அமைப்பதில் கீர்த்தி பெற்று, 'ஸ்' என்னும் சப்தம் வராமலே பாக்களை எழுதி இன்புறுத்திய ஹெர்மியானி(Hermione)யைச் சேர்ந்த லாஸஸ் (Lasus) முதலிய பெரியோர்கள் ஹிப்பார்கஸ்ஸால் அழைக்கப்பட்டும், வரவேற்கப்பட்டுமிருந்தனர். ஆனோமாக்ரிட்டஸ் (Onomacritus) என்ற சமய ஆசிரியர் அந்தச் சமுதாயத்தில் தலைசிறந்தவராகத் திகழ்ந்தார். ஹோமரே பாடியதாகச் சொல்லப்படும் காவியப்பதிப்பைப்பற்றிக் குறிப்பிடும்போது இவரைப்பற்றிய குறிப்பு வந்திருக்கிறது.

கொடுங்கோலர்களுக்கு விரோதமாக முதலில் வீழ்ந்த மோசமான இடியானது ஒரு தனிப் பொறாமையால் ஏற்பட்டதேயன்றிப் பொதுவான அதிருப்தியினால் ஏற்பட்டதல்ல வென்றாலும் இதன் விளைவுகள் கடைசியில் கொடுங்கோலாட்சியின் வீழ்ச்சியில் முடிவடைந்தன. ஹிப்பார்க்கஸ்[2] ஹார்மோடியஸ் (Harmodius) என்ற அழகான வாலிபனுக்கும் அவனுடைய காதலன்பனான அரிஸ்டோஜிட்டன் (Aristogiton) என்பவனுக்கும் தன்னுடைய நடத்தையால் கோபமூட்டியதாகச் சொல்லப்படுகிறது.—இந்த நிகழ்ச்சியைப்பற்றிப் பலவிதமான விவரங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன—ஹிப்பார்க்கஸ் ஹார்மோடியஸ்ஸின்மேல் மோகங்கொண்டதாகவும், ஆனால் ஹார்மோடியஸ் மறுத்துத் தள்ளவே, ஹிப்பார்க்கஸ் பழிவாங்குவதற்காக ஹார்மோடியஸ்ஸின் தங்கையை அகில அத்தீனிய ஊர்வலத்தின்போது, 'பூக்கூடையைத் தூக்கக் கூடாது' என்று தடை சொல்லிப் பழித்ததாகவும் சொல்லப்படுகிறது. இதன்பின் ஹார்மோடியஸ்ஸும் அரிஸ்டோஜிட்டனும் கொடுங்கோலர்களைக் கொல்லச் சதிசெய்து, அவர்களை அந்த ஊர்வலத்திலேயே ஒரு நாள் கொல்லத் திட்டமிட்டனர். ஏனென்றால், ஊர்வலத்தின்போது மக்கள் யாவரும் ஒருவருக்கும்

[2] மற்றொரு கதையின்படி, தெசாலஸ்.

சந்தேகம் ஏற்படாதபடி ஆயுதங்களுடன் அங்கும் இங்கும் திரியலாம். முதல் அடி விழுந்ததும், குடிமக்கள் யாவரும் தம் சுதந்தரத்திற்காக முன்வந்து சேர்வார்கள் என்ற எண்ணத்தினுல் இந்தச் சதியில் அதிகப் பேர்களை இவர்கள் சேர்க்கவில்லை. நேரம் கூடி வரும்போது சதிகாரர்களில் ஒருவன் வெளிப்பக்கத்திலுள்ள குயவனுடைய தொழிற்சாலையினருகில் ஹிப்பையஸ்ஸுடன் பேசிக்கொண்டிருப்பதை மற்றவர் கண்டனர். கண்டதும், சதியானது காட்டிக் கொடுக்கப்படுகின்றது என்ற முடிவுக்குத் திடீரென வந்து மற்றச் சதிகாரர்கள், ஹிப்பையஸ்ஸைத் தாக்குவதை விட்டுவிட்டு, விலைக்களத்திற்கு (market place) ஓடி அங்கு லீயோக்கோரியனின் (Leokorion) பக்கத்தில் நின்ற ஹிப்பார்க்கஸ்ஸைக் கொன்றனர். கூலிப் படையினர்கள் ஹார்மோடியஸ்ஸை வெட்டி வீழ்த்தினர். அப்பொழுது தப்பியபோதிலும், பிறகு அரிஸ்டோஜிட்டன் பிடிக்கப்பட்டு, சித்திரவதை செய்யப்பட்டு மாண்டான்.

அந்தச் சமயத்தில் எவரும் சதிகாரர்களுக்கு இரக்கம் காட்டவில்லை; அவர்களுக்காக உணர்ச்சிவயமாகவுமில்லை. ஆனுல் இந்தச் செயலானது ஹிப்பையஸ்ஸின் அரசாங்கத்தில் பெரியதொரு மாறுதலை ஏற்படுத்தியது. இந்தச் சதித்திட்டத்தின் கிளைபோன்ற அமிசங்கள் எங்கெல்லாம் பரவியிருக்கின்றனவோ அல்லது எவ்வாருன ஆபத்துகள் தமக்கு அண்மையில் நேர உள்ளனவோ என்று தெரியாமல் திகைத்த ஹிப்பையஸ் கொடூரமானவனும், சந்தேகப்படுகிறவனுமான கொடுங்கோலனுக (despot) மாறினுன். கடற்கரையில் ஓர் இடமிருந்தால் எந்த நேரத்திலும் தப்பி ஓடிவிட முடியும் என்ற நோக்கத்துடன் இவன் மியூனிசியாவை (Munychia) அரண்களால் வலுப்படுத்தினுன். அதுவுமன்றி இவன் பாரசீகத்தின்மீது தன் கண்களைச் செலுத்தினுன். ஏனெனின், இங்கு ஒரு புது அரசானது தன் வலிமையைக் கிரேக்க உலகத்தார் உணரும்படி உயர்ந்து தோன்றியது. இச் சமயத்தில் அத்தீனியர்களில் பலர் இவனை வெறுக்கவும், இவனுடைய கொடுங்கோலாட்சியை உதறித் தள்ளவும், ஹார்மோடியஸ், அரிஸ்டோஜிட்டன் என்பவர்களைக் கொடுங்கோலரைக் கொன்றவர்கள் என்று பாராட்டவும் முற்பட்டனர்.

கொடுங்கோலாட்சியைத் தள்ளிப்போடுவதற்கு மூலகாரணமாயிருந்தவர்கள் ஆல்க்மியோனிட் குடும்பத்தைச் சேர்ந்த பிரபுக்களாவர். இவர்கள் ஆதென்ஸிற்குத் திரும்பிவர விரும்பினுர்கள். ஆனுல் பிஸிஸ்ட்ரேட்டர்கள் இருக்கும்வரையில் தம்மால் வர முடியாதென்பதையும் அவர்கள் உணர்ந்தார்கள்.

டெல்பியிலுள்ள குருக்கள்மாருடன் இவர்கள் நெருங்கிப் பழகி வந்தார்கள். இப்போது இந்தப் பழக்கத்தைத் தமக்கு அநுகூலமாகப் பயன்படுத்தலாயினர். அப்போலோவின் பழைய கோவில் எதிர்பாராதவிதமாகத் தீயினால் அழிக்கப்பட்டது.[3] அதிகச் செலவில் புதியதொரு கோவிலைக் கட்டத் தீர்மானம் செய்யப்பட்டது. அகில கிரேக்கச் சந்தா வசூலிப்பு ஒன்றுக்கு ஏற்பாடாயிற்று. இதன்மூலம் வேண்டியதில் நான்கில் ஒரு பகுதிப் பணம் சேர்க்கப்பட்டது. எஞ்சிய பாகம் டெல்பியின் சொத்துக்களிலிருந்து எடுக்கப்பட்டது. இந்த வேலையின் குத்தகையை ஆல்க்மியோனியர்கள் எடுத்தார்கள். கோவிலின் முன்புறம் போராஸ் தீவிலுள்ள கற்களினால் கட்டப்படவேண்டும் என்று ஒப்பந்தத்திலிருந்தாலும், ஆல்கிமியோனிடர்கள் தமது சொந்தச் செலவில் பாராஸ் தீவின் சலவைக் கற்களால் கட்டினர் என்று வரலாறு ஒன்று வழங்குகின்றது. கிரேக்க உலகத்தில் இது ஒரு பிரசித்தி பெற்ற கோவிலாயிற்று. அத்தீனியக் கவி ஒருவர் லோக்ஸியாஸின் தூண்கள் பொருந்திய இவ்வில்லத்திலுள்ள, ''வெட்டும் பார்வையுடைய இரண்டு அழகிய முகங்களை'ப்பற்றிப் பாடியுள்ளார். மேலும், இவர் இங்குக் காணப்படும் வீரர்கள் பெரிய அருவருப்பான விலங்குகளைக் கொல்லும் செயல்களை விளக்கும் போதிகைச் சிற்பங்களையும், தெய்வங்கள் அரக்கர்களை ஒழிப்பதைக் காட்டும் சிற்பங்களைக் கொண்ட முகடுகளையும் வெகு விரிவாக விவரித்துள்ளனர்.[4] இப் புதிய கோவில் முடியும் தருவாயில் அல்லது முடிந்த சிறிது காலத்திற்கெல்லாம் டெல்பியின் புனிதக் கட்டிடங்களைச் சார்ந்த ஒரு புதிய கட்டடம் அதிகச் செலவில் கட்டப்பட்டுச் சேர்க்கப்பட்டது. சிப்னஸ் (Siphnos) தீவின் மக்கள், தங்கள் தங்கச் சுரங்ககங்களிலிருந்து வெட்டியெடுத்த செல்வத்தின் ஒரு பகுதியை, பூமியின் மையம் என்று அழைக்கப்படும் டெல்பியில் தமக்கொரு கருவூலத்தை ஏற்படுத்தச் செலவிட்டனர். சிறிது காலத்திற்குமுன் கிடைக்கப்பேற்ற அழிவுச் சின்னங்கள் இதன் அழகிய வேலைப்பாடுகளின் சிறப்பைக் காட்டுகின்றன. இந்தக் கட்டடம் சிப்னியர்களின் செழிப்பான நிலையை நமக்கு எடுத்துக் காட்டுகின்றது போலும். இக் கட்டடம் கட்டிய நூறு ஆண்டுகளுக்கெல்லாம், இவர்களுடைய தங்கச் சுரங்கங்கள் கடல்

[3] 300 தாலந்துகள் (talants) அல்லது 100,000 பவுண்டுகள். பணமுடையுள்ள அந்தக் காலத்தில் பெரிய தனவந்தர்கள் என்று சொல்லப்படுகிறவர்களின் சொத்தானது மிகவும் குறைவாக இருந்தது. ஆகையால், இந்தத் தொகையானது நம் காலத்தைவிட ஆறு அல்லது ஏழு மடங்குதான் அதிகமாக இருந்திருக்கக்கூடும்.

[4] 'ஐயோன்' என்பதில் யூரீபைடிஸ் கூறியுள்ளார்.—185 Sqq.

மட்டத்திற்குக் கீழே குடைவு படவே, நீர் உள்ளே சென்று இவர்களது செல்வத்துக்கு அடிப்படையாக இருந்த தங்கம் கிடைக்க வழி இராமற்போயிற்று.

இந்தக் கோவில் கட்டப்படும்போது ஆல்க்மியோனியர்களின் கையில் எப்பொழுதும் பெரும பணத்தொகைகள் இருந்தன. இவர்களுடைய பகைவர்கள், இத் தொகைகளைக்கொண்டு ஆல்க்மியோனியர்கள் கூலிப்படைகளைத் திரட்டினர் என்று கூறினார்கள். இவர்களுடைய முதல் முயற்சி பலிக்கவில்லை. பியானிடி(Paeanidae) அக்கார்னி முதலிய இடங்களைப் பார்த்து நிற்பதுபோன்ற பார்னெஸ் மலையின் உச்சியிலுள்ள லீப்ஸிடிரியான் (Leipsydrion) என்ற வலிமை மிகுந்த இடத்தை இவர்களும், இவர்களைச் சேர்ந்த நாடு கடத்தப்பட்ட பிறரும் கைப்பற்றினர். ஆனால் தொகையில் இவர்கள் அதிகமாயில்லாத காரணத்தாலும், அதே நேரத்தில் மக்களுக்குக் கொடுங்கோலனைத் துரத்திவிட்டபின் பிரபுக்களின் சிறுகுழு ஆட்சியை நிறுவ விருப்பமில்லாத காரணத்தாலும் இவர்கள் போர்க்களத்திற்குச் சென்று போர்புரிய முடியவில்லை. இவர்கள் சீக்கிரத்தில் தமது அரணை விட்டுவிடவும். அட்டிகாவை விட்டு ஓடிவிடவும் கட்டாயப்படுத்தப்பட்டனர். வெளி நாடுகளின் உதவியால்தான் தம்முடைய திட்டம் முடிவுபெறக்கூடும் என்று நன்றாக அறிந்த இவர்கள், தமது செல்வாக்கின் மூலம் டெல்பிக் தெய்வ மொழி கூறுமிடம் சென்று, ஸ்பார்ட்டாவைத் தங்களுக்கு உதவி செய்யும்படி வற்புறுத்த வேண்டினர். அதன்படி, ஸ்பார்ட்டர் எப்போதும் டெல்பிக் கடவுளை எதைக் குறித்தும் அறிவுரை கோரினால் அப்பொழுதெல்லாம் அவர்களுக்குக் கிடைத்த உத்தரவு 'முதலில் ஆதென்ஸை விடுவி' என்பதேயாகும்.

பிஸிஸ்ட்ரேட்டர்கள் ஸ்பார்ட்டாவுடன் நட்பாயிருந்தார்கள் என்று நாம் முன்பே அறிந்துள்ளோம். ஹிப்பையஸ் தன் சகோதரனின் கொலைக்குப்பின் ஸ்பார்ட்டாவுடன் உள்ள நட்பானது சிதைவுபடாதபடி இருக்க அரும்பாடுபட்டான். ஆல்க்மியோனியர்களின் குலத்திற்கு இக் காலத்தில் மேகாக்ளீஸின் மகனாகிய கிளைஸ்தினீஸ் தலைவராயிருந்தார். டெல்பியன் செல்வாக்கின் உதவியால் ஆல்க்மியோனியர்களின் அரசியல் சூழ்ச்சித்திறம் உரம்பெற்றது. ஆதென்ஸ் விடுதலையை விரும்பினாலும், இல்லாவிட்டாலும், ஸ்பார்ட்டர்கள் ஆதென்ஸைக் கொடுங்கோலனிடமிருந்து விடுவிக்க உடன்பட்டனர். ஒரு வேளை பாரசீகத்துடன் ஹிப்பையஸ் கொண்டுள்ள செயல் தொடர்பு அவர்களைச் சந்தேகத்திற்கு உள்ளாக்கியிருக்கலாம். ஹிப்பையஸ் தன் மகளாகிய ஆர்கிடைஸி (Archedice)யைப் பாரசீக அரசவையில் அதிகச் செல்வாக்குடைய லாம்சேக்கஸ்ஸின் (Lampsacus) கொடுங்கோல

னுடைய மகனுக்குத் திருமணம் செய்திருந்தார் என்பது குறிக்கத் தக்கதே.

ஆங்கிமோலியஸ்ஸின்(Anchimolius)கீழ் ஸ்பார்ட்டர்கள் எடுத்த முதல் படையெடுப்பைத் தெசலியர்களின் குதிரைப் படையைக்கொண்டு ஹிப்பையஸ் முறியடித்தார். ஆனல் ஸ்பார்ட்டர்கள் கிளியோமீனஸ் (Cleomenes) என்பவரின்கீழ் மறுமுறையும் படையெடுத்தனர்; இவர்கள் தெசலியர்களைத் தோற்கடித்து ஹிப்பையஸ்ஸை அக்ராபோலிஸ் ஆகிய சேம அரணில் முற்றுகையிட்டனர். ஒருவருக்கும் தெரியாது வெளி நாட்டிற்கு அனுப்பிய தன் மக்கள் தன் பகைவர்களின் கையில் அகப்படவே, ஹிப்பையஸ் ஒப்பந்தத்தின்மேல் சரணடைந்தான். 'இவனுடைய மக்கள் யாவரும் இவனுக்குத் திருப்பிக் கொடுக்கப் படவேண்டும்; இவனும் ஐந்து நாட்களுக்குள் அட்டிகாவை விட்டுப் போய்விட வேண்டும்' என்பதே அந்த ஒப்பந்தத்தின் நிபந்தனைகளாம். இவனும் இவனுடைய குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் அனைவரும் சீஜியத்திற்குப் (Sigeum) போய்விட்டனர். சேம அரணுகிய அக்ராபோலிஸில் பிஸிஸ்ட்ரேட்டர்கள் யாவரும் தமது குடியுரிமையை (atimia) என்றும் இழந்தனர் என்ற தீர்ப்பைக்கொண்ட ஒரு தூண் நிறுத்தப்பட்டது.

இவ்வண்ணம் கொடுங்கோலர்கள் ஆதென்ஸில் விழுந்தனர். ஸ்பார்ட்டாவின் உதவியால் ஆதென்ஸ் விடுதலை பெற்றது. பிற்காலத்தில் தனது சுதந்தரத்தை உயர்வாகக் கருதும்போது, ஆதென்ஸ் தான் சுதந்தரம் அடைந்தவிதத்தையும் அப்போது ஏற்பட்ட சூழ்வினைகளையும் மறக்க அவாக்கொண்டு, ஹார்மோடியஸ், அரிஸ்டோஜிட்டன் இவர்களது முயற்சியைப்பற்றிப் பெரிதாக யோசித்ததிலும் வியப்பு ஒன்றுமில்லை. சுதந்தர உணர்ச்சியை ஊட்டும் மதுபானப் பாடல் ஒன்று கொடுங்கோலனைக் கொன்ற இரு நண்பரையும் சிறப்பித்துக் கூறுகின்றது. எல்லாருடைய வாய்களிலும் ஹார்மோடியஸ், அரிஸ்டோஜிட்டன் என்ற பெயர்கள் தாண்டவமாடின. அன்டினுர் (Antenor) என்ற திறமைவாய்ந்த சிற்பி, கொடுங்கோலனைக் கொன்ற இந்த இருவரையும் நினைவு கொண்டாடும் நோக்கத்துடன் சிலை ஒன்றைச் செதுக்கினுர். இந்த நிகழ்ச்சிக்குச் சிறிது காலத்திற்கெல்லாம் இச் சிலையானது கடைவீதிச் சதுக்கத்திலே உயர்ந்த இடத்தில் நிறுத்தப்பெற்றது.

தனது விடுதலைக்காக அத்தீனியன் குடியாட்சி ஏதோ ஒரு பொருளைக் கொடுக்க வேண்டியதாயிற்று. ஸ்பார்ட்டாவைத் தலையாகக் கொண்ட பெலோப்போனீஸஸ்ஸின் கூட்டுக் குழுவில் ஆதென்ஸ் ஓர் உறுப்பாக வேண்டியதாயிற்று. இவ்விதமாக

ஸ்பார்ட்டா அத்தீனிய விவகாரங்களில் குறுக்கிட ஓர் உரிமை பெற்றது. இப் புதிய கடமையானது கூடிய சீக்கிரத்தில் மற்று மொரு போராட்டத்திற்கு வழி கோலிற்று.

## 5. கிளியோமீனஸ் மன்னனும் ஸ்பார்ட்டாவின் இரண்டாவது குறுக்கீடும்

ஆதென்ஸை விடுவித்த கிளியோமீனஸ் மன்னரது பிறப்பின் விநோதத்தைப்பற்றிக் கூறுவதில் சற்று நேரம் ஈடுபடுவோம். இவருடைய தகப்பனுராகிய அனக்ஸாண்ட்ரிடாஸ்(Anaxandridas) தம் உடன்பிறந்தாரின் மகளை மணந்தார். ஆனுல் அவளுக்குப் பிள்ளைகள் பிறக்கவில்லை. ஏஜிட் வமிசம் முடிவடையக் கூடாது என்று கவனம் கொண்ட ஈபார்கள் அவளை விலக்கி வைக்கும்படி யாக அனக்ஸாண்ட்ரிடாஸை வற்புறுத்தினுர்கள். அவர் மறுத் துப் பேசவே அவரைத் திரும்பவும் இரண்டாவது மணம் செய்து கொள்ள வேண்டுமென்று அவர்கள் கட்டாயப்படுத்தினுர்கள். அவரும் மறுமணம் செய்துகொண்டார். இதன் விளைவாகக் கிளி யோமீனஸ் பிறந்தார். இதற்குப்பின், இவ்வளவு காலமும் பிள்ளை யில்லாத முதல் மனைவி, டோரியியஸ் (Dorieus) என்ற மகனை ஈன்றெடுத்தாள். இவள் பின்னுல் லியோனிடாஸ் (Leonidas) கிளியோம்ப்ரோட்டஸ் (Cleombrotus) என்ற வேறு இரு மக்களை யும் அனக்ஸாண்ட்ரிடாஸுக்குப் பெற்றுள். இவர்களைக் குறித்து நாம் இனிமேல் அடிக்கடி பார்க்கலாம். கிழவனுகிய அரசன் இறந்ததும் மூத்த மகனுகிய கிளியோமீனஸ் பட்டம் ஏற வேண்டும் என்று சட்டமாயிற்று. மன்னனுக வேண்டுமென்றிருந்த டோரி யியஸ் ஸ்பார்ட்டாவைவிட்டு வெளியே போக வேண்டிய தாயிற்று. பொருளை ஈட்டுவதற்காக இவன் கடலைத் தாண்டிச் சென்றுன். லிபியாவில் (Libya) ஒரு குடியேற்ற நாட்டை நிறுவும் எண்ணத்துடன் துணிச்சல் பொருந்திய ஒரு படைக்குத் தலைமை தாங்கி மேற்கே சென்றுன். பின்பு க்ரோடானு(Croton)க் கும் சிபேரிஸ்(Sybaris)ஸுக்கும் இடையே நடந்த யுத்தத்தில் க்ரோடானியருடன் சேர்ந்து யுத்தம் புரிந்தான். இதன்பின் ஸிஸிலியின் தென்மேற்குப் பாகத்தில் ஒரு குடியேற்ற நாட்டை அமைக்க அங்குச் சென்றுன். அங்கே கார்த்தஜீனியர்களுடனும் அவர்களுடைய நேச தேசத்தவரான எலிமியர்களுடனும் புரிந்த போரில் உயிர் நீத்தான்.

ஐம்பது ஆண்டுகளுக்குமுன் கொடுங்கோலாட்சி தோன்றிய தன் காரணமாகத் தீர்க்கப்பட முடியாமல் போன அரசியல் சிக்கல்களை, கொடுங்கோலன் துரத்தி அடிக்கப்பட்ட பின்னர் அத்தீனியர்கள் கவனிக்கலாயினர். செயல்முறைக்குக் கொண்டு

வரும்படி எப்படிச் சோலானின் அரசியல் அமைப்பை மாற்றி அமைப்பது என்பதே முக்கியப் பிரச்சினையாகும். ஹிப்பையஸ் துரத்தப்பட்டு, ஸ்பார்ட்டர்கள் தம் நாடு திரும்பியவுடனே, சோலான் வகுத்த மக்களாட்சி முறையை முற்றுப்பெறுத படி தடுத்த பழைய தீமைகள் மீண்டும் தலைநீட்டின. பிரபுக்களும் செல்வாக்கு நிறைந்த குடும்பங்களும் ஏவிய கட்சிப் போராட்டங்கள் துவங்கின. ஆல்க்மியோனியக் குலத்தைச் சேர்ந்த கிளைஸ்தீனிஸ்[5] அவருடைய எதிரியான ஐஸோகோரஸ் என்பவரும் தலைமைதாங்கிய கட்சிகள் பழைய கடற்கரைச் சமவெளியாகிய இரு கட்சிகளின் உறுப்பினரையே கொண்டு விளங்கின. கிளர்ச்சிக்கு மூல காரணமாய்க் கிளியோமீனஸ் இருந்ததால், கொடுங்கோலரின் குடும்பத்தை இரகசியமாய் ஆதரித்துவந்த யாவரும் இயல்பாகவே ஐஸோகோரஸை ஆதரித்தனர். முதலில் இந்தப் போராட்டம் ஐஸோகோரஸ்ஸிற்கு அநுகூலமாயிருந்தது. ஐஸோகோரஸ் பிரதம நடுவர் பதவிக்குத் தேர்ந்தெடுக்கப்பெற்றார். ஆனால் இது ஒரு சிறிய காலத்திற்குத்தான். கிளைஸ்தினீஸ் தமது பக்கத்திற்கு அதிகப்படியான பேர்களைச் சேர்த்துக்கொண்டதன்மேல் மேலான இடத்தை அடைந்தார். குடிமையில்லாத ஆயிரக்

[5]ஆறாவது, ஐந்தாவது நூற்றாண்டுகளில் வசித்த ஆல்க்மியோனியர்களின் உறவைக் காட்டும் மரபு வரிசை :



கணக்கான ஏழை மக்களைக் குடிமை உரிமை கொடுப்பதாக வாக்குறுதி அளித்துத் தம் பக்கத்திற்கு கிளைஸ்தினீஸ் சேர்த்துக்கொண்டார். ஆட்களின் எண்ணிக்கையால் கிளைஸ்தினீஸ் வெற்றி அடைந்தார். கிளைஸ்தினீஸின் வெற்றி, சீர்திருத்தத்தின் வெற்றியாயிற்று. இவருடைய எதிரி ஆர்க்காஞ(Archon)யிருந்த ஆண்டில் இவர் புதிய மக்களாட்சிக்குரிய சட்ட நடவடிக்கைகளைப் புகுத்திஞர். ஆட்களின் எண்ணிக்கை அதிகமில்லாத ஐஸாகோரஸ் ஒன்றும் முடியாமல் ஸ்பார்ட்டாவின் உதவியை நாடவேண்டியதாயிற்று. ஐஸாகோரஸ் சொல்லிக் கொடுத்ததன்மூலம், மக்களாட்சியை எப்பொழுதும் விரும்பாத லாசிடீமோனியர்கள், ஒரு சாபத்திற்கு உள்ளான[6] 'ஆல்க்மியோனியர்கள் அட்டிகாவை விட்டுத் துரத்தப்படவேண்டும்' என்று கோரிக்கை விடுத்தனர். எதிர்க்கக்கூட முயலாமல் கிளைஸ்தினீஸ் தமது நாட்டை விட்டு வெளியேறிஞர். ஆஞல் கிளியோமீனஸுக்கு இது போதவில்லை. இரண்டாவது முறையாகக் கிளியோமீனஸ் அட்டிகாவினுள் புகுந்து, ஐஸாகோரஸ் குறிப்பிட்ட 700 குடும்பங்களை ஆதென்ஸிலிருந்து வெளியேறிஞன். புதிய அரசியல் அமைப்பைக் கலைத்துவிட்டு, சிறு குழு ஆட்சியொன்றை ஏற்படுத்த முயன்ருன். ஆஞல் அத்தீனிய மக்கள் அனைவரும் ஆயுதங்கள் ஏந்தி எதிர்த்தனர். கிளியோமீனஸுடன் ஒரு சிறிய போர்வீரக் கூட்டம் மாத்திரம் இருந்ததால், அவனும் ஐஸோகோரஸுடன் அக்ராபோலிஸில் முற்றுகைக்குள்ளாஞன்.

'ஸ்பார்ட்டாவின் ஆர்வமானது தன்னிடம் இருந்தபோதிலும்'[7] மூன்ரும் நாள் சரணடையும்படி கட்டாயப்படுத்தப்பட்டான் கிளைஸ்தினீஸ் இனி கிளைஸ்தினீஸ் நாடுகடத்தப்பட்ட மற்ற அனைவருடனும் ஆதென்ஸுக்குத் திரும்பித் தனது வேலையை முடிக்க முடிந்தது. இந்த நிகழ்ச்சியானது லாசிடீமோனுக்கு ஒரு பெருந் தடையாயிற்று. இப்படி அத்தீனியச் சிறு குழுவினர்கள் ஸ்பார்ட்டாவின் குறுக்கீட்டைத் தேடியதும், ஸ்பார்ட்டாவின் ஆயுதம் அணிந்த போர்வீரர்கள் அத்தீஞவின் மலையைக் கைப்பற்றியதும் முதல் தடவையாகும்; ஆஞல் இதோடு முடிந்து விடவில்லை.

## 6. கிளைஸ்தினீஸின் சீர்திருத்தம்

சோலான் அத்தீனிய மக்கள் ஆட்சியின் நிறுவனங்களைப் படைத்தும், அதன் இயந்திரத்தை அமைத்தும் வைத்தார். ஏன் இந்த இயந்திரம் சரியாக இயங்கவில்லை என்று கவனித்துள்ளோம்.

[6] மேலே நான்காம் அத்தியாயத்தைப் பார்க்கவும்.
[7] அரிஸ்டோபேன்ஸ் Lys. 276.

அத்தீனியக் குலங்களின் அரசியல் வலிமை இதன் வெற்றிக்குப் பெரிய தடையாக இருந்தது. பழைய அயோனிய கோத்திரங்களைச் சோலான் விடாமல் கொண்டதால் குல அமைபபை அரசியல் அமைப்புத் திட்டத்தின் அடிப்படையாக இவர் வைத்துக் கொள்ள வேண்டியதாயிற்று. மக்கள் ஆட்சியை உண்மையான தாக்கவேண்டுமானுல், குலங்களின் அரசியல் முக்கியத்துவங்களை நீக்கிப் புதியதொரு நிர்மாணத்தை ஏற்படுத்த வேண்டியது மிகவும் அவசியம். கடந்த நூற்றுண்டில் உள்ளூருக்குரிய அரசியல் கட்சிகள் வளர ஆரம்பித்தது மற்றுமோர் பயங்கரத் தீமையாகும். இக் கட்சிகளினுல் அட்டிகா அரசியல் பிரிவுகளாகப் துண்டிக்கப்பட்டிருந்தது. முழுவதும் வித்தியாசமான ஒரு புது நிர்மாணத்தை அமைத்தது கிளைஸ்தினீஸின் பெரிய வெற்றியாகும். இந்த நிர்மாண மானது உண்மையிலேயே ஒளி துலங்குகிறதும், பிறகால நிகழ்ச்சிகளில் காட்டியபடி ஒரு செயல் முறைக்குக் கொண்டுவரப்படக் கூடியதுமாயிருந்தது. இது அயோனிய கோத்திரங்களை அடியோடு அழித்தது. மேலும், இது ப்ராட்ரிகள் (phratries) இன ஒற்றுமைக் குழுக்கள், குலங்கள் முதலியவற்றின் அரசியல் செல்வாக்கையும் நீக்கின. மற்றும் நாக்ரெறிகள் (Naucraries) முறையையும் இது ஒதுக்கிவைத்தது. இவ்வண்ணம் சமூகச் செல்வாக்கு அல்லது உள்ளூருக்குரிய கட்சிகள் ஆகிய இவைகளின் அளவுகடந்த வலிமையாலாகிய அபாயத்தை நீக்கியும், பொதுமக்களின் விவகாரத்தில் எல்லாக் குடிகளைக்கொண்ட கூட்டத்திற்கு முக்கியமானதும் நிரந்தரமானதுமான பாகத்தைக் கொடுத்தும் இந்தப் புது நிர்மாணம் உதவியது.

அட்டிகாவின் தரைப்படத்தை எடுத்து அதில் நூறு அல்லது இருநூறு டீம்கள் (demes) அல்லது சிறிய மாவட்டங்கள் இருப்பதைக் கண்டார். இதுவுமன்றி இங்கு இவர் மூன்று இயற்கையான நிலப்பகுதிகளைக் கண்டார். அவையாவன: நகரப் பகுதி, கடற்கரைப் பகுதி, உள்நாட்டுப் பகுதி என்பனவாம். ஒவ்வொரு பகுதியிலுள்ள டீம்களைப் பத்து ட்ரிட்டிஸ்கள் (trittyes) என்ற பத்துத் தொகுதிகளாகப் பிரித்தார். எனவே, மொத்தத்தில் இங்கு முப்பது டிரிட்டிஸ்கள் இருந்தன. ஒவ்வொரு ட்ரிட்ஸ்ஸும் அதனுள் சேர்க்கப்பட்ட முக்கிய டீமின் பெயரைக்கொண்டு அழைக்கப்பட்டது. இதன்பின் இந்த முப்பது ட்ரிட்டிஸ்ஸிலிருந்து ஒவ்வொன்றும் மூன்று ட்ரிட்டிஸ்ஸுகள் கொண்ட பத்துத் தொகுதிகளைத் தோற்றுவித்தார். இந்தப் புதுத்தொகுதிகளில் ஒரு தொகுதியும், ஒரு நிலப்பகுதியிலிருந்து (நகரம், கடல்கரை, உள்நாடு) இரண்டு ட்ரிட்டிஸ்ஸுகளைத் தம்மிடத்தில் கொண்டிருக்கவில்லை. ஒவ்வொரு தொகுதியும் ஒரு 'கோத்திர மாயிற்று. இந்த மூன்று ட்ரிட்டிஸ்ஸு

களிலுள்ள டீம்களின் குடிகள் யாவரும் ஒரே கோத்திரத்தைச் சேர்ந்த சகோதரர்கள் ஆயினர். இவ்வண்ணம் நகரப் பகுதியி லுள்ள ட்ரிட்டிஸ்ஸான கிடாத்தீனேயோனும் (Kydathenaion) உள் நாட்டுப் பகுதியிலுள்ள பீனியாவும் (Paeania), கடற்கரையிலுள்ள மிரின்னஸ் (Myrrhinus)ஸும் ஒன்று சேர்ந்து பாண்டியோனிஸ் (Pandionis) என்ற கோத்திரம் உருவாயிற்று. இவ்விதமாக அமைக் கப்பட்ட பத்துக் கோத்திரங்களும், டெல்பிக் பூசாரி அம்மையா ரால் தெரிந்தெடுக்கப்பட்ட அந்த இடங்களைச் சேர்ந்த வீரர்களின் (eponymous heroes) கொண்டு அழைக்கப்பட்டன.[6] இந்த வீரர்கள் தமக்கென்று பூசாரிகளையும், கோவில் திருவிடங்களையும் பெற்றிருந்தனர். கடைவீதிச் சதுக்கம் அல்லது விலைக்களமாகிய ஆகோராவிலுள்ள அவைக்களத்திற்கு (Senate house) முன் இவர் களுடைய உருவச்சிலைகள் நிறுவப்பட்டன.

கோத்திரங்களும், டீம்களும் தங்களுக்கான அலுவலாளர் களையும் அவைகளையும் ஒரமைப்பாகச் சேர்ந்துள்ள சொத்துக் களையும் உடைய கூட்டவைகள். பதினேழு வயதடைந்ததும் குடியுரிமை பெற்ற மக்களின் பெயர்கள் டீமார்க் (demarch) அல்லது டீமின் தலைவர் வைத்திருக்கும் நகர மக்களின் பட்டியலில் பயபக்தியுடன் எழுதப்படும். இக் கோத்திரங்களைத்தான் படை யமைப்பும் சார்ந்திருந்தது. ஒவ்வொரு கோத்திரமும் ஆப்லிட்டீ ஸைக் கொண்ட ஒரு சிறுபடையையும் குதிரைப் படைத்தொகுதி யொன்றையும் அனுப்பக் கடமைப்பட்டிருந்தது. இவ்விதமான சுதந்தர அரசியல் அமைப்பும் ஒரமைப்பான தேர்தலும் ட்ரிட் டிஸ்ஸுக்குக் கிடையாது. ஆகையால்தான் ட்ரிட்டிஸ்ஸுகளின் பெயர்கள் அலுவல் ஆவணப் பதிவுகளில் காணப்படுகிற தில்லை. ஆனால் இந்த ட்ரிட்டிஸ் கிளைஸ்தினீஸின் முறையானது சுழலுகின்ற, எவரும் காணுத சுழலச்சாக இருந்தது. இதுவே கோத்திரங்களுக்கும், டீம்களுக்கும் இடையிலுள்ள கொக்கி அல்லது இணைப்பு வளையமாகும். இதன்மூலமாக அட்டிகாவின் பல பாகங்களிலுள்ள இடத்தைச் சார்ந்த சமுதாய நலன்களைத் தேடாத பல மக்கள்தொகுதிகள் ஆதென்ஸிற்குக் கொண்டு வரப்பட்டு அங்கே பொதுநலத்திற்காக ஒன்றுசேர்ந்து ஒத்துழைக்க நேர்ந்தது. முற்காலத்தில் சமூகச் சார்புக்கான

[6] பத்துக் கோத்திரங்களின் பெயர்களாவன: எரிக்தீஸிஸ் (Erechthesis), ஈஜிஸ் (Aegis), பாண்டியானிஸ் (Pandianis), லியோன்டிஸ் (Leontis), அகமான்டிஸ் (Acamantis), ஓயினிஸ் (Oeneis), செக்ரோபிஸ் (Cecropis), ஹிப்போதோன்டிஸ் (Hippothontis), ஈயான்டிஸ் (Aeantis), ஆன்டியோகிஸ் (Antiochis) என்பவையே.

நிர்மாணம் ஒன்றை அரசியல் தேவைகளுக்காக மாற்றியமைத்திருந்தனர். அதை இப்போது நீக்கி அதற்குப் பதிலாக அரசியல் காரியங்களுக்கென்றே ஒரு நிர்மாணத்தை ஏற்படுத்தினர்கள். பிறப்பைச் சார்ந்த பழைய நான்கு கோத்திரங்களின் இடத்தை, இப்போது செயற்கையாகப் புவியியலை அமைத்த காரணம்பற்றித் தோன்றிய புதிய பத்துக் கோத்திரங்கள் எடுத்துக்கொண்டன. டீம்களுக்கும் கோத்திரங்களுக்கும் இடையில் இணைப்பின்றியும், தன்னுரிமையின்றியும் காணப்பட்ட ட்ரிட்டிஸ்ஸுகள் சுதந்தரமும் சுறுசுறுப்புமுள்ள 'ப்ராட்ரி'யின் இடத்தை எடுத்துக்கொண்டன. டீம் என்னும் உள்ளூரைச் சேர்ந்த பிரிவானது, சமூகப் பிரிவான கோத்திரத்தின் இடத்தை எடுத்துக்கொண்டது. செயற்கையாலான ட்ரிட்டிஸ்ஸையும் செயற்கையாலான கோத்திரத்தையும் கொண்ட கிளைஸ்தினீஸின் ஏற்பாடானது செயற்கை மிகுதியாக இருந்ததால் நிலைத்திருக்க முடியாது என்று தோன்றுகின்றது. ஆனாலும் இந்த ஏற்பாடு நீடித்திருந்தது. இதற்குக் காரணம் கோத்திரங்கள், டீம்கள் என்றழைக்கப்படுகின்ற இயற்கையான பிரிவுகளின்மேல் சார்ந்திருந்ததுதான். இந்த டீம்களைக் கிளைஸ்தினீஸ் முழு எண்ணிக்கைக்காக குறைக்க முயற்சி செய்யவில்லை.

இந்தச் சீர்திருத்தத்தைச் செயல்முறைக்குக் கொண்டுவரச் காலம் ஆகியிருக்க வேண்டும். இந்தப் புது முறையின்படி தயாரித்த டீம்ஸ்மென் என்ற மக்களின் முதல் பட்டியலானது, பின் சந்ததியாரின் டீமைத் தீர்மானித்தது. ஒரு மனிதன் தனது இல்லத்தை மாற்றி வேறு டீமில் வசிக்கலாம். ஆனாலும், அவன் முதலில் தன் பெயர் காணப்பட்ட டீமிற்கே உரியவனுவான். இதுவரை மக்கள் தங்களை மற்றவர்களிடமிருந்து பிரித்துக் காட்டத் தம் தந்தையரின் பெயர்களையும்[9] ஆவணப் பதிவுகளில் சேர்த்துவந்தனர். ஆனல் இப்பொழுதிலிருந்து அவர்கள் தம் டீம்களின் பெயரைக் கூட்டிச் சேர்த்தனர். எல்லையிலுள்ள எலியுதீரீ (Eleutherae), ஓரோபஸ் (Oropus) நீங்கலாக அட்டிகா முழுவதும் இம்முறையில் சேர்க்கப்பட்டது. இவை இரண்டு மாத்திரம் ஒரு கோத்திரத்தையும் சேராத அடிமை மாவட்டங்களாக நடத்தப்பட்டன.

இப்படிக் கோத்திரங்களை மாற்றியமைத்து வைத்த செயலானது கிளைஸ்தினீஸ் மக்களாட்சியை இரண்டாவதாக நிறுவியவன் என்று அழைக்கப்படுவதற்கு உரிமையளித்துள்ளது. இந்தக்

[9] பிற்காலத்தில் தந்தையின் பெயரையும், டீமின் பெயரையும் கொடுப்பது வழக்கமாயிற்று.

கோத்திர நிர்மாணத்தின் அரசியல் நோக்கமும் முக்கியத்துவமும், சீர்திருத்தப்பட்ட மன்றத்துடன் இது கொண்டிருந்த தொடர்பில் காணக்கிடக்கின்றது. தற்போதுள்ள 'நானூற்றுவர் அவை, (Council of Four Hundred) பழைய நான்கு அயோனிய கோத்தி ரங்களைச் சார்ந்திருந்ததால், கிளைஸ்தினீஸ் புதிய பத்துக் கோத்தி ரங்களின்மேல் சார்புடைய 'ஐந்நூற்றுவர் அவை' ஒன்றை அமைத்தார். ஒவ்வொரு கோத்திரமும் இதற்கு ஐம்பது உறுப் பினர்களை அனுப்பியது. இந்த எண்ணிக்கையில் ஒவ்வொரு டீமும் தனது அளவுக்கு ஏற்றவாறு ஒரு நிலையான எண் ணிக்கையை அனுப்பியது. ஒவ்வொரு டீமும் தெரிந்தெடுத்த பல தேர்வு நாடுபவர்களின் தொகையி லிருந்து ஒரு வேளை இவர்கள் சீட்டுக் குலுக்குதலின்மூலம் தேர்ந் தெடுக்கப்பட்டிருக்கலாம். ஆனால் சில காலத்திற்கெல்லாம் இவ்வித முதல் தேர்வு (preliminary election) ஒழிக்கப்பட்டது. நாற்பது ஆண்டுகளுக்குப் பின், இவர்கள் யாவரும்சீட்டுக் குலுக்கு வதன்மூலமே தேர்ந்தெடுக்கப்பட்டனர். இந்த அவையை விட்டு வெளியேறும் உறுப்பினர்கள், குலுக்குச் சீட்டுமூலம் தெரிந்தெடுக்கப்பட்டவர்களின் தனி வாழ்க்கை, பொது வாழ்க்கையின் நேர்மைகளை எடுத்துக் கூற வேண்டும். அதே சமயத்தில் அவர்களுக்குத் தகுதியற்றவர்களைத் தள்ளிவிடவும் உரிமை இருந்தது. தாம் பதவியை ஏற்கும்போது, 'நகரத்தின் நன்மைக்கானவைகளைக் குறித்தே அறிவுரை கூறுவோம்' என்று உறுதிமொழி கூறுவர். இவர்கள் பதவியிலிருந்து நீங்கும்போது தாம் செய்த எல்லாச் செயல்களுக்கும் பொறுப்பாளிகளாவர்.

அட்டிகாவின் எல்லாப் பாகங்களின் அங்கத்தினரையும் கொண்ட இந்த அவையானது அரசின் தலைசிறந்த ஆட்சிக் குழு வாயிற்று. ''இது பல நடுவர்களுடன் சேர்ந்து பொதுத்துறை விவகாரங்களைக் கண்காணித்து வந்தது.'' ஆர்க்கான்களும், ஏனைய நடுவர்களும் கட்டுப்பாடுகளுக்குள் வைக்கப்பட்டார்கள். ஏனென்ருல், இவர்கள் யாவரும் அவைக்குத் தம் அறிக்கைகளை ஒழுங்காகச் சமர்ப்பிக்க வேண்டுவதுமன்றி, அவையின் ஆணை களையும் ஏற்றுக்கொண்டு அவைகளைச் செயல்முறைக்குக் கொண்டு வரவேண்டும். அரசின் நிதிகள் யாவும் அவையின் கையிலேயே இருந்தன. அபோடெக்டாய் (abodektai) என்ற பத்துப் புதிய நிதி அதிகாரிகள் (ஒவ்வொரு கோத்திரத்திற்கு ஒருவர்) இதன் கட்டளைகளின்கீழ்ப் பணி செய்து வந்தனர். இது முதலிலிருந்தே பொது நிதியைப் பொறுத்த காரியங்களில் நீதி முறையான அதிகாரங்களைப் பெற்றிருந்தது. அதிகாரிகளுக்குத் தண்டம் விதிக்கும் உரிமையும் இதற்கு இருந்தது. மேலும், இந்த

அவையானது மராமத்து அமைச்சாகவும் போர்த்துறை அமைச்சாகவுங்கூடப் பணி செய்து வந்தது. இந்த அவையானது வெளி நாடுகளிடம் பேரங்கள் செய்து வந்ததாலும் அவற்றிடமிருந்து தூதர்களை வரவேற்றதாலும், இதை வெளிநாட்டு அமைச்சு என்றும் நாம் கருத இடமிருக்கின்றது. இந்த மன்றத்திற்குப்போர் மூட்டவோ அல்லது உடன்படிக்கை முடிவு செய்யவோ அதிகாரங்கள் இல்லை. இந்த அதிகாரங்கள் யாவும் பேரவையிடமே (Sovereign Assembly) இருந்தன. இந்த மன்றமானது ஆட்சி முறைக் கூட்டமாக மாத்திரமில்லாது, ஆராய்ந்து தீர்மானிப்பதற்குரிய அவையாகவும் இருந்தது. எல்லாச் சட்டங்களை இயற்றுவதிலும் இதற்குத் தொடங்கிவைக்கும் உரிமை கொடுக்கப்பட்டது. இந்த மன்றத்தின் முன் கொண்டுவரப்பட்டு, ஆராயப்பட்ட தீர்மானங்களே எக்ளீஷியா (Ecclesia) முன் சமர்ப்பிக்கக்கூடும். எக்ஷியாவில் இயற்றப்பட்ட சட்டமானது முதலில் மன்றத்திலிருந்து அவைக்கு 'ப்ரொபூலீயூமா (probuleuma) உருவத்தில் அனுப்பப்பட்ட தீர்மானமேயாகும். இந்த 'ப்ரோபூலியூமா' எக்ளீஷியாவில் பெரும்பான்மையோரின் வாக்குகளைப் பெற்று, ப்ஸெபிஸ்மா (psephisma) அல்லது நாட்டின் சட்டமாக மாறும். மேலும், இந்த மன்றமானது பொதுவாகவும் தனிப்பட்டும் அமைந்த சில நீதிமுறைக் கடமைகளையும் உடையதாயிருந்தது. இது நீதிமன்றமாகச் செயல் புரியும் போது இதன் முன்பும் பேரவையின் முன்பும் குற்றச்சாட்டுகள் கொண்டுவரக்கூடும். இவ்விதமான வழக்குகளில் இம்மன்றமானது தண்டனையைத் தானே விதிக்கலாம் அல்லது மற்ற நீதி மன்றங்களுக்கு இவ் வழக்குகளை மறுபடியும் சமர்ப்பிக்கலாம்.

ஐந்நூறு மக்களைக் கொண்ட ஒரு கூட்டமானது எப்பொழுதும் கூடி, ஆட்சித்துறையின் கடமைகளை வசதியாக நடத்த முடியாது என்பது தெளிவு. எனவே, 360 நாட்கள் கொண்ட ஆண்டானது 10 பாகங்களாகப் பிரிக்கப்பட்டு, ஒவ்வொரு பாகத்திலும் (ஆண்டின் பத்தில் ஒரு பாகத்தில்) ஒரு கோத்திரத்தின் மன்ற உறுப்பினர்கள் பொதுத் துறைப் பணிகளைச் செய்யத் தம்மை ஒரு குழுவாக அமைத்துக்கொள்வர். இந்த ஐம்பது பேரைக் கொண்ட குழுவின் உறுப்பினராக மன்ற உறுப்பினர்கள் 'தலைவர்கள்' என்ற பொருள் கொண்ட ப்ரைடேனீஸ் (Prytaneis) என்றழைக்கப்பட்டனர். இவர்களின் கோத்திரமானது 'தலைமை வகிக்கின்றது' என்று சொல்வது வழக்கு. ஆண்டின் செயற்கைப் பிரிவுகளும் 'ப்ரைடேனீஸ்' (prytanies) என்றழைக்கப்பட்டன.[10]

[10] அதே சமயத்தில் எக்ளீஸியாவின் நிர்மாணத்திலும் சில மாறுதல்கள் செய்யப்பட்டிருக்கலாம். ஆனால் அவை யாவை என்று

குழுவின் தலைவரும் மற்றும் ஓர் உறுப்பினரும், தங்களுடைய ப்ரைடெனி காலத்தில் தோலோஸ்ஸில் (Tholos) நிரந்தரமாக வாழவேண்டும். தோலோஸ் என்பது ஒரு வட்டக் கட்டடம். இங்கே தலைவர்கள் (Prytaneis) பொதுச் செலவில் கூடியும் உண்டும் வந்தனர். மன்றக் கூடத்திற்கு அண்மையில் ஆகோராவின் தெற்குப் பாகத்தில் தோலோஸ் அல்லது ஸ்கைலாஸ் கட்டடம் இருந்தது. ஆர்க்கானின் அலுவலகமாகவும் நகரத்தின் அடுக்களையாகவும் பழைய கட்டடமான ப்ரைடேனியோன் (prytanieon) இருந்து வந்தது.

அரசாங்கத்தின் ஆண்டும்; சிவில் ஆண்டும் ஒன்றுக்கொன்று அதிக மாறுபாடு உடையதாக இல்லாதபடி கிளைஸ்தினீஸ் அறிவு மிகுந்த ஓர் ஏற்பாட்டைக் கண்டுபிடித்தான். சிவில் ஆண்டானது வேனிற்காலத்தில் முடிந்தவரை சங்கிராந்திக்கு அடுத்துவரும் அமாவாசைத் தினத்தன்று துவங்கும். நிலாவைச் சார்ந்த பன்னிரண்டு மாத காலத்திற்கும், சூரியன் சுழல்வதைச் சார்ந்த காலத்திற்கும் உள்ள வேறுபாட்டை நீக்க எட்டு ஆண்டுகள் கொண்ட சக்கரம் உண்டாக்கப்பட்டது. இதில் முதலாவது, மூன்ருவது, ஆருவது ஆண்டுகளில் கூடலான மாதங்கள் இடையில் கலக்கப் பட்டன. ஒரு சாதாரண ஆண்டு 354 நாட்களையும், இடையில் கலக்கப்பட்ட ஆண்டு 384 நாட்களையும் கொண்டிருந்தன. கிளைஸ்தினீஸ் தனது சர்க்கார் ஆண்டை 360 நாட்கள் கொண்டதாக்கிஞன். ஆயினும், இவன் இடையில் கலக்க வேண்டியிருந்தது. ஆனல் முன்னைப்போல் அவ்விதம் அடிக்கடியல்ல. இவன் ஐந்து ஆண்டுகள் கொண்ட ஒரு சக்கரத்தை மேற்கொண்டான். ஒவ்வொரு சக்கரத்திலும் 30 நாட்கள் கொண்டு இடையில் கலந்த ஒரு மாதம் சேர்க்கப்பட்டது. ஆனல் இந்த இடையில் கலந்த மாதம் இந்தச் சக்கரத்தில் ஒரே ஆண்டில் எப்பொழுதும் இடையே புகுத்தப்படுவதில்லை. கிளைஸ்தினீஸ் இதில்தான் தனது ஐந்தாண்டு முறையையும் எட்டாண்டு முறையையும் ஒரே கோட்டிற்குள் அடக்கிஞன். இந்தத் தனிப்பட்ட சர்க்கார் மாதமானது சர்க்கார் சக்கரத்தில் முதல் ஆண்டிலே இடையில் கலக்கப்பட்டது. இந்த முதல் ஆண்டானது, சிவில் சக்கரத்திலுள்ள இடையில் கலந்த ஆண்டுடன் முற்றிலும் பொருத்தமாக அமைந்திருக்க வேண்டும். கி. மு. 503—502இல் (எட்டாண்டுச் சக்கரத்தின்

---

நாம் அறியோம்; ஒவ்வொரு ப்ரைடேனியிலும் பேரவையானது நான்கு முறை ஒழுங்காகக் கூடியது; தேவையானபோது தனிப்பட்ட கூட்டங்களும் நடத்தப்பட்டன என்பதைப் பிற்காலத்தில் இம்மன்றம் பணியாற்றியதிலிருந்து நாம் அறிகிறேம்.

முதலாம் ஆண்டு) கிளேஸ்தினீஸின் புது நிர்மாணம் வேலை செய்யத் துவங்கியது. சிவில் காலண்டரில் முதல் மாதமாகிய ஹெக்காட்டோம்பீயோனின் (Hecatombaeon) முதலாம் தேதியில் இந்தக் கிளேஸ்தீனியன் ஆண்டு துவங்கியது. இந்தக் கிளேஸ்தீனியன் ஆண்டு அதே நாளில் மறுபடியும் நாற்பது ஆண்டுகள் கழித்துத் தான் துவங்கும்.[11]

குடிமையிலிருந்து தள்ளி வைக்கப்பட்ட பல மக்களுக்குக் குடிகளின் உரிமையை அளித்ததில் கிளேஸ்தினீஸ், சோலான் காட்டிய பாதையில்தான் முன்னேறினான். நாட்டிலுள்ள பெரிய பதவிகளுக்கு, வேண்டிய தகுதிகளைப் பொறுத்தவரையில் கிளேஸ்தினீஸ் சோலான் ஏற்படுத்திய கட்டுப்பாடுகளை விடாமல் கொண்டதாகத் தெரிகிறது. வீரத் தொண்டர்களையும் (knights) பென்டகோசியோமீடிம்னை(Pentacosiomedimni)களையும் இவன் ஒரே மட்டத்திற்குக் கொண்டு வந்திருக்கலாம்போல் தோன்றுகிறது. ஆனால் இவர்களுக்குக் கீழ் உள்ள இரு வகுப்புகளும் ஆர்க்கான் பதவியிலிருந்து விலக்கப்பட்டிருந்தன. மூன்றும் வகுப்பு இன்னமும் ஓர் ஐம்பது ஆண்டுகளுக்கு இப் பதவிக்குத் தகுதியற்றதாயிருந்தது.[12] ஆனால் கிளேஸ்தினீஸின் பழமை காக்கும் பண்பானது எளிதில் தவறாக மதிப்பிடப்படலாம். சோலானின் கால நாள் மக்களாட்சியைச் சேர்ந்த சீர்திருத்தவாதியாகப் பணியாற்றி வந்தது. ஆறாவது நூற்றாண்டின் துவக்கத்தில் இருந்ததைவிட அந் நூற்றாண்டின் இறுதியில் ஐந்நூறு 'மெடிம்னை'யின் (படிகள்) விலையானது நாணயக் கணக்கின்படி அதிகக் குறைவாயிருந்தது. வியாபாரமானது பெருகிற்று. மக்களும் பணமுடையவர்களாயிருந்தனர்.

இப் புதிய கோத்திரங்கள் இராணுவ நிர்மாணத்திலும் மாறுதலை உண்டாக்கின. ஒவ்வொரு கோத்திரமும் ஆப்லிட்டர்களைக் கொண்ட ஒரு படையையும், ஒரு குதிரைப் படைத் தொகுதியையும் அனுப்ப வேண்டும். ஆப்லிட்டர்கள் பத்துப் படைத்தலைவர்களால்[13] நடத்தப்பட்டனர். இந்தப் பத்துப் படைத் தலை

[11] கிளேஸ்தினீக் ஐந்தாண்டுத் தொகுதி எப்பொழுதும் 3 அல்லது 8 என்று முடியும் ஆண்டுகளில் துவங்குவது அறியத் தக்கதாகும் (கி. மு. 503, 498, 493 இப்படியாக).

[12] ஆர்க்கான்களை வேலையில் நியமிப்பதில் சோலானின் முறை விட்டுவிடப்பட்டது (2 ஆம் பிரிவைப் பார்க்கவும்). கிளேஸ்தினீஸ் இதனை மறுபடியும் புகுத்தியதாகத் தெரியவில்லை.

[13] இப்படித் தலைவராக விளங்கும் ஸ்ட்ராட்டிகோஸின் (strategos) பதவி பழமையானது. ஆனால் இந்தப் பத்து ஸ்டாட்டிகாய்

வர்களும் மக்களால் கோத்திரத்திற்கு ஒருவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர். பிற்காலத்தில் படைத்தலைவனின் பதவி மிகவும் முக்கியமானதாயிற்று. ஆனால் முதலில் இவர் கோத்திரத்தின் படைத் தலைவராகவே இருந்தார்.

கிரேக்க அரசியல் வல்லுநர்கள் பிரதிநிதிகளைக் கொண்ட அரசாங்கத்தின் முறையை நன்ருக அறிந்திருந்தனர் என்பதைக் கிளைஸ்தினீஸ் ஏற்படுத்திய அத்தீனிய மன்றம் காட்டுகின்றது. தேர்தல் தொகுதிகளின் அளவுக்கு ஏற்றவாறு இடங்களைப் (seats) பத்திரமான முறையில் வழங்கும் பிரதிநிதித்துவத்திற்கு இந்த மன்றமானது ஒரு சிறந்த எடுத்துக்காட்டாகும். இதுவே பெரும்பாலும் அரசின் ஆட்சிக் குழுவாயிருந்தது. ஆனாலும் கிரேக்க அரசியல் வல்லுநர்கள் இந்த முறையை நன்கு அறிந்தபோதிலும், மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளைக் கொண்ட அவைக்குச் சட்டம் இயற்றும் பூர்ண அதிகாரங்களைக் கொடுக்கத் தயங்கினர். இதற்கு முக்கியமான காரணம் என்னவென்ருல், நகர அரசு சிறியதாயிருந்ததால் எல்லாக் குடிகளும் கூடிவருவது ஒரு செயல்முறைக்குக் கொண்டிவரக்கூடிய முயற்சியாகும். எனவே, மக்கள் சட்டம் அளிக்கும் அதிகாரங்களை உடையவர்களாயிருக்கிருர்கள் என்பதைச் சொல்லுக்குச் சொல் சரியாகப் பயன்படுத்திக்கொள்ளலாம். இந்த மன்றமானது சட்டம் அளிக்க முடியாததானுலும், சட்டம் ஏற்படுத்துவதற்கு இதன் ஒத்துழைப்பு இன்றியமையாதது; ஆனல் இதனை மேல்சபை (Second Chamber) அல்லது ரோமர்களுடைய செனெட் (Roman Senate) போனறது என்று கற்பனை செய்வோமானுல், இதன் கடமைகள் தவருகப் பொருள் செய்யப்பட்டிருக்கும். இது மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளைக் கொண்ட பேரவை. நம்முடைய 'அரசாங்கம்' செய்யும் அரசாங்கக் கடமைகளில் சிலவற்றை இந்தப் பேரவையிலிருந்து (முழுவதும் வேறுபட்ட முறையில்) எடுக்கப்பட்ட குழுக்கள் செய்தன. இந்த மன்றமானது சட்டம் இயற்றுவதில் மிகுந்த செல்வாக்கைப் பெற்றிருந்தது. எக்ளீஷியாவின் மேலுள்ள இம் மன்றத்தின் செல்வாக்கைப் பொது மக்கள் சபையின்(House of Commons)மேல் நம் அரசாங்கத்திற்கு உள்ள செல்வாக்குடன் ஒப்பிடலாம். மன்றமானது அனுப்பும் தீர்மானங்களுக்குப் பேரவை அளிக்கும் ஆமோதிப்புகள், பாராளுமன்றம் ஏற்றுக்கொண்ட மசோதாக்களை 'முடி'யானது (Crown) உறுதிப்படுத்துவது போன்று முற்றிலும் சடங்கானவைகளே யாகும்.

---

நிறுவனமானது (கி.மு. 501) கிளைஸ்தினீஸின் சீர்திருத்தங்களின் பயனுலாகியதாகும்.

## 7. மக்களாட்சியின் முதல் வெற்றிகள்

அத்தீனியக் குடியாட்சியானது, முழுவதுமாக ஒரு மக்களாட்சியாக மாறிற்று. இப் புதிய அரசாங்கம் சரியாக ஏற்படுத்தப் படுவதற்குள்ளே அதன் திறமையைக் காட்டும்படி அழைக்கப் பட்டது. அந்த நாட்களில் கிரீஸில் மிகவும் பெரிய மனிதனுக இருந்த கிளியோமீனஸ் மன்னன் சமீபத்தில்தான் அத்தீனிய மக்களின் கைகளில் அகப்பட்டு வருந்திய தாழ்விற்காகப் பழி வாங்க முற்பட்டான். ஒரு கொடுங்கோலனை வீழ்த்திய இவன், மற்ருெருவனை அப் பதவிக்கு உயர்த்தத் தீர்மானித்தான். இவ்வளவு காலமும் சிறுகுழு ஆட்சியை நிறுவ நோக்கங்கொண்ட ஐஸாகோரஸ் (Isagoras) கொடுங்கோலாட்சியை ஏற்படுத்த ஆர்வங்கொண்டு முன் வந்ததாகத் தெரிகின்றது. பீயோஷியர்களுடனும், சால்சிடியர்களுடனும் சேர்ந்து அட்டிகாவின்மீது ஒரு கூட்டுத் தாக்குதல் செய்யக் கிளியோமீனஸ் ஏற்பாடுகள் செய்தான். லாசிடீமோனியர்களும் அவர்களுடைய நேச தேசங்களும் தெற்கேயிருந்து படையெடுத்தபோது பீயோஷியர்கள் சிதிரோன் (Citheron) மலையிலிருந்து இறங்கி வரும்போது, சால்சிஸ் மக்கள் யூரிப்பஸ்ஸைக் கடந்து அட்டிகாவினுள் பிரவேசிக்கவேண்டும் என்பதே இத் திட்டமாகும். இதன் பயனுக அட்டிகாவானது ஒரே சமயத்தில் மூன்று பக்கங்களிலிருந்தும் தாக்கப்படும்.

பெலோப்போனீஸியப் படை தன் இரு மன்னர்களாகிய கிளியோமீனஸ், டிமெராடீட்டஸ் இவர்களது தலைமையின் கீழே பூசந்தியைக் கடந்து, எல்யூஸிஸ்ஸைக் (Eleusis) கைப்பற்றியது. அத்தீனியர்கள் எலியூஸிஸ் சமவெளியை அடைந்தனர். ஆனல் இந்தப் பாகத்திலுள்ள ஆபத்தானது கை கலக்காமலே மறைந்தது. கொரிந்தியர்கள் மறுபடியும் யோசனை செய்ததில் இது அநியாயமானது என்று இந்தப் படையெடுப்பைக் கண்டித்துக் கொரிந்துவுக்குத் திரும்பினர். இக் காலத்தில் ஈகைஞ வாணிபத்துறையில் கொரிந்துவின் மிக வலிமைபொருந்திய எதிரியாயிருந்தது. ஆகையால் ஈகைஞவிற்கு எதிரியாக வளர்ந்துவரும் ஆதென்ஸிற்கு ஊக்கமளிப்பது தனது நலத்திற்கானது என்று கொரிந்து எண்ணம் கொண்டு நடைமுறையில் அதைக் காட்ட முற்பட்டது. கொரிந்தியர்களின் செயலானது இராணுவத்தில் குழப்பத்தை உண்டு பண்ணியது. ஸ்பார்ட்டர்களின் தலைவர்கள் தங்களுக்குள்ளே முரண்பாடு கொள்ளவே, லாசிடீமோனியப் படையின் நிலைமை மோசமாயிற்று. கடைசியில் படை துண்டுதுண்டாகப் பிரியவே கிளியோமீனஸ் ஒன்றும் செய்ய இயலாதவராய் வீடு திரும்ப வேண்டியதாயிற்று. முத தடவை ஆதென்ஸின்மேல் கிளியோ

மீனஸ் சிறுகுழு ஆட்சியை நுழைக்க எடுத்த முயற்சி எப்படித் தோல்வியடைந்ததோ அதேவிதமாகக் கொடுங்கோலாட்சியை நிறுவ அவர் எடுத்த இரண்டாவது முயற்சியும் தோல்வியைப் பெற்றது. இரண்டாவது முறையாக ஸ்பார்ட்டன் பலாத்காரத்திலிருந்து அத்தீனிய மக்களாட்சி காப்பாற்றப்பட்டது. நூறு ஆண்டுகளுக்குப்பின் அதே பலாத்காரம் வந்து நேரப் போகின்றது; கிளியோமீனஸ் லைசாண்டர் தோன்றுமுன் வந்த தூதன் எனலாம்; லைசாண்டர் பின்னுல் சரியாகப் பழி வாங்குவார்!

ஸ்பார்ட்டாவின் திட்டத்திற்குப் பீயோஷியன் தலைவர்கள் உடனே இணங்கினுர்கள். ஏனென்றுல், சமீபத்தில் நடந்த ஒரு நிகழ்ச்சியினுல் அவர்கள் ஆதென்ஸின்மீது கோபமாயிருந்தார்கள். தீப்ஸ் நகரத்தின் மேலாண்மையின்கீழ் ஏற்படுத்தப்பட்ட பீயோஷியன் கூட்டுக்குழுவில் சேராமல், தனது சுதந்தரத்தை எவ்விதத்திலேயும் பேணுவதற்குச் சிதிரோன் மலையில் பீயோஷியாவின் சரிவிலுள்ள ப்ளெட்டியா நகரம் மனவுறுதி கொண்டது. முதலில் ப்ளெட்டியர்கள் ஸ்பார்ட்டாவை உதவிக்காக நாடினர். ஆனுல் ஸ்பார்ட்டா குறுக்கிட விருப்பமில்லாததால், அவர்கள் ஆதென்ஸை அணுகினர். ஆதென்ஸிடமிருந்து உதவியும்பெற்றனர். ஆதென்ஸ், ப்ளெட்டியா ஆகிய இரு நாடுகளின் பரஸ்பர நலத்தைச் சார்ந்த இந்த நீண்ட நட்பின் துவக்கம் இதுவே. பீயோஷியாவில் தனது சுதந்தரத்தைக் காப்பாற்றிக்கொள்ள ப்ளெட்டியா ஆதென்ஸின் உதவியைச் சார்ந்திருந்தது. அதே காலையில் சிதிரோன் மலைக்கு அடுத்த பக்கத்தில் தீப்ஸ் நகரத்திற்கு எதிராகக் காவற் கூண்டுபோல் ஒரு சிறிய நேசநாடு இருப்பது ஆதென்ஸிற்கு மிகவும் பொருத்தமாக இருந்தது. ப்ளெட்டியாவின் பாதுகாப்பிற்காக அத்தீனியர்கள் சென்றனர். ஆனுல் கொரிந்துவின் குறுக்கீட்டினுல் போரின் மிரட்டலானது தடுக்கப்பட்டது. கூட்டுக் குழுவைச் சேர விருப்பமில்லாத பீயோஷிய நகரங்களைத் தீப்ஸ் பலாத்காரம் செய்யக் கூடாது என்று கொரிந்தியர்கள் நடுத்தீர்ப்புச் செய்தனர். ஆனுல் அத்தீனியர்கள் திரும்பும்போது, தீபர்கள் திடீரென்று நம்பிக்கைக் கேடாக இவர்களைத் தாக்கி, ஒரு வெற்றியையும் பெற்றனர். இதன் விளைவாக அவர்கள் அஸோபஸ் நதியைத் தீப்ஸ் நகரத்தின் தெற்கு எல்லையாக ஏற்படுத்தினுர்கள். இந்தப் படைச்செலவின்மூலம் பீயோஷியாவிலே அத்தீனியர்கள் தமக்கு ஒரு புற அரணைக் கொண்டனர். இதுதான் சிதிரோன் மலையின் வடசாரலில் உள்ள ஹிஸ்ஸி (Hysiae) பட்டினம் ஆகும்.

பெலோப்போனீஸியர்களின் படை முன்னேறும்போது, பீயோஷியர்கள் ஹிஸ்ஸியைக் கைப்பற்றி அதற்கு மேற்பக்கத்தி லுள்ள கணவாயைக் கடந்து அட்டிகாவின் மேல்பாகத்திலுள்ள சரிவுகளில் அமைந்துள்ள ஓயினி (Oenoe)யையும் தம்வசமாக் கினர். கிளியோமீனஸும் பெலோப்போனீஸியர்களும் பின்வாங் கியபோது சால்சிஸ் படைவீரர்கள் அட்டிகாவின் வடக்கு டீம்களைக் கொள்ளையிடுவதைத் தடுப்பதற்காக, அத்தீனியன் படைகள் வடக்கே அணிவகுத்துச் சென்றன. பீயோஷியப் படை கள் தமது நாட்டிற்குள் பின்வாங்கி, அங்கிருந்து சால்சிடியர் களுடன் சேர நோக்கங்கொண்டு வடக்கே சென்றன. ஆனால் மிகவும் திறமையுடன் போலிமார்க்கால் நடத்தப்பட்ட அத்தீனி யர்கள் இரண்டு எதிரிகளையும் தனித்தனியே தோற்பித்தனர். ஜலசந்திக்கு அண்மையில் அத்தீனியர்கள் பீயோஷியர்களை வழியில் மறித்து, ஒரு மகத்தான வெற்றியைப் பெற்றனர். இதற்குள் சால்சிடியர்கள் ஜலசந்தியைத் தாண்டி யூபியாவிற்குள் செல்லவே, இவர்களும் அதனைக் கடந்து சென்று சால்சிடியக் குதிரைவீரர்களை மற்றொரு போரில் வென்றனர்.

தோல்வியில் நொந்துபோன சால்சிடியர்கள், பழைய காலத் தில் தாம் எரிதிரியர்களுடன், தம் கைகளில் எப்பொழுதும் இருக்க வேண்டும் என்று போராடிய, செழிப்பான லிலான்டைன் **(Lelantine)** சமவெளியை இப்பொழுது அத்தீனியர்களுக்குக் கொடுக்கும்படி கட்டாயப்படுத்தப்பட்டனர். இது மாத்திரமல்ல; கணக்கற்ற சால்சிடியர்களும், பீயோஷியர்களும் போர்க் கைதி களாக்கப்பட்டுச் சங்கிலிகளால் கட்டுண்டு, தம் நாட்டு மக்கள் தலைக்கு இரண்டு மைனுஸ் (8 பவுண்டுகள்) விடுதலைப்பணம் கொடுத்துத் தம்மை விடுவிக்குமட்டும் அடிமைத்தனத்தின் கசப்பை அநுபவித்தனர். ஸ்பார்ட்ட மன்னன் அநீதியாகத் தமக்கு விரோ தமாகத் தூண்டிவிட்ட மக்களைக் கொடூரமாக அத்தீனியர்கள் நடத்தியிருந்தாலுங்கூட நாம் அத்தீனியர்களுக்கு இரக்கம் காட் டாமல் இருக்க முடியாது. தம் பகைவர்களின் 'அவமதிக்கின்ற தன்மையைத் தணிக்க' உபயோகித்த 'இருண்ட இரும்புச் சங்கிலி' களை அக்ராபோலிஸில் மிகவும் பெருமையுடன் பாதுகாத்து வந்தனர். விடுதலைப் பணத்தில் பத்தில் ஒன்றைக்கொண்டு ஒரு வெண்கல இரதத்தை அத்தீனாவுக்குச் செய்து படைத்தனர்.

டெல்பி கோவில் திருவிடத்தில் இந்த வெற்றியை நினைவு கூரும்படி ஒரு நுழைமாடம் கட்டப்பட்டது. அத்தீனியர்கள் இந்த நுழைமாடத்தையும் அவர்கள் தமது பகைவர்களிடமிருந்து கைவசப்படுத்திய போர்க்கருவிகளையும், பொம்மை உருவங்களை

யும் படைத்தனர் என்று சமீபகாலத்தில் கண்டுபிடிக்கப்பட்ட ஒரு பாழடைந்த கட்டடத்தின் படியில் உள்ள கல்வெட்டுச் சின்னம் பகருகின்றது. இதிலிருந்து அத்தீனியர்கள் சால்சிடியர் களின் கப்பல்களைக் கைப்பற்றி அழித்தது தெரிய வருகின்றது. இந்த வெற்றியானது இருபது ஆண்டுகளுக்குப்பின் ஏற்பட்டிருந் தால் ஆதென்ஸ் இந்தக் கப்பல்களைத் தன் கப்பற்படையுடன் சேர்ந்திருக்கும். ஆனல் தற்போது ஆதென்ஸ் கடலே தனக்குரிய தனிப்பொருள் என்பதை உணரவில்லை.

மக்களாட்சியானது தன்னை மெச்சுகின்ற விதமாகப் பாது காத்துக்கொண்டதல்லாமல், ஒரு நிலப்பகுதியையும் கைவசமாக் கியது. செழிப்பான சால்சிடியன் சமவெளியானது சிறு நிலப் பாகங்களாகப் பிரிக்கப்பட்டு, இரண்டாயிரம் அத்தீனியக்குடிகளுக் குக்கொடுக்கப்பட்டது. இந்த அத்தீனிய மக்கள் தம் இல்லங்களை கடற்காலிற்கு அப்பாலுள்ள இந்தச் செழிப்பான சமவெளியில் அமைத்துக்கொண்டனர். சாலமிஸ்ஸில் க்ளெருக்கியர்களுக்குக் (cleruchs) கொடுக்கப்பட்ட நிபந்தனைகளே இவர்களுக்கும் கொடுத்திருக்கலாம்.

இங்கு வந்து குடியேறியவர்கள் தமது குடிமையின் உரிமை களை விடாமல் கொண்டிருந்தனர். இவர்கள் தம் டீம்களிலும், கோத்திரங்களிலும் உறுப்பினராகவே இருந்துவந்தனர். சாலமினி யர்கள் ஆதென்ஸிற்கு அண்மையில் இருந்தமையால் இவர்கள் அட்டிகாவில் வாழ்ந்த மற்றக் குடிகளைக் காட்டிலும் மிக எளிதில் எக்ளீஷியாவின் கூட்டங்களில் வந்து பங்கெடுக்க முடிந்தது. ஆதென்ஸிற்கும் சால்சிஸ் சமவெளிக்குமிடையே உள்ள தூர மானது ஆதென்ஸிலிருந்து 'சூனிய'த்திற்கு (Sunium) எவ்வளவு தூரமோ அதற்குமேல் இராது.

கடலைக் கடந்து ஒரு புதிய நிலப்பாகம் கைப்பற்றப்பட்டது. ஆனல் இது அட்டிகாவின் நில எல்லைக்குப் பக்கத்திலேயே இருந் தது. இதுவே இவர்கள் ஓரோபஸ் எல்லைப் பிரதேசத்தைக் கைப் பற்றிய முதல் தடவை என்று நாம் கொள்ளலாம். இங்குள்ள மக்கள் தாம் ஹெல்லனிக் இனத்திற்கு ஐரோப்பியப் பெயர் அளித் தவர்கள். இது எரிதிரியாவின் ஆதிக்கத்தின்கீழ் வந்து, எரிதிரியத் திசை மொழியைத் தன் பழக்கத்திற்குக் கொண்டு வந்து, எல்லா விதச் சூழ்நிலையிலும் இதனை விடாது கொண்டு இருந்தது. இதுவே தீப்ஸினுல் இணைக்கப்பட்ட கடைசி நிலப்பாகமாகும். இந்தச் செழிப்பான சிறு சமவெளியானது எப்படி முற்காலத்தில் எரிதிரி

யாவிற்கும் பீயோஷியாவிற்கும் இடையே ஒற்றுமைக் கேட்டை உண்டுபண்ணியதோ அதே விதமாக இப்போது ஆதென்ஸிற்கும் பீயோஷியாவிற்கும் இடையே முரண்பாடுகளை உண்டுபண்ணியது. ஆனல் இப்போது ஏறக்குறைய நூறு ஆண்டுகளுக்கு இது, ஆதென் ஸின் ஆதிக்கத்தின்கீழ் இருக்க வேண்டியதாயிற்று. ஒரோபஸ் மக்கள் ஆதென்ஸின்கீழ் இருந்தார்களே அன்றி அத்தீனியர்களின் கீழ் அன்று. இவர்கள் எலியூதிரி (Eleutherae) மக்களைப் போல ஒரு நாளும் அத்தீனியக் குடிகள் ஆகவில்லை.

# 6. ஈஜியனில் பாரசீகத்தின் முன்னேற்றம்

## 1. பாரசீகத்தின் எழுச்சியும் லிடிய நாட்டின் வீழ்ச்சியும்

மத்தியதரைக் கடலுக்கு அப்பாலுள்ள நாடுகளில் ஏற்படும் பெருங்கேடுகளைக் குறித்துக் கவலைப்படாமல், கிரேக்கர்கள் தம் கடல்களில் நாவாய்களை ஓட்டிக்கொண்டும், தம் நகர அரசுகளில் சட்டம், சுதந்தரம் இவைகளைப் பொறுத்த நிறுவனங்களை இயங்கச் செய்துகொண்டும் இருக்கும்போது, கிழக்கிலே பெரிய வல்லரசுகளின் ஆட்சி வளர்ச்சியடைந்தும் தேய்வு பெற்றும் வந்தது. ஏழாவது நூற்றுண்டில் வலிமை பொருந்திய அசீரியப் பேரரசு தனது முடிவுக் காலத்தை நெருங்கிக்கொண்டிருந்தது. அதனைக் கவிழ்க்கும்படி குறிப்பிட்ட நாடு தோன்றியாயிற்று. ஆனுல் அசீரியாவின் கதையானது கிரீஸின் வரலாற்றில் இல்லாத ஒன்றுகும். ஏனென்றுல், புறம்பாயுள்ள ஒரு மூலையைத் தவிர மற்ற இடங்களில் நினிவேயின் (Nineveh) சீமான்களிடம் நெருங்கிய தொடர்பு கொண்டிலர். சைப்ரஸ்(Cyprus)ஸிலுள்ள கிரேக்க,பினீஷிய சமுதாயங்கள் சிரியாவின் கடற்கரைப் பிரதேசத்தின் செல்வ நிலையில் தொடர்பு கொண்டிருந்தன. ஸார்கானின் (Sargon) ஆட்சிக்காலத்தில் அசீரியாவின் வலிமையும் ஆற்றலும் மிக உன்னத நிலையை அடைந்தன. எட்டாவது நூற்றுண்டின் இறுதியில் ஸார்கான் கடற்கரையின் அருகிலுள்ள நாடுகளைக் கைப்பற்றினுன். 'மேற்குக் கடலில் ஏழு நாள் பிரயாண தூரத்தில் வசித்துவந்த' ஏழு பினீஷிய, பிலிஸ்திய (Philistine) மன்னர்கள் ஸார்டானின்முன் நடுக்கத்துடன் நின்று தமது பணிவைத் தெரிவித்தனர். இவர்கள் யாட்னுன் (Yatnan) என்று அசீரியர்களால் அழைக்கப்பட்ட சைப்ரஸ் தீவின் மன்னர்கள் ஆவர். இவர்களுடைய உண்மைப் பற்றை ஸார்கானே இன்று நாம் காணும் வகையில், 'யாட்னுன் நாட்டிலுள்ள பள்ளத்தாக்கு ஒன்றில்' தாம் நிறுவிய தூணில் பொறித்து வைத்துள்ளார். இப்படிப் பணிந்துபோன மன்னர்களில் கிரேக்கர்களும், பினீஷியர்களும் இருந்தனர். ஒரு தலைமுறைக்குப்பின் அஸ்ஸர்

ஹெட்டான் (Assarhaddon), அஸ்ஸுர்பானிபால் (Assurbanipal) என்ற அசீரிய மன்னர்களுக்குக்கீழ் இருந்த பத்துச் சைப்ரஸ் மன்னர்களின் பெயர்கள் நம்மிடம் இருக்கின்றன. அஸ்ஸர் ஹெட்டான் ஒரு பெரிய வெற்றி வேந்தர். இவர் தாயாகவே தமது அரச பதவியிலிருந்து விலகிக்கொண்டார். அஸ்ஸுர்பானி பால் அமைதியை விரும்பிய மன்னர். இவரைக் கிரேக்கர்கள் சார்டானபாலஸ் (Sardanapalus) என்று அழைத்தனர். இவ் விரண்டு மன்னர்களின ஆவண ஏடுகள் கூறும் குறுநில மன்னர் களில் பாப்போஸ் (Paphos) நாட்டு ஈடியாண்ட்ராஸ், சிட்டியோன் நாட்டுப் பைலகோரஸ் (Pylagoras)[1] என்பவர்கள் காணப்படுகின்ற னர். அசீரியர் வரலாறு ஹெலனிக் உலகத்தின் ஒரு தூரக் கரையைத்தான் தொட்டாலும், அசீரியப் பேரரசை ஒழித்த மக் களின் கதையோவென்றால், இதற்கு நேர் விரோதமாயுள்ளது. கிரேக்கர்களைப் போல ஆரிய மொழியைப் பேசும் மக்களாகிய மிதியரும் (Medes), பாரசீகர்களும் (Persians) கிரேக்க வரலாற்றின் இரண்டு முக்கிய நூற்றாண்டுகளில் கிரேக்கர்களின் எதிரிகளாக இருக்கும் சூழினால் குறிக்கப்பட்டிருந்தனர்.

அசீரியாவிற்குக் கிழக்கே மிதியா நாடு உள்ளது. இதன் ஆதி வரலாற்றைப்பற்றி நமக்கு அவ்வளவாகத் தெரியாத காரணத் தால் அது தெளிவில்லாததாக இருக்கின்றது. இரண்டாவது ஆயிரம் ஆண்டுகளில் வடகிழக்கிலுள்ள பாக்டிரியன் (Bactrian) சமவெளிகளின்மேல் பரவியிருந்ததும், ஆரிய இனத்தைச் சேர்ந்த ஈரானிய வகுப்பு மக்களைக் கொண்டதுமான ஓர் அரசின் பாகமாக அசீரியா இருந்தது என்பதற்குச் சில காரணங்கள் இருக்கின்றன. ஈரானியர்கள் தங்களது உறவினர்களைப் போலவே வானலோகத் திலுள்ள தெய்வங்களையும், வெளிச்சத்தையும் வழிபட்டு வந்தனர். ஆனால் இவர்களுடைய கதிரவன் வழிபாடானது ஸீயூஸின் சம யத்தைவிட வேறு விதமானது. இவர்கள் கதிரவனை வழிபடும் ஏனைய மக்களைவிட 'நெருப்பை' அதிக பக்திவினயத்துடன் கருதி வந்தனர். பிரேதங்கள் நெருப்பைத் தொட்டோ, அல்லது கொதிக்கும் நீர் நெருப்பின்மேல் விழுந்தோ அதனைத் தீட்டுப்படுத்துவதைக் காண அஞ்சினர். இவர் களுடைய நாடெங்கும், இடைவிடாமல் எரிந்து கொண் ருக்கும் பீடங்களைக் கொண்ட கோவில்கள் காணப்பட்டன.

[1] மற்ற எண்மரும் இடாலியோன் (Idalion), சாலமிஸ் (Salamis), சோலி (Soli) குரியோன் (Curion), தாமாஸ்ஸஸ் (Tamassus), சைப்ரஸ்ஸைச் சேர்ந்த ஒரு கார்த்தேஜ் (a Cypriote Carthage), லெட்ரோன (Ledron), நூரீ [Nurii(?)] முதலிய இடங்களின் மன்னர்களாவர்.

நெருப்பை வழிபடுகின்ற இவர்களின் சமயமானது ஜோரோஸ்டர் (Zoroaster) என்ற இவர்களது தீர்க்கதரிசியால் கிட்டத்தட்ட ஒரு தத்துவ சாஸ்திரத்தின் வடிவத்தைக் கொடுக்கப்பட்டதாகும். இவருடைய பெயரானது புராணங்களில் கூறப்பட்டிருந்தாலும், இவர் எக் காலத்தில் வாழ்ந்திருந்தார் என்பது சரியாகத் தெரிய வில்லை. எனினும், இவர் உண்மையிலேயே வாழ்ந்த ஒரு மனிதர் தான்; இவர் புராணத்தால் உண்டாக்கப்பட்ட மனிதர் அல்ல. உலகமானது வெளிச்சத்தின் ஆற்றல்களுக்கும் இருளின் ஆற்றல் களுக்கும் இடையே ஆர்முஸ்ட் (Ormuzd) மகா பிரபுவிற்கும், அஹ்ரிமான் என்ற தீமைநெறிக்கும் நடக்கும் கொடிய போராட் டத்தின் மேடை என்ற கொள்கையை இவர் ஈரானியர்களுக்குள் பரவச் செய்தனர்.

எட்டாவது நூற்றாண்டின் இறுதியில் மீதியர்கள் அசீரியாவின் அடிமைத் தளைக்கு எதிராகக் கிளம்பினர். இவர்கள் டியோஸேஸ் (Deioces) என்பவரின் தலைமையில் இந்தப் போராட்டத்தில் வெற்றி பெற்றுச் சுதந்தரத்தை அடைந்தனர். மக்களின் சுய விருப்பினால் இந்தத் தலைவர் மன்னராகத் தேர்ந்தெடுக்கப்பட் டார். இவர் தமது நாட்டு மக்களை விடுவித்ததுமாத்திரமன்றி அவர்களை ஒன்றுசேர்க்கவும் செய்தார். மிதியா ஒன்றுசேர்ந்த தன் அறிகுறியாக மாபெரு நகராகிய எக்பட்டானாவை (Ecbatana) நிறுவினார். ஏழு மதிற் சுவர்களைக் கொண்ட கோட்டையின் மையத்தில் இவருடைய அரண்மனையும் கருவூலமும் இருந்தன. இவர் மக்களின் பார்வையில் படாது இந்தக் கோட்டையினுள் வாழ்ந்து வந்தார். மக்கள் எழுத்தாலாகிய மனுக்கள்மூலமே இவரை அணுக முடிந்தது.

மிதியாவைத் திரும்பவும் தம் வசப்படுத்த அசீரியர்கள் எடுத்த முயற்சிகளைத் தடுப்பதிலேயே டியோஸேஸின் பின் மரபினர் சிலர் தம் காலத்தைச் செலவிட்டனர். ஆனால் சீக்கிரத்தில் தமது நாட்டின் எல்லைகளுக்கு அப்பால் தம் ஆட்சியைப் பெருகும்படி செய்யக்கூடிய வலிமையுள்ள மன்னர் ஒருவர் தோன்றினார். பிராயோர்ட்டிஸ் (Phraortes), குன்றுகள் நிறைந்த தெற்கிலுள்ள பாரசீகத்தை வென்றார். இப்படி அசீரியாவிற்கும் பாபிலோனி யாவிற்கும் கிழக்கிலும், காஸ்பியன் கடலிற்கும் பாரசீக வளை குடாவிற்கும் இடையிலும் பெரியதோர் ஆரியப் பேரரசு நிறுவப் பட்டது. அசீரியாவைக் கைப்பற்றுவது அடுத்த படியாகும். பிராயோர்ட்டிஸ்ஸிற்குப்பின் பட்டமேறிய சையாக்ஸாரிஸ் (Cyaxares) இந்த முயற்சியில் வெற்றிபெற மிதியாவின் தளவா டங்களைப் புதுமுறையில் அமைத்தார். ஏற்கனவே அசீரியர் களின் பேரரசு முறிந்து வந்ததால் இவரது முயற்சி அப்படி யொன்

றும் நடக்க இயலாததன்று. நிநிவே மன்னர்களின் அடிமைத் தளையை எகிப்தியர்கள் உடைத்தெறிந்தனர். டியோஸேஸ் எதை மிதியாவிற்கு முடித்துக்கொடுத்தாரோ, அதைப் பாபிலோனியர் களுக்கு அளிக்க நாபோபோலாஸ்ஸார் (Nabopolassar) தோன்றி ஞர். நாபோபோலாஸ்ஸாரும் சையாக்ஸாரிஸ்ஸும் ஒன்று சேர்ந் தனர். இவர்களுடைய கூட்டுப் படைகள் அசீரியன் படையைத் தோற்கடித்தன. வெற்றி வேந்தர்கள் பேரரசைப் பங்கிட்டுக் கொண்டனர். எகிப்தின் எல்லைமட்டுமுள்ள தென்மேற்குப் பாகம் பாபிலோனியர்களுக்காயிற்று. அசீரியாவும் மேற்கே ஆசியா மைனரிலிலுள்ள அவர்கள் நிலப் பகுதியும் மீதியாவுடன் சேர்க்கப்பெற்றன.

நாபோபோலாஸ்ஸாருக்குப் பின் பட்டமேறிய நெபுகாத் நேசார் (Nebucadnezzar) காலத்தில், பாபிலோனியா வியக்கத்தக்க புகழையும் சுடரையும் பெற்று ஓங்கி நின்றது. இவர் எகிப்தியர் களைக் கார்கெமிஷ் (Carchemish) என்ற போர்க்களத்தில் வென்று அவர்களைச் சிரியாவிலிருந்து விரட்டியடித்தார். இவர் எருச லேம் (Jerusalem) நகரைத் திடீரெனத் தாக்கி, யூதர்களை அடிமை களாகத் தூக்கிச் சென்றார். இவர் தீரு (Tyre) பட்டினத்தை அதன் அடிப் பாறையின்மேல் நடுங்கும்படி செய்தார். ஆனால் அதை இவரால் கைப்பற்ற முடியவில்லை. இவர் எகிப்தின்மேல் படையெடுத்து அதனைத் தம் வசமாக்கினார். இந்த வெற்றிகளை விட, இவர் தம் நாட்டில் செய்துவைத்த மாபெருஞ் சாதனைகள் மிகவும் புகழ்பெற்றவையாகும். இவர் பாபிலோனியாவை உல கத்தில் மிகப் பெரிய நகராக்கினார். பாபிலோனியாவைச் சுற்றிப் பார்த்த ஒன்று இரண்டு கிரேக்கர்கள் அங்குள்ள அரண்மனைகளை யும், கோவில்களையும் 'தொங்கும் தோட்டங்களை'யும்பற்றி வியப்புறக் கூறிய கதைகளுடன் வீடு திரும்பினர். இந்தத் 'தொங் கும் தோட்டங்கள்' புராண அரசியான செமிராமிஸ் (Semiramis) கட்டியவை என்று சொல்லப்பட்டாலும் உண்மையில் இவை நெபு காத்நேசார் அமைத்த தட்டடிப் (terrace) பூங்காவாகும். ஆனால் நகரத்தைச் சுற்றியுள்ள மிகப் பெரிய சுவர்கள் நெபுகாத் நேசாரின் வல்லமை வாய்ந்த நினைவுச் சின்னங்களாகும். இந்த நகரத்தைச் சுற்றியுள்ள சுவர் ஐம்பது மைல் நீளமென்று கிரேக்க வழிப்போக்கர்கள் கூறியிருக்கின்றனர். எண்ணுக்கடங்காத அடி மைகள் இரக்கமில்லாமல் சவுக்கினால் அடிக்கப்பட்டுத் தமது ஊனையும் உதிரத்தையும் இடைவிடாமலும் தாராளமாகவும் கடும் வேலையில் செலவிடுவதை நாம் எண்ணுங்கால் இந்தப் பாபி லோனியப் பெருமகனைவிட வேறு ஒருவரும் மனித இனத்தின் துயரத்தை அதிகரித்திருக்க முடியாது என்பது திட்டம். இவர்

அதிக ஆண்டுகள் ஆட்சி செய்து பெரும் புகழுடன் மறுஉலகம் எய்தினார். தம் நாட்டிற்கு எந்தப் பாகத்திலிருந்து ஆபத்து நேரிடும் என்று இவர் அறிந்திருந்தார். இவர் பாபிலோனியாவிற்கு வடக்கே, டைக்ரீஸ் நதிக்கும் யூப்ரெட்டீஸ் நதிக்குமிடையே ஒரு கோட்டைச் சுவரை எழுப்பினார். இச் சுவரானது பாபிலோனியாவை அதன் வடக்கு அயலகத்தாராகிய மிதியர்களிடமிருந்து பாதுகாக்கவே கட்டப்பட்டது.

இப் பெரிய பாபிலோனிய மன்னரின் தீரச் செயல்கள் கிரீஸ் நாட்டைப் பாதிக்கவில்லை.[2] சைப்ரஸ்ஸிலுள்ள கிரேக்கர்கள் கார்கெமிஷ் சண்டையின்போது போர்க்கருவிகளின் மோதல் சப்தத்தைக் கேட்டிருக்கலாம். எருசலேம் நகரைக் கைப்பற்றிய செய்திகளைக் கேட்டு மனமுருகியிருக்கலாம்; தீருவின் முற்றுகை இவர்களுக்குக் கிளர்ச்சியை யூட்டியிருக்கலாம். ஆனல் கிழக்கில் நேர்ந்த மாறுதல்கள் மிதியாவின் முன்னேற்றத்தினல் கிரேக்கர்களுடைய பார்வைக்கு அருகில் கொண்டு வரப்பட்டன. சையாக்ஸாரிஸ், ஹாலிஸ் (Halys) நதிக்கரைமட்டுமுள்ள ஆசியா மைனரின் கிழக்குப் பாகங்களைத் தம் ஆற்றலுக்குக்கீழ்க் கொண்டு வந்தார். இந்த நதியானது மிதியாவிற்கும் லிடியாவிற்கும் இடையிலுள்ள எல்லையாயிற்று. மிதியாவின் ஆற்றலை விரிவுபடுத்தலின் அடுத்த நோக்கமானது, லிடியாவைக் கைப்பற்றுதலாகும். போரைத் தொடுக்க ஒரு சாக்குப் போக்கும் கிடைத்தது. போர் தொடங்கி ஆருவது ஆண்டில் ஒரு சண்டை நடந்தது. சண்டையின்போது திடீரென்று கதிரவன் இருண்டான்; பகலானது இரவாக மாறியது. இந்தக் காட்சி இரு தரப்பினரையும் நடுங்கிடச் செய்தது. அவர்கள் இருவரும் ஆயுதங்களைக் கீழே வைத்து, சமாதானத்தைத் தமக்குள் ஏற்படுத்திக்கொண்டனர். ஆனல் இந்த மே மாதத்தில் ஏற்பட்ட இந்தச் சூரியகிரகணம் லிடியாவிற்கும் மிதியாவிற்கும் ஏற்பட்ட யுத்த நிகழ்ச்சிகளின் தொடர்பைத் தவிர ஐரோப்பாவிற்கு அதிக முக்கியத்துவம் உள்ள மற்ருெரு தொடர்பையும் உடையதாயிருந்தது. எப்பொழுது நடக்கும் என்று ஐரோப்பிய அறிவியலில் முன்னதாகவே சொல்லப்பட்ட முதல் கிரகணம் இதுவேயாகும். கிரேக்க தத்துவத்திற்கும் அறிவியலுக்கும் தந்தையான (ஏன், ஐரோப்பிய தத்துவத்திற்கும் அறிவியலுக்குமே தந்தையான!) மைலீட்டஸ்ஸிலுள்ள தேல்ஸ் (Thales) எகிப்தில் வானநூல் பயின்ருர். இவர் அயோனியர்களுக்கு அந்த ஆண்டு முடிவதற்குள்-இவருடைய படிப்பு

[2]கிரேக்கக் கூலியாட் படைகள் இவரிடம் சேவை செய்தது உண்மை.

எந்த நாள் அல்லது நேரம் என்று சொல்ல முடியாததாயிருந்தது—சூரியன் இருளடையும் என்று முன் எச்சரிக்கை செய்தார். தேல்ஸ் முதல் அறிவியல் நிபுணராக மாத்திரமில்லாமல் முதல் தத்துவ ஞானியாகவும் இருந்தார். இவர் காலத்தில் அறிவியலும் தத்துவமும் வேருகப் பிரிக்கப்படவில்லை. கோப்பர்னிகஸ் (Copernicus), நியூட்டன் (Newton), லாப்லேஸ் (Laplace) முதலிய அறிவியல் அறிஞர்களைத் தாண்டி இவரால் பார்க்க முடிந்ததென்றால், அதே மாதிரியாக இவரால் டைகார்டிஸ் (Descartes), பெர்க்லி (Berkley), காண்ட் (Kant) என்னும் தத்துவ ஞானிகளையும் தாண்டிப் பார்க்க முடிந்தது. இயற்கையின் பலவகைப் பெருக்கத்தை விளக்கவும், இந்த உலகத்தை ஒன்ருக்கவும் ஓர் ஒழுங்கமைப்புக்குக் கொண்டு வரவும் இவர் ஒரு பொதுப் பொருளையும், ஒரு தனியான முறையையும் தேடினர். இவர் இந்த முறையை நீரில் கண்டதானது ஒரு சிறிய காரியமே.[3] ஆனுலும் இந்த முறையைத் தேடினது இவருக்கு எப்பொழுதுமே பெருமதிப்பளிப்பதாகும்.

லிடியாவின் மன்னனுகிய ஆலியாட்டிஸ் (Alyattes) தன் மகளை மிதியாவிலே சமீபத்தில் பட்டமேறிய ஆஸ்டியாஜிஸிற்குத் (Astyages) திருமணம் செய்வித்தான். இதன் விளைவால் லிடியாவானது தனது வரலாற்றிலேயே ஒரு பொற்காலமாகிய இதனை நுகர்ந்து மகிழ ஒரு தலைமுறைக் காலத்திற்குக் கொடுத்துவைக்கப் பெற்றது. சிம்மெரியர்களின் (Cimmerian) படையெடுப்பிற்குப் பின் லிடியா நலம் பெற்றதும் கடற்கரையிலுள்ள கிரேக்க நகரங்களை அழிக்கும்படி கைஜஸ் (Gyges) எடுத்த முயற்சிகளை ஆர்டிஸ் (Ardys) மன்னரும் மறுபடியும் எடுத்தார். பிரியீனே (Priene) இவர் கைப்பற்றியது இவருடைய முக்கிய வெற்றியாகும். இவருக்குப்பின் வந்தவர்களாகிய சாட்யாட்டிஸ் (Sadyattes)ஸும் ஆலியாட்டிஸ்ஸும் (Alyattes) மைலீட்டஸ்ஸிற்கு விரோதமாக, சோர்வை உண்டுபண்ணும் ஒரு யுத்தத்தைத் தொடுத்தனர். இவர்கள் ஆண்டுதோறும் மைலீஸியன் நிலப் பகுதியில் புகுந்து, அதனைக் கொள்ளையிட்டு, அதன் பயிர்வகைகளை அழித்து, மைலீஸியர்களை இரு சண்டையில் தோற்கடித்தாலுங்கூட இவர்களால் அதன் வலிமை பொருந்திய சுவர்களை அசைக்கக்கூட முடியவில்லை. இவ்விதமாக இந்தக் கடற்கரையிலுள்ள நகரமானது லிடியர்களிடம் கடற்படை இல்லாத குறை

[3] ஆனுல் இது சிறிய காரியமாகாது. கெட்டியான தன்மையை அளிக்கும் பொதுவான தப்பிதத்தைத் தள்ளிவிட்டு நீர்த் தன்மையுள்ள ஒரு பொருளில் நிலைநாட்டியது ஒரு பெரிய காரியமாகும்.

யினுல் தப்பியது. கடைசியில் மைலீட்டஸுடன் ஆலியாட்டிஸ் சமாதானம் செய்துகொண்டார். ஒருவேளை இச் சமயத்தில் மிதியர்களுடன் ஏற்பட்ட யுத்தமானது இவரைச் சமாதானத் திற்கு நெருக்கியிருக்கலாம். எப்படியிருந்தாலும், இவர் தமது பகைவரிடம் தாராளமாக நடந்துகொண்டதாகத் தெரிகின்றது. மைலீஸியர்களின் நிலப் பகுதியை இவர் பாழாக்கும்போது எரிக்கப்பட்ட அத்தீனுவின் ஒரு கோவிலுக்காக இவர் இரண்டு கோவில்களைக் கட்டுவித்தார். இந்த ஈடுசெய்த செயலானது எப்பொழுதும் லிடிய மன்னர்கள் கிரேக்கத் தெய்வங்களுக்குக் காட்டிய மரியாதைக்கும் மதிப்பிற்கும் அறிகுறியாக இருந்தது. ஆலியாட்டிஸ் காயலாயிருக்கும்போது டெல்பியிலுள்ள அப்போலோவிடம் அறிவுரை கோரியதாகவும், அதற்குத் தெய்வ மொழியானது இவரை அழிந்துபோன கோவிலை மறுபடியும் கட்டித் தர உத்தரவிட்டதாகவும் கதையொன்று கூறுகின்றது. அயோனிய மைலீட்டஸ் காப்பாற்றப்பட்டது. ஆனுல் அக்கிய நகராகிய சிமிர்னு கைப்பற்றப்பட்டதுமல்லாமல் அழிக்கப் பட்டும் போயிற்று. இனி இப் புத்தகத்தில் அதன் பெயர் திரும் பவும் தோன்ருது. ஆலியாட்டிஸ் பித்தினியாவையும் (Bithynia) கைப்பற்றி, எஞ்சியுள்ள சிம்மெரியர்களை ஆசியாவைவிட்டு விரட்டியடித்தார். இவர் லிடியாவானது தெற்கிலுள்ள அல்லது கிழக்கிலுள்ள பெரிய மன்னர்களின் ஆட்சிகளுடன் தரம் பெறும் என்று எண்ணியிருக்கலாம். இவர் தமக்காக ஒரு மிகப் பெரிய கல்லறையைக் கட்டுவித்தார். இது கல்லாலாகிய கடைக் காலின்மேல் அமைக்கப்பட்ட பெரிய மண்குவியலாகும். மற்றக் காரியங்களில் இல்லாவிட்டாலும் இது அளவில் எகிப்திய அல்லது பாபிலோனிய மன்னர்களின் நினைவுச் சின்னங்களை ஒத்திருக் கின்றது.

கிழக்குக் கிரேக்க நகரங்களைக் கீழ்ப்படுத்தும் திட்டத்தை முடித்து வைப்பதானது ஆலியாட்டிஸ்ஸின் மகனுகிய கிரீஸஸ் (Croesus)ஸுக்கு ஒதுக்கி வைக்கப்பட்டிருந்தது. இவர் ஒன்றன் பின் ஒன்ருக மைலீட்டஸ்ஸைத் தவிர எல்லா அயோனிய அக்கிய நகரங்களையும் தாக்கித் தமக்குக் கீழ் அடக்கினர். இவர் மைலீட்டஸ்ஸுடன் தம் தந்தை செய்துகொண்ட உடன் படிக்கையை மதித்தார். மைலீட்டஸ் மற்றக் கிரேக்க நகரங் களுக்கு ஓர் உதவியும் அளிக்காது தனது சுதந்தரத்தைப் பேணிக் கொண்டது. கேரியாவிலுள்ள டேரிய அரசுகளும் பணியும்படி வற்புறுத்தப்பட்டன. கிரீஸஸ்ஸின் பேரரசு ஹாலிஸ் நதியி லிருந்து ஈஜியக்கடல் வரையிற் பரவியிருந்தது. ஆசியாவிலுள்ள கிரேக்கர்களின்மேல் லிடியா ஒரு தனிப்பட்ட செல்வாக்கைக்

கொண்டு செலுத்தியது என்று முன்னர்க் கவனித்தோம். ஆனல் லிடியாவின்மீது கிரேக்கர்களின் செல்வாக்கு அதிகமாக இருந்திருக்கும்போல் தெரிகின்றது. கிரேக்க மொழியானது லிடியாவில் பரவியது. தங்கள் மொழி தவிர இதையும் ஸார்டிஸ் மக்கள் பேசப் பெற்றிருக்கக் கூடும் என்று நாம் சந்தேகிக்கலாம். கிரேக்கத் தெய்வங்கள் இங்கே போற்றப்பட்டன. கிரேக்கத் தெய்வ மொழிகள் சொல்லுமிடங்களில் இவர்கள் வேண்டுகோள் கோருவது வழக்கம். கிரேக்கக்கோவில் திருவிடங்களுக்கு இந்த மன்னர்கள் கொடை வள்ளல்களாக இருந்தனர். இவருடைய ஆட்சிக்காலத்தில் எபிஸஸ்ஸில் கட்டப்பட்ட ஆர்டிமீஸ் (Artemis)ஸின் கோவிலில் காணப்படும் அயோனியத் தூண்களைச் சுற்றியுள்ள சிற்ப வேலைப்பாடுள்ள படைப்புச் சித்திரங்கள் கிரீஸஸ் மன்னரால் நன்கொடையாகக் கொடுக்கப்பட்டவை. இத் தூண்களின் அடிப் பாகங்களில் இந்தக் கொடையை நிலையாகப் பதிவு செய்த மூன்று வார்த்தைகளாகிய 'கிரீஸஸ் மன்னரால் படைக்கப்பட்டவை' என்பவற்றின் துணுக்குகளை இன்றும் நாம் படிக்கலாம். ஆகையால்தான் லிடியர்களை முழுக் காட்டுமிராண்டிகள் என்று கிரேக்கர்கள் ஒருபொழுதும் கருதியதில்லை. கிரீஸஸ் ஆசியாவிலுள்ள கிரேக்க நகரங்களை அடிப்படுத்தி, வல்லாட்சியாளராக ஆண்டுவந்திருந்தாலுங்கூடக் கிரேக்கர்கள் எப்பொழுதும் ஒரு விதத்தில் கருத்துடன் இவரைப்பற்றி எண்ணி, மதிப்புக் கொடுத்தார்கள்; செல்வம், இன்பவாழ்வு, பழக்க வழக்கங்கள், எடுத்துக்காட்டாகப் பல மனைவியரையுடைய தன்மை, கொடிய தண்டனைகள் முதலியன ஸார்டிஸ்ஸின் அரசவை உண்மையில் ஒரு கிழக்கத்திய அவை, கிரேக்க அவை ஆகாது என்று காட்டுகின்றன. தமது பட்டமேறுதலை எதிர்த்த ஒருவனைக் கிரீஸஸ் கயிற்றினல் சுற்றிச் சுற்றி இறுகக் கட்டிக் கொன்றார். அயோனியர்கள் 'தங்ககைஜஸ்' ஸின் கருவூலங்களைக் கண்டு வியப்புக் கொண்டனர். ஆனல் கணக்கிட முடியாத கிரீஸஸ்ஸின் செல்வமானது உலகறிந்த ஒன்றாகும். அதிகமாகக் கிரேக்க நகரங்கள் செலுத்திய கப்பங்களும், பாக்டோலஸ்(Pactolus)ஸிலிருந்து வந்த வங்கக் கலவைப் பொன்(white gold)னும், பெர்க்கமானிலுள்ள சுரங்கங்களில் கிடைக்கப்பெற்ற பொருள்களும் இவருடைய கருவூலங்களை நிரப்பின. வங்கக் கலவை நாணயங்களுக்குப் பதிலாகக் கிரீஸஸ்தான் முதன்முதலாக இரண்டு வெவ்வேறு உலோகங்களாலாகிய கலப்பற்ற தங்க, வெள்ளி நாணயங்களை ஏற்படுத்தினர். இந்த இரண்டுவித நாணயங்களும் உள்ள நிலைவரமான படிவீதம் 3 : 40 என்று முடிவு செய்தார்.

இந்தக் காலத்தில் கிரீஸஸ் படைத்த தங்கக் காணிக்கைகள் டெல்பி தெய்வமொழி கூறும் இடத்தின் அரசியல் முக்கியத் துவத்தைக் காட்டுவதற்கு ஒரு தலைசிறந்த சான்றாகும். இவர் கொடுத்த காணிக்கைகள் பெரும் பொருளவாக் கொண்ட டெல்பியப் புரோகிதர்கள்கூட நம்ப முடியாத அளவுக்கு வளம் வாய்ந்திருந்தன. லிடியாவின் அரசராகிய செல்வச் செருக்குடைய வராயிருந்தாலும், இவருக்குத் தெய்வ மொழிகளின்மேல் முழு நம்பிக்கையும் ஆர்வமும் இருந்தாலும் அப்போலோவின் ஆதரவு கிடைப்பது நல்லது என்று விசுவாசித்து அப்போலோவின் ஆதரவு அரசியல் துறைகளில் கிடைக்க விரும்பியதால்தான் இவர் அம் மாதிரியான விலையுயர்ந்த அன்பளிப்புகளை அனுப்பியிருப் பார். இன்றேல், இவர் அவ்விதம் செய்திருக்கமாட்டார் என்று தெரிகிறது. கிரேக்க உலகத்தில் உறுப்பினருள் ஒருவராகத் தாம் உரிமை கொள்ளவும், கிரீஸ் நாட்டிற்கு வெளியில் உள்ளவராகத் தோன்றாமல் அந்த நாட்டின் சுவீகாரப் புத்திரராகத் தோன்றி, தாம் அடக்கிய கிரேக்கர்களின்மேல் தம் ஆட்சியை நிறுவவும், தாம் இன்னமும் அடக்க நம்பிக்கொண்டிருக்கிறவர்களை ஆள்வதுமே அவருடைய நோக்கமாகும். இப்பேர்ப்பட்ட மதிப்பைப் பெறுவதற்கு, மற்ற எல்லாவற்றையும்விட டெல்பிக் தெய்வமொழி கூறுமிடத்திலிருந்து ஒரு நல்ல வார்த்தை கிடைத்தால், அது புகழைப் பெறுவதற்கு அதிக உபயோகமா யிருக்கும். இதுவுமன்றி ஆசியாவின் நகரங்களில் ஏதாவது ஒரு நகரம் கலகம் செய்ய யோசித்தால், அது தெய்வமொழியின் அறிவுரையைக் கோரும்போது, தெய்வமொழி கூறுமிடத்தி லிருந்து வரும் தடைச் சொல்லானது, வல்லாட்சியாளரை நல்ல நிலையில் நாட்டும்.

கடற்கரைமட்டும் தம் ஆட்சியைப் பரப்பிக் கிரீஸஸ் லிடி யாவைக் கடலைச் சொந்த நாடாக்கவும், தீவுகளைக் கைப்பற்றவும் கருத்துக் கொண்டார். இந்தத் திட்டமானது நன்றாக அமையக் கூடிய திட்டமே. ஆனால் சில எதிர்பாராத செயல்கள் இதனை ஏமாற்றித் தடுத்தன. பிற்காலத்தில் ஒரு கதையானது உரு வாக்கப்பட்டது. அதன்படி கிரீஸிலுள்ள கூரறிவுள்ள மனிதர் களில் ஒருவர் - இவர் அந்தக் காலத்தில் உயிரோடிருந்தாலும், இல்லாவிட்டாலும் சரி - பொருள் செறிதொடர் ஒன்றை உப யோகித்துக் கிரீஸஸ்ஸின் எண்ணத்தை மாற்றியதாகச் சொல்லப் படுகின்றது. இந்தத் திட்ப உரையானது பின்வருமாறு: 'கப்பற் படை ஒன்றுடன் லிடிய மன்னர் தம்மிடம் வருவது, தாம் லிடியா விற்கு எதிராகக் குதிரைப் படை ஒன்றைக் கொண்டு முன்னேறு வதுபோல்' என்பதே. முன்னால் சொன்னபடி சில எதிர்பாராத

சம்பவங்களால்தான் கிரீஸஸ் தம் திட்டத்தைக் கைவிடவேண்டிய தாயிற்று. இச் சம்பவங்கள் நடந்திராவிட்டால் தீவுகளிலுள்ள மக்கள் இந்தத் திட்ப உரையால் ஆறுதல் எதுவும் பெற்றிருக்க மாட்டார்கள்! ஆனால் கிரீஸஸ் தமது மேற்குத் திட்டத்திலிருந்து தமது மனத்தை மாற்றினதற்குக் காரணம் இந்தத் திட்ப உரை யன்று; இதைவிடக் கண்டிப்பான வேறு ஒரு காரியமேயாகும். கிழக்கில் சுழல் வேகத்தில் பெரிய நிகழ்ச்சிகள் நடைபெற்றுக் கொண்டிருந்தன. கிரீஸஸ்ஸின் மைத்துனராகிய ஆஸ்டியாஜிஸ் (Astyages) தம் அரியணையிலிருந்து ஒரு மிதிய வீரனால் தள்ளப் பட்டார். இந்த வீரன் உலகத்தின் வலிமை பொருந்திய வெற்றி வேந்தர்களில் ஒருவனானான். உரிமையின்றிப் பாரசீக அரியணை யைக் கைப்பற்றிய மகா கைரஸ், பாரசீகக் குடும்பமாகிய ஆக்கி மீனிட்டர்களைச்(Achaemenids) சேர்ந்தவன். இந்தப் புரட்சியானது ஒரு வமிச மாறுதலைத் தவிர வேறொன்றையும் குறிப்பிடவில்லை. பாரசீகர்களும் மிதியர்களும் ஒரே இனத்து மக்களாவும் ஒரே சமயத்தைச் சேர்ந்தவர்களாகவும் இருந்ததால் பேரரசானது முன்போலவே ஈரானியப் பேரரசா யிருந்துவந்தது. ஆனால் ஈரானிய இனத்தில், பாரசீகர்கள் உயர்தரமான பாகத்தைச் சேர்ந்தவர்களாகக் காண்கிறார்கள். அவர்களுடைய துணிவு, தன்னடக்கம், உண்மையில் பற்று முதலிய குணாதிசயங்கள் கிரேக் கர்களின் பாராட்டுகளைப் பெற்றன.

ஆஸ்டியாஜிஸ்ஸின் வீழ்ச்சி பேரவாக்கொண்ட லிடிய மன்னருக்குத் தமது போர்க்கருவிகளைக் கிழக்கு நாட்டின்மேல் உபயோகிக்க ஒரு வாய்ப்பை ஈந்தது. தமது மைத்துனரை மறுபடியும் மன்னராக்கப் போவது போதுமான சாக்குப்போக்கா கும். ஆனால் இவருக்குத் தாம் முதலில் அடிக்காவிட்டால், இந்தப் பாரசீக அபகரிப்போன் கூடிய சீக்கிரத்தில் சிறிய ஆசியாவைக் கைப்பற்ற முன்னேறுவான் என்ற பயமும் ஒரு காரணமா யிருந்தது. தாம் மிதியாவின் பட்டத்திற்கு வராவிட்டாலும் ஆசியா வின் உட்பாகங்களில் லிடியாவின் அதிகாரத்தையாவது விரி வாக்க, மிகவும் ஆர்வங்கொண்டார். இவ்விதத் துணிகரச் செயலில் ஈடுபடும்போது இவர் தமது கிரேக்கக் குடிகளுக்கு அஞ்ச வேண்டிய தாயிருந்தது. ஏனென்றால், தாம் நாட்டிலில்லாதபோது இவர்கள் தமது 'நுகத்தடி'யை உதறித் தள்ளலாம், அதுவுமல்லாமல் பார சீகர்களுடன் சேர்ந்து தமக்கு விரோதமாக உட்கிளர்ச்சி செய்ய வும் கூடும் என்று யோசித்தார். அயோனியாவிலுள்ள கிரேக்கர் கள் மிதியாவை லிடியாவிற்கு விரோதமாக ஆதரவு தரும் நாடு என்று நீண்டகாலமாகக் கருதினர்; இவ்விதமாக மிதிய மன்னர் களுடன் சேர்ந்து சதியாலோசனை செய்வதை 'மீடிஸம்' (medism)

என்று அழைப்பது தெளிவாக எடுத்துக் காட்டுகின்றது. ஏனென்ருல், இந்த விதமான, சதியாலோசனை பாரசீகம் தோன்றிய காலத்தும் லிடியாவின் வீழ்ச்சிக்குப் பின்னும் காலத்தை யொத்து அமைந்திருந்தால், இதனைக் குறிப்பிடும்படி தெரிந்தெடுக்கப்பட்ட பெயர் இயல்பாகவே பெர்சியிஸம் (persism) ஆகியிருக்கும். கிரீஸஸ் கிழக்கு நாட்டிற்காகப் படைச்செலவை ஒழுங்கு செய்வதை ஈஜியப் பிரேதச நாடுகள் மகிழ்ச்சி தருகின்ற செய்தியாகக் கொண்டன. பின்னுல் என்ன நடக்கப் போகின்றது என்று அறிய ஆவல்கொண்ட இவர் கிரீஸிலுள்ள தெய்வமொழி கூறும் பல இடங்களிடம் அறிவுரை கோரினுர். டெல்பிக் தெய்வம் இவருக்குக் கொடுத்த உத்தரவு இவருடைய முயற்சியில் இவருக்கு எழுச்சியூட்டும்படியாக இருந்தது என்பதைப்பற்றிச் சந்தேகமில்லை. கிரீஸஸ் ஹாலிஸ் ஆற்றைக் கடந்தால் இவர் ஒரு வலிமை வாய்ந்த பேரரசை அழிப்பார் என்பது தெய்வம் கொடுத்த உத்தரவாகக் கூறப்படுகின்றது. இந்த உத்தரவானது உண்மையாகக் கொடுத்த உத்தரவாக இருக்க வேண்டியதில்லை. ஆனுல் படைச்செலவு தோல்வியடைந்தபின் தெய்வமொழியை நேர்மையானது என்று காட்ட இந்த உத்தரவைப் பிற்காலத்தில் எங்கும் பரவச் செய்திருக்கலாம். ஆனுல் தெய்வமொழியின் கோட்பாட்டிற்குத் தான் வரலாற்றில் முக்கியத்துவம் இருக்கின்றதே அல்லாமல் தந்திரமாகத் தப்பித்துக்கொள்ளும் அதன் முறைகளுக்கல்ல. டெல்பியின் உயிர்நிலையானது கிரேக்கத் தன்னுரிமைக்கு அநுகூலமாயிருந்தது. 'இந்தத் திட்டமிடப்பட்ட படைச்செலவினுல் ஒருவேளை பாரசீகத்துடன் போரானது நீடிக்கும்; அப்படியானுல் கிரேக்கர்கள் தங்களது சுதந்தரத்தை விடாமல் கொள்ள இது ஒரு நல்ல வாய்ப்பு' என்று தெரிந்தது. லிடியாவானது முழுவதுமாகக் கைப்பற்றப்படும்; கிரேக்கர்கள் முழுக்க முழுக்கக் காட்டுமிராண்டியாயிருக்கும் ஒரு நாட்டின்கீழ்க் கொண்டுவரப் படுவர் என்பதை இந்தத் தெய்வமொழி முன்னறியவில்லை. இந்தத் தெய்வமொழியானது கிரீஸஸ்ஸை மிகவும் வலிமை பொருந்திய கிரேக்க நாடு ஒன்றின் உதவியை நாடச் சொல்லியதால், கிரீஸஸ்ஸிற்கும் லாசிடீமோனியர்களுக்கும் ஓர் ஒற்றுமை ஏற்படச் செய்தது. ஓர் உடன்படிக்கை இவ் விரு அரசுகளுக்குள்ளும் ஏற்பட்டபோதிலும், இதனுல் ஒரு பயனும் ஏற்படவில்லை; லாசிடீமோனியர் உதவி ஒன்றும் அனுப்பவுமில்லை.

அயோனியக் கிரேக்கர்களைக் கொண்ட ஒரு படையின் தலைவராகக் கிரீஸஸ் இந்த முக்கிய நதியாகிய ஹாலிஸ்ஸைக் கடந்து கப்பதோஷியா (Cappadocia) மீது படையெடுத்தார். இவர் முதலில் டீரியா (Pteria) என்னும் பழங்கால நகரைக் கைப்பற்றி,

அதன் அண்மையில் கைரஸ் நடத்திவந்த பாரசீகரையும் மிதியரையும் கொண்ட ஒரு படையுடன் கைகலந்தார். இந்தச் சண்டையில் இருதரப்பாருக்கும் வெற்றியுமில்லை, தோல்வியுமில்லை. ஆனால் கைரஸ்ஸின் படையானது எண்ணிக்கையில் கிரீஸஸ்ஸினுடைய படையைவிட அதிகமாயிருந்ததால் கிரீஸஸ் லிடியாவிற்குள் பின்வாங்கவேண்டியதாயிற்று. தம் தலைநகரின் கோட்டைக்குப் பக்கத்தில் மூண்ட யுத்தத்தில் கிரீஸஸ் பெருந் தோல்வியுற்றார். சிறிதுகால முற்றுகைக்குப்பின் ஸார்டிஸ் கடுமையாகத் தாக்கப்பட்டுக் கடைசியில் கொள்ளையிடப்பட்டது. கிரீஸஸ் கொல்லாமல் விடப்பட்டார். கிரீஸஸ் எக்காரணத்தாலும் கொல்லப்படக் கூடாது என்று கைரஸ் கட்டளையிட்டதாகவும், கிரீஸஸ்ஸை அறியாத போர்வீரன் ஒருவன் அவரை வெட்டி வீழ்த்தப் போகும்போது, அங்கு நின்றிருந்த கைரஸ் மன்னனின் பிறவி ஊமை மகன், 'மனிதனே, கிரீஸஸ்ஸை வெட்டாதே' என்று கத்தியதாகவும் கதை கூறுகின்றது.

லிடிய மன்னனின் வீழ்ச்சியை அணிசெய்தது இந்தக் கதை மாத்திரம் அன்று. ஸார்டிஸ் கைப்பற்றப்படும் என்று ஒருவருமே தீவிரமாக யோசிக்கவில்லை. கிரீஸஸ்ஸின் செல்வத்தோடு வலிமையும் மிகப் பெரியதாயிருந்ததாலும், அவருடைய ஆற்றல் அதிக உன்னத பதவியிலிருந்ததாலும் ஒருவரும் அவருக்கு வீழ்ச்சி ஏற்படும் என்று யோசிக்கவேயில்லை. மற்றெந்த வரலாற்று நிகழ்ச்சியைக் காட்டிலும், அதிக உயரமான இடத்திலிருந்து திடீரென்று ஒன்றுமில்லை என்னும் பதவிக்கு இவர் தாழ்த்தப்பட்ட நிகழ்ச்சியானது கிரேக்கரின் மனத்தில் ஆழமாயும் நிரந்தரமாயும் பதிந்தது. உலகத்தில் மிகச் செல்வாக்குடைய மக்களைத் தெய்வங்களின் பொறாமையானது தொடரும் என்பது கிரேக்கர்களின் கோட்பாடாகும். இவர்களுடைய தனிப்பற்றுக்குரிய இந்தக் கோட்பாட்டிற்குக் கிரீஸஸ்ஸின் வீழ்ச்சியானது இவர்கள் தம் கண்களாலேயே பார்த்த ஒரு சிறந்த எடுத்துக்காட்டாயிற்று. கிரீஸஸ்ஸின் தனி மனிதப்பண்பு இவர்களுடைய இரக்கச் சிந்தையைக் கவர்ந்தது. கிரேக்கக் கலையையும் ஞானத்தையும் இவர் மெச்சினார்; கிரேக்கத் தெய்வங்களைப் போற்றினார். கடைசியாகத் தம்மிடமுள்ள ஏராளமான பொருள்களிலிருந்து தாராளமாகக் கொடுத்த பெரு வள்ளலாயிருந்தார். வேறு காரியங்களுக்காக இல்லாமல் கிரீஸஸ்ஸின் நினைவுக்காக, தான் அதிகமாகப் பெற்றிருந்த ஞானத்தின் உதவியால் ஒரு வரலாற்றுக் குறிப்பைக் கொண்டு, மக்கள் தம் வாழ்வில் உணரவேண்டிய படிப்பினைகளைக் கொண்ட-உள்ளத்தைத் தொடக்கூடிய கதைகளைக் கிரீஸ் உண்டு பண்ணியது.

எரோடட்டஸ் கூறுகின்ற கதைப்படி சைரஸ் ஈமவிறகுக் குவியல் ஒன்று செய்து அதன்மேல் சங்கிலியால் கட்டப்பட்ட கிரீஸஸ்ஸையும் மற்றும் பதினன்கு விடியச் சிறுவர்களையும் இருத்தி வைத்தார். இந்தக் குவியலின்மேல் கிரீஸஸ் மௌனமாக நிற்கும்போது, சோலான் கூறிய ஒரு வார்த்தை அவர் நினைவுக்கு வந்தது. அது என்னவென்றல், ஒவ்வொரு மனிதனும் தான் உயிரோடு இருக்கும்வரை மகிழ்ச்சியானவன் என்று அழைக்கப்பட முடியாது என்பதேயாகும். தம் பிர



படம் 28: ஈம விறகுக் குவியலின்மேல் கிரீஸஸ்
(அட்டிக் மலர்க்குவளை)

யாணங்களின் மத்தியில் இந்த அத்தீனியன் அரசியல் வல்லுநர் ஸார்டிஸ் அரசவையை அடைந்தாராம். கதை சொல்லுபவரின் கலைக்கு, நிகழ்ச்சிகளின் சரியான காலம் அவ்வளவு முக்கியமான தாகத் தென்படவில்லை. அவர் அரசக் கருவூலங்களைப் பார்வை யிட்ட பிறகும் அரசின் மேம்பாட்டைப்பற்றி அறிந்த பிறகும் சோலான் யாரை மகிழ்ச்சியான மனிதன் என்று கருதுகிருர்

என்று கிரீஸஸ் அவரை வினவினர். சோலான், ஒருவரும் அறியாத மாண்டுபோன சில கிரேக்கர்களின் பெயர்களைக் கூறினர். தமது வியப்பையும் ஆத்திரத்தையும் அடக்கமுடியாமல், 'ஓ அத்தீனிய அந்நியனே! நீ எனக்குமுன் தனியார்களை நிறுத்துவதற்கு நானென்ன ஒரு பரம ஏழையா?' என்று கிரீஸஸ் வீராவேசத்துடன் கேட்டார். ஆனால் சோலானே அவரிடம் வாழ்க்கையின் நிலையாமையையும் தெய்வங்களின் பொறாமையையும் பற்றி எடுத்துக் கூறினர். இச் சமயத்தில் கிரீஸஸ் இதை நினைவு கூர்ந்து, உரக்கப் பெருமூச்செறிந்து மூன்றுமுறை சோலானின் பெயரை உச்சரித்தார். சைரஸ் கிரீஸஸ் கூப்பிடுவதைக் கேட்டு, அவர் யாரைக் கூப்பிடுகிறர் என்று மொழிபெயர்ப்பாளரைக் கேட்டார். சில நிமிடங்களுக்குக் கிரீஸஸ் ஒன்றும் பேசாதிருந்து, பிறகு, எல்லா 'கொடுங்கோலர்களும் சந்தித்து உரையாட வேண்டிய ஒருவரின் பெயரை உச்சரிக்கின்றேன்' என்றர். திரும்பத் திரும்பக் கேட்கவே கிரீஸஸ் அத்தீனியனுகிய சோலானின் பெயரைக் கூறி, அந்த ஞானவானின் வார்த்தைகளையும் எடுத்துக் கூறினர். இதறகுள் ஈமவிறகுக் குவியலானது எரிய ஆரம்பித்தது. ஆனல் சைரஸ் தமது கைதியின் உத்தரவைக் கேட்டவுடன் தாமும் ஒரு மனிதர் என்பதை யோசிக்கலானர். பிறகு தீயை அணைத்துத் துயருறுவோரை விடுதலை செய்ய ஆணையிட்டார். தீயானது கொழுந்து விட்டு அதிக ஆற்றலுடனும் அதிக உயரமாகவும் எரியவே மனிதர் எவராலும் அதனை அணைக்க முடியவில்லை. அப்பொழுது கிரீஸஸ் அப்போலோவை நோக்கித் தம் உதவிக்கு அழைக்கவே, அக் கடவுள் தெளிவான வானத்தில் மேகங்களை அனுப்பினர். அப்போது பொழிந்த மழையானது தீயை அணைத்தது.

எரோடட்டஸ்ஸின் வரலாற்றில் நாம் வாசிக்கும் கதை இதுவே. இவர் இக் கதையை ஆதென்ஸில் கேள்விப்பட்டிருக்கலாம். ஆனல் நாம் இந்தக் கதையானது உருவாக்கப்படுவதை ஒருவிதமாக அறியலாம். ஏனென்றல், சோலானின் கதை சேர்க்கப்படுமுன்னமே, கிரீஸஸ்ஸின் முடிவு ஒரு புராணக் கதையாக மாற்றி அமைக்கப்பட்டது. இந்தப் புராணக் கதையானது பாக்கிலிடீஸ் (Bacchylides) செய்யுட்களில் வர்ணிக்கப்பட்டுள்ளது. ஊழித் தீர்ப்பு திடீரெனத் தோன்றியதும், 'அடிமைத்தனத்தின் கசப்பைப் பொறுத்து உயிர்வாழ விரும்பாமல், தமது அரண்மனையின் முற்றத்தில் ஈம விறகுக் குவியல் ஏற்படுத்தித் தம் மனைவியாருடனும், அழுது கொண்டிருக்கும் தம் புத்திரிகளுடனும் இதன்மேல் ஏறினர். செருப்பை அணிந்துள்ள தமது அடிமையை ஈம விறகிற்கு நெருப்பு வைக்கச்

சொல்லவே, கன்னிப் பெண்கள் கதறியழுது, தம் கையைத் தாயிடம் நீட்டினர். ஆனால் தீயானது விறகில் மடமடவென்று பரவும்போது தெய்வமாகிய ஸீயூஸ் கருமையான மேகத்தை அதன்மேல் வரச் செய்து, மழையினால் தீயை அணைத்தார். இதன்பின் அப்போலோ இக் கிழவரையும் இவருடைய புத்திரிகளையும் இவருடைய தெய்வபக்திக்காகவும், இவர் பிதோ (Pytho) விற்குக் கொடுத்த அன்பளிப்புகள் மற்றெல்லா மனிதர்களும கொடுத்ததைவிட அதிகமாயிருந்ததாலும், சதா காலமும் வாழும் படி ஐப்பர்போரியர்களின் (Hyperboreans) நாட்டிற்கு எடுத்துச் சென்றார்.' டெல்பிக்கு உங்கள் அன்பளிப்புகளை கொண்டு வாருங்கள் என்பதே இக்கதையின் படிப்பினையாகும். ஆதலின், இது டெல்பியின் செல்வாக்கினால் உண்டாகியது என்பதில் ஐயமே இல்லை. ஆனால் சோலானின் நகரத்தில் ஒரு தனித்திறமையால் இக் கதை உலகத்திலுள்ள சிறப்பான கதைகளில் ஒன்றாக மாற்றி அமைக்கப்பட்டது.

கிரீஸஸ்ஸைப் பொறுத்த வரையில் அவர் கொல்லப்படாமல் காப்பாற்றப்பட்டார். 'பிற்கால மக்களின் நினைவில் புகழ் பெற்ற அத்தீனியச் சட்டமளிப்பவருடன் கற்பனையான தொடர்புடன் வாழ்வோம்' என்பதை அறியாமலே இவர், தமது எஞ்சிய வாழ்நாட்களை ஒருவேளை மிதியாவில் கழித்திருக்கலாம்,

## 2. ஆசிய - கிரேக்க நாட்டைப் பாரசீகர்கள் கைப்பற்றுதல்

கிரீஸின் வளர்ச்சியில் லிடிய நாடானது ஒரு பெரிய கடமையைச் செய்து வந்தது. லிடியா நாணயத்தைக் கண்டுபிடித்தது மனித வர்க்கத்தின் நாகரிகத்திற்கு இது அளித்த பெருங்கொடையாகும். நாணயம் கண்டுபிடிக்கப்பட்டதும், லிடியாவின் இன்ப வாழ்க்கையும் 'கொடுங் கோலாட்சி'யும் அயோனியாவின் மீது தம் செல்வாக்கைப் பரவச் செய்தது ஒருபுறம் இருக்க, கிரீஸிற்கும் கிழக்கு நாடுகளுக்கும் இடையே இருப்பதன்மூலம் லிடியா கீழ்நாடுகளுக்குரிய பேரரசுகளுக்கு எதிரான கோட்டையாகவும் காட்சியளித்தது. லிடியாவானது கிரீஸை அசீரியப் பேரரசுடன் நேருக்கு நேர் வராதபடி தடுத்தது; அவ்விதமே அறுபது ஆண்டுகளுக்குக் கிரீஸை மிதியப் பேரரசுடனும் நேருக்கு நேர் வராதபடி தடுத்தது. இந்தத் தடைச் சுவரானது அகற்றப்பட்டவுடன் கிரேக்க வரலாற்றில் ஒரு புதிய யுகம் தோன்றிற்று. யூப்ரெட்டீஸுக்கும் டைக்ரீஸுக்கும் அப்பால், தம்மவருக்குத் தெரியாத நாடுகள் வரையிற் பரவியிருக்கும் பேரரசைக்

கொண்ட மன்னனின்முன் நேருக்கு நேராகக் கிரேக்கர்கள் இப்பொழுது நின்றனர். ஸார்டிஸ் சீமானுக்குக் கீழிருந்த ஆசியாவின் கிரேக்கர்கள் இப்பொழுது அநேக மாதப் பிரயாணத்திற்கு அப்பால் தொலைதூரத்திலுள்ள ஒரு நகரில் தமது அரசவையை ஏற்படுத்தியுள்ள ஒரு பேரரசரின்கீழ் வந்தனர். பேரரசின் மையத்திலிருந்து இரண்டு கோடிக்கும் உள்ள இந்தத் தூரமானது குறிப்பிடத்தக்கது. அரசர் ஆசியா மைனரில் தாம் கைப்பற்றிய நாடுகளை ஸாட்ராப்புகளின் ஆட்சியின்கீழ் விடவேண்டியதாயிற்று. ஆகையால், கிரேக்கர்கள் அரசரிடம் தங்கள் செல்வாக்கை உபயோகிக்க இயலாதவர்களானார்கள். அரசர் ஸார்டிஸ்ஸிலோ, அண்மையான வேறு தலைநகரிலோ இருந்திருந்தால் இவர்களுடைய செல்வாக்கு எளிதில் அரசவையில் பரவியிருக்கும் என்பதில் ஐயமேயில்லை. மிடிய, பாரசீக நாடுகளை வேறுபடுத்திய மற்றொரு வித்தியாசத்தினால் இது ஒரு பெரிய துர்ப்பாக்கியமாயிற்று. மிடியர்கள் ஆரிய குடும்பத்தைச் சேராதவர்களாயிருந்தனர். ஆனால் பாரசீகர்களும் மிதியர்களும் கிரேக்கர்கள் மொழியையே பேசி வந்தனர். பாரசீகர்கள் கிரேக்கச் செல்வாக்கினுள் வந்திருந்தால், பாரசீக வரலாறு வேறு பாதையில் சென்றிருக்கும் என்று நினைக்கலாம். ஏனென்றால், பாரசீகர்கள் எளிதில் மற்றவர்களுடைய செல்வாக்கின்கீழ் வரக்கூடியவர்களான தால் சுயேச்சையாகத் தமக்கென்று ஒரு பாதையை அமைக்கத் தெரியாதவர்கள்; லாக்கோனியா பள்ளத்தாக்கில் உள்ள ஸ்பார்ட்டர்களைப்போல், தங்களுடைய மலைநாட்டில் உலகத்தாரால் கறைபடாத வீரமுள்ள, எளிமையான, மாறுப்பற்றுடைய இனமாக இவர்கள் வாழ்ந்திருக்கலாம். ஆனால் இவர்கள் இதர நாடுகளைக் கைப்பற்றவும், அங்கே தம் ஆட்சியை நிறுவுவதற்காகத் தம் நாட்டைவிட்டு வெளியேறவும் நேர்ந்தபோதெல்லாம் இவர்களுடைய ஊழின் பயனாக, தம்மிடம் சிறைப்பட்டவர்களாலே இவர்கள் சிறைப்படுத்தப்பட்டனர். இவர்கள் எப்பொழுதும் அதிக புத்திக்கூர்மையுள்ளவர்களும் தாமாகவே எதையும் யோசித்துச் செய்யக்கூடியவர்களுமாகிய மக்களின் பழக்க வழக்கங்களையும் குறிக்கோள்களையும் தமதாக்கிக் கொண்டனர். சைரஸ் தமது பேரரசின் மையத்தை மேற்குப் பாகத்திற்கு மாற்றியிருந்தால், கிரேக்கர்கள் தம் மொழியைப் பேசும் பாரசீகர்களுக்கு ஆசிரியர்களாயிருந்திருப்பார்கள். ஆனால் மிதியருக்காவது, பாரசீகர்களுக்காவது தமது மையத்தை மேற்கில் நிறுவவேண்டும் என்ற எண்ணம் உதித்திருக்காது. அதன் பயனாக இப் புதிய பாரசீகப் பேரரசு, தளர்ச்சியை உண்டுபண்ணும் நேர்மையற்ற செமிட்டிக் இனத்தைச் சேர்ந்த பாபிலோனிய அசீரிய நாகரிகங்களின்கீழ் வந்தது. இந்தப் பேரரசு கூடிய

சீக்கிரத்தில் கீழ்நாட்டைச் சேர்ந்த ஒரு வல்லாட்சி முறையை நிறுவியது இந்த வல்லாட்சி முறையானது எல்லா விதத்திலும் கீழ்நாட்டு வல்லாட்சியை ஒத்திருந்ததால், ஆட்சி புரியும் மக்கள் கிரேக்க மொழிக்கு ஒத்த ஒரு மொழியைப் பேசினார்கள் என்பது கூட மறந்து போய்விடுகின்றது. ஆகையால்தான் இப்போது நாம் கவனிக்கப்போகும் கிரேக்கர்களுக்கும் பாரசீகர்களுக்கும் இடையே இருநூறு ஆண்டுகளாக நடந்த இந்தப் போராட்டமானது, உண்மையிலும், சொற்பொருள் சார்பிலும் ஆரிய மக்களுக்கிடையே நடந்த போராட்டமாயிருந்தாலும்-அதாவது, ஆரிய மொழியைப் பேசும் மக்களின் போராட்டமாயிருந்தாலும்-ஐரோப்பாவிற்கும் ஆசியாவிற்கும் இடையே நடந்த சச்சரவு, கிழக்கிற்கும் மேற்கிற்கும் இடையே நடந்த கலகம், ஆரியர்களுக்கும் ஆரியர் அல்லாதாருக்கும் இடையே நடந்த போராட்டம் எனப் பெரியதொரு வடிவத்தைப் பெறுகின்றது. ஐரோப்பாவைப் பாபிலோனியர், பினீஷியர், சாரசென் (Saracen), துருக்கியர் (Turks) முதலியோருக்கு எதிராக வைத்து நடத்தப்படும் இன்றும் முடியாத வாதத்தில், கிரேக்கர்களுக்கும் பாரசீகர்களுக்கும் நடந்த போராட்டம் முதலிடத்தைப் பெறுகின்றது.

லிடியாவிற்கு எதிராகச் சண்டை துவக்கிய காலத்தில், சைரஸ் கிரீஸஸ்ஸின் படையிலிருந்த அயோனியர்களை அப்படையை விட்டுவிட்டுத் தம் படையில் சேரும்படி அழைத்தார். இவர்கள் துரோகி (medize) களாக மறுத்தனர். இவர்கள் மறுத்தது லிடியாவின்மேல் இவர்கள் கொண்ட பற்றினாலல்ல. ஏனென்றால், இவர்கள் லிடியாவின்கீழ் மிகவும் துன்பப்பட்டனர்; ஆனால் இவர்கள், கூடிய சீக்கிரத்தில் இவர்களது ஆட்சி அழிக்கப்படும் என்று எதிர்பாராமையால் தம்மை லிடியர்கள் பழிவாங்கப் போகிறார்களே எனப் பயந்து சைரஸ்ஸின் படையில் சேர மறுத்தனர். இவர்கள் மறுத்தது சைரஸ்ஸுக்குக் கோபத்தை மூட்டியது. ஸார்டிஸ்ஸின் வீழ்ச்சிக்குப் பின் வெற்றிவேந்தனாகிய சைரஸ்ஸிடம் கிரேக்கர்கள் வலிந்து தம் விருப்பத்தைத் தெரிவித்தபோது இவர் எந்த நிபந்தனைக்கும் இணங்கவில்லை. லிடியாவின் வசம் இல்லாததும், மேற்படி போராட்டத்தில் சேராததுமான மைலீட்டஸ்ஸிடம் இவர் கிரீஸஸ் செய்ததுபோல ஓர் உடன்படிக்கை செய்துகொண்டு அதன் சுதந்தரத்தை ஏற்றுக்கொண்டார். ஏனைய நகரங்கள் தங்களைப் பாதுகாத்துக்கொள்ள முற்பட்டன. சைரஸ் கிழக்கில், தமது பெரிய திட்டங்களை எடுத்து நடத்துவதற்காக அங்கே போக வேண்டியதாயிற்று. எனவே, ஆசியாவின் கிரேக்கர்களை அடக்கும் வேலையை, தாம் லிடியாவில் விட்டிருந்த தமது படைத் தலைவர்களிடம் ஒப்புவித்துச் சென்றார்.

அயோனியர்களிடம் ஒற்றுமையில்லாதது ஒரு பெருந் துன்ப மாயிற்று. இவர்கள் தங்களது அகில அயோனியப் பேரவையில் கூடினுலுங்கூட, இவர்களிடம் தாம் யாவரும் ஒன்று சேர்ந்து ஒரு பொதுவான செயலைத் திட்டம் செய்யத் திறமும் நிர்மாணமும் இல்லை. அதிக வலிமையுள்ள அரசான மைலீட்டஸ் தன்வழியே சென்று, தன்னந்தனியே நின்றது. நாம் முந்தியே சந்தித்துள்ள இந் நகரத்தின் குடியுரிமையுடைய தேல்ஸ் (Thales) என்னும் வானநூல் வல்லுநரும் வேதாந்தியும், (Philosopher) அரசியல், வானநூல் கோட்பாட்டாராய்ச்சியில் தைரியமாய் இறங்கினுர். இவர் அயோனியாவில் ஒற்றுமையின்மையால் இருக்கும் வலுவின் மையையும், தளர்ச்சியுற்ற அகில அயோனியக் கூட்டுக்குழுவின் பயனின்மையையும் கண்டார். அயோனியாவானது ஒரே ஒரு மன்றத்தையும் பேரவையையும் கொண்ட ஒற்றுமையுள்ள நாடாக வேண்டும் என்றும், தனித்தனி நகரங்கள் தங்களது வல்லமையை (Sovereignty) விட்டுக் கொடுத்து ஒரு 'டீம்' அல்லது ஒரு பட்டணமாக இந்த நாட்டில் இருக்க வேண்டும் என்றும், இந்த ஒற்றுமை கொண்ட நாட்டிற்கு டீயாஸ் (Teos) தலைநகராக வேண் டும் என்றும் குறுப்பிடத்தக்க யோசனையைக் கூறினுர். இந்த யோசனை தேல்ஸால் கூறப்பட்டிருந்தாலும் சரி அல்லது மற்ற வர்களால் கூறப்பட்டிருந்தாலும் சரி, அயோனியர்களின் தாய் நாடாகிய அட்டிகாவின் அரசியல் வளர்ச்சியானது இதற்கு அடிப் படையானது என்பது தெளிவு. இந்த யோசனையைக் கூறியவர் ஒருபொழுதும் அயோனியர்களை இதற்கு இணங்கவே செய்ய முடியாது; ஆனுல் இந்த யோசனை பயனுள்ளதாயிருந்தது. காட்டு மிராண்டி நாடுகளின் வலிமைமிகுந்த தாக்குதல்களை எதிர்க்க எந்த ஓர் இடத்தில் அதிக ஒற்றுமையுடன், படைகள் நெருக்க மாக நின்று போராட வேண்டுமோ அந்த இடத்தில் கிரேக்கர் களிடம் ஒற்றுமையின்மை காணப்பட்டது என்பதை இந்த யோசனை எடுத்துக் காட்டுகின்றது. பயனற்ற அகில அயோனி யக் கூட்டம் ஒன்றில் சமர்ப்பிக்கப்பட்ட மற்றுமொரு யோசனை, வரலாற்று அறிஞர் எரோடட்டஸ்ஸின் அங்கீகாரத்தைப் பெற் றுள்ளது. எல்லா அயோனியர்களும் கடலைக் கடந்து மேற்கே சென்று ஸார்டீனியாவை அடைந்து, அங்கே ஓர் அயோனிய நகரை நிறுவி, யாவரும் கட்டுப்பாடில்லாமலும் இன்பமாகவும் வாழவேண்டும் என்று பிரையீனீ (Priene)யின் அரசியல் வல்லு நரான பையாஸ் (Bias) அறிவுரை கூறினுர். இந்த யோசனை யானது, பாரசீக ஆட்சி ஏற்படுத்தப்படும் காலையில் அயோனியர் களுக்குள் எழுந்த பயத்தையும் அவநம்பிக்கையையும் காட்டு கின்றது.

ஒற்றுமையின்மையால் ஆசியாவில் கிரேக்கர்கள் எளிதில் வீழ்ந்தனர். சைரஸ்ஸின் படைத்தலைவனாகிய ஹார்பாகஸ் (Harpagus) இந் நகரங்களை ஒன்றன்பின் ஒன்றாக அடக்கினான். இந் நகரங்கள் கப்பம் கட்டவும், தேவையானபோது பாரசீகப் படையில் சேர்ந்து போர் புரியவும் கடமைப்பட்டிருந்தன. இவற்றின் வாணிப சுதந்தரம்மாத்திரம் இவற்றிடமிருந்து எடுபடவில்லை. இரு நகரங்களின் மக்கள் இப் புதிய அடிமைத் தனத்தைவிடத் தம் நாட்டை விட்டுச் செல்வது மேலானது என்று எண்ணி, டையஸ் பெரியாரின் உணர்ச்சிக்கு ஏற்ப நடந்தனர். போகியா (Phocaea)வின் மக்களில் அநேகர் தங்களது கப்பல்களில் ஏறி, கார்சைராவை அடைந்து அங்கே தம்முடைய குடியேற்ற மாகிய அலாலியா (Alalia)வினால் வரவேற்கப்பட்டனர். டீயாஸ் மக்களும் இவ்விதமே செய்தனர். ஆனால் இவர்கள் தங்களுடைய இல்லங்களுக்கு அருகில் திரேஸ் கடற்கரையில் ஆப்டீரா (Abdera) என்ற குடியேற்ற நாட்டை நிறுவினர்.

ஈயோலியர்களும், அயோனியர்களும் தம்முடைய பாதுகாவலுக்காக ஒரு பொதுவான முயற்சி எடுத்தனர். தங்களுடைய தாய்நாட்டில் மிகவும் வலிமையுள்ள அரசிற்குப் பொதுவான ஒரு விண்ணப்பம் செய்தனர். இவர்கள் ஒரு தூதுக்கோஷ்டியை லாசிடீமோனுக்கு அனுப்பினர். ஆனால் பெலோப்போனீஸ்ஸையே வானவிளிம்பாகக் கொண்ட ஸ்பார்ட்டர்கள் கிரீஸஸ்ஸிற்கு ஒன்றும் செய்யாததுபோலவே இப்பொழுதும் ஒன்றும் செய்ய வில்லை. அப்படியிருந்தாலும், ஸ்பார்ட்டா சைரஸ்ஸின் நாட்டையும், அவருடைய அதிகார வலிமையையும் வேவுபார்க்க ஒரு கப்பலை அனுப்பியது. ஒரு வேவுகாரன், ஸார்டிஸ்ஸை அடைந்து, பாரசீக மன்னரின்முன் நின்று, அவர் கிரேக்க சமுதாயத்திற்கு அல்லல்கள் உண்டாக்குவதை, 'லாசிடீமோனியர்கள் அநுமதிக்க மாட்டார்கள்' என்று கூறினதாக ஒரு கதை வழங்கு கிறது. இந்தக் கதையானது ஸ்பார்ட்டாவைக் கேலி செய்ய அமைக்கப்பட்டது என்பது தெளிவாகத் தெரிகின்றது. ஆனால், 'லாசிடீமோனியர்கள் யார்?' என்று சைரஸ் கேள்வி கேட்டிருந் தால், இவருடைய பின் மரபினர் தாம் பட்ட அல்லல்களிலிருந்து இந்தக் கேள்விக்குப் பதிலை அறிந்திருப்பர்.

லிடியாவை வென்ற வெற்றிவேந்தர், மிகப் பெரிய நாடாகிய பாபிலோனை அடக்குவதற்காகக் கிழக்கே திரும்பினார். சில ஆண்டுகள் போர் செய்த பிறகே உலகத்தில் பெரிய இந் நகரை இவரால் கைப்பற்ற முடிந்தது. 'பாபேலுக்கும், சுமேருக்கும் அக்காடுக்கும், மற்றும் உலகத்தின் நான்கு திக்குகளுக்கும் மன்னர்'

என்ற பட்டத்தைக் சைரஸ் பெற்று, ஒழுங்கு முறைப்படி பாபி லோனிய மரபுரிமையைப் பெற்ருர். மகா சைரஸ்ஸின் பேரரசானது கிழக்கில் ஆர்மீனியா (Armenia) ஹிர்க்கேனியா (Hyrcania), பார்த்தியா (Parthia), பாக்டிரியா (Bactria), ஆப்கானிஸ்தானம் (Afghanistan) வரையும், ஈஜியக் கடற்கரைகளிலிருந்து ஜாக்ஸார்ட்டிஸ் (Jaxartes) நதிவரையிலும் பரவியிருந்தது. ஆரால் ஏரி அருகிலுள்ள மாஸ்ஸாஜெட்டி (Massagetae) என்ற ஸ்கிதிய வர்க்கத்தினரை அடக்க இவர் செய்த முயற்சியே இவருடைய கடைசிச் செயலாகும். ஒரு கதையின்படி இவர் இந்தப் போரில் கொல்லப்பட்டார். இவருடைய சிரசை இரத்தத்துடன் ஒரு தட்டில் நாகரிகமற்ற அந்த நாட்டு அரசி வைத்திருந்தாளாம். இவருடைய உடல் பாரசீகத்தில் புதைக்கப்பட்டது என்பது மட்டும் நமக்குத் திட்டமாகத் தெரிகிறது. இருநூறு ஆண்டுகளுக்குப்பின் இவரைவிட ஆற்றல் மிகுந்த ஒரு வெற்றி வேந்தருடன் நாம் பாஸார்காடி (PasargaJae)யிலுள்ள இவருடைய கல்லறையைப் பார்க்கச் செல்வோம்.

## 3. எகிப்து நாட்டைப் பாரசீகம் கைப்பற்றுதல்—சாமாஸைச் சேர்ந்த பாலிக்ராட்டிஸ் (Polycrates)

லிடியாவையும், கிரேக்கர்களுடைய (ஆசியா மைனரிலுள்ள) கடற்கரையையும் தம் வசப்படுத்தியதனுல் ஒரு புதிய வமிசத்தின் கீழுள்ள ஈரானியப் (பாரசீகப்) பேரரசின் எல்லைகள் மேற்கில் வெகு தூரத்திற்கு விரிவுபடுத்தப்பட்டன.—அசீரியர்களின் படையெடுப்புகளினுல்கூட, எல்லையை இவ்வளவு தூரத்தில் அமைக்க முடியவில்லை. நிநிவே (Nineveh)யின் அரசர்களின் மேலாட்சியை ஸார்டிஸ்ஸிலுள்ள இரண்டு பிரபுக்கள் ஏற்றுக்கொண்டிருந்தனர். ஆனுல் இந்தத் தொடர்பானது சிறிது காலத்திற்குத்தான் நீடித்திருந்தது. அதே சமயத்தில் இது பெரிய காரியமாகக் கருதப்படவில்லை. லிடியா அசீரியாவின் நிலப்பகுதியில் ஒரு பாகமாக இருந்தது என்று சொல்வதற்கேயில்லை. அசீரியாவிற்கு எவ்விதத்திலும் அடிபணியாத கடற்கரைக் கிரேக்கர்களை, சைரஸ் அடிபணிய வைத்தது பெரியதும் புதியதுமான ஒரு செயலாகும். சில திசைகளில் இவர் அசீரிய எல்லைகளைக் கடந்தபோதிலும், தெற்கே அசீரியப் பேரரசில் ஒரு பகுதியாக ஒரு காலத்தில் நின்ற ஒரு பெரிய அரசை இவர் படையெடுப்பினுல் தம்வசம் கொண்டு வராமல் விட்டுவிட்டார். ஆனுல் இவருடைய குமாரனுன காம்பைஸஸ் (Cambyses) இவர் விட்டுவிட்ட பகுதியைத் தன் வசமாக்கினுன். சிரியாவின் புதிய ஆட்சியாளர்கள், எகிப்து நாட்டைத் தமக்குக்கீழ் அடக்கிக்கொண்டுவர முயன்றது

தவிர்க்க முடியாத ஒரு செயலாயிற்று. மீதியாவையும் பாபிலோனியாவையும் போல் எகிப்தும் அசீரியர்களின் ஆதிக்கத்தை எறிந்துவிட்டு, நல்லறிவு பெற்ற மன்னர்களின்கீழ்த் தேசீயச் செழிப்படைந்த ஒரு புதிய காலத்தில் நுழைந்ததை நாம் முன்னால் கவனித்தோம். அமாஸிஸ் (Amasis) மன்னர் ஒரு புரட்சியின் விளைவால் பட்டத்திற்கு வந்து, தம்முடைய அதிகாரங்களைக் கிரேக்கக் கொடுங்கோலனைப்போல், அயோனிய, கேரிய கூலிப் படையைக் கொண்ட ஒரு மெய்காப்புப் படையால் நிலை நிறுத்தினார். இவர் எப்படிக் 'கிலிபீயின் (Kelebi) வலிமையையூட்டும் திராட்சை ரச'த்தை விரும்பினார் என்று எகிப்து நூல் ஒன்று கூறுகின்றது. பழைய பாரோக்கள் (Pharaohs) போல இவர் எகிபது தெய்வங்களுக்குப் பெரிய கோவில்களைக் கட்டினார். ஆனால் கிரீஸை இவர் ஆதரித்ததை நாம் கிரீஸஸ் (Croesus)ஸின் செயலுடன்தான் ஒப்பிடமுடியும். இவர் கிரேக்கக் கோவில்களுக்கு அன்பளிப்புகள் பல செய்தார். டெல்பியின் கோவிலைத் திரும்பவும் கட்டுவதற்காக இவர் தாராளமாகப் பணவுதவி யளித்தார். சிரேனியிலுள்ள (Cyrene) ஒரு கிரேக்க அரசிளங்குமாரியை இவர் திருமணம் செய்துகொண்டார். இவருடைய முயற்சியால் நாக்ராட்டிஸ் (Naucratis) ஒரு நகரமாயிற்று. ஆனால் இந்த ஒரே நகரத்துடன்தான் கிரேக்கர்கள் வாணிபம் செய்ய அநுமதிக்கப்பட்டனர். பாபிலோனின் ஆட்சி சிதைந்துகொண்டிருந்தபோது, இவர் தமது ஆதிக்கத்தைச் சைப்ரஸ் தீவின்மேல் பரவச் செய்தார். ஆனால் சைரஸ் பாபிலோனிய மரபுரிமையில் நுழைந்தபொழுது, சைப்ரஸ் தீவு மக்கள் இவருடைய ஆதிக்கத்தைத் தூக்கி எறிந்துவிட்டுப் பாரசீகர்களுக்குப் பணிந்தனர். கிழக்கிலே ஒரு புதிய ஆட்சி எழும்புவதைக் கண்ணுற்ற அமாஸிஸ் நடுக்கம் கொண்டார். காம்பைஸிஸ் செய்யும் ஏற்பாடுகளைக் கிலியுடன் பார்த்தார். ஆனால் படையெடுப்பிற்குச் சில மாதங்களுக்குமுன் மரணமடைந்தார். இவருடைய குமாரனாகிய சாமெட்டிச்சஸ்ஸின்மேல் படையெடுப்பாகிய இடி விழுந்தது. பெலூஸியம் (Pelusium) என்ற இடத்திற்குப் பக்கத்தில் நடந்த போரானது எகிப்தைப் பாரசீகர்களின் கையில் ஒப்புவித்தது. பாரசீக வெற்றிவேந்தன் நீல நதிவரையில் தன் படைகளை நடத்திச் சென்றான். ஒருகால் அவன் எகிப்திய அரசின் தெற்கு எல்லையை நியூபியா (Nubia) வரை நீட்டியிருக்கலாம்; அவன் எத்தியோப்பியாவைக் கைப்பற்றத் திட்டமிட்டதாகவும், போதிய அளவு உணவுப்பொருள் முதலியவை கிடையாமையால் அவனது எண்ணம் நிறைவேற்றப்படாமல் அவன் திரும்பினான் என்றும் எகிப்தியர்கள் கூறுகின்றனர். தங்களது சமயத்தைப்பற்றிப் பழித்துப் பேசியதால் காம்பைஸிஸ்ஸை எகிப்தியர்கள் வெறுத்

தனர். எனவே, தென் எல்லையைச் சரியாக அமைக்கும்படி எடுத்த வெற்றிகரமான முயற்சியை, ஓர் இழிவான தோல்வி என்று எகிப்தியர்கள் வர்ணிக்க முன் வந்திருக்கலாம். லிடியாவைக் கைப்பற்றியதும் எப்படிக் கடற்கரைப் பிரதேசங்களிலிருக்கும் கிரேக்கர்கள் அடிபணிந்தார்களோ அவ்விதமே எகிப்து கைப் பற்றப்பட்டு, பாரசீகத்தின் ஸாட்ராப்பியாக (satrapy) அமைக்கப் பட்டவுடனே, கிரேக்க சிரேனியும் பாரசீகர்களுக்கு அடி பணிந்தது.

பாரசீக அபாயம் அச்சுறுத்தும்போது அமாஸிஸ்ஸும் அவ னுடைய குமாரனும் தம் வலிமை பொருந்திய நண்பனாகிய சாமாஸ் தீவின் ஆட்சியாளனின் ஆதரவைத் தாம் சார்ந்திருக்க முடியும் என்று நம்பியிருக்கலாம். அயோனியா, பாரசீக ஆட்சி யின்கீழ் வந்த சிலகாலத்திற்கெல்லாம் சாமாஸ் தீவில் பாலிக் ராட்டிஸ் (Polycrates) என்பவரும் அவருடைய இரு சகோதரர் களும் சேர்ந்து நாக்ஸாஸ் (Naxos) தீவின் கொடுங்கோலனான லிக் டாமிஸ்(Lygdamis)ஸின் உதவியால் ஒரு கூட்டுக் கொடுங்கோ லாட்சியை நிறுவினர், ஆனால், பாலிக்ராடிஸ் தம் சகோதரன் ஒருவனைக் கொன்றும், மற்றவனை நாடு கடத்தியும் தாமே ஒரு கொடுங்கோலரானார். நூறு * பென்டிகான்டர்கள்(penteconters) கொண்ட ஒரு கப்பற்படையை இவர் ஏற்படுத்திச் சாமாஸ்ஸை வலிமை பொருந்திய ஒரு நாடாக்கினார். அயோனிய நிலப் பகுதி கள் யாவும் பாரசீக ஆதிக்கத்தின் கீழ் விழுந்ததனால் ஈஜியப் பிரதேசத்தில் இவரிடந்தான் மிகவும் வலிமையுள்ள கிரேக்கக் கடற்படை இருந்திருக்கலாம். இவருடைய சிறப்புப் பொருந்திய கூத்துக்கும்மாளம் இவைகளை விவரிக்கும் (Bacchic poet) கவிஞர் அனக்ரியான் (Anacreon) என்பவர் இருந்ததால் அரசவை சிறப் புற்றுத் துலங்கியது. ஹீராவின் பெரிய கோவிலைக் கட்டி முடித் தார். மலைக்கு அப்பாலுள்ள ஊற்று ஒன்றிலிருந்து நகரத்திற்குக் குடிநீர் வசதிக்காக இவர் கட்டுவித்த கட்டுக்கால்வாய் இவருடைய அருஞ்செயல்கள் யாவற்றிலும் தலைசிறந்தது. மேகாராவின் கட்ட டக் கலைஞர் யூபாலினஸ் என்பவருடைய பொறியியல் திறம் இந்தக் கட்டுக் கால்வாயை மலையினுள் குடைந்தெடுக்கப்பட்ட சுரங்கத்தின் வழியாகக் கொண்டு சேர்த்ததிலிருந்து தெரிய வரு கின்றது. ஆதென்ஸ் நகரில் பிஸிஸ்ட்ரேட்டஸ்ஸின் நீர் வசதி முறையை இவரே கட்டியிருக்கலாம். இவர் எதை எடுத்தாலும் வெற்றி கண்டார். இவர் பாரசீக ஆட்சியை எதிர்த்தார்.

* ஐம்பது துடுப்புகளைக் கொண்ட பழைய கிரேக்கக் கப்பலுக்கு இந்தப் பெயர் கொடுக்கப்பட்டது.

பாரசீக ஆதிக்கத்தினுள் இருக்கும் சில அயோனிய நகரங்களின்மேல் தம் செல்வாக்கைப் பெருகச் செய்தார். இவர் அயோனியாவின் அதிபராகவும் எண்ணியிருக்கலாம். பாரசீகத்தை எதிர்ப்பது தமது பொதுநலத்திற்கானதே என்று கொண்ட இவரும், எகிப்திய அமாஸிஸ்ஸும் ஒரு நெருங்கிய நேச உடன்படிக்கை செய்துகொள்வது இயல்பானதே. ஆனால் ஆபத்து நேரத்தில் எகிப்தின்மேல் காம்பைஸிஸ் படையெடுக்கும் போது இந்தச் சாமாஸ் கொடுங்கோலர் தம் கொள்கையை மாற்றியமைத்தார். பினீஷியா, சைப்ரஸ் இவ்விரண்டு நாடுகளின் கூட்டுக் கப்பற்படைகளுக்குத் தமது கப்பற்படை சமமாகாது என்று அறிந்த இவர், தம் நண்பனின் மகனுடைய ஆதரவுக்குப் போகாமல், படையெடுப்பவர்களின் கப்பற்படையை அதிகமாக்க நாற்பது கப்பல்களை அனுப்பினார். ஆனால் இந்தக் கப்பல்கள் எகிப்தை அடையவேயில்லை. தம்மையும் தம் கொடுங்கோலாட்சியையும் வெறுக்கின்றவர்கள் என்று இவர் சந்தேகங் கொண்டவர்களை எல்லாம் இந்தக் கப்பல்களில் மாலுமிகளாக்கினார். ஆனால் இவருடைய தந்திரம் இவரையே எதிர்த்துத் திருப்பி அடித்தது. கார்ப்பேதஸ் தீவை அடைந்ததும் மாலுமிகள் சாமாஸ் ஸிற்குத் திரும்பிப் போய்க் கொடுங்கோலரைப் பதவியிலிருந்து தள்ளவேண்டும் என்று தீர்மானித்தனர். சண்டையில் தோற்றுப் போகவே இவர்கள் ஸ்பார்ட்டாவின் உதவியை நாடினார்கள். இவர்களுடைய வேண்டுகோளைக் கொரிந்தியர்கள் பலமாக ஆதரித்தனர். இதற்குக்காரணம், ஒருவேளை அவர்களுடைய வாணிபம் பாலிக்ராட்டிஸ்ஸின் கடற்கொள்ளைக்காரரைக் கொண்ட கப்பல்களினால் தாக்கப்பட்டு நாசமாக்கப்பட்டதாக இருக்கலாம். சாமாஸ்ஸை முற்றுகையிட லாசிடீமோனியர்கள் ஒரு கப்பற் படையை அனுப்பினார்கள். இதுவே அவர்கள் கிழக்குப்பிரதேசத் திற்கு அனுப்பிய முதல் படையெடுப்பாகும். இந்தப் படையெடுப்புத் தோல்வியுற்றது. நகரத்தைப் பிடிக்க முடியாது என நம்பிக்கை இழந்து, கைகலப்பு ஒன்றிலும் எதிர்த்துத் தள்ளப் பட்டு, இவர்கள் தங்களது நாட்டிற்குத் திரும்பினர்.

சாமெட்டிச்சஸ்ஸுடனும் அதற்கு முந்தி அமாஸிஸ்ஸின் ஆட்சிக்காலத்தின் கடைசிப் பாகத்திலும் பாலிக்ராட்டிஸ் கொண்டிருந்த தொடர்பைப்பற்றி நாம் ஒன்றும் அறியாததனால், இவர் எகிப்திற்கு விரோதமாகப் பாரசீகத்துடன் சேர்ந்துகொண்டதை வஞ்சகம் என்று சொல்லுவதற்கில்லை. 'பாலிக்ராட்டிஸ் ஸின் மோதிரம்' என்ற கதையிலிருந்து இருநாட்டிற்கும் இருந்த நேச உடன்படிக்கை முறிந்தது என்றும், அமாஸிஸ் (Amasis) இதனை முறித்தான் என்றும் அறிகிறோம். ஒருபொழுதும்-

இடர்ப்பாடே யறியாத தன் நண்பரின் வியக்கத் தகுந்த செழுமையைக் கேட்ட அமாஸிஸ் இவருக்கு ஒரு கடிதம் எழுதினன். இந்தக் கடிதத்தில், இவ் வகையான பெரிய தானதும், நீடித்திருக்கின்றதுமான நற்பாக்கியமானது தேவர்களின் பொருமையைக் கட்டாயம் எழுப்பிவிடும் என்ற தனது பயத்தைத் தெரிவித்து, இவ்விதத் தீங்கு நேரா வண்ணம் எதைத் தாம் எறிந்துவிட்டால் அதிகமான மன வேதனை யடைவாரோ 'அந்தப் பொருளை இந்த உலகத்தி லிருந்தே முற்றும் தூக்கி எறிந்துவிடும்' என்றும் குறித்திருந்தான். இந்த வார்த்தைகளை மதித்து நம்பிய பாலிக்ராட்டிஸ் ஐம்பது துடுப்புகள்கொண்ட ஒரு கிரேக்கக் கப்பலில் (penteconter) சென்று, தாம் மிகவும் அருமையாக வைத்திருந்ததும், விலையுயர்ந்த மணிக்கல் வேலைப்பாட்டு வல்லுநரான தியோடோரஸ் (Theodorus) செதுக்கியுள்ளதும், மரகதக் கல் பதிக்கப் பெற்றதுமான தமது மோதிரத்தை நடுக்கடலில் எறிந்தார். சில நாட்களுக்குப் பின், மீன்பிடிப்பவன் ஒருவன் இவருடைய அரண்மனைக்கு வந்து பெரிய மீன் ஒன்றை அன்பளிப்பாக ஈந்தான். இவருடைய மோதிரம் அந்த மீனின் வயிற்றிலிருந்தது, பாலிக்ராட்டிஸ், நடந்த யாவையும் விவரமாக அமாஸிஸ்ஸிற்கு எழுதினர். அமாஸிஸ் அந்தக் கடிதத்தை வாசித்து, ஒருவனுடைய ஊழ்வினைப் பயனை மற்ற ஒருவனாலும் மாற்ற இயலாது என்று அறிந்தான். பாலிக்ராட்டிஸ்ஸின் முடிவு மோசமாயிருக்கும் என்று பூர்ணமாக நம்பிய அமாஸிஸ், தன் நண்பரின் துர்ப்பாக்கியத்தின் நிமித்தம் தான் வருத்தப்படக் கூடாது என்று எண்ணி, தங்கள் இருவரையும் இணைத்த நட்பை உடைத்தெறிந்தான். இந்த எகிப்தியனின் தீர்க்கதரிசனம் நிறைவேறிற்று. லாசிடீமோனியர் களை அடித்துத் துரத்திய பிறகு, பாலிக்ராட்டிஸ் ஸார்டிஸ்ஸி லுள்ள பாரசீக ஸாட்ராப் வைத்த சூழ்ச்சிப் பொறியில் அகப் பட்டுச் சிலுவையில் அறையுண்டார்.

## 4. டேரியஸ்ஸின்கீழ் அயோனியா

கலகம் ஒன்று ஏற்படவே காம்பைஸஸ் மன்னன் எகிப்தி லிருந்து திரும்பி அழைக்கப்பட்டான். சில கிழக்கு மாகாணங் களின் பேராட்சியைத் தன் சகோதரனாகிய ஸ்மெர்டிஸ் (Smerdis) என்பவனிடம் ஒப்படைத்திருந்தான். ஆனால், ஸ்மெர்டிஸ்ஸுக்குத் தன்னிடம் பற்று இல்லை என்ற ஐயம்கொண்டு இவன் அவனைக் கொலை செய்தான். இதற்குப்பின் எல்லாவிதத்திலும் ஸ்மெர் டிஸ்ஸைப்போலவே காணப்பட்ட ஒருவன் தான்தான் ஸ்மெர்டிஸ் என்று பொய் உரிமை கொண்டாடி, உரிமைப் போர் நடத்த

எத்தனித்தான். பொய்யான ஸ்மெர்டிஸ்ஸை அழிக்கக் காம்பை ஸஸ் விரைந்து ஓடினான். ஆனால் இவன் சிரியாவின் வழியாகப் போகும்போது, பெஹிஸ்தன் (Behistun) பாறையில் காணப் படும் பெரிய எழுத்து ஒன்று அறிவிக்கின்றபடி, 'தன் கைகளினாலே தன் மரணத்தை அடைந்த'தாகத் தெரிகிறது. இவனுக்குப்பின் பாரசீக அரியணைக்கு மரபுரிமையாளர் ஹிஸ்டாஸ்பஸ் (Hystaspes) என்பவர். இவர் பார்த்தியா (Parthia) ஸாட்ராப்பாக இருந்து வந்தார். இவருக்கு டேரியஸ் என்ற ஒரு மகன் இருந்தார். தனது உரிமையை நிலைநாட்ட ஹிஸ்டாஸ்பஸ் முயற்சி ஏதும் எடுத்துக் கொள்ளாததனால், போலி ஸ்மெர்டிஸ் தன்னை உறுதியாய் நிலை நிறுத்திக்கொண்டான். எனவேதான், பிற்காலத்தில் புகழ் பெற்ற கல்வெட்டுப் பொறிப்புகள் கொண்ட பாறையில் பின் வருமாறு டேரியஸ் எழுதினார்: 'பாரசீகன் ஆனாலும் சரி அல்லது மிதியன் ஆனாலும் சரி, இவனை எதிர்த்து நிற்க அஞ்சினார் கள்.' டேரியஸ் தம் தகப்பனுக்கு மாறுபட்ட கருத்துக்களை யுடையவராயிருந்தார். அறுவருடன் சதி செய்து, பதவிக்கு உரிமையற்ற ஸ்மெர்டிஸ்ஸைக் கொன்று, தம்மை அரசராக்கிக் கொண்டார். சைரஸ் ஒன்றுசேர்த்த இப் பெரிய பேரரசின் எல்லாப் பாகங்களிலும் கலகங்கள் ஏற்பட்டன. ஈலாம் (Elam) பாபிலோனியா, மிதியா, ஆர்மீனியா முதலிய நாடுகள் கலகம் செய்தன. புதியதோர் போலி ஸ்மெர்டிஸ் தோன்றினான். பாபி லோனை இரண்டு தரம் முற்றுகை இட வேண்டியதாயிற்று. ஆனால் டேரியஸ் தம் ஆட்சியின் முதல் சில ஆண்டுகளில் இக் கலகங்களை அடக்கித் தம் வலிமையையும், திறமையையும் மற்றவர் களுக்குக் காட்டினார். சோயாஸ்பிஸ் (Choaspes) நதியின் மேலோட் டத்திற்கு அருகிலுள்ள பெஹிஸ்தனில் காணப்படும் உயர்ந்த பாறையில், பிற்கால மக்கள் அறியும்படி டேரியஸ் தமது முதல் ஆண்டுகளில் தாம் துன்பங்களின் மத்தியில் பெற்ற வெற்றிகளை எழுத்துமூலமாகப் பதித்துள்ளார். இவை பாரசீகம், சூசிக் (Susic), பாபிலோனியன் ஆகிய மொழிகளில் எழுதப்பட் டுள்ளன.

சைரஸ்ஸின் மகளும் அவளது சொந்தச் சகோதரனாகிய காம்பைஸஸின் கைம்பெண்ணுமாகிய அட்டோஸ்ஸா (Atossa)வை டேரியஸ் மணந்துகொண்டதால், அவர் தம் முன்னோர் குடும்பத்துடன் நெருங்கிய ஒரு தொடர்பை ஏற்படுத்த முடிந்தது. தம் பேரரசின் ஆட்சி முறையை மாற்றி அமைக்க முற்பட்டார். ஸாட்ராப்பிகள் அல்லது அரசாங்கங்களின் முறையை விரிவாக்கிப் பேரரசு முழுவதையும் இருபது ஸாட்ராப்பிகளாகப் பிரித் தார். ஹாலிஸ் (Halys) நதிக்கு மேற்கேயுள்ள பழைய லிடியன்

அரசை மூன்று மாகாணங்களாகப் பிரித்தார். இதில் அயோனியாவிற்கும், லிடியாவிற்கும் சேர்த்து ஒரு மாகாணத் தலைவரை ஏற்படுத்தி அவரை ஸார்டிஸ்ஸில் வசிக்கச் செய்தார். ப்ரோபான்டிஸ்ஸிலுள்ள கிரேக்க நகரங்களைத் தன்னுட்கொண்ட பிரிஜியாவில் ஒரு மாகாணத் தலைவரை ஏற்படுத்தினர். இந்தக் கவர்னரின் தலைநகரம் டாஸிலியான் (Dascylion). கிரேக்க நகரங்களின் குறுநில ஆட்சி (local administration), வல்லாட்சியாளர்களின் கையில் இருந்தது. இவைகளின் குறு நில ஆட்சியில் ஸாட்ராப்புகள் குறுக்கிட முடியாதபடி செய்தார். வல்லாட்சியாளர் துணைப் படைகளைத் தேவையானபோது கொடுத்துதவக் கடமைப்பட்டவர்கள். அதே நேரத்தில் கப்பமும் ஒழுங்காகக் கட்ட வேண்டும். இவ்விரண்டு காரியங்களை ஒழுங்காகச் செய்தால் தமது குறு நில ஆட்சியில் அவர்கள் எது வேண்டுமானாலும் கேட்பாரின்றிச் செய்யலாம். பாரசீகர் இவர்களுடைய அதிகாரத்தைப் பாதுகாத்து வந்ததால் வல்லாட்சியாளர்கள் பாரசீக ஆட்சியை விரும்பினர். டேரியஸ்ஸின் ஆட்சித் துவக்கத்தில் பல அல்லல்கள் இருந்தபோதிலும், ஆசியா மைனரிலுள்ள கிரேக்கர்கள் பாரசீக ஆதிக்கத்தை உதறித் தள்ளுவதற்கு முயற்சி எடுக்காததற்கு இதுவே முக்கிய காரணமாகும். இதுவுமன்றிக் காம்பைஸஸ் காலத்தில் இருந்ததைவிட இவர்களுடைய நிலைமை டேரியஸ்ஸின் காலத்தில் சிறந்ததாகவே இருந்திருக்கலாம். ஒழுங்கற்ற முறையில் வரிப் பணத்தை அப்போதைக்கப்போது வாங்காமல் டேரியஸ் ஆண்டுதோறும் கொடுக்கவேண்டிய கப்பத்தொகையை நிலையானதாகச் செய்தார். இவருடைய நாணயச் சீர்திருத்தங்களினாலும், பாரசீகத்தின் சாலைகளை இவர் செம்மையாக்கியதாலும் வாணிபம் வளர்ந்தோங்கியது. லிடியாவில் கிரீஸஸ் புகுத்திய இரட்டை உலோக நாணய முறையை இவர் கடைப்பிடித்தார். பாரசீகத்தின் முக்கிய தங்க நாணயம் டேரிக் என்ற பெயரால் கிரீஸில் எப்பொழுதும் வழங்கப்பட்டது. செய்திகளை அங்கும் இங்குமாகத் தூதர்கள் எடுத்துச்செல்ல உதவிய சூஸாவிற்கும் ஸார்டிஸ்ஸிற்கும் இடையிலுள்ள அரசருடைய சாலையானது ஒழுங்கு முறையில் அமைக்கப்பட்ட நிலயங்களைக் கொண்ட வழியிடைப்படிகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. இந்தச் சாலையின் நீளம் 1500 மைல்களுக்குமேல் இருக்கும். ஒரு மனிதன் இந்த அளவு தூரம் நடக்க மூன்று மாத காலம் ஆகும். சூஸாவைப் பார்க்கச் செல்லும் கிரேக்கன் ஒருவன் முதலில் எபிஸஸ்ஸை (Ephesus) அடைவான்; அங்கிருந்து மூன்று நாள் பயணத்தின் பின், ஸார்டிஸ்ஸைச் சேர்வான். இந்தச் சாலை பிரிஜியாவினூடே சென்று, 'தங்கமாக மாறிய' மன்னரான மைடாஸ் (Midas) ஸின் கல்லறையைத் தொட்டு, பெஸ்ஸினஸ் (Pessinus), ஆன்

சைரா (Ancyra) முதலிய நகரங்களின் பக்கமாகச் சென்று, ஹாலிஸ் ஆற்றைக் கடந்து, கிரீஸஸ் கைப்பற்றிய கப்படோஷிய நகரமாகிய டீரியாவை (Pteria) அடையும். அங்கிருந்து ஹாலிஸ் நதியைத் திரும்பவும் கடந்து தெற்கேயுள்ள மாஸாகா (Mazaka), கோமானு (Comana) நகரங்களின் வழியாகச் சென்று டாரஸ் (Taurus) நதியைக் கடந்து சமோஸாடா (Samosata) வில் யூப்ரெட்டீஸ் நதியை அடைந்தது. யூப்ரெட்டீஸ் நதிக்கு அப்பால் மெசோபொடேமியாவிற்கு வடக்கிலுள்ள மலைகளைச் சுற்றி நிஸிபிஸ் (Nisibis) ஸினூடே சென்று அசீரியாவின் அழிவற்ற தலைநகராகிய நினிவேயில் டைக்ரீஸ் (Tigris) நதியை அடைந்தது. ஆர்பீலா (Arbela) விற்கு அப்பால் இது தென்கிழக்காக ஓடி, சோயாஸ்பிஸ் (Choaspes) நதியையும் அதன்பின் சூஸாவையும் அடைந்தது. மிகவும் கவலையுடன் பராமரிக்கப்பட்டு நல்லவிதமாகவும் பாதுகாப்பாகவும் அமைந்த இந்தச் சாலையானது மத்திய ஆசியாவை ஈஜியனுக்கு அருகில் கொண்டு சேர்த்து, மேற்கு நாட்டு மக்கள் அறிவார்வத்துடன் கவனிக்குமாறு கிழக்கு நாடுகளைத் திறந்துவிட்டது. அரசருடைய சாலை அமைக்கப் பெற்றது, புவியியலைப்பற்றிய கிரேக்கர்களுடைய அறிவை விரிவாக்குவதில் வரையறுக்க முடியாத விளைவை உண்டாக்கியது. முதல் கிரேக்க நிலப் படங்களில் இது முக்கியத்துவம் பெற்றதிலிருந்து இதன் செல்வாக்கு விளங்குகின்றது.

கிழக்கு மேற்காகச் செல்லும் பாவனையாக எரோடட்டஸ் வகுத்த கோடுதான் இன்று நம் நிலப்படங்களில் நாம் பயிலும் நடுநிலக் கோடாகும். நைல் நதியையும், டான்யூப் நதியையும் கிரேக்க உலகத்தினர் இரு பெரிய நதிகளாகக் கொண்டிருந்தனர். இவை வடக்கிலிருந்து கிழக்கு முகமாகப் பாய்வதாகக் கருதப்பட்டன. எனவே, இந்த இரு நதிகளும் ஒரே நிரைகோட்டில் அமைந்திருப்பதாகக் கொண்டமையால், இவற்றை அக் கால உலகின் மைவரை வட்டமாகக்கொண்டனர். இக் கோடு சினோப்பை (Sinope) ஊடு நவிச் சென்றது. ஏழாம் நூற்றாண்டின் இறுதியில் தோன்றிய அயோனிய நிலநூல் வல்லுநரின் கூற்றுப்படி அக் காலத்தில் கிரேக்கர்கள், நிலத்தோற்றம் செவ்வொழுங்கான முறையில் அமைந்திருந்ததாகக் கருதினர். நிலப்பரப்பின் சிறு பகுதியைக் கணித முறைப்படி தவறாக வகுத்த அக் காலத்து நிலப் படங்களைப் பார்த்தால், அவை மிகவும் விசித்திரமான தோற்றத்தை யளிக்கின்றன. அனுக்ஸிமியாண்டர், ஹெக்டேயஸ் என்னும் மைலீட்டஸ்ஸைச் சார்ந்த இரண்டு அயோனிய ஆய்வாளர்கள் கண்டுபிடித்த புதியனவும் அறிவுத்திறன் மிகுந்தனவுமான செயல்களை நாம் ஒப்புயர்வற்றதாகக் கொள்ள வேண்டும். அனுக்ஸி

மியாண்டர் முதல் நிலப்படத்தைக் கண்டுபிடித்தார். ஹெக்க டேயஸ் எழுதிய நிலவியல் ஆராய்ச்சி அந்த நிலப்படத்தை அறிந்துகொள்வதற்கேற்ற நூலாக அமைந்தது. ஹெக்கடே யஸ பல இடங்களுக்குச் சென்று அநுபவ அறிவு பெற்றவர். எகிப்தின் அதிசயங்களை விளக்கும் வழிகாட்டு நூலை முதன் முதலில் தொகுத்தவர் இவரே. இவர் வாழ்ந்த இடம் வாணிபர் களும் வழிப்போக்கரும் அடிக்கடி தங்கிச் செல்லும் இடமாகை யால், தம் சொந்த அறிவுடன் கேள்வி வாயிலாக அறிந்தவற் றையும் சேர்த்துத் தம் நூலைத் தொகுத்தார். அயோனுவில் ஆரம்பமான நிலநூல் முன்னேற்றத்திற்குப் பாரசீக மன்னர் நிறுவிய ராயல் ரோட் என்னும் பெருஞ்சாலை பேருதவியாயிருந் தது. இதன் பயனுகப் பாரசீகர் கிழக்குக் கிரேக்க நாட்டைக் கைப்பற்றியதால் ஐரோப்பாவின் நாகரிகம் மேம்பட ஏது வாயிற்று.

புதிய துறைகளில் ஆராய்ச்சி நடத்திய அயோனிய அறிஞர் களின் செயல்களுக்கு ஐரோப்பா பெரிதும் கடமைப்பட்டிருக் கிறது. இப் புதிய இயக்கத்தைப்பற்றி நாம் சிறிது சிந்திப்போம். வாணிபத்தின்மீதுள்ள ஊக்கம், சரியான முறையில் அறிவைப் பெற வேண்டும் என்ற கிளர்ச்சி ஆகிய பல உணர்ச்சிகளின் தூண்டுதல்களால் இந்த இயக்கம் ஏற்பட்டதால் இதைப்பற்றி அறிய வேண்டும் என்று ஓர் ஆவல் ஏற்படுகின்றது. அனுக்ஸிமி யாண்டர் நிலப்படம் அமைப்பதில் முதலிடம் பெற்றவர். பல துறைகளில் ஈடுபட்ட இவர் இயற்பொருள் ஆயும் தத்துவ ஞானி யாவார். இப் பிரபஞ்சத்தின் அடிப்படைத் தத்துவம் நீரைக் கொண்டது என்று தேல்ஸ் கூறியதை இவர் ஒப்புக் கொள்ளவில்லை. அதைவிடப் பொதுப்படையான ஒரு கருத்தை எதிர்மறையாக, 'பண்புகளால் வரம்பிகந்தது' என்று குறிப் பிட்டார். எனவே, நம் புலன்களால் பெறும் அறிவால் அதனைப் பல்வகையான தெளிவான பருப்பொருளாகக் கொள்ளலாம் என்று முடிவு கண்டார். ஹெக்கடேயஸ் கிரேக்க வரலாற்று நூலை முதன்முதலில் இயற்றியவராவர். இவர் பண்டைக் கொள்கைகளிலிருந்து ஓரளவுக்கு முரண்பட்டவராய் ஹெசி யோடிக் குழுவினரின் இறைமைக் கொள்கைகளைக் கண்டித்து எழுதியுள்ளார், புராண நூல்களில் வீரர்கள், அப்போலோ, ஸீயஸ் ஆகிய தேவர்களின் மக்களாகக் கருதப்பட்டனர். ஆனல் அவர்கள் அத்துணை உயர்ந்தவர்கள் அல்ல என்று இவர் குறிப் பிடுகின்றுர். கிரேக்கக் கதைகள் பலவகைப்பட்டவை என்றும், பொருளற்றவை என்றும் கருதினுர். சமயத்துறையின் ஆணை யாட்சியைப் பகுத்தறிவால் எதிர்க்கும் இயக்கத்துக்கு அடிகோலிய

வருள் ஹெக்கடேயஸ்ஸும் ஒருவராவர். இவர் காலத்தில் இம் முயற்சியில் இவரைக் காட்டிலும் பகுத்தறிவை ஆணித்தரமாக எடுத்து நிறுத்துவதில் திறமை பெற்றவர் கொலோபோனைச் சார்ந்த க்செனேபேன்ஸ் என்பவர். அவரைப்பற்றிப் பிறிதோர் இடத்தில் காண்போம்.

கிரேக்கக் கடல்களுக்கு வெகு தொலைவிலுள்ள சூஸா நகருக்குக் கிரேக்கர்கள் யாது காரணம்பற்றியாயினும் செல்ல நேரிட்டால், அவர்கள் தாய் நாட்டைப் பிரிந்த துயர் ஆற்றாது வாடுவர். க்ரோடான் என்னும் இடத்தைச் சேர்ந்த டெமோசிடிஸ் என்ற விந்தைமிகு மருத்துவரின் வரலாறு கிரேக்கரது இப் பண்புக்கு சிறந்ததோர் எடுத்துக்காட்டாகும்.

ஈகைனா, ஆதென்ஸ் ஆகிய நகரங்களில் டெமோசிடிஸ் தம் தொழில் வன்மையால் பெருநிதி திரட்டினார். மேலும், சாமோஸின் மன்னனான பாலிக்ராட்டிஸிடம் பொதுத் துறையில் திறமையுடன் மருத்துவப் பணியாற்றி, மிகுதியான ஊதியம் பெற்றார். இக்கொடுங்கோல் மன்னனின் மறைவுக்குப்பின் ஏற்பட்ட குழப்பங்களின் பயனாக இவர் சூஸாவுக்குக் கைதியாக எடுத்துச் செல்லப்பட்டார். அப்போது பந்தய ஓட்டத்தில் டேரியஸ் மன்னரின் கால் முறிந்தது. இவரது கைவன்மையைச் சோதிக்கச் சிறைக்கிடங்கிலிருந்து இவரை அழைத்துப் போனார்கள். இவரது வெற்றியால் மன்னரது ஆதரவைப் பெற்றார். இவர் தமது நாடு செல்ல ஏங்கியிருந்தார். அதற்கு அநுமதி தருவதைத் தவிர வேறு எதை வேண்டுமானாலும் அவருக்குக் கொடுப்பதாக மன்னர் வாக்களித்தார். இதற்கிடையில் அவரது பட்டத்தரசியான அட்டோஸ்ஸா ஒரு கட்டியினால் அவதியுற்றாள். அரசி டெமோசிடிஸ்ஸை அழைத்து வரச் செய்தாள். தாம் சரியான சிகிச்சை அளித்தால் தாம் கேட்டதை அருள்வதாக அரசி வாக்களிக்கும்படி டெமோசிட்டஸ் கேட்டுக்கொண்டார். அப்படியே அரசியும் வாக்களித்தாள். தம் காரியத்தில் வெற்றி கண்ட டெமோசிடிஸ் அரசியின் அருளைப் பெற்றார். இவரது ஏவுதலால் அரசி மன்னருக்குக் கிரேக்க நாட்டின்மீது படையெடுக்கும் ஆவலைத் தூண்டி டெமோசிடிஸ்ஸின் தலைமையில் ஒற்றர்களை அனுப்பி, விவரம் அறிந்துகொண்டு வரும்படி ஏவினாள். இக் கதையின் மூலம் சைரஸ்ஸின் மகளான பட்டத்தரசி மன்னரின் செல்வாக்கைப் பெற்றுத் தன் காரியங்களைச் சாதித்துக்கொள்ளும் திறமையைப் பெற்றிருந்ததும் அறியப்படுகிறது. டெமோசிடிஸ்ஸின் திட்டம் வெற்றி பெற்றது. தான் மீண்டும் பாரசீகத்துக்கு வருவதாக வாக்களித்ததால் மன்னர் ஏராளமான பரிசுகளை அவரது வீட்டாருக்கு

எடுத்துச் செல்லும்படி வழங்கினார். அவர் வழியில் தப்பிச் செல்லாதவாறு பார்த்துக்கொள்ளும்படி தம் ஆட்களுக்குக் கட்டளையிட்டிருந்தார். திட்டத்தின்படி கிரேக்கரின் இத்தாலியக் குடியேற்றப்பகுதி வழியாக இவர்கள் சென்றதாகக் கூறப்படுகிறது. இவர்கள் டாராஸ்ஸை அடைந்தபோது அந் நகரத்தின் தலைவர் பாரசீக ஒற்றர்களைப் பிடித்துச் சிறையிடச் செய்தார். எனவே, டெமோசிடிஸ் தப்பிச் செல்லத் தருணம் வாய்த்தது. ஒற்றர்கள் விடுதலை பெற்றபோது, சுய நாட்டை அடைந்த டெமோசிடிஸ்ஸைப் பின்பற்றிச் சென்று க்ரோடானை அடைந்தனர். அப்போது அந் நகர மக்கள் அவரைக் காட்டிக்கொடுக்க மறுத்து விட்டனர். இதன் விளைவாக, பாரசீகப்படை யொன்றைக் கிரேக்க நாட்டுக்கு அனுப்பத் துணிந்தனர். சூஸா அரசவையில் கிரேக்கரது முதல் மருத்துவராக விளங்கிய இவரைப்பற்றி மக்களிடையே வழங்குவது இந்த விநோதக் கதை. உண்மையும் கற்பனையும் இதில் பின்னிக் கிடப்பதைக் காணலாம். இவர் ஒருவர் தாம் சூஸாவுக்குப் போனார் என்பதில்லை; பிற கிரேக்கரும் உண்டு. அவ்வாறு புகழ் பெற்று ஏராளமாகப் பணம் ஈட்டினார் வேறொரு மருத்துவர்; நாடு கடந்து சென்ற அவர் வெளிநாட்டிலேயே தங்கி, அந் நாட்டின் வரலாற்றையும் எழுதியதாகக் கூறப்படுகிறது. அவரையும் நாம் பிறிதோர் இடத்தில் காணலாம்.

## 5. டேரியஸ்ஸின் ஐரோப்பியப் படையெடுப்பு — திரேஸைக் கைப்பற்றுதல்

மத்தியதரைக் கடலின் கிழக்குக் கரைகளைச் சைரஸ் (Cyrus) கைப்பற்றினார். எகிப்து நாட்டை அடக்கியதால் காம்பைஸஸ் (Cambysus) தெற்குப் பகுதி முழுவதையும் தம்முடையதாக்கினார். டேரியஸோ திரேஸ்ஸை அடக்கி, வடக்கு பகுதியைத் தம் கீழ்க் கொண்டு வந்தார். தமக்கு அடுத்தாற்போலிருக்கும் ஆப்பிரிக்காக் கண்டத்தின் பகுதியைத் தாம் அடைந்திருத்தல் சிரியாவின் தலைவருக்கு எவ்வளவு முக்கியத்துவத்தை அளிக்குமோ, அதே முக்கியத்துவத்தை ஆசியா மைனரைத் தம்முடையதாக்கிய தலைவருக்கு இது போன்றே பக்கத்திலுள்ள ஐரோப்பாக் கண்டத்தின் ஒரு பகுதியைத் தம் வசம் செய்து கொள்வது இன்றியமையாததேயாகும். தமது நாட்டைச் சரிப்படுத்த எட்டு ஆண்டுகள் செலவிட்ட இவர், இப்போது ஐரோப்பியப் படையெடுப்புக்காக ஆயத்தங்கள் செய்தார். இவருடைய மூல நோக்கமானது டான்யூப் நதிவரையிலுள்ள திரேஸியன் மக்களைத் தமக்குக்கீழ் அடக்கிக்கொண்டு வந்து

டான்யூப் நதியைத் தமது பேரரசின் வடக்கு எல்லையாக்க வேண்டும் என்பதாகும். இரண்டாவதாக, மேற்கே மாசிடோனியா வரையில் தமது பேரரசை விரிவாக்க எண்ணங் கொண்டார். திரேஸிய இனத்தவர் போரில் விருப்பமுள்ளவர்கள். அவர்களுடைய நாடோ மலைகள் நிறைந்தவை. எனவே, பாரசீக முயற்சி வெற்றி காணவேண்டுமானால் பாரசீகர்கள் பெரியதொரு படையைக் கொண்டிருக்க வேண்டும். அதே நேரத்தில் அவர்கள் முன் எச்சரிக்கையுடன் நடந்துகொள்ள வேண்டும். பைசான்டியத்திற்கு (Byzantium) வடக்கே, பாஸ்பரஸுக்குக் (Bosphorus) குறுக்கே கட்டிடக்கலை வல்லுநரான மாண்ட்ரோக்ளீஸின் (Mandrocles) திறமையினால் படகுகளாலாகிய ஒரு பாலம் கட்டப்பட்டது. இந்தப் பாலத்தை எல்லாப் பாரசீகப் படைகளும் கடந்த பிறகு டேரியஸ் ஐரோப்பியப் பகுதியில் இரண்டு பெரிய தூண்டுகளை நிறுத்தி, அவைகளில் தம் படையிலுள்ள எல்லோருடைய பெயர்களையும் கிரேக்க எழுத்திலும், க்யூனிபார்ம் (cuneiform) எழுத்திலும் பொறிக்கும்படி கட்டளையிட்டார். இந்தப் பெரிய தூண்களை வரலாற்று அறிஞர் எரோடட்டஸ் தம் கண்களாலே பார்த்திருக்கிறார். ஐரோப்பாவுக்குள் கடந்து சென்றதைப்பற்றிய மற்றொரு நினைவுச் சின்னம் சேமாஸ் (Samos)ஸிலுள்ள ஹீராவின் (Hera) கோவிலில் காணப்படுகின்றது. மாண்ட்ரோக்ளீஸ் தமக்குப் பரிசாகக் கொடுக்கப்பட்ட தொகையில் ஒரு பகுதியை ஹீராவின் கோவிலில் ஓர் ஓவியம் தீட்டச் செலவிட்டார். இந்த ஓவியத்தில் பாலமும், வீரர்கள் கடந்து போதலும், அவர்களுக்கு மத்தியில் முக்கிய இடத்தில் டேரியஸ் உட்கார்ந்திருப்பதும் வெகு தெளிவாகக் காட்டப்பட்டிருக்கின்றன. இவர் இதில் கீழே கூறப்பட்டுள்ள பொருளைக் கொண்ட நான்கு பாக்களைப் பொறித்தார்: - 'மீன் நிறைந்த பாஸ்பரஸ்ஸிற்குக் குறுக்கே பாலத்தைக் கட்டியதும், தம் படகுகளாலாகிய பாலத்தின் நினைவுச் சின்னம் ஒன்றை ஹீராவிற்கு மாண்ட்ரோக்ளீஸ் படைத்தார். இவர் முடித்த செயலானது டேரியஸ் மன்னருக்கு மகிழ்ச்சியை உண்டுபண்ணியதால், இவர் தம் தலைக்கு ஒரு கிரீடத்தையும், சேமாஸ் மக்களுக்கு அழியாப் புகழும் தேடிவைத்தார்.' கருங்கடலின் திரேஸியக் கரையோரத்தில் டான்யூப் நதியின் முகத்துவாரம் வரை போக்குவரத்துக்கும், இராணுவத்தின் ஆதரவுக்கும் அதனுடன் ஒத்துழைப்புக்குமாகப் பாரசீகத்தின் கிரேக்கக் குடிகள் ஒரு பெரிய கப்பற் படையை டேரியஸ் மன்னருக்குக் கொடுத்தனர். பல்வேறு கிரேக்க நகரங்களிலிருந்து கொடுக்கப்பட்ட துணைப்படைகள் யாவும் அவர்களுடைய வல்லாட்சியாளர்களால் நடத்தப்பட்டன. இவ்விதமாக உதவி

யளித்த வல்லாட்சியாளர்களில் முக்கியமானவர்கள், மைலீட்டஸ்ஸைச் சேர்ந்த ஹிஸ்டியியஸ், லாம்ப்சேக்கஸ்ஸைச் சேர்ந்த ஹிப்போக்ளஸ், திரேஸியாவின் செர்ஸானிஸஸ்ஸைச் சேர்ந்த மில்டியேடிஸ் என்பவர்களாவர்.

திரேஸில் நடந்த யுத்தத்தின் முழு விவரங்களும் பாதுகாத்து வைக்கப் பெறவில்லை. பல கோத்திரங்கள் பணிவுற்றன வென்றும், கீட்டே (Getae) கோத்திரமானது தன் சுதந்தரத்தைக் காக்கப் போராடிக்கடைசியில் சரணடைந்தது என்றும் சொல்லப்படுகிறது. திரேஸியர்கள் படையெடுத்துவந்தவர்களைத் தடுக்க முன்னதாகவே சில ஏற்பாடுகள் செய்திருக்கக்கூடும். டான்யூப் நதிக்கு மேற்புறத்திலுள்ள வாலாஷியா (Wa achia), மால்டேவியா (Moldavia) என்று தற்பொழுது அழைக்கப்படுகின்ற பிரதேசத்தில் [டான்யூப் நதிக்கும், கார்ப்பேதியன் (Carpathians) மலைகளுக்கும் ப்ருத் (Pruth) நதிக்கும் இடையுள்ள பாகம்] வசித்த கோத்திரங்கள் பல விதங்களில் நதிக்குத் தென்புறத்தில் வசித்தவர்களுடன் உறவு கொண்டிருந்தன. கார்ப்பேதியன் மலைகளுக்கும் காக்கஸஸ் மலைகளுக்கும் ஊடே வசித்த சகல விதமான மக்களையும் கிரேக்கர்கள் ஸ்கிதியர்கள் என்று அழைப்பது வழக்கம். இப்போது மேற்கூறிய கோத்திரங்களையும் கிரேக்கர்கள் அப் பெயராலே அழைக்கலாயினர். ஸ்கிதியர்கள் என்று அழைக்கப்பட்டவர்களில் கீழ்க் கோடியிலுள்ளவர்கள் மொழிமுதலியவைகளில் பாரசீகக்காரர்களை ஒத்திருந்தனர். ஆனால் மேற்குக் கோடியிலுள்ளவர்கள் திரேஸியர்களை ஒத்திருந்தனர். டான்யூப் நதிக்குக் கீழ்ப்பாகத்தில் வசித்த மக்கள், ஆசியா மக்களின் படையெடுப்பினால் பயமுறுத்தப்பட்ட போது, தமது வடக்கில் வசித்த அயலகத்தார்களிடமிருந்து பாரசீகர்களின் முன்னேற்றத்தை எதிர்க்க உதவிபெற முயற்சிகள் செய்தது மிகவும் இயல்பான செயலாகும். இவ்வித உதவி விரைவிலும் அளிக்கப்படக்கூடியதே. டேரியஸ் டான்யூப் நதிதீரத்தை அடைவதற்கு முன்னமே டான்யூப் நதிக்கு மேல்பாகத்தில் வசிக்கும் ஸ்கிதியர்கள் திரேஸிலுள்ள பாரசீக அரசாட்சிக்கு அடிக்கடி அல்லல்கள் விளைவிக்கக்கூடும் என்ற உண்மையை அறிந்திருந்தார். குளிர்காலத்தில் டான்யூபின் நீர் உறைந்து போகும்பொழுது மிக எளிதில் இவர்கள் நதியின் மேல் நடந்து கடக்க முடியும் என்பதையும் அவர் அறிந்தார். கிரேக்கக் கப்பற்படைகள் நதியின் முகத்துவாரம் வரை சென்று, நதியின் குறுக்கே படகுகளாலாகிய பாலத்தைக் கட்டுவித்தன. டேரியஸ் மன்னரும் அவருடைய படையினரும் ஸ்கிதியாவினுள் புகுந்தனர். உலகத்தின் அதிதூரத்திலுள்ள மூலை என்று கருதப்படும் இந்த இடத்தில் மன்னர் கொண்டுள்ள எண்ணங்களும் திட்டங்களும் அவருடைய செயல்களும்

நமக்குப் புராணக் கதையினுலேதான் தெரிய வருகின்றன. இவர் இங்குத் தமது படையின் பலத்தைச் சில தாக்குதல்கள்மூலம் காட்டி, திரேஸின் அமைதியில்லாத அயலகத்தாரின் மனத்தில் பயத்தை உண்டுபண்ண விரும்பியிருக்கலாம். ஆனால் இங்குச் சொல்லப்பட்டதைக் காட்டிலும் வேறு விளக்கங்களும் இருந்திருக்கக்கூடும். டான்யூப் நதிக்கு அப்பால் போவதற்கு முக்கியக் காரணம், அங்குள்ள டாசியா(Dacia)வின் தங்கச் சுரங்கங்களைக் கைப்பற்ற வேண்டும் என்ற அவாவாகக்கூட இருக்கலாம். இந்த டாசியாவின் தங்கச் சுரங்கங்கள் அகாதிர்ஸி(Agathirsi)யரின் நிலப் பகுதியில் இருந்தன. டேரியஸ் இந்த நிலப் பகுதிக்கும் டான்யூப் நதியின் முகத்துவாரத்திற்கும் இடையே போக்குவரவு சாதனம் ஒன்று அமைக்கவும் ஆசை கொண்டிருக்கலாம். மங்கலாகக் காணும் பழைய வரலாற்றிலிருந்து மூன்று உண்மைகள் தெளிவாகின்றன: முதலாவதாக, பாரசீகர்களின் முன்னேற்றத்தை அகாதிர்ஸியர் மும்முரமாகத் தாக்கினர். இரண்டாவதாக, டான்யூபின் கிளைநதியாகிய ஓரோஸ் (Oaros) கரைகளில் டேரியஸ் பல கோட்டைகளை நிறுவினர் (இந்நதியின் பெயரானது மற்றப்படி ஒருவருக்கும் தெரிய வரவில்லை!) மூன்றாவதாக, இவர் திரும்புவதை எதிர்பார்த்திருந்த கப்பற்படையினுடன் இவருடைய போக்குவரவு சாதனம் சில காலத்திற்குத் தடையுறப் பெற்றது. ஆகையினால் கிரேக்கப் படைத் தலைவர்கள் இவரைக் கைவிட்டுத் திண்டாடும் நிலையில் வைத்து அங்கிருந்து கிளம்பிப் போய்விடும்படி தூண்டப்பெற்றார்கள். இவர்கள் தம்மேல் கொண்ட பற்றினால் இந்தப் படையெடுப்பில் தமக்குச் செய்த உபகாரங்களுக்காக டேரியஸ் பிறகு தம் நன்றியைக் காட்டினார். ஆசியா மைனரிலுள்ள கிரேக்க நகரங்களில் வல்லாட்சியை நிலைநிற்கச் செய்த பாரசீகர்களுக்கு விரோதமாக எழும்பியிருந்தால், அது தமக்கே மோசமாக முடியும் என்ற எண்ணத்தால்தான் இந்தக் கிரேக்கப் படைத்தலைவர்கள் டேரியஸ்ஸிற்கு விரோதமாக எழும்பவில்லை. தான் திரேஸின் வழியாகத் திரும்பி வரும்பொழுது பைசான்டியம், பெரின்தஸ் (Perinthus), சால்சிடன் (Chalcedon) முதலிய நகரங்கள் கலகம் செய்த இந்தக் கட்டத்தில் இவர்களுடைய பற்றானது பாரசீக மன்னருக்கு மிகவும் விலையுயர்ந்ததாகக் காணப்பட்டது. இந்தக் கலகங்கள் இவரைப் பாஸ்பரஸ்ஸுக்குப் போகாமலிருக்கச் செய்தன. இவர் திரேஸியன் செர்சானீஸ் வழியாகச் சென்று ஹெல்லெஸ்பான்டைக் கடந்தார். ஆனால் தமக்குப் பின்னால் மேகபேஸஸ் (Megabazuz) என்பவரின் கீழ் ஒரு படையை விட்டுச் சென்றார். இந்தப் படையானது முதலில் புரோபான்டிஸ் (Propontis) ஈஜியன் கடல்களின் வடக்குக் கரையிலுள்ள கிரேக்க நகரங்களை அடக்கிப் பின்பு திரேஸை முழுவதுமாகக் கைப்பற்றியது. பாரசீக ஆட்சியை

ஸ்டிரைமான் நதிமட்டும் மேகபேஸஸ் நிறுவினார். ஆனால் பெயரள வில் இவர்களுடைய ஆட்சி இதற்கு மேலும் மேற்கில் காணப் பட்டது. ஏனென்றால், ஸ்டிரைமான் நதிக்கும் ஆக்ஸியஸ் (Axius) நதிக்கும் இடையேயுள்ள பியோனியர்கள் (Paeonians) இவர்களால் அடக்கப்பட்டனர். அதுவுமன்றி மாசிடோனியா மாமன்னரின்* அதிகாரத்தை ஏற்றுக்கொண்டது.

பால்கன் தீபகற்பத்தின் கிழக்குப் பகுதியில் பாரசீகத்தின் ஆதிக்கம் பதினைந்து ஆண்டுகளுக்கு நீடித்திருந்தது. லெம்னாஸ் (Lemnos), இம்ப்ராஸ் (Imbros) என்ற தீவுகளைப் பாரசீகம் வெற்றி கொண்டதால் இந்த ஆதிக்கம் சிறிது வலிவு பெற்றது. ஸ்கிதியரின் மனத்தில் ஒரு பயத்தை ஏற்படுத்தவேண்டும் என்று டான்யூபிற்கு அப்பால் டேரியஸ் எடுத்துச் சென்ற படையெடுப்பு பயனுள்ள தாக இருந்ததாகத் தெரிகின்றது. ஒரு கிரேக்கக் கலகத்தினால் பாரசீக ஆட்சி அதிர்ச்சி பெற்றபோதும், திரேஸ் தனது பாரசீக ஆதிக் கத்தை எறிந்துவிடக்கூடிய சக்தி பெற்றபோதும் ஸ்கிதியர்கள் திரேஸின்மீது படையெடுத்து வருவதையும், மில்டியாடிஸ்ஸையும் கூடச் செர்சானிஸ்ஸிலிருந்து விரட்டியடிப்பதையும் நாம் பார்க்கிறோம்.

டேரியஸ்ஸின் ஐரோப்பியப் படையெடுப்பு ஒரு பெரிய வெற்றி. இதை நாம் பயமில்லாமல் காம்பைஸிஸ்ஸின் எகிப்திய வெற்றியுடன் ஒப்பிடலாம். ஆனால் இந்த வெற்றியின் விவரங் கள் நமக்கு எகிப்திய விவரங்களைவிட வேறுவிதமாகவும் முற்றி லும் கதையின் வடிவமாகவும் வந்துள்ளன. இந்த வெற்றியானது திரேஸுக்கு எதிராக முதலாவதான படையெடுப்பு என்று சொல் லப்படாமல், தென் ருஷியாவிலுள்ள ஸ்டெப்பிஸ் புல்வெளிகளி லுள்ள ஸ்கிதியர்களைப் பாரசீகப் பேரரசில் இணைக்கும்படி உள்ள ஒரு பைத்தியக்காரத் திட்டத்தை நிறைவேற்ற எடுத்த முயற்சி என்று கூறப்பட்டுள்ளது. எரோடட்டஸ் (Herodotus) தமது முழுக் கலைத் திறனுடன் சொல்லியுள்ள இந்தக் கதையில், திரேஸ் ஸ்கிதியாவிற்குப் போகும் ஒரு வழியாகத்தான் தெரியவருகின் றது. பாரசீகர்கள் திரேஸில் அடைந்த வெற்றியானது, அவர்கள் ஸ்கிதியாவைக் கைப்பற்றவேண்டும் என்ற நோக்கத்துடன் சென்று பெற்ற படுதோல்வியுடன் ஒப்பிட்டுப் பார்த்தால், மிகவும் சிறிய தொரு செயலாகத் தெரிகின்றது. நூறு ஆண்டுகளுக்குமுன் மிதியா (Media)வின்மீது ஸ்கிதியர் படையெடுத்ததைப் பழிவாங்

*குறிப்பு :—பாரசீக மன்னர்கள் மாமன்னர்கள் என்று அடிக்கடி அழைக்கப்பட்டனர்.

கும் முறையில் டேரியஸ் ஸ்கிதியருடன் யுத்தத்திற்குப் போனதாகவும், அங்கே 'இஸ்தர்' நதி தீரத்திற்குக் கப்பற் படைகள் படகுகளாலாகிய பாலம் ஒன்று அமைப்பதற்காகமாத்திரம் அனுப்பப்பட்டதாகவும் கூறப்படுகிறது. தாம் அக் கரையைக் கடந்ததும், பாலத்தை உடைத்துவிட்டுக் கப்பல்களைத் திருப்பி அனுப்பிவிட வேண்டும் என்னும் கருத்துக்கொண்டிருந்தார். ஆனால் கிரேக்கர்களுடைய அரியதோர் ஆலோசனையால் இவர் தம் திட்டத்தை மாற்றினார். இவர் ஒரு பெரிய கயிற்றை எடுத்து அதில் அறுபது முடிச்சுகள் போட்டு, அதனைக் கிரேக்கப் படைத் தலைவர்களிடம் கொடுத்து, 'ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு முடிச்சையும் அவிழுங்கள். முடிச்சுகள் யாவும் அவிழ்க்கப்படுகிறமட்டும் இங்கேயே இருந்து பாலத்தைக் காத்து வாருங்கள். அந்த நாட்களின் முடிவில் நான் திரும்பாவிடில் நீங்கள் நாட்டிற்குத் திரும்பிப் போய் விடுங்கள்' என்றார். இதற்குப்பின் எரோடட்டஸ் டேரியஸ்ஸையும் அவரது படைகளையும் 'கற்பனை உலகு ஒன்றில்' கூட்டிச் செல்வது போல ஸ்டெப்பீஸ் முழுவதிலும், அங்குள்ள ஆறுகள், தூரங்கள், படைவீரர்களுக்கு வேண்டிய தேவைகள் இவை யாவற்றையும் சற்றேனும் நினைக்காமல், கூட்டிச் செல்கிறார். இவர் டேரியஸ்ஸை டான் நதி தீரத்திற்குத் தூக்கிச் செல்கிறார். இந்தச் செயலில் டேரியஸ் கோட்டைகள் கட்டிய டான்யூப் நதி தீரத்திலுள்ள ஓரோஸ்ஸையே இவர் 'மியோட்டிக் கடல்' (Maeotic sea) தீரத்திற்குத் தூக்கிச் செல்கிறார். இக் கற்பனையில் மட்டுமேயுள்ள இந்தப் படையணியின் பயண வரலாற்றை எழில் பொருந்திய ஸ்கிதியா நாட்டின் பத்தியிலும் ஸ்கிதியா நாட்டு மக்களினூடும் இவர் வைத்துள்ளார். டான்யூப் நதிதீரத்திற்குத் திரும்பும்போது பாரசீகர்கள் அதிக அல்லற்பட்டனர். நாகரிகமற்ற காட்டு மனிதர்களால் இவர்கள் துரத்தப்பட்டும், அடிக்கடி தாக்கப்பட்டும் வந்தனர். இதற்குள் குறித்த அறுபது நாட்களும் கழிந்தன. குறிப்பிட்ட நாட்களுக்குப் பின்னும் அயோனியர்கள் தாமதித்தனர். அப்பொழுது ஸ்கிதியக் கூட்டமொன்று தோன்றி அயோனியர்களை அப் பாலத்தைத் தகர்த்தெறியுமாறு ஆர்வத்துடன் தூண்டியது. அப் பாலத்தை உடைத்தால் டேரியஸ்ஸையும் அவனுடைய போர் வீரர்களையும் நாசமாக்கலாம், அதே சமயத்தில் தாங்களும் விடுதலை யடையலாம் என்று அவர்கள் எண்ணி அப்படிச் சொன்னார்கள். செர்சானீஸியக் கொடுங்கோலனாகிய மில்டியேடிஸ் ஸ்கிதியர்களின் தீர்மானத்தை முற்றும் ஆதரித்தான். ஆனால் இந்தத் தீர்மானத்திற்கு எதிராக மைலீட்டஸ்ஸைச் சேர்ந்த ஹிஸ்டியஸ் வாதித்தார். இவருடைய வழக்காடல் ஏற்றுக்கொள்ளப்பட்டது. இவர் வல்லாட்சியாளரின் (despots) ஆட்சி பாரசீக மேலாட்சி

யினுல்தான் நிலைபெற்று நிற்கின்றது என்று வாதாடினர். ஆனல் கிரேக்கர்கள் யாவரும் ஸ்கிதியர்களின் ஆலோசனையை ஏற்றுக் கொண்டதுபோல் பாவனை செய்து வடக்குப் பகுதியில் பாலத்தின் ஒரு பாகத்தை உடைத்தனர். ஸ்கிதியர்கள் டேரியஸ்ஸின் பின் வாங்குதல் துண்டிக்கப்பட்டது என்று எண்ணித் தம் வழிச் சென்றனர். சிறிது நேரம் பொறுத்து, இரவின் இருட்டில் பாலத்தைக் காணுதவராய்க் கிலிபிடித்து டேரியஸ் வந்து சேர்ந்தார். உரத்த சப்தத்துடன் ஓர் எகிப்தியன், 'ஹிஸ்டியஸ்' என்று கூப்பிட்டான். விழிப்புடன் காவல் காத்துக்கொண்டிருந்த ஹிஸ்டியஸ் கூப்பிடும் சப்தம் கேட்டவுடன் தன்னுடைய படகுகளைக் கொண்டு சேர்த்துக் காணுமல் போன பாகத்தைத் திருப்பி அமைத்தான். இப்படி டேரியஸ் இழிவாகப் பின்வாங்குதலிலிருந்து ஹிஸ்டியஸ்ஸின் தயவினுல் காப்பாற்றப்பட்டார். மில்டியேடிஸ்ஸின் ஆலோசனையின்படி நடந்திருந்தால், பின்னுல் கிரீஸ் நாட்டின்மேல் ஏற்பட்ட பாரசீகப் படையெடுப்பு நடந்திருக்கவே முடியாது.

இவ் வகையாகக் கிரேக்கக் கற்பனைத் திறம் கிரேக்க ஒருதலையான எண்ணத்தால் தூண்டப்பட்டு, பகுத்தறிவுக்கு ஒத்ததும், வெற்றியளிப்பதுமாகிய ஒரு துணிகரச் செயலை, பித்துப் பிடித்ததும், நாசம் பொருந்தியதுமான படையெடுப்பாக மாற்றியமைத்தது. இந்த மாறுதல் மிகவும் திறமையுடன் செய்யப்பட்டதால், வெறும் கட்டுக் கதையான இது, அண்மையில் சில காலம்வரை வரலாருக ஏற்றுக்கொள்ளப்பட்டது.

## 6. பாரசீகத்திற்கு விரோதமான அயோனியர் கலகம்

திரேஸையும், மாசிடோனியாவையும் கைப்பற்றியது கிரீஸைப் பாரசீகம் கைப்பற்றும் முயற்சிக்கு ஒரு படியாக அமைந்தது. ஆனல், இதனை வேண்டுமென்று முன்னதாகவே யோசித்து அமைத்த 'படி' என்று கருதுவதற்கு இடமில்லை. இன்னும் இருபது ஆண்டுகளுக்குக் கிரீஸை அடக்கவேண்டும் என்ற முயற்சி கைக்கொள்ளப்படவில்லை. டேரியஸ் திரேஸிலிருந்து திரும்பிய பன்னிரண்டு ஆண்டுகளுக்கிடையில் ஆசியாவின் வல்லரசுக்கும் ஐரோப்பியச் சுதந்தரத்திற்குமிடையே ஒரு பெரும் போராட்டம் ஏற்படுவதற்கான காரியம் ஒன்றும் நடைபெற்றதாகத் தெரியவில்லை. ஆதென்ஸிலிருந்து நாடு கடத்தப்பட்ட கொடுங்கோலனுகிய ஹிப்பையஸ் ஸார்டிஸ்ஸிற்குப் போய்த் தன் அதிகாரங்களைத் திரும்பப் பெறுவதற்குஸாட்ராப்பாகிய ஆர்ட்டபெர்னஸ்ஸை(Artaphernes) உதவி செய்யும்படி தூண்ட முயன்றுன். ஆர்ட்டபெர்னஸ் தூதர்களை ஆதென்ஸுக்கு அனுப்பி, 'நீங்கள் பாதுகாப்பை விரும்பினீர்க

னாலும் ஹிப்பையஸ்ஸைத் திரும்பவும் ஏற்றுக்கொள்ளுங்கள்' என்று அதட்டினாரே அல்லாது, இந்தப் பயமுறுத்தலைச் செயல் முறையில் காட்ட ஒன்றும் செய்யவில்லை.

கடைசியில், ஹிப்பையஸ் ஒரு பங்கும் எடுக்காத நிகழ்ச்சிகளின் விளைவாலேதான் பாரசீகர்கள் அத்தீனியர்களுக்கு எதிராகப் படையெடுக்க நேர்ந்தது. நாக்ஸாஸ் தீவின் அரசியல் நிலையானது மறைமுகமாகக் கிரேக்கக் குடிகளைப் பாரசீக ஆட்சிக்கு விரோதமாகக் கலகம் செய்ய வழிகாட்டியது. கிரீஸ் நாட்டிற்கு எதிராக எடுக்கப்பட்ட பாரசீகப் படையெடுப்புகளின் உடனடியான காரணம், ஆதென்ஸும் மற்றக் கிரேக்க நகரங்களும், இந்தக் கலகத்தில் எடுத்துக்கொண்ட பங்கேயாகும்.

மைலீட்டஸ்ஸைச் சேர்ந்த ஹிஸ்டியஸ் திரேஸியன் படையெடுப்பின்போது தமக்குச் செய்த உதவிக்காக டேரியஸ், அவன் எது வேண்டுமென்று வேண்டினாலும் தாம் தருவதாக வாக்குறுதி கொடுத்தார். ஸ்டிரைமான் நதியின் முகத்துவாரத்தின் பக்கத்திலுள்ள செழிப்பான பட்டினமாகிய மிர்சைனஸ்ஸை, அங்கு ஒரு குடியேற்ற நாட்டை நிறுவும் விருப்பத்துடன், ஹிஸ்டியஸ் டேரியஸ்ஸினிடமிருந்து கேட்டான். இந்த இடத்திற்குப் பக்கத்திலேதான் பின்பு புகழ்பெற்ற ஆம்பிபோலிஸ் என்ற நகரம் கட்டப்பட்டது. மேகபேஸஸ் மேற்கே படைகளுடன் போயிருக்கும்போது இவரும் அவருடன் போய் அப்பொழுதே அந்த இடத்தைச் சுற்றி ஓர் அரணைக் கட்ட முற்பட்டதாகத் தெரிகின்றது. வெள்ளிச் சுரங்கங்களின் அருகில் மிர்சைனஸ் காணப்பட்டது. அதுவுமின்றி அந்த இடத்தில் கப்பல் கட்டுவதற்கான மரங்களும் கிடைக்கப்பெற்றன. இவ்வளவு முக்கியமான இடத்தில் ஒரு கிரேக்கக் குடியேற்ற நாடு அமைக்கப்படுவது நயமறையற்றது என்ற தம் கருத்தை இந்தப் பாரசீகப் படைத்தலைவர் ஸார்டிஸ்ஸில் இருந்த தம் மன்னருக்குத் தெரிவித்தார். டேரியஸ் தம் நண்பனின் தோழமை தமக்கு இன்றியமையாதது என்று சொல்லி, ஹிஸ்டியஸ்ஸை ஸார்டிஸ்ஸுக்கு வரவழைத்து, இவனை ஈஜியனுக்கு எக் காரணம்பற்றியும் திரும்பிப் போக விடக்கூடாது என்ற எண்ணத்துடன் சூஸாவிற்குக் கூட்டிச் சென்றார். இவ்விதமாக ஹிஸ்டியஸ்ஸின் திட்டங்கள் யாவும் கலைக்கப்பட்டன. திரும்பவும் ஈஜியன் அரசியலில் தொடர்பு கொள்ளத் தனக்கு வாய்ப்பு ஏற்படுவதற்கு முன் இவன் பன்னிரண்டு ஆண்டுகள் துயரத்துடன் சூஸாவின் அரசவையில் வாழ்ந்து வந்தான்.

ஹிஸ்டியஸ்ஸின் மருமகனாகிய அரிஸ்டோகோரஸ் (Aristogorus) மைலீட்டஸ்ஸில் ஆட்சி புரிந்தான். தன்னுடைய பேர

வாவுக்குத் தக்க திறமை இவனிடம் இல்லாதபோதிலும், அயோனிய கிரேக்கர்களின் கலகத்தை ஆரம்பித்து வைத்ததனுல் வரலாற்றில் புகழ்ச்சியடையலானுன். மக்களின் கலகத்தின்போது நாட்டை விட்டு விரட்டப்பட்ட நாக்ஸியன் (Naxian) சிறுகுழுவினரில் பலர் இவனிடம் வந்து மக்களை அடக்குவதற்கு உதவி அளிக்கவும், மக்கள் பெருக்கும் செல்வப் பெருக்குமுள்ள அந்தத் தீவைத் தம் வசமாக்கவும் உதவி செய்ய வேண்டிக்கொண்டனர். இவர்களுடைய வேண்டுகோளில் தனது ஆற்றலைப் பெருக்கிக்கொள்ள வழியிருப்பதை அரிஸ்டோகோரஸ் கண்டான். ஆனுல் பாரசீகத்தின் உதவியின்றி இந்த முயற்சி நடைபெருது என்றும் அறிந்தான். இதற்காக இவன் ஸார்டிஸ்ஸிற்குச் சென்று அங்கே ஆர்ட்டபெர்னஸ்ஸிடம் சைக்ளேட்ஸ் (Cyclades) தீவுகளையும், யூபீயாவையுங்கூட அவனது உரிமையாக்கக்கூடிய திட்டமொன்றைக் காட்டினுன். இந்தத் திட்டம் நிறைவேறுவதற்கு முதல் அடியானது நாக்ஸாஸ் தீவைத் தன் வசமாக்கிக் கொள்வதே என்றும் அறிவித்தான். ஆர்ட்டபெர்னஸ் உடனே இந்தத் திட்டத்தை ஆதரித்து டேரியஸ்ஸின் இணக்கத்தைப் பெற்று, இந்த மைலீஸியன் தன்னிஷ்டப்படி உபயோகிக்க மேகபேட்டிஸ் (Megabates) என்னும் படைத் தலைவனின்கீழ் 200 கப்பல்களை அனுப்பி வைத்தான். அரிஸ்டோகோரஸ்ஸிற்கும் மேகபேட்டிஸ்ஸிற்குமிடையே சச்சரவு இல்லாமலிருந்தால் இந்த முயற்சியானது முழு வெற்றியில் முடிந்திருக்கும் என்பதற்குச் சந்தேகமே இல்லை. இடையூறு செய்ய மனமுடையவனுகப் பராசீகக் கடற்படைத் தலைவரான மேகபேட்டிஸ் நாக்ஸியர்களிடம் அவர்களுக்கு நடக்கப் போகும் பேராபத்தைக் குறித்து முன் எச்சரிக்கை செய்தார். நாக்ஸியர்கள் எடுத்துக்கொண்ட ஏற்பாடுகளின் பயனுக நான்குமாத முற்றுகையை அவர்களால் சமாளிக்க முடிந்தது. நாக்ஸாஸ் நகரம் தன்வசம் விழக்கூடிய நிலையில் இல்லாததால் பாரசீகத்தின் கப்பற்படை அயோனியாவிற்குத் திரும்பியது. அரிஸ்டோகோரஸின் எதிர்கால வாய்ப்புகளுக்கு இந்தத் தோல்வியானது ஒரு முடிவை உண்டுபண்ணியது. அரிஸ்டோகோரஸ் பாரசீகப் பணத்தை வீணுக்கி ஆர்ட்டபெர்னஸ்ஸின் நம்பிக்கைக்குப் பாத்திரமற்றவனுனுன். அதுவுமன்றி, அரிஸ்டோகோரஸ் மேகபேட்டியைத் தனது வலிமை பொருந்திய பகைவனுக்கிக் கொண்டான். பாரசீக ஆட்சிக்கு விரோதமாக ஆசியாவிலுள்ள கிரேக்கர்களைக் கலகம் செய்யத் தூண்டுவித்து, இதனுல் தான் இழந்துபோன செல்வாக்கைத் திரும்பிப் பெறத் தீர்மானித்தான்.

டைக்ரீஸிற்கு அப்பால் அதிக காலம் நாடு கடத்தப்பட்டிருந்ததனால் சோர்வடைந்த இவனுடைய மாமனரான ஹிஸ்டியஸ் தன் விசுவாசமுள்ள ஓர் அடிமையின் தலையில் சூடிட்ட ஓர் இரகசியச் செய்தியின்மூலம் இந்த நடவடிக்கையை எடுக்க அரிஸ்டோகோரஸைத் தூண்டினன் என்று கதை கூறுகின்றது. தான் கலகம் செய்ய வேண்டும் என்று யோசித்துக்கொண்டிருக்கும்போது இந்தச் செய்தி அரிஸ்டோகோரஸ்ஸைச் சேரவே, அவன் உடனே கலகம் செய்யத் தீர்மானித்தான். கலகம் வேண்டும் என்று ஹிஸ்டியஸ் விரும்பியதற்கு ஒரு காரணம் கூறப்படுகிறது. அதாவது, அயோனியாவில் கலகம் ஏற்பட்டால், டேரியஸ் தம்மை அங்கு ஒழுங்கை மறுபடியும் அமைக்கும்படி அனுப்புவார் என்ற சிந்தனையேதான். ஆனல் இந்தக் கதை உண்மையாகத் தெரியவில்லை. ஈஜியனில் பாரசீக நலனுக்கு விரோதி என்று ஹிஸ்டியஸ் சூஸாவில் காவலில் வைக்கப்பட்டிருக்கும்போது தன் மருமகன் ஒரு கலகத்தைத் துவக்கி வைத்தால் அது தன் உயிருக்கே ஆபத்தாயிருக்கும் என்றல்லவோ அவன் எண்ணியிருக்கக்கூடும்! பின்னல் டேரியஸ் அரிஸ்டோகோரஸின் நெருங்கிய பந்துவாகிய இவனை அனுப்ப நேர்ந்தது ஆச்சரியம் விளைவிக்கின்ற ஒரு செயலாக இருக்கின்றது. ஹிஸ்டியஸ் இந்தக் கலகத்தைத் தூண்டினன் என்னும் கதையானது, ஹிஸ்டியஸ்ஸின் பிந்திய நடத்தையால் குறிப்பாகச் சொல்லப்பட்டது என்று சந்தேகிக்க இடமிருக்கின்றது. ஒருவேளை இவனேகூட இப்படிக் கதை கட்டியிருக்கக்கூடும்.

அயோனியாவில் கலகத்திற்கான விதைகள் சிதறிக் கிடந்தன. இவைகளைச் சேர்த்து மூட்டினல் பெருந் தீ எச்சமயத்திலும் சுடர்விட்டெரியக்கூடும். இந்தக் கலகம் வல்லாட்சியாளர்களின் பேரவாவினல் உண்டானது என்பது ஒரு மேலீடான கருத்தாகும். ஆனல் இதற்கு எதிரான கருத்து என்னவென்றல், இந்தக் கலகத்திற்கு இன்றியமையாத சூழ்நிலையானது நகரங்களின் மக்கள் எல்லோரும் வல்லாட்சி அமைப்பின் (despotic constitution) கொண்டுள்ள தீராப்பகை என்பதாகும். அதுவுமின்றி, வல்லாட்சி அமைப்புகள் யாவும் பாரசீக ஆட்சி முறையின் பாகங்களாகவே தோன்றின. பேரவாக்கொண்ட வல்லாட்சியாளர், கலக உணர்ச்சியைக் கருத்திலிருந்து செயல்முறைக்குக் கொண்டுவர ஏற்றதொரு கருவியாவர். ஆனல் இப்படிச் செய்வதற்குமுன் அவர் தம் வல்லாட்சிப் பதவியிலிருந்து நீங்க வேண்டும்.

கிரேக்க நாடுகளில் மக்களாட்சியை நிறுவுவதும் கொடுங்கோலரைத் துரத்தியடிப்பதுமே கலகம் முன்னேறுவதற்கு முதற்படியாம். மைலீட்டஸ்ஸில் தன் ஆட்சிப் பதவியிலிருந்து அரிஸ்டோகோரஸ் விலகிக்கொண்டான். பல இடங்களில் இந்த

மாறுதல் இரத்தம் சிந்தப்படாமலே ஏற்பட்டது. இதற்கு மிட்டிலீன் ஒரு தனி விலக்கு. இங்கே கொடுங்கோலனிடம் மக்களுக்கு அவ்வளவு வெறுப்பு; இதனால் கல்லெறிந்தே மக்கள் அவனைக் கொன்றனர்.

பாரசீக ஆட்சிக்கு விரோதமாகச் சுதந்தரக் கிரீஸிலிருந்து உதவி கொள்வதே இதன் இரண்டாவது படியாகும். அரிஸ்டோகோரஸ் முதலில் ஸ்பார்ட்டாவுக்குச் சென்றான். ஸ்பார்ட்டர்கள் முந்திப் பாரசீகத்தின் படையெடுப்புக்கு விரோதமாக எப்படி உதவி செய்ய மறுத்தார்களோ அவ்விதமாகவே இப்போது அயோனியாவைப் பாரசீகக் கொடுமையிலிருந்து விடுவிக்க மறுத்தனர். இவனுடைய வருகையைப்பற்றிப் பிற்காலத்தில் சுவையான வரலாறொன்று கூறப்பட்டது. இவன் கிளியோமீனஸிடம் சென்று வெண்கலத்தில் பொறிக்கப்பட்டு உலகத்திலே பொதுவாகத் தெரிந்த பாகங்களுடைய நாடுகள், கடல்கள், ஆறுகள் ஆகியவைகளைக் காட்டும் ஒரு தேசப் படத்தை அவருக்குக் காட்டினான். கிளியோமீனஸ் இதற்குமுன் இவ்விதப் படத்தைப் பார்த்ததேயில்லை. ஆகையினால் இந்த அயோனியன், ஸ்பார்ட்டா பாரசீகப் பேரரசைத் தன் கைவசம் கொண்டுவர அவாக்கொள்ள வேண்டும் என்ற எண்ணத்தைக் கிளியோமீனஸ் நம்பும்படி செய்ய முயன்றான். கிளியோமீனஸ் பாரசீகப் பேரரசைத் தம்வசம் கொண்டுவர அவாக் கொண்டபோதிலும் மூன்று நாட்களுக்குப் பின் தம் பதிலை அளிப்பதாகக் கூறினார். மூன்றாவது நாள் அரிஸ்டோகோரஸிடம் அயோனியாவிற்கும் சூஸாவிற்கும் எவ்வளவு தூரம் என்று வினவினார். ஒன்றும் யோசிக்காமல், 'மூன்று மாத தூரம்' என்று அரிஸ்டோகோரஸ் பதிலளித்தான். அதுவுமன்றி அந்தச் சாலை முதலியவற்றைக்கூட விவரித்திருப்பான். ஆனால் மன்னர் தடை செய்து, 'மைலீஸியாவைச் சேர்ந்த அயலானே, சூரியன் அஸ்தமிக்குமுன் ஸ்பார்ட்டாவை விட்டுச் செல்' என்று ஆணையிட்டார். அரிஸ்டோகோரஸ் மற்றுமொருமுறை முயன்றான். இரப்பவன்போன்று கிளியோமீனஸ்ஸின் அரண்மனையை அடைந்து அங்கு அவருக்குக் கைப்பணம் (bribe) கொடுக்க முயன்றான். கைப் பணத்தைப் பத்துத் தாலந்துகளில் ஆரம்பித்துப் படிப்படியாக ஐம்பதுவரை ஏற்றினான். அப்பொழுது மன்னரின் எட்டு அல்லது ஒன்பது வயதுள்ள மகளாகிய கோர்கோ (Gorgo) அங்கு வந்து, 'அப்பா! இந்த அயலான் உன் நேர்மையைக் கெடுப்பான்' என்று சொல்லவே மன மாறுதலுற்று அரசர் அந்த அறையை விட்டுச் சென்றார்.

ஆதென்ஸிலும் எரிதிரியாவிலும் இந்த மைலீஸியன் அயலான் ஸ்பார்ட்டாவைக் காட்டிலும் அதிக வெற்றி பெற்றான். இவ் விரு-

நகரங்களும் உதவியளித்தன. ஆதென்ஸ் இருபது கப்பல்களை அனுப்பியது. அந் நேரத்து வரலாற்று முக்கியத்துவத்திற்கு ஏற்றபடி எரோடட்டஸ் முறைப் பற்றுணர்ச்சியுடன், 'இந்தக் கப்பல்களை அனுப்பிய செயலானது கிரேக்கர்களுக்கும் காட்டுமிராண்டியர்களுக்குமிடையே ஏற்பட்ட தீங்குகள் யாவற்றிற்கும் ஓர் ஆரம்பம்' என்று கூறுகிறார்.

பாரசீகப் பேரரசின் பெருமிதமான மூலவளத்தை அறிந்த யாவர்க்கும், அதனை எதிர்க்கும் நாட்டிற்கு வெற்றிக்கான வாய்ப்புகள் கிடைத்தலரிது என்பது நன்கு தெரியும். மைலீட்டஸ்ஸிலுள்ள பெரியோர்களை அரிஸ்டோகோரஸ் கலந்து ஆலோசிக்கும்போது, புவியியல் வல்லுநர் ஹெக்காடியஸ் (Hecataeus) இவனை இச் செயலிலிருந்து விலக்க முயன்றார். அரிஸ்டோகோரஸும் அவனைச் சார்ந்தவர்களும் கலகம செய்யத் தீர்மானித்துக் கொண்டதால், தீர்க்கமாக ஆலோசித்த தம் தர்க்கங்களை இழித்துப் பேசுகின்றனர் என்று உணர்ந்த ஹெக்காடியஸ் அவர்களுக்கு இரண்டாவதாக நல்ல யோசனை ஒன்றை அளித்தார்: 'நீங்கள் கலகம் செய்தால், டிடிமா (Didyma) விலுள்ள அப்போலோவின் கோவிலிலுள்ள கருவூலத்தைக் கைப்பற்றி, கடலிலே உங்களுடைய ஆதிக்கத்தை நிறுவுங்கள். நீங்கள் இப்படிச் செய்யாவிட்டால் உங்களுடைய பகைவர் நிச்சயம் இப்படிச் செய்வார்கள்' என்று கூறினார். இவருடைய ஆலோசனை மதிக்கப்படாமல் போயிற்று.

அரிஸ்டோகோரஸ் தன் அத்தீனிய எரித்திரிய நேச நாடுகளுடன் ஸார்டிஸ்ஸை அடைந்து, அந் நகரத்தைக் கைப்பற்றினான். ஆனால் சேம அரணை இவனால் பிடிக்க முடியவில்லை. இவர்கள் அங்கு இருக்கும்போது பெருந் தீ ஒன்று பற்றி எரிந்து நகரத்தைச் சாம்பலாக்கிற்று. புகைந்துகொண்டிருக்கும் அழிவுச் சின்னங்களை விட்டுவிட்டுக் கடற்கரையை நோக்கிக் கிரேக்கர்கள் கிளம்பினர். எபிஸஸ் நகருக்கருகில் இவர்கள் பாரசீகப் படை ஒன்றைச் சந்தித்தனர். அங்கு நடந்த போரில் இவர்கள் தோல்வி யடைந்தனர். அத்தீனியர்கள் நேரடியாக வீடு திரும்பினர். இந்தப் போருடன் அயோனியரின் கலகத்தில் ஆதென்ஸ் எடுத்துக்கொண்ட பாகம் முற்றுப்பெறுகிறது. ஆனால் இந்தச் சுருக்கமான இடைக்காலக் கதையானது, ஆதென்ஸின் பிற்காலச் சரிதையில் பயங்கர விளைவுகளை உண்டுபண்ணியது. ஸார்டிஸ் எரிந்தது கலகத்தின் போக்கிற்கு அவ்வளவு முக்கியமானதன்று; ஆனால் இந்தக் கலகத்தின் விளைவுகளுக்கு அதிமுக்கியமானதாயிருந்தது. பாரசீகக் கண்களில் ஐரோப்பிய கிரீஸிலுள்ள இரண்டு நாடுகள் ஒன்றே

யாகக் காட்சியளித்தன. அத்தீனியர்கள் ஸார்டிஸ்ஸைக் கொளுத்துவதற்கு உதவியளித்தனர் என்று சொன்னபோது, 'அத்தீனியர்களா—அவர்கள் யார்?' என்று டேரியஸ் வினவின தாகச் செய்தி ஒன்று உண்டு. இவ்விதமான வினவைக் கேட்ட பின், வில் ஒன்றைக் கேட்டு வாங்கி, ஓர் அம்பை வானத்தை நோக்கி மேலாக விட்டுத் தெய்வம் அத்தீனியர்களைத் தண்டிக்கும் படி தனக்கு உதவவேண்டும் என்று பிரார்த்தித்தாராம். இதுவு மன்றித் தம் அடிமை ஒருவனைத் தாம் சாப்பிடும் மூன்று வேளை களிலும் தம் பக்கத்தில் நின்று, 'ஐயா, அத்தீனியர்களை மறந்து விடாதீர்' என்று சொல்லவும் கட்டளையிட்டாராம். இந்தக் கதையில் வரலாற்றிற்கு உபயோகமாக ஒன்றுமில்லை. ஆனால் எரோடட்டஸ்ஸின் கதையில் இது கலையின் முக்கியத்துவத்தைப் பெற்றதாயிருக்கின்றது. இந்த முக்கியமான வார்த்தையாலும் செய்கையாலும், தாம் தமது வரலாற்றில் ஒரு முக்கியக் கட்டத்தை அது அடைந்ததைக் காட்டுகின்றார். அது கிரேக்கர் களுக்கும் காட்டுமிராண்டியர்களுக்கும் நடந்த போராட்டமாகும்.

இந்தக் கலகமானது தெற்கே கேரியாவிற்கும் சைப்ரஸ் ஸிற்கும், வடக்கே ப்ரோபான்டிஸ்ஸிற்கும் பரவியிருந்தது. சைப் ரஸ்ஸில் அமாத்தஸ் என்ற நகரத்தைத் தவிர எல்லா நகரங்களும் பாரசீக ஆதிக்கத்தை விட்டெறிந்தன. ஆனால் பினீஷியாவின் கப்பற்படை ஒன்றை அனுப்பவே, தீவு முழுவதும் பாரசீக ஆட் சிக்குள் திரும்பக் கொண்டுவரப்பட்டது. ஹெலஸ்பான்ட் பகுதியிலுள்ள நகரங்கள் யாவும்கூட அடக்கப்பட்டன. கேரி யாவில் கலகக்காரர்கள் இரண்டுதரம் படுதோல்வியடைந்த போதிலும், கடைசியில் பாரசீகப் படையை நாசமாக்கினர்.

ஆனால் அரிஸ்டோகோரஸ் ஆற்றல் குன்றியவனாக இருந்ததால் இயற்கையே இவனை இவ்வித இயக்கங்களுக்குத் தலைவனாக இருக்க விரும்பவில்லை எனலாம். பாரசீகர்கள் இந்தக் கலகத்தை அடக்கு வதைக் கண்ணுற்ற இவன் நம்பிக்கை இழந்து, திரேஸிலுள்ள மிர்சைனஸ்ஸை (Myrcinus) நோக்கி ஓடினான். இப்படி ஓட்டம் பிடிப்பதற்குமுன் தான் என்ன செய்ய வேண்டும், எங்கே ஓடிப் போகலாம் என்பன யாவற்றையும் தீர்மானிக்கத் தன் கட்சிச் சார்பாளர்களின் கூட்டம் ஒன்றை அழைத்ததாகச் சொல்லப்படு கிறது. இந்தக் கூட்டத்தில் தூரத்திலுள்ள ஸார்டீனியா (Saridinia)விற்குப் போவதெனத் தீர்மானமாயிற்று. இச் சமயத் திலும் ஹெக்காடியஸ் (Hecataeus) ஓர் அறிவுரை கூறியதாக வும் அரிஸ்டோகோரஸ்ஸும் அவனுடைய நண்பர்களும் அதைப் புறக்கணித்ததாகவும் சொல்லப்படுகிறது. அவருடைய யோசனை

யாதெனில், அரிஸ்டோகோரஸ்ஸும் ஏனையவர்களும் பக்கத்திலுள்ள லீராஸ் (Leros) தீவில் ஒரு கோட்டையைக் கட்டி அங்கு வசிக்க வேண்டும் என்பதாம். பின்னால் யோகம் இருந்தால் அவர்கள் மைலீட்டஸ்ஸிற்கு வர இலகுவாய் இருக்கும் என்பதாகும். அரிஸ்டோகோரஸ் திரேஸியன் பட்டினமொன்றை முற்றுகையிடும் சமயத்தில் இறந்துவிட்டான். இப்படி வருந்துதற்குரிய விதமாக இந்தக் கலகத்தில் இவன் பங்கெடுத்ததனால் இவனது மறைவு கலகத்தின் போக்கைப் பாதிக்கவில்லை. இவன் போனபின் இவனுடைய மாமனார் இவனுக்குப் பதிலாக அதே முறையில் செயலாற்றலானான். ஆனால் ஹிஸ்டியஸ் செய்த முயற்சி அரிஸ்டோகோரஸ் செய்ததைவிட முக்கியமாகக் குறிப்பிடக் கூடியதன்று. தன்னை டேரியஸ், கடற்கரைப் பிரதேசத்திற்கு அனுப்பினால் டேரியஸ் மன்னர் தமது உடைகளை மாற்றுவதற்குமுன் தான் கலகத்தை அடக்கி ஸார்டீனியாவை டேரியஸ்ஸின் பேரரசுடன் சேர்ப்பதாகத் துணிச்சல் மிக்க இவன் சொன்னான் அல்லது டேரியஸ்ஸைத் தானே தூண்டியதாகச் சொல்லிக்கொண்டான். உறுதிவாக்கு உண்மைக்கு ஒத்ததா யில்லா விட்டாலும், அக்காலத்துக் கிரேக்கத் துணிச்சல்காரர்கள் தங்களையும் மற்றவர்களையும் தூரத்திலுள்ள ஸார்டீனியாவைப்பற்றிய மனக் கோட்டை கட்டி ஏமாற்றி வந்த போக்கை இது காட்டுகிறது. தான் ஸார்டிஸ்ஸை அடைந்ததும், ஸாட்ராப் ஆர்ட்டபெர்னஸ் தன்னை எவ்விதத்திலும் சந்தேகிப்பதைக் கண்டு, தான் அங்கிருந்தால் தன் உயிருக்கே ஆபத்து வரக்கூடும் என்றெண்ணி ஷீயாஸ் (Chios) தீவிற்கு ஓடினான். அங்கே தானே கலகத்தைத் தூண்டியவன் என்று கூறினான்; ஒரு வேளை தான் எப்படிக் கலகம் ஆரம்பிக்கவேண்டும் என்ற செயதியைத் தன் அடிமையின் சிரசில் பொறித்தனுப்பியதையும் கலகக்காரர்களுடன் கூறிக்கொண்டிருக்கலாம். லெஸ்பாஸிலிருந்து சில கப்பல்களைப் பெற்று, கப்பல் கொள்ளைக்காரனாகத் தன்னை மாற்றிக்கொண்டு, பைசான்டியத்தைத் தன் வசப்படுத்தி, அங்கே கலகம் நீடித்த நாள்வரை பாஸ்பரஸ் கால்வாய்க்குள் போகின்ற கப்பல்களையும் வருகின்ற கப்பல்களையும் பிடித்து வந்தான். கடைசியில் இவன் ஆர்ட்டபெர்னஸ்ஸிடம் பிடிபட்டுச் சிலுவையில் அறையப்பட்டான்.

இப்போரில் மிகவும் சிறந்ததும் முக்கியமானதுமான நிகழ்ச்சி, மைலீட்டஸ்ஸின் முற்றுகையேயாகும். இந்த முற்றுகையின் மேல் பாரசீகர்கள் தங்கள் சகல முயற்சிகளையும் ஒருமுகப்படுத்தியிருந்தனர். சமீபத்தில் சைப்ரஸ்ஸை அடக்கிய 600 கப்பல்களைக் கொண்ட கடற்படையானது, இப்போது பட்டினத்

தின் போக்குவரத்தைத் தடை செய்ய உபயோகிக்கப்பட்டது. லேட் (Lade) தீவிற்குப் பக்கத்தில் கிரேக்கக் கடற்படை நிறுவப் பட்டிருந்தது. இந்தப் படையில் 353 கப்பல்கள் இருந்தனவாம். ஆனால் இவை கட்டுப்பாடின்றியும் ஒரு தனிப் படைத் தலைவனின்கீழ் இல்லாமலும் பொது உணர்ச்சி இல்லாமலும் இருந்தன. நடந்த போரில் லெஸ்பியரும் (Lesbians) சாமியரும் (Samians) இவனை விட்டுவிட்டு ஓடினார்கள். ஷீயாஸ் மக்கள் சிறந்த முறையில் போரிட்டனர். ஆனால் எண்ணிக்கையில் மிகவும் குறைந்தவர்களாயிருந்தனர். புயல்போல் தாக்கப்பட்ட மைலீட்டஸ் பாரசீகர்வசம் விழுந்தது. அங்குள்ள ஆண்கள் யாவரும் கொல்லப் பட்டனர். பெண்களும் குழந்தைகளும் சூஸாவிற்கு அனுப்பப் பட்டனர். கிரேக்க உலகத்தில் தெய்வமொழி கூறும் கோவில் திருவிடங்களுள் முக்கியமானவற்றில் ஒன்றாகிய டிடிமா (Didyma) விலுள்ள அப்போலோவின் கோவில், அதன் மரபு வரிசைப் பூசாரிகளாகிய பிராங்கைடிச் (Branchidae) களால் பாரசீகர் வசம் ஒப்புவிக்கப்பட்டது. பாரசீகர்கள் இதனைச் சுட்டெரித் தனர். கோவிலுக்குச் செல்லும் புனிதச் சாலையின் இரு பக்கங் களிலும் வைக்கப்பெற்ற சில உருவச் சிலைகள் அரைகுறையாக இப்பொழுதும் காணப்படுகின்றன. இச் சிலைகள் சிற்பக்கலை பயில்வோருக்கு அதிக உபயோகப்படும். ஆனால் இவைகளில் ஒன்று, வரலாற்று அறிஞர்களுக்கும் உதவுகின்றது. இதுவே டிக்கியூஸ் ஸாவைச் சேர்ந்த சேரஸ்(Chares of Techiussa)ஸின் உருவச் சிலையாகும். இவன் டேரியஸ்ஸால் இந்த நகரில் அமர்த்தப் பட்ட கொடுங்கோலன். இவ் வகையில் இந்தச் சிலையானது அயோனியாவில் பாரசீக ஆதிக்கத்தைக் காட்டும் நினைவுச் சின்னமாயிருக்கின்றது.

அப்போலோவின் கோவிலை எரிக்கும் செயலை டேரியஸ் ஒப்ப வில்லை என்பதை நாம் சந்தேகிக்கலாம். மன்னர்மன்னராகிய இவர், தீர்க்க தரிசனம் கூறும் இந்தத் தெய்வத்தின்மேல் கொண் டுள்ள மதிப்பை இவர் அயோனியாவின் ஸாட்ராப்பிற்கு எழுதிய எச்சரிக்கைக் கடிதத்திலிருந்து கண்டுகொள்ளலாம். இந்தக் கடிதத்தின் கிரேக்க மொழிபெயர்ப்பின் ஒரு பாகம் கல்லில் பொறித்து வைக்கப்பட்டிருக்கின்றதை நாம் காண்கின்றோம். அப்போலோ, 'பாரசீகர்களுக்கு எப்பொழுதும் உண்மையையே கூறினார்' என்ற பாரசீக மன்னரின் மதிப்பிற்குரிய அத்தாட்சி, நிலையாகப் பதிவு செய்யப்பெற்றுள்ளதை இந்தக் கல்லினால் நாம் அறிகின்றோம்.

மைலீட்டஸ்ஸைக் கைப்பற்றியபின், கேரியாவும் அதன் பக்கத்திலுள்ள தீவுகளையும் பாரசீகர் தம் வசப்படுத்

தினர். இதற்கு முன் கேரியா சிலகாலம் கலகக்காரர்களின்கீழ் ஓங்கியிருந்தது. பினீஷியர்களின் கப்பற்படை ஹெல்லெஸ் பாண்ட் தீரத்தை அடைந்து, அங்கே தனது சுதந்தரத்தைத் திரும்பப் பெற முயன்ற கிழக்குக் கிரீஸை முழுவதும் நொறுக்கிற்று.

அயோனிய இயக்கத்தின் முதல் கட்டத்திலேயே ஆதென்ஸ் பின் வாங்கினுல்கூட மைலீட்டஸ்ஸின் வீழ்ச்சியின் செய்தி அத்தீனியர்களுக்குப் பெரிய ஏமாற்றத்தையும் இரக்கத்தையும் உண்டுபண்ணிற்று. இந்த உணர்ச்சி, மைலீட்டஸ்ஸிற்கு ஏற்பட்ட பெருங்கேட்டைத் தனது நாடகத்தின் தலைப்புப் பொருளாக வைத்த துன்பியல் நாடகக் கவிஞன் பிரினிக்கஸ் (Phrynichus)ஸிற்கு இவர்கள் கொடுத்த தண்டனையிலிருந்து விளங்குகின்றது. தங்களுடைய சொந்த இடையூறுகளை நினைக்கும்படி செய்ததனுல் இவருக்குத் தண்டம் விதித்தனர். இதற்கு மத்தியில் பாரசீகர்கள் கையிலிருந்து பிற்காலத்தில் ஒரு நிலையான உடைமைப் பொருள் என்று கருதப்பட்ட இரு தீவுகள் இவர்களுக்குக் கிடைக்கப்பெற்றன. செர்சானீஸியக் கொடுங்கோலனுகிய மில்டியேடிஸ் (Miltiades) கலகத்தில் ஒரு பங்கும் எடுக்காமல் இருந்தான். ஆனுலும் இக் கலகத்தின் மூலம் தன்னுடைய பலத்தை அதிகப்படுத்த எண்ணி லெம்னுஸ் (Lemnos), இம்ப்ராஸ் (Imbros) என்ற இரு தீவுகளையும் பற்றிக்கொண்டான். கலகமானது தோல்வியடைந்ததும் செர்சானீஸில் இருக்கப் பயந்தவனுய் மில்டியேடிஸ் ஆதென்ஸிற்கு ஓடினுன். இவனுடைய மகனைப் பாரசீகர்கள் பிடித்துக்கொண்டார்கள். ஆனுலும், டேரியஸ் அவனை அன்போடு பராமரித்து வந்தார். இதிலிருந்து முன்னுளில் மில்டியேடிஸ் பாரசீகர்களுடன் நேசமுடன் வாழ்ந்திருக்கக்கூடும் என்பது தெளிவு. ஆதென்ஸில் மில்டியேடிஸ் லெம்னுவையும் இம்ப்ராஸையுமே ஆதென்ஸ் நகருக்காகக் கைப்பற்றினதாகத் தெரிவித்தான். சில காலத்திற்குப் பின் இவ் விரண்டு தீவுகளும் பாரசீகர்களின் கையில் இருந்தபோதிலும், பிற்காலத்தில் இவை இரண்டும் அத்தீனிய ஆதிக்கத்தினுள் மறுபடியும் வந்தன.

## 7. டேரியஸ்ஸின் இரண்டாம், மூன்ரும் ஐரோப்பியப் படையெடுப்புகள்

### மாரத்தான் யுத்தம் (Battle of Marathon)

கலகத்தை அடக்கியதன் பயனுகப் பாரசீகம் மூன்று காரியங்களைச் செய்யவேண்டியதாயிருந்தது: அவை, கிரேக்கர்களுடைய ஆசியாவானது மறு முறையும் ஒழுங்குபடுத்தப்பட வேண்டும்;

பாரசீகத்தின் ஐரோப்பியப் பகுதி மறுபடியும் கைப்பற்றப்பட வேண்டும்; கடைசியாகப் பாரசீகத்தின்மேல் படையெடுத்து ஸார்டிஸ்ஸைக் கைப்பற்றிய எல்லாச் சுதந்தரக் கிரேக்க அரசுகளும் தண்டிக்கப்பட வேண்டும் என்பவையேயாகும்.

அயோனிய நகரங்களின் நிலப் பகுதிகளைக் குறிப்பிட்டும் அளவிட்டும் அவற்றுக்குத் தக்க வரிகளை விதிக்கவும் ஆர்ட்டாபெர்னஸ் ஏற்பாடுகள் செய்தார். எந்த நகரமும் மற்ற நகரங்களுடன் யுத்தம் தொடுக்கக்கூடாது என்றும் கட்டளையிடப்பட்டது. ஆனால் இதற்கு மேலும் சில செய்யப்படவேண்டியிருந்தன. இந்த அயோனியர் கலகம், கொடுங்கோலரின் ஆட்சி முறையானது கலகங்களைத் தடுக்க இயலாதவை என்பதைப் பாரசீகர்களுக்கு எடுத்துக் காட்டிற்று. ஆகையால், இந்த முறைக்கு மாறான ஒரு முறையைத் தேர்வு செய்யப் பாரசீகம் முன் வந்தது. வல்லாட்சியாளர் (despots) ஒழிக்கப்பட்டனர். அவர்களுடைய இடத்தில் மக்களாட்சிகள் ஏற்படுத்தப்பட்டன. இப் பெரியதொரு வல்லாட்சி முறை (despotism) மக்களின் ஆட்சிக்குரிய நிறுவனங்களை ஆதரித்தது உலகத்திற்கே வியப்பை யூட்டக்கூடிய செயலாகும். இது கிரேக்கர்களுடைய உணர்ச்சிக்குக் கொடுக்கப்பட்ட சலுகையாகும். இந்தச் சலுகையானது டேரியஸ் மன்னரின் புத்திக் கூர்மையைத் தெளிவாக எடுத்துக் காட்டுகிறது.

பாரசீகத்தின் மேலாண்மையைத் திரேஸிலும், மாசிடோனியாவிலும் மறுபடியும் நிலைநாட்ட மன்னரின் மருமகனான மார்டோனியஸ் (Mardonius) அனுப்பப்பட்டார். இவர் மாசிடோனியாவின் வழியாகக் கிரீஸினுள் புகுந்து அயோனியக் கலகக்காரர்களுக்கு உதவியளித்த இரண்டு நகரங்களைத் தண்டிக்க எண்ணங் கொண்டார். கப்பற்படை ஒன்று கடலோரத்திற்கு அருகிலேயே சென்று வழியில் தேஸாஸ் (Thasos) தீவைத் தன்வசமாக்கியது. திரேஸ் கீழ்ப்படுத்தப்பட்டது. அலெக்ஸாண்டர் (Alexander) என்ற மன்னனின் கீழிருந்த மாசிடோனியா சரணடைந்தது. பின்னொரு காலத்தில் இந்தச் சரணாகதிக்காக அலெக்ஸாண்டரின் மரபினரும், இதே நாமம் தரித்தவருமான ஒருவர் பழிக்குப் பழி வாங்கினார். ஆனால் கிரீஸின்மேல் திட்டமிட்ட படையெடுப்பானது செயல்முறைக்குக் கொண்டுவரப்படவில்லை. ஏனென்றால், ஆதாஸ் (Athos) உந்துநிலத்தில் (promontory) ஒரு புயல் தோன்றிக் கப்பற்படையை நாசமாக்கியது. மார்டோனியஸ் பல கப்பல்களை இழந்தவராய் நாடு திரும்பினார். ஆனால் இவருக்குக் கொடுக்கப்பட்ட வேலையில் மிகவும் முக்கியமானவற்றைச் செய்து முடித்திருந்தார்.

ஆதென்ஸும், எரிதிரியாவும் தண்டனையின்றித் தப்பலாகாதென டேரியஸ் மிகவும் கடுமையாகத் தீர்மானித்தார். ஸார்டிஸ் நகரத்தை எரித்தலில் அவர்களுக்கு இருந்த தொடர்பு, டேரியஸ்ஸைச் சினமடையச் செய்தது. பேரரசரானதால் தம் பெருமைக்கே ஓர் அவமதிப்பாகத் தோன்றிய இந்தச் செயலானது எக் காரணத்தைக்கொண்டும் தண்டிக்கப்படாமல் போகக்கூடாது என்றும் எண்ணினார். நாடு கடத்தப்பட்ட கொடுங்கோலனாகிய ஹிப்பையஸ் சூசாவில் வசித்து வந்தான். இவன் தன்னைத் துரத்தியடித்துவிட்ட நகரத்திற்கு விரோதமாகப் படை யெடுப்பு ஒன்று நடத்தும்படி, பாரசீகர்களைத் தூண்டிவந்தான். இப் புதியதோர் படையெடுப்பானது திரேஸ், மாசிடோனியா வழியாகச் செல்லாமல் ஈஜியன் கடலை நேரடியாகத் தாண்டிப் போகவேண்டும் என்று தீர்மானிக்கப்பட்டது. பாரசீகக் கடற்கரையிலுள்ள நகரங்கள் யாவும், போர்க்கப்பல்களுக்கு வேண்டிய தளவாடம் உண்டு பண்ணவும், குதிரைப்படைகளை ஏற்றிச் செல்லப் போக்குவரத்துக்களை உண்டுபண்ணவும் கட்டளையிடப்பட்டன. சரணாகதியின் குறிகளாகிய நீரையும் மண்ணையும் கேட்டு வாங்கிவரப் பாரசீகத்துடன் போர்க்கோலம் கொள்ளாமல் இருக்கின்ற சுதந்தரக் கிரீஸைச் சேர்ந்த பெரிய நகரங்களுக்குத் தூதர்கள் அனுப்பப்பட்டார்கள். அநேக இடங்களில் மேற்கூறிய குறிகள் வழங்கப்பட்டன. இவ்விதமாகக் குறிகள் கொடுத்த நாடுகளில், ஒன்றானது ஆதென்ஸின் பகைமை நாடான ஈகைனாவாகும். இராணுவத்தின் தலைமை அதிகாரம் டேட்டிஸ் (Datis)ஸிற்கும், டேரியஸ்ஸின் உடன்பிறந்தார் மகனாகிய ஆர்ட்டாபெர்னஸ்(Artaphernes)ஸிற்கும் வழங்கப்பட்டது. தனது தாய்நாட்டை மறுமுறையும் ஆட்சி புரிய நம்பிக்கை கொண்ட வயதான கொடுங்கோலனாகிய ஹிப்பையஸ் இவர்கள் இருவருடனும் சென்றான். இந்தத் தளவாடங்கள் - எரோடட்டஸ்ஸின்படி 600 பெரிய கப்பல்களைக் கொண்டிருந்தன - சாமாஸிலிருந்து புறப்பட்டு, அரிஸ்டோகோரஸ் தோல்வியுற்ற தீவாகிய நாக்ஸாஸை நோக்கி முதலில் சென்றன. நாக்ஸால் நகரமக்கள் பயங்கொண்டு நகரத்தை விட்டுவிட்டு மலைகளுக்குள் சென்றனர். பாரசீகர்கள் நகரத்தைச் சுட்டெரித்தனர். புனிதத் தீவாகிய டீலாஸ் (Delos) சிறிதளவும் அழியாமல் காப்பாற்றப்பட்டது. ஆனால் பாரசீகர்கள் இந்தத் தீவைவிட்டுப் போனவுடன் இது ஒரு பூமி அதிர்ச்சியினால் குலுக்கப்பட்டது. இந்த விசித்திர நிகழ்ச்சியானது பின்னால் வரும் அல்லல்களைக் குறிக்கும் குறி என்று கருதப்பட்டது. இவ்விதமாக ஒவ்வொரு தீவிலிருந்து மற்றத் தீவுக்குச் சென்று சைக்ளேட்ஸ் தீவுகள் அனைத்தையும் தன் வசப்படுத்திக்கொண்டு இந்தக் கப்பற்படையானது யூபியா தீவிற்கும் அட்டிகாவிற்குமிடையே உள்ள

கால்வாயை அடைந்தது. இங்கே வழியில் காரிஸ்டஸ்(Carystus) ஸைத் தன் ஆதிக்கத்துக்கு உட்படுத்திவிட்டு எரிதிரியாவின் நில எல்லையை அடைந்தது. ஆதென்ஸும் எரிதிரியாவும் ஒரு பொதுவான ஆபத்தைத் தடுக்கப் பொதுவான முன் ஏற்பாடுகள் செய்யாமலிருந்தது வியப்பான ஒரு செயலாகும். அட்டிகாவி லிருந்து ஒரு சிறிய குறுகலான நீர்ப்பகுதியால்தான் எரிதிரியா பிரிக்கப்பட்டிருந்தது. அப்படி இருந்தாலும் ஒரு கூட்டுப் போர் நட வடிக்கையை இவர்கள் மேற்கொள்ளாதது ஆச்சரியத்திலும் ஓர் ஆச்சரியமாகும். தமது சார்பரசு நாடாகிய சால்சிஸில் (Chalcis) குடியேறும்படி தாம் அனுப்பிய குடியேற்ற மக்களை அவர்களுடைய அயலகத்தார்களாகிய எரிதிரியர்களுக்கு உதவியளிக்கும்படி ஆதென்ஸ் கேட்டுக்கொண்டதே யொழிய, மற்றப்படி வேறு எவ்வித உதவியையும் அளிக்கவில்லை. இந்த யூபியன் நகரத்தின் சுவர்களுக்கு அடுத்தாற்போல் கடுந் தாக்குதல்களைப்பற்றி நாம் கேள்விப்படுகின்றோம். ஆனாலும், இந்த நகரமானது சில நகர மூப்பர்களின் நம்பிகைத் துரோகத்தினால் ஏழு நாட்களுக்குள் படையெடுத்துவந்த பாரசீகர்கள்வசம் ஒப்புவிக்கப்பட்டது. எரிதிரி யாவின் கோவில்களை நாசமாக்கிய தீக்கொழுந்துகள், ஸார்டிஸ் நகரத்தில் தோன்றிய தீக்கொழுந்துகளுக்கு ஒரு சிறு ஈடாகக் காட்சியளித்தன. ஐரோப்பாவிற்கும் ஆசியாவிற்கும் இடையே ஏற்பட்ட போராட்டத்தில் ஈடுபட்ட எல்லாக் கிரேக்கப் பட்டினங் களிலும் எரிதிரியாவைவிட வேறு ஒன்றும் இவ்வளவு தீய முடிவை அடையவில்லை.

பாரசீகப் படைத்தலைவர்கள் தமக்குக் கொடுக்கப்பட்டுள்ள வேலையில் எளிதான பாதியைச் செய்து முடித்தனர். தம் மன்னனை எதிர்த்த அடுத்த நகரத்தைத் தண்டிக்க வேண்டிய வேலை ஒன்றுதான் இப்பொழுது இருந்தது. கால்வாயைக் கடந்து, மாரத்தான் விரிகுடாவிற்கு மேற்குப் பாகத்தில் பாரசீகர்கள் தங்கள் இராணுவங்களை இறக்கினர். இரண்டாவது முறையாக நாடு கடத்தப்பட்ட ஆதென்ஸ் நகரத்தைச் சேர்ந்த கொடுங் கோலன் ஒருவன் தன் அதிகாரங்களை மீண்டும் பெறுவதற்கென எரிதிரியாவிலிருந்து வந்தான். ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னர் அவனுடைய தகப்பன் சில கூலிப்படையினருடன் வந்தான். ஆனால் இப்போது அவனுடைய குமாரனே ஆசியாவினுடைய படைகளுடன் வந்துள்ளான். ஆதென்ஸ் மக்களின் ஆதரவைப் பெறுவதைப் பொறுத்தவரையில் ஹிப்பையஸ்ஸின் அந்நிய நாட்டுப்படைகள் அவ்வளவு அநுகூலத்தைத் தரவில்லை என்று தான் சொல்லவேண்டும். பிஸிஸ்ட்ரேட்டர்களுடைய குடும்பத் திற்குப் பல வெறுப்பான பகைஞர்கள் இருந்தார்கள். இவர்கள்

யாவரிலும் அதிக வெறுப்புடையவரும், கொடுங்கோலனின் ஆட்சி என்றால் என்ன என்பதைத் தமது சொந்த ஜீவியத்திலேயே நன்கு அறிந்தவருமானவர் கைமானின் (Cimon) மகனாகிய மில்டியேடிஸ் ஆவர். இவர் அயோனியர் கலகத்திற்குப் பிறகு எப்படிச் செர்சானீஸிலிருந்து ஆதென்ஸ் வந்து சேர்ந்தார் என்று நாம் முன்னமே அறிந்துள்ளோம். இவருடைய பகைவர்கள் செர்சானீஸில் கொடுமையாக அரசாட்சி நடத்தினர் என்று இவர்மீது குற்றஞ் சாட்டியுள்ளனர். ஆனால் லெம்னாஸ், இம்பிராஸ் ஆகிய இரு தீவுகளை இவரிடமிருந்து பெற்ற இவருடைய நாட்டிலுள்ள குடிமக்கள் யாவரும் இக் குற்றச்சாட்டிலிருந்து இவரை விடுவித்தனர். ஒலிம்பியாவில் இரதங்களின் பந்தயத்தில் வெற்றிபெற்றுக் கீர்த்தியடைந்த தம் தகப்பனாராகிய கைமானைப் பிஸிஸ்ட்ரேட்டர்கள் கொன்றதனால், இவர் பிஸிஸ்ட்ரேட்டர்களை வெறுத்தது ஓர் இயல்பான செயலாகும். முபற்சிபுள்ள கட்சிக்காரனும், கொடுங்கோலனின் தீய பகைவரும், ஆதென்ஸ் நகரிலுள்ள எல்லா மக்களையும்விடப் பாரசீகர்களைப்பற்றி அதிகமாக நேரடியாகவே அறிந்தவருமான மில்டியேடிஸ்ஸைத் தம் கோத்திரத்தின் படைத்தலைவ(strategos)ராக மக்கள் தேர்ந்தெடுத்ததில் வியப்பு ஒன்றுமேயில்லை. படையெடுத்து வந்தவர்களை எதிர்த்த அத்தீனியர்களின் உயிர்நிலை என்று இவரை அழைப்பது மிகையாகாது.

ஹிப்பையஸ் துரத்தப்பட்டு ஒரு தலைமுறைக் காலங்கூட ஆகாதபோதிலும் ஆதென்ஸ் பெரிய மாறுதல்களை அடைந்தது. அத்தீனியர்களுடைய குணவியல்பானது சுதந்தர மக்களாட்சி நிறுவனங்களினிடையே வளர்ச்சி பெறலாயிற்று. அத்தீனியர்கள் முந்தி இருந்ததைவிட அடிப்படையாக மாறியிராவிட்டால், ஹிப்பையஸ் ஆதென்ஸை வெகு எளிதில் திரும்பக் கைப்பற்றியிருக்கக் கூடும் என்று சொல்லப்படுகின்றது. இதே விஷயத்தை வேறு விதமாகச் சொல்ல வேண்டுமானால் பாரசீகர்களின் படையெடுப்பு இருபது ஆண்டுகளுக்கு முன்னர் ஏற்பட்டிருந்தால், ஆதென்ஸ் இப்பொழுது எதிர்த்த வண்ணம் எதிர்த்திருக்க முடியாது; அதே நேரத்தில் கிரீஸ் நாட்டுச் சுதந்தரமும் தோல்வியுற்று மறைந்துபோயிருக்கும். எந்த அரசியல் காரணங்கள் பாரசீகப் படையெடுப்பை உண்டுபண்ணினவோ, அவையே ஆதென்ஸை அந்தப் படையெடுப்பை எதிர்த்து நிற்கச் செய்தன. கொடுங்கோலாட்சியின்மீது ஏற்பட்ட தீவிரமான மன உணர்ச்சி வளர்ச்சி பெறாவிட்டால் அயோனியக் கிரேக்கர்கள் கலகம் செய்ய எழும்பியிருக்க மாட்டார்கள்—இதே காரணம் பிஸிஸ்ட்ரேட்டர்களை ஒழித்ததுமன்றி, மாரத்தோனிய ஆதென்ஸை உண்டாக்கியும் வைத்தது. வேறு விதமாகக் கூறுவோமாகில், ஹிப்பை

யஸ்ஸைத் துரத்தியடிக்குமுன் அயோனியர் கலகம் ஏற்பட்டிருந்தால், ஆதென்ஸ் இந்தக் கலகத்தில் ஒரு பங்கும் எடுத்திராது. அதே நேரத்தில் கிரீஸின்மேல் பாரசீகர்களின் படையெடுப்பும் தொடர்ந்திருக்காது என்று சொல்லலாம்.

நமது வரலாற்று அறிஞர் சொல்லும் கதையிலிருந்து தமது நகரத்தையும், தமது நில எல்லையையும் அந்நியர்கள் கையில் விழாது எப்படிக் காப்பாற்றுவது என்று யோசிப்பதற்கு முன்னமே பகைவர்கள் அட்டிக் நிலத்தில் இறங்கிவிட்டார்கள் என்று ஒருவன் நினைக்க இடமிருக்கின்றது. பிலிப்பைடீஸ் (Philippides) என்னும் வேகமாகச் செல்லும் ஓட்டக்காரர் ஒருவரை எரிதியாவின் வீழ்ச்சியையும், ஆதென்ஸ் நகரத்தின் இடுக்கண்களையும் எடுத்துக் கூற மிக அவசரத்துடன் லாசிடீமோனுக்கு அனுப்பினார்கள். லாசிடீமோனியர்கள் ஆதென்ஸுக்கு உதவியளிப்பதாகக் கூறினார்கள் - தமது கூட்டுக் குழுவைச் சேர்ந்த ஒருவருக்கு அவர்கள் உதவி செய்யக் கடமைப்பட்டவர்கள் - ஆனால் மத சம்பந்தமான சில தயக்கங்கள் அவர்களை உடனே புறப்படத் தடை செய்தன. அவர்கள் பௌர்ணமி கழியுமட்டும் காத்திருக்க வேண்டும். ஆனால் பௌர்ணமி கழிந்தால் அவர்களுடைய உதவியால் ஒன்றும் பயன் இராது. ஏனென்றால், சகலமும் இதற்குள் முடிந்துவிடும்.

அத்தீனியர்களின் இராணுவமானது 9000 போர்வீரர்களையுடையதா யிருந்திருக்கும். இப் படையின் சேனாதிபதி காலிமாசகஸ் (Callimachus) என்பவர். இவர்தாம் அந்த ஆண்டின் போலிமார்க்கும் (Polemarch) ஆவர். நாட்டின் பாதுகாப்பை ஒழுங்கமைப்பதாகிய பொறுப்பான கடமை இவரிடமும், மற்றும் பத்துக் கோத்திரப்படைகளின் படைத்தலைவர்களிடமும் இருந்தது. இவர்கள் எல்லோரும் சேர்ந்து உண்டாக்கியதே போர்ச் சபையாகும். மில்டியேடிஸ்ஸின் ஆலோசனைகளுக்குக் காலிமாக்கஸ் இசைந்தது ஆதென்ஸின் புண்ணியமேயாம். போலிமார்க்கும், படைத்தலைவர்களில் செல்வாக்கும் மிகுந்த ஒருவரும் சேர்ந்து நிறுவிய கூட்டு அதிகாரம், அவ்வளவு தீரமில்லாத ஏனைய படைத்தலைவர்களின் யோசனைகளைவிட வலிமை பொருந்தியதாயிருந்தது. பகைவர்கள் மாரத்தான் பக்கத்தில் இறங்கிவிட்டார்கள். இவர்கள் சுவர்களால் சூழப்படாத நகரத்தைத் தரைமூலமாகவும், கடல்மூலமாகவும் தாக்க எண்ணியுள்ளார்கள் என்பது தெளிவாய் விளங்கியது. ஆனால் அத்தீனியர்களின் இராணுவம் அவர்கள் வருமளவும் காத்திருந்து சேம ஆறுக்குப் பக்கத்தில் ஓர் இடத்தில் போர் புரிவதா அல்லது

துணிவுடன் அவர்களைத் தேடிச் சென்று முன்னேறிச் செல்வதா என்பது ஒரு பெரிய வினாவாக இருந்தது. இந்த வினாவிற்கு அதீனிய மக்கள்தாம் தகுந்த உத்தரவு அளிக்கக்கூடும். இந்த வினாவைப்பற்றி ஆலோசிக்கப் பேரவை கூடிய மணிநேரமே இந்தப் பெருநிகழ்ச்சியில் வெகு முக்கியமான நேரமாயிற்று. 'சேனையானது மாரத்தானை நோக்கி முன்னேறி, பாரசீகரை அங்கே சந்திக்க வேண்டும்' என்று மில்டியேடிஸ் முன்மொழிந்தார். மில்டியேடிஸ்ஸின் அழியாத புகழுக்குக் காரணம், இவர் இந்த ஆணையைப் பேரவையின்முன் சமர்ப்பித்ததும் பின்னர் இதை எடுத்துச் செயல்முறையில் ஆக்கிவைத்ததுமே யாக இருக்கலாம். கொடுங்கோலர்கள் ஏற்கனவே நகரத்தின் சுவர்களை உடைத்தெறிந்திராவிட்டால், மில்டியேடிஸின் திட்டம் செயல் முறைக்குக் கொண்டுவரப்பட்டிருக்க மாட்டாது.

படம் 29: மாரத்தான்

தோற்றத்தில் புல் அரிவாளைப்போன்ற கடற்கரையில் நீண்டிருக்கும் மாரத்தான் சமவெளியானது மற்றப் பக்கங்களில் பென்டெலிக்கஸ் (Pentelicus), பார்னெஸ் ஆகிய மலைகளிலிருந்து தொடர்ந்து சரிந்திருக்கும் குன்றுகளால் சூழப்பட்டிருக்கின்றது. சமவெளியின் வடக்குப் பாகத்திலும் தெற்குக் கோடியிலும்

சதுப்புநிலம் உளது. குன்றுகளிடையேயும் வடக்கிலுள்ள பள்ளத் தாக்கினூடேயும் ஓடும் காட்டாறு ஒன்றினால் இந்தச் சமவெளி இரண்டு பாதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. மேலே கூறிய பள்ளத் தாக்கிலேதான் மாரத்தான் கிராமம் உள்ளது. ஆதென்ஸிலிருந்து மாரத்தானுக்கு இரண்டுசாலைகள்புறப்படுகின்றன. இதில்முக்கியச் சாலையானது கிழக்கே திரும்பி, ஐமெட்டஸ் (Hymettus) மலைக்கும் பென்டெலிக்கஸ் மலைக்கும் இடையில் சென்று, பலீனி (Pallene) என்ற சிற்றூரினூடே (deme) சென்று, பென்டெலிக்கஸ் மலையைச் சுற்றிச் சமவெளியை அடைந்ததும், நேரே வடக்காகச் சென்று மாரத்தான் சமவெளிக்குத் தென்பாகத்திலிருந்து நுழைகின்றது. அடுத்த சாலையானது, தூரத்தில் குறைந்ததாயிருந்தாலும் அதிகக் கஷ்டமானது. இது வடக்காகக் கெப்பிஸியா (Caphisia) என்ற சிற்றூரின் வழியாகச் சென்று, பென்டெலிக்கஸ் குன்றுகளுக்கு வடக்கே தொடர்ச்சி பெற்று மாரத்தான் சமவெளியை அடைந்த வுடன் இரண்டாகப் பிரிகின்றது. இந்த இரண்டு சாலைகளும் கோட்ரோனி (Kotroni) என்னும் குன்றை வட்டமாகச் சூழ் கின்றன. இதில் வடக்குச் சாலையானது மாரத்தான்மட்டும் சென்று, அதன்பின் வடக்கிலிருந்து காட்டாற்றின் கரைகள் வழி யாகச் சமவெளியில் இறங்குகின்றது. அடுத்த பிரிவானது அங் குள்ள எராக்ளீஸின் கோவில் திருவிடம் ஒன்றின் பக்கமாகச் சென்று ஆவ்லோனு (Avlona) பள்ளத்தாக்கில் இறங்கி, சம வெளியின் தென்மேற்கு மூக்கில், இப்போது வ்ரானு (Vrana) என்னும் கிராமம் இருக்கும் இடத்திற்குப் பக்கத்தில் தோன்று கின்றது.

காலிமாக்கஸ் கெப்பிஸியா வழியாகச் செல்லும் வடக்குச் சாலையைத் தேர்ந்தெடுத்து எராக்ளீஸின் கோவில் திருவிடத் திற்குப் பக்கத்தில் ஆவ்லோனு பள்ளத்தாக்கில் கூடாரத்தில் தங்கினர். இந்த மெச்சத்தக்க இடத்தைத் தேர்ந்தெடுத்ததே பாதி வெற்றிக்குரிய மேலான செயல் என்று கூறலாம். அத்தீனி யர்கள் தங்களை ஒருவரும் தாக்க இயலாத கீழ்ப்பள்ளத்தாக்கிலே இருந்தனர். இவர்களைத் தாக்கும் படையானது ஒரு பெரிய குறைபாட்டை உடையதாயிருக்கும். அத்தீனியர்கள் தாம் வந்த மலையை ஒட்டிய சாலையை மாத்திரம் கட்டுப்படுத்தாமல், பெரிய சாலையையும், சமவெளியின் தெற்கு வாயிலையும் கட்டுப்படுத் தினர். ஏனென்றால், பாரசீகர்கள் தெற்கு வாயிலை அடைய முயன்றால், அத்தீனியர்களுடைய பக்கவாட்டுத் தாக்குதலுக்கு (flank attack) உள்ளாவார்கள். இக்காலத்தில் ஆதென்ஸ் தேர்ச்சி பெற்ற போர்த்திறமுள்ள படைத்தலைவர்களைப் பெற்றிருந்தது. பதினறு ஆண்டுகளுக்குமுன் பீயோஷியாவிற்கும் சால்சிஸ்ஸிற்கும்

எதிரே ஆதென்ஸ் எடுத்த ஒளிதுலங்கும் போர் நடவடிக்கைகள். 'இதன் படைத்தலைவர்கள் கடுமையான இந்த அபாயத்தில் எவ்வகையான திறமையைக் காட்டுவர்' என்பதை நாம் எதிர் பார்க்கும்படி செய்து வைத்திருந்தன. காட்டாற்றின் படுகைக்கு வடபுறத்தில் பாரசீகர்கள் தம் கூடாரங்களை அடித்துத் தங்கியிருந்தனர். அவர்களுடைய மரக்கலங்கள் நிலத்திற்குப் பக்கத்தில் கடலில் நங்கூரம் பாய்ச்சி நின்றன. எவ்வளவு சீக்கிரம் இரு தரப்பார்களையும் சமவெளி தீரத்தில் நேர்நேராக நிற்க வைத்துப் போர் தொடுக்கச் செய்ய முடியுமோ அவ்வளவுக்கு அவ்வளவு பாரசீகர்களுக்கு நலன் விளையும். ஆனால் அத்தீனியர்களைப் பொறுத்தவரையில் தம்மைத் தாக்கமுடியாத இந்த இடத்தில் இருந்தபடி எவ்வளவு காலம் தாமதிக்கின்றார்களோ அவ்வளவுக்கு இவர்களுக்கு நலம். இவர்கள் அதிகப்படியாகக் காத்துக்கொண்டிருந்தால் ஸ்பார்ட்டாவின் உதவி ஒருவேளை இவர்களுக்குக் கிட்டும் என்று நம்பலாம். மற்றொரு பாகத்திலிருந்து இவர்களுக்கு உதவி கிட்டியிருந்தது. இவர்கள் எராக்கிளீஸின் கோவில் திருவிடத்தை அடைந்தவுடன் 1000 ப்ளெட்டியர்களைக் கொண்ட ஒரு துணைப்படை இவர்களுடன் சேர்ந்தது. தீபன் (Theb: n) நுகத்தடியிலிருந்து தங்களைப் பாதுகாக்கும் அத்தீனியர்களுக்கு நன்றியறிவு கூறும் முறையில் ப்ளெட்டியர்கள் அத்தீனியர்களுச்கு நெருக்கடியான இச் சமயத்தில் அவர்களுக்கு உதவியளிக்க முன்வந்தனர்.

சில நாட்கள் கழிந்தன. கிரேக்கர்கள் அசையாமல் இருந்தனர். பாரசீகர்கள் இன்னமும் காத்துக்கொண்டிருக்கக் கூடாத நிலையை அடைந்தனர். தம் படையில் பெரியதொரு பகுதியையும் குதிரைப்படை முழுவதையும் தம் கப்பல்களில் ஏற்றிய இவர்கள் ஆதென்ஸை நிலமூலமாகவும், கடல்மூலமாகவும் தாக்க ஆயத்தங்கள் செய்தனர். தரைப்படையானது பாலேன் (Pallen) வழியாகச் செல்லும் பெரிய சாலையினூடே நடந்தேற வேண்டும். சமவெளியிலிருந்து ஒருவர்பின் ஒருவராகப் பாரசீகப் படையினர் செல்லுங்கால் ஒருவேளை கிரேக்கர்கள் தம்மைத் தாக்கக்கூடும் என்று பாரசீகர்கள் போருக்கு முன்னதாகவே ஏற்பாடுகள் செய்திருந்தனர். ஆதென்ஸுக்கு இது ஒரு கடுமையான நேரம். ஆனால் காலிமாக்கஸும் அவருடைய படைத்தலைவர்களும், இம்மாதிரி நடக்குமானால் தாம் என்ன செய்யவேண்டும் என்பதை முன்னரே தீர்மானித்திருந்தனர் போலும்! மில்டியேடிஸ், பேரவையின்முன் கூறியது போலவே, தற்பொழுதும் இந்த முகாமில் மிகவும் துணிவுள்ள செயலைச் செய்யத் தூண்டியிருக்கக்கூடும் என்று நாம் நம்பலாம். ஆனால் தலைசிறந்த கட்டளைகளை யிடுகின்ற

ஆற்றல் போலிமார்க்கிற்கே (காலிமாக்கஸுக்கே.) பகைவர்கள் தெற்கு நோக்கிச் செல்லும்போது அவர் அவர்களைத் தாக்கத் திட்டமிட்டார்.

தம் சுய ஞானத்தினால் நடந்துகொண்டிருந்தாலும் சரி, மற்றவர்களுடைய ஆலோசனையின்படி நடந்தாலும் சரி, காலிமாக்கஸ் முன்னர் எப்படிப் போர்த்திறமையைக் காட்டினரோ அவ்விதமாகவே இப்பொழுது நுண்நயமுறைத் திறமையை (skill in tactics) நிறைவாகக் காட்டினர். எண்ணிக்கையில் பகைவர்களைவிடக் குறைந்த அத்தீனியப் படையானது, ஒரே கனமுள்ள வரிசையாக நிறுத்தப்பட்டிருந்தால் பாரசீகர்களுடைய படையின் மையத்தைக் கடலுக்குள் பெருக்கித் தள்ளியிருக்கும். ஆனால் அதே சமயத்தில் அத்தீனியர்களும் ஒரு பொறியில் மாட்டிக் கொண்டிருப்பர். இவர்களை ஒரு பக்கத்தில் கடலிலும் கப்பலிலும் உள்ள பகைப்போர் வீரர்களும் மற்றப் பக்கங்களில் ஒன்றுகூடி வரும் பாரசீகப் படைச் சிறகினரும் சூழ்ந்திருப்பர். இதை அறிந்த காலிமாக்கஸ் தமது மையத்தின் கனத்தையும் பலத்தையும் குறைத்துப் பாரசீக மையத்தின் நீளத்திற்கு ஒப்பாக்கித் தம் படைச் சிறகுகளை எப்பொழுதும் இருக்கும் கனத்திற்குக் கொண்டு வந்து, பகைவரின் படைச் சிறகுகளைத் தாக்கும்படியாக நிறுத்தினர்.

பாரசீகர்களின் நீளமான படைவீரர்களின் வரிசை காட்டாற்றின் படுகையைத் தாண்டிக் கடற்கரையோரமாக முன்னேறியது. ஒரு பெரும் பகுதி இந்த வரிசையிலிருந்து பிரிக்கப்பட்டுக் கிரேக்கர்களுக்கு மறைவாக நிறுத்தப்பட்டது. இது போர் முறையில் யாவரும் எடுத்துக்கொள்ளும் ஒரு சாதாரண முன் ஏற்பாடாகும். இப்படிச் செய்வதனால் பகைவர்களின் பக்கவாட்டுத் தாக்குதலைத் தடுக்கவோ அல்லது உதறித்தள்ளவோ கூடும். இந்தப் படைகள் பின்னுக நின்று தங்களை நன்றாகப் பாதுகாத்துக்கொள்ளும் போது ஏனைய படைகள் பயமின்றி முன்னேறலாம். கிரேக்கப் படையானது ஆவ்லோனு பள்ளத்தாக்கின் வாயைப் போன்ற வாயில் அருகில் அமைந்திருக்கும் குன்றுகளிடையே காணப்படும் ஒதுக்கிடங்களில் இதற்குள் ஒருவேளை தோன்றியிருக்கலாம். வலது படைச்சிறகைக்காலிமாக்கஸ்தாமே நடத்தினர். இடது கோடியில் ப்ளெட்டிய நேசதேச மக்களின் படை நிறுத்தப்பட்டிருந்தது. இந்த நாளில் தம் நாட்டிற்காகப் போர் புரிந்தவர்களில் ஒருவரை நாம் காணலாம். இவர் படையின் தலைவராகவே அல்லது மற்ற எந்தப் பதவியிலும் இல்லாமல் ஒரு சாதாரணப் போர் வீரராகவே இருந்தார். ஆனல் பிந்திய காலத்தில் இவர் அத்தீனிய வரலாற்

றில் தம்முடன் போர் புரிகின்ற மற்ற எல்லா வீரர்களையும் காட்டிலும் மிகவும் பெரியதொரு பதவியைப் பெற்றார். இவர்தாம் லியோன்டிட் (Leontid) கோத்திரத்தின் படையைச் சேர்ந்த தெமிஸ்டாக்ளீஸ் (Themistocles) ஆவர். இவர் நியோக்ளீஸின் (Neocles) புதல்வராவர். எளிதில் மறக்க முடியாத இந்த நாளில் மற்றுமோர் உலகப் புகழ் பெற்ற அறிஞரும் போரில் பங்கெடுத்தார். இவர்தாம் ஈஸ்கைலஸ் (Aeschylus) என்னும் துன்பியல் நாடகக் கவிஞர். இவர் கைகளில் கேடயத்தையும் ஈட்டியையும் ஏந்தி மிதியர்களைத் (Medes) தாக்கச் சென்றார். கிரேக்கர்கள், பகைவரின் போர் வரிசையை நோக்கி அருகில் வரும்பொழுது, கிழக்கிலுள்ள வில்லாளிகள் அம்புகளைப் பொழிந்தார்கள். இந்தப் புது ஆபத்திலிருந்து தப்ப இவர்கள் ஓட்டமாக ஓடித் தங்களை நெருக்கிக் கொண்டு முன்னேறினார்கள். கிரேக்க ஆப்லைட்கள் (Hoplites) தங்களது படைத்தலைவர்களைக் கைவிடவில்லை. உன்னதப் போர் முறையும், நுண் நய முறையும் சேர்ந்து ஏற்படுத்திய வெற்றியை இவர்களுடைய வீரம் தமதாக்கியது. கிரேக்கர்கள் எண்ணியபடியே யாவும் நடைபெற்றன. அத்தீனியர்களின் மையமானது, பகைவர்களின் மையத்தால் குன்றுகளுக்கு நேராகத் துரத்தியடிக்கப்பட்டது. பகைவரின் மையத்தில் பெயர் பெற்ற வீரர்களும் பாரசீகர்களுந்தான் இடம் பெற்றனர். ஆனால் அத்தீனியர்களின் படைச் சிறகுகள் பகைவரின் படைச் சிறகுகளை முறியடித்தன. இதற்குப்பின் இப் படைச் சிறகினர் பின்னோகத் திரும்பிப் பின்வாங்கும் அத்தீனிய மையத்தைத் துரத்திச் செல்லும் வெற்றி வெறி பிடித்த பாரசீக மையத்தின்மேல் தம் தாக்குதலை ஆரம்பித்தனர். இப்படிச் செய்யும்போது இந்த இரு அத்தீனியப் படைச் சிறகினரும் தோல்வியுறறவர்களை அவர்களால் முடியுமாயின் அவர்களின் கப்பல்களுக்குப் போய்ச் சேரும்படி விட்டுவிட்டனர். இங்கேயும் அத்தீனியப் படைச் சிறகுகள் பெருமிதமான வெற்றியைப் பெற்றன. பாரசீகர்களுடைய வரிசை முறிவுபட்டது. எங்கும் ஒரே குழப்பம். குழப்பத்தினூடே பாரசீகர்கள் கரைக்கு நேராகத் துரத்தப்பட்டனர். அங்கே வாளுக்குத் தப்பினவர்களை அவர்கள் கப்பலில் இருந்தவர்கள் ஏற்றிக்கொண்டார்கள். பாரசீக இராணுவத்தில் ஒரு பகுதிதான் போரில் ஈடுபட்டது. தங்களைக் காப்பாற்றுவதற்கென்று நிறுத்தப்பட்ட படை குலைவதைக் கண்ட மாத்திரத்தில் பெரிய பகுதியைச் சேர்ந்த பாரசீகப் போர்வீரர்கள் கப்பல்களுக்குள் ஓடிப் புகுந்து கொண்டனர்.

இது ஒரு நீண்ட போரல்ல. இதில் அத்தீனியர்களின் சேதம் மிகக் குறைவுதான். மொத்தத்தில் 192 பேர்கள் கொல்லப்பட்ட

னர். பாரசீகர்களிலே 6400 பேர்கள் உயிர்ச் சேதம் உற்றனர் என்று கணக்கிடப்பட்டிருக்கிறது. இந்த மிதமான எண்ணிக்கையானது மேற்கூறிய சேதம் கிட்டத்தட்ட உண்மையாயிருக்கலாம் என்பதைத் தெரிவிக்கின்றது. இன்னமும் டேடிஸ் ஆர்ட்ட பெர்னஸ் ஆகிய இவ்விருவரிடமும் தமது நட்டங்களை இலாபமாக்கக்கூடிய பெரியதொரு தளவாடம் இருந்தது. ஆதென்ஸ் இன்னமும் அபாயத்தை விட்டு வெளியேறவில்லை. பாரசீகக் கப்பற்படைக்கால்வாய்க்குத் தெற்கே 'சூனியம்' என்ற முனையைச் (Cape Sunium) சுற்றிச் செல்ல ஆரபித்தது. வெற்றிபெற்ற அத்தீனியப் படையினர் இறந்தவர்களுடைய சடலங்களையும் போரில் கிடைத்த கொள்ளைப் பொருள்களையும் காப்பதற்காக ஒரு சிறு படையைப் போர்க்களத்தில் விட்டுவிட்டுத் தமது நகராகிய ஆதென்ஸைப் பாதுகாக்க விரைந்து அணிவகுத்துச் சென்றனர். தமது நகரத்திற்கு வெளியே, இலிஸஸ் ஆற்றின் கரைகளின்மேல் அமைந்துள்ள சைனுஸார்ஜஸ் (Cynosarges) பட்டணத்து எராக்கிளீஸின் கோவில் திருவிடத்திற்குப் பக்கத்தில் வந்து தங்கினர். அங்கிருந்து பேலேரோன் (Phaleron) அருகில் பகைவர்களின் சப்பல்கள் நங்கூரம் பாய்ச்சி நிற்பதைக் கண்ணுற்றனர். ஆனால் அவை கரைக்கு நேராக வரவில்லை. சிறிது நேரத்திற்கெல்லாம் கப்பற்படை முழுவதும் கடலை நோக்கிச் சென்றது. டேடிஸ் தமது முயற்சியைக் கைவிட்டுவிட்டார். ஒருவேளை டேடிஸ் ஆதென்ஸ் நகரம் பாதுகாப்பில்லாமல் இருக்கும் என்ற எண்ணத்துடன் தமது கப்பற்படையை அங்குக் கொண்டு வந்திருக்கலாம். ஆனால் அவர் அங்கு அத்தீனியப் படையினரைப் பார்த்ததும் மற்றும் ஒரு முறை ஆப்லிட்டிஸ்களுடன் போர் செய்ய மனமில்லாதவராய்த் திரும்பியிருக்கக்கூடும். இச் சமயத்தில் 2000 போர் வீரர் கொண்ட ஸ்பார்ட்டன் படையொன்று ஆதென்ஸ பக்கத்தை அணுகிவந்து கொண்டிருக்கலாம் இந்தப் படையானது பௌர்ணமி தினத்திற்கு மறுநாள் புறப்பட்டு, மாரத்தான் யுத்தம் முடிந்த அடுத்த நாள் ஆதென்ஸை அடைந்தது. ஸ்பார்ட்டர்கள் வராவிட்டாலும், இவர்கள் வருவதைக் குறித்த செய்திகள், பாரசீகர்கள் திடீரென்று திரும்பிப் போவதற்கு ஒரு முக்கியக் காரணமாயிருக்கலாம் என்று நாம் யூகிக்க இடமிருக்கின்றது. எண்ணுதை இடத்திலிருந்து இந்தப் பாரசீக்கர்களுக்குத் தடை வந்ததுமாத்திரம் ஒரு காரணம் அன்று. இவர்களால் இம் மிதமிஞ்சிய தோல்வியைச் சகிக்கமுடியாததும் ஒரு காரணமாகும்.

யுத்தம் முடிந்த பிறகேதான் ஸ்பார்ட்டர்கள் வந்து சேர்ந்தார்கள். பாரசீகர்களின் பிணங்களைப் பார்க்க விரும்பி இவர்கள் போர்க்களத்தைச் சுற்றிப் பார்த்தனர். பின்பு அத்தீனியர்களின்

தீரச் செயலைப் போற்றிக்கொண்டு வீடு திரும்பினர். அத்தீனியர் தம் பிணங்களின்மேல் குவித்த மண்குவியல் இன்றும் இந்த யுத்தம் நடந்த இடத்திற்குக் குறிப்பாக நிற்கின்றது. காலிமாக் கஸ் இங்கே புதைக்கப்பட்டார். (கவிஞர் ஈஸ்கைலஸ்ஸின் சகோ தரராகிய) கைனீஜிரஸ்ஸும் (Cynegirus) இங்கேதான் புதைக்கப் பட்டார் இவர் பாரசீக மரக்கலம் ஒன்றைத் தம் கையால் பிடித்து நிறுத்தியதாகவும், கையானது கோடரியால் துண்டிக்கப் பட்ட பின்னரே இவர் மரக்கலத்தைப் போகவிட்டதாகவும் சொல்லப்படுகிறது. இந்த யுத்தத்தைச் சுற்றிப் பல புராணக் கதைகள் எழும்பலாயின. உண்மையில் அங்கே என்ன நடந்தன என்பதைக் குறிக்க வரலாற்று அறிஞர் ஒருவரும் அக் காலத்தில் தோன்றவில்லை. இதன் விளைவாக ஒரு தலைமுறை காலத்திற்குள் சில உண்மை நிகழ்ச்சிகள் மறக்கப்பட்டன; தோற்றம் மாறிச் சில நிகழ்ச்சிகள் காணப்பட்டன. இந்தத் தோற்ற மாறுதலுக்கு மூன்று உட்கருத்துகள் உள; அவையாவன: வியப்பைக் கொடுக் கக் கூடியவைகளின்மேல் விருப்பம், அத்தீனியர்களின் பெருமை பாராட்டும் இயல்பு, மில்டியேடிஸ்ஸின் செயல்களை உயர்த்திக் காட்ட அவருடைய குடும்பத்தினரின் விருப்பம் முதலியனவாகும். தெய்வங்களும், வீரர்களும் ஆதென்ஸிற்காகச் சண்டையிட்டனர்; ஆவியின் உருவத்தில் வீரர்கள் படையினூடே இங்கும் அங்கும் சென்று வந்தனர். கிரேக்கர்கள் தாக்கியபோது பாரசீகர்கள் கொண்ட பயத்துடன் கூடிய கிலிக்குக் காரணம் 'பான்' (Pan) என்னும் தெய்வம் என்று கூறப்படுகின்றது. இந்தத் தெய்வத்தின் வழிபாடு மீண்டும் துவங்கப்பட்டு அக்ராபோலிஸ் என்றழைக்கப் படும் அத்தீனிய சேம அரணின் வடமேற்குச் சரிவில் ஒரு குகை இவ ருடைய திருப்பணிக்காக ஒதுக்கி வைக்கப்பட்டது. இதிலிருந்து ஒரு கதையானது தோன்றி, மாரத்தான் யுத்தத்தை நினைவிற்குக் கொண்டுவரும் சங்கிலிபோன்ற கதைகளுக்கு மற்றுமொருகவர்ச்சி கரமான நிகழ்ச்சியை இணைத்தது. அதிவேக ஓட்டக்காரரான பிலிப்பைடிஸ் ஸ்பார்ட்டாவின் உதவியை நாடி ஆர்க்கேடியாவின் வழியாக வேகமாக ஓடும்போது 'பான்' கடவுள் அவருக்கு வந்த னம் கூறி அவரிடம் ஏன் அத்தீனியர்கள் தம்மை வழிபடுவதை அசட்டை செய்தனர் என்று வினவியபின், தாம் வருங்காலங் களில் அவர்களுக்கு ஆதரவு அளிப்பதாக உறுதிமொழி கூறினராம். எளிதில் தெய்வச் செயல்களை ஒப்புக்கொள்ளலாம். ஆனால் வெற் றிக்கு முக்கியக் காரணமாயிருந்த அளவு மீறிய ஒளிதுலங்குகிற போர் முறையும், நுண் நயமுறையும் இந்தக் கதையிலிருந்து மங்கி மறைந்துபோய் மாரத்தானை ஏதோ படைவீரர்களின் சண்டை என்று கருதுவதுதான் சிந்தனைக்குரிய விஷயமாகும். போர் நடவடிக்கையில் உள்ளமும் உயிர்நிலையுமாயிருந்த மில்டி

யேடிஸை மாரத்தானின் கட்டுக்கதை யுத்தநாளின் சேனாதிபதியாக உயர்த்திற்று. சேனாதிபதியின் பதவி ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு படைத்தலைவனுக்கு அளிக்கப்பட்டது என்றும் விளக்கம் கூறப்பட்டது. சில ஆண்டுகளுக்குப்பின் போலிமார்க் தமது முக்கியத்துவத்தை இழந்தபோது இவ்வித ஏற்பாடு அமலுக்கு வந்தது. ஆனால் இங்கே (போலிமார்க்கான) காலிமாக்கஸ்ஸைப் புறக்கணித்து மில்டியேடிஸ்ஸைச் சிறப்பிக்க ஓர் எளிய மார்க்கம் புராணத்திற்குக் கிட்டிவிட்டது. நாம் இந்தக் கட்டுக்கதையை மேலும் பின்பற்றவேண்டிய தேவையில்லை. மாரத்தான் போரைப் புகழ்ச்சியெனும் மேகம் கவிந்ததன் காரணமாக, முன்பு நடைபெற்ற நிகழ்ச்சிகளின் உண்மை சற்று மங்கலாகவே காணப்படுகின்றது. இந்த யுத்தத்தின் வெறும் எல்லைக்கோடுகளைத்தான் வரலாற்று ஆராய்ச்சி (historical criticism) மீளவைக்க முடிந்தது. புகழ்மாலை யணிந்த மில்டியேடிஸ்ஸினால் மறைக்கப்பட்ட காலிமாக்கஸ் தமக்குச் சேரவேண்டிய புகழுக்குக் குறைவாகவே பெற்றார். மிதியர்களுடன் ஏற்பட்ட போராட்டத்தில் 'அத்தீனியர்களின் போலிமார்க்' செய்த அருஞ் செயல்கள் பொறித்து வைக்கப் பெற்ற கல்லொன்று ஆதென்ஸில் காணப்பட்டது ஒரு விநோதமாகும். ஒருவேளை இக் கல்லானது இவருடைய மகனால் நிறுவப்பட்டிருக்கலாம். இதில் மதித்துப் போற்றக்கூடிய அருஞ்சொற்கள் பொதிந்து விளங்குவதைக் காணலாம்.

இந்த மாரத்தான் யுத்தத்துடன் தொடர்பு கொண்ட ஓர் இரகசிய நிகழ்ச்சியானது, இக் காலம்வரையில் தெளிவாக்கப்படாத வரலாற்றுப் புதிர்களுடன் சேர்க்கப்படவேண்டும். 'பாரசீகர்கள் தம் மரக்கலங்களில் ஏறி அமர்ந்த பிறகு' பென்டெலிக்கஸ் சிகரத்திலிருந்து அவர்களுக்கு அறிகுறியாய் ஒரு கேடயம் பளிச்சென்று மின்னுவதுபோல் காட்டப்பட்டது. யார் இந்தக் கேடயத்தைக் காட்டினது? இந்த அறிகுறியின் பொருள் என்ன? பாரசீகர்களை நேரடியாக ஆதென்ஸிற்கு வரும்படியாக இக் குறி அழைத்தது என்பது பிற்காலத்தில் தோன்றிய பெருவழக்கான விளக்கமாகும். இக் குறிகாட்டியவர்கள் நாட்டுத் துரோகிகளான ஆல்க்மியோனியர்கள் என்று அவர்களுடைய பகைவர்கள் கூறினார்கள். எரோடட்டஸ் இந்த விளக்கத்தை நம்பவில்லை என்றாலும் கேடயம் பளிச்சென்று மின்னலைப்போல் காட்டப்பட்டது சான்றுகளால் ஆதாரம் பெற்ற உண்மை என்று நம்புகின்றார்.

மாரத்தான் வெற்றியின் உயர்ந்ததொரு நினைவுச் சின்னத்தின் எச்சங்கள் சமீப காலத்தில் கிரீஸின் மிகவும் புனிதமான இடமாகிய டெல்பியின் கோவில் திருவிடத்தில் கண்டெடுக்கப்பட்டன.

பாரசீகர்களிடமிருந்து எடுக்கப்பட்ட கொள்ளைப் பொருள்களைக் கொண்டு, தமது சொந்த பென்டெலிக் (pentelic) கற்சுரங்கத்தில் வெட்டிய சலவைக் கற்களால் அத்தீனியர்கள் ஒரு சிறிய டோரிக் பண்டகசாலையைக் (treasure house) கட்டினர். கட்டடக் கலையின் மாணிக்கம் போலிருக்கின்ற இப் பண்டகசாலை, இந்தக் கட்டடத்தின் உட்பாகத்தில் சுற்றிலும் காணப்படும் நயம் பொருந்திய சிற்ப வேலைப்பாடுகளுடன் செய்யப்பட்ட புடைப் பகழ்வுச் சித்திரங்களுக்கு எவ்விதத்திலும் தகுதியுள்ளதாயிருக்கின்றது. இந்தப் புடைப்பகழ்வுச் சித்திரங்கள் பாழடைந்த கட்டடத்தின்கீழ் மிகவும் பத்திரமாகப் பாதுகாக்கப்பட்டுள்ளன. தீஸியூஸ், எராக்கிளீஸ் ஆகியவர்களின் வீரச் செயல்களையும், தெய்வங்களுக்கும் அரக்கர்களுக்கும் இடையே நடந்த யுத்தத்தையும் இந்தச் சிற்பங்கள் காட்டுகின்றன.

கால் நூற்றுண்டிற்குப் பிறகு தீட்டப்பட்ட ஓர் ஓவியத்திலிருந்து, மாரத்தான் யுத்தத்தில் பங்கெடுத்த வீரரின் சந்ததியார் ஒருவேளை இந்தச் சண்டைகுறித்துத் தெளிவான கருத்துக்கொண்டிருக்கக்கூடும். இந்த ஓவியமானது விலக்களத்தில், 'சுவர் ஓவியங்கள் கொண்ட நுழைமாடத்தில்' காணப்படும் புகழ்பெற்ற யுத்தங்களில் ஒன்ருகும். இந்த ஓவியத்தில் அத்தீனியர்களும் ப்ளொட்டியர்களும் கால்சட்டைகள் அணிந்த காட்டுமிராண்டியர்களுக்கு எதிராக முன்னேறிச் செல்வது ஒரு காட்சியாகும். பாரசீகர்கள் தமது ஓட்டத்தில் ஒருவரை ஒருவர் சதுப்பு நிலத்தில் தள்ளுவது இரண்டாவது காட்சியாகும்; மூன்ருவது காட்சியில் தூரத்தில் பினீஷியர்களின் நாவாய்கள் நிற்கின்றன; அவைகளை நோக்கி ஓடுவதற்கு முயலும் தம் எதிரிகளைக் கிரேக்கர்கள் கொல்லுகின்றனர். காலிமாக்கஸ், மில்டியேடிஸ், டேடிஸ், ஆர்ட்டபெர்னஸ் ஆகியோரையும், கப்பல் ஒன்றின் முன்புறத்தைத் தம் கையால் கைனிஜிரஸ் பிடித்திருப்பதையும் இந்த ஓவியத்தில் நாம் அடையாளம் கண்டுபிடிக்கலாம். மறுபடியும் இதில் படைவீரர்களுக்கு ஆவி உருவத்தில் தோன்றி உதவிகள் அளித்த தீஸியூஸ் பூமியிலிருந்து வெளிவருவதுபோல் காட்டப்பட்டிருக்கின்ருர். எரிதிரியாவின் புனித இடங்களை இழிவு செய்து நாசமாக்கும் பாரசீகர்களைக் கிரேக்கர்கள் தங்கள் வலிமையால் வெட்டித் தள்ளுவதைத் தேவ தேவியரும், யுத்தம் நடக்கும் இடத்திற்கு அதிக உயரத்திலுள்ள ஒலிம்பஸ் மலையின் அமைதியான உச்சியிலிருந்து பார்ப்பதை ஓவியர் மைக்கான் (Micon) திறமையுடன் காட்டியிருக்கின்ருர்.

மாரத்தானில் பெற்ற வெற்றியானது, ஆதென்ஸ் நகரத்திற்கும், கிரீஸ் நாட்டிற்கும், ஐரோப்பாக் கண்டத்திற்கும் கிடைத்த

வெற்றி என்று இதன் முக்கியத்துவத்தை அல்லது சிறப்பைக் கூறின் அது மிகையாகாது, கிரீஸ் நாடு, ஆதென்ஸ் நகரம் இவைகளைப் பொறுத்தவரையில் இந்த வெற்றியின் உட்பொருளை நாம் தவருகப் புரிந்துகொள்ளக் கூடாது என்பது மிகவும் அவசியம். தடுக்கப்பட்ட உடனடியான ஆபத்தை எவ்வளவு குறைத்துப் பேசினாலும், இந்த வெற்றியின் சிறப்பை நாம் தவருகப் புரிந்து கொள்ள இடமேயில்லை. ஆசியப் படையெடுப்பாளர் புது நிலத்தைத் தம் நாட்டுடன் சேர்க்கவேண்டி இன்னும் வரவில்லை. போலும்; தண்டிக்கவே வந்திருக்கவேண்டும். குற்றஞ்செய்த இந்த இரண்டு நகரங்களுக்கும், அவர்களுடைய குற்றத்திற்கு ஏற்பத் தாம் தண்டனைகள் வழங்கும்போது ஏனைய கிரேக்கர்கள் பயபக்தியுடன் தம்மைப் பார்ப்பதே போதியதாயிருந்தது. யூபியாவில் இவருடைய வேலையானது இடித்து அழிக்கும் வேலையாகவேயிருந்தது. இந்த நிலப்பகுதியைத் தம் நாட்டுடன் சேர்க்கவோ அல்லது பாரசீகப் பேரரசிற்கு ஒரு ஸாட்ராப்பியைக் கூட்டவோ இவர் எண்ணவில்லை. கைக்கிளாட் தீவுகளும் காரிஸ்டஸ் நகரமும் பெரிய அரசனின் ஆதிக்கத்தின்கீழ் இருக்கும்படி கட்டாயப் படுத்தப்பட்டன. ஆனல் ஈஜியனின் மேற்குக் கரைகளை அயோனியாவின் நிலைக்குத் தாழ்த்த டேரியஸ் எண்ணம் கொண்டார் என்பதற்கு அத்தாட்சி யாதும் இல்லை. எனவே, ஆதென்ஸைச் சுற்றி நின்ற அபாயமானது ஆசிய வல்லாட்சியாளரின்கீழ் இருக்க வேண்டிய நிலையாயிருந்திராது. அதே நேரத்தில் எரித்திரியாவின் மீது வந்து சேர்ந்த நாசமும், அடிமைத்தனமுமாகிய முடிவுகள் ஆதென்ஸை நெருங்கி அச்சுறுத்தவில்லை. ஹிப்பையஸ்ஸிற்கு அவனது பழைய பதவியைத் திருப்பிக் கொடுக்கப் பாரசீகத்தின் இராணுவம் வந்தது. தீ மூண்டு எரிந்து கனன்றுகொண்டிருக்கும் கோவில்கள் உடைய தன் நண்பனுக்குத் திருப்பிக் கொடுக்கும் எண்ணத்துடன் டேரியஸ் நிச்சயமாகவே வரவில்லை. அத்தீனியர்கள் தங்களுடைய கொடுங்கோலனின் நுகத்தடியின்கீழ்த் தலை குனிந்து நிற்கும்படி தண்டிக்கப்படுவர். தமக்கு அயலார்களாகிய எரித்திரியர்களைப்போல இவர்கள் காட்டுமிராண்டியான ஓர் எசமானுக்கு அடிமைகள் ஆகமாட்டார்கள். அதிகாரம் ஏற்பதற்கும் பழிக்குப் பழி வாங்குவதற்கும் காத்துக்கொண்டிருப்பவரும், இருபது ஆண்டுகளாக நாடு கடத்தப்பட்டு மனக்கசப்பு அடைந்தவருமான வயது சென்ற ஒரு வல்லாட்சியாளர்வசம் ஒப்புவிக்கப் படுவதே அத்தீனியர்களுக்குக் கிடைக்கும் தண்டனையாயிருந்தது. ஆனல் மாரத்தான் போர்க்களத்தில் காட்டிய தம் வீரச்செயலினல் இந்த ஊழ்வினைப் பயனிலிருந்து தப்பித்துக்கொண்டார்கள். இந்தப் போரில் இவர்கள் தோல்வியடைந்து பிஸிஸ்ட்ரேட்டர்களின் ஆதிக்கம் மீண்டும் ஏற்படுத்தப்பட்டிருந்தால் இருபது

ஆண்டுகளுக்கு முன் செய்துமுடித்த வேலையைத் திரும்பவும் செய்ய வேண்டியதாயிருக்கும். ஆனால் இந்த வேலையானது திரும்பவும் கட்டாயம் செய்யப்பட்டிருக்கும் என்பதில் சந்தேகமேயில்லை. அத்தீனியர்களின் தோல்வி அவர்களின் வளர்ச்சியைத் தடுத்திருக்குமே ஒழிய, அது அவர்களின் வளர்ச்சிக்கு முற்றுப்புள்ளி இட்டிராது. இரண்டாவது பாரசீகப் படையெடுப்பை மாரத்தானில் தாம் எதிர்த்துத் தள்ளப்பட்ட இழிவைப் போக்குவதற்கென்றே பாரசீகர்கள் எடுத்திருந்தால், மாரத்தானில் அத்தீனியத் தோல்வியானது இரண்டாவது பாரசீகப் படையெடுப்பின் அச்சம் தருகின்ற துன்பங்களிலிருந்து கிரீஸைப் பாதுகாத்திருக்கும் என்றும் பலர் வாதாடலாம். ஆனால் அப்படி ஆதென்ஸ் தோல்வியடைந்து டேடிஸ் வெற்றி பெற்றிருந்தாலுங்கூட, பாரசீகர்கள் கிரீஸை வேறுவிதத்தில் பின்னால் கைப்பற்ற முயற்சிகள் செய்திருப்பார்கள்; இந்த முயற்சி கட்டாயம் செய்யப்பட்டிருக்கும் என்பதிலும் சந்தேகம் இல்லை. உலக வரலாறானது அண்மைக் காரணங்களைச் சார்ந்திருக்கிறதில்லை. கிரீஸிற்கும் பாரசீகத்திற்கும் உள்ள மோதுதலும், கிரீஸின் செலவில் பாரசீகர்கள் தங்களது எல்லையை விஸ்தரிக்கச் செய்த முயற்சிகளும் எப்படியும் நடந்தே தீர்ந்திருக்கும். ஓர் உயரிய நோக்கு முனையிலிருந்து பார்க்குமிடத்து, இங்கே பழிக்குப் பழி வாங்குதல் என்ற பிரசாரத்திற்கே இடமில்லை எனலாம். ஏனென்றால், டேரியஸ் நிறுத்திய இடத்திலிருந்து அவருடைய பின் மரபினர்கள் கட்டாயம் மேல்நோக்கிச் சென்றிருப்பர். பிந்தியதும், பெரியதுமான மற்றொரு படையெடுப்பைச் சமாளிக்க இந்த மாரத்தான் வெற்றியானது கிரீஸிற்கு ஓர் எழுச்சியை யூட்டிற்று. ஆதென்ஸின் உணர்ச்சியில் உண்டாகிய பெரியதொரு மாறுதலே இதன் முக்கிய விளைவாகும். பாரசீகப் பெரிய மன்னனின் இராணுவத்தின்மீது, தன்னந் தனியாகப் போர் தொடுத்து அடைந்த வெற்றியானது இந் நகருக்குப் பெரும் புகழையும், தன்மதிப்பையும் உண்டாக்கியது. இத் தன்மதிப்பு ஆதென்ஸிற்குத் தன்னம்பிக்கையையும், பேரவாவையும் கொடுத்தது. ஆதென்ஸின் மக்களாட்சிமீது வரலாறானது உயர்ந்ததொரு முத்திரையை இட்டது. தனது அரசியல் அமைப்பை நம்பவும், ஏனைய கிரேக்க நாடுகளைப்போல் தானும் தலைநிமிர்ந்து நடக்கவும் கூடும் என்பதை ஆதென்ஸ் உணர்ந்தது. மாரத்தானை ஓர் ஊழி அல்லது யுகத்தைக் குறிக்கும் நிகழ்ச்சி என்று அத்தீனியர்கள் எப்பொழுதும் கருதினார்கள். முன்னேறிச் செழிப்படையுங்கள் என்று தெய்வங்கள் அந் நாளில் அத்தீனியர்களுக்குச் சொன்னதுபோலத் தோன்றுகிறது.

இப் பெரும் போரானது மில்டியேடிஸிற்குச் சாவாப் புகழைக் கொடுத்தது. ஆனால் இவருடைய பிந்திய முடிவு நன்றாக அமைய வில்லை. மாரத்தானில் இவர் சாதித்த செயல்கள் ஆதென்ஸில் இவருடைய செல்வாக்கையும் மதிப்பையும் பெருகச் செய்தன. பாராஸ் (Paros) தீவின் மக்கள் டேடிஸ்ஸின் கப்பற் படைக்குப் படகோட்டிகள் உட்கார்ந்து ஓட்டுவதற்கான மூன்று பெஞ்சுகள் கொண்ட பெரிய கப்பல் ஒன்றைக் கொடுத்து உதவியதால், அவர்கள் ஆதென்ஸின்மேல் போர் தொடுத்தனர். ஆகையால், இவருடைய கோரிக்கையின்மேல் பாராஸ் தீவை இவர் போய்த் தாக்குவதற்கான ஆணையை இவருடன் வாழ்ந்த குடிமக்கள் இவருக்கு அளித்தனர். இருபத்தாறு நாட்கள் பாராஸ் நகரை முற்றுகையிட்டு, வெற்றியைக் காணாமலும் காயப்பட்டும் மில்டியேடிஸ் வீடு திரும்பினார். இப் படைத்தலைவரின் குற்றமுள்ள நடத்தையினால் இந்தத் தோல்வி வந்ததாகக் கூறுகின்றனர். மாரத்தான் யுத்தத்தில் இவருடைய செயல்களை அறிந்த இவருடைய பகைவர்கள் பொறாமை கொண்டு, 'இவர் மக்களை ஏமாற்றினார்' என்ற குற்றத்தை இவர்மேல் சாட்டினார்கள். பெரியதொரு தண்டமாகிய ஐம்பது தாலந்தை இவர் கொடுக்கும்படியாகத் தண்டம் விதிக்கப்பட்டார். இவர் செய்த தப்பு யாதென்று நமக்குத் தெரியவில்லை. ஆனால் மில்டியேடிஸைப்பற்றிய புராணக்கதைகள் தோன்றிய காலத்தில் மில்டியேடிஸ் மாரத்தான் சண்டையில் எடுத்துக்கொண்ட பாகத்தைப் பெரிதாக்கிக் காட்டினார்கள். அதுவுமன்றி இச் சண்டைக்குப்பின் இவர் தம்மிடம் கப்பற் படையை ஒப்புவித்தால், தாம் பொன் விளையும் பூமி ஒன்றிற்கு இவர்களை எடுத்துச செல்வதாகச் சொல்லி, தம் சொந்தப் பழி ஒன்றைத் தீர்க்கப் பாராஸ் தீவைத் தாக்கினார் என்றும் முட்டாள்தனமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. முற்றுகை வெற்றி பெறாது என்ற நிலையிலிருக்கும்போது மில்டியேடிஸ் பாராஸ் தீவிலுள்ள டிமீட்டர் கோவிலிலுள்ள தேவதைகளுக்குச் சேவை செய்யும் டிமோ (Timo) என்ற பூசாரிப்பெண்ணைக் கெடுத்ததாகவும், அவரைச் சந்திக்கும்படி பெண்கள்மாத்திரம் அநுமதிக்கப்பட்ட அந்தக் கோவில் திருவிடத்திற்கு வரும்போது பயத்தால் பீடிக்கப்பட்டு ஓடினார் என்றும், ஓட்டத்தில் வேலியைத் தாண்டும்போது காலில் காயமடைந்தார் என்றும் ஒரு கதை கூறுகின்றது. எவ்விதம் இவர் காயமுற்றார் என்று நமக்குத் தெரியாதபோதிலும் இவர் ஆதென்ஸுக்குத் திரும்பும்போது காயத்துடன் திரும்பியது உண்மையேயாகும். இவரது வழக்கு நடக்கும்போதுங்கூட ஒரு சாய்விருக்கையில் படுத்திருந்ததாகச் சொல்லப்படுகின்றது. இவர் தம் தண்டனைக்குச் சிறிது காலத்திற்குப் பிறகு காலமானார்.

## 8. ஆதென்ஸ் ஈஜைனு இவைகளின் போராட்டம்

இச் சமயத்தில் ஈஜியனில் ஈஜைனு வலிமை மிகுந்த கடற் படையையுடைய ஒரு நாடாயிருந்தது. இதற்கும் ஆதென்ஸிற்கும் வெகு காலமாகப் பகை இருந்து வந்தது. பிஸிஸ்ட்ரேட்டர்களின் வீழ்ச்சிக்குச் சிறிது காலத்திற்குப்பின் ஆதென்ஸிற்கும் தீப்ஸிற்கும் ஏற்பட்ட சண்டையில் ஈஜைனுவும் சிக்கியது. ஈஜைனுவும் தீப்ஸும் இரண்டு அணங்குகளாகிய சகோதரிகள் என்று புராணக் கதைகள் கூறுகின்றன. ஆனால் நிலப்பகுதியிலுள்ள தம் அயலாருடன் (ஆதென்ஸுடன்) நீடித்த ஒரு யுத்தத்தை ஈஜைனு தொடுத்தது. சகோதரியின் மேலுள்ள இரக்கச் சிந்தனையைக் கொண்டுள்ளதாலல்ல. ஏனைய கிரேக்கர்கள் தூதர்களை அனுப்பிய பிறகே யுத்தத்தை ஆரம்பிப்பார்கள். ஆனால் ஈஜைனு தூதர்கள் ஒருவரையும் அனுப்பாமலே இந்த யுத்தத்தை ஆரம்பித்து வைத்தது. பாலரோனையும் (Phaleron) அட்டிக் கடற்கரையையும் ஈஜைனுவின் நாவாய்கள் நாசமாக்கின. பாரசீகர்கள் தம் பகைவர்களுக்கு எதிரே கப்பற்படைகளுடன் வரும்போது ஈஜைனு அவர்களுடன் சேர்வதுமன்றி ஆதென்ஸின் இழிவை மனமார விரும்பும் என்றும் எதிர்பார்க்கப்பட்டது. படையெடுத்து வரும் பாரசீகர்களுக்கு ஈஜைனு தன் செல்வாக்கை (goodwill) மாத்திரமன்றிப் படைப்பலத்தையும் கொடுத்ததுவும் என்று அத்தீனியர்கள் கருதுவதற்குப் பல காரணங்கள் இருந்தன. எனவே, ஈஜைனு பாரசீகர்களுடன் கொஞ்சிக் குலாவித் தனக்கு ஆதென்ஸின் மேலுள்ள பகைமையால் கிரீஸையே காட்டிக்கொடுக்கின்றது என்று அத்தீனியர்கள் குற்றஞ்சாட்டி ஸ்பார்ட்டாவின் குறுக்கீட்டை நாடினர்கள். ஸ்பார்ட்டா இந்தக் குற்றச்சாட்டைப் பெருமையுடன் கேட்டது. இதன்பின் கிளியோமீனஸ் மன்னன் ஈஜைனுவிற்குச் சென்று, அங்குப் பிணையாக நிறுத்தப்பட்ட பத்துப் பேரைப் (hostages) பிடித்து, அவர்களை ஆதென்ஸ் கைவசம் ஒப்புவித்தான். இச் செயலினால் ஈஜைனுவின் கைகள் கட்டப்பட்டன. ஈஜைனு பாரசீகர்களுக்கு உதவியளிக்க முடியாதபடி தடுக்கப்பட்டது மன்றிப் படையெடுத்துவரும் பாரசீகர்களுக்கு எதிராக அத்தீனியர் செய்யும் யுத்த முயற்சிகளைத் தடைசெய்ய இயலாததாயும் இருந்தது.

கிரீஸின் பொதுநலத்திற்காக ஸ்பார்ட்டா குறுக்கிட்டுப் பலாத்காரத்தை உபயோகிக்கும்படி ஆதென்ஸ் ஸ்பார்ட்டாவிற்குச் செய்துகொண்ட வேண்டுகோளும் ஸ்பார்ட்டா ஒருதலை சிறந்த அரசு என்று குறிப்பாக ஏற்றுக்கொள்ளுதலும் ஸ்பார்ட்டாவிற்குக் கிரீஸ் நாட்டினுள்ளும் அதற்கு வெளியிலும் வளர்ந்துவரும் பெருமதிப்பிற்குரிய உணர்ச்சியின் உயரிய கட்டத்தைக் காட்டு

கின்றன என்று சொல்லலாம். கிரீஸ் ஸ்பார்ட்டாவைத் தலைமை யாகக் கொண்ட ஒரு கூட்டுத் தொகுதி என்பதைக் காட்டுவது இதுவே முதலாவதானதும், நேரிடையானதும், நிச்சயமானது மான வரலாற்று விளக்கம் என்று இந்தக் கதை நிகழ்ச்சி வர்ணிக் கப்பட்டுள்ளது. இந்த வர்ணிப்பு ஒரு மிகையுரையாகும். ஏனென்றால், ஆதென்ஸ் ஈஜைனாவைப் போலவே பெலோப் போனீஸியன் கூட்டுக்குழுவின் ஓர் அங்கந்தான் அதிலும் ஆதென்ஸ் கூட்டுக்குழுவின் தலைக்கு விடுத்த வேண்டுகோளானது சாதாரணமாக நடக்கக்கூடிய செயல்தான் என்பதை நாம் மறக் கக்கூடாது - இந்த உண்மையானது அடிக்கடி மறக்கப்பட்டு விடுகிறது. ஆதென்ஸ் இதனை மறக்க மிகுந்த கவனம் செலுத் தியது.

ஸ்பார்ட்டாவின் மதிப்பு உறுதியாக்கப்பட்டதுமன்றி, சில ஆண்டுகளுக்குமுன் அது தன் பழைய விரோதியான ஆர்காஸை முறியடித்ததற்குப்பின் பெருகவும் பெருகிற்று டிரின்ஸ் குன்றிற்கு அருகிலுள்ள செபியா (Sepeia) என்னுமிடத்தில் இந்த யுத்தம் நடைபெற்றது. ஆர்காஸ் படைத் தலைவர்கள் மிகவும் அறிவீன மாய் நடந்துகொண்டதால் கிளியோமீனஸ் அவர்களைத் தந்திர மாய் ஏமாற்றி அவர்களைத் தாண்டிப்போக முடிந்ததாகக் கதை யொன்று கூறுகின்றது. தங்களுடைய பகைவர்களின் பறையறி விப்போன் என்னென்ன கட்டளைகளைப் பறைசாற்றினனோ அவை களை இந்தப் படைத் தலைவர்கள் கவனமாய்க் கேட்டு அதே கட்டளைகளைத் தம்முடைய போர்வீரர்களுக்குக் கொடுத்து வந் தனர். இதை யறிந்த கிளியோமீனஸ், தங்களுடைய பறையறி விப்போன சாப்பாட்டிற்குக் கட்டளையிடும்போது இதை அசட்டை செய்து சாப்பிடப் போகாமல் யுத்தத்திற்குத் தயாராக நிற்க வேண்டும் என்று இரகசியக் கட்டளைகளைப் பிறப்பித்தான். ஸ்பார்ட்டன் பறைபறிவிப்போனின் கட்டளையின்படி ஆர்காஸ் போர்வீரர்கள் சாப்பிட ஆரம்பித்தார்கள். ஸ்பார்ட்டன் வீரர்கள் உடனே இவர்களின்மேல் விழுந்து இவர்களை நாசமாக் கினர்கள். ஆர்காஸின் அரசை இருபது ஆண்டுகளுக்கு மேலாக இப் பேரிழப்பு முடமாக்கியது.

கிளியோமீனஸ், டிமாரட்டஸ் (Demaratus) என்னும் இரு மன்னர்களிடையே உள்ள தீரா மரபுப்பகையே ஸ்பார்ட்டாவின் அபகீர்த்தியாகும். ஈஜைனாவின் குடிகளைப் பிணையாக வைத்துக் கொண்ட நிகழ்ச்சி காரணமாக இது ஒரு முடிவுக்கு வந்தாக வேண்டும் என்ற நிலையை எட்டியது. கிளியோமீனஸ் மன்னனின் குறுக்கீட்டை முறியடிக்க டிமாரட்டஸ் ஈஜினீட்டர்களுடன்

பொதுமக்களறியாத ஓர் ஒப்பந்தத்தைச் செய்துகொண்டான். டிமாரட்டஸ்ஸின் வமிசமாகிய யூரிபான்டிட் வரிசையில் டிமாரட்டஸ்ஸிற்குப்பின் பட்டம் ஏறுவதற்கு அடுத்தபடியாக உள்ள மரபினன் லியோட்டிகைடாஸ்(Leotychidas)ஸை உடனே கிளியோமீனஸ் அணுகினன்; டிமாரட்டஸ் ஒழுங்கான முறையில் பிறந்தவனு என்று டிமாரட்டஸுக்கு அறைகூவல் விடும்படி லியோட்டிடாஸைத் தூண்டினன். இதனைப்பற்றிய வழக்கு நடந்தது. அப்போது டிமாரட்டஸ்ஸின் பிறப்பைப்பற்றி ஒரு கதை உண்டாக்கப்பட்டு அத்தாட்சியும் பெற்றது. டெல்பியிலிருந்து வந்த தெய்வமொழி ஒன்று டிமாரட்டஸ் புகழ்பெற்ற தனது தகப்பனின் மகன் அல்ல என்று உரைத்தது. டேரியஸ்ஸின் அவைக்கு டிமாரட்டஸ் ஓட்டம் பிடித்தான். டேரியஸ்ஸின் அவையானது வீழ்ச்சியடைந்த பெருமக்கள் யாவருக்கும் அந் நாளில் ஓர் அபயமாக இருந்தது—பாரசீகர்களுடன் கொஞ்சிக் குலாவும் ஈகைனுவின் நண்பனுக அங்கு இவனுக்கு நல்ல வரவேற்புக் கிடைத்தது. இதன் பயனுக லியோட்டிகைடாஸ் மன்னனுனன். கிளியோமீனஸ்ஸும் லியோட்டிகைடாஸ்ஸும் இதன் பின்னரே ஈகைனுவிற்குச் சென்று அங்கு அந்தப் பத்துப்பிணைகளைப் பிடித்து வந்தனர்.

கிளியோமீனஸ் டிமாரட்டஸ்ஸை நாசம் செய்ய எடுத்துக்கொண்ட உபாயம் அவனையே தாக்கியது. தனது எதிரியை அரியணையிலிருந்து கிளப்ப டெல்பியிலுள்ள ஒரு பூசாரிப்பெண் மணியுடன் கலந்துகொண்டு செய்த சதியானது வெளிவந்தது. பொதுமக்களின் கோபத்திற்கு அஞ்சி இவன் முதலில் தெசலிக்கு ஓட்டம் பிடித்தான். பின் அங்கிருந்து பக்கத்திலுள்ள ஆர்க்கேடியாவிற்கு வந்து சேர்ந்து, அங்கேயும் தன் நாட்டிற்கு விரோதமாகச் சதி செய்தான். ஸ்பார்ட்டாவின் அரசாங்கம் அவன் நாடு திரும்பினுல் தனக்கு நலமெனக் கருதி அவனை வீடு திரும்புமாறு அழைத்தது. கிளியோமீனஸ் இந்த மன்னிப்பு ஓலையை ஏற்றுக்கொண்டான். ஆனுல் அவனுடைய துணிகரச் செயல்கள் அவன் அறிவைத் தடுமாறவைத்தன. கடைசியில் கடும் பைத்தியக்காரனுனன்; தன் பக்கத்தில் வருகின்ற யாவரையும் தடியினுல் அடிக்கலானுன். இவனுடைய சொந்தக்காரர்கள் இவனைச் சங்கிலிகளால் கட்டி, ஓர் ஈலாட்டை இவனுக்குக் காவலாக வைத்தனர். ஒரு நாள் தனக்குக் காவலாக வைத்திருந்த ஈலாட்டைப் பயமுறுத்தி, அவனிடமிருந்து ஒரு வாளைப் பெற்றுத் தன்னைக் கண்டபடி காயப்படுத்திக்கொண்டு இக் காயங்களின் விளைவால் கடைசியில் தன் உயிரைத் துறந்தான்.

கிளியோமீனஸ் மன்னன் இப்படிப் புகழிழந்து முடிவுற்ருன். இவன் ஒரு ஸ்பார்ட்டனுகமாத்திரம் இல்லாவிட்டால் கிரேக்க வரலாற்றின் பெரியார்களில் ஒருவர் என்று பெயர்பெற்று இருப் பான். ஆனால், ஸ்பார்ட்டன் முறையினால் இவனுடைய பேரவா வும் இவனுடைய திறமைகள் யாவும் தடுக்கப் பெற்றுவிட்டன. தானுகவே எதையும் செய்யும்படி இவனை விட்டிருந்தால், இவன் ஒருபயனுள்ள கொள்கையை உருவாக்க முயன்றிருப்பான். ஆனால் இவன் எப்பொழுதும் தன்னுடன் இருந்த மற்றொரு மன்னனாலோ ஈபார்களாலோ தடை செய்யப்பட்டு வந்தான். இவனுடைய வாழ்க்கைக் காலத்தில் பல முக்கியமான சமயங்களில் ஸ்பார்ட்டா தனது வெளி விவகாரங்களில் சில நடவடிக்கைகள் எடுக்க வேண்டியதாயிருந்தது. அப்பொழுது ஒவ்வொரு முறையும் கிளியோமீனஸின் கொள்கை மற்ற மன்னனின் எதிர்ப்பினால் நிறைவேற்ற முடியாதபடி ஆகிவிட்டது. இப்படியிருந்தபோதிலும் இவன் ஸ்பார்ட்டன் வரலாற்றில் இருபது ஆண்டுகளுக்குமேல் மேம்பாடான இடத்தைப் பெற்றிருந்தான்.

இவனுடைய மறைவுக்குப்பின், இவனும் லியோட்டிகை டாஸ்ஸும் ஈகைனு மக்கள் தம்மிடமிருந்து எடுத்து அத்தீனியர் களின்வசம் கொடுத்த பிணைகளைத் தம்வசமே திருப்பிக் கொடுக் கும்படி கேட்க அரசியல் தூதர்களை ஸ்பார்ட்டாவிற்கு அனுப் பினார்கள். லியோட்டிகைடாஸ் கிளியோமீனஸ் மன்னனுடன் சேர்ந்து டிமாரட்டஸ்ஸைப் பதவியிலிருந்து தள்ளியதால் மக் களின் வெறுப்பைப் பெற்றான். ஸ்பார்ட்டர்கள் லியோட்டிகை டாஸையே ஈகைனுவின் தூதர்களிடம் கொடுக்க ஆயத்தமா யிருந்தார்கள் என்று சொல்லப்படுகின்றது. ஆனால் இத் தூதர் கள் இவனை ஏற்றுக்கொள்ளாமல், இவன் தம்முடன் ஆதென் ஸிற்கு வந்து அங்குள்ள பிணைகளை விடுவிக்க உதவி செய்வதையே விரும்பினார்கள். அத்தீனியர்கள் இவர்களுடைய வேண்டுகோளை முற்றும் மறுத்தனர். ஈகைனு பழிவாங்குதலில் இறங்கவே, யுத்தம் திரும்பவும் மூண்டது. இது ஈகைனுவைச் சேர்ந்த நிக்கோட் ரோமஸ் (Nicodromus) என்னும் குடிமகன் ஒருவனின் சதியுடன் ஆரம்பித்தது. ஆதென்ஸின் உதவியால் நிக்கோட்ரோமஸ் தன் நகரத்திலுள்ள சிறு குடியாட்சியைக் கவிழ்க்கச் சதி செய்தான். அத்தீனியர்கள் ஒரு நாள் பிந்தி வந்ததன் காரணத்தால் இவ னுடைய திட்டம் தோல்வி யடைந்தது. ஒவ்வொரு கப்பலிலும் மூன்று பெஞ்சுகள் அமைக்கப்பட்ட ஐம்பது கப்பல்களைக் கொண்ட தம்முடைய கப்பற்படையைக் கொரிந்து பட்டணத்தி லிருந்து கடனுக்காக வாங்கி, இருபது கப்பல்களைக்கொண்டு பெரிதாக்க நேர்ந்த காரணத்தால்தான் அத்தீனியர் பிந்தி

வந்தனர். இந்தக் கப்பல்கள் வெற்றி ஒன்றைப் பெற்றுப் பட்டணத்தை முற்றுகையிடப் போர்வீரர்களைத் தீவில் இறக்கின. ஆனால் ஈகைனு மக்கள் ஆர்காஸ்ஸிலிருந்து சில துடுப்புகளைப் பெற்று அத்தீனியர்களைத் தோற்கடித்தனர். இந்தத் தோல்வி கப்பற்படையில் ஒரு குழப்பத்தை உண்டுபண்ணியது. இதை அறிந்த ஈகைனுத் தீவினர் கப்பற்படையைத் தாக்கி அதை முறியடித்தனர். இவ்விதம் இரண்டுதரம் துரத்தப்பட்ட போதிலும், அத்தீனியர்கள் ஒரு முடிவான ரீதியில் தோற்கடிக்கப் படாததால் இந்த யுத்தம் நீடித்தது. ஒரு நகரம் மற்ற நகரத்தையும் அதன் கடற்கரையையும் அடிக்கடி தாக்கிக் கொள்ளையிட முற்பட்டது. ஈகைனுவின் கொள்ளையிடும் தாக்குதலிலிருந்து அட்டிகாவின் கடற்கரைப் பிரேதசத்தைக் காப்பாற்றவும், ஈகைனுவைக் கடைசியில் அடிமைப்படுத்திக் தாழ்த்தவுமே ஆதென்ஸ் நல்லறிவோடு தன்னைக் கடலைச் சார்ந்த ஒரு பேரரசாகத் துரிதமாக மாற்றி அமைத்துக்கொள்ள முற்பட்டது.

## 9. அத்தீனிய மக்களாட்சியின் வளர்ச்சி

கிளைஸ்தினீஸ்ஸின் சீர்திருத்தத்திற்குப்பின் இருபது ஆண்டுகளுக்குள் அத்தீனிய அரசியல் அமைப்பு முக்கியமான மாறுதல்களை அடைந்தது. கிளைஸ்தினீஸ் ஏற்படுத்தியவை என்று கருதுகின்ற சில மாறுதல்கள் உண்மையிலே இவரால் ஏற்படுத்தப்படவில்லை என்று தெரிகிறது. இவருடைய திட்டத்தில், ஆர்க்கான்களின் அதிகாரம் அதிகப்படியாக இருந்தது. அவர்களின் திறமைக்காகவே அவர்கள் அவசியம் தேர்ந்தெடுக்கப்பட்டனர். கிளைஸ்தினீஸ்ஸின் சபையானது ஆர்க்கான்களின்மேல் ஒரு தடையாக இருக்க அமைக்கப்பட்டிருந்ததால் ஆர்க்கான்களும் சபைக்கு ஒரு தடையாக இருந்தனர் என்பதை நாம் நினைவுகூர வேண்டும். சபை வலுக்கவும், நடுவர்கள் வலுவற்றவராக மாறுவதே இயல்பான வளர்ச்சியாகும். மாரத்தான் யுத்தத்திற்குச் சில ஆண்டுகளுக்குப்பின் ஆர்க்கான்களை வேலையில் அமர்த்தும் முறையில் ஒரு மாறுதலை ஏற்படுத்தி, இவ்வித வளர்ச்சியிலே முதல் அடியை எடுத்துவைத்தனர். இது முதற்கொண்டு அவர்கள் சீட்டுக் குலுக்கலின்மூலம் வேலையில் அமர்த்தப்பட்டனர். டீம்ஸ் என்றழைக்கப்படும் கிராமங்களால் ஐந்நூறு மக்கள் சபைக்கு எப்படித் தேர்ந்தெடுக்கப்படுவார்களோ அப்படியே - தேர்ந்தெடுக்கப்பட்டு, இந்த ஐந்நூறு மக்களைக்கொண்டுள்ள கூட்டத்திலிருந்து ஒன்பது ஆர்க்கான்கள் சீட்டுக் குலுக்குதல்மூலம் தெரிந்தெடுக்கப்பட்டனர். சீட்டுக் குலுக்கி அலுவலகங்களுக்கு மக்களை வேலையில் அமர்த்தும் எவ்விதத் திட்டமும் பொதுப்படையாக நேர்மையுள்ளவர்களைத்

தெரிந்தெடுத்தும், பொதுப்படையாக மிக்க திறமுடையவர்களை விலக்கியும் வைக்கும். இன்று முதல் புகழ்பெற்ற அரசியல் வல்லுநர் ஒருவர் முக்கிய ஆர்க்கான் ஆவதற்கு வாய்ப்பு ஐந்நூற்றில் ஒன்றேயாகும். இதிலிருந்து முக்கிய நடுவரின் அரசியல் முக்கியத்துவம் மறைந்துபோவது தெளிவாயிற்று, சீட்டுக் குலுக்குதலின் மூலம் தெரிந்தெடுக்கப்படும் போலிமார்க்கானவர் சேனாதிபதியின் பதவியை ஏற்றுக்கொள்வதும் கூடாதென்பது தெளிவாயிற்று. இந்தப் பதவியானது திறமை வாய்ந்தவர்களின் கூட்டத்திலிருந்து யோசனையுடன் தேர்ந்தெடுக்கப்பட்டவர்க்கே கொடுக்கப்படவேண்டும். போலிமார்க்கின் அதிகாரங்கள் ஒரு புதிய அதிகாரியிடம் கொடுக்கப்படாமல், பத்துக் கோத்திரங்களாலும், ஒவ்வொரு கோ'த்திரத்திற்கு ஒருவர் என்று தேர்ந்தெடுக்கப்பட்ட பத்து ஸ்ட்ரேடிகைகளின் தொகுதியினிடம் கொடுக்கப்பட்டது. இப்பொழுதோ சிலகாலம் கழித்தோ ஒரு சீர்திருத்தம் கொண்டுவரப்பட்டது. இந்தச் சீர்திருத்தத்தின்படி எல்லா மக்களும் இந்தப் பத்துப் படைத்தலைவர்களைத் தேர்ந்தெடுத்தனர். ஆனால் ஒவ்வொரு கோத்திரத்திற்கு ஒருவரையே தேர்ந்தெடுக்க இவர்கள் முயன்றனர். இந்த முயற்சியினால்தான் நாம் ஒரே கோத்திரத்தில் இருவருக்கு மேற்பட்ட பிரதிநிதிகளை ஒருபொழுதும் காண்கிறதில்லை. அதிகாரத்தைப் பிரிப்பதனால் ஆகும் தீமையை அகற்றுவதற்கு முதலில் ஒவ்வொரு படைத்தலைவருக்கும் (Strategos) ஒவ்வொரு நாள் மேலான அதிகாரத்தை வழங்கினார்கள் - சோதனை முறையானது தற்காலக் கருத்துகளுக்குச் சிறு பிள்ளைத்தனம்போல் தோன்றுகின்றது. அமைதி நிலவும் காலங்களில் நாளுக்கு நாளான வேலைகளை இம்மாதிரியான முறையில் நடத்தக்கூடும். ஆனால் யுத்த காலத்தில் அன்றாடப் படைத்தலைவர்களின் மாறுதலானது தோல்விக்கு அடிகோலும் என்பது உறுதி. தேர்தல் காலங்களில் பத்துப் படைத்தலைவர்களில் ஒருவருக்குமாத்திரம் தம்முடன் வேலை செய்யும் மற்றக் கூட்டாளிகளைவிட மேலான அதிகாரங்களைப் பணியாற்றும் காலம் முழுவதும் வழங்கும் பழக்கம் எப்பொழுதும் உண்டானதாக எண்ணுவதற்குக் காரணம் இல்லை. இப்படிச் செய்திருந்தால் போலிமார்க் பதவியை வேறு விதத்தில் கொண்டு வந்ததற்குச் சரியாயிருந்திருக்கும். இரண்டுபட்ட படைத்தலைமையின் அபாய விளைவுகள் ஓர் எளிய முறையினால் விலக்கப்பட்டன. தரைப் படைச் செலவு அல்லது கப்பற்படைச் செலவுகளை மக்கள் முடிவு செய்யும்போதெல்லாம், அவர்கள் எந்தப் படைத்தலைவர்கள் அதனை எடுத்து நடத்தவேண்டும் என்றும் முடிவுசெய்தனர். இவ்விதமாக மக்கள் தாம் தெரிந்தெடுத்த ஒருவருக்குத் தலைமை வகிக்கும் உரிமையை அளித்தனர். ஆனால் இந்த விதமான

மேலான தலைமைப்பதவி குறிப்பிட்ட அந்தப் படைச் செலவு முடியுமட்டுமே நீடித்தது. அதுவுமன்றி, எந்தப் படைத் தலைவனுக்கு அந்தப் பதவி அளிக்கப்பட்டதோ அந்தப் படைத் தலைவன் தன்னுடன் இந்தப் படைச் செலவில் தொடர்பு கொண்ட கூட்டாளிகளின்மீதுதான் இந்த அதிகாரங்களைச் செலுத்தினான்.

கண்ணியமான ஏரியோபேகஸ் மன்றத்தைக் குறித்துக் கிளைஸ் தினீஸ் கொண்டுள்ள அபிப்பிராயத்தைப்பற்றிய ஆவணம் யாதும் நம்மிடம் இல்லை. அதுவுமன்றிப் பிஸிஸ்ரேட்டர்களின் வீழ்ச்சிக்குப்பின் ஒரு தலைமுறைக்கு இந்த மன்றத்தைப்பற்றி நாம் ஒன்றும் கேள்விப்படவும் இல்லை. ஆனால் இந்தக் காலத்தில் ஒரு புது நிறுவனம் தோன்றியது. அரசியல் அமைப்பைக் காத்துக் கொள்வதும் கொடுங்கோலாட்சியின் அபாயத்திலிருந்து அரசைக் காப்பாற்றுவதுமாகிய இந்த அரசியல் கடமைகளை இந்த நிறுவனம் ஏரியோபேகஸ்ஸிடமிருந்து எடுத்துக்கொண்டு அந்த மன்றத்தை வலிமையில் குறைவுபடச் செய்தது. ஆஸ்ட்ரஸிஸம் (Ostracism) நிறுவனம் கிளைஸ்தினீஸ் உண்டுபண்ணியதாக மரபு கூறினும், இது மாரத்தான் யுத்தத்திற்கு இரண்டு ஆண்டுகளுக்குப் பின்னரே உபயோகப்படுத்தப்பட்டது. ஆஸ்ட்ரகிஸ்மாஸ்ஸைக் (Ostrakismos) குறித்த அவசரச் சட்டம், ஒவ்வோர் அரசாங்க ஆண்டிலும் ஆறுவது ப்ரைடேனியில் (Prytany) மக்களின் அவையின்முன் 'ஆஸ்ட்ரஸிஸம் வேண்டுமா' இல்லையா என்ற கேள்வியைச் சமர்ப்பிக்க வேண்டும் என்று கூறியது. மக்கள் 'வேண்டும்' என்று கூட்டத்தில் தீர்மானித்தால், விலைக்களத்தில் (market-place) எட்டாவது ப்ரைடேனியில் சிறப்பு அவைக்கூட்டம் ஒன்று கூட்டப்படும். இக் கூட்டத்தில் மக்கள் தங்களது கோத்திரங்களில் கூடுவர். ஒவ்வொரு குடியுரிமையாளரும் தாம் யாரை நாடுகடத்த விரும்புகிறாரோ (Ostracise) அவனுடைய பெயரை ஒரு பானை ஓட்டில் (Octrakon) எழுதி ஒரு தாழியில் இடுவார். 6000 வாக்குகள் பதிவாகாவிட்டால் இந்த வாக்களிப்பானது சட்டப்படி செல்லாது. இந்த வாக்களிப்பில் யாருடைய பெயர் அதிகமாகக் காணப்பட்டதோ அந்த மனிதன் பத்து நாட்களுக்குள் ஆதென்ஸைவிட்டு வெளியேறிப் பத்து ஆண்டுகள் கழியுமட்டும் நாட்டில் காலெடுத்து வைக்கக் கூடாது. ஆனால் இவன் தன் சொத்துகளை வைத்துக்கொள்ள அனுமதிக்கப்பட்டான். இந்தக் காலத்திலும் இவன் அத்தீனியக் குடியாகவே இருந்து வந்தான்.

செல்வாக்குப் பொருந்திய குடிமக்களின் ஆபத்தான பேரவாவிலிருந்து அரசைக் காக்கும் கடமையானது இந்த நிறுவனத்தால்

தந்தைபோன்ற ஏரியோபேகஸ்ஸிலிருந்து சகல அதிகாரங்களேயு முடைய மக்களுக்கே திருப்பிக்கொடுக்கப்பட்டது.[4] இந்த நிறுவனத்தைக் கிளேஸ்தினீஸ் ஏற்படுத்தியதற்கு முக்கியக்காரணம் பிஸிஸ்ட்ரேட்டர்களின் நெருங்கிய பந்துவாகிய சார்மஸ் (Charmus) என்பாரின் மகனுகிய ஹிப்பார்க்கஸ்ஸை நாடு கடத்தவே என்று சொல்லப்படுகிறது.

அருவருப்பானதும், கொடுமையானதுமாகிய இந்த நிறுவனம் கிளேஸ்தினீஸ்ஸினுல் ஏற்படுத்தப்பட்டாலுங்கூட இதை யடுத்த பதினேந்து ஆண்டுகளுக்கு, ஆண்டுதோறும் பேரவையானது இதனே உபயோக்கிக்க மறுத்தது. செயல் முறைக்குக் கொண்டு வந்த முதல் ஆஸ்ட்ரஸிஸத்திஞல் ஹிப்பார்க்கஸ் நாடுகடத்தப் பட்டான். ஆல்க்மியோனிய வமிசத்தைச் சேர்ந்திருந்தாலும் பிஸிஸ்ட்ரேட்டர்களே ஆதரித்ததனுல் மேகாக்ளீஸ் அடுத்த ஆண்டில் இதன்மூலம் நாடுகடத்தப்பட்டார். இந்தச் செயல் களிலும், ஆர்க்கான் பதவியைப் பொறுத்த சீர்திருத்தங்களிலும், மக்களாட்சி முன்னேற அவாக் கொண்ட அரசியல் வல்லுநர்களின் வேலையைக் காணலாம். இவர்களில் சாந்திப்பஸ் (Xanthippus), அரிஸ்டைடிஸ் (Aristides), தெமிஸ்டாக்ளீஸ் (Themistocles) என்ற மூவரும் தலேசிறந்தவர்கள். ஆனுல் இந்தத் தலேவர் கள் தனித்தனியான கொள்கைகளேயும் கட்சிகளேயும் கொண் ருந்தனர். ஒரு சமயத்தில் சாந்திப்பஸ்ஸை நாடுகடத்தும்படி மக்கள் தூண்டப்பட்டனர். இரண்டு ஆண்டுகளுக்குப் பின் அரிஸ்டைடிஸ் நாடு கடத்தப்பட்டார். மேற்கூறிய சந்தர்ப்பங் களில் கொடுங்கோலாட்சியின் பயமோ அல்லது அபாயமோ எதுவும் இல்லே. மக்கள் விரும்பிய ஒரு மசோதாவை அமலுக்கு வராமல் தடுத்த எதிர்க்கட்சி அரசியல் வல்லுநரை அகற்ற 'ஆஸ்ட்ரஸிஸம்' வசதியான ஒரு கருவியாகக் கையாளப்பட்டு

[4] ஐந்நூற்றுவர் ஆயம் தன் விருப்பப்படி மக்கள் சபைமுன் இக் கேள்வியைச் சமர்ப்பிப்பதா இல்லேயா என்பதை ஆஸ்ட்ரஸி ஸத்தைப்பற்றிய சட்டம் விட்டுவிடாமல் ஒவ்வோர் ஆண்டும் குறிப்பிட்ட காலத்தில் தடையொன்றுமின்றி இக் கேள்வியை மக்கள்முன் கொண்டு வரவேண்டும் என்று கட்டளேயிட்டதை நாம் முக்கியமாகக் கவனிக்க வேண்டும். இது மக்களுக்குக் கொடுக்கப்பட்ட மாற்றுமொரு பாதுகாப்பாகும். சோலா னின் நடுநிலேக்கு (முன்னே 4ஆம் அத்தியாயம் பார்க்கவும்) எதிரான சட்டத்தை நீக்கி, அவ்விடத்தில் ஆஸ்ட்ரஸிஸத்தை ஈடாக வைக்க எண்ணம் கொண்டிருக்கலாம் என்று கூறப்படு கிறது. ஆனுல் ஆஸ்ட்ரஸிஸமே கிராபி பாராஞேமோனுல் (Graphe Paranomon) அகற்றப்பட்டது. (பின்னே 11ஆம் அத்தி யாயம் பார்க்கவும்)

வந்தது. அரிஸ்டைடிஸ் அல்லது தெமிஸ்டாக்ளீஸ்ஸிற்குச் சாந்திப்பஸ் எந்தக் கொள்கையில் விரோதியானார் என்று யூகிக்க முடியவில்லை. ஆனால் அரிஸ்டைடிஸ் நாடுகடத்தப்பட்டது தெமிஸ்டாக்ளீஸ் எடுத்து அநுசரித்த கப்பற்படைக் கொள்கை முறையோடு தொடர்புள்ளது என்று சொல்ல இடம் இருக்கின்றது. 'நேர்மையான' என்று அழைக்கப்பட்ட அரிஸ்டைடிஸ்ஸின் நாடுகடத்தலைக் குறித்து ஒரு நல்ல நொடிக் கதை கூறப்பட்டுள்ளது. வாக்குப்பதியும் நாளன்று, எழுதப் படிக்கத் தெரியாதவனும், அரிஸ்டைடிஸ்ஸைப் பார்த்தேயில்லாதவனுமாகிய அத்தீனியக் குடியுரிமை பெற்ற ஒருவன் அரிஸ்டைடிஸின் பக்கத்தில் நிற்க நேர்ந்தது. அவன் தன் பானை ஓட்டில் அரிஸ்டைடிஸ்ஸை, 'அரிஸ்டைடிஸ்' என்று எழுதும்படி வேண்டினான். தன்னைக் கேட்டுக்கொண்டபடியே செய்துவிட்டு அரிஸ்டைடிஸ் அந்த மனிதனை நோக்கி, 'ஏன் அவனை நாடுகடத்த விரும்புகிறாய்?' என்று வினவினான். அந்த மனிதன், 'ஏனென்றால், அவன் நேர்மையானவன் என்று கேட்டுக் கேட்டு நான் சோர்வடைந்துவிட்டேன்' என்று விடை கூறினான்!

## 10. ஆதென்ஸ் கடலாதிக்கம் அடைதல்

ஆதென்ஸின் நெருக்கடியான இந்தக் காலத்தில் மிகவும் பெரிய அரசியல் வல்லுநரானவர் நியோக்ளீஸ்(Neocles)ஸின் மகனாகிய தெமிஸ்டோக்ளீஸ் என்பவர். இவர் தம் அரசியல் எதிரிகளான சாந்திப்பஸ், அரிஸ்டைடிஸ் என்பவர்களைக்காட்டிலும் பெரியவர். மாரத்தான் யுத்தத்தின் வீரனைவிடக்கூட இவர் பெரியவர். ஆதென்ஸை ஒரு பெரிய அரசாக்க வேறெந்தத் தனி மனிதனைக்காட்டிலும் இவர்தாம் அதிகமாகத் துணையளித்தார் என்று நாம் கூறலாம். இவருடைய அரசாண்மையின் (statesmanship) ஈடெடுப்பற்ற முக்கியத்துவத்திற்குப் பல காரணங்கள் உள. அவையாவன: முதலாவது, தமது நகரத்தின் உள்ளார்ந்த இயல்புகளை அறியக்கூடிய இவருடைய நுண்ணறிவாகும். இரண்டாவது, மற்ற எவரும் புரிந்துகொள்ளுமுன் தமது நகரின் நிலைமையைப் புரிந்துகொள்ளக் கூடிய இவருடைய வியக்கத்தக்க சக்தியாகும். கடைசியாகக் குறிப்பிட வேண்டியது, இவர் தமது நகரானது ஓர் உன்னத பதவியை அடைய வேண்டும் என்ற நயமான ஒரு கொள்கையைத் தொடங்கி வைக்கும் ஊக்கமும், அதன்பின் இந்தக் கொள்கையைத் திறமையுடன் எடுத்து நடத்தித் தம் மறைவுக்கு முன் தம் நகர் பதவியை அடையச் செய்ததுமேயாகும். ஆறாவது நூற்றாண்டில் கிரேக்கக் கடற்படையைச் சார்ந்த மற்ற நாடுகளைப் பார்வையிடும்

போது, ஆதென்ஸ் பெரியதும் எண்ணத்தக்கதுமான கடற்படையைச் சார்ந்த ஒரு நாடாயிருந்தது. ஆனால் எங்கும் கடற்படையானது தரைப்படைக்குத் துணைப் பொருளாகத்தான் கருதப்பட்டு வந்தது. தரைப்படையைக் கடற்படைக்காகத் தியாகம் செய்து, ஆதென்ஸை ஒரு கடல்அரசாக - அதுவும் கிரீஸிலேயே மிகவும் வலிமை பொருந்திய கடல் அரசாக-மாற்றி அமைக்க வேண்டும் என்பதே தெமிஸ்டாக்ளீஸின் எண்ணமாகும். சமுசயங்களின் மத்தியிலும். கடும் எதிர்ப்பிலுங்கூட, தமது கொள்கையை விட்டுவிடாமல் நிறைவேற்றியது தெமிஸ்டாக்ளீஸின் பெரிய வெற்றியாகும். தாம் ஆர்க்கானாக இருக்கும் போதே இந்த வேலையில் ஈடுபட்டார். பிர்யெயியஸ் (Piraeus) தீபகற்பத்தைக் கோட்டைகளால் காக்க வேண்டும் என்னும் தீர்மானத்தை அத்தீனியப் பேரவையின்முன் சமர்ப்பித்து, அதன் அங்கீகாரத்தை மாரத்தான் யுத்தம் நடப்பதற்கு இரண்டு அல்லது மூன்று ஆண்டுகளுக்கு முன்னரே பெற்றதால், அப்பொழுதே இவர் ஒரு முக்கிய மனிதராயிருந்தார். இதற்கு முன் பாதுகாப்பில்லாத பாலரோனின் (Phaloren) கரைதான் அத்தீனியத் துறைமுகமாயிருந்தது. இதில் அத்தீனியர்கள் தமது மூன்று அடுக்குப்பெஞ்சுகள் கொண்ட கப்பல்களை (triremes) வைத்திருந்தனர். இவைகள் பகைவரது திடீர்த் தாக்குதலிலிருந்து பாதுகாக்கப்படாவிட்டாலும் எப்பொழுதும் சேம அரணாகிய அக்ராபோலிஸ் பக்கத்தில் இருந்தன. அயோனியர் கலகம் அடக்கப்பட்ட பின்னர்ப் பாரசீகக் கப்பல்கள் ஈஜியனில் அங்குமிங்கும் சுற்றித் திரியும்போது, பாரசீகர்கள் பாலரோனை நினைத்த வேளையில் தாக்கக் கூடும். ஆகையால் நாம் கப்பற்படைத் தளங்களைச் சீர்திருத்த வேண்டும் என்ற எண்ணம் அத்தீனியர்களின் கண்களைத் திறந்தது. ஈகைனாவின் பகைமை அதிக அண்மையில் உடனடியாகக் கவனிக்க வேண்டிய காரணமாயிருந்தது. தமக்கு ஒரு தகுதியான துறைமுகத்தை ஏற்படுத்தி, அத்தீனியர்கள், அதிக தூரம் செல்ல வேண்டியிருக்கவில்லை. மியூனீச்சியா தீபகற்பகத்திற்கு மேற்குப் பாகத்திலுள்ள பெரிய துறைமுகமாகிய பிர்யெயியஸ்ஸையும், இந்தத் தீபகற்பத்தின் கிழக்குப் பாகத்திலுள்ள இரு சிறு துறைமுகங்களாகிய மியூனீச்சியாவையும் (Munychia), ஸியியா (Zea) வையும் இவர்கள் இதற்குமுன் உபயோகிக்கவில்லை என்பது ஒரு விந்தையிலும் விந்தையாகும். ஆனால் இவை பிர்யெயியஸ் நகரத்திற்குச் சிறு தொலைவிலிருந்ததுமன்றிப் பாலரோன்மாதிரிச் சேம அரணின் பார்வையிலும் இல்லாதிருந்தன. இவ்வளவு காலமும் கோட்டைகளினால் சூழப்பட்ட துறைமுகம் இல்லாதபோது, பாலரோன் சேம அரணுக்கருகில் இருந்ததால் மிகவும் பாது

காப்பான இடத்தில் இருந்தது. தீபகற்பத்தைச் சுற்றியும் ஒரு மதிற்சுவரைக் கொண்டு அரண்களை வலுப்படுத்தி, மூன்று துறை முகங்களிலும் யுத்தக் கப்பல்களை வரவேற்கக் கப்பல் துறைகளை ஏற்படுத்துவதே தெமிஸ்டாக்ளீஸின் திட்டமாகும். இந்த வேலை யானது ஆரம்பிக்கப்பட்டது. ஆனால் பாரசீகப் படையெடுப்பி னாலும், மாரத்தான் யுத்தத்திற்குப் பின் தோன்றிய கட்சி வாதங்களினாலும் இந்த வேலை தடைப்பட்டது. இதன்பின் ஈகை னாவுடன் போர் மூண்டது. இதுவும், மற்றொரு பாரசீகப்படை யெடுப்பு இருக்கும் என்ற பயமும் ஒன்றுசேர்ந்து தெமிஸ் டாக்ளீஸின் பெரிய திட்டத்தின் மற்றொரு பாகத்தைப் பூர்த்தி செய்ய உதவின. இதுதான் கப்பற் படையை அதி கரிக்கும் திட்டமாகும். பழைய சுரங்க வேலை நடைபெற்ற லாரி யோன் (Laurion) மாவட்டத்தில், சமீபத்தில் மாரோனியா என்ற இடத்தில் மிகுதியான வெள்ளியைக் கொண்ட படுகை ஒன்று கண்டுபிடிக்கப்பட்டது. இந்தச் செயலானது திடீ ரென்று பொதுக் கருவூலத்திற்குப் பெருந் தொகையை-நூறு தாலந்து போன்ற தொகையை-ஈன்றது. பேரவையில் இந்தத் தொகையைக் குடிமக்களுக்குள் பகிர்ந்து கொடுக்கவேண்டும் என்று ஒரு தீர்மானம் கொண்டுவரப்பட்டது. ஆனால் தெமிஸ்டா க்ளீஸ் இந்தத் தொகையைப் புதுக் கப்பல்கள் கட்டும் தொழி லுக்குச் செலவிடும்படி வற்புறுத்தினார். பின்பு இதே நோக் கத்தை நிறைவேற்ற மக்களிடமிருந்தும் பணம் வசூலிக்கப்பட் டிருக்கலாம். ஏனென்றால், மேலும் அதிகக் கப்பல்கள் கட்டப் பட்டன. இரண்டு ஆண்டுகள் முடிவடையுமுன் ஆதென்ஸ் கிட்டத்தட்ட 200 மூன்று பெஞ்சு அடுக்குகள் கொண்ட கப் பல்களை உடையதாயிருந்தது. இந்தக் கப்பற் படையானது சைரக்யூஸ், கார்சைரா இவைகளின் கப்பற்படைகளுடன் ஒப்பிடக்கூடிய நிலைக்கு உயர்ந்துவிட்டது. இக் காலத்தில் பிர் யெயியஸ்ஸின் சுவர்களைக் கட்டிமுடிக்க முயற்சி செய்யவில்லை. ஆனால் நாம் பிறகு பார்க்கப் போவதுபோல், கிரீஸ் கரையோரங் களிலிருந்து பாரசீகர்கள் கடைசியாக விரட்டி அடிக்கப்பட்ட பிறகுதான் இந்தப் பணி முடிவுற்றது.

---

# கலைச்சொல்லகராதி

(ஆங்கிலம்—தமிழ்)

## A

| | | |
|---|---|---|
| Acropolis | — | அரண்; நகரின் உள்ளரண்; ஆதென்ஸ் (Athens) நகரத்தின் உள்ளரண் |
| Administration | — | ஆட்சிமுறை; நடைமுறை ஆட்சி |
| Adventure | — | துணிவான செயல்; வீரச் செயல் |
| Aegean Basin | — | ஈஜியன் படுகை; கப்பல் துறை |
| Alphabetic writing | — | அகர வரிசை எழுத்துக்கள்; நெடுங்கணக்கு வரிசை எழுத்துக்கள் |
| Anachronism | — | கால இட முரண்பாடு; காலக் கணிப்பு வழு; பிற்காலப் பண்புகளை முற்காலத்திற்கும் முற்காலப் பண்புகளைப் பிற்காலத்திற்கும் தவருக ஏற்றிக் குழப்புதல் |
| Annihilate | — | நிர்மூலமாக்கு; ஒழித்துக்கட்டு |
| Apophthegms | — | பொருள் பொதிந்த உரைகள்; செறிமொழி |
| Archaeology | — | தொல்பொருள் கலை அல்லது அதுபற்றிய ஆராய்ச்சி |
| Aristocracy | — | உயர்குடிஞர் ஆட்சி |
| Autumnal Equinox | — | இலையுதிர் காலத்தில் ஞாயிறு தென்திசை செல்லும் வழியில் ஒரு நேர்க்கோட்டைக் கடக்கும் காலம்; பகலும் இரவும் சமமாகவுள்ள நாட்கள் |

## B

| | | |
|---|---|---|
| Balconies | — | மாடி முகப்புகள் |
| Barbarian | — | காட்டுமிராண்டி, கிரேக்க வழக்கில் அயல்நாட்டான் |
| Barracks | — | பாளையங்கள்; போர்வீரர் குடியிருப்பு வரிசை |
| Besiege | — | முற்றுகையிடு |
| Bireme | — | இரு புறமும் துடுப்புகளை உடைய மரக்கல வகை |

Blockade (naval) — தடைவளைப்பு, (கப்பல்) முற்றுகை
Body-guards — மெய்க்காவற் படை
Bribe — கைப்பணம்; கைக்கூலி
Bronze Age — வெண்கலக் காலம்; வெண்கல யுகம்
Bull fight — காளைச் சண்டை

C

Cadences — இசை ஒழுக்குகள்; வண்ணம்; இலயப்போக்கு
Cartmache — தாட் சுருள்
Centrifugal — பிரிக்கும் தன்மையுடைய; விரிமையப் போக்குடைய
Centripetal — ஒன்று சேர்க்கும் தன்மையுடைய; குவிமையப் போக்குடைய
Chamber of throne — அரியணைக் கூடம்
Characteristics — தனிச் சிறப்புப் பண்புகள்
Chronology — கால ஆராய்ச்சி; கால வரிசை முறை; கால வரையறை
Citadel — நகர் அரண்; சேம அரண்
City State — தனி உரிமை உடைய நகர அரசு
Clan — குலம்; தனிக் குழு; வகுப்பு
Climate — தட்ப வெப்ப நிலை
Clue — மறை செய்தியை விளக்கும் குறிப்பு
Coincidence — ஒருங்கொத்த நிகழ்ச்சி; நிகழ்வுப் பொருத்தம்
Commonwealth — சரிசமத் தனி உரிமையுடைய கூட்டரசு
Communism — பொதுவுடைமைக் கொள்கை
Conservative spirit — பழமையை விரும்பும் பண்பு; மாறுதல் விரும்பாத தன்மை
Constitutional tyranny — அரசியலமைப்புக்குக் கட்டுப் பட்ட கொடுங்கோலாட்சி
Contemporary persons — சமகாலத்திருப்பவர்கள்; சமகாலத்தவர்
Copper Age — செப்புக் காலம், செப்பு யுகம்
Council of Chamber — ஆலோசனை மண்டபம்; ஆய்வு மறைக் கூடம்

D

Decree — ஆணை, கட்டளை
Democracy — மக்களாட்சி; குடியாட்சி; ஜனநாயகம்

Despotic Constitution — வல்லாட்சி அமைப்பு; கொடுங் கோல் ஆட்சி முறை
Diplomacy — அரசியல் செயலாட்சி நயம்; இராஜதந்திரம்
Discipline — கட்டுப்பாடு
Discontented people — அமைதியற்ற மக்கள்; அதிருப்தி மிக்க மக்கள்
Drainage — வடிமானம்; வடிகால்
Dynasty — வமிசம்; மன்னர்களின் வழி வழி மரபு

## E

Empire — பேரரசு; சாம்ராஜ்யம்; ஏகாதி பத்தியம்
Enterprise — துணிவுச் செயல்; இடர் நிறைந்த முயற்சி
Epic cycle — இதிகாச வட்டம்; வீர காவியக் கால வட்டம்
Epics — வீர காவியங்கள்
Epoch — சகாப்தத் தொடக்கம்; புத் தூழித் தொடக்கம்; புது யுகம்
Eponymous ancestors — வீர முன்னோர்கள்; இனப்பெயர் முதல்வர்
Eternal Question — ஊழூழிக் கேள்வி
Extremists — தீவிரவாதிகள்

## F

False-necked jars — போலிக் கழுத்தையுடைய சாடி கள்
Federation — கூட்டாட்சி நாடு; கூட்டுப் பேராட்சி
Fine Arts — கவின் கலைகள்; நுண்கலைகள்
First fruits — முதற் பேறுகள்; முதல் விளைவு கள்; தலைப்பலன் அல்லது முதலாண்டு வருமானம்
Fluted Columns — செங்குத்தான வரிப் பள்ளங்களி னால் ஒப்பனை செய்யப்பட்ட தூண்கள்
Fore-runners — முன்னோடிகள்
Fresco — சுவரோவியம்
Frieze — போதிகைச் சிற்பம்; தளமட்ட மான அகன்ற பட்டையுள்ள சிற்பம்

## G

Genealogy — குடும்ப வரலாற்று வரிசை; குடி வழிப் பட்டியல்; வமிசாவளி

Genus — இனம்

Geography — புவியியல், நில இயல்

Geology — புவியமைப்பு இயல்; மண்ணியல் ஆராய்ச்சிக் கூறு

Glazed — மெருகிட்ட

Greaves — முழுங்காலுக்குக் கீழுள்ள காலின் போர்க்கவசம்

## H

Heavy foot-lancers — கனமான ஈட்டிகளைக் கையில் ஏந்திச் செல்லும் காலாட் படையினர்

Hereditary Kingship — வழிவழித் தொடர்ந்து வந்துள்ள முடியரசு

Heroic Age — வீரர்களின் யுகம்; பண்டைக் கிரேக்கரிடையே டிராய்ப் பெரும் போர்வீரர் மீட்சிக்கு முற்பட்ட காலம்

Homogeneous — ஒரு படித்தான; ஒரே இனம் அல்லது வகையைச் சேர்ந்த

Hostages — பிணையாக நிறுத்தப்பட்டவர்கள்

## I

Ideal State — உயர்குறிக்கோள் கொண்ட அரசு; குறிக்கோள் நிலையை எய்த விருப்பும் அரசியல்

Influx — உள்நோக்கி நுழைதல்; உள்வரவு

Innocent institution — தீங்கற்ற நிறுவனம்; குற்றமற்ற அமைப்பு

Intermediaries — நடுவர்கள்

Iron Age — இரும்புக் காலம்; இரும்பு யுகம்

## J

Joint undertaking — கூட்டு முயற்சிகள்

Judge — நீதிபதி

Judgment — முறைமன்றத் தீர்ப்பு

Judiciary — நீதிநிலையத்துறை; நாட்டின் நீதிபதிகள் அனைவரின் மொத்தத் தொகுதி

## K

Kingdom — முடியரசு நாடு, இராச்சியம்

## L

Labyrinth — அரும் புதிர் நெறி; கடுஞ் சிக்கலமைவு
Landmark — வரலாற்றில் திருப்புமுனை
Law-givers — சட்டத் தொகுதியை உருவாக்கியவர்
League — கூட்டுக் குழு; கூட்டிணைவு; சங்கம்
Light-armed soldiers — சிறுதிறமான ஆயுதங்களை அணிந்த போர்வீரர்கள்
Location — இட அமைவு
Local Government — குறுநில அல்லது வட்டார ஆட்சி
Lot — திருவுளச் சீட்டுத் தேர்தல்; குலுக்குத் தேர்வு முறை
Lyre — வழக்கற்றுப்போன யாழ் போன்ற நரப்பிசைக் கருவி வகை
Lyric — இசைப் பாட்டு; யாழுக்குரிய உணர்ச்சிப் பாடல்

## M

Market-place — விலைக்களம்; கடைவீதிச் சதுக்கம்; சந்தைக்கூடம்
Masters — பணி முதல்வர்கள்
Maze — சிக்கல் நிறைந்த வழி
Meandering Spirals — வளைந்து நெளிந்து செல்லும் சுருள் வட்டங்கள்
Mediator — மத்தியஸ்தர்; இடையீட்டாளர்
Medism — மிதிய மன்னர்களுடன் சேர்ந்து சதி ஆலோசனை செய்வது
Metal Age — உலோக காலம் ; உலோக யுகம்
Metropolis — தலைநகரம்
Middle Ages — இடை நிலைக் காலம் (கி.பி. 600 முதல் 1500 வரை)
Migrate — இடம் பெயர்; நாடுவிட்டு நாடு செல்
Moderation — மிதமான அளவுக்கு அல்லது நிதானமாக
Monarchy — முடியாட்சி அல்லது முடியரசு
Mural — சுவர்ச்சித்திர ஒப்பனை

| | | |
|---|---|---|
| Muses | — | கலைத் தேவதைகள் (கிரேக்க புராண மரபுக்குரிய கலை யணங்குகள் ஒன்பதின்மர்) |
| Museum | — | பொருட்காட்சிச் சாலை (கலைத் தேவதைகளின் இருப்பிடம்) |
| Mutiny | — | படை வீரர் கலகம் |
| Mythology | — | புராணக் கதைத் தொகுதி |

## N

| | | |
|---|---|---|
| Nationalist | — | தேசீயவாதி |
| Nestor | — | அறிவுமிக்க முதியவர் |

## O

| | | |
|---|---|---|
| Official | — | பணிமனை சார்ந்த |
| Oligarchy | — | சிறுகுழு ஆட்சி ; சிலவராட்சி |
| Oppress | — | ஒடுக்கு ; அழுத்து |
| Oracle | — | தெய்விக மொழி ; தெய்வ வாய் மொழித் தலம் |

## P

| | | |
|---|---|---|
| Pediment | — | பண்டைக் கிரேக்கக் கட்டிடக் கலைப்பாணியில் வரிமுக் கோண முகப்பு முகடு |
| Philistines | — | பிலிஸ்தியர்கள் |
| Polis | — | நகரம் |
| Political Organisation | — | அரசியல் அமைப்பு |
| Polychrome pottery | — | பலவண்ண ஒப்பனை செய்யப் பட்ட மட்பாண்டத்தொழில் |
| Polypods | — | பல கால்களையுடைய உயிர்கள் |
| Prerogatives | — | உயர் உரிமைகள் அல்லது தனிச் சிறப்புரிமைகள் (பண்டைய ரோமரிடையே முதல் வாக் குரிமை) |
| Promontory | — | உந்துநிலம்; கடலிற் பாய்ந் துள்ள நிலமுனைக் கோடி |

## Q

| | | |
|---|---|---|
| Quoit | — | எறிவட்டு |

## R

| | | |
|---|---|---|
| Ram | — | அரண் தகர்ப்புத் தூலப் பொறி |
| Reconstruction | — | புனரமைப்பு ; மீண்டும் அமைத்தல் |
| Refined luxurious life | — | நாகரிகச் சுகவாழ்வு அல்லது இன்ப வாழ்வு |

Republic — குடியரசு
Rhapsode — பழங் கிரேக்கப் பாணர்; ஹோமரின் வீர காவியம் பாராயணம் செய்பவர்

S

Sea faring life — கடற்பயண வாழ்க்கை
Servitude — அடிமைத்தனம் ; அடிமைப் பட்ட வாழ்வு
Small scale Industries — சிறு கருவித் தொழில்கள்
Social Organisation — சமூக அமைப்பு ; சமுதாயக் கூட்டுறவான அமைப்பு
Sovereignty — இறைமை; ஆதிபத்தியம்
Speculation — ஊக வாணிகம் ; துணிச்சல் வாணிகம்
State — நாட்டரசு
Stone Age — கற்காலம்

T

Terraced gardens — தட்டட்டிப் பூங்காக்கள்
Theoretical — கொள்கை நிலே ; கோட்பாட் டியலான
Throne — அரியணே ; அரசுகட்டில்
Timocracy — செல்வராட்சி
Tradition — மரபு
Tragedian — துன்பியல் அல்லது துயர் நாடக எழுத்தாளன் ; துயர் நாடகக் கவிஞன் அல்லது நடிகன்
Treasury — கருவூலம்
Tribe — இனம்; கோத்திரம் ; குலமரபுக் குழு
Trireme — பண்டைக் கிரேக்கரிடையே மூவரிசைத் துடுப்புகளே யுடைய போர்க் கப்பல்
Tyrant — கொடுங்கோலன்; டைரன்ட்; (கிரேக்க வழக்கில் வல்லாளன்)

U

Undaunted — உறுதி தளராத
Undermine — கீழறு
Unsocial — கூடி மகிழாத ; சமூக நலனேக் கவனிக்காத
Urn — புதைகலம்; தாழி

## V

Vaulted tombs — வில்வடிவமுள்ள கூரைகளைக் கொண்ட கல்லறைகள்; கவிகை மோடு போன்ற வளைவுள்ள கல்லறைகள்

Vestibule — முன்கூடம், நுழைமாடம்

Vulgar — நய நாகரிகமற்ற

## W

Warrant — பற்றாணை; அத்தாட்சிப் பத்திரம்

Weights and measures — நிறுத்தல், அளத்தல் அளவைகள்; படியெடை அல்லது அளவுகள்

Wrong-doer — தீங்கு அல்லது பொல்லாங்கு இழைப்பவர்

# பொருள் குறிப்பு அகரவரிசை

## இ

ட

ய



ர



ல

| | | | ரூ. பை. |
|---|---|---|---|
| 17. | அமெரிக்கப் பொருளாதார வரலாறு - I | மு. க. சுப்பிரமணியம் | 11—00 |
| 18. | அரசாங்க நிதியியலின் பொருளாதாரம் - I | மா. குமாரசாமி | 10—00 |
| 19. | இந்தியாவின் பொருளாதார வளர்ச்சி - I | தே. வேலப்பன் | 10—00 |
| 20. | பணம்—சிறு விளக்கம் | கோ. இராதாகிருஷ்ணன் | 10—00 |
| *21. | வணிக இயலின் தத்துவங்கள் | கு. ஆளுடைய பிள்ளை | 9—50 |
| 22. | பத்தொன்பதாம் நூற்றாண்டில் கிரேட் பிரிட்டனில் தொழில் வாணிபப் புரட்சி | சூ. ரா. கருப்பண்ணன் | 11—00 |

**வரலாறு**

| | | | |
|---|---|---|---|
| *23. | பிரிட்டன் வரலாறு - I | கி. ர. அனுமந்தன் | 10—00 |
| *24. | பிரிட்டன் வரலாறு - II | ,, | 9—75 |
| *25. | ஐரோப்பிய வரலாறு - I | டி. வி. சொக்கப்பா | 4—50 |
| 26. | ஐரோப்பா—கடந்த ஐந்து நூற்றாண்டு காலச் சரித்திரம் | வை. விருத்தகிரீசன் | 15—00 |
| 27. | இங்கிலாந்து வரலாறு - I | இரா. அண்ணாமலை | 13—00 |
| 28. | இங்கிலாந்து வரலாறு - II | பா. மாணிக்கவேலு | 13—00 |
| 29. | இங்கிலாந்தின் வரலாறு - I | க. த. திருநாவுக்கரசு | 15—00 |
| 30. | இந்தியாவின் சிறப்பு வரலாறு - I | தி. வெ. குப்புசாமி | 7—50 |

**அரசியல்**

| | | | |
|---|---|---|---|
| 31. | இந்திய அரசியலமைப்பு | வீ. கண்ணையா | 4—75 |
| 32. | அரசியலுக்கு ஓர் அறிமுகம் | டி. செல்லப்பா | 8—50 |
| 33. | தற்கால அரசியல் அமைப்புகள் | மோ. வள்ளுவன் கிளாரன்சு | 8—50 |
| 34. | பன்னாட்டு அரசியல் - I | திருமதி நூர்ஜஹான்பாவா | 16—00 |
| 35. | பொதுத்துறை ஆட்சி இயல் - I | வீ. கண்ணையா | 9—00 |
| 36. | பொதுத்துறை ஆட்சி இயல் - II | அ. ஜெகதீசன் | 7—20 |

| | | | ரூ.பை. |
|---|---|---|---|
| **உளவியல்** | | | |
| 37. | குழந்தை உளவியல் - I | கி. ர. அப்புள்ளாச்சாரி | 8—00 |
| 38. | குழந்தை உளவியல் - II | கி. ர. அப்புள்ளாச்சாரி | 7—00 |
| 39. | உட்கவர் மனம் | சி. ந. வைத்தீஸ்வரன் | 7—00 |
| 40. | இளேயோர் உளவியல் - I | தி. இரா. அரங்கராசன் | 12—00 |
| 41. | இளேயோர் உளவியல் - II | ,, | 9—00 |
| 42. | சமூக உளவியல் | என். வேதமணி மானுவேல் | 9—25 |
| 43. | பிறழ்நிலே உளவியல் | அ. பெசன்ட் கிரிப்பர்ராஜ் | 11—00 |
| 44. | பித்தரின் உள்ளம் | ,, | 3—00 |
| **தத்துவம்** | | | |
| *45. | இந்து சமயத் தத்துவம் | ஞா. ராஜாபகதூர் | 5—50 |
| **அறவியல்** | | | |
| 46. | அறவியல்—ஓர் அறிமுகம் | கோ. மோ. காந்தி | 8—50 |
| **அளவையியல்** | | | |
| 47. | அளவை இயல்—தொடக்க நூல் | கி. ர. அப்புள்ளாச்சாரி | 2—50 |
| **மானிடவியல்** | | | |
| *48. | மானிடவியல் | ம. சு. கோபாலகிருஷ்ணன் | 4—75 |
| 49. | பண்பாட்டுக் கோலங்கள் | கி. பூ. சுப்பிரமணியன் | 5—50 |
| **சமூகவியல்** | | | |
| 50. | சமூகவியலின் அடிப்படைக் கோட்பாடுகள் | ஜெ. நாராயணன் | 10—00 |
| **புவியியல்** | | | |
| *51. | ஆசியா - I | கொ. சேஷ. நரசிம்மன் | 9—50 |
| *52. | ஆசியா - II | ,, | 8—75 |
| *53. | ஐரோப்பாக் கண்டத்தின் புவியியல் | ஏ. எஸ். நாராயணன் | 8—50 |
| *54. | வட அமெரிக்கா | குமாரி இரா. அலமேலு | 8—25 |

* மூல நூல் (Original Book)

| | | | ரூ. பை. |
|---|---|---|---|
| 55. | தென் கண்டங்கள்—ஆஸ்திரேலியா | திருமதி எச். நியூமன் | 4—00 |
| 56. | புவிப்புறவியல் - II | நா. அனந்தபத்மநாபன் | 6—00 |
| *57. | செய்முறைப் புவியியல் | சு. ஜெயச்சந்திரன் | 9—00 |
| *58. | மக்கட் பரப்பியல் | வி. எஸ். அனந்தபத்மநாபன் | 6—25 |
| *59. | சமுத்திரவியல் | கோ. இராமசுவாமி | 6—50 |
| 60. | காலநிலை இயல் - I | கொ. சேஷ. நரசிம்மன் | 10—00 |
| 61. | வளியியலுக்கு ஓர் அறிமுகம் | கோ. இராமசாமி | 11—00 |
| *62. | புவி அமைப்பு இயல் | சி. விசுவநாதன் | 4—75 |
| **புள்ளியியல்** | | | |
| 63. | புள்ளியியல் - அறிமுகம் | சு. வைத்தியநாதன் | 10—00 |
| 64. | புள்ளியியல் முறைகள் - I | கோ. சண்முகசுந்தரம் | 10—00 |
| 65. | நம்மைச் சுற்றியுள்ள பேரண்டம் | தி. வி. லட்சுமிநரசிம்மன் | 6—50 |
| **விலங்கியல்** | | | |
| *66. | விலங்கியல் | பெ. மா. அண்ணாமலை<br>இரா. முருகேசன் | 12—00 |
| **பௌதிகவியல்** | | | |
| 67. | ஒளி நூல் | ச. சம்பத்து | 10—00 |
| **பொது நூல்கள்** | | | |
| 68. | மகாத்மா காந்தி | சரஸ்வதி தங்கையன் | 3—25 |
| 69. | இந்தியாவில் குடியானவர் வாழ்க்கை | எஸ். இலட்சுமி | 3—25 |
| 70. | விவசாயப்புரட்சி | வி. கார்த்திகேயன் | 8—00 |
| 71. | சேமக் கை-நூல் | ஆ. சுப்ரமணியன் | 2—50 |
| 72. | நிரிழிவு - க்ஷயரோகம் | ஜி. வேங்கடசாமி, ஏ. கதிரேசன் | 2—50 |

* மூல நூல் (Original Book)

